டுகோளினுக் கிரைந்து "அந்த ஸ்தலத்தின் மகிமையைப் புவிமேற் சென்று அறிந்திடுவோம் வாரீர்" என அம்முனிகணத்தை அழைத்துக்கொண்டு மண்ணுலகடைந்து திருமழிசையாகும் அத்திருப்பதியை நண்ணினன். நண்ணி, இவ்வுலகை நிறுத்துக்காட்டவல்ல துலையொன்று நிர்மாணஞ்செய்து நிறுத்தி, அத்தராசில் பூமியெல்லாம் ஒரு தட்டினும் மழிசையொன்றினையும் மற்றொரு தட்டினும் வைத்து நிறுக்க, பூமியை வைத்தபக்கம் நொய்தாய, மழிசையை வைத்தபக்கம் கனத்திருக்கக் கண்டு, முனிவர்கள் "மஹீஸார க்ஷேத்திரம் (மழிசை என மருவியது) என்னும் பெயர் இதற்கே தகும். இங்கு எம்பெருமான் எழுந்தருளியிருப்பது உண்மை" என உறுதிகொண்டு சதாநந்தனை வழிபட்டு வழிவிடுத்தனர்கள். விடுத்தபின்னர், அந்த முனிவரர்கள் அவ்விடத்தை விடாதே நித்தியவாசம் பண்ணிக்கொண்டிரா நிற்க, அவர்களில் பார்க்கவமுனீந்திரர் கண்ணனைக்கருதி ஓர் யாகம் இயற்றினர். இயற்றவே பாற்கடற்பள்ளியானும் உவந்து பிராட்டிமார் சமேதனாய் எழுந்தருளி "முனிசிரேஷ்டரே! நீர் செய்த யாகத்தை நோக்கி மனமகிழ்ந்தோம்; நீர் வேண்டும் வரத்தை வேண்டுவீர் அதனை அளிப்போம்" என்று திருவாய்மலர்ந்தருள, பார்க்கவரும் "எம்பெருமானே! அடியேனுடைய யாகத்துக்குத் திருவுள்ளம் மகிழ்ந்தருளினீரே; அதொன்றுமே அடியேனுக்குப் போதும்; நுமதுகாட்சியிற் சிறப்பாக அடியேன் கருதும் பொருள் பிறிதொன்றுமில்லை" என்றார். அது கேட்ட மாயன், "ஐய! எமது திருமுகமலர்ச்சி ஒன்றினையே வேண்டாநின்றீர். வேறொன்றனையும் வேண்டுகின்றிலீர்; உம்முடைய நினைவிருந்தபடி மிகவும் நன்று; ஆயினும் நாம் உமக்குப் பிரசன்னமாய் ஏதேனும் ஒரு வரத்தை அளிக்காமல் போவோமாயின் எம்முடைய திருவருளுக்குக் குறை உண்டாம். ஆதலால் ஏதேனும் ஒன்றைக் கேட்டு வேண்டுவீர்: தருவோம்" என்று திருவாய்மலர்ந்தருள, முனிவர்பெருமானும் "எம்பெருமானே! சிவபதவி, பிரமபதவி, முதலியனவும் அழிவுறுவனவாயிருப்பன. ஆதலின் ஸ்ரீபூநீளா தேவிமாருடனே தேவரீர் இரவும் பகலும் அடியேன் சிந்தையில் குடிகொண்டிருத்தலையே வரமாக அடியேன் வேண்டுகின்றேன்" என்றனர். என்னவே நெடியவனும், "அங்ஙனமேயாக; அதுவுமன்றி உமக்கு இந்தச் சக்கரத்தாழ்வான அம்சமாகும் ஒப்பில்லாப் புதல்வனொருவனையும் தருவோம்" என்றருளிச்செய்து அந்தர்த்தானமாய் வைகுந்த உலகத்தைச் சேர்ந்தான்.]

[பார்க்கவமுனிவர் அருந்தவம் புரிதல்.]

௯. யாணரப்பதியதன்வயிற்பார்க்கவனெனும்பேர்
மாணளக்கருமறையவன்மதித்ததையுணரோம்
ஊணகற்றியைம்புலன்வயினுளஞ்செலாதொடுக்கிப்
பூணவித்தவமரிதரிதெனத்தவம்புரிந்தான்.

(இ-ள்.) வளப்பமுடைய அத்திருப்பதியினிடத்துப் பார்க்கவனென்னும் பெயரையுடைய அளப்பதற்கரிய பெருமையுடைய வேதபாரகர் (தாம்) எண்ணியதை (இன்னதென்று) அறியேம்; உணவுநீக்கி, ஐம்புலன்களினிடத்து மனஞ்செல்லாது ஒடுக்கி, இத்தவம் (பிறர்) மேற்கொண்டுசெய்ய அரிதரிது என்று சொல்லும்படி, தவஞ்செய்தனர். (எ-று.) (௯)

[இந்திரன் அத்தவத்தையழிக்கக் கனகாங்கியை அனுப்பல்.]

௧௦. கண்டவாசவனிவன்புரிதவப்பயன்கருதில்
அண்டர்நாடுகொலயனரன்பதிகொலென்றயிர்த்துக்

கொண்டருழ்கருங்குழற்கனகாங்கியைக்கூவா
எண்டருந்தவமதனைநீயழித்திபோயென்றான்.

(இ-ள்.) (இத்தவத்தைக்) கண்ட இந்திரன், இப்பார்க்கவமுனிவர் செய்யும் தவத்தின்பயன், யோசிக்குமிடத்துத், தேவலோகமோ பிரமலோகமோ சிவலோகமோ என்று சந்தேகித்து, மேகங்கள் தாழும் கருமையான கூந்தலையுடைய கனகாங்கியென்பவளையழைத்து, நீ போய (பார்க்கவமுனிவன் செய்யும்) விசேஷமான தவத்தையழிப்பாயாக என்றுரைத்தனன். (எ-று.) (௧0)

[கனகாங்கி பார்க்கவருடைய தவநிலையைக் கலக்கல்.]

௧௧. விடுத்தவக்கனகாங்கியும்வேதியன்றவத்தைக
கெடுத்துமீள்வலென்றரிவையர்பலர்புடைகெழுமி
எடுத்தவீணையிற்குரன்முதலிசைகளேழிமிழ
அடுத்தமாதவபபார்ககவன்றனைமருஙக ணுகா

(இ-ள்.) (இந்திரன்) விடுத்த அக்கனகாங்கியும் வேதியராகிய பார்க்கவமுனிவரது தவத்தை யழித்துத்திரும்புவேனென்று (துணிந்து), பெண்கள் பலர் தனது பக்கங்களில் சூழ்ந்திருந்து எடுத்த வீணையில் குரல்முதலிய ஏழிசைகள் ஒலியாநிற்கப், பெருந்தவமமைந்த அம்முனிவரது சமீபத்திற் சேர்ந்து, (எ-று.)

குரல் முதலிய ஏழிசைகள்—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. மிடற்றாற்குரலும், நாவிற்றுத்தமும், அண்ணத்தாற் கைக்கிளையும், சிரத்தாலுழையும், நெற்றியாலிளியும், நெஞ்சால் விளரியும், மூக்காற்றாரமும் பிறத்தலறிக. (௧௧)

௧௨. விரித்தகூந்தலிறமுடைபுனைந்தணிபலவிளக்கி
நெரித்தமைபபுருரத்தைவேளசிலையினிநெறித்துப்
பரித்தகுண்டலமபடிமிசைப்படுத்தெடுத்தணிந்து
சிரித்திலஙகுருதிகழ்கனிவாயிஹுடசெறித்து

(இ-ள்.) விரிவையுடைய கூந்தலில் மாலையையணிந்து, பலஆபரணங்களைப்பூண்டு, நெரிப்பையுடைய கரிய புருவத்தை மன்மதன் வில்லைப் போலச் செவ்வையாக நிற்கவைத்து, (தான்) அணிந்தகுண்டலத்தைப் பூமியிலிட்டெடுத்தணிந்து, சிரித்தலால் விளங்கி ஒளிரும் கனிபோன்ற அதரத்தை வாயில் மறைத்து, (எ-று.) (௧௨)

௧௩. முகமலர்க்குறுவெயர்வினைப்பலபலமுறையே
நகமதிற்கொடுதெறித்திருகிரிநிகர்நகிலின்
அகமடுத்தவுத்தரியத்தைநீக்கிமீதணிந்து
மிகவனப்பொடவ்வரிவையர்க்கெதிர்மொழிவிளம்பி

(இ-ள்.) முகமாகிய மலரிலுள்ள குறுவெயர்வையைப் பலபலவிதமாக நகத்தாலே கொண்டு தெறித்து, இரண்டுமலைக்குச்சமானமாகிய தனங்களினிடத்திருத்திய உத்தரீயத்தை நீக்கி (மீண்டும் அவற்றின்) மேலணிந்து, மிக்க அழகோடு அப்பெண்களுக்கு எதிர்மொழிகளைச் சொல்லி, (எ-று.)

௧௪. விழித்துணைக்கயன்மதர்த்திடத்திரைகரைமிசையிற்
கொழித்தநித்திலத்தெதிர்நகைத்தனல்விழிக்கொழுந்தால்

அழித்தசித்தசக்கடவுளுக்குடல்கொடுத்தவனைப்
பழித்தடக்குபொற்புடனடிபடியிடைப்படிய

(இ-ள்.) கண்களிரண்டும் கயல்மீன்களைப்போலப் பிறழ, கடலினலைகள் கரையின்மேல் கொழித்த முத்துகளைப்போல எதிரோ நகைத்து, நெருப்புக்கண்ணின் கொழுந்தினாலே அழிக்கப்பட்ட மன்மதனுக்குச் சரீரத்தைக்கொடுத்தவரைப் பழித்தடக்குவதான அழகுடனே தனது கால்கள் பூமியினிடத்துப்படிய, (எ-று.)

இக்கனகாங்கியின் அழகுக்கு முன்னே மன்மதன் சரீரத்தினழகு விளங்காமையால் அப்படிப்பட்ட சரீரத்தை மன்மதனுக்குக் கொடுதவோர் பழிப்படைந்து அடங்க எனக்கூறவநதோர் 'சித்தசக்கடவுளுக்கு உடல் கொடுத்தவனைப் பழித்தடக்கு பொற்பு' என்றார். (௧௪)

௧௫. நின்றுபாரககவமுனிக்கெதிர்கதிர்வளைநிரைகள்
ஒன்றுசெஙகையிலவீணைகொண்டுறையினையொழியா
நன்றுபாணியினலமெனவிருசையாநாண
வென்றுளாளடலனஙகவேளபுகழெலாம்விரித்தாள்.

(இ-ள்.) நின்று, பார்க்கவமுனிவருக்கெதிரில் ஒளியுடைய வளையல்வரிசைகள் பொருநதிய செம்மையான கையில் வீணையை எடுத்து (அதன) உறையை நீக்கி, (இநத) இராகத்தின் நலம் நன்றென்று வித்தியாதரர்கள் காணமடையும்படி அவாகளை (இசையில்) வென்றவளாகிய (கனகாங்கி), யாவரையும வெல்லும் வெறறியையுடைய மனமதனது கீர்த்தியெல்லாவற்றையும் விரித்தனள். (எ-று.) (௧௫)

௧௬. வயிரநீங்கினபுட்களுமிருகமுமலையோ
டுயிரிலாதவுங்குழைநதனதளிர்த்தனவுலவை
செயிரிலாதவமமுனிவனும்யோகத்தின்செவ்வி
பயிறனீததிசையாற்கனகாஙகியைபபார்த்தான்.

(இ-ள்.) (அப்போது) பறவைகளும் மிருகங்களும் (தமககுள்ள) விரோதம் நீங்கின. மலைகளும் உயிரில்லாதவைகளும குழைநதன. பட்டமரக்கொம்புகள் தளிர்த்தன. குற்றமில்லாத அநதபபாரக்கவமுனிவரும் யோகத்தின் செம்மையைப் பயிலுதலை யொழித்து, இராகத்தினாலே கனகாங்கியைப் பார்த்தார். (எ-று.)

முன்னர் இசையைக்கேட்டு இசைவரும் வழியே கட்புலனைச் செலுத்திக் கனகாங்கியைப் பார்த்தனராதலால் 'இசையால் கனகாங்கியைப் பார்த்தான்' என்றார். "நீரறு தருக்களுந் தழைகக நின்றுமுன், நாரதன் முதலியோர் நவிற்று நாதயாழ், பாரத வமர்புரி பச்சை மாமுகில், ஆரதர் விடாயவந் தாற்று கின்றதால்" எனறும் "என்றவன் பாடக் கேட்டே யிறைஞ்சின குறிஞ்சி யேகா, நின்றன விலங்கு சாதி நிலங்கொண்ட பறவையெல்லாம், அன்று மெயம்மறநது சோர்ந்தார் கின்னர ரமரர் தாழ்ந்தார்" என்றும் பிறர் கூறுதலுங் காண்க. (௧௬)

௧௭. இழைத்தகைதவமியாவையுங்கண்டனனிவன்மேற்
கழைத்தடஞ்சிலையாளிபூவாளியாற்கடுத்தான்
உழைத்திரண்டினுமூசலாட்டாவியோர்வண்ணம்
பிழைத்திருந்தவச்சமாதிவிட்டுளமயல்பிடித்தான்.

பயங்கிளர்தவத்தைநீத்தப்பாதகந்துடைப்பானெண்ணி
இயங்குநீர்சகங்கையாதியிருநதிபடியசசென்ருன்.

(இ-ள்.) (இப்படி) தழுவியபின்னர், துன்பமாகிற அதிகமான திரைகளையுடைய சமுத்திரத்தில் முழுகி மயங்கி, இப்பெண்மாயையினின்று நீங்கவல்லவர்கள் யாவரென்று கொண்டு, பயனமிகுவதான தவஞ்செய்வதை யொழித்த அப்பாதகம் போக்கவெண்ணி, விளக்கமுடைய நீரமைந்த கங்கைமுதலிய பெருமையையுடைய நதிகளில் நீராடச் சென்ருர். (எ-று.)

[பக்திஸாரர் திருவவதாரம்.]

௨௨. அருட்கனகாங்கிதன்பாலசசுதனங்கையாழி
கருப்பமுற்றிடலுமேனிகலைநிறைகதிரிற்காணச
சுருகருடைமருஙகுருேன்றச்சூனிறைந்துளைந்துசோரப்
பொருகனைத்தைமகத்தோபுதல்வனைப்புவியினின்ருள்.

(இ-ள்.) அக்கனகாங்கியினிடத்துக், கிருபைவடிவாய அடியார்களைக் கைவிடாத பெருமானது திருக்கைகளிலிருக்கும திருவாழியாழ்வான, கர்ப்பமாக வநதடைதலும், அவளதுமேனி கலைகள் நிறைந்த சநதிரனைப்போல (வெளுத்துக்) காட்டவும், (இருபபது தோனருமல்) நுட்பமான இடை தோன்றவும், கர்ப்பம் நிறைநது, (அவள்) வருநதிச்சோர, (ரிஷிபிண்டம் இராத்தங்கா தென்கிறபடி) உடனே தைமாததகில் மகநக்ஷத்திரத்தில் பூமியினிடத்து ஒருபுதலவனைப பெறறுள. (எ-று.) (௨௨)

* பருவமாமுகிலினமின்போறபயில்வுறுபிண்டநதானுங்
கருவுடைபபையிேனுடு நகண்செவிமுதலவாய
வுருவமின்னதெனநன்னருணர்வரிதாகிதேதோன்றத்
தருவுடையமரர்நாட்டுத்தாக்கணங்கிறும்பூதுறருள்

(இ-ள்.) கார்காலத்து மேகத்திலுண்டான மின்னலைப்போலப் பொருந்திய அநதப்பிண்டம், கர்ப்பப்பையுடன் கண் செவி முதலான உருவம் இப்படிபபட்டன வெனறு நன்ருக அறிவதறகரிதாகத் தோன்றவே, கற்பகத்தருவையுடைய தேவலோகத்திலுள்ள தெயவப்பெண்ணுன கனகாங்கி ஆச்சரியமடைந்தாள். (எ-று.)

௨௩. ஈன்றவம்மகவைசசூரலிறும்பில்வைத்திமையோர்மங்கை
சான்றவர்பரவுமாகண்டலனுறைதலத்தைச்சார்ந்தாள்
வான்றவழ்திகிரிசசெஙகேழ்மணிசசுடர்வடிவம்பார்மேற்
ருேன்றவந்திழிந்ததேபோறறுலங்கினன்றெலைவிலானும்.

(இ-ள்.) அப்படிப்பெற்ற அக்குழவியை ஒரு பிரப்பம்புதரில் வைத்துவிட்டு, அத்தெயவப்பெண் பெரியோர் வணங்கும் இந்திரனுறையும் தேவலோகத்தைச் சோந்தாள். ஆகாயத்தில் சஞ்சரிக்கும் தேரையுடைய சிவந்த ஒளிபொருந்திய அழகிய சூரியனது வடிவம் பூமியின்மீது (எல்லோருக்கும்) தோன்றும்படி வந்திறங்கியது போல விளங்கினர் கெடுதலில்லாத ஆழ்வார். (எ-று.) (௨௩)

[பக்திஸாரர் பகவதநுக்கிரகம் பெறுதல்.]

௨௪. வந்தவண்மழிசைவாழுமான்மகிசாரநாதன்
அந்தமைந்தனைச்செங்கையாலணைத்தணியாகஞ்சேர்த்திக்

கந்தவாரிசப்பொன்கைக்கேகொடுத்தலுஞானக்காட்சி
தந்தருண்முலைப்பால்சாலவருத்தினள்கமலைதானும்.

(இ-ள்.) திருமழிசையில் நித்தியவாசஞ் செய்யும் திருமாலான மஹீஸார க்ஷேத்ரநாதன் அவ்விடத்துக்கு எழுந்தருளி, அந்தமைந்தனை (தமது) சிவந்த திருக்கையா லணைத்து அழகிய திருமேனியிற சேர்த்து, வாசனையுடைய தாமரையி லெழுந்தருளிய பெரியபிராட்டியார் திருக்கையிற் கொடுத்தலும், அப்பெரியபிராட்டியும் ஞானமாகிய பார்வையைத் தந்தருளும் திருமுலைப்பாலை மிகவும் ஊட்டினர். (எ-று.) (௨௪)

௨௫. திருமகண்முலையிற்றீம்பாலபரிதிநேர்சிறுவன்செங்கைப்
பெருவிரலுதவும்வண்ணமருளினன்பெருமான்றானும்
அருள்பலவரமுமீயாவாயுவுமளித்தான்பின்னும
இருவரும்புதலவன்றன்னைவாழ்த்திவைததேகினாரால.

(இ-ள்.) (பின்னும்) பெருமானும் பெரியபிராட்டியாரது திருமுலைத் தடத்திலுள்ள இனியபாலைச் சூரியனுக்குச் சமானமான அக்குழநதையினது சிவநதகையிலுள்ள பெருவிரல் சுரக்கும்படி அருள்புரிந்தவனாய, (அடியார்க்கு) அளிக்கும் பல வரங்களுங்கொடுத்து (தீர்க்க) ஆயுளுங் கொடுத்தனன். பிறகு அப்பெருமானும் பிராட்டியாரும் அபபுதல்வனை வாழ்த்தி (அங்கு) வைத்துச் சென்றனர். (எ-று.) (௨௫)

[ஆழ்வாரை அரிதாசர் கொண்டுபோய வளர்த்தல்.]

௨௬. வள்ளன்மாலகன்றபின்னவ்வனத்திடைவளைந்துகூர்த்த
புள்ளமுங்கொண்டுஞாங்கர்ப்புகுந்தரிதாசனென்போன்
மெள்ளவேயெறியுங்காலைவேலியில்விரிந்தநீலப்
பளளவாருதியுட்டோன்றும்பரிதிநேர்மகவைககண்டான்.

(இ-ள்.) (இப்படி) உதாரத்துவமுடைய எம்பெருமான் நீங்கியபிறகு, (அவ்வூரிலிருப்பவராயப் புத்திரப்பேறில்லாத) அரிதாசனென்பவர், அவ்வனத்தினிடத்துப் புகுந்து வளைநது கூர்மையான கொடுவாளைக் (கையிற்) கொண்டு அவ்விடத்தில் தாமதமாகப் பிரம்பு வெட்டிக்கொண் டிருக்கையில், விரிவையுடைய நீலநிறமான அழகுள்ள சமுத்திரத்திற் றோன்றும் சூரியனுக்குச் சமானமான அக் குழந்தையை அபபிரப்பம் புதரில் கண்டனர். (எ-று.) (௨௬)

௨௭. கான்றவம்மணியைக்காணாக்கட்செவிகவருங்காட்சி
போன்றவாவொடுகைக்கொள்ளாப்பொருந்தமார்பகத்திற்புல்லித்
தோன்றவாருதிபோலோகைதுணைவிழிவழிநீர்சோரத்
தான்றவாத்தவத்தனாயுட்கருதியேமனையைசசார்ந்தான்.

(இ-ள்.) ஒரு சர்ப்பம் தான் உமிழ்ந்த அந்த மணியைக் கண்டு எடுத்துக்கொள்ளும் காட்சியைப் போல, ஆசையோடு கையிறகொண்டு பொருந்தும்படி மார்பிலணைத்து (கரைகாணாத) சமுத்திரம்போலச் சந்தோஷந் தோன்றவும், இரண்டு கண்களினின்றும் ஆனந்தக்கண்ணீர் சோரவும், தாம் கெடாத தவத்தை யுடையவராக உள்ளத்தி லெண்ணிக்கொண்டே மனையை யடைந்து, (எ-று.)

'கான்றவம் மணியைக்காணுக் கட்செவிகவருங்காட்சி' என்றது அவரு வின் மிருதியை யுணர்த்தி நின்றது. இதனைத் திருவடியானவர் இலங்கையிலிருந்த சீதாபிராட்டியாரைச் சேவித்துச் சக்ரவர்த்தித்திருமகனது திருவாழியைக் கொடுக்கப், பிராட்டி கண்டுகளித்தபோது "இழந்தமணிபுற ரவெதிர்ந்த தெனலானுள்" எனக் கம்பநாட்டுக கவிச்சக்ரவர்த்தியார் கட்டுரைத்ததனுலுமுணர்க. (உஎ)

உஅ. ஈய்ந்தனன்மனைவிபாலவ்விலங்கிழையெதிர்வந்தேந்தி
வாய்ந்ததிம்மகவாமுன்னைமாதவம்வந்ததென்று
வேய்ந்தபூண்முலையின்றீம்பாலருத்தலும்விருமபாணுக
ஆய்ந்தவரொவருமின்றதணங்கெனவறையலுற்றார்.

(இ-ள்.) (அக்குழந்தையை) மனைவியிடத்துக் கொடுத்தனர். ஒளிவிடும் ஆபரணங்களையுடைய அவள் எதிர்வந்து ஏந்திக்கொண்டு (நமக்குக்) கிடைத்ததான இக்குழந்தையாக நமது முன்னைய பெரிய தவமே வந்ததென்றுரைத்து ஆபரணங்களணிந்த தனத்தினிடத்துச் சுரந்த இனியபாலையூட்ட (அதனை ஆழ்வார்) விரும்பாதவராயிருக்க, இதனை யாராய்ந்தவர்களெவரும் (இக்குழந்தையைத்) தெய்வபபெண் பெற்றனளென்று சொல்லத் தொடங்கினார்கள். (எ-று.) (உஅ)

[கணிகண்ணர் திருவவதாரம]

உகூ. அதுதிடவிரதனென்றுமந்தணன்கேளாவன்பின்
விதுநிகர்வளளத்தின்பாலகொடுவரவிமலன்ற்றுறுங்
கதுமெனநுங்காவுளளங்களித்தனன்கண்டோரெல்லாம்
இதுபுதிதெனநாடோறுமினியபாலவனுமீந்தான்.

(இ-ள்.) அயவிசேஷத்தைத் திடவிரதரென்னும் (ஒரு) அந்தணர் கேட்டு அனபுகொணடு சந்திரனை நிகாதத வெணமையான (ஒரு) பளிங்குவள்ளத்தில் இனிய பாலைக்கொண்டுவரப், பரிசுத்தரான ஆழ்வாரும் (அதனை) விரைவாக உண்டு திருவுள்ளங் களித்தனர். (அதைக) கண்டவர்களெல்லோரும் இது ஆச்சரியமென றுரைக்க, அத்திடவிரதரும் இபபடியே நாடோறும் இனிய பாலைச் சமர்பபித்து வநதனர். (எ-று.) (உகூ)

௩௦. அளிகருநாளாயகோர்வைகலருந்துபாலதனிற்பாலன்
பளிகுவள்ளத்திற்பாகம்வைககவப்பார்ப்பானுண்ணுக்
களிகருமுள்ளத்தனுகிக்கழிந்தமூப்பொழிந்துகண்ணுல்
ஒளிகருமவ்வுருவேன்பெற்றுலெனவோருருவம்பெற்றான்.

(இ-ள்.) (இப்படி) சமர்ப்பிக்கும் நாளில் ஒரு நாள் பாலனுகிய ஆழ்வார் தாம் அருந்தும் பாலில் (ஒரு) பாகம் (அநதப) பளிங்குவள்ளத்தில் வைக்க (அதை அந்தத் திடவிரதனென்னும்) பிராமணருண்டு களிக்கின்ற உள்ளத்தையுடையவராகி, அதிகமான முதுமைப்பருவ மொழிந்து, மன்மதன், கட்புலனுகாத அவ்வுருவத்தை (இப்போது யாவருக்கும் புலப்படும் வண்ணம்) பெற்றுனென்று சொல்லும்படி சமானமற்ற உருவத்தைப் பெற்றார். (எ-று.) (௩௦)

௩௧. மற்றவன்மனைவிகோலவயிற்றின்மான்மலர்க்கையாழிக்
கொற்றமார்கலையொன்மெய்யிவளர்தலுங்காப்பங்கொள்ளாப்

பெற்றனள்புதல்வன்றன்னைப்பிறங்குநூற்பெருமையாவுங்
கற்றவந்தணனுருசேயைக்கணிகண்ணனெனும்பேரிட்டான்.

(இ-ள்.) அவரது மனைவியின் அழகிய வயிற்றில் எம்பெருமானுடைய மலர்போன்ற திருக்கையிலுள்ள திருவாழியின் வெற்றியையுடைய ஒரு அமிசம் வந்தடைந்து வளர்தலும், அவள் காப்பங்கொண்டு, (ஒரு) புதல்வனைப் பெற்றனள். பெருமை நிறைந்த சாஸ்திரங்களெல்லாங் கற்ற அவ்வந்தணர், அக்குழந்தைக்குக் கணிகண்ணன் என்று நாமகரணஞ் செய்தனர். (எ-று) (௯௧)

[ஆழ்வார் வளர்ந்து சாஸ்திராப்பியாசஞ் செய்தல்.]

௯௨. மறுவிலாவசுதேவன்பாலவதரித்தமாயோன்
தொறுவர்கோனந்தகோபன்றெனமனைவளர்ந்தாலென்ன
அறுதொழின்முனிவன்றன்பாலவதரித்தரிதாசன்பால
உறுகுமரனுநாடோறும்வளர்ந்துவான்பிறையையொத்தான்.

(இ-ள்) (குற்றமில்லாத வசுதேவரிடத்து வந்து அவதரித்த கண்ணன், ஆயர்தலைவனான நந்தகோபரது பழமையான மனையில் வளர்ந்தது போல, அறுதொழிலையுடைய முனிவரிடத்து அவதரித்து அரிதாசனென்பவரிடத்து உற்ற சிறுவராகிய ஆழ்வாரும் நாடோறும் வளர்ந்து ஆகாயத்திலுள்ள பிறையை யொத்தனர். (எ-று.) (௯௨)

௯௩. கோகரியபெரியோரெல்லாநுவலரிதிவன்சொன்னசா
சாக்கியஞ்சமணமீமாஞ்சைதக்கவினையாயிகத்தோ
டாகியசைவமவைசேடிகத்திலுற்றவற்றினூல்கள்
தூக்கியேபொருளிதென்றெடுப்பதனுவலுநதுலங்கக்கற்றான்.

(இ-ள்.) பார்த்த பெரியோரெல்லாம் இவர் புகழ் சொல்லுதற்கரிதென்னும்படி சாக்கியம், சமணம், மீமாம்சை, தருக்கமுடைய நையாயிகத்தோடு சிவபிரானுண்டாக்கிய சைவம், வைசேஷிகம் ஆகிய சமயங்களிலிருந்து, அவற்றின் நூல்களை ஆராய்ந்து அர்த்தத்துடன் எல்லா நூல்களையும் விளங்கும்படி கற்றனர். (எ-று.) (௯௩)

* பற்பலசமயந்தோறும் புக்கொருபயனிலாதே
விற்பனர்புகழமேவு மேதகைமழிசைக்கோமான
சொற்சிவவாக்கியப்பேர் துலங்கிடச்சைவராகி
நிற்பவக்காலத்தனி னெடியமாலன்பர்பேயார்

* ஆங்குவந்தடைந்தனருக் ககந்தெளிவடையுமாறு
பாங்குடனுபதேசங்கள் பண்ணவேபுக்கபோதிற
ருங்கிடேசமயவாத மிருவருஞ்சாற்றப்பேயார்
ஓங்கிடத்தோற்றுப்பேயார்க் கடிமையாயுற்றாரன்றே.

(இ-ள்.) பற்பல மதங்களிலும் பிரவேசித்து அங்கு ஒருபிரயோசனமுமற்றவராய், அறிவுடையோர் புகழும்படி யிருக்கும் திருமழிசையாழ்வார், சொல்லப்படும் சிவவாக்கியர் என்னும் பெயர் விளங்கும்படி சைவராயிருக்க, அக்காலத்தில் எம்பெருமானுக் கடியாராகிய பேயாழ்வார், அவ்விடத்துக்கெழுந்தருளி இவருக்கு மனந்தெளிவடையும்படி உரிமையுடன் உபதேசங்கள் செய்யப் புகுந்தபோது இருவருமெதிரிட்டுச் சமயவாதமுரைக்க, அவ்வாதத்தில் பேயாழ்வார் உயரவே சிவவாக்கியரான திருமழிசையார் தோல்வியுற்றுப் பேயாழ்வாருக் கடிமையாயினர். (எ-று.)

[சற்சமய மின்னதென்றுணர்ந்து தவநிலையிற் பொருந்தல்.]

௩௪. கற்றவசசமயநூலிற்கதிதருஞானக்காட்சி
அற்றவமதித்துநீக்கியனையநீத்தழுங்கியுள்ளம்
நற்றவம்புரிவானெண்ணியிமயமால்வரையைநண்ணி
உற்றவன்பொருததற்காத்தவொருத்தனையுளத்துட்கொண்டு

(இ-ள்.) தாம் கற்ற அந்தச்சமய நூல்களில் மோக்ஷத்தைத் தரும் ஞானக்காட்சி இன்றியேயிருக்க, (அதனாலே) அவற்றை அவமதித்து நீக்கி யொழித்து (நெடுங்காலம் அச்சமயவாராய்ச்சியில் காலஞ் சென்றதற்காக) மனம்வருந்தி, (அப்பால்) நல்ல தவஞ்செய்ய எண்ணிப் பெரிய இமயமலை யைச்சார்ந்து, பொருந்திய அன்போடு கஜேந்திராழ்வானைக் காத்தருளின அத்துவிதீயனை எமபெருமானைத திருவுள்ளத்திற்கொண்டு, (எ-று.)

ஒருத்தல்-யானை. இவ்வாழவார் பிறசமயங்களைக் கைவிட்டபோது "சாக்கியங்கற்றோஞ்சமணங் கற்றோமசசங்கரனார், ஆக்கியவாகமநூ லாராயந்தோம்—பாக்கியத்தால், செங்கட்கரியவனைச் சேர்ந்தோநாந்தீதிலோம், எங்கட்கரியதொன்றில்." என்று அருளிச்செயதனரொனக் கூறுவா. (௩௪)

வேறு.

௩௫. பொறிகளின்குணந்தொழிறவிர்த்துளமுறபபொருத்தி
செறிகடுங்கனனடுவிருந்தயர்தவந்திருமால்
அறிகவென்றவணலகிறுளயாந்தனன்சிரத்தின்
நெறிகடந்துமீத்தவககனனிறைந்ததுநிமிாந்தே.

(இ-ள்.) ஐம்பொறிகளின் (புலனகளிற் செல்லும் சுபாவ) குணத்தை யும் தொழிலையும் நீக்கித திருவுளளத்தை ஒருபடியாகப பொருந்தவைத்து, நெருங்கிய கொடிய அக்கினியின நடுவிலிருநது (தாம்) செயயும் தவத்தை த் திருமால் அறியக்கடவர் என்று அங்குக் கணக்கறறநாள் தவஞ்செயதனர். (அந்தத்) தவமாகிய அக்கினி சிரததின் (பிரமராதிர) நெறியைக்கடந்து உயர்நது மேலே நிறைந்தது. (எ-று.) (௩௫)

[கொங்கணசிததன ஆழவாரருளபெறல்]

௩௬. அங்கருந்தவமயர்தருங்காலையந்தரமேற்
கொங்கணப்பெயாசசித்தனுங்கொடுவரிகடவாத்
தங்கலின்றியேபடர்தலுந்தவக்கனற்றடையால்
வெங்கடும்புலிதுணுக்குறுமீண்டதுவெருவி.

(இ-ள்.) அங்கு அரியதவஞ்செயயும்போது, ஆகாயத்தின் மீது, கொங் கணசித்தனென்னும் பெயரையுடையவன், புலியை வாகனமாயேறிச் செலுத்தித் தங்குதலில்லாமற செல்லுதலும், ஆழ்வாரது தபாக்கினியின் தடையினால் மிகக்கொடிய அபபுலியானது அச்சக்குறிப்படைந்து பயந்து திரும்பியது. (எ-று.) (௩௬)

௩௭. சித்தனுங்கொடுவரியொடசிகரியைச்சேரா
இத்தவமபுரிமுனிவனைக்காண்பனென்றிழிந்தே

கொத்தலர்ந்தபன்மரம்புடைபயின்மலைக்குகரத்
துத்தமன்றனைக்கண்டெதிர்வழுத்தலுமுரவோன்.

(இ-ள்.) கொங்கணசித்தனும் புலியோடு அம்மலையையடைந்து, இத்தகைய தவஞ்செய்யும் முனிவனைக் காணக்கடவே னென்றிறங்கிப், பூங்கொத்துக்களலர்ந்த பலமரங்கள் பக்கங்களிற் பொருந்திய அம்மலையின் குகையில் உத்தமராகிய ஆழ்வாரைச் சேவித்து, எதிர் நின்று தோத்திரஞ் செயதலும், ஞான வலிமையையுடைய ஆழ்வார், (எ-று.) குகரம்-குகை.

௲அ. விழித்துநோக்கிநீயெவனெவைவிருப்பெனவினையை
இழித்துவாழ்தவச்செல்வயான்கொங்கணனிரும்பை
ஒழித்துமாழைசெய்விஞ்ஞைகண்டனன்றிரஞ்லத்தை
அழித்துமாழைசெய்விஞ்ஞைகண்டிலனெனவறைந்தான்.

(இ-ள்.) (திருக்கண்களை) விழித்துப்பார்த்து, நீயாவன்? (நின்) விருப்பங்கள் எவை? என்று அருளிச்செய்ய, (இரு) வினையை யழித்து வாழும் தவத்தைச் செல்வமாக வுடையீர்! நான் கொங்கண னெனபோன், இரும்பை (அதின் தனமையை) யொழித்துப் பொன்னுக்கும் வித்தையைக் கண்டிருக்கிறேன்; திரண்டகல்லை (அதின் றன்மையை) அழித்துப் பொன்னுகச் செயயும் வித்தையைக் கண்டிலேன் என்று சொல்லினன. (எ-று.) (௲அ)

௲௯. அரியதீதுகொலெனநகைத்தக்கணத்தலர்போல்
விரியடிக்கறைகுளிகைசெய்தளித்தலும்விடைகொண்
டுரியவிஞ்ஞைநன்றெனவியந்தோங்குபொன்னுருவந்
தெரியமால்வரைசித்திரகூடத்தைசசெய்தான்.

(இ-ள்.) (ஆழ்வார்) இது அரியதோ என்று நகைத்து, அப்பொழுதே மலரைப்போல விரிந்த தமது திருவடியழுக்கைக் குளிகைசெயது கொடுத்தலும், கொங்கணசித்தன் விடை பெற்றுக்கொண்டு உரிய (இவ்) வித்தை நன்றென்று ஆச்சரியங்கொண்டு சிறநததான சித்திரகூட பருவதத்தை உயர்ந்த பொன்னுருவாகத் தெரியும்படி செயதனன். (எ-று.) (௲௯)

௨0. உளங்களித்துமால்வரையினவ்வுருவமிவ்வுலகில்
விளங்குறுதொளித்தகன்றனனகன்றபின்விரிந்த
களங்கொள்கந்தரக்கடவுளும்விடையினைக்கடவா
வளங்கொள்பார்க்கவன்மகற்கெதிருமையொடும்வந்தான்.

(இ-ள்.) (இப்படியானதினால்) மனங்களித்துப் பெரிய சித்திரகூடத்தின் அப்பொன்னுருவம் இவ்வுலகில் விளங்காமல் மறைத்துவைத்துச் சென்றனன். (அப்படிக் கொங்கணசித்தன்) போனபிறகு, பரவிய விஷங்கொண்டிருக்கும் கண்டத்தையுடைய சிவபிரானும் உமாதேவியாரோடு ரிஷபவாகனமேறி வண்மையுடைய பார்க்கவமுனிவர் திருக்குமாரராகிய ஆழ்வாருக்கு முன்னே வந்து, (எ-று.) (௨0)

[சிவபிரானும் ஆழ்வாரும்]

௨க. உன்னைமாதவத்துவந்தனமுளத்தவாவுதவி
நின்னையாள்கைநங்கடனெனநிறைதவத்தவனும்
முன்னைநாயகன்முகுந்தனென்கருத்துளான்மொழியில்
என்னைநீவரங்கேட்டிமீதென்வரமென்றான்.

(இ-ள்.) பெரியதவத்தால் உன்னையுவந்தோம்; உனது உளத்திலுள்ள விருப்பத்தைக் கொடுத்து உன்னையாள்வது நமது கடமையென்றுசொல்ல; நிறைந்த தவத்தையுடைய ஆழ்வாரும், முதன்மையான நாயகனாகிய முகுந்தப் பெருமான், சொல்லுமிடத்து, எனது உள்ளத்திலெழுந்தருளியிருக்கின்றான்; நீ என்னை வேண்டிய வரங்கேட்பாயாக, என் வரம் மேலானது என்று சொல்லியருளினர். (எ-று.) (௪௧)

[அடியில்வரும் வைபவம் குருபரம்பரைகளிற் கண்டது.]

உருத்திரமூர்த்தி, 'நீர் விரும்பினதொன்றைக் கேட்டுக்கொள்ளீர்' என்ன, ஆழ்வார் புன்முறுவல்செய்து 'ஆகில் மோக்ஷந்தரவல்லையேல் தாராய்' என்றார். அதற்கு 'அது என்னால் தரக்கடவதன்று, ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே தரவல்லன்' என்றார். ஆனால் 'இன்றுசாவாரை நாளைச் சாகும்படி பண்ணவல்லையோ' என்று கேட்க, 'அதுவுங் கர்மாநுகுணமன்றோ' என்றார். அப்பால் ஆழ்வாரும், "ஊசி மேயும் வழி யவ்வூசி தனிற் பூண்ட நூல்போம் வரந்தருதி" என்று பரிகசித் துரைத்தருளினர்.

௪௨. நகைத்துருத்திரகடவுளுருநுதல்விரிநயனச்
சிகைக்கொடியகனல்காட்டிவிண்ணடுங்குறச்சினந்தான்
பகைத்தனன்றெனமேலோர்பதத்தாயிரம்பார்வை
புகைத்தழற்சொரிந்தெதிர்பொரக்காட்டினன்புனிதன்.

(இ-ள்.) (அதற்கு) உருத்திர மூர்த்தியும் சிரித்து விரிந்த நெற்றிக் கண்ணினிடத்துள்ள சிகைபோல் கூடிய கொடிய அக்கினியை பேயவி, தேவலோகம் நடுங்கக் கோபித்தார். (இப்போது சிவபிரானோடு) பகைப்பது நன்றென்று, பரிசுத்தரான ஆழ்வார் (தமது) ஒரு திருவடியிலுள்ள பலவான கண்களானவை புகையோடு கூடிய அக்கினியை விட்டு அதற்கெதிராகயுந் தஞ்செயலைக் காட்டினர். (எ-று.) (௪௨)

௪௩. விடையுகைத்தெரிவிழியுகநகையொடுவிரிநீள்
சடையுகச்சுழன்மழுவுகவுமையவடழுவாப்
புடையுகக்கதம்பொங்கியபுனிதன்மேற்பொழிவான்
கடையுகத்தெழுமழையினைவிதித்தனன்கடவுள்.

(இ-ள்.) சிவபிரான் ரிஷபத்தைச் செலுத்தி, சிரிப்போடு விழிகளில் அக்கினி சிந்தவும், விரிந்த நீண்ட சடாபாரம் (கீழே) விழவும், சுழலும் மழுவாயுதம் விழவும், உமாதேவியார் தழுவாமல் பக்கத்திற் செல்லவும், (தம்மோடெதிர்த்துக்) கோபித்த பரிசுத்தராகிய ஆழ்வார்மேற் பொழியும்படி உகாந்தகாலத்திற் பொழியும் (புஷ்கலாவர்த்தாதி) மேகங்களுக்கு உத்தரவளித்தனர். (எ-று.) (௪௩)

௪௪. எயினகைத்தெரியிட்டுளோனேவலாலெழுந்த
குயினதிக்கிறைபுனலெலாம்பருகிமீக்குழுமா
வெயின்மறைத்துயர்முனிபதவிழிக்கனன்மிசையே
பயிறரப்புனல்சொரிந்தவாலிடைவிடாப்பரந்தே.

(இ-ள்.) முப்புரங்களை நகைத்து எரித்தவராகிய சிவபிரானது ஏவலாலே யெழுந்த மேகங்கள் நதிகளுக்கு நாயகமான சமுத்திரத்திலுள்ள நீரையெல்லாம் உண்டு ஆகாயத்திற் சேர்ந்து பரவிச் சூரியனை மறைத்து,

உயர்ந்த மனனசீலராகிய ஆழ்வாரது திருவடிக்கண் ணெருப்பினமீது பொருந்தும்படி ஓயாமல் நீர் சொரிந்தன. (எ-று.) (௪௪)

௪௫. சொரிந்தநீரையம்முனிபதக்கனலுநெய்த்துளிபோற்
பரிந்துநுங்கியுமமைகிலாதெழுந்துமீப்பற்றக
கரிந்துவெண்டிரைக்கடலகுளித்தனமுகிறகணமும்
இரிந்துபோயினரிமையவாமுனிவரொலலாம.

(இ-ள.) (அப்படிப) பெய்தநீரை அவ்வாழ்வாரது திருவடிக்கனலும் நெய்த்துளியைப்போல ஆக்கிரமித்து உண்டும, அதனோடு அமையாது வியாபித்து மேலேபற்ற (அந்த) மேகக்கூட்டங்களும கரிந்து வெள்ளிய அலைகளையுடைய கடலில குளித்தன. தேவாகள முனிவாகள எல்லாம (ஆற்றாது) ஓடினா. (எ-று.) (௪௫)

௪௬. பாரத்தசங்கரன்றிகைத்தலுமிடத்துறைபாவை
தீரத்தமாதவத்தவனியாரவிலலெனச்சிவனும
கூரத்தநாந்தகக்குரிசிலைக்கருத்திருடகொணடோன்
ஆரத்தவக்கபாதபபெயாயோகியெனறுரைந்தான்.

(இ-ள.) (இதைப) பாரதத சங்கரன திகைத்து நின்றவளவிலே, அவரது இடது பாகத்திலிருக்கும உமாதேவியார, 'தலைவா! (இம) மாதவத்தோன யார? சொல்லுவீராக' என்றுகேட்கச சிவபிரானும 'இவா கூரமை பான வாளையுடைய பெருமானைத (சமது) திருவுள்ளத்திற் கொணடவா; பொருந்திய அக்ஷபாதனென்னும பெயாபடைத்த யோகி' யென்று சொலலினா. (எ-று.)

௪௭. அன்னவாசகங்கேட்டதிசயித்தனளணங்கும
உன்னருநதிசயங்கறைமிடறறிறைவனுமொழித்துப
பின்னாநண்பனீயெனததழீஇயுமையொடுமபெயாந்தான்
இன்னறீரதவமுனிவனுந்தவமபுரிந்திருந்தான்.

(இ-ள்.) உமாதேவியாரும அவ்வுரையைக் கேட்டு அதிசயித்தனா. பின்னா கறைமிடற்றையுடைய சிவபிரானும சொலவதற்கரிய கோபத்தை யொழித்து, நீ எனது நணபனென்று தழுவி உமாதேவியாரோடு சென்றனா. தீமையற்ற தவத்தையுடைய மநநசீலரான ஆழவாரும தவஞ்செய்து கொண்டிருந்தனா. (எ-று.) (௪௭)

[அடியில் வருவது வேறொரு செய்யுட்குருபரம்பரையிற கண்டது.]

‡ பின்னும்வெகுண்டுபுரமட்ட பெருமானவேறுநிகரிலகாய
மன்னுஞ்சூலந்தனைவிடுப்பான மதித்தாங்கதனைக்கைககொளளும்
அன்னதுணர்ந்தவசீரியமராதமக்குமறிவரியாய
இன்னபடைவிடுத்திடினு மெய்தியவனலழிவெய்தும்.

‡ ஆதலாலிங்கிதனைவிடா தகறியெனவம்மொழிகேட்டுச
சீதமதியுங்கங்கையுநதண் செழுங்கொன்றையுஞ்சோசெஞ்சடையோன்
பாதியுடலங்கொண்டமலை பயந்தமடவாடனைவெறுத்துப்
போதநாணுற்றிடபமிசைப பொருந்திவிசும்பிறபோயினனால்.

(இ-ள்.) பின்னும் முப்புரங்களை வென்ற சிவபெருமான் கோபித்து வேறு ஒப்பில்லாததாயிருக்கும் சூலத்தைப் பிரயோகிக்க நினைத்த

அதைக் கையிற்கொள்ளுதலும் அதனை யறிந்த அசரீரி, தேவர்களுக்கும் அரிதானவரோ! நீர் இந்தச் சூலத்தைப் பிரயோகித்தாலும் அது அவரை யடைந்து அவரால் அழிந்துபோகும். ஆதலாலே இங்கு இதனைப் பிரயோகிக்காமலே போய்விடுவீராக எனறுரைக்க அவ்வார்த்தையைக்கேட்டுக் குளிர்ந்த சந்திரனும் கங்கையும் குளிர்ந்து செழுமையான கொன்றைமலர் மாலையும் பொருந்திய சிவந்த சடையையுடைய சிவபெருமான் தனது பாதிசரீரத்தைக்கொண்டவராய மலையரையன் மகளான உமாதேவியாரை (தம்மை ஆழ்வாரிடத்து வரபபண்ணினதற்காக) வெறுத்து, மிக்க நாண மடைந்து ரிஷபவாகனமேறி அகாயமார்க்கமாகச் சென்றனர். (எ-று.)

[சுக்திஹாரன் ஆழ்வாரை வழிபட்டது]

* சுத்திகாரனென்றொருசவன சுவணகஞ்சுகமும்
பத்தியார்மணிவடமுமீதணிகெனப்பணிப்பப்
பத்திசாரனுமினிவிடைபரிதிபோனொளிருஞ்
சித்திரம்மெலாமேவியேசிறந்திடப்படைத்தே

* வேறுகஞ்சுகமும்மணிமாலையும்விருப்பிற
னேறிவேயகுதிநீயெனச்செப்பவத்தவனும்
மாறின்மாதவத்தண்ணறன்மகிமைக்குமப்பா
லேறுநல்விடப்பொடுதொழுதேத்தியேகினனால்.

(இ-ள்.) சுத்திஹாரனென்னும் ஒரு தவசி (வந்து) பொனனாலான சட்டையும் வரிசையான இரத்தினமாலையும் கொடுத்து இவைகளையணிந்துகொள்வீர் என்றுரைத்துக்கொடுக்க, ஆழ்வாரும் தமது சங்கற்பமாத்திரத்தில் சூரியனைப்போலப் பிரகாசிக்கும் சித்திரங்களெல்லாம் பொருந்திச் சிறக்கும்படி உண்டாக்கி, வேறே சட்டையையும் இரத்தினமாலையையும் (கொடுத்து) நீ (இவற்றை) விருப்பத்துடன அறிந்து தரித்துக்கொள்வாயாக என்று சொடுக்க அந்தச் சுத்திஹாரனும் ஒப்பில்லாத பெருந்தவத்தையுடைய ஆழ்வாரது மகிமைக்கு மாறுபாடு மேன்மேல் மிகுவதான நல்ல ஆச்சரியத்துடன் ஆழ்வாரை வணங்கித்துதித்துப் போயினன. (எ-று.)

[ஆழ்வாருக்கு எம்பெருமான் பிரத்தியக்ஷமாய்ச் சேவை சாதித்தல்.]

௪௮. வருடநூறுநூறெம்பிரான்றிருமரைமலர்த்தாட
டெருடருந்தவமவனிருந்தயர்தலுந்திருவும்
அருடரும்புவிமடந்தையுமிருமருங்கமரக
கருடன்மீதெழுந்தருளினன்கருணையங்கடவுள்.

(இ-ள்.) (இப்படிப்) பற்பலவருடங்கள் அங்கிருந்து எம்பிரானது அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளில் தெளிவடையும் தவத்தைச் செய்தலும் பெரியபிராட்டியாரும் அருள்தரும் பூமிப்பிராட்டியாரும் இரண்டு பக்கங்களிலு மிருக்கப் பெரிய திருவடியின்மீது கருணையங்கடவுளாகிய எம்பெருமானெழுந்தருளினன். (எ-று.) (௪௮)

௪௯. வரையறுதஞானக்குணத்தமைந்ததொல்வடிவும்
விரையலங்கலுமகுடகுண்டலங்களும்வெய்யோன்
புரையவேயொளிர்மணியொடுவற்சமும்பொலன்பூண்
நிரையடங்கலுங்கனகவாடையுநகைநிலவும்

(இ-ள்.) அளவுபடாத ஞானகுணங்களோடமைந்த அநாதியான திருவுருவும் வாசனையுடைய வநமாலையும் மகுடமும் குண்டலங்களும் சூரியனுக் கொப்பாகப் பிரகாசிக்கும் கவுஸ்துபத்தோடு ஸ்ரீவத்சமும் அழகிய ஆபரணவர்க்கங்கள் யாவும் திருப்பீதாம்பரமும் திருமுத்துக்களின் பிரகாசமும் (எ-று.) (௪௯)

௫0. அரதனச்சிலம்பதனொடுபெரியகவணியும்
வரதபாணியுந்திகிரிசங்கொடுகதைவாளுஞ்
சரதமாகியசார்ங்கமுமொளிர்தரத்தவத்தோர்
கரதலசசரோருகங்குவித்திருபுடைகளுல

(இ-ள்.) பொற்சிலம்போடு பாதகிண்கிணியும் வரத ஹஸ்தமும் திருவாழியும் திருச்சங்கமும் கதாயுதமும் வாளும் உண்மையான சார்ங்கமும் விளங்கவும், தவத்தோர்கள் தமது கைகளாகிய தாமரையைக்குவித்துக் கொண்டு இருபக்கங்களிலும் நெருங்கவும், (எ-று.) (௫0)

௫௧. சேனைநாயகன்முதலினர்மருங்குறதேவர்
தானைசூழ்தரத்தேவதுந்துமியொலிதழைப்பச
சோனைமாரியிலிடைவிடாதலர்மழைசொரிய
யானைகாத்தவன்வருதலுமருந்தவனெழுந்தான்.

(இ-ள்.) சேனை முதலியார் முதலியவர்கள் பக்கங்களிலிருக்கவும், தேவசேனைகள் சூழவும், தேவதுந்துபிமுழங்கவும் ஒலி தழைக்கவும், விடாமழையைப் போல இடைவிடாது மலர்மாரி சொரியவும, கஜேந்திராழ்வானைக் காத்தருளிய எம்பெருமானெழுந்தருளவே அரியதவத்தையுடைய ஆழ்வாரெழுந்து, (எ-று) (௫௧)

௫௨. கண்டனன்றனைக்கண்களாற்கவினெலாங்கருத்துட்
கொண்டனன்றனதுளமெலாங்கடவுள்பாற்கொடுத்தான்
விண்டதென்பவமெனப்புகழ்ந்தாடினன்விரிந்த
புண்டரீகநேரடிகடன்முடிமிசைப்புனைந்தான்.

(இ-ள்.) தமது இரண்டு கண்களாலே சேவித்து, (பெருமானது திருமேனியின்) அழகையெல்லாம் கருத்திற் கொண்டனர்; தமது உள்ளத்தையெல்லாம் பெருமானிடத்திற் சமர்ப்பித்தனர்; என்பிறவி தொலைந்ததென்று புகழ்ந்து ஆடினர்; அலர்ந்த தாமரையை யொத்த பெருமான் திருவடிகளை (தமது) முடியின்மீது அலங்கரித்துக் கொண்டனர். (எ-று.) (௫௨)

௫௩. புளகமெய்தரவிழிகளானந்தநீர்பொழிய
இளகவென்புடனிதயமுமெதிரொழுந்தெந்தாய்
குளகருந்துமாமூலமேயெனவருங்கோவே
துளபமாலிகைமார்பமாதவவெனத்துதித்தான்.

(இ-ள்,) (தமது) திருமேனியில் புளகமுண்டாகவும், திருக்கண்களில ஆநந்த நீர் பொழியவும், என்புடன இருதயமும் கரையவும், பெருமானுக்கெதிரிலெழுந்து நின்று, "எந்தையே! இலைகளையுண்ணும் கஜேந்திராழ்வான் மூலமேயென்றழைக்க அவருக்கு முன்னெழுந்தருளிய ஜகத்காரணபூதனே! திரு

த்துழாயமாலையை யணிந்த திருமார்புடையவனே! பெரியபிராட்டியாருக்கு நாயகனே!" என்று துதித்தனர். (எ-று.) (௫௩)

௫௪. புகழ்ந்தவத்தவக்குரிசிலுக்கருள்பொழிபுயலும்
அகன்றமுத்தொழிற்கரசுதானென்பதுமயனைச
சகந்தரத்தனதுந்தியிற்றந்ததுந்தருநான்
முகன்கணிச்சியைம்முகனையீன்றருளியமுறையும்

(இ-ள்.) (இப்படி) புகழ்ந்த அந்தத் தவசிரேஷ்டராகிய ஆழ்வாருக்கு அருள்மழை பெய்யும் மேகம்போன்ற பெருமானும், பெருகிய முத்தொழிலுக்குந் தானே தலைவனென்பதும், உலகைச் சிருஷ்டிக்கும்படி தனது திருவுந்தியினிடத்துப் பிரமதேவனைத் தந்ததும், அப்படித் தந்த பிரமதேவன் மழுவேந்திய பஞ்சானனரான சிவபிரானை யீன்றருளிய முறையும், (எ-று.)

௫௫. இலங்குவித்தருட்பத்திசாரப்பெயரீந்து
கலங்குறுதுயரபரமமாம்பதத்தையுங்காட்டித்
துலங்குநல்வரமுளவெலாமளித்துக்கணிதுளவத்
தலங்கலெம்பிரானவிடைகொடுத்திருத்தியென்றகன்றான்.

(இ-ள்.) (ஆழ்வாருக்குப்) பிரகாசிக்கச் செய்து, அருளுடைய பக்திஸாரரென்னுந் திருநாமமளித்துக், கலக்கமடையாது உயர்ந்ததாகிய பரமபதத்தையுங் காட்டியருளி, விளங்கு நல்ல வரங்களாயுள்ளனவெல்லாமீந்து, இருப்பாயாக வென்று நியமித்துச், திருத்துழாய்மாலையை யணிந்த எம்பிரான் அந்தர்த்தானமாயினன. (எ-று.) (௫௫)

[ஆழ்வார் முதலாழ்வார்களிடத்தில் உபதேசம் பெறுதல்.]

௫௬. கண்ணனேகியபின்னரங்கவன்றனைக்காண்பான்
அண்ணல்பொய்கைபேய்பூதமென்பவருமங்கெழுந்தே
எண்ணருந்தவனெதிர்நடந்தடிபணிந்திவரீர்
நண்ணியானெனிப்புரிந்ததெத்தவமெனநவின்றான்.

(இ-ள்) எம்பெருமான் அந்தர்த்தானமான பிறகு திருமழிசையாழ்வாரைச் சேவிக்கும்படி பெருமைபொருந்திய பொய்கையாழ்வார் பேயாழ்வார் பூதத்தாழ்வார் இங்கு எழுந்தருள, அதனையறிந்து எண்ணுவதற்கரிய தவத்தையுடைய ஆழ்வார் எதிர்கொண்டு நடந்து அவர்களின் திருவடிகளைப் பணிந்து, "இவ்விடத்திற்கு நீங்கள் எழுந்தருளும்படி நான் விசேஷித்துச் செய்தது எந்தத்தவமோ" என்று அருளிச்செய்தனர். (எ-று.) (௫௬)

௫௭. பத்திசாரனென்றொருபெயரெம்பிரான்பணிப்ப
முத்தனுனையினிகரிலையெவனெனமொழியாச்
சித்தமூவருங்களித்தவன்றனைத்தழீஇச்சிவணி
மைத்தசோலைசூழ்திருவல்லிக்கேணியின்வந்தார்.

(இ-ள்.) முதலாழ்வார்கள் மூவரும், "பக்திஸாரரென்று அத்தனித்தியமான திருநாமம் எம்பெருமான் நியமிக்க அதனால் முக்தரானவரே! உமக்கொப்பானவர் யாவர்?" என்றருளிச்செய்து சித்தங்களித்து அவரைத் தழுவிக்கொண்டு (நால்வருமாகக்) கூடி கருமையான சோலைகள் சூழ்ந்த திருவல்லிக்கேணிக்கு எழுந்தருளினார்கள். (எ-று.) (௫௭)

௬௨. அரியதத்திருமண்பெறற்கதனைநீயார்வம்
புரியவித்தலம்புரிந்ததுதவமதனாபுனிதந்
தெரியநான்முகன்முதலினர்க்கரிதுநீதெரியிற்
பெரியவித்தடங்கயிரவதீர்த்தத்துட்பிறக்கும்.

(இ-ள்.) "அத்திருமண் பெறுவதற்கரிதாகும்; அதனை நீர் விரும்பும்படி இந்தத்தலம் தவஞ்செய்தது; அத்திருமண்ணின் பரிசுத்தத்தை யறிதல் பிரமன முதலியோர்கட்கரிதாகும்; நீர் நாடத்துப்பார்த்தால் அத்திருமண்ணானது மிகவும் விசாலமான இந்த அல்லிக்கேணியின் தீர்த்தத்தில் உற்பத்தியாகும். (எ-று.) (௬௨)

௬௩. எடுத்துநீருதரித்துமாநிலத்தவரெவர்க்குங்
கொடுத்துநம்பதங்கொடுத்தியென்றகன்றனன்கோவும்
அடுத்துவாரியுட்புயிமையமாலெனமாயவித்தல்
கடுத்திடத்திருமணமுனிதடத்திடைக்கண்டான்.

(இ-ள்.) (அதனை) எடுத்து நீர் தரித்து இப்பூமியிலுள்ளோர்க்கெல்லாங் கொடுத்து நம்முடைய பதத்தைக் கொடுப்பீராக" என்றுரைத்து அப்பெருமானும் சென்றனன். (முற்காலத்தில்) பெருமான் வராகமாகிச் சமுத்திரத்தில் பிரவேசித்து அப்பூமியைக் கொண்டுவந்ததுபோல ஆழ்வாரும் திருமண்ணை அல்லிக்கேணியிற் கண்டனர். (எ-று.)

எம்பெருமான் சூகரனாய்த் திறம் வெளிப்படுத்திப் பூமியை யெடுத்தது போல ஆழ்வார் அல்லிக்கேணியிற் பிரவேசித்துத் திருமண்ணையெடுத்தன ரெனக்கொள்க. (௬௩)

௬௪. கண்டவத்திருமண்ணினைத்திருநுதல்கவின
அண்டர்போற்றுமாற்றுப்பெயர்களினுடனணிந்தலர்ந்த
முண்டகத்துநான்முகத்தவன்மகத்துமான்முளைத்த
வண்டடர்ந்தபூம்பொழினிறைகச்சியேவந்தான்.

(இ-ள்.) (ஆழ்வார்) கண்ட அத்திருமண்ணைத் தமது திருநெற்றி விளங்கத் தேவர்கள் போற்றும் பெருமானது திருநாமங்களோடு சந்தித்து அணிந்துகொண்டு, மலர்ந்த தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவன் செய்த யாகத்தில் பெருமான் ஆவிர்ப்பவித்தருளினதாய வண்டுகள் நெருங்கின பூஞ்சோலைகளை நிறைந்த திருக்கச்சிக்கு எழுந்தருளினா. (எ-று.)

[திருக்கச்சித் திருவெஃகாவில் ஆழ்வார் யோகத்திலிருக்கையில்
கணிகண்ணன் வந்து ஆச்ரயித்தல்.]

௬௫. மழைத்தடம்புயல்பொருவவெஃகாவிடைமணிப்பூண்
குழைத்தடங்கண்மாறுயிற்றிருக்கோலமுட்கொள்ளாத்
தழைத்தவன்புளமயல்செலாதொருகுகைதனியே
இழைத்ததற்குள்ளுற்றேழியாண்டினிதுவீற்றிருந்தான்.

(இ-ள்.) திருவெஃகாவினிடத்துக் குளிர்ந்த விசாலமான மேகம்போலே மணிகளையுடைய திருவாபரணங்களையும் திருக்குழையையுமணிந்து, அலர்ந்துபரந்த திருக்கண்களையுடையனான பெருமான் அறிதுயிலமர்ந்த திருக்கோலத்தைத் திருவுள்ளத்திற் கொண்டு, விரத்தியான பக்தியையுடை

ய திருவுள்ளம் புறம்பிற்செல்லாது, தனியே யொரு குகையை யியற்றி அக் குகையில் நூற்றேழு வருஷம் யோகநிலையில் இனிதாக எழுந்தருளியிருந் தனர். (எ-று.) (௬௫)

௬௬. நவிலுதற்கருந்தவனவனுறையுமந்நாட்பூந்
தவிசுடைச்சதுமுகற்றருமுகின்மலர்த்தடந்தாள்
புவியினிற்றலந்தொறும்பணிந்தநுசர்புகுந்தான்
கவினுடைத்திடவிரதனீன்றருள்கணிகண்ணன்.

(இ-ள்.) சொல்வதற்கரிய தவத்தையுடைய ஆழ்வார் அங்கு எழுந் தருளியிருக்கும் அந்நாளில், தாமரை யாசனத்தையுடைய பிரமதேவனை யளித்த மேகம்போன்ற பெருமானது தாமரை மலர்போன்ற பெரிய திரு வடிகளைப் பூமியிலுள்ள தலங்கள்தோறும் பணிந்து அநுசரித்த பிரவே சித்தவரான அழகமைந்த திடவிரதர் பெற்றருளின கணிகண்ணரென்பவர், (எ-று.) (௬௬)

௬௭. அக்கபாதனைக்கண்டனனடிபணிந்தருண்மால
செக்காதாமரைத்திருவடிமருவிவாழ்செல்வ
மிக்கஞானத்தின்வேலையேமாதவவிளக்கே
புக்கவெனையாண்டருளெனப்பலமுறைபுகழ்ந்தான்.

(இ-ள்.) அக்ஷபாதராகிய ஆழ்வாரைச் சேவித்து அவர் திருவடிகளை வணங்கி, "கிருபாசொரூபியான பெருமானது செந்தாமரைபோன்ற திரு வடிகளையடைந்து வாழும் செல்வமுடையவரே! மேலாகிய ஞானசமுத்திர மே! மாதவவிளக்கே! வந்தடைந்த என்னை யாண்டருள்வீராக" என்று பலமுறையும் புகழ்ந்தனர். (எ-று.) (௬௭)

௬௮. விரும்பியோகத்தைநீக்கியேநீதிடவிரதன்
தருமபுகழ்க்கணிகண்ணனோவெனமுனிசாற்றப்
பொருமபுகழ்ச்சக்கிராழியோனிவனெனப்புளகம்
அரும்புறப்பணிந்தடியனேனுமெனவறைந்தான்.

(இ-ள்.) ஆழ்வார் திருவுளமுவந்து யோகத்தை நீக்கி "நீர் திடவிரதர் பெற்ற புகழமைந்த கணிகண்ணரோ" என்று வினாவ, (அவர்) பகைவரோடு யுத்தஞ்செய்யும் கீர்த்தியமைந்த பிரகாசமுடைய திருச்சக்கரத்தைத் தரித்த பெருமான் இவராகுமென்று கண்டு புளகமுண்டாகப் பணிந்து, "அடியேன் கணிகண்ணனே ஆவேன்" என்றுரைத்தனர். (எ-று.) (௬௮)

௬௯. பரிந்துநோக்கியேயேமபுட்கரணிநீர்படிவித்
திரிந்திடப்பவம்பொருவிலெட்டக்கரமிசைத்துத்
தெரிந்துவேட்டுவன்இருமியைத்தனதுருசெயல்போற்
புரிந்தளித்தலுமவனவாக்கேவலேபுரிந்தான்.

(இ-ள்.) (ஆழ்வார்) கணிகண்ணனைப் பிரீதியோடு கடாக்ஷித்துப் பொற் றாமரைப்பொய்கை நீரிற்படியச்செய்து பிறவிகெடும்படி ஒப்பற்ற திரு வஷ்டாக்ஷரி மந்திரத்தை யருளிச்செய்து, குளவியானது புழுவைத் தெரிந் தெடுத்துத் தன்னுருவாக்குதல் போல அருள்புரிந்து ரக்ஷிக்கக் கணிகண் ணர் ஆழ்வார்க்கு ஏவல் புரிந்துகொண்டிருந்தனர். (எ-று.) வேட்டுவன்-குளவி. (௬௯)

[ஒரு முதியவள் ஆழ்வாரருள் பெறல்

வேறு.

எ0. அந்தமுனிவனைத்தினமு மொருமுதியாளடிபரவ வாங் கோர்வைகல், நந்தலின்மாதவத்தவனு முனதுகருத்திசைத்தி யென ஞானசகோவே, இந்தவடிவொழிந்திளமை யளித்தடியேன் றனையாட்கொ ளென்றுபோற்ற, சந்தமலர்க்கரங்கொடவ டனை முனிவன்றொடவிரதி தனைப்போலானாள்.

(இ-ள்.) மகாசீலராகிய அந்த ஆழ்வாரை ஒரு முதுமைப் பருவமுடையவள் நாடோறும் வந்து திருவடிகளை வணங்க, ஒரு தினம் கெடுதலில்லாத பெருந்தவத்தையுடைய ஆழ்வாரும் "உனது அபிப்பிராயத்தைச் சொல்லுவாயாக" என்று கூற, (அவள்) "ஞானத்தில் தலைவரே! இந்தவயோதிக வடிவை யொழித்து இளமைப் பருவத்தைக்கொடுத்து அடியேனை யாட்கொள்வீராக" வென்று துதிசெய்ய, ஆழ்வார் அழகிய மலர்போன்ற திருக்கைகள் கொண்டு ஸ்பர்சிக்க அவள் இரதியைப்போல் (உருவம் பெற்றவள்) ஆனாள். (எ-று) (எ0)

எக. ஆங்கவளுமுனியிருதாள் பணிந்துவிடைகொடுவீதி யனுகவெண்கோட, வோங்கலிணைமீதுநகருக் கிறைபவனிவருவோனைக் கண் டுருகிநோக்கிக், கோங்கமுகைமுலைக் கொடியைமணிச் சிவிகையினுட் கொள்ளாவுள்ளந், தாங்கரியநசைபெருக வவளொடுந்தன்மணிக்கோயில் சார்ந்தானன்றே.

(இ-ள்.) அவளும் ஆழ்வாரது இரண்டு திருவடிகளைப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு வீதியையடைய, வெண்மையான தந்தங்களையுடைய யானையின்மீது பவனிவருவோனாகிய அவ்வூரரசன் கண்டு உருகி (பலமுறையும் அவளைப்) பார்த்துக் கோங்கரும்பைப்போன்ற முலையையுடையவளாயக் கொடிபோன்ற அவளை அழகிய சிவிகையிற்கொண்டு உள்ளம் பொறுப்பதற்கரிய ஆசைபெருக அவளோடு தனது அழகிய அரமனைக்குச் சென்றான்.(எ-று.)

எ௨. நஞ்சனையதுணைவிழிக்கார் குழல்வனிதையொடுங்கலவி நாளுநாளும, பஞ்சணையிலிமைப்பொழுதுந் தணவாதுநுகர்ந்து பல பருவநீங்கக், கஞ்சனையிலவள்வனப்புந் தனதிளமைகழிந்ததுவுங் கண்டுநாணி, வஞ்சனையோகலிவரவோ வெனதிளமைகழிந்ததெனு மம்மருற்றான்.

(இ-ள்.) விஷத்தை யொத்த இரண்டு கண்களையும் கரிய கூந்தலையுமுடைய அப்பெண்ணுடன் நாடோறும் பஞ்சணையின் மீது இமைப்பொழுதும் பிரியாது கூடியநுபவித்து (இப்படி) பல பருவங்கள் செல்லவே திருமகளுக்கொப்பான அவளது அழகும் தனது இளமைப்பருவம் போனதுவும் கண்டுவெட்கி வஞ்சனையோ கலியின்வரவோ எனது இளமைப்பருவம் கழிந்ததே யென்று துன்புற்றான். (எ-று.) (எ௨)

[எம்பெருமான் ஆழ்வார் சொன்னவண்ணஞ் செய்தல்.]

எ௩. இன்னலுறுமிறைவனைப்பார்த் தரிவைநகைத்தெனக்கிளமை யீந்தான்வேதன், அன்னமுனியொருவனென வவனெவனுள்

ளானெனலு மரிவைசாற்ற, மன்னவனும்வழியுரைப்போர்க் கவனை
யிவண்கொணர்மினென வந்துதூதர், பன்னரியகுணத்தவனைப் பா
வியுனையழைத்தனனிப் பாரவேந்தென்றார்.

(இ-ள்) (இப்படி) துன்புற்ற அரசனைப்பார்த்து அப்பெண் நகைபுரிந்து பிரமதேவனுக்குச்சமானமான முனிவரொருவர் எனக்கு இவ்விளமையைக் கொடுத்தனர் என்று கூற, அவர் எங்குள்ளாரெனலும் (ஆழ்வாரிருக்குமிருப்பை) அப்பெண்சொல்ல, அரசனும் தூதருக்கு அம்முனிவரை யிங்குக் கொண்டுவாருங்கோளென்று கட்டளையிட, (அந்தத்) தூதர்கள் வந்து சொல்வதற்கரிய உயர்ந்த குணங்களையுடைய ஆழ்வாரை வணங்கி "இந்நாட்டரசன் உம்மை யழைத்தனன்" என்றுரைத்தனர். (எ-று.) (௭௩)

௭௪. தூதரஃதிசைக்குதலுங் கணிகண்ணன்றனைநோக்கித் துற
வோனும்பார், நாதன்மருகனுநியழைத்த தநுவினவுகெனவவன்
பாணண்ணகண்ணன், ஏதமகனறிளமைநல மெய்தவருட்கவிதை
யென்மீ திசைப்பாயெனச், சிதரனையலதயலோரைப் புகழ்கில
மென்றிடவரசுஞ் சினந்தானன்றே.

(இ-ள்.) தூதர்கள் அதனைச் சொல்லலும் ஆழ்வாரும் கணிகண்ணரைக் கடாக்ஷித்து இப்பூமியையாளும் அரசனிடஞ்சென்று அழைத்ததைக் கேட்பாயாகவென்று நியமிக்க, (அங்ஙனமே) கணிகண்ணர் அரசனிடஞ்சேர, (அரசன்) துன்பமான முதுமைநீங்கி நல்ல இளமைநலமடையும்படி அருட்கவியை என்மேற் பாடுவீரென்ன, (கணிகண்ணர்) "சீதரனையல்லாது பிறரைப் புகழ மாட்டோம்" என்றுகூற, அரசனும் கோபித்து, (எ-று.)

"அடவர்க ளெங்ங னகனறுழிவார் வெஃகாவும், பாடகமுமூரகமும் பன்சரமா-சீடியமால, நின்றா னிருந்தான கிடந்தா னிதுவனறோ, மனறார் பொழிற்கச்சி மாண்பு" என்பது கணிகண்ணர் சீதரன் விஷயமாகப் பாடிய பாட்டு. (௭௪)

௭௫. தனதுவிழித்துணைகள்சிவந் தழல்பொழியக்கணிகண்ணன்
றன்னைநோக்கி, எனதுநகர்விடுத்தகன்மி னெனக்குரவன்றனையவ
னு மெய்தியெந்தாய், மனதுசுறுக்கரசுதன தணிநகர்விட்டகலகெ
ன்றான் மலரோனன்ன, உனதுபததுகளடியேன் விடைகொள்கே
னெனமுனியு முருத்துநக்கான.

(இ-ள்.) தனது இரண்டு கண்கள் சிவந்து நெருப்பு வீசும்படி கணிகண்ணரைப் பார்த்து "(நான் சொன்னபடி பாடாமையால்) என்னூரை விட்டுப் போகக்கடவீர்கள்" என்றுரைக்கக், கணிகண்ணரும் தனது ஆசாரியராகிய ஆழ்வாரையடைந்து எனது ஸ்வாமியே! (அரசன் சொன்னபடி நான் பாடாமையால்) அவன் கோபித்துத் தனது அழகிய நகரைவிட்டுப் போகச் சொல்லினன்; பிரமனைநிகர்த்த உமது திருவடித்தூளாகிய அடியேன் விடைகொள்கின்றேன் என்றுரைக்க ஆழ்வாரும கோபித்துச்சிரித்து.(எ-று.)

வேறு.

௭௬. குமரனீதணங்கிடயான் வதிகுவனேயான்றனைப்பக் கொ
ண்டன்மேனி, அமலனீள்பணிப்பாயற் றுயில்குவனேயெனநவின்
றெங் கரியைநோக்கித். தமரவார்கடற்றுயில்வோய் கணிகண்ணன்

போகின்றான் றாியேன்யானும், விமலமார்பணிப்பாயல் சுருட்டி யுடன்வருகவென்று விரைவிறசென்றான்.

(இ-ள்.) குழந்தாய்! நீ யென்னைவிட்டு நீங்க நான் இங்கிருப்பேனோ? நான் நீங்க மேகம்போன்ற திருமேனியையுடைய அமலன் நீண்ட சேஷ சயனத்தில் படுப்பனோ? எனவுரைத்து அங்கெழுந்தருளிய பெருமானைச் சேவித்து ஒலியையுடைய நீண்ட கடலில் அறிதுயிலமர்ந்திருப்பவனே! கணிகண்ணர் போகின்றார்; நானும் அவரைவிட்டுத் தரித்திருக்கமாட்டேன்; பரிசுத்தமுடைய சேஷசயனத்தைச் சுருட்டி (எனதுடன்) வருவீராகவென்றுரைத்து விரைவாகச் சென்றார். (எ-று.)

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி, மணிவண்ணா நீகிடக்க வேண்டா-துணிவுடைய, செந்நாப்புலவன்யான் செல்கின்றேனின்னுடைய, பைந்நாகப் பாய்சுருட்டிக்கொள்" என்பது ஆழ்வார் அந்நகரத்தை விட்டுப் போகும்போது அருளிச்செய்த பாசுரம். (எசு)

எஎ. துயிலமர்ந்தவெள்ளைத்துயிந்தன் பணிப்பாயல்சுருட்டிமலர்த் தோகையோடும், பயிலமரர்கணங்கள் புயபாள் முசகோடியோடு ந்தனது பக்தன்பின்னே, எயிலமைந்ததிருநகர்நீத்த தெழுந்தருளப் புறககோவி லிளைமேயோரோடு, வெயிலமைந்தசுடரினைத்துய்ய கரந் துதிசையினைத்தமிருள் விழுங்கிற்றம்மா.

(இ-ள்.) துயிலமர்ந்த பெருமானும் தனது சேஷசயனத்தைச் சுருட்டி மலரிலிருக்கும் மயில்போன்ற [illegible] பொருந்திய தேவ கணங்கள் முப்பத்துமுக்கோடிபேரும் [illegible] பக்தராகிய ஆழ்வாரின் பின்னே [illegible] இராமான கோயில் [illegible] சூரியன் [illegible] திசைகளெல்லாம் இருள்மூடியது. (எ-று.) (எஎ)

எஅ. ஆதரசனுங்கேளா யுபாகடுங்கியவரிருக்கை யளவுஞ் சென்று, தூயமுனிவரன்சரணம் பணிந்தெளியேன்பிழைபொறுத்தி தொல்லையெனா, நேயமுனிகணிகண்ணனை வேண்டிக்கொள வன்றவனிருபன்போற்ற, மாயவன்முனசெல்லவருந் திருவெஃகா வெனும்பதியை வந்துசார்ந்தார்.

(இ-ள்.) (இப்படி) யாவரையும் அரசனும் கேட்டு உள்ளம் நடுங்கி அவர்க ளிருக்குமிடமளவும் சென்று பரிசுத்தராகிய ஆழ்வாரது திருவடிகளைப் பணிந்து, தொல்லையோய! எளியேன் பிழையைப் பொறுப்பீராகவென்று வேண்ட, அன்புமிகுந்த ஆழ்வார் கணிகண்ணனை வேண்டிக்கொள்க என்ன, அரசன் அக்கணிகண்ணனைத் திருவடிதொழப் போற்றப் பெருமான் முன்பேசெல்ல ஆழ்வாரும் கணிகண்ணனும் பின்சேரும் திருவெஃகா என்னும் திருப் பதியை வந்து சேர்ந்தார்கள். (எ-று.) (எஅ)

எகூ. கணிகண்ணன்போக்கொழிந்தான் பணிப்பாயல்படுத்திடுவெ னுங் கவியாலிலே, மணிவண்ணனிடக்கரங்கீழ் வலக்கரமேலாய்த் திருக்கண் வளர்ந்தான்பின்னர், பிணிவென்றதவமுனியுந் தான் சொன்னவண்ணஞ்செய்த பெம்மானென்று, அணிவண்ணமுகிலனை யார்க்கொருபெயரிட்டவணிருந்தா னலகில்காலம்.

(இ-ள்.) "கணிகண்ணன் போக்கொழிந்தான்—பணிப்பாயல் படுத்தி" என்னும் கவியாலே நீலமணிபோன்ற பெருமான் இடத்திருக்கை கீழாகவும் வலத்திருக்கை மேலாகவும் திருக்கண் வளர்ந்தருளினன். பின்னர் பந்தத்தைவென்ற தவத்தையுடைய ஆழவாரும் தாம் "சொன்னவண்ணஞ் செய்த பெருமான்" என்று கலியாணகுணங்களையுடைய மேகம்போன்ற பெருமானுக்கு ஒரு திருநாமமிட்டு அங்கு கணக்கற்றகாலம் எழுந்தருளியிருந்தனர். (எ-று.)

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீ கிடக்க வேண்டாந்-துணிவுடனே, செந்நாப் புலவனயான் போகவொழிந்தே நீயுமுன்றன, பைந்நாகப் பாயபடுத்துக் கொள்". என்பது ஆழவார் மீண்டு மெழுந்தருளினபோது அருளிச்செய்த பாசுரம். (௭௯)

[ஆழவார் திருக்குடந்தையில் ஆராவமுதப பெருமானைச் சேவித்தல்.]

௮0. நின்றிருந்துகிடந்தவனைப் பணிந்துவிடைகொடுகோவ னெடியோறபோறறித், துன்றிரும்பொறசித்திரகூடத்துவிழிதுயின்மாலைத் தொழுதுவாழத்தி, ஓங்கிருங்கீர்த்திமுடடம் பணிந்துவடகாவேரி யொருவிநீலக, குன்றினுருசீர்பெறககிடந்த கோலவாராவமுதின் குடந்தைகண்டாரை.

(இ-ள்.) (திருக்கச்சியில்) நின்ற இருந்த கிடந்த திருக்கோலங்கள் கொண்ட பல எமபெருமான்களைப பணிந்து விடைபெற்று திருக்கோவலூரத் திரிவிக்கிரம மூர்த்தியை வணங்கிப பெருமைபொருந்திய அழகிய திருசித்திரகூடத்தில் அறிதுயிலமர்ந்த பெருமானைத் தொழுதுவாழத்தி, நிலைபெற்ற பெருஞ் சிறபபையுடைய ஸ்ரீமுஷ்ணத்தைப பணிந்து, வடகாவேரியைவிட்டு நீங்கி, நீலமலையினும சிறபபுண்டாம்படி கிடந்த திருக்கோலத்தையுடைய ஆராவமுதபெருமான எழுந்தருளியிருக்கும திருக்குடந்தையைத் தரிசித்தனர். (எ-று.) (௮0)

௮௧. மேனிவந்தமணிமகுடக கோபுரமீநிரைத்தழகு விரிபொற்றுகில், வானிவந்தமழையைமெம தனிநகராராவமுத மாயோனென்னும், தேனிவந்தமலாத்துளவந் தொடைமேகத்தருண் மழையாற் செழிகருநீரைப்பா, கானிவந்தமலைகளோ பொழிகென நீக்கவினசைதல் கண்ணிறகண்டான.

(இ-ள்.) (அந்நகரம்) மேலுக்குயர்ந்த அழகிய சிகரத்தையுடைய கோபுரத்தின்மீது வரிசையாகவைத்து அழகுவிரிந்த பொற்கொடிகளாலே ஆகாயத்திலுள்ள மேகத்தைக (குறித்து) "எமது அழகிய நகரத்திலுள்ள ஆராவமுதமாயோனென்னும் தேனமாந்த மலர்களையுடைய திருத்துழாய்மாலையணிந்த மேகம்போன்ற பெருமானது அருளாகிய மழையினாலே (உலகம்) செழிப்படையும்: நீங்கள் பசியகாடுகளுயர்ந்த மலைகளினிடத்து நீரைப் பொழிவீர்களாக" என்று நீக்குதல்போல அசைவதைக் கண்ணுற் கண்டனர். (எ-று.) (௮௧)

தாற்பரியம்: அந்நகரக் கோபுரத்தின் மீதுள்ள கொடிகள் அசைவது எங்ஙன மிருந்ததெனின், மேகங்களைநோக்கி அந்நகரமானது "எங்கள் ஆராவமுதப் பெருமானென்னும் மேகத்தின் அருளாகிய மழையால் உலகம செழிக்கும்; நீங்கள் காடுயர்ந்த மலைகளிடஞ் செல்க; இங்கே வேண்டா

வேண்டா" என்று சொல்லி அவைகளைத் தனது கொடிகளாகிற கைகளால் நீக்குதல்போல இருந்ததென்க.

அஉ. எந்தைதுயி லமர்ந்தபிரான் பணிசுருட்டப் புவிநடுங்க விசைத்தாரின்னும், முந்தைநமதாரமுதை யேதிழைப்பான்வருவ திவண் முன்னியென்றோ, சிந்தையலமரமேடை மணிமேடைமதி ல்கடொறுஞ் செறிந்துநோக்கும், நிந்தையில்பைங்கொடியனையார் பணிந்திடல்போற்றுயல்கொடியி னெருக்கங்கண்டான்.

(இ-ள்.) எந்தையாகிய பள்ளிகொண்டபெருமான் பணிப்பாயலைச் சுருட்டவும் அங்ஙனம் நடுங்கவும் (பாட்டினைச்) சொன்னவராகிய ஆழ்வார், இன்னும் முன்னோனாகிய நமது ஆராவமுதப்பெருமானை எது செய்வதற்காக எண்ணி இங்கு வருகின்றாரோ என்று சிந்தைகலக்கமடைந்து (சாதாரண) மேடைகளிலும் மணிமேடைகளிலும் மதில்கள்தோறும் இருந்து பார்க்கும் நிந்தையில்லாத பசியகொடிபோன்ற பெண்கள் பணிவதுபோல ஆடுங் கொடிகளின் நெருக்கத்தைக் கண்டனர். (எ-று.) (அஉ)

தற்குறிப்பேற்றம்: மேடைகளிலும் மதில்களிலும் உள்ள கொடிகள் அசைவது எப்படி இருக்கிறதென்றால், அவ்விடங்களில் இருந்து பார்க்கும் கொடிபோன்ற பெண்கள், ஆழ்வார் வருகிறதைப்பார்த்து, "பணிப்பாயலில் பள்ளிகொண்ட பெருமானை அப்பாயலைச் சுருட்டிக்கொண்டு தமக்குப் பின்னே வருமாறு பாசுரமிட்ட இவர் இங்கே நமது ஆராவமுதனை என்ன செய்ய எண்ணி வருகின்றாரோ" என்றெண்ணி அஞ்சிப் பணிவதுபோ லிருந்தது என்பதாம்.

அங. முன்னுமிவர்நமைத்திருமால் சுருட்டிநடந்திடவருந்த மு னிந்தார்முன்னம், இன்னுமிவர்க்கதேயென் றிவர்வருமுன்னேக றுமென வெண்ணிச்சேடன், தன்னுடன்மண்டலித்துமுடி நிமிர்ந் துவிசும்பினிற்படருந் தன்மைபோலப், பொன்னுருவமதிலினொடு மணிமகுடக்கோபுரமப் பொலிதல்கண்டான்.

(இ-ள்.) சிந்திக்கத்தக்கவராகிய இவ்வாழ்வார், முன்பு திருமால் நம்மைச்சுருட்டி நடந்து திருவடிவருந்தும்படி கோபித்தனர்; இன்னுமிவர்க்கு அதுவே (செய்கையாகும்;) இவ்விடத்துக்கு இவர் வருமுன்னமே நாம் போகக்கடவோமென்றெண்ணி, ஆதிசேஷன் தமது திருமேனியை மண்டலாகாரமாக வளைத்து முடியை மேலெடுத்து ஆகாயத்திற் செல்லுந்தன்மைபோலே பொன்னுருவாயிருக்கும் மதிலோடு மணிமயமான சிகரத்தையுடைய கோபுரம் மேலே தோன்றுவதைக் கண்டனர். (எ-று.) (அங)

அச. கோடியாயிரம்பரிதி நிகராழிதனைப்பிரிந்தோர் குழவியா னோன், கேடியேயெனதருகு வருகின்றானெனக்கருதி நேயங் கூராக், கேடிலான்வரவுதனை யெதிரெழுந்துகாண்பதுபோற் கிளர் பொன்மேடை, பீடிகாதலம்புரிசை யிவற்றினிற்செம்மணியொளி மீப் பிறழ்தல்கண்டான்.

(இ-ள்.) ஆயிர கோடி சூரியர்களையொத்த திருவாழியினின்றும் பிரிந்து ஒருகுழவிவடிவான ஆழ்வார், தேடிக்கொண்டு என் சமீபத்துக்கு வருகின்றனர் என்றெண்ணி அன்புகூர்ந்து, கேடில்லாதவரான ஆழ்வார் வரவை யெதிரெழுந்து காண்பதுபோல உயர்ந்த பொன்மேடை கடைவீதி மதில்

அஅ. எய்தியவர் நால்வருணத் திழிந்தவரென்றவமதித்தின் றிருங்
கோதாத, செய்தியினித் தவறுதமைச் சேர்ந்ததென மறையவர்கள்
சிந்தித்தாய்ந்து, வெய்தின்மழிசையர்பெருமான் றனையணுகித் திரு
வடிக்கீழ் வீழ்ந்துபோற்றி, உய்திறனென்றெமக்கருளி யவமதித்த
பிழைபொறுத்தி யரவோவென்றார்.

(இ-ள்.) இன்று இங்குவந்த ஆழ்வார் நாலாம்வருணத்தில் தாழ்ந்தவரென்று அவமதித்து வேதாத்தியயனஞ் செய்யாததால் இக்குற்றம் தம்மைச் சேர்ந்ததென்று சிந்தித்து யோசித்து, அவ்வேதியர்கள் விரைவாகத் திருமழிசையாழ்வாரை யடைந்து அவர் திருவடியில் விழுந்து துதித்து, "பெரியீர்! நாங்கள் உஜ்ஜீவிக்கும் விதமொன்றை எங்களுக்கு அளித்து (நாங்களுமமை) அவமதித்த பிழையைப் பொறுப்பீராக" என்றார்கள். (எ-று.)

அகூ. அண்ணலுமங்கருளினகத் தொருநெல்லென்றுரிப்ப வந்த
ணாளர், எண்ணரியசுருதிமுறை தெரிந்துதிருவடியீணொடு மிறைஞ்
சிப்போந்தார், கண்ணனெடுந்திருவாழி யாழ்வார்பொற்றிருக்கோ
வில் கலந்துபோற்றி, உண்ணமிர்தமனையதமிழ் நூலன்றுவிடை
கொடுவீதி யுற்றானன்றே.

(இ-ள்.) அங்கு ஆழ்வாரும் கிருபையுடைய திருவுள்ளத்துடன் ஒரு கறுப்பு நெல்லையெடுத்து உரித்துக்காட்ட அதனாலே பிராமணர்கள் எண்ணுவதற்கரிய வேதத்தின் முறைமையைத் தெரிந்து ஆழ்வார் திருவடிகளை மீண்டும் வணங்கிப் போயினர். ஆழ்வார் கண்ணனோடு திருவாழியாழ்வாரும் அழகிய திருக்கோயிலையடைந்து போற்றி, உண்ணும் அமிர்தம்போன்ற தமிழ்ப் (பாடல்களை) யருளிச்செய்து விடைபெற்றுக்கொண்டு திருவீதியை யடைந்தனர். (எ-று.)

ஆழ்வார், கறுப்பு நெல்லை நகத்தால் உரித்துக் காட்டின குறிப்பினால் வேதியர் விட்ட இடத்திலுள்ள வசனமாகிய "க்ருஷ்ணாநாம் வ்ரீஹீநாம் நக நிர்ப்பின்னம்" என்பதைத் தெரிந்துகொண்டனரென்க. (அகூ)

கூ0. வனைதுளவச்செழுந்தொடையா ராவமுதமழிசையர்கோன்
வருகின்றானென, தனைநிகர்சேனையர்முதலாம் பரிசனமுமுனிவரு
மித்தலத்திலுள்ளோர், எனைவருஞ்சென்றெதிர்கொண்மி னெனச
சேனைநாயகனு மிவர்களோடும், துனைவினெதிர்நடந்தீச னருளப்
பாடெனப்புகலத் தூயோன்றானும்

(இ-ள்.) தொடுத்ததாய்ச் செழுமையான துளவமாலிகையையுடைய ஆராவமுதப்பிரான், "வருகின்ற திருமழிசைப்பிரானைத் தன்னை நிகர்த்தவராகிய சேனைமுதலியார் முதலிய பரிசனங்களும் முனிவர்களும் இந்த ஸ்தலத்திலுள்ள யாவரும் எதிர்கொண்டு சென்று அழைத்து வாருங்கோள்" என்றருளிச்செய்யச், சேனைமுதலியாரும் பெருமானருளிச்செய்த பரிசனங்களோடு விரைவாக எதிர்கொண்டு நடந்து பெருமானது அருளப்பாடென்றுரைக்கப் பரிசுத்தராகிய ஆழ்வாரும் (எ-று.) (கூ0)

கூக. மாதவருங்கடவுளரு மகிதலமுமனைத்துலகும் வழுத்துஞ்
சேனை, நாதனிருதிருவடித்தா மரைவணங்கியுவகையுட னடந்து
நான்கு, வேதமுனிவரருபய வேதாந்தவிமலருறை வீதிநோக்கிக்,
காதரந்தீர்க்கதிருங்கோ புரவாயில்கண்களிப்பக் கண்டுபுக்கான்.

(இ-ள்.) முக்தர்களும் நித்தர்களும் உலகத்திலுள்ளாரும் எல்லா வுலகங்களிலுள்ளாரும் துதிக்கும் சேனைநாயகரது இரண்டு திருவடித் தாமரைகளை வணங்கிச், சந்தோஷத்துடன் நடந்து நான்கு வேதங்களில் வல்ல மகாநசீலர்களும் உபயவேதங்களில் வல்ல விமலரும் நித்தியவாசஞ் செய்யும் திருவீதிகளைநோக்கிச்சென்று, தீவினை நீங்கிய மோக்ஷத்தை யளிக்கும் திருக்கோபுரவாயிலைக் கண்களிக்கும்படி சேவித்து (உள்ளே) பிரவேசித்தனர்.

கூஉ. காமர்பலிபீடிகைபொற் கருடகம்பந்தனைவணங்கிக் கனகச்சோதி, ஏமமதின்மண்டபங்கோ புரங்கண்முதலியவளங்க ளனைவையுநோக்கி, வாமமணிசசிகரவிமா னக்கோயிலவலஞ்சூழ்ந்து மழைத்தமேகந், தாமரைபூத்தலையிறிருப் பாற்கடன்மீதினிற்படிந்த தகைமைபோல

(இ-ள்.) அழகிய பலிபீடத்தையும் பொன்னுலான கருடகம்பத்தையும் வணங்கி, பொற்பிரகாசமுடைத்தாய்க் காவலான அழகிய திருமதில்-மண்டபம்-கோபுரங்கள் முதலிய வளங்களெவற்றையும் தரிசித்து, அழகிய மணிமயமான சிகரத்தையுடைய விமானம்பொருந்திய திருககோயிலை வலஞ்செய்து, மழையோடுகூடிய மேகமானது தாமரைகள்பூத்ததாகி அலையில்லாத திருப்பாற்கடலின் மேற்படிந்த தன்மைபோல (எ-று.) (கூஉ)

கூஙு. கடிககமலத்திசைமுகனுங் கலைமதிசூடியுங்கிருதுக் கடவுளானும், தொடிக்கமலககரங்குவித்துத் துதிபபமுபபான்முக்கோடிசுரருஞ்சூழ, அடிககமலம்வடதிசைதென் றிசைமகுடங்குடதிசைவெந ளாககராழந்த, படிககமலமகொடுத்தெடுத்த திருமுகமண்டலங்குணக்கின் பாலதாககி

(இ-ள்.) வாசனையுடைய தாமரையிலிருக்கும் திசைமுகனாகிய பிரமனும் கலைகளையுடைய சந்திரனைத்தரித்த சிவனும் யாகங்களுக்குத் தலைவனான இந்திரனும கங்கணம்பூண்ட தாமரைபோன்ற கைகளைக்குவித்துத் துதிக்கவும், முப்பத்துமூன்றுகோடி தேவர்கள் சூழவும், திருவடிக்கமலம் வடதிசையாகவும், மகுடம தெனறிசையாகவும், பின்புறம் மேறறிசையாகவும், கடலில் ஆழ்ந்த பூமிக்கு அமலத்தையளித்து உத்தரிடபித்த திருமுகமண்டலம கிழக்குத்திசையாகவும் செய்து, (எ-று.) (கூஙு)

கூச. திருமடந்தைபுவியணங்கு திருவடித்தாமரைவருடச் செழுந்துழாயின், மருமலிந்ததொடை,திருமார் பகத்திலங்கப்பலவணியின் மணிவிலவீச, உருமலிந்தகதிமணிப்பைத் தலையனந்தன் மீதுவிழித் துறங்குமாலைக், கருமலிந்தபவசசலதிக் கரைகாட்டும் புணையையிரு கண்ணிற்கண்டான்.

(இ-ள்.) பெரியபிராட்டியாரும் பூமிப்பிராட்டியாரும் திருவடித்தாமரைகளை வருடவும், செழுமையான வாசனைமிகுந்த திருத்துழாயின் திருமாலை திருமார்பில் விளங்கவும், பலவான ஆபரணங்களிலுள்ள மணிகளின் ஒளிவீசவும், நிறமிகுந்த ஒளிமயமான மணிகளையுடைய படங்களமைந்த தலைகளையுடைய திருவநந்தாழ்வான்மீது அறிதுயிலமரும் பெருமானைக், கர்ப்பவாசஞ்செய்தல் மிகுந்த பிறவிக்கடலின் கரையைக் காட்டுந் தெப்பத்தைத், தம்மிரண்டு திருக்கண்களாற சேவித்தனர். (எ-று.) (கூச)

கூஉ முதல் இவை மூன்று பாவும் ஒருதொடர்.

கூரு. சரணமுதற்றிருமுடிகா றவயவத்தினழகனைத்துந் தடங்க ணுகுங், கரணமெடுத்துதவவுளங் கவர்தலுமெய்புளகரும்பக் கண் ணீரவார, பிரணவமுற்பரம்பொருளே யுலகளந்தாயடியருளம்பிரி யாவாழ்வே, அரணமதிற்குடந்தையிலா ராவமுதேயெனவணங்கி யருகினின்றான்.

(இ-ள்.) திருவடிமுதல் திருமுடிவரையிலுள்ள பெருமானது அவயவத் தின் அழகையெல்லாம் தாமது விசாலமான கண்களாகிய கரணமெடுத்துக் கொடுக்கத் திருவுள்ளங்கொள்ளுதலும், திருமேனி புளகமடையவும் கண் ணீர் சோரவும் "முதன்மையான பிரணவத்திற் சொல்லப்படும் சிரேஷ்ட மான பொருளே! உலகமளந்தவனே! அடியாரது உள்ளத்தைவிட்டுப் பிரி யாத வாழ்வே! அழகிய மதில்சூழ்ந்த திருக்குடந்தையி லெழுந்தருளியிரு க்கும் ஆராவமுதே!" என்று வணங்கிப் பெருமானருகில் நின்று, (வ-று.)

கூசா. தொடர்ந்தவேதமுமயனுஞ் சுரர்களுங்காண்டற்கரிதாந் துதித்துநாளும், கடந்தவீரடியாவாகட் கெளிதாகுமெனவுலகங் கா ண்டலவேண்டி, நடந்ததாளவருந்தியதோ நயனமலரலர்த்தாது நாகமீதே, கிடந்தவாறெம்மெழுந்து பேசுகிகேசவவெனுஞ்சொ ற்கேட்டுமாலும்

(இ-ள்.) "தேவரீரைத் தொடர்ந்த வேதமும் பிரமனும் தேவர்களுங் காண்பதற்கரியராயினும்; தேவரீர் நாள் தோறுந் துதிக்கும் உலகத்தோர்க்கு அடியாரு க்கு எளிதாகும் என்று சொல்லும்படி உலகத்திலவதாரித்துச் சேவிக்கவே ண்டி, (முன்பு) நடந்த திருவடி வருந்தியதோ? திருக்கண்மலரை மலர்த்தாமல் சேஷசயனத்தில் பள்ளிகொண்டிருக்கும் விதமென்? எழுந்து பேசுவாயாக கேசவ னே!" என்றுஞ் சொல்லிக்கேட்டப் பெருமானும (வ-று.)

இங்ஙனம் ஆழ்வார் அருளிச்செய்தது திருச்சந்தவிருத்தத்தில் சாக-வ தான "நடந்தகால்கள் நொந்தவோ நடுங்க ஞாலமேனமாய், இடந்தமெய் குலுங்கவோ விலங்குமால்வரைச்சுரம், கடந்தகால்பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள், கிடந்தவா றெழுந்திருந்து பேசுவாழி கேசனே" என்னும் பாசுரமாம். (கூசா)

கூஎ. வலக்கரமீதடுத்தமுடி யெடுத்துவிழித்தெழுந்தினிய வர மேதென்ன, அலக்கணகற்றியதவற மடியனுக்காவெழுந்ததுல கனைத்துங்காண, நலககனகமுடி நிவந்து துயில்கெனக்கேட்டொரு குகையங் நகரியோகத், திலகமதித்திடின்மூவா யிரத்தெழுநாற் றெண்பதியாண் டிருந்தானன்றே.

(இ-ள்.) வலது ஸ்ரீஹஸ்தத்தில் வைத்திருக்கும் திருமுடியை யெடுத் து விழித்தெழுந்து (உமக்கு வேண்டும்) இனியவரம் ஏதென்று கேட்க, துன்பத்தை நிவர்த்தித்த ஆழ்வாரும் "அடியேனுக்காக (தேவரீர்) எழுந்த சொலப்பியத்தை உலகமெல்லாஞ் சேவிக்கும்படி நன்மையான பொன் முடியானது உயர்வாயிருக்கத் துயில்கொள்ளல் வேண்டும்" என்று விண் ணப்பஞ் செய்துவிட்டு, அந்நகரத்தில் ஒரு குகையினிடத்துக் கணக்குமதித் தனக்குமிடத்து மூவாயிரத்தெழுநூற்றெண்பது வருஷம் யோகத்திலெ ழுந்தருளியிருந்தனர். (வ-று.) (கூஎ)

[அருளிச்செயல்.]

௧௮. பொன்றுலகத்தவர்புகழுந் திருச்சந்தவிருத்தமுதற் பூநிலாய, என்னவெடுத்தீரறுபா னவின்றுதிருவந்தாதி யெழுவாயினீர், அன்னமுறைநான்முகனை யெனப்பாடத் தொண்ணூற்றாறருளிச் செய்யாப், பன்னரியபரமபதம் பாகவதரனைவருக்கும பாலித்தாரால்.

(இ-ள்.) பொன்னுலகத்திலுள்ள தேவர்கள் புகழும் திருச்சந்த விருத்தத்தை முதலில் "பூநிலாய" என்றெடுத்து நூற்றிருபது செய்யுட்களாலருளிச்செய்து, திருவந்தாதியை இனிய முதற் சீரானதனமேலும் "நான்முகனை" என்றெடுத்துத் தொண்ணூற்றாறு பாடல்களாலருளிச்செய்து, சொல்லுதற்கரிய பரமபதம் பாகவதர்களனைவருக்கும் உண்டாகச்செய்தனர். (எ-று.) (௧௮)

* மாயவனைப் பாலசங்கீர் துதியாலவனையானேற்ற சொற்றெரிந்த
கோபசமியனைத் திவ்யபிரபந்தங்களை காவிரிமணிநீரிலிட்டலைமேலெதிரேற
தாமெழுந்துவருமிரண்டு ... கராதலத்தி
மீயிருந்ததொழுதி கருதி ... திருவுளமகிழ்ந்திட்டானால்.

(இ-ள்.) பரிசுத்தரான ஆழ்வார், உலகத்தில் பட்டபொருளையுடைய பரம்பவனப்பாரான் விஷயமாக அருளிச்செய்த ... பெருங்கவிகளையெல்லாம் திருக்காவேரியில் ... நீரிலிட்ட (அவைகளில்) ... இரண்டு திருப்பிரபந்தங்களாகிய பொழுந்து வரும் ... நால்வேதமும் தாம் எடுத்துப் பூமியின் மீதிருத்தும் ... திருவுள்ளத்தில் விருப்பங்கொண்டனர். (எ-று.) திருக்காவேரியிலிட்டது, எதிரேறி வந்தமை ஆக கவிகள் எழுதிய ஏடுகளெனக.

[எனவே இந்த இரண்டு பிரபந்தங்களும் திருக்காவேரி நீரில் எதிரேறி வந்தவைகளென்று கொள்க.]

‡ ஆய்விருநாற்றுப்பத்தோடாறெருந்திருவந்தாதிதன்னுள்
ஓய்விலேழு ... 
இயலியதேசமிரண்செப்ப ...
செய்யவே ... பயகாயாமணரே.

‡ சீரங்கந் திருவெஃகாதிருவல்லிக் கேணிதிருக்
கோகுடந்தை கோட்டியூர் குறுங்குடியும் ...
பேரெவ்வுள் வேங்கடம் ... திருப்பாடகம்
வாரணைகூடலும்பாற்கடலும்மைக்குந்தமாமே.

[திருப்புலியூரில் தமது வைபவத்தை வெளியிடுதல்.]

௧௯. அங்குறைநாட்டிருமழிசை யோகிதனக்களித்தவர மவனிகாணத், தங்குதிருக்குடந்தையிலா ராவமுதைவிடைகொடுதாங் தணந்துவீதி, எங்குநவமணியிமைக்குஞ் சிறுபுலியூரெனும்பதியை யெய்தியானம், பொங்குமருண்மாக்கடலை யுளக்கமலத்திருத்தி வலம்புரிவிற்செய்தான்.

(இ-ள்.) அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கும்போது திருமழிசையாழ்வார், எம்பெருமான் தமக்கு அளித்த வரத்தைப் பூமியிலுள்ளோர் காணும்படி நிலைபெற்ற திருக்குடந்தையி லெழுந்தருளியிருக்கும் ஆராவமுதப்பிரா

விடைத்து விடைபெற்றுக்கொண்டு (அவ்விடம்) நீங்கி, வீதிகளெங்கும் நவமணிகள் ஒளிவிடும் சிறுபுலியூரென்னுந் திருப்பதியை யடைந்து, பெருமைபொருந்திய கருணைக்கடலாகிய பெருமானை ஞானம் அபிவிருத்தியடைந்த தமது திருவுள்ளமாகிய தாமரையிலிருத்தி அன்போடு வலஞ்செய்தனர். (எ-று.)

வேறு.

க00. சிறுபுலிசையிலுறைகருமுகிலிரிபதைசெறிதாண்மீ
துறுமனனுருகிடவலம்வரலொடுமுலகுடையோனும
மறுமலருறைதிருமணியொளிர்தருமுகமதிஞானம்
பெறுதவமுனிவருதிசைதொறுமுறைமுறைபிறழ்ந்தான்.

(இ-ள்.) சிறுபுலியூரில் நித்தியவாசஞ் செய்யும் கரியமேகம்போன்ற பெருமானது கங்காநதிபொருந்திய திருவடியின்மீது நிலைபெற்ற திருவுள்ளம் உருகும்படி வலம்வருதலும், மெய்ஞ்ஞானம நிலைபெற்ற தவத்தையுடைய ஆழ்வார் வருந்திசைகள் தோறும முறைமுறையாக, உலகுடையவனை பெருமானும் ஸ்ரீவற்சம தாமரைமலரி லெழுந்தருளியிருக்கும் பிராட்டி கவுஸ்துபம் விளங்கும்படி சந்திரன்போன்ற திருமுகந்திரும்பினன். (எ-று.) (க00)

க0க. திருமகளொடுமுறைமுகின்முனிவலம்வருதிசைதோறும்
பெருகியகருணையொடலம்வருமஃதடிபெயராதே
மருமலர்சிகழிகைதொடையணிதுகிலகடல்வருஞான
முருகலர்துளவமதணிதருதொழிலபுரிமுனிகண்டான்.

(இ-ள்.) (இப்படி) திருமகளோடிருக்கும மேகம்போன்ற பெருமான் ஆழ்வார் வலம்வருந் திசைகள் தோறும் பெருகிய கருணையோடு திரும்புவதை, அடிபெயராமல் வாசனையுடைய கோத்தமாலையும் பூமாலையும் அழகிய திருப்பரியட்டமும் திருப்பாற்கடலிற் பிறந்த ஞானமயமான வாசனை வீசும் திருத்துழாயும் பெருமானுக்கணிவதான கைங்கரியஞ்செய்யும் முனிவர் கண்டனர். (எ-று.) (க0க)

க0உ. எவரிவணணுகினரெனமுனியுவகையொடெதிரெய்தாப்
பவமகல்கதியருணெடியவனெனவருபடிகண்டே
சிவனயன்முதலினர்புகழ்முனிவரனெழில்திகழ்தாண்மேல்
புவியினின்முடிபடிதரநறைமலர்கொடுபூசித்தான்.

(இ-ள்.) யாவர் இங்கு வந்தனரென்று அம்முனிவர் சந்தோஷத்தோடு எதிர்கொண்டு சென்று, பிறப்பு நீங்கும் மோக்ஷத்தைக் கொடுக்கும் பெருமானென்று சொல்லும்படி (ஆழ்வார்) வரும் விதத்தைப் பார்த்து, சிவன் பிரமன் முதலானவர்கள் புகழும் ஆழ்வாரது அழகுவிளங்கும் திருவடிகளின்மேல் பூமியில் முடிபடியும்படி நமஸ்கரித்து, வாசனையுடைய புஷ்பங்களைக் கொண்டு பூசித்தனர். (எ-று.) (க0உ)

க0ங. எழுந்துபவப்பிணிகடிதருமுகினிகரியல்ஞானக்
கொழுந்துவெளிப்படவந்ததுவோவிதுகூறென்னுத்
தொழுந்தகைமுனிவரனைக்கொடுமறையவர்தொகைதாண்மேல்
விழுந்திடுகுலனைவருமக்கினனென்னவெகண்டார்.

(இ-ள்.) (அப்போது ஆழ்வார்) அருமையான வேதங்கள் தெரிவதற்கரிய மலரகிதனை பெருமானது அழகிய மலர்ந்த தாமரையையொத்த திருவடிகளை வணங்கினர். சிரித்துப் (பரிகாசஞ்செய்த) பிராமணர்கள் கூட்டம் நாணமடையும்படி, வாசனையுடைய திருத்துழாயணிந்த முதல்வனை பெருமானும் (ஆழ்வாரைக் கடாக்ஷித்து) "உன்னையிகழ்ந்த அறிவில்லாதவர்கள் நெருப்பும் பயப்படும்படி எரிந்துகொண்டிருக்கும் நரகத்தினிடத்துத் துன்பங்கொண்டு வீழ்வார்கள். (எ-று.) (கoஎ)

கoஅ. உனையடிபரவியமுனைவரனெமதடியுறுவானென்
றனைவருமறிதரவருளினனமரரொடயல்சென்றான்
எனையருளெனையருளினியுனதடிமையமெனவேதீ
வினைபுரிமறையவாபரவினரவனடிமிகுமன்பால்.

(இ-ள்.) "உன்னை அடிபரவிய முனிசிரேஷ்டன் எமது பதத்தையடைவன்" என்று யாவருமறியும்படி அருளிச்செய்து நித்திய சூரியரோடு நீங்கினன. (முன்பு) தீயவினையைச்செய்த பிராமணர்கள் "என்னையருள்க என்னையருள்க இனியுமக்கடிமையேமாவோம்" என்று ஆழ்வார் திருவடிகளை மிக்க அன்போடு வணங்கினார்கள். (எ-று.) (கoஅ)

கoகூ. முகினிகர்முதல்வனைவழிபடுமறைதெரிமுனிவன்றாள்
புகின்மறையருளரிபுரிகுவனெனமுனிபுகறந்தான்
மகிதலமிசையினியுனைநிகரிலையெனமறையோரும்
அகிலமுமுணர்முனியடிமருவினமொமையருளென்றார்.

(இ-ள்.) (அப்போது) ஆழ்வார் "மேகம்போன்ற முதல்வனை பெருமானை வழிபடும் வேதபாரகரான முனிவருடைய அடிகளை அடைக்கலம் புகுவீர்களாயின் பெருமான் அருள்செய்வன" என்று அருளிச்செயதனர். பிராமணர்களும் "பூமியின்மீது இனியும்மை யொப்பவரில்லை" யென்று யாவுமுணர்ந்த முனிவருடைய திருவடிகளைச் சேர்ந்து, "எம்மை யருள்வீராக" என்றார்கள். (எ-று.) (கoகூ)

[யாகத்தில் அக்கிரபூசை பெறுதல்.]

வேறு.

ககo. அப்பரிசுபெரும்புலியூரடிகளுக்குசிலரறைகிச்
செப்பவதிசயித்தெழுந்துசென்றுபுரிசெழுந்தவத்தால்
ஒப்பரியதிருமழிசையோகியைக்கண்டுளமுருகி
எப்பவமுமினிக்கடந்தேனெனமலர்த்தாளிணைபணிந்தான்.

(இ-ள்.) அந்த விருத்தாந்தத்தைப் பெரும்புலியூரடிகளைச் சிலர் அடைந்து சொல்ல (அவர்) அதிசயமடைந்து எழுந்திருந்து சென்று செய்த நல்ல தவத்தினாலே ஒப்பில்லாத திருமழிசைப்பிரானைச் சேவித்து உள்ளங்கரைந்து எந்தப் பிறவியும் இனிக்கடந்தே னென்று (ஆழ்வாரது) மலர்போன்ற இரண்டு திருவடிகளை வணங்கி, (எ-று.) (ககo)

ககக. ஏதமிலாவுனதடியன்புரிவேள்விக்கெழுந்தருள்கென்
றோதரவினுடன்கொணர்ந்தாங்கனைவருகநடுவிருத்தி
வேதமுறைவழுவாதுபுரிவேள்விமிகவிளங்க
ஓதருமக்கிரபூசையுதவியுளமுவந்தனனல்.

(இ-ள்.) "குற்றமில்லாத உமக்கு அடிமையான நான் செய்யும் யாக சாலைக்கு எழுந்தருள்க" என்று பிரீதியுடன் (ஆழ்வாரைச்) கொண்டுவந்து எல்லோருக்கும் இடையிலிருத்தி வேதத்திற் சொல்லும் முறைவழுவாது செய்யும் யாகம் மிகவும் விளங்கும்படி சொல்லுதற்கரிய அக்கிரபூசையைக் கொடுத்துச் சந்தோஷித்தனர். (எ-று.) (கககக)

கக௨. சதுமறையின்முறைவேள்விச்சடங்கிழைக்குந்தகைசான்ற
முதுமறையோரதுகாணுமுனிந்துமறைமுதற்குமுன்னாள்
விதுமரபோன்முதற்பூசைவிழைந்துதவச்சிசுபாலன்
பொதுவனெனநகைத்ததுபோன்மிகவுநகைபுரிந்தனரால.

(இ-ள்.) நான்கு வேதங்களின் முறைப்படி யாகச்சடங்கைச் செய்யும் பெருமை நிறைந்த பழமையான வேதியர்கள் அதனைக்கண்டு கோபித்து, மறைமுதல்வனான கண்ணனெம்மானுக்கு முற்காலத்தில் சந்திரவமிசத்தனான தருமபுத்திரன் அக்கிரபூசையை ஆசைப் பெருக்கத்தோடு கொடுக்க (அப்போது) சிசுபாலன் (கண்ணன்) இடையனென்றுரைத்து நகைசெய்தது போல, மிகவும் நகை புரிந்தார்கள். (எ-று.) (கக௨)

ககரு. இக்கணநந்தகைமையெலாமிவர்காணவேணுமென
அருகமலப்பதத்தினிலோராயிரமன்றளித்தோனும்
சக்கரங்கொள்கையோனேயெனுஞானத்தமிழ்க்கவியாற்
செக்கமலத்தலாநெடுங்கடடிருமாலைசிந்தித்தான்.

(இ-ள்.) இக்கணத்தில் நம்பெருமையெல்லாம் இவர்கள் காணவேணுமென்று சிரேஷ்டமான கமலம்போன்ற ஆயிரமான தீயை (சிவபிரானுடைத்த) அக்காலத்தில் அளித்தவரான ஆழ்வாரும் "சக்கரங் கொள்கையனே" என்னும் ஞானத்தமிழ்க் கவியாலே செந்தாமரை மலர்போன்ற நீண்ட திருக்கண்களையுடைய பெருமானைச் சிந்தித்தனர். (எ-று.) (ககரு)

"அக்கரங்களக்கரங்களென்றுமாவதென்கொலோ
இக்குறும்பைநீக்கியென்னையீசனாக்கவல்லையேல்
சக்கரங்கொள்கையனேசடங்கர்வாயடங்கிட
உட்கிடந்தவண்ணமேபுறம்பொசிந்துகாட்டிடே."

ககச. மாயவனுமதிமுகமுமணிமகரகுண்டலமுந்
தூயகவுத்துவமணியுந்துளவுமுதலியதுலங்க
நாயகிபூமடந்தைபுவிநளினமலர்த்தாள்வருடப்
பாயலரவினிற்றிருக்கண்படைவெளிக்கேபாரித்தான்.

(இ-ள்.) பெருமானும் சந்திரன்போன்ற திருமுகமும் அழகிய மகரகுண்டலமும் பரிசுத்தமான கவுஸ்துபமணியும் திருத்துழாயும் முதலியவைகள் விளங்கும்படி பெரிய பிராட்டியாரும் பூமிப்பிராட்டியாரும் தாமரை மலர்போன்ற திருவடிகளைவருட ஆதிசேஷசயனத்தில் திருக்கண் வளர்தலை வெளிக்குத் தோற்றுவித்தனன். (எ-று.) (ககச)

ககரு. சண்டுமழிசையர்பெருமான்பணிந்தேத்திக்கருத்துவகை
கொண்டுசெழுந்தமிழ்கூறிக்குனித்தனன்பாற்குரைசடற்கே
பண்டுதுயில்பரிசவனைப்பழித்தமறையவர்காண
வண்டுளவத்தொடையீசன்காட்டியுடன்மறைந்தனனால்.

(இ-ள்.) திருமழிசையாழ்வார் சேவித்து வணங்கித்துதித்துத் திருவுள்ளத்தில் சந்தோஷங் கொண்டு செழுமையான தமிழ்ப்பாடலைக் கூறி வணங்கினர். அவரைப்பழித்த பிராமணர்கள் காணும்படி வளமான துளவமாலையணிந்த பெருமான் ஒலியையுடைய திருப்பாற்கடலில் முன்பு துயிலும் விதத்தைக்காட்டி உடனே மறைந்தருளினன். (எ-று.) (கக௫)

ககசு. அந்தணருந்திருமழிசையடிகளடிமுடிசூடி
வந்தனையோடெமதுபிழைபொறுத்தியெனுவழுத்திமணிச
சுந்தரப்பொற்பிரமவிரதத்தேற்றித்தொலைவிலருள்
தந்தடிமையெமைவிரும்புகெனப்பரவிச்சரணடைந்தார்.

(இ-ள்.) பிராமணர்களும் திருமழிசையாழ்வாரடிகளை முடியிற் சூடி "எங்கள் பிழையைப் பொறுப்பீராக" என்று வந்தனத்தோடு தோத்திரஞ் செயது, ரத்தினமிழைத்த அழகிய பொன்மயமான பிரமரதத்திலேற்றி, கெடாத அருளைக்கொடுத்து அடிமையான எங்களை விரும்புவீராக வென்று வணங்கிச் சரணாகதி செயதார்கள். (எ-று) (ககசு)

ககஎ. பூசுரருக்கருள்சுரந்துபுவியுதரம்பொதிந்தோன்சீர்
பேசுமுபநிடதநிலைபிறழாதுபெருஞானத்
தேசுதருமுபதேசமளித்தடிமைதிறமாக்கி
ஆசுதவபுரிதவனுமலகிறினமவணிருந்தான்.

(இ-ள்.) குற்றம் கெடும்படி செயத தவத்தையுடைய ஆழவாரும், பிராமணர்களுக்கு அருள்கொடுத்துப பூமியைத் தனது வயிறறினிடத்தடக்கிய பெருமானது கலியாணகுணங்களைச் சொல்லும் உபநிஷத்துக்களின் நிலைதவறாது பெரிய ஞானதேஜஸைக் கொடுக்கும் உபதேசமளித்து (அவர்களை) அடிமைதிறத்தவர்களாக்கி அங்கு அநேக காலமெழுந்தருளியிருந்தனர். (எ-று.) (ககஎ)

வேறு.

ககஅ. ஆரியனுமெந்தைகணிகண்ணனொடவண்டீர்ந்
தேரியலரங்கமுதலாயபதியாவும்
பாரினிலிறைஞ்சிவளர்பல்லுயிர்புரந்தான்
காரியருண்மாறனுயர்காதைநவில்கின்றும்.

(இ-ள்.) ஞானபூரணரான ஆழ்வாரும் எமது ஸ்வாமியான கணிகண்ணரோடு அவ்விடம் விட்டு நீங்கிப், பூமியிலுள்ள அழகமைந்த திருவரங்க முதலாகிய திருப்பதிகளையெல்லாம் வணங்கிக்கொண்டு, விர்த்தியடையும் பல ஆன்மாக்களை ரக்ஷித்தனர். (இனி) காரியர் பெற்றருளிய நம்மாழ்வாரது மேன்மையான சரித்திரத்தைச் சொல்லுவோம். (எ-று.) (ககஅ)

[இவ்வாழ்வார் திருவவதாரம், முதலாழ்வார்கள் திருவவதாரஞ் செயத வருஷத்தில் தைமீ கிருஷ்ணபக்ஷப பிரதமை மகநக்ஷத்திரம் கூடிய ஆதிவாரத்தில் துலாலக்கினத்தில் எனறறிக. இவ்வுலகில் எழுந்தருளியிருந்த காலம் நாலாயிரத்தெழுநூறு வருஷமென்பர். யோகத்திலிருந்து திருநாட்டுக் கெழுந்தருளின இடம் திருக்குடந்தை.]

௩-வது பத்திசாரச்சருக்கம் முற்றிற்று.

---

திருமழிசையாழ்வார் திருவடிகளேசரணம்.

ஸ்ரீ

# ௪-வது பராங்குசச்சருக்கம்.

[பொருநையாற்றின் சிறப்பு.]

க. பொதுவறத்திரைப்புணரிசூழ்புவியெலாம்புரப்பான்
விதுகுலத்தவதரித்தமீனவனெனும்வேந்தன்
முதுதமிழ்த்திருநாட்டினுககணியதாய்முரணு
மதுவடர்த்தமான்மலரடிக்கங்கையேமானும்.

(இ-ள்.) பொதுவாயிருத்தலின்றி (தனக்கேயாம்படி) அலைகளையுடைய கடல் சூழ்ந்த பூமியையெல்லாம் காக்குமவனாய, சந்திரகுலத்தில் பிறந்த மீனவனென்று சொல்லப்படும் அரசனாகிய பாண்டியனது பழமையான தமிழ் நாடாகிய பாண்டிநாட்டுக்கு ஆபரணம்போல விளங்கி, மதுவென்னும் அசுரனை விரோதித்து வென்ற பெருமானது மலர்போன்ற திருவடியில் பிறந்த கங்கைக்குச் சமானமாயிருக்கும். (எ-று.) (க)

உ. வரையின்வாளராமணிநிரைவரன்றிவாலருவி
தரையிற்சூழ்தரத்தழைத்தநீர்மணிநிறந்தழுவி
திரையின்பொன்னுடைதரித்தமாநிலமெனுந்திருவின்
புரையின்றுயசெம்பட்டினுத்தரியமேபொருவும்.

(இ-ள்.) மலையிலுள்ள ஒளியையுடைய பாம்புகளது மாணிக்கங்களின் கூட்டங்களை வாரிக்கொண்டு, பிரகாசத்தோடு கூடிய அருவிகள் தரையில் வீழப் பரவிய நீர், அம்மணிகளின் நிறங்கூடி, சமுத்திரமாகிய அழகிய ஆடையைத் தரித்த பூமிதேவியின் குற்றமற்ற சிவந்த பட்டுத்தரீயத்தை யொத்திருக்கும். (எ-று.) (உ)

௩. அடியிற்செம்மணியிடைபசுங்கனகநீளலைதோய்
முடியிற்றண்கதிர்முத்தினங்கன்னனென்முதிரை
படியிற்றன்னிருமருங்கினும்பயகுநீர்படியின்
னொடியிற்செங்கண்மால்பதந்தருநுதலினுந்தருமால்.

(இ-ள்.) அடியில் மாணிக்கமும், இடையில் பசுமையான பொன்னும், பெரிய அலைகளையுடைய முடியில் குளிர்ந்த பிரகாசத்தையுடைய முத்தினமும் உடையதாயக், கரும்பு-நெல்-முதிரை என்னுமவைகளைப் பூமியிற் றன்னிரண்டு பக்கங்களினும் உண்டாக்கும்; (தனது) நீரிற் படிந்தாலும் (படிந்தவர்க்கு) நொடிப்பொழுதில் செங்கண்மாலுலகமாகிய பரமபதத்தைத் தரும்; (தன்பெயரைச்) சொல்லினும் (சொல்லினார்க்கு அவ்வுலகைத்) தரும். (எ-று.) (௩)

முதிரை-அவரை, காராமணி, கொள், துவரை முதலியன.

௪. பொன்னிமாதவம்புரிந்துவானதியினும்பொலிந்த
திங்நிலத்தெனமுக்குணத்தவரைநோற்றிறைஞ்சச
சென்னிமானடுவெயனடிசிவன்பயிறிறம்போற்
றன்னிலத்தில்வெண்டரளமாடகமணிதயங்கும்.

(இ-ள்.) இவ்வுலகில் திருக்காவேரிநதி பெருந்தவஞ்செய்து கங்காநதியினும் சிறப்புற்றது என்று (தானுஞ் சிறப்படையும்படி) சத்துவம்-இராசதம் தாமதம் என்ற மூன்று குணங்களை முறையே யுடையவர்களாகிய விஷ்ணு-பிரமன்-சிவன் என்பவர்களைத் தவஞ்செய்து வணங்கச், சிரத்தில் விஷ்ணுவும், இடையில் பிரமனும், அடியில் சிவனும் பொருந்தியிருக்கும் விதம்போலத் தனது நிலத்தில் வெண்மையான முத்தும்-பொனனும்-மாணிக்கமும் விளங்கிக்கொண்டிருக்கும். (எ-று.)

பொன்னிமாநதி சிறப்படைந்த கதை: முன்னொருகாலத்தில் மேருமலையில் நதிமாதர்கள் கூடியிருந்தபொழுது, ஒரு கந்தருவன் அத்திக்கை நோக்கி வணங்கிபோக, நதிமாதர்கள் அவ்வணக்கம் தங்கள் தங்களுக்கென்று பிணங்கிக், கந்தருவனைக்கேட்க, அவன் உங்களிற் சிறந்தவளுக்கென்றான். அப்பிணக்கு நீங்கப் பிரமனைக் கிட்டிக்கேட்டனர். பிரமன், கங்காநதி ஆதி பகவன் பாததாமரையிற் பிறந்தமையால் அன்னவளே சிறப்புடையள்; அவட்கே அவ்வணக்கமெனச், காவேரி சினந்து நான் கங்கையினும் புனிதமாகக் கடவேனென்று பகவானை நோக்கித்தவஞ்செயது அவனருளால் அவன் திருமேனி ஸ்பர்சம்பெற்றுச் சிறப்படைந்தனள் என்பதாம். இதனை ஸ்ரீரங்கமான்மியத்தில் விரிவாய்க் காண்க. தரளம் ஆடகம் மணி என்பவைகள் வெண்மை, பொன்மை, செம்மை என்னும் நிறத்தால் மும்மூர்த்திகளின் குணங்கட் கொப்பாயின. (ச)

ரு. வானிலங்குமால்வரையினுள்ளவுமலிபூங்
கானிலுள்ளவுங்கழனியிலுள்ளவுங்கவர்ந்தேழ்
தானிலங்கியார்கலிபுகுந்தணவவுந்தழுவா
நானிலந்தனிற்போதரும்பொருநைமாநதியே.

(இ-ள்.) ஆகாயமளாவிய உயர்ந்த மலையிலுள்ளவைகளையும் மிக்க பூக்களையுடைய காடுகளிலுள்ளவைகளையும் கழனிகளிலுள்ளவைகளையுங் கொண்டு ஏழென்னுந்தொகை பொருந்திய சமுத்திரத்திற் சேரவும் அடங்காது பூமியில் பரவும் பொருநைமாநதி. (எ-று.) (ரு)

இவை யைந்துபாட்டும் ஒரு தொடர். பொருநைமாநதி, மானும் பொருவும் பயக்கும் தரும் தயங்கும் போதரும் எனமுடிக்க.

[திருக்குருகூர் வைபவம்.]

சூ. பலவளந்திகழனையதோர்பொருநையின்பாங்கர்
புலவரந்தணர்புவியுளோரனைவரும்புகழக்
கலவமஞ்ஞைநேர்புடவிசெந்திருவொடுங்கரியோன்
குலவருந்திருப்பதிமதிதருதிருக்குருகூர்.

(இ-ள்.) பலவளங்களும் பொருந்திய அத்தகைய பொருநைநதியின் பக்கத்தில், தேவர் பூசுரர் மனிதர் ஆகிய யாவரும் புகழும்படி கலாபத்தையுடைய மயிலுக்குச்சமானமான பூதேவியார் செந்திருவாகிய பெரிய பிராட்டியார் என்னுமிவர்களோடு எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் அரிய திருப்பதியாகும், ஞானத்தைக் கொடுக்கும் திருக்குருகூர் என்னும் திவ்விய க்ஷேத்திரம். (எ-று.) (சூ)

எ. உணர்விறைவிரண்டெழுத்தமைத்துரையிறைனுணர்வான்
அணவரும்பதத்தரிதிருவடியறிந்தழியாக்

குணநிறைந்துயர்பரமபாகவதராங்குரவோர்
கணமுறைந்தெழினிறைதிருமாளிகைகளும்.

(இ-ள்.) (தமது) ஞானத்தில் திருவஷ்டாக்ஷரியை நிலைநிறுத்திச், சொல்லாலும் மனத்தாலும் கிட்டுவதற்கரிய பரமபதத்தையுடைய பெருமானது திருவடியின் பெருமையை யறிந்து, அழியாத நற்குணங்கள் பரிபூரணமாகி (அதனால்) உயர்ந்துள்ள பரமபாகவதர்களாகிய ஆசிரியர்களின் சமூகங்கள் நித்தியவாசஞ் செய்து அழகு நிறைந்த திருமாளிகைகள் அங்கு விளங்கிக்கொண்டிருக்கும். (எ-று.) (எ)

அ. வயங்குபற்பலமணிநிரைக்கனகவாண்மதிலும்
புயங்கமாலுயர்சினகரத்தாதனப்பொலிவும்
இயங்குமூரொடுங்தரணிவானிலைவிடுத்திழிந்தே
தயங்கலன்றிவேறுவமையின்றெனவெழிறழைக்கும்.

(இ-ள்.) விளங்கும் பலவான மணிவரிசைகளிழைத்த பொன்மயமான ஒளியையுடைய திருமதிலும், ஆதிசேஷ சயனத்தையுடைய பெருமான் எழுந்தருளிய திருக்கோவிலின் ஆசனத்தின்பொலிவும், சூரியன் பரிவேஷத்துடன் தான் சஞ்சரிக்கும் ஆகாயநிலையை விட்டிறங்கி விளங்குவதன்றி வேறுவமானம் இல்லையென்று சொல்லும்படி அழகுடையனவாயிருக்கும். (எ-று.) (அ)

கூ. தெளிதரற்கரும்பரமமால்பதமெனத்தெரிந்தே
வெளியிடற்குளநுதலியகவுசிகம்விரித்தால்
எளிதெனப்படும்புவியினோர்க்கென்னவஃதிசையா
தளியுடைக்குருகூரொனுமழகினுக்கமையும்.

(இ-ள்.) (திருக்குருகூர்) யாவராலுந் தெளிவதற்கரிதான பரமமான திருமாலின் பரமபதமாகு மெனத்தெரிந்து (தெரிந்தபடியே) வெளியிடுதற்கு உள்ளந்துணிந்த சாமவேதமானது, விரித்துரைக்குமாயின் (அப்போது) பூமியிலுள்ளவர்களுக்கு எளிதாகத் தோன்றும் என்னில் அப்படி யாவருமறிந்து கொள்ளுதல கூடாது; (ஆயின்) கிருபையுடைய திருக்குருகூரெனும் அதின் அழகினால், (பரமபதமே திருக்குருகூரென்பது) அமைந்திருக்கும். (எ-று) (கூ)

வேதங்களில் சிறப்பு நோக்கிச் சாமவேதமென்றார். அளியுடைமையால் திருக்குருகூருக்கெய்திய அழகாவது: பரமபதத்திலுள்ள சாமவேதத்தின் சாரமான திருவாய்மொழி தோன்றவும், நித்திய சூரியரில் தலைவரான சேனைமுதலியார் திருவநந்தாழ்வான் ஆகிய இவர்கள் ஆழ்வாராகவும் திருப்புளியாழ்வாராகவும் அவதரிக்கவும், பரமபதநாதன் தனது வாற்சல்லியாதி குணங்கள் தோன்றவும் பரத்துவம் விளங்கவும் ஆதிநாதப் பெருமானாக நித்திய சாந்நித்தியம் பண்ணி யெழுந்தருளி யிருக்கவும் தான் இடமாயிருந்து ஆன்மாக்கள் உஜ்ஜீவிக்கும்படி செயயுங் கிருபையினால் வந்த சிறப்பாம். இதனால் திருக்குருகூர் பரமபதமாகுமென்று சாஸ்திரங்களில் தலைமையான வேதங்களாலே துணிந்து சொல்லப்பட்டாலும் யாவருமறிதலரிதாயிருக்குமெனவும் அவ்வேதஸாரமான பிரபந்தமும், பரமபதத்து நித்திய சூரியரும், எம்பெருமானும் இங்கு எழுந்தருளியிருக்கும் கிருபையே அதனை எளிதில் தெரிவிக்கு மெனவுமுணர்க.

கo. இருபிறப்பளொங்தொழிலர்மூவிருதொழிலுறுவோர்
மருவுபற்பலமணியணிமனைகளுமலிபூந்
தருவுடைக்கடிபொழில்களுந்தாமரைத்தடமுந்
திருமலர்ச்செழுந்துடவையுங்கணிப்பிலசெறியும்.

(இ-ள்.) இருபிறப்பாளர் பஞ்சகாலாநுஷ்டாந முடையவர்கள் ஆறு தொழிலையுடையவர்கள் ஆகிய வேதியர்கள் பொருந்திய பற்பல மணிகளிழைத்த திருமாளிகைகளும், மிகுந்த பூந்தருக்களையுடையனவாய் வாசனையுடைய சோலைகளும், தாமரைத்தடாகங்களும், அழகிய மலர்கள் பூத்த செழுமையான உழவுகொல்லைகளும், கணக்கற்றனவாகப் பொருந்தியிருக்கும். (எ-று.) (கo)

[ஆழ்வார் வமிசபரம்பரை.]

கக. வீடடைந்தவர்க்குதவுமப்பதிவயின்விருப்பாற்
சூடலங்கலந்துளவமாறுணைப்பதந்தொழுவோன்
தேடரும்புகழ்விளைஞர்கோமான்றிருவழுதி
நாடனென்பவன்மரபினையாவரோநவிலவார்

(இ-ள்.) தன்னைச் சேர்ந்தவர்கட்கு முத்தியைக் கொடுக்கும் அந்தத் திருக்குருகூரினிடத்துச் சூடிய அழகிய திருத்துழாய மாலையையுடைய பெருமானது இரண்டு திருவடிகளையும் விருப்பத்தோடு தொழுவோர், பிறரிடத்துத் தேடுதற்கரிய கீர்த்தியையுடைய வேளாளர்கட்குத் தலைவரான திருவழுதிநாடனென்பவரது (ப்ரபந்ந ஜநகூடஸ்தரான ஆழ்வார் அவதரித்து மஹத்தான கீர்த்தியையடைந்த) வமிசத்தின் பெருமையை (இத்தன்மையதென்று) சொல்லவல்லவர் எவர் (ஒருவருமில்லை). (எ-று.) (கக)

கஉ. மழவனங்கனேர்வனப்பினாலுயர்திருவழுதிக்
கிழவராழியாரிளரறந்தாங்கிசீர்கெழுதோண்
முழவணிந்தசெந்தாமரைக்கண்ணர்பார்முழுதுந்
தொழவரும்புகழ்ச்சக்கரபாணியச்சுதரால்.

(இ-ள்.) (அவரது வமிசத்தவர்கள் முறையே) இளமையுடைய மன்மதனை யொத்த அழகாலுயர்ந்த திருவழுதிக்கிழவர், ஆழியார், உயர்ந்த அறந்தாங்கியார், சிறப்பு மிகுந்த மத்தளம்போன்ற தோள்களையுடைய செந்தாமரைக் கண்ணர், பூமிமுழுதும் தொழும்படி வந்த புகழையுடைய சக்ரபாணியார், அச்சுதர் என்பவர்களாம். (எ-று.) (கஉ)

கங. சீர்பரந்தபோர்க்கழியர்சேய்காரிசெந்திருவாழ்
மார்பர்தந்தருளுடையநங்கைப்பெயர்மயிலைத்
தார்பரந்தணிந்தயர்ந்தனன்றிருமணந்தழன்முன்
ஏர்பரந்துயர்வண்பரிசாரத்தினெய்தி.

(இ-ள்.) (இவ்வமிச பரம்பரையில்) சிறப்புப்பரவிய போர்க்கழியாரது திருக்குமாரராகிய காரியார் என்பவர், செந்திருவாழ் மார்பர் பெற்றருளின உடையநங்கையாரென்னும் திருநாமமுடைய மயில்போன்றவளை, அழகு பரந்து உயர்ந்த திருவண்பரிசாரத்தைச் சேர்ந்து, யாவருமறியத் திருமாலை சூட்டி அக்கினியின்முன் திருக்கண்ணாலஞ் செயதுகொண்டனர். (எ-று.)

கச. கவிகையாலுயர்காரியுந்தெரிவையைக்கனகச்
சிவிகையாற்கொடுகுருகைமாநகர்வயிற்சேர்ந்தான்
புவிகையாற்றொழும்பொறைநிறைகற்புணர்புலனார்
சவிகையாலருந்ததியினும்விளங்கினடையல்.

(இ-ள்.) ஈகையாலுயர்ந்த காரியாரும் உடையநங்கையாரான பெண்மணியைப் பொற்சிவிகையிற்கொண்டு திருக்குருகூரினிடத்திற் சேர்ந்தனர். பூமியிலுள்ளோர் கைகூப்பித் தொழும் பொறுமை, நிறைந்த கற்பு, அறியக்கூடிய ஞானம், நிறைந்த அழகு, ஒழுக்கங்களால் அருந்ததி தேவியினும் (அதிகமாக) விளங்கினர் உடையநங்கையார். (எ-று.) (கச)

[உடையநங்கையார் புத்திரப்பேறு வேண்டிப் பெறுதல்.]

கரு. அன்னைவாழ்மனையணுகியுமகிணனில்லடைந்தும்
பொன்னையேய்மலர்புனைகுழல்புவிமுறைபுரிநாள்
தன்னைமாநகர்நின்றுதன்பதிநகர்சார்வோள்
என்னையாள்பிரான்றிருக்குறுங்குடிவதிந்திருந்தாள்.

(இ-ள்.) தாய்வீட்டைச் சேர்ந்தும் புருஷன் மனையையடைந்தும் பொன்னையொத்த மலர்களை யணிந்த கூந்தலையுடைய உடையநங்கையார் பூமியில் தம் ஒழுக்கத்தைக் (குறைவறச்) செயதுகொண்டு வருநாளில் (ஒருநாள்), தன்தாய் ஊரினின்று தன்புருஷன் ஊருக்குப் போகுமவர், என்னையாளும் உபகாரகனான பெருமான் நித்தியவாசஞ் செயயும் திருக்குறுங்குடியில் தங்கியிருந்தனர். (எ-று.) (கரு)

கசு. இருந்தநங்கையும்புதல்வரிலாமையானிதயம்
வருந்திவாசவன்றிசையரிதோன்றுமுன்வனசம்
பொருந்துதீர்த்தத்துண்மூழ்கிவார்புனற்கலைபுனைந்தே
பெருந்திருக்குறுங்குடிநம்பிபால்வரம்பெறுவாள்

(இ-ள்.) (அங்ஙனம்) இருந்த உடையநங்கையாரும் (தமக்குப்) புத்திரரில்லாமையால் திருவுள்ளம் வருந்தி கீழ்த்திசையில் சூரியனுதிக்குமுன தாமரை பொருந்திய தீர்த்தமாடி நீண்ட ஈரவஸ்திரநதரித்துப் பெருமையுடைய திருக்குறுங்குடி நம்பியினிடத்து வரம்பெறுமவராய (எ-று.) (கசு)

கஎ. அனந்தநாமமாலமர்திருக்கோவில்புககடியார்
சனந்தராதலம்பரவவேபொருவின்மாதவத்தோர்
மனந்தனிற்பயின்மாயனைப்பலியயல்வணங்கி
இனந்தழைக்கவோர்மகவெனக்கருள்கெனவிரந்தாள்.

(இ-ள்.) ஆயிரந் திருநாமமுடைய பெரியோன் எழுந்தருளிய திருக்கோவிலுட் புகுந்து, அடியார்களும் பூமியிலுள்ளாரும் வணங்கும்படி ஒப்பற்ற மாதவத்தோர்கள் உள்ளத்திற் பொருந்திய மாயப்பிரானைப் பலிபீடத்தினருகில் வணங்கி, "என் வமிசம் விர்த்தியாகும்படி ஒரு புதல்வனை எனக்கருள்வீரோ" என்று வேண்டினர். (எ-று.) (கஎ)

கஅ. தளவவெண்ணகைமயிலியல்கனவினிற்றகைசால்
துளவமால்புகுந்தளித்தனமகவெனத்துயர்தீர்ந்
திளவனம்பொருவரிவையும்பதிவயினெய்தா
அளவறிந்தறைதரற்கருமுவகைமிக்கமர்நாள்

(இ-ள்.) முல்லையையொத்த வெள்ளிய தந்தபந்தியையும் மயில்போற் சாயலையுமுடைய உடையநங்கையார் கனவில் பெருமைமிகுந்த திருத்துழாய் மாலையையணிந்த எம்பெருமான் தோன்றி, (உனக்குப்) "புத்திரனை யளித்தோம்" என்றுரைக்கத், துயரந்தீர்ந்து இளமையான அன்னம் போன்ற உடையநங்கையாரும் தம்மூரினிடத்தடைந்து, அளவறிந்து சொல்லுவதற்கரிய சந்தோஷமிகுந்து வாழும் நாளில் (எ-று.) (கஅ)

கசு. கருணைவாரிதியெனும்பெயர்க்கரியமால்கவினார்
உருவமாகியசேனைநாயகனுளமுவந்தே
பொருவினுன்மறைத்தமிழ்நவின்றுலகெலாம்புரப்பான்
அருணவாயிதழணங்கனுள்வயின்கருவடைந்தான்.

(இ-ள்.) கருணைக்கடலென்னும் பெயரையுடைய கரியமேனியனான பெருமானது அழகு நிறைந்த உருவமாகிய சேனைமுதலியார், திருவுளமுவந்து ஒப்பற்ற நான்கு வேதங்களைத் தமிழிற்சொல்லி உலகையெல்லாம் ரக்ஷிக்கும்படி, சிவந்த வாயிதழையுடைய தெய்வப்பெண்ணுக்குச் சமானமான உடையநங்கையாரிடத்துக் கர்ப்பத்தில் வந்தடைந்தனர். (எ-று.) (கசு)

உ0. நங்கையும்புகல்சேனைநாயகன்றிருநளினச்
செங்கைவேத்திரத்துரோமமுந்திகிரிபோற்றனமுஞ்
சங்கைநேர்தருவடிவமுமெம்பிரான்றனைபோற்
கொங்கைமேற்கணுந்தோன்றிடக்கருப்பமேகொண்டாள்.

(இ-ள்.) உடையநங்கையாரும், வெற்றியுடைய சேனைநாயகரது அழகிய தாமரைபோன்ற சிவந்த திருக்கையிலுள்ள பிரம்பு போன்ற உரோமவொழுங்கும், அவரது திருச்சக்கரம் போன்ற தனமும், அவரது திருச்சங்கம் போன்ற (வெண்மையான) வடிவமும், எம்பிரானைப் போல முலைக்கண்களுந் தோன்றும்படி, கர்ப்பங் கொண்டனர். (எ-று.) (உ0)

உக. வானகத்தொளிர்மின்னைநேர்மருங்குலும்வடிவுண்
டானதத்தகைமருங்குலிற்கலைநெகிழ்ந்தமிர்தந்
தானலர்ந்தசெவ்வாய்விளர்த்துண்டிசற்றுகிப்
பானலொத்தகண்குழிந்திடத்தளர்நடைபடைத்தாள்.

(இ-ள்.) ஆகாயத்தி லொளிவிடும் மின்னையொத்த (இதுவரையில் உருவிளங்காமல் நுட்பமான) இடையும் (இப்பொழுது) உருவுளதாயிற்று. அத்தகைய இடையில் ஆடையவிழ்ந்து, அமிர்தமுடைய சிவந்த வாய வெளுத்து, உணவு குறைந்து, நீலோற்பல மலர்போன்ற கண் குழிந்து தோன்றத், தளர்ந்த நடையைப் பெற்றனர். (எ-று.) (உக)

[ஆழ்வார் திருவவதாரம்.]

உஉ. கலியுகத்துநாற்பத்துமூன்றாந்தினங்கடிகா
மலியுமூரிமாதத்துவைகாசிநாண்மழைக்கோள்
பொலியுநற்றினங்கற்கடகந்துலாம்புகழ
ஒலியுடைக்கடலுலகெலாம்விளங்கவந்துதித்தான்.

(இ-ள்.) (சேனைமுதலியார்) கலியுகத்தின் நாற்பது மூன்றாந்தினமாகிய வாசனையுடைய சோலைகள் தளிர்க்கும் வைகாசிமாதத்தில் விசாகநக்ஷத்

திரத்தில் சுக்கிரவாரத்தில் கற்கடலக்கினத்தில் துலாராசியில் ஒலியை யுடைய கடல் சூழ்ந்த புகழையுடைய உலகமெல்லாம் விளங்க வந்து அவ தரித்தனர். (எ-று.) (௨௨)

வைகாசியில் விசாகமென்றதனால் பௌர்ணிமையுங்கொள்க.

௨௩. வலஞ்சுழன்றுதீவளர்ந்தமுத்தமிழிறன்மறையும்
நிலஙகிளர்ந்தகான்றளிர்த்தவானலர்மழைநிறைந்த
அலர்ந்ததந்தரதுந்துமிபரமதத்தவர்க்குங்
கலங்கிநெஞ்சிடந்துடித்தனபுயங்களுங்கண்ணும்.

(இ-ள்.) (வேதியர் வளர்க்கும்) தீ வலமாகச்சுழன்று வளர்ந்தன; முத்தமிழில் நான்கு வேதங்களும் பூமியில் உயர்ந்தன; காடுகள்தளிர்த்தன; ஆகாயத்தில் மலர்மாரி நிறைந்தன; தேவதுந்துமி ஒலித்தது; பிறசமயத் தவர்க்கும் மனங்கலங்கிப் புயங்களும் கண்களும் இடமாகத் துடித்தன. (எ-று.) (௨௩)

௨௪. தனயன்சூதகமனைவயின்றனிப்பரந்தாமன்
றனைவிறமேன்றிஞானச்சுவையருத்துபுதுறந்தான்
அனையின்பாறருமுலையுணுதழுகைநீத்தரிதாள்
நினைவிற்றுங்கலால்விழிதிறந்திலனருணிறைந்தோன்.

(இ-ள்.) (இங்ஙனமவதரித்த) அத்தனயரது சூதகமனையினிடத்து அத்துவிதியனான பரந்தாமன் விரைவாக எழுந்தருளி ஞானமிர்தத்தை யூட்டிச் சென்றனன். அதனால் (ஆன்மாக்களை உயவிக்க வேண்டி அவதரித்த) அருள்நிறைந்தவரான அத்தனயர் (தன்) அன்னையின் பாலைத்தரும் முலையையுண்ணாமலும் அழாமலும் பெருமானது திருவடிகளைத் தம் திரு வுள்ளத்திற் கொண்டிருத்தலால் திருக்கண்மலர் திறவாமலும் இருந்தனர். (எ-று) (௨௪)

௨௫. கலுழ்ந்திலன்றிருக்கண்மலர்திறந்திலன்கவினும்
மெலிந்திலன்சுதனெனவருட்காரியும்வினவாப்
பொலிந்துநின்றகோனருடெரிகிலமெனப்புன்கண்
நலிந்திடத்தளர்ந்தனனவன்றுயரியார்நவில்வார்.

(இ-ள்.) குமாரன் அழுதிலன்; திருக்கண்மலர் திறந்திலன்; திரு மேனியின்) அழகும் மெலிந்திலன் என்று (அவரைப்பெற்றுத் தந்த) அரு ளையுடைய காரியார் கேள்விப்பட்டுப், பொலிந்துநின்ற பிரானது திருவரு ளைத் தெரியோமென்றுரைத்துத், துன்பம் தம்மை வருத்தத் தளர்வடைந் தனர். (அப்போது) அவர் கொண்ட துயரத்தை யாவர் சொல்லவல்ல வர்கள். (எ-று.) (௨௫)

[உடையநங்கையார் இரங்கல்.]

(வேறொரு செய்யுட்குருபரம்பரையிற் கண்டது.)

**வேறு.**

† இன்னமுதக்குடமிரண்டா மெனவோங்கிமிகவிம்மி
மன்னுதிருமுலைப்பால்கள் பீரோடமனமிரங்கத்
தன்னுடையதிருமகனே முன்னிலையாய்த்தவமிருந்த
அன்னநடையுடையநங்கை யிவையிவைகளறைகின்றாள்.

## வேறு.

† தப்பாநிலையார் தவமேதமிழ்மாறு
அப்பாமுலையிரண்டும் விம்மிநாறுற்றுநிலேன்
ஒப்பாரில்லாதாய் சுரந்துபீரோடுகின்ற
திப்பாலருந்தாய்நா னென்பிழைத்தேனென்னமுதே.

† ஒக்கலைமேல்வைத்தோர் கரத்தாலுனைத்தாங்கித்
தக்கமுலையூட்டத் தவமுன்புசெய்யாதேன்
மக்கடமைப்பெற்ற மடவார்முகநோக்கி
வெட்கினேன்மைந்தா விதியினையனுனேனே.

† சீரார்பொருநைத் திருநாடனுன்றந்தை
நாராயணன்குறுங்கை நம்பிதிருமுன்றினின்
றேரார்தவமன் றியற்றியுனைப்பெற்றவளைப்
பாராயோவப்பாநின் பங்கயக்கண்டான்விழித்தே.

† மானேர்விழியார்கள் மக்களழத்தாலாட்டி
ஏனேனெனச்சென் றெடுத்துமுலைப்பாலளிப்ப
நானேதுசெய்தேனென் னம்பீயமுதமரர்
தேனேசுரந்த திருமுலைப்பாலுண்கிலையே.

† விண்ணோர்மதிபோல் விதியிலியேன்மைந்தாநீ
உண்ணுமுலைப்பால் பிதிர்போக்கவோங்கநறுந்
தண்ணாரருவித் திரள்போன்றதாரையையென்
கண்ணார்மணியே விழித்தொருகால்காண்கிலையே.

† நின்னுடையதாதை நினையீன்றசோபனத்தைத்
தென்னவனார்கேட்டோர் திருமாமணித்தொட்டில்
பொன்னுலகுமண்ணுலகும் போற்றவுரவிடுத்தான்
என்னுடையதெள்ளமுதே யிதைக்குறித்துநோக்கிலையே.

† ஏரார்திருப்பரிசா ரத்தினின்றுமென்றந்தை
சீராரொளிவீசுஞ் செம்பொன்மணித்தொட்டில்
பாராய்விடுத்தா னினக்கென்றேபாலகனே
ஓராயிரங்கதிரு மொவ்வாதிதனொளிக்கே.

† வேதவிதியா லெனைவேட்டுனைவிரும்பி
ஓதவரிய தவஞ்செய்துனையீன்ற
தாதையுனக்கமைத்த தண்டரளப்பூந்தொட்டில்
ஈதையுறநோக்கி யருளாயென்னின்னமுதே.

† இருக்காதிவேத மெடுத்தேத்திக்காண
உருக்காணுமென்பார் சிலருமையென்பார்
திருக்கால்கள்கைக ளுதறிச்சிறிச்சிறிதே
ஒருக்கால்மகனே யழுதாலுளனென்றே.

† செய்யகனிவா யமுதந்திரண்டொழுக
ஐயருதவிக் குறும்போடணர்ந்தொருநாட்
பொய்யனேன்கொங்கையுறும் புத்தமுதைநீயருந்த
மெய்யனேகாண விரும்புவிதியற்றேனே.

† விண்ணாடோயறிய மேதினியில்வாழ்வாரோ
பண்ணார்மறையே பகலோனே நாண்மதியே
பெண்ணாய்ப்பிறந்துமகப் பெற்றாரோயென்னைமுலை
உண்ணாப்புதல்வர்களு முண்டோவுலகத்தே.

† வாயாலழாதே மலசலமொன்றில்லாதே
தாயார்முலைப்பாலோர் சற்றுமருந்தாதே
ஓயாதிருந்தரற்று முற்றாளைக்காண்பாராச்
சேயாருமுண்டோ செகத்திலிவரல்லாதே.

† உள்ளார்மகிழ்ச்சி யுடையாய்குறுநகையாய்
விள்ளாய்கனிவாய் விழியாய்திருநயனங்
கொள்ளாய்நீயம்மமிறை கோடாதுன்பொன்மேனி
பிள்ளாயுன்னுண்ணினைவைப் பெற்றோர்க்குப்பேசாயே.

† பேய்க்கொளித்துக்காப்பிட்டுப் பெற்றேன்முலைவிம்மி
வாயக்கொளித்தையென்றால் மகனேயதுசெயயாய்
நோய்க்கொளித்தஞானத்தார் நோன்போவிதுநுவல்வாய
தாய்க்கொளித்தசொல்லு முளவோவென்றாவேந்தே.

† ஆழிநீர்வண்ண னருளோநான்முன்செய்த
ஊழிவினைதானோ வுலகத்தீரென்னுடைய
தோழியீர்மைந்தனழா னுண்ணானென்சொற்கேளான்
வாழியிதைநோக்கி வகுத்தெனக்குக்கூறீரோ.

† மெய்ச்சொற்குறியால் விளங்கியகமேதினியோர்
அச்சுதனாராகுமிவ னென்னிலைமன்றான்முன்னாட்
பச்சைகுழந்தைப் பருவத்திற்பூதனைதன்
நச்சுமுலையுண்டானென்ன ஞானமுலையுண்ணானே.

† எடுத்திருத்திவைத்தா லிருப்பானசையான்
படுத்தணையிற்சாயத்தாற் படுப்பான்புறநகரான்
அடுத்துமுலையுண்ணென் றணைத்தாலமுதருந்தான்
தொடுத்திவைசேர்மைந்தனையா னேதுரைப்பேனென்றோழீ.

† சப்பாணிகொட்டாய் தவழாய்தளர்நடையென்
அப்பாநடவா யமுதேபுறம்புல்காய்
இப்பார்முதலாய வீரேழுலகேத்தும்
ஒப்பாரிலாதாய்நா னெங்ஙனுயிர்வாழ்வனென்றாள்.

வேறு.

௨௬. தூய்தலாமைதுறந்தபின்றோற்றமும்
வீய்தலானதுநீத்துயர்மெய்ப்பதம்
ஈய்தலாரருளெந்தையையேதமே
காய்தலார்கதிராழியங்கையனை

(இ-ள்.) பரிசுத்தமல்லாத பிரகிருதி சம்பந்தத்தைத் துறந்தபிறகு பிறப்பும் இறப்பும் நிவர்த்தித்து உயர்ந்த மெய்ப்பதவியை யளிக்கும் அருளோடு கூடிய எம்பெருமானுக்கு, தோஷங்களை நீக்குதலையுடைய ஒளிபொருந்திய திருவாழியைத் திருக்கையிலேந்தினவனுக்கு, (எ-று.) (௨௬)

உஎ. ஊறருந்தவர்வானவரோதிமம்
ஏறயன்சிவனேமுதல்யாவருங்
கூறரும்பெயரீசனேக்கோதிலா
மாறனென்றுலகுத்தனர்நாமமே.

(இ-ள்.) இடையூறில்லாத தவத்தையுடையவர்கள் தேவர்கள் அன்ன வாகனமேறும் பிரமன் சிவன் முதலிய யாவரும் சொல்வதற்கரிய திருநாமத்தையுடைய ஈசனுக்குக் குற்றமில்லாத மாறனென்று திருநாமஞ்சாத்தினர். (எ-று.)

"கலௌதேவ: பராங்குச:" என்பதின்படி ஆழ்வார், எம்பெருமானது திருவவதார மெனவுங் கூறுவதுண்டு. நிக்ரஹாநுக்ரஹங்கள் கூடியிராது கேவலம் அநுக்ரஹமே திருவுருவமாகவந்த வேறேயொரு தசாவதாரமாக விளங்குவோர் ஆழ்வார் பதின்மரென்று பணித்தருள்வர் ஸ்ரீமத் வேதாந்த தேசிகர். இன்னும் ஆழ்வார்களருளிச்செயல்களைப்பற்றி, "செய்யதமிழ் மறையனைத்துந் தெளியவோதித் தெரியாத மறைநிலங்கள் தெரிகின்றோமே" என்றும் அருளிச்செயவர். ஆழ்வார் எம்பெருமானது திருவவதாரமென்பது கம்பநாட்டாழ்வானருளிச்செய்த சடகோபரந்தாதி முதலிய தமிழ் நூல்களாலும் நன்குவிளங்கும். (உஎ)

உஅ. அழிவின்ஞானவமிழ்தினையாதிநூல்
மொழியுநாசமின்முன்னவனல்கலால்
பழியிலானும்பருகுதல்பார்க்குதல்
ஒழியமோனரிலூமரின்வைகினன்.

(இ-ள்.) வேதத்தை (பிரமனுக்குச்) சொல்லியருளிய கெடுதலில்லாத முன்னவனாகிய பெருமான் அழிவில்லாத ஞானமாகிய அமிர்தத்தை அளித்தலினாலே பழியில்லாதவராகிய அக்குமாரரும், (பால்) உண்ணல் (கண் திறந்து) பார்த்தல் இன்றி, மௌனநிலையுடையார் போலவும் ஊமையரைப் போலவும் எழுந்தருளியிருந்தனர். (எ-று.) (உஅ)

உகூ. கண்டபேரருட்காரியிக்கான்முளை
கொண்டன்மேனியனென்னவுட்கொண்டுபார்
உண்டமாறிருக்கோயிலினுய்த்துமென்
றெண்டவாத்தன்மனைவிக்கியம்பினன்.

(இ-ள்.) (இதனைக்) கண்ட பேரருளையுடைய காரியாரும், இக்குமாரன் கொண்டல் மேனியனை பெருமானுகுமென்று எண்ணிப், பூமியை யுண்ட பொலிந்துநின்றபிரானது திருக்கோயிலிற் கொண்டுபோய் விடுவோமென்று நினைத்து (அதனை, அக்குமாரர் விஷயத்தில்) விசாரம் நீங்காத தன் மனைவிக்குச் சொல்லினர். (எ-று.) (உகூ)

௩0. காதலன்சொன்மறுதவக்காரிகை
மாதவக்கொழுந்தாகியமைந்தனைச்
சேதலர்க்கரங்கொண்டுபின்செல்லவே
வேதநாயகன்கோயிலைமேயினான்.

(இ-ள்.) கணவன் சொல்லைக்கடவாத அவ்வுடையநங்கையார், பெருந்தவக் கொழுந்தாகிய அம்மைந்தனைச் சிவந்த மலர்போன்ற தமது திருக்கைகளிற்

கொண்டு பின்னேசெல்ல, வேதப்பிரதிபாத்தியனான பொலிந்து நின்றபிரானது திருக்கோயிலையடைந்தனர். (எ-று.) (௯0)

௯௧. வந்தகாரியுந்தேவியுமாமறை
அந்தமாலைவலம்வந்தடிதொழாக்
கந்தமார்துளவப்புயக்கண்ணநீ
தந்தமால்வரஞ்சாலவுநன்றென

(இ-ள்.) (அங்ஙனம்) வந்த காரியாரும் அவரது திருத்தேவியாரான உடையநங்கையாரும் பெருமை பொருந்திய வேதாந்தப் பொருளாகிய பெருமானை வலம்வந்து அவனது திருவடிவணங்கி "வாசனையுடைய திருத்துழாய் மாலையணிந்த புயங்களையுடைய கண்ணனே! நீயளித்த பெரிய வரம் மிகவும் நன்றாயிருந்தது!" என்றுகூறி (எ-று.) (௯௧)

இதுமுதல் மூன்று செய்யுளுங் குளகம். எனவருந்தி என்றுமாழ்கியிறையடி நீங்கலார் எனமுடிக்க.

௯௨. வருந்திமாயநின்மாயையைநீங்கலார்
திருந்திவேதன்சிவன்முதற்றேவரும்
பொருந்திலாவைம்புலனொடும்பூதலத்
திருந்திம்மானிடரோகடந்தேறுவார்.

(இ-ள்.) வருத்தமடைந்து, "மாயனே! நினது மாயையைப் பிரமன் சிவன் முதலிய தேவரும் திருந்தி நீங்கார்கள். (ஆனபோது) பொருந்தாத ஐம்புலன்களோடும் பூமியினிடத்திலிருந்து இம்மானிடரோ அதனைகடந்து ஏறுவார்கள்?" (எ-று.) (௯௨.)

௯௩. என்றுமாழ்கியிறையடிநீங்கலார்
ஒன்றுமார்வத்துலகமுண்டோனுடன்
சென்றுசேடன்சினகரத்துத்தரம்
நின்றுளான்புளியாயவணோர்ந்தனன்.

(இ-ள்.) என்றுரைத்து மயங்கிப் பெருமான் திருவடிகளை விட்டு நீங்காராயினர். (இதற்கு முன்பு) ஆதிசேஷர் சென்று பொருந்திய விருப்பத்துடன் உலகமுண்ட பெருமானுடனே அத்திருக்கோயிலின் உத்தரதிக்கில் திருப்புளியாழ்வாராய் எழுந்தருளியிருந்தனர். காரியாரும் அவ்விடத்தே சேர்ந்தவராய், (எ-று.) (௯௩)

௯௪. அத்திருப்புளிநீழலிலையனை
வைத்திருப்பமெனத்திருமாமலர்க்
கொத்திருக்குங்குழைமுகக்கொங்கைவாள்
ஒத்திருக்கும்விழியொடுறைந்தனன்.

(இ-ள்.) அந்தத்திருப்புளியின் நிழலில் ஐயனை வைத்திருப்போமென்று அழகிய பெருமைபொருந்திய மலர்க்கொத்துக்கள் விளங்கும் குழையோடுகூடிய முகத்தையும் கொங்கையையும் வாளொத்திருக்கும் விழியையுமுடைய உடையநங்கையாரோடு இருந்தனர். (எ-று.) (௯௪)

வேறு.

௯௫. நோக்கிமைந்தனையிவனைநாமகவெனநுவலும்
பாக்கியங்குருகோனியைந்திலனெனப்பகரா

வாக்கினிற்புலம்பிசையெழக்கண்கணீர்வாரக்
காக்கிலாத்துயர்க்கடற்படிந்திரங்குறுங்காலை

(இ-ள்.) (பிறகு) மைந்தனை நோக்கி, இவனை நாம் (நமது) மைந்தனென்று சொல்லிக்கொள்ளும் பாக்கியத்துக்குக் குருகாபுரியிலெழுந்தருளிய பொலிந்துநின்றபிரான் இசைந்திலன் எனச்சொல்லி, (தங்கள்) வாக்கில் அழுகை யோசையுண்டாகக், கண்களில் நீரொழுகத், தடுக்கவொண்ணாத துக்கமாகிற சமுத்திரத்திற் படிந்து வருந்தும்போது, (எ-று.) (ருரு)

ருசா. துன்பமுற்றுளந்தளரன்மின்றனயனாற்சுருதி
என்பதைத்தமிழ்நுவன்றுலகுயிர்க்கெலாமெளிதில்
தன்பதத்தைமாலுதவவுட்கருதலாற்றனிவாழ்
வன்பருக்கருள்சேனைநாயகனவதரித்தான்.

(இ-ள்.) "துன்பமடைந்து உள்ளந் தளரவேண்டா. (உங்கள்) குமாரனாலே சுருதியென்பதைத் தமிழிலருளிச்செய்வித்து, உலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் எளிதில் தனது பரமபதத்தைப் பெருமான் அருளுவதாகத் திருவுளங் கொண்டிருத்தலால், ஒப்பற்ற வாழ்வை அடியார்களுக்கு அருளும் சேனைமுதலியார் (உங்களிடம்) அவதாரஞ்செய்தனர்". (எ-று.) (ருசா)

ருஎ. என்னவானிலோர்வாணிசொற்றலுமயிலியற்கார்
அன்னவார்குழலணங்குடன்காரியுமதுகேட்
டுன்னலாவருரொழித்துமைந்தனைவிடுத்தொருவார்
கன்னனேரமுந்தனயர்மேனசையெவர்கடந்தார்.

(இ-ள்.) என்று ஆகாயத்தில் ஒரு (அசரீரி) வாக்குச் சொல்லுதலும், மயில்போற் சாயலும் மேகம்போன்ற நீண்ட கூந்தலுமுடைய உடைய நங்கையாரோடு காரியாரும் அதனைக் கேள்வியுற்று, (இப்படிப்பட்டதென்று), நினைப்பதற்கரிய துன்பத்தை யொழித்து (தம்) மைந்தனை விட்டுநீங்காராயினர். நொடிப்பொழுதும் தங்கள் மக்கள்மேலுள்ள ஆசையைக் கடந்தவர்கள் யார்? (ஒருவருமில்லையே.) (எ-று.) (ருஎ)

ருஅ. மைந்தனுந்திருமாறனதுதயநாண்மருவித்
தந்தஞானமாமமிழ்தினாற்பசிப்பிணிதவிர்ந்தே
நந்தவாவொடுசலமலமின்றிநாணாளும்
பைந்தடங்கடற்பரிதிபோல்விளங்குருப்படைத்தான்.

(இ-ள்.) அம்மைந்தரும், தமது அவதார தினத்தில் பெருமானெழுந்தருளி அளித்த ஞானமாகிய அமிர்தத்தினாலே, பசிப்பிணி நீங்கி, (இதர விஷயங்களில்) உண்டாகும் ஆசையில்லாதவராய்ச், சலமலங்களின்றி, நாள்தோறும் பசியநிறமுள்ள விசாலமான கடலிற்றோன்றும் அழகிய சூரியனைப்போல் விளங்கும் திருமேனியையுடையவராயினர். (எ-று.) (ருஅ)

ருகூ. இருந்துபின்றவழ்ந்தெழுந்துநாட்டளர்நடையிட்டுத்
திருந்துமாறிருக்கோயின்மானத்தையோர்திகிரி
பொருந்துதேர்க்கதிர்பொன்மலைவலம்வரல்பொருவ
வருந்தலின்றியேவலம்வராமதியெனவளர்ந்தான்.

(இ-ள்.) அதன் (பின்னர்) உட்கார்ந்து, அப்பால் தவழ்ந்து எழுந்து, புதிய தளர்நடையிட்டுத், திருத்தமுடைய பெருமானெழுந்தருளிய திருக்கோயில்

விமானத்தை ஒற்றைச் சக்கரம் பூண்ட தேரையுடைய சூரியன் மகமேருவை வலம்வருதல்போல வருத்தமின்றி வலம்வந்து சந்திரனைப்போல வளர்ந்தருளினர். (எ-று.) (௩௯)

௪0. காலமாறிருதிங்கண்மூன்றிம்முறைகழித்துச்
சீலமார்ந்துமாறிருவடிதருந்தவஞ்செய்வான்
கோலமால்வரைமுழைபுகுங்கோளரிக்குருளை
போலமாசகறிருப்புளிப்பொதும்பினுட்புகுந்தான்.

(இ-ள்.) இவ்விதமாக மூன்றுவருஷகாலம் கழித்துச், சீலமுடையவராய்ப், பெருமான் திருவடிகளை யளிக்கும் தவஞ் செய்யும்படி, அழகிய பெரிய மலைக்குகையிற் பிரவேசிக்கும் பலம் பொருந்திய சிங்கக்குட்டியைப் போலக் குற்றமற்ற திருப்புளியாழ்வாரது பொந்திற் பிரவேசித்தனர். (எ-று.) (௪0)

௪௧. அன்றுகாறுமைந்தனைவிடுத்தகல்கிலாராகி
ஒன்றுகாரியுமனைவியுந்தனயனையொருவாச்
சென்றுகாமர்பொற்றிருமனைசேர்ந்தனர்சிறந்தார்
இன்றுகாதரந்தொலைந்ததென்றுலகெலாமேத்த.

(இ-ள்.) (அவதரித்தது முதல்) அன்று வரையில் குமாரனை விட்டு நீங்காதவராகிக் கூடியிருந்த காரியாரும் அவர்மனைவி உடையநங்கையாரும், தம் தனயனை விட்டுச் சென்று, அழகிய பொன்மயமான தங்கள் திருமாளிகையைச் சேர்ந்து, இன்று நமது அச்சம் தொலைந்ததென்று உலகமெல்லாம் துதிக்கும்படி சிறந்தார்கள். (எ-று.) (௪௧)

௪௨. அய்யனுஞ்சிரமடர்பணையாப்பொறியலராப்
பையடர்ந்தபைந்தழையதாநாத்தளிர்பயில்வாச்
செய்யபற்றிரள்பலமதாவுடலமுஞ்செறிவேர்
மெய்யதாவளரனந்தனுந்திருப்புளிவிளங்க

(இ-ள்.) (நமது) பரமாசார்யரான ஆழ்வாரும், சிரங்களானவை நெருங்கிய கிளைகளாகவும், படப்பொறிகளானவை மலராகவும், படங்களானவை நெருங்கிய பசுமையான தழையாகவும், நாக்கள் தளிரிருத்தலாகவும், செம்மையான பற்கூட்டங்களானவை பழமாகவும், மரமும் வேரும் சரீரமாகவும் வளரும் திருவனந்தாழ்வானுகிற திருப்புளியாழ்வார் விளங்கும்படி. (எ-று.)

அய்யனும் என்பது அடுத்த செய்யுளில் தவம்புரிந்தான் என்பதைக் கொண்டு முடிவதறிக. (௪௨)

௪௩. இருந்துகண்முகிழ்த்தெம்பிரான்பதமலரிதயம்
பொருந்துறத்திருக்கரங்குவித்தருந்தவம்புரிந்தான்
திருந்துபொற்புயக்கருடன்மேற்றிருவொடுந்திளைப்பார்
அருந்துமைப்புயல்வண்ணனுமவன்மருங்கணுகா

(இ-ள்.) எழுந்தருளியிருந்து, திருக்கண்மலர்களை மூடி, எம்பெருமானது திருவடித்தாமரைகள் தமது திருவுள்ளத்திற் பொருந்தத் திருக்கைகள் குவித்து, அரியதவஞ் செய்தருளினர். (அப்போது) திருத்தமான அழகிய புயங்களை

யுடைய கருடாழ்வான் மீது, கடல்சூழ்ந்த பூமியையுண்ட கரிய மேகவண்ணனை பெருமானும், பெரிய பிராட்டியாரோடு ஆழ்வாரிடத்துக்குவந்து, (எ-று.) (சஙு)

சச. பகலவர்பலகோடிபோல்விளங்குதன்படிவத்
தகலமுந்தெளிந்தறிவருமணியுருவழகும்
விகலமின்றிமுற்றோற்றலான்மாறனும்விழித்தே
புகலருந்தவத்துருவனிற்பணிந்தடிபுகழ்ந்தான்.

(இ-ள்.) பலகோடி சூரியனைப்போல் விளங்கும் தனது திருமேனியின் விரிவும், தெளிந்து அறிவதற்கரிதான நீலமணிபோன்ற உருவத்தினழகும் குறைவுபடாமல் (தமக்கு) முன்னே பிரத்தியக்ஷமானதனால், ஆழ்வாரும் விழித்துப்பார்த்துச், சொல்வதற்கரிய தவத்தையுடைய துருவனைப் போலப் பெருமான் திருவடியைப் பணிந்து துதித்தனர். (எ-று.) (சச)

துருவசரித்திரத்தைப் பாகவதபுராணத்திற் காண்க.

வேறு.

சரு. அருந்தவரமரர்போற்றவளக்கரோரகங்கைகொண்ட
பெருந்தவன்றமிழ்வேதத்திற்பிறங்கவப் பெரியோனுள்ளத்
திருந்தஞரகற்றியெஞ்சாமதியளித்திருமுத்திங்கள்
மருந்தமரருக்கன்றீந்தோன்மறையெலாம்வடித்துச்சொற்றான்.

(இ-ள்.) அரியதவசிகளும் தேவர்களும் துதிக்கச் சமுத்திரத்தைத் தமது ஒரு உள்ளங்கையிற் கொண்ட பெருந்தவத்தையுடையவராகிய அகஸ்தியர் வளர்த்த தமிழானது வேதத்தினும் விழுமிதாய் விளங்கும்படி, அந்தப் பெரியோராகிய ஆழ்வாரது திருவுள்ளத்தெழுந்தருளியிருந்து, அஞ்ஞானத்தை யழித்துக் குறைவுபடாத ஞானத்தைக் கொடுத்து, அன்று அமிர்தத்தைத் தேவர்களுக்கு அளித்தவனை பெருமான், சகலவேதங்களையும் ஆறுமாத காலம் வடித்தெடுத்துச் சொல்லியருளினன். (எ-று.) (சரு)

சசா. கூறருஞ்சுருதிநான்குந்தமிழினிற்கூறியார்க்கும்
பேறருங்கதிஞாலத்தோர்க்குதவெனுப்பெயர்ந்தான்பின்னர்
மாறனும்பரிதிபோலும்வடிவொடுமறைகளுன்கும்
ஊறருஞானத்தோடும்புளிவயினுறைந்தானன்றே.

(இ-ள்.) (பின்னர்) சொல்வதற்கரிய நான்கு வேதங்களையுந் தமிழிற் சொல்லி, யார்க்கும் பெறுவதற்கரிதான பரமபதத்தைப் பூமியிலுள்ளவர்கட்குக் கொடுப்பீராக வென்று பெருமான் எழுந்தருளினன். அதன் பின்னர் ஆழ்வாரும், சூரியனை யொத்திருக்கும் வடிவத்தோடும், நான்கு வேதங்களும் சுரக்கும் அருமையான ஞானத்தோடும் திருப்புளியாழ்வாரடியி லெழுந்தருளியிருந்தனர். (எ-று.) (சசா)

சஎ. அன்னவன்றமிழ்வேதத்திற்கதிகமாவவனிமீதே
மன்னவிந்திரைவாழ்மார்பனருச்சனைவடிவிற்கெல்லாம்
முன்னவனரங்கத்தீசன்முதுவயிணவனுமுற்சேர்
துன்னருந்தவத்தாயென்மேற்றமிழினிதுரைத்தியென்றான்.

(இ-ள்.) அப்படிப்பட்டவரான ஆழ்வாரது தமிழ்வேதத்திற்கென்றே பூமியின் மீது அதிகமாய்த் (தான்) இருக்கும்படி, பெரியபிராட்டியார் நித்தியவாசஞ்செய்யும் திருமார்பையுடைய பெருமானது அர்ச்சாவதாரங்களுக்கெல்லாம் முற்பட்டவனான ஸ்ரீரங்கநாதன், (ஒரு) முதுமைப்பருவமுள்ள ஸ்ரீவைஷ்ணவனாகி (ஆழ்வார்) முன்பு சேர்ந்து, "கிட்டுதற்கரிய தவத்தையுடையீர்! என்மீது தமிழ்ப்பாடலை யினிதாக அருளிச்செயவீராக" என்றான். (எ-று.) (சஎ)

சஅ. விழிமுகிழ்த்திருகைகூப்பிமவுனியாய்விளங்கியோகம்
ஒழிவிலாதுறைந்துளானுமியாவனீயுரையென்றோத
அழிவிலாப்பதத்தினானுமடியனேனரங்கதாதன்
பழியிலாயெனவன்றனைப்பலமுறைபழிச்சிநின்றான்.

(இ-ள்.) திருக்கண்மலர்கள் மூடி, இருகைகள் கூப்பி, மவுனியாகி விளங்கி, யோகத்தில் ஒழியாது நிற்பவரான ஆழ்வாரும், நீயாவன்? சொல்வாயாகவென்று கூற, அழிவுபடாத பதவியையுடைய பெருமான், பழியிலாதீர்! அடியேன் அரங்கதாசனெனறு சொல்ல, ஆழ்வார் அந்தப்பெருமானைப் பலமுறையுந் துதித்து நின்றனர். (மங்களாசாசனஞ் செயதனர்.) (எ-று.)

திருவாய்மொழி, தீர்க்கசரணாகதி என்னப்பெற்று மந்த்ரரத்நமாகிய த்வயத்தின் விவரணமாயிருப்பதனால் இதனை யருளிச்செயயுமவர்களும் செவிசாத்துமவர்களும் ஆசரிக்கவேண்டும் நியமநத்தைக் கணிசித்தே திருவரங்கநகரப்பன் 'அடியனேனரங்கதாதன்' என்று அடிமை கூறி, ஆழ்வார் திருப்பவளச்சோதிவாய்திறந்து பாடியருளப்பெறறனனென்றறிக. ருஉ-ம் பாட்டில் 'அருந்தமிழடிமை நம்போற் புகல்பவர்க்கிசைத்தி' என்று அப்பெருமான் நியமித்ததும், ருக-ம் பாட்டில் 'யான் வரதராஜன்' என்றருளிச் செயத அத்திகிரியருளாளனை ஆழ்வார் பாடிப்புகழாமையும் இந்நியதிபற்றியேயென்க. இதனால் அவ்வரும்பெறற் பொருளைப் பெறத்தக்காரினானெனவும், தகாதாரினானெனவும் எம்பெருமானே வேறுவேறு விதமாயிருந்து வெளிப்படுத்தினனென்றுணர்ந்துகொள்க. இந்நியதி யுண்மையென்பதனை ஜகதாசார்யரான ஸ்வாமி எம்பெருமானார் ஒருக்கால் திருக்குறுங்குடி நம்பியைச் சேவித்தபோது அப்பெருமான் * * * * "நீரித்தனை பேரையும் எங்ஙனே திருத்தினதென்று கேட்டருள, உடையவரும், தேவர் கேட்கும் க்ரமத்திலே கேட்கில் சொல்லுகிறோமென்னத், திருக்குறுங்குடி நம்பியும் தம் திவ்யஸிம்ஹாஸநத்தினின்று மிறங்கியருளி, ரத்நகம்பளத்திலெழுந்தருளியிருந்து, இவருக்கொரு ஆஸநத்தையுமிடுவிக்க, அதிலே ஸ்வாசார்யரான பெரியநம்பி யெழுந்தருளியிருக்கிறதாகப் பாவித்துக்கொண்டு, தாம் நிலத்திலேயிருந்து, திருக்குறுங்குடிநம்பி திருச்செவியிலே * * * * த்வயத்தை யநுஸந்தித்தருள, நம்பியும் போரவுகந்தருளி ராமாநுசனையுடையோம் என்றருளிச்செயய" என்று குருபரம்பராப்ரபாவத்தில் ஸ்ரீ இளையாழ்வார் வைபவத்தில் போந்த வசனங்களாலறிந்துகொள்க. (சஅ)

திருவாய்மொழி, த்வயமந்த்ர விவரணமென்பதனைப் பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த "ஸாரஸங்க்ரஹம்" என்னுங் கிரந்தத்திற் காண்க.

சகூ. அத்தனும்விழித்துநோக்கியரங்கநாயகனீயாயின்
சுத்தநீர்த்திருக்காவேரியரவணைசுருதிநான்காம்

உத்தமமுடி விமானம்பெட்டகமுயர்பொற்கோயில்
இத்தகவொடுநின்கோலங்காட்டுதியெனக்கிண்டென்றான்.

(இ-ள்.) (பின்னர்) ஆழ்வாரும் விழித்துக் கடாக்ஷித்து, நீ அரங்கநாயகனுயின், பரிசுத்தமான தீர்த்தத்தையுடைய திருக்காவேரியும், சேஷசயனமும், நான்கு வேதமாகிய உத்தமமான சிகரங்களையுடைய பிரணவாகார விமானமும், பெட்டகம்போலவுயர்ந்த பொன்மயமான திருக்கோயிலுமாகிய இந்த வைபவத்தோடு நினது திருக்கோலத்தை எனக்கு இங்குக் காட்டுவாயாகவென்றார். (எ-று.) (சகூ)

ருo. திதியைமுன்றிரியச்செய்ததேவனுந்திருக்காவேரி
நதியதனடுவுட்கோயினவமணிவிமானஞானம்
பொதியணியரவின்பாயல்புண்டரீகங்கள்பூத்த
முதியநீண்முகிலின்கோலங்காட்டவிம்முனியுங்கண்டான்.

(இ-ள்.) முற்காலத்தில் திதியைத் திரியும்படி செய்த பெருமானும் திருக்காவேரிநதியும் அதனிடையில் திருக்கோயிலும் நவமணிகளிழைத்த பிரணவாகார விமானமும், ஞானம் பொருந்திய அழகிய ஆதிசேஷசயனமும், தாமரைகள் பூத்திருக்கும் பழமையான நீண்ட மேகம்போன்ற திருக்கோலமும் ஆகிய இவைகளைக் காட்ட மநநசீலரான ஆழ்வாரும் தரிசித்தார், (எ-று.)

திதியைத் திரியச்செய்ததாவது :—பாண்டவர்களும் துரியோதனாதியரும் யுத்தத்துக் கொருப்பட்டபோது துரியோதனன் சகாதேவனிடம் வந்து தருமராசன் தலையைக் கொய்யக்கூடிய தக்க முகூர்த்தகாலம் நிர்ணயித்துக் கொடுக்கக்கேட்டனன். சத்தியத்தைக் கடைப்பிடித்த சகாதேவன் அங்ஙனமே முகூர்த்த நிர்ணயம் பண்ணிக்கொடுத்தனன். பாண்டவ சகாயனை கண்ணனெம்பெருமான் சதுர்த்தசியில் தர்ப்பணம் விட்டுத் திதியை மாறுடப்பண்ணித் தருமராசன் தலைபோகாமல் செய்து பாண்டவர்களைக் காத்தருளினன் என்பதாம். (ருo)

ருக. களித்திடவுளமெய்போர்ப்பப்புளகநீர்கமலக்கண்ணீர்
துளித்திடத்தொழுதுஞானத்தொடைத்தமிழ்ச்சுருதியாற்பார்
அளித்திடுமுகிலைக்கோயிற்கதிபனையழுங்குற்றந்நாள்
விளித்திடுமிபங்காத்தோனைப்பாடினன்விழுமமில்லான்.

(இ-ள்.) திருவுள்ளங்களிக்கவும், திருமேனியிற் புளகம் போர்க்கவும், திருக்கண்மலர்களில் ஆநந்தபாஷ்பம் துளிக்கவும் வணங்கித், தாழ்வில்லாத ஆழ்வார், ஞானமயமான தமிழ்வேதப்பாக்களாலே, உலகத்தை ரக்ஷிக்கும் மேகம்போன்ற பெருமானை ஸ்ரீரங்கநாதனை அக்காலத்தில் வருந்தியழைத்த கஜேந்திராழ்வானைக் காத்த பெருமானைப்பாடியருளினர். (எ-று.) (ருக)

ருஉ. அகமகிழ்ந்தரங்கத்தீசனருந்தமிழடிமைநம்போற்
புகல்பவர்களிசைத்தியென்னுப்பொருவில்பொற்கோயில்புக்கான்
தகவுயர்கருடவெற்பின்முதல்வனுஞ்சார்ந்தம்மாறன்
பகர்முறைவடிவங்காட்டியடிமைசொற்றணிந்தான்பாடல்.

(இ-ள்.) அரங்கநகரப்பன் திருவுள்ளமகிழ்ந்து நம்மைப்போல் அடிமை சொல்வார்க்கு அரிய தமிழை யருளுவீராக வென்று (தனது) ஒப்பில்லாத திருக்கோயிலுக் செழுந்தருளினன். பெருமைமிகுந்த கருடவெற்பான

திருமலையிலெழுந்தருளியிருக்கும் காரணபூதனான பெருமானும் எழுந்தருளி, அவ்வாழ்வார் அருளிச்செய்தபடி (தனது) ஸ்வரூபத்தைக் காட்டி அடிமையையருளிச்செய்து, (ஆழ்வாரருளிச்செய்த) பாடலை யணிந்துகொண்டனன். (எ-று.) (௫௨)

௫௩. மறைநுவலகிரிசன்வந்தியான்வரதராசன்
அறைகுதிகவியென்றேதவாசர்மீதறையோமென்று
நிறைதவன்மறுப்பப்பின்னரடிமையங்கெடியோன்கூற
இறைவிழிதிறத்தல்பேசலின்றியேயிருந்தான்மாறன்.

(இ-ள்.) வேதப்பிரதிபாத்தியனான சரிகிரியிலெழுந்தருளிய தேவராஜப்பெருமான் எழுந்தருளி, நான் வரதராஜன், (என்மேற்) கவிசொல்லுக வென்று கூற, நிறைந்த தவத்தையுடைய ஆழ்வார், அரசர்மீது (கவி) சொல்லோம் என்றுமறுக்கப், பின்னர் அப்பெருமான் அடிமையைக்கூற, ஆழ்வார் (முதலில் தன்னை ராஜன் என வெளியிட்டமையால்) சிறிதுங் கண்விழித்தலும் பேசுதலும் இன்றியே யிருந்தனர். (எ-று.) (௫௩)

௫௪. நந்திமிர்திருக்காவேரிநதியுமந்நதியின்றென்பால்
மந்திரத்தனந்தன்மேற்கண்வளர்திருவுருவுங்காட்டிச்
செந்திருக்குடந்தையாராவமுதனுந்தேவதேவன்
முந்தியேயடிமைகூறிமுதுதமிழ்ப்பாடல்கொண்டான்.

(இ-ள்.) சங்குகள் சத்திக்கும் திருக்காவேரிநதியையும் அந்த நதியின் தென்புறத்தில் திருக்கோயிலில் திருவனந்தாழ்வான்மீது திருக்கண்வளரும் திருவடிவையுங் காட்டிச், செம்மையான திருக்குடந்தை ஆராவமுதனான தேவதேவன், ஆழ்வாருக்கு முந்திவந்து அடிமை கூறிப், பழமையான தமிழ்ப்பாடலைக் கொண்டனன். (எ-று.) (௫௪)

௫௫. உறந்தைமாறஞ்சையன்பில்கரம்பனூருயர்வேளுக்கை
சிறந்தவெள்ளறைபுள்ளம்பூதங்குடிதிருப்பேராதை
அறந்திகழ்புலியூர்சேறைகண்டியூராலிநாகை
பிறந்தைதிரழுந்தூரிந்தளூர்திருககூடலூரே

(இ-ள்.) திருவுறையூர், உயர்ந்த திருத்தஞ்சைமாமணிக்கோயில், திருவன்பில், திருக்கரம்பனூர், உயர்ந்த திருவேளுக்கை, சிறப்புடைய திருவெள்ளறை, திருப்புள்ளம்பூதங்குடி, திருப்பேர்நகர், திருவாதனூர், தருமம் விளங்கும் திருசிறுப்புலியூர், திருச்சேறை, திருக்கண்டியூர், திருவாலித்திருநகரி, திருநாகை, பிறப்புநீங்கும திருவழுந்தூர், திருவிந்தளூர், திருக்கூடல் என்னும் திவ்வியதேசம். (எ-று.) (௫௫)

௫௬. கூடலூர்வில்லிபுத்தூர்குருகைசெங்குன்றூர்கோளூர்
வீடருணறையூராறன்விளைதிருமெய்யம்வெஃகா
ஏடலர்ப்பொழில்சூழ்கோவல்பிரிதிவிற்றுவக்கோடெவ்வுள்
பாடகந்திருவண்வண்டூர்கவித்தலம்பாரத்தன்பள்ளி

(இ-ள்.) திருக்கூடலூர், ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்குருகூர், திருச்செங்குன்றூர், திருக்கோளூர், முத்தியை யளிக்கும் திருநறையூர், திருவாறன்விளை, திருமெய்யம், திருவெஃகா, இதழ்களையுடைய மலர்ச்சோலைகள் சூழ்ந்த

திருக்கோவலூர், திருப்பிரிதி, திருவிற்றுவக்கோடு, திருவெவ்வுளூர், திருப்பாடகம், திருவண்வண்டூர், திருக்கவித்தலம், திருப்பார்த்தன்பள்ளி, (எ-று.)

௫எ. ஊரகங்கடிகைகள்வனூர்திருப்புலியூர்மோகூர்
நீரகங்குளந்தைமூட்டம்புளிங்குடிநின்றவூர்வாழ்
காரகம்வல்லவாழ்சீர்க்கண்ணங்குடிகண்ணமங்கை
கூரகழ்த்திருத்தண்காலூர்காவைசெம்பொன்செய்கோயில்

(இ-ள்.) திருவூரகம், திருக்கடிகை, திருக்கள்வனூர், திருப்புலியூர், திருமோகூர், திருநீரகம், திருக்குளந்தை, ஸ்ரீமுஷ்ணம், திருப்புளிங்குடி, திருநின்றவூர், வாழ்வையுடைய திருக்காரகம், திருவல்லவாழ், சிறப்பையுடைய திருக்கண்ணங்குடி, திருக்கண்ணமங்கை, உயர்ந்த அகழியையுடைய திருத்தண்காலூர், குளிர்ந்த சோலையையுடைய அழகிய திருச்செம்பொன்செய்கோயில், (எ-று.) (௫எ)

௫அ. திருமணிக்கூடந்தெற்றியம்பலஞ்சீவைகுந்தம்
பொருவில்சித்திரகூடஞ்சீராமவிண்ணகரம்புன்மை
ஒருவிடவெந்தைவட்டபுயகரமுயர்கார்வானம்
அருடிருநாவாய்வாட்டாறயிந்திரபுரமயோத்தி

(இ-ள்.) திருமணிக்கூடம், திருத்தெற்றியம்பலம், ஸ்ரீவைகுண்டம், ஒப்பற்ற திருச்சித்திரகூடம், சீராமவிண்ணகரம், புன்மையை நீக்கும் திருவிடவெந்தை, திருவட்டபுயகரம், உயர்ந்த திருக்கார்வானம், அருளையுடைய திருநாவாய, திருவாட்டாறு, திருவயிந்தரபுரம், திருவயோத்தி, (எ-று.) (௫அ)

௫௯. தொலைவில்லிமங்கைதேவன்றொகைமுடித்துங்கசிங்க
மலைகடன்மல்லைகண்ணைமாலிருஞ்சோலைபேரை
கலைநிலாத்திங்கட்டுண்டங்காவளம்பாடிகங்கை
தலைமிசைத்தரித்தோன்போற்றும்வதரியாசிரமத்தானம்

(இ-ள்.) திருத்தொலைவில்லிமங்கலம், திருத்தேவனூர்தொகை, உன்னதமான சிகரத்தையுடைய திருச்சிங்கவேள்குன்றம், திருக்கடன்மல்லை, திருக்கண்ணபுரம், திருமாலிருஞ்சோலைமலை, திருப்பேர்நகர், கலைகளையுடைய திருநிலாத் திங்கட்டுண்டம், திருக்காவளம்பாடி, கங்கையைத் தலையின்மீது தரித்த சிவபிரான்போற்றும் ஸ்ரீவதரியாசிரமமாகிய திவ்வியதேசம், (எ-று.)

௬0. விளங்குசாளக்கிராமநைமிசாரணியம்வெள்ளக்
குளந்திருவல்லிக்கேணிகுறுங்குடிகோட்டிமூழிக்
களங்கடித்தானநாங்கூர்காட்கரைகங்கைக்கண்டம்
வளங்கொணீர்மலைவைகுந்தவிண்ணகர்வளராய்ப்பாடி

(இ-ள்.) விளக்கமுடைய ஸ்ரீசாளக்கிராமம், ஸ்ரீநைமிசாரணியம், திருவெள்ளக்குளம், திருவல்லிக்கேணி, திருக்குறுங்குடி, திருக்கோட்டியூர், திருமூழிக்களம், திருக்கடித்தானம், திருநாங்கூர், திருக்காட்கரை, கங்கைக்கரைக்கண்டமென்னுங் கடிநகர், வளப்பமுடைய திருநீர்மலை, ஸ்ரீவைகுந்தம், திருவிண்ணகரம், விருத்தியையுடைய திருவாய்ப்பாடி, (எ-று.) (௬0)

௬௧. சீவரமங்கைமாநந்திபுரவிண்ணகரந்தெய்வப்
பாவலர்புகழனந்தபுரம்பரிசாரம்பாரில்

மாவடமதுரைவெள்ளியங்குடிதுவரைவண்பூங்
காவளர்திருப்புல்லாணிவிண்ணகர்திருத்தண்காவே.

(இ-ள்) ஸ்ரீவரமங்கை, பெருமைபொருந்திய திருநந்திபுரவிண்ணகரம், தெய்வத்தன்மையுள்ள பாவலர் புகழும் தருவனந்தபுரம், திருவண்பரிசாரம், பூமியினிடத்துப் பெருமையுள்ள திருவடமதுரை, திருவெள்ளியங்குடி, திருத்துவாரகை, வளப்பமான பூஞ்சோலைகள் வளரும் திருப்புல்லாணி, திருவிண்ணகரம், திருத்தண்கா, (எ-று.) (௬௧)

௬௨. வழிதருந்தலைமுற்சார்ந்தசங்கநாண்மதியமாயை
ஒழியரிமேயவிண்ணகரம்புருடோத்தமந்தேம்
பொழில்வரகுணமாமங்கைபரமவிண்புரிதிருப்புட்
குழியெனும்பெயர்கள்வாய்த்தபதியொடுங்கோயிலோடும்

(இ-ள்.) நன்மார்க்கத்தை யளிக்கும் திருத்தலைச்சங்கநாண்மதியம், மாயையை யொழிக்கும் திருவரிமேயவிண்ணகரம், திருவண்புருடோத்தமம், தேன் பொருந்திய பொழில் சூழ்ந்த ஸ்ரீவரகுணமங்கை, திருப்பரமேச்சுர விண்ணகரம், திருப்புட்குழி யென்று சொல்லப்படுந் திருநாமங்கள் வாய்த்த திருப்பதிகளோடுந் திருக்கோயில்களோடும் (எ-று.) (௬௨)

௬௩. அவணவணிலங்குகேடிலருச்சனையவதாரத்தான்
சிவனயனெவர்கருந்தேவதேவனுந்திருவின்கேள்வன்
உவகையினடிமைவெவ்வேறுரைதவ்வாறுருவங்காட்டத்
தவமுனிவரனுமபோற்றிப்புகன்றனன்றமிழ்ப்பாடல்.

(இ-ள்.) அங்கங்கு விளங்கும் அழிவில்லாத அர்ச்சாவதாரமானவன், சிவன் பிரமன் மற்ற எவர்க்கும் தேவதேவனை, பெரியபிராட்டியார் மணவாளனானவன, சந்தோஷத்தோடு அடிமையை வேறு வேறாகச் சொல்லி அவ்வாறே (தன) சாருபத்தைக் காட்டியருளத், தவத்தையுடைய மகாசீலரான ஆழ்வாரும், அப்பெருமானைப் போற்றித் தமிழ்ப் பாடல்களருளிச் செய்தனர். (எ-று.)

௫௫-வது செய்யுள் முதல் இதுவரையில் சொல்லப்பட்ட திருப்பதிகள் சிலவேயன்றி யாவும ஆழ்வார் அருளிச்செயலிலில்லை. ஆயினும சில திவ்யதேசத் தெம்பெருமான்களுக்குத் தனிப்பதிகம் போலச், சில திருப்பதிகளுக் கில்லாது மொக்கைகளாயிருப்பது போலவே, சில திருப்பதிகளைப் பாடலில்லாது போற்றினரெனக் கொள்ளக் கூடும்.

ஆழ்வார் மங்களாசாசனஞ் செய்த திருப்பதிகளை எ௧-ம் செய்யுளினடியிற்காண்க. (௬௩)

வேறு.

௬௪. அரியசெழுந்தமிழார்வ மமைதிபிறவாமையினு லரவின் பாயற், பெரியதிருப்பாற்கடலவை குந்தமொளிர்நவமணியாற் பிறழ்பொற்கோயில், உரியவிபூதியினுபய முயர்வறமேவுயுயர்ந்தமுதலுருவமெல்லாந், தெரியவெழின்மாறனுக்குக் காட்டிநவின்றடிமைதமிழ்த் தெரியல்பூண்டான்.

(இ-ள்.) அருமையான (ஆழ்வாரது) செழுந்தமிழிலுள்ள ஆசை நிரம்பாமையால், சேஷசயனத்தில் பெரியதான திருப்பாற்கடலிலும் வைகுந்தத்திலும் விளங்கும் நவமணிகளால் பிரகாசிக்கும் பொற்கோவிலிலெழுந்தருளிய உபய விபூதியிலும் உயர்வறவுயர்ந்த காரணபூதனான பெருமான், தன் திருவுருவங்களையெல்லாந் தெரியும்படி அழகிய ஆழ்வாருக்குக்காட்டி, அடிமைகூறித், தமிழ்ப்பாடல்மாலையைப் பூண்டனன். (எ-று.) (கூச)

உபயபூதி: லீலாவிபூதி, நித்தியவிபூதி. உபயம்-இரண்டு.

கூடு. திருப்பதிநூற்றிருநான்கு மவணவணிற்சினகரமுஞ் சிதையாநீலப், பொருப்பனையதிருவுருவு முபயவிபவமுமுலகிற் பொருவின்மாறன், விருப்பமுறவடிமைநவின் றனன்காட்டித்தமிழவன்பால் விரும்பினாலம், ஒருப்படநீபுரக்குதியென் றுயர்பரமபதம்புகுந்தா னுலகமுண்டோன்.

(இ-ள்.) (இவ்வாறு) திருப்பதிகள் நூற்றெட்டும், அங்கங்குள்ள திருக்கோவில்களும், அழியாத நீலமலைபோன்ற திருவடிவமும், உபயவிபூதி வைபவமுங் காட்டி, உலகில் ஒப்பில்லாதவரான ஆழ்வார் விருப்பமடையும்படி அடிமைகூறி, ஆழ்வாரிடத்தூத் தமிழ்ப்பாடல்களை விரும்பிப் பெற்று, உலகிலுள்ளார் இணங்கும்படி நீவிர் ரக்ஷிப்பீராகவென்றுரைத்து, உலகமுண்டபெருமான் உயர்ந்த பரமபதத்துக்குச் சென்றனன். (எ-று.) (கூடு)

கூகூ. அனைத்துலகுமனைத்துருவு மனைத்துயிருந்தானாகி யயலுமாகி, இனைத்தளவையெனத்தெரிதற் கரியோனைசிவன்பிரம னிமையோரெல்லாம், நினைத்துறைதற்கணவாத நெடியோனைத்தெரிந்தேத்தி நிகழ்த்திப்பார்மேல், தனைத்தகவினிகர்பவரைக் காண்கிலனாத்தனியிருந்தான் றவத்தின்மிக்கான்.

(இ-ள்.) எல்லாவுலகும் எல்லாவுருவும் எல்லாவுயிர்களுமாகிப், பிறவுமாகி, இவ்வளவென்று தெரிவதற்கரிதானவனை, சிவன் பிரமன் தேவர்களெல்லாம் சிந்தித்துச் சொல்வதற்குக்கூடாத நெடியவனை, அவனது ஸ்வரூபரூபகுணவிபூதிசேஷ்டிதங்களை யெல்லாமுள்ளபடியறிந்து துதித்துத திருப்பாடல்கள்பாடி, இப்பூமியின்மீது ஞானபரிபூரணத்தால் தன்னை யொப்பாரில்லாதவராயத் தவத்தின்மிகுந்தவரான ஆழ்வார், அத்துவிதீயராய விளங்கியிருந்தனர். (எ-று.) (கூகூ)

உகூ-வது செயயுள் முதல் இதுவரையில், ஆழ்வாரைத் தாய்தந்தையர், பொலிந்துநின்றபிரான் சந்நிதியிற் கொண்டுபோய்விட, அங்கு ஆழ்வார், திருப்புளியாழ்வாரடியிலெழுந்தருளி யோகத்திலிருந்து, திவ்விய தேசத்தெம்பெருமான்களை மங்களாசாஸனஞ் செய்தது சொல்லப்பட்டது.

[மதுரகவியாழ்வார் திருவவதாரம்.]

கூஎ. வருடமிரண்டெட்டணையத் திருப்புளியின்பொதும்பகலான் மவுனியாகிப், பொருவில்பராங்குசனிருப்பப் பரமபதத்துறைகுமுதன் புவனம்போற்றத், தெருடருவான்றிருக்கோளூர் விண்டுசேனன்றனது தேவதேவிக், கருவனுகிச்சித்திரையிற் சித்திரையிலவதரித்தான் கதிரோன்போல.

(இ-ள்.) வருஷங்கள் பதினாறுகவும் திருப்புளியாழ்வாரது பொதும்பைவிட்டு நீங்காதாராய் மோன நிலையையுடையவராய், ஒப்பற்ற பராங்

குசரான ஆழ்வார் எழுந்தருளியிருக்க; (இவர்க்கு முன்னே) பரமபதத்தி லிருக்கும் குமுதனென்னும் நித்தியசூரியொருவர், பூமியிலுள்ளோர் போற் றும்படி ஞானமளிப்பதற்காகப் பெருமையுடைய திருக்கோளூரில் விஷ்ணு சேனரது திருத்தேவியாரான தேவதேவியார் கர்ப்பத்தையடைந்து, சூரிய னைப்போலச் சித்திரை மாதத்திற் சித்திரை நக்ஷத்திரத்திலவதரித்தனர். (எ-று.)

மதுரகவியாழ்வார் திருவவதாரம், துவாபரயுகம் எட்டுலக்ஷத்து அறு பத்து மூவாயிரத்து எண்ணூற்றெழுபத் தொன்பதாவதான ஈசுவரஹு சித்திரைமீ சுக்லபக்ஷ சதுர்த்தசி, சித்திரை நக்ஷத்திரம், சுக்ரவாரம் எனக் கொள்க. (௬எ)

௬அ. தந்தைமறையவர்நாம முதற்கருமமுறைமுடிப்பத் தனய ன்றானும், முந்தைவடகலைதமிழ்நூல் முதற்கலைகள்முழுதுணர்ந்து முகுந்தன்பாதஞ், சிந்தையமைத்தலைகடந்த மாருதிபோலிந்திரி யச் செருக்குநீக்கி, எந்தைதிருவளர்மார்ப னிணையடிக்காளாயுல கி லிணையின்றானன்.

(இ-ள்.) வேதியரான அவரது தந்தையார், திருநாமகரணமுதலிய கருமங்களைமுடிக்க, அத்தனயரும் முதன்மைபெற்றனவான வடநூல் தமி ழ்நூல்களில் தலைமைபெற்ற சாஸ்திரங்கள் யாவுமுணர்ந்து, முகுந்தனென பெருமானது திருவடிகளைத் தமது திருவுள்ளத்திலமைத்து, சமுத்திரத் தைக்கடந்த திருவடியைப்போல இந்திரியங்களின் கர்வத்தையொழித் து, எனக்குற்பாதகனுய்த் திருவளர்மார்பனென பெருமானது இரண்டு திரு வடிகளுக்கடிமையாய், உலகில் ஒப்பற்றவராயினர். (எ-று.) (௬அ)

௬௯. முக்கனிதேன்சருக்கரைபான் முதலசுவையனைத்தினுக்கு முதன்மைத்தாகி, மிக்கசுவையமுதனைய தமிழ்க்கவியான்மறைப் பொருளாய் விளங்குங்கோளூர், மைக்கடனேர்திருமேனி மால் புகழைவிரித்திருதாள் வணங்கிவாழ்த்த, நக்கனிரவொழித்தோனு மதுரகவியெனுநாம நல்கினனல்.

(இ-ள்.) வாழை மா பலா என்னும் மூன்று கனிகளும் தேனும் சருக்கரையும் முதலானவற்றின் சுவை எல்லாவற்றிற்கும் முதன்மையான தாய், அதிக சுவையையுடைய அமிர்தம்போன்ற தமிழ்ப்பாடல்களால், வேதத்திற் சொல்லப்படும் பிரதானப்பொருளாய் விளங்கும் திருக் கோளூரிலெழுந்தருளிய கரிய கடலை நிகர்த்த திருமேனியையுடைய பெரு மானது கீர்த்தியை விரித்து, அவனது இரண்டு திருவடிகளை வணங்கி வாழ்த்தச், சிவபெருமானது இரத்தலை யொழித்தருளிய பெருமானும் (அவருக்கு) மதுரகவியென்னுந் திருநாமமளித்தனன். (எ-று.) (௬௯)

எ0. அத்தகையமதுரகவி யவனியின்மாலருச்சனையி னவதாரத் தை, எத்தலமும்புகுந்துபணிந் தினியநதியமுனையினை யெய்தியா ங்கே, சித்தமுறப்புலனனைத்துந் தனியோகத்திருந்தயுதந் திகிரி வெய்யோன், ஒத்தவொருசெழுஞ்சோதி தெககணங்கண்டதுகா ண்பா னுவப்பிற்சென்றான்.

(இ-ள்.) அப்படிப்பட்டவரான மதுரகவியாழ்வார், பூமியின்மீது பெரு மானது அர்ச்சாவதாரத்தை எந்தத் திவ்விய தேசங்களுக்கும் போய்

பணிந்து, இனிய யமுனையாற்றையடைந்து அங்கு புலன்கள் சித்தத்தின் வசமாகும்படி ஒப்பற்ற யோகத்திலிருந்து, தேனையுடைய பதனாயிரஞ் சூரியர்களுக்குச் சமானமான ஒரு செழுமையான சோதியைத் தெற்குத் திக்கிறபார்த்து, அதனைக்கண்டு தெளியும்படி சந்தோஷத்தோடு பிரயாண மாயினர். (எ-று.) (எ0)

[மதுரகவியாழ்வார் ஆழ்வாரை யாசிரயித்தது.]

எக. நதிமலைகான்பலகடந்து திருக்குருகூராயதிரு நகரினண் ணிப், புதியதிருப்புளிப்பொதும்பி னவ்வுருவங்கண்டுடலம் புள கம்போர்ப்பக், கதிதருமாலிவனனந்தன் றிருப்புளியேயெனக்கரு திக் கண்ணீர்வார, மதிதருஞ்செந்தமிழ்க்கண்ணி நுண்சிறுத்தாம் பொருபானுன் மாறன்றன்னை

(இ-ள்.) நதிகள் மலைகள் அடவிகள் பலவற்றைக்கடந்து திருக்குரு கூராகிய ஆழ்வார்திருநகரியை யடைந்து, புதுமையான திருப்புளியாழ்வார் பொந்தில் (தாம் முன்புகண்ட) அந்தச்சோதியைச் சேவித்துத், திருமேனி யிற் புளகம் போர்க்கவும், இவர் மோக்ஷத்தைக்கொடுக்கும் பெருமானே; திருப்புளியாழ்வார் திருவனந்தாழ்வானே யெனவெண்ணிக் கண்ணீரொழு கவும், ஆழ்வாரை ஞானத்தைத்தரும் செந்தமிழான "கண்ணிநுண்சிறுத் தாம்பு" என்னும் பத்துப் பாட்டுக்களாலே, (எ-று.) (எக)

எஉ. வழுத்திமலரடிவணங்கி வலஞ்சூழ்ந்துதமிழ்மறையோய் வரம்பின்ஞானம், பழுத்தபராங்குசவடியேன றனையாட்கொண்ட ருளுகெனப் பரிந்துநோக்கி, முழுத்தவனுமூதறிவோய் நீவருந் தேலெலனைத்துயிர்க்கு முதலாயெட்டாம், எழுத்தினிடையுறைபர மன் சரண்பெறுமாறிசைப்பலென விசைப்பதானன்.

(இ-ள்.) தோத்திரஞ்செய்து, அவரது திருவடிகளை வணங்கி வலம் வந்து, தமிழ்வேத மருளிச்செயயுமவரே! எல்லையற்ற ஞானம்பழுத்த பராங் குசரே! அடியேனை ஆட்கொண்டருளுக என்றுகூறத், தவமுழுமையுமுடைய ஆழ்வாரும் பிரீதியோடு கடாக்ஷித்து நல்லஞானமுடையீர்! நீவிர் வருந்த வேண்டா: எவ்வுயிர்கட்குங் காரணபூதனாய்த் திருவஷ்டாக்ஷரிப் பிரதிபாத் தியனான பெருமானது பதம் பெறும் விதத்தைக் கூறுகிறேனென்று அருளிச்செயவாராயினர். (எ-று.)

மேலிரண்டு செய்யுளு மொருதொடர். "கண்டவாற்றாற்றனதே யுலகென நின்றான்" எனகிறபடி தர்சன மாத்திரத்தாலே நம்மாழ்வாருக்கு எம்பெருமானது ஸர்வாதிகத்வம் விளங்கினபடியே, மதுரகவியாழ்வா ருக்குத் தர்சன மாத்திரத்தாலேயே நம்மாழ்வாரது ஆதிக்யம் விளங்கின மையால் இவ்வாறு ததித்தனர்.

மதுரகவியாழ்வார், திருக்குருகூரையடைந்து, பொலிந்து நின்ற பெரு மான் சந்நிதியில் திருப்புளி யாழ்வாரடியில் நம்மாழ்வாரைச் சேவித்து, "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக் கும்" எனக் கேட்டதற்கு, நம்மாழ்வார் "அத்தைத் தின்று அங்கே கிடக் கும்" என்று அருளிச்செய்தனரெனக் கூறுவர். இதன் பொருளாவது: வினா—அசேதநமான பிரகிருதியில் ஆத்மாவுக்குச் சம்பந்தமுண்டாயின் எதை அநுபவித்துக்கொண்டு எங்கேயிருக்கும் என்பதாம். விடை—அந்தப்

பிரகிருதியையே அநுபவித்துக்கொண்டு அதிலே யிருக்கும் என்பதாம். இவ்வாறன்றி, வினா—பிரகிருதி சம்பந்தமுடைய ஆத்மாவுக்கு ஞானம் பிறந்தால் எதை அநுபவித்துக்கொண்டு எங்கேயிருக்கும் எனவும், விடை—அகார வாச்சியனான எம்பெருமானை அநுபவித்துக்கொண்டு அவனிடத்தே யிருக்கும் எனவும் கூறுவதுமுண்டு.

வேறு.

எங. முந்தியயுகங்கண் மூன்றினுந்தவத்தான் மகத்தினாலருச்சனை முறையான், வந்திரவியையநேர் திகிரிகைத்தரித்த மாதவன்வழங்குவான்முத்தி, பிந்தியயுகத்திற் பெயரினைப்புகலப் பிரமனும்பிறைமுடித்தவனும், நந்தினுநந்தா நான்மறைப்பொருளா நாயகனல்குவான்முத்தி.

(இ-ள்.) சென்ற கிரேத திரேத துவாபரமென்னும் யுகங்கள் மூன்றிலும் (முறையே) தவத்தாலும் யாகத்தாலும் அருச்சனையாலும், சூரியனையொத்த திருவாழியைத் தரித்த மாதவன் வந்து முத்தியையளித்தருளுவன்; பிற்பட்டகலியுகத்தில் அவனது திருநாமத்தை ஸ்மரணஞ் செய்தால், பிரமதேவனும் பிறையையணிந்த சிவபிரானும் அழியினும் அழியாத நான்மறைப் பொருளான நாயகன முத்தியருளுவன். (எ-று.) (எங)

எச. ஆதலானவன்றன் பெயர்நவில்சுருதி யரும்பொருளனைத்தையு முணர்ந்தே, வேதநான்கினுக்கோ ரைந்தெனவியாதன் விதித்தவப்பான்மைபோல் விளங்கப், போதமார்பரதத் துவவியூகமெனும் பொருளுடைப்பரனையும் புகன்ற, சீதரன்சிதையா வருச்சனைவடிவின் சிறப்பையுந்தெளிதரச் செப்பும்

(இ-ள்.) ஆதலாலே அந்தப்பெருமானது திருநாம வைபவத்தைச் சொல்லாநின்ற வேதத்திற் கூறப்படும் அரிய பொருள்களை யெல்லாம் அறிந்து, வேதங்கள் நான்குடனே ஐந்தாம்வேதமென்னும்படி ஸ்ரீவேதவியாச மாமுனிவர் வகுத்த அந்தவிதம்போல விளங்கும்படி, ஞானமயமான பரத்துவம் வியூகமென்னும் தலைமைவாய்ந்த பெருமானையும் அந்தச் சீதரனது அழிவில்லாத அர்ச்சாவதாரத்தின் சிறப்பையும் தெளியும்படி சொல்லப்பட்ட (எ-று.) (எச)

பரத்துவம் வியூகம் அர்ச்சை இவைகளைச் சொல்லவே, உபலக்கணத்தால், மற்றைய விபவம் அந்தர்யாமித்வம் என்னு மிரண்டும் சேரும்.

எரு. ஆதிநூன்மிருதி புராணபாஞ்சராத்தி ராகமமனைத்தையுந் தமிழிற், பேதியாதடக்கிச் சதுவிதப்பொருளும் பிருதிவியுயிரெலாம் பெறநூல், கோதினான்காக்கி யவற்றினூறிதழா விருக்குவின்பொருளெலாங் குறையா, தோதினம்பனுவ லொன்றுபொய்ந்நின்ற வெனமுதற்கவிகளா றுணரின்.

(இ-ள்.) ஆதிநூலான வேதம் ஸ்மிருதி புராணம் பாஞ்சராத்திராகமம் என்னும் இவைகளை யெல்லாம் தமிழில் பேதப்படாமலடக்கி, அறம்பொருளின்பம் வீடென்னும் நான்குவித புருஷார்த்தங்களைப் பூமியிலுள்ள உயிர்களெல்லாம் பெறும்படி, பிரபந்தங்கள் நான்காகச்செய்து, அவற்றில் நூறு சாகைகளையுடைய இருக்குவேதத்தின் பொருள்களெல்லாங் குறைவுபடாது

நூலொன்று சொல்லினோம்; உணருமிடத்து அது "பொய்ந்நின்ற" என்று சொல்லும் முதலையுடைய நூறுகவிகளாகும். (எ-று.) (எ௫)

எ௬. சுருதியினிரண்டாந் தயித்திரியத்தேழ் காண்டமுஞ்சுருக் கமாய்த் துலங்க, ஒருதிருப்பனுவல் செக்கர்மாமுகின்முந் தகவ லேழாய்ப்புகன் றுரவோர், கருதுசீர்நான்காஞ் சுருதியெண்பத் தேழ் கவியினோர்பனுவலாற்கவின, வருமுயற்றிசுமந் தெழுந்து முந்தித்தென் றாதியாவழுவறவமைத்தேம்.

(இ-ள்.) வேதத்தில் இரண்டாவதான யஜுர் வேதத்தின் ஏழுகாண்டங்களும் சுருக்கமாகவிளங்கச் "செக்கர்மாமுகில்" என்பது முதலினுடைய அகவல் ஏழினால் ஒரு அழகிய நூலைப் புகன்று, ஞானவான்கள் சிந்திக்கும் சிறப்பையுடைய அதர்வணவேதத்தை அழகுண்டாகவரும் "முயற்றி சுமந் தெழுந்து முந்தித்" தென்று முதலாக எண்பத்தேழு கவிகளாலே ஒரு நூலாக வழுக்களின்றி வகுத்துரைத்தோம். (எ-று.) (எ௬)

எஎ. அயனையீன்றவனைப் பரப்பிரமமெனுஞ் சாமவேதத்தையை ந்தவத்தை, வயமதாய்வயங்கு வடிவமைந்துளமூ வகையுயிர்க்கு லமெலா மகிழப், பயனருள்கவியா யிரத்தினேழிசையும் பயின்மு தற்பாடன்முற்பாதத், துயர்வறவெனுஞ்சீர் முதலமூன்றடியிற் பிர ணவவெழுத்துமுந்தொளிர

(இ-ள்.) பிரமனையளித்த பெருமானைப் பரப்பிரமமென்று சொல்லும் சாமவேதத்தை, ஐந்தவஸ்தைகளின் வசமாயிருக்கும் வடிவமுடைய மூ வகையான உயிர்க்கூட்டமெல்லாம் மகிழும்படி மோக்ஷப்பிரயோசனத் தைக் கொடுப்பதாய், ஏழுவகையான இசைகள் பொருந்திய ஆயிரங்கவிக ளாலே, முதற்பாட்டின் முதற்பாதத்தில் "உயர்வற" என்னும் சீர் முதலாக, மூன்றடிகளில் பிரணவத்திலடங்கிய மூன்றெழுத்துக்களும் முற்பட்டு விளங்க (எ-று.) (எஎ)

ஐந்தவஸ்தையாவன: ஜாக்கிரம், சொப்பனம், சுஷுப்தி, துரீயம், துரீயாதீதம் என்பனவாம். மூவகையுயிர்: நித்தியர், முக்தர், பத்தர் என் போர்.

எஅ. பகருபநிடதம் பாடலேழதனிற் பரமசித்தாந்தமோர்பத் தின், புகரிலாகமவுற் பத்திநூற்றொருபான் கவியின்மூன்றிடத்தி னிற்பொருந்தத், தகவுடைத்திருவாய் மொழியெனும்பெயரோர் பனுவலாத்தவலறச் சமைத்தேம், அகமகிழ்ந்தவைநீ யதிகரித்தறி தற் குரியைமற்றயலினோர்க் கரிதால்.

(இ-ள்.) (பெரியோர்) சொல்லும் உபநிஷதம் ஏழுபாடலிலும், பரம சித்தாந்தம் பத்துச் செய்யுளிலும், குற்றமற்ற ஆகமவுற்பத்தி நூற்றொரு பது கவிகளிலும், இப்படி மூன்றிடத்திலும் பொருந்தும்படி, பெருமையை யுடைய திருவாய்மொழி யென்னும் பெயரையுடைய ஒரு கிரந்தமாகக் குறைவுபடாமற் செய்தோம். நீர் அவைகளை மனமகிழ்வுடனே கற்றறிவ தற்குரியீர். அது பிறர்க்கு அரிதாகும். (எ-று.) (எஅ)

எகூ. என்றுசொற்றிசைத்த பனுவலொன்றினையு மினியகாண்ம றைகளினிசையே, ஒன்றுறச்சந்தை யிரட்டையினுதாத்தா நுதா

த்தமாஞ்சுரங்களோ டொருவா, நன்றுடைப்பொருளு நவிலரும் விசிட்டாத் துவிதமாநவிறலு நயவா, நின்றுகற்றவற்றின் பொருளெலாங்கருத்தி னிறைதலான்ஞானமு நிறைந்தான்.

(இ-ள்.) என்றருளிச்செயது, தாமருளிச் செய்த நான்கு பிரபந்தங்களையும், நான்கு வேதங்களின் இனிய இசையே (இதற்கும்) பொருந்தும்படி இரட்டைச் சந்தத்தோடு உதாத்தம் அநுதாத்தமாகிய ஸ்வரங்களோடு, பிரியாத நன்மையையுடைய அவற்றின் நன்மையான பொருளும் விசிஷ்டாத்துவைதபரமாகவே (ஆழ்வார்) அருளிச் செய்தலும், (மதுரகவியாழ்வார் அதில் அதிக விருப்பமுடையவராயிருந்து அவைகளைக்கற்று, அவற்றின் பொருள்களை யெல்லாம் தமது திருவுள்ளத்தில் நிறைத்தலாலே, ஞானமும் நிறைந்தவராயினர். (எ-று.) (எகூ)

‡ அந்தநான்கெனவுரைசெயும்பிரபந்தமதனுட்
பைந்துழாயணிமாதவனுவந்துவாழ்பதிகள்
வந்தனைந்தொடுமுப்பதாம்வடமதுரையும்வை
குந்தஞ்சீவரமங்கைசீர்குறுங்குடிவெஃகா

‡ அரங்கம்வேங்கடம்விண்ணகர்செங்குன்றூரனந்த
புரமயோத்திபாற்கடறுவரைப்புளிங்குடிகாட்
கரைகுளந்தைவாட்டாறுமூழிக்களமோகூர்
குருகைவல்லவாழ்தொலைவில்லிமங்கலங்கோளூர்

‡ சீர்பெறுந்திருமாலிருஞ்சோலைவெற்புபரி
சாரமாம்பதிதிருக்கடித்தானநாவாய்வண்
பேர்குடந்தையாறன்விளைகணபுரம்புலியூர்
பேரைசீவரகுணமங்கைபேரொனுநகரே.

அ0. குறைவிலாஞானப் பராங்குசமாற குருகைநாயகசட கோப, பொறையிலார்கலிசூழ் புடவியும்புகழுந் தபோதனசதுமறைப் பொருளின், நிறையிலாமிதயத் தந்நாரணனை நிறுத்துளாய்பவமெனுநெடுநீர்த், துறையிலாழெனையா ழாதெடுத்தளித்தா யெனப்பராயிருபதந் தொழுதான்.

(இ-ள்.) குறைவுபடாத ஞானத்தையுடைய பராங்குசரே! மாறரே! குருகைநாயகரே! சடகோபரே! பொறுமையையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த பூமியிலுள்ளோர் யாவரும் புகழும் தபோதனரே! நான்கு வேதார்த்தங்கள் நிறைந்த இருப்பிடமான திருவுள்ளத்தில் அந்த வேதப்பிரதிபாத்தியனான நாராயணனை நிலைக்கவைத்தவரே! பிறவி யென்னும் பெரிய நீர்த்துறையான கடலிலழுந்தும் அடியேனை (அப்படி) யாழாது ரக்ஷித்தவரே! எனவணங்கி ஆழ்வாரது இரண்டு திருவடிகளையும் வணங்கினர். (எ-று.) (அ0)

அக. எனப்புகழ்மதுர கவியொடுமாறன் றிருப்புளியகவயி னிருந்தே, வனப்புயர்குருகூர்ப் பொலிந்துநின்றபிரான் மலரடிவழுத்தியே வணங்கக், கனப்புயனிகர்மா தவனுமுற்றோன்றிக் கருடனமேற்றனதுருக் காட்டி, அனப்புளான்விடையான் புகழ்தரத்திருத்தோள் வகுளமாலிகைபுவந் தளித்தான்.

(இ-ள்.) என்று புகழும் மதுரகவியாழ்வாரோடு ஆழ்வார் திருப்புளியாழ்வாரடியி லெழுந்தருளியிருந்து, அழகுமிகுந்த திருக்குருகூரிலெழுந்தருளிய பொலிந்துநின்றபிரானது மலர்போன்ற திருவடிகளை வாழ்த்தி வணங்க, செறிந்த மேகம்போன்ற பெருமானும் ஆழ்வார் திருமுன்னரொழுந்தருளி கருடாழ்வான்பேரி லெழுந்தருளியிருக்கும் தமது திவ்விய மங்கள விக்கிரகத்தைக்காட்டி, அன்னப்பறவையையுடைய பிரமனும் ரிஷபத்தையுடைய சிவனும் புகழும்படி ஆழ்வார் திருத்தோளுக்கு மகிழம் பூமாலையை மகிழ்ந்தளித்தனன். (எ-று.) (அக)

அஉ. மாறனும்வகுளா பரணனும்பெயர்பின் வாய்த்துமன்பதையெலாம் வணங்கிப், பேறரும்பரம பதம்புகத்தமிழ்நான் மறையுடைப்பெரும்பொரு ளனைத்துங், கூறரும்விசிட்டாத் துவிதமாவிரித்தாட் கொண்டுவாழ்வித்தெழில் குறையா, தேறருண்மதுர கவிதொழசசோதிக் கினிதெழுந்தருளிவீற் றிருந்தான்.

(இ-ள்.) அதனபின்னர் ஆழ்வாரும் வகுளாபரணரென்னும் திருநாமம் பெற்று, மக்கட்கூட்டமெல்லாம் வணங்கிப் பெறுதற்கரிய பரமபதம் புகும்படி தமிழிலான நான்கு வேதங்களின் பெருமையையுடைய பொருளெலலாம சொல்லற்கரிய விசிஷ்டாத்துவைதபரமாக விரித்துரைத்து, அவர்களை யடிமைகொண்டு வாழ்வித்து, (என்றும்) அழகு குறையாது அபிவிருத்தியாகும் அருளையுடைய மதுரகவியாழ்வார் தொழும்படி தனனடிச் சோதிக்கு நனகு எழுந்தருளி வீற்றிருந்தனர். (எ-று.) (அஉ)

நம்மாழ்வார் இவ்வுலகில் எழுந்தருளியிருந்த காலம் முப்பத்தைந்து வருஷங்களென்பர்.

---

மதுரகவியாழ்வார்

[ஆழ்வாருக்கு உற்சவாதி வைபவங்களை நடத்தினது.]

வேறு.

* மதுரகவியெம்பெருமானும்வையமையறனையிகந்து
அதிருந்திரைத்தாமிரபருணியாற்றினீரையிறுக்கவித்துக்
கதிர்சேர்ந்தவுலோகத்தாற்காரிமாறனருச்சையினைச்
சதிரார்ந்திடவேயியற்றுவித்துத்தக்கவளமும்புனைந்திட்டான்.

(இ-ள்.) மதுரகவியாழ்வாரும் உலக மயக்கத்தைக் கடந்து, சப்திக்கும் அலைகளையுடைய பொருநையாற்றின் நீரை இறுகச்செய்து, பிரகாசமுடைய அந்த உலோகத்தினாலே ஆழ்வாரது அர்ச்சாவதாரத்தினைத் திறமுண்டாகும்படி செய்வித்து, அதற்குச் செய்யத்தக்க பலவளங்களையும் அழகாகச் செய்தனர். (எ-று.)

வேறு.

‡ மாயவனருட்படிமதுரமாக்கவி
ஏயவம்மாறனல்லெழிலுருத்தனைத்
தூயவிக்கிரகமாய்த்துலங்கச்செய்ததை
ஆயவப்புளியினதடியில்வைத்தரோ.

(இ-ள்.) எம்பெருமானது நியமனத்தின்படி மதுரகவியாழ்வார் நிலைபெற்ற நம்மாழ்வாரது நல்ல திருவுருவத்தைப் பரிசுத்தமான அர்ச்சையாக விளங்கும்படி செய்து அதனை அங்குண்டாகிய திருப்புளியாழ்வாரடியில் எழுந்தருளப்பண்ணி, (எ-று.)

‡ பொன்னொடுமரகதம்புட்பராகமும்
மின்னிடுமணிகளுமேயந்திழைத்துவான்
மன்னிடுமண்டபமதிள்விமானமுந்
துன்னிடுகோபுரந்துலங்கச்செய்தனன்.

(இ-ள்.) பொன்னுடன் மரகதம் புஷ்பராகம் முதலிய ஒளிவிடும் ரத்தினங்களும் வைத்துச்செய்து ஆகாயத்தையளாவும் திருமண்டபமும் திருமதிளும் விமானமும் பொருந்திய கோபுரமும் விளங்கும்படி செய்வித்தனர். (எ-று.)

‡ பூடணவகைகளும்பொருந்துவத்திரம்
ஏடவிழ்பூமலரினியயாவையுஞ்
சூடிடலருத்துதல்சோர்விலாமலே
நாடொறுமுபசரிப்புடனடத்தியே

(இ-ள்) ஆபரணவகைகளும் நிலைபெற்ற ஆடைகளும் இதழ்கள் விரிந்து பூத்த மலர்களும் இனிதாகிய மற்றெவற்றையும் சூடுதல் நைவேத்தியஞ் செய்தல் ஆகிய இவைகளைச் சோர்வில்லாமல் நாள்தோறும் உபசரிப்புடனே நடத்தி, (எ-று.)

‡ கருமுகின்மேனியுங்கமலக்கண்களும்
முருகவிழ்துளவமும்பொலிமுகுந்தனூர்
மருவுமாலயமுறைவழுவுறாமலே
திருவிழாமுதலவுஞ்செய்வித்தானரோ.

(இ-ள்.) கரியமேகம்போன்ற திருமேனியும் கமலம் போன்ற திருக்கண்களும் வாசனைவீசும் திருத்துழாயும விளங்கிய பொலிந்து நின்றபிரான எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலிலும் முறைமை தவறாது திருவிழா முதலியனவகளையுஞ் செய்வித்தனர். (எ-று.)

‡ வருதினம்பலவுமவ்வாறதாய்ப்புரிந்
தொருபகல்கடிகையோர்நொடியிலேனுமம்
மருமகிழ்சதொடையணிமாறனம்புயத்
திருவடிபிரிகிலான்சேர்ந்துவாழுநாள்.

(இ-ள்.) உண்டாகும் பல தினங்களும் அவ்வாறே செய்து ஒரு தினத்தில் ஒரு கடிகை ஒர் நொடிப்பொழுதிலேனும் வாசனையுடைய மகிழ்பூ மாலையணிந்த ஆழ்வாரது தாமரைபோன்ற திருவடிகளைப் பிரியாது கூடி வாழு நாளில், (எ-று.)

வேறு.

* விளங்குமத்தியயனமெனவீறுமகோற்சவந்தன்னைக்
களங்கமற்றமாறனுக்குக்காண்பான்றுணிந்துகோளூர்மன்
துளங்களோடுங்குருகைநகர்தன்னினின்றுமரங்கமெனும்
வளங்கொண்டோங்குநற்பதிக்கேவயங்குமன்பின்வழிக்கொண்டு

(இ-ள்.) விளங்கும் திருவத்தியயன மென்னும் பெருமையுடைய மகோற்சவத்தைக் குற்றமில்லாத ஆழ்வாருக்குச் செய்விக்கத்துணிந்து மதுரகவியாழ்வார் பரிவாரங்களுடன் திருக்குருகூரினின்றும் திருவரங்கமென்னும் பலவளங்களுங் கொண்டுயர்ந்த நல்ல திருப்பதிக்கு விளங்கும் அன்புடன் வழிநடந்து, (எ-று.)

* வேதமோதாதுணர்வுற்றவிரசன்வந்தான்மெய்ம்மைநெறிப்
போதந்தனக்கார்கலியென்னும்புனிதன்வந்தானிவ்வுலகின்
ஏதங்கடந்தபெருந்தகையாமெம்மான்வந்தான்செழுந்தமிழின்
வேதநான்குமிசைத்திட்டவிமலன்வந்தானெனப்போந்தான்.

(இ-ள்.) வேதங்களையெல்லாம் ஓதாமலுணர்ந்த ஞானிவந்தார்; உண்மையான நெறியையுடைய ஞானத்துக்குக் கடலென்று சொல்லப்படும் பரிசுத்தர் வந்தார், இவ்வுலகின் தோஷத்தைக் கடந்த பெருந்தகையாகிய எமது ஸ்வாமிவந்தார்; செழுமையான தமிழில் நான்கு வேதங்களையும் அருளிச்செய்த மலரகிதர் வந்தார் என்று (விருதுடன்) சென்றனர். (எ-று.)

* சங்கப்புலவோர்திருச்சின்னந்தன்னின்மாறன்விருதெல்லாம்
எங்கும்பொலியவொலியெழவுமிசையக்கேட்டுத்தாங்கூடி
எங்கட்கிணையாவேறொருவரிலரென்றிருந்தோமெம்மிக்கார்
அங்கண்புவியிலுள்ளார்கொல்லென்றேயறைந்துதடுத்தனரால்.

(இ-ள்.) சங்கப்புலவர்கள், திருச்சின்னத்தில் ஆழ்வாரது விருதெல்லாம் எவ்விடமும் விளங்கும்படி ஓசையெழவே, அதனை இசையக்கேட்டுத் தாங்கள் ஒன்று கூடி எங்களுக்குச் சமானமாக வேறொருவருமில்லையென இருந்தோம்; எங்களினும் மேலானோர் அழகிய இடத்தையுடைய பூமியில் இருக்கிறார்களோ என்று கூறித் தடுத்தார்கள். (எ-று.)

* தூயமதுரகவியெம்மான்சொல்லும்புலவீர்கேட்பீரேல்
மாயனருள்சேர்மாறனிணைமாநீருலகத்திலரெனவே
நேயமுடனேயறிகுதிராலென்றேகண்ணன்கழலிணையென்
மேயசீர்ச்செய்யுளைப்பொறித்துவிளங்குமுறியைக்கொடுவந்து

(இ-ள்.) (அப்போது) பரிசுத்தரான மதுரகவியாழ்வார் சொல்லுவாராயினர். சங்கப் புலவர்களே! கேட்பீர்களாயின் மாயனான பெருமானது திருவருள் கூடிய ஆழ்வாருக்குச் சமானமானோர் பெரிய நீர் சூழ்ந்த உலகத்தில் இல்லை யென்பதனை நேசத்துடனே அறிவீர்களாக என்று "கண்ணன் கழலிணை" என்னும் சிறப்புப் பொருந்திய செய்யுளை யெழுதி விளங்கும் ஒரு முறியைக் கொண்டுவந்து, (எ-று.)

கண்ணன்கழலிணை, நண்ணும்மனமுடையீர்
எண்ணுந்திருநாமம், திண்ணம்நாரணமே

திருவாய்மொழி, பத்தாம்பத்து ரு-ம் திருவாய்மொழி முதற்பாட்டு.

* வயங்குஞ்சங்கப்பலகைதனில்வைத்திடலுமாங்கதுபுலவோர்
பயங்கொண்டிடவேயன்னவரைப்பயத்திற்றள்ளிமாறனருள்
சயங்கொள்கவியையேந்திநிற்கச்சங்கப்புலவோர்மிகத்துதித்து
நயங்கொள்கவிகளுன்மறைசொனாவீறன்மீதுரைக்கவெணி

(இ-ள்.) விளங்கும் சங்கப்பலகையில் வைத்திடுதலும் அச்சங்கப்பலகை, சங்கப்புலவர்கள் பயங்கொள்ளும்படி அவர்களை நீரில் தள்ளி ஆழ்வாரருளிச்செய்த வெற்றியைக்கொண்ட செய்யுளை யேந்தி நிற்கச் சங்கப்புலவர்கள் மிகவுந்துதித்து, இன்பத்தைக் கொண்ட கவிகளை, நான்கு வேதங்களையும் (தமிழில்) அருளிச்செய்த நாவின் வீறுபாட்டையுடைய ஆழ்வார் மீது சொல்ல நினைத்து, (எ-று.)

* ஈயாடுவதோகருடனெதிரொன்பாமுதல்வனெடுத்தோதிச்
சாயாப்புகழ்சேர்மாறனைமேற்றனியேபுலவோருரைக்கவவை
தூயார்சேமங்குருகையோவென்றுதலங்குஞ்சீர்க்கவியொன்
றேயாயிலங்கவச்சமிறும்பூதுற்றேத்திநனிவிடுத்தார்.

(இ-ள்.) "ஈயாடுவதோ கருடன் எதிரோ" என்னும் பாட்டைச் சங்கத்துக்குத் தலைவன் எடுத்துரைத்து (அதன்பின்னர்) குறையாத புகழையுடைய ஆழ்வார் மீது சங்கப்புலவர்கள் தனித்தனியே கவிகளையுரைக்க, அச்செய்யுட்களெல்லாம் பரிசுத்தமுடைய "சேமங்குருகையோ" என்று விளங்கும் சிறப்பையுடைய ஓரே கவியாய விளங்க, (அவர்கள்) அச்சமும் ஆச்சரியமுங் கொண்டு துதித்து அதிகசம்பிரமத்தோடு (ஆழ்வார் திருவரங்கத்துக்கு) எழுந்தருளும்படி விடுத்தார்கள். (எ-று.)

ஈயாடுவதோகருடற்கெதிரேயிரவிக்கெதிர்மின்மினியாடுவதோ
நாயாடுவதோவுறுவெம்புலிமுன்நரியாடுவதோநரகேசரிமுன்
பேயாடுவதோவழகூர்வசிமுன்பெருமான்வகுளாபரணன்னருள்கூர்ந்
தோவாதுரையாயிரமாமறையின்னொருசொற்பெறுமோவுலகிற்கவியே.

சேமங்குருகையோசெய்யதிருப்பாற்கடலோ
நாமம்பராங்குசனோநாரணனோ—தாமம்
துளவோவகுளமோதோளிரண்டோநான்கும்
உளவோபெருமானுனக்கு.

ஆழ்வார் பாசுரம் சங்கப்புலவர்களைத் தாழ்த்தினது: "சுவடிறக்கத் தொடராசைக்களிற்றைத் தொடர்ந்திரண்டு, கவடிறக்கட்டிய பாசத்தளைக் கண் பரிந்துசங்கக், குவடிறக்குத்திய மாறப்பெயர்க்கொலை யானைநங்காய, இவடிறத்தொன்றும் படரந்திவான மிருள்கின்றதே" என்னும் சடகோபரந்தாதி சுஅ-ம் பாட்டில் ஆசையாகிய யானை ஓடச்செய்து, பாசமாகிய தளையை யறுத்து, சங்கமாகிய குவடு சிதையும்படி குத்திய மாறனாகிய கொலையானை என்று கம்பநாட்டாழ்வான் அருளிச்செய்ததனாலும் விளங்கும்.

* பன்னுமதுரகவிப்பெருமான்பளகில்விழவுதனைமுடித்து
மன்னும்புகழெய்திப்புவியோர்மையலெல்லாமகற்றிநனி
துன்னும்பவமாம்பெருநோயைத்துணித்துத்தமிழ்நான்மறைசெய்த
தன்னொப்பில்லாப்பராங்குசனைத்தாழ்ந்துபோற்றியினிதிருந்தான்.

(இ-ள்.) யாவருஞ் சொல்லும் மதுரகவியாழ்வார் குற்றமற்ற திருவத்தியயன மகோற்சவத்தைச் சாத்து செய்து, நிலைபெற்ற கீர்த்தியைப் பெற்று, இந்தப் பூமியிலுள்ளவர்களது மயக்க மெல்லாம் நிவர்த்தித்து, மிகப் பொருந்திய பிறவியாகிய பெரிய நோயை நீக்கித், தமிழில் நான்கு வேதங்களையருளிச்செய்த ஒப்பில்லாத ஆழ்வாரை வணங்கித்துதித்து, இனிதாக எழுந்தருளியிருந்தனர். (எ-று.)

வேறு.

† திருவாசிரியந்திருவிருத்தந்திருவந்தாதிதிருமால்சீர்
உருவாந்திருவாய்மொழியென்றேயுரைத்தபிரபந்தங்களையும்
இருமாவினையிற்படுபவரையிசையத்திருத்தியோதுவித்திட்
டொருமாநொடியுஞ்சந்நிதியையகலாதாங்கேயுடனுறைந்தே.

(இ-ள்.) திருவாசிரியம், திருவிருத்தம், பெரியதிருவந்தாதி, ஸ்ரீயப்பதியின் கலியாணகுண உருவமாகிய திருவாய்மொழி என்று (ஆழ்வார்) அருளிச்செய்த பிரபந்தங்களையும், புண்ணியம் பாவம் என்னும் இரண்டு பெ

ரிய வினைகளிற்படும் ஆன்மாக்களை இசையும்படி திருத்தி ஓதும்படியாகச் செய்து, ஒருமாநொடியும் ஆழ்வார் சந்நிதியைப் பிரியாது கூடியிருந்து, (எ-று.)

† ஓதுமாண்டன்றிருநூற்றுநாற்பதிருந்திவ்வுலகனைத்தும்
பூதநாதனடியவராய்ப்பொருந்தும்வண்ணந்திருத்திநனி
வேதநாலுந்தமிழ்செய்தவிமலனருளாலுடல்விட்டே
சீதவிரசைப்புனலாடித்திருமாமணிமண்டபஞ்செறிந்தான்.

(இ-ள்.) சொல்லப்படும் வருஷங்கள் இருநூற்று நாற்பதுவரையில் எழுந்தருளியிருந்து, இவ்வுலகமெல்லாம் சசலவுயிர்களுக்கும் நாதனது அடியார்களாகப் பொருந்தும் வண்ணம் மிகவுந் திருத்தி, நான்கு வேதங்களையுந் தமிழாகச் செய்த ஆழ்வார் திருவருளாலே திருமேனியைவிட்டுக் குளிர்ந்த விரஜாநதியில் தீர்த்தமாடி, திருமாமணிமண்டபத்தை யடைந்தனர். (எ-று.)

---

வேறு.

அரவணைத்துயிலமலனென்றுபார
பரவருட்சடகோபன்பண்பிதால்
திரவருட்குலசேகரப்பெயர்ப்
புரவலர்க்கமைபுகழ்விளம்புவாம்.

(இ-ள்.) ஆதிசேஷசயநத்தில் அறிதுயில் கூரும் அமலனாகிய பெருமானென்று பூமியிலுள்ளோர் பரவும் அருளையுடைய ஆழ்வாரது வைபவம் இதுவாகும். இனி ஸ்திரமான அருளையுடைய குலசேகரனென்னுந் திருநாமமுடைய ரக்ஷண தர்மத்திலமைந்தவருக்கு அமைந்துள்ள புகழைச் சொல்லுவோம். (எ-று.)

பராங்குசச்சருக்கம் முற்றிற்று.

---

நம்மாழ்வார் திருவடிகளேசரணம்.

மதுரகவியாழ்வார் திருவடிகளேசரணம்.

ஸ்ரீ

# உ-வது ஆதியோகிச்சருக்கம்.

ஆதியோகியரான முதலாழ்வார்கள் மூவரும் அவதரித்தருளின தொண்டைநாட்டுச்சிறப்பு.

க. புண்டரீகத்தயன்படைத்தபூதலத்
தண்டர்பொன்னாடிழிந்தனையபொற்பதால்
எண்டவரிமையவரிறைகொண்மாண்புடைத்
தண்டகமெனும்பெயர்த்தமிழ்நாடரோ.

(இ-ள்.) தேவர்கள் வாழும் பொன்மயமான சுவர்க்கலோகமானது, ...யமரைமலரி லிருக்கும் பிரமதேவன் சிருஷ்டித்த பூமியின்கண் இறங்கி ...போன்ற பொலிவையுடையதாகும்; எண்ணும் தவத்தையுடையோரும், ...ர்களும் தங்குதலான பெருமையினையுடைய தண்டகமென்னும் பெய ...யுடைய தமிழ்நாடு. (எ-று.) (க)

திருமலையுறைதருந்தேவனாமுகில்
அருண்மழைபொழிதலாலலகின்ஞானமும்
தருமமுமெனும்பயிர்தழைத்துத்தாவறப்
பொருவில்கைவலமெனும்பலத்தைப்பொங்குமே.

(இ-ள்.) (அந்நாடு) திருவேங்கடமலையினிடத்தில் நித்தியவாசஞ்செய்யும் ஸ்ரீநிவாசனாகிய மேகம், தனது அருளாகிய மழையைப்பொழிதலாலே, கணக்கற்ற ஞானமும் தருமமும் என்று சொல்லப்படும் பயிர்கள் தழைத்துக், கெடுதலின்றி ஒப்பில்லாத மோக்ஷமென்னும் பலனை விர்த்தியாகக் கொடுக்கும். (எ-று.) (உ)

ஙூ. வேங்கடவரையினும்வேழவெற்பினும்
பாங்கமைபதியினும்பரமன்றாண்மலர்
நீங்கலிலடியரானந்தநீரினால்
ஆங்கடலுவர்க்கடலென்பராய்விலார்.

(இ-ள்.) திருவேங்கடமலையினிடத்தும் திரு அத்திகிரியினிடத்தும் அவற்றின்பக்கலிலுள்ள திருப்பதிகளினிடத்தும் நித்தியவாசஞ்செய்யும் எம்பெருமானது திருவடித்தாமரைகளை விட்டு நீங்குதலில்லாத அடியார்களது ஆனந்தபாஷ்பத்தாலே யுண்டான கடலை உப்புக்கடலென்று சொல்வார்கள் ஆராய்ச்சியில்லாதவர்கள். (எ-று.) (ஙூ)

ச. ஓவியர்க்கெழுதருமுருவவாணுதல்
காவியங்குழலினார்களினாண்மலர்
வாவியங்கரைபுகவாகப்புள்ளொடன்
தூவியன்னங்களுமளியுஞ்சூழுமே.

(இ-ள்.) (அந்நாட்டில்) சித்திரகாரிகளுக்கும் எழுதலாகாத உருவமும், ஒளிபொருந்திய நெற்றியும், கஸ்தூரிச்சாந்தணிந்த அழகிய கூந்தலுடைய பெண்கள், புதிய தாமரைமலர்கள் பூத்திருக்கும் தடாகங்க

ளின் அழகிய கரையிற்சேர, சக்கரவாசப்பறவைகளும் இறகுகளையு அன்னங்களும் வண்டுகளும் அவர்களைச்சூழும். (எ-று.)

மாதர் தனங்களுக்குச் சக்கரவாகமும் நடைக்கு அன்னமும் களுக்கு வண்டும் உவமான மாதலால், தங்களினமோ என்றெண் சக்கரவாக முதலியவை அவர்களைச் சூழுமென்க.

ரு. குடம்பொருவிணைமுலைக்கோதைமாதரார்
அடங்கலும்படியவாரக்குதலினுவியாய்த்
தடங்கரைபுகுதவோர்சலனமின்மையால்
உடம்பெனுமாவிகளுலப்பிலாதன.

(இ-ள்.) கும்பத்தையொத்த இரண்டு தனங்களின்மேல் மாலையணி மாதர்கள் யாவரும் வந்து நீராடுதலால் ஒலிசெயவனவாகி அதனாலே உ ராய், (நீராடினபிறகு அவர்கள்) கரையிற்பிரவேசிப்பதினால் அசைதலில் வாகி அதனாலே (உயிர்நீங்கின) உடம்பென்னுந் தடாகங்கள் கெடுதலில் தனவாயிருக்கும். (எ-று.)

சு. உமையவளெட்டுநான்கறமுமோய்விலா
தமைவுறவளர்க்குவதந்தநாடெனில்
இமையவருலகமுமிணையன்றாலினிச்
சமைவதெவ்வுலகிதற்குவமைசாறறவே.

(இ-ள்.) உமாதேவியார் முப்பத்திரண்டு தருமங்களையும் ஓயாம அமைதிபெறும்படி வளர்ப்பது அந்த நாடே என்றால், தேவலோகமும் அதற் ஒப்பாவதன்று. ஆகையால் இனி இதற்குச் சமானமாகச் சொல்லப்பொரு துவது வேறெந்தவுலகம்? (எ-று.) (சு

எ. எண்டவாவிடுகுறியேலுமேபொருள்
கண்டதாற்புலமையீர்காரணத்தினன்
அண்டர்கோன்பரவருளாளன்கசசிமால்
தொண்டைநாடதன்பெயர்தொன்றுதொட்டரோ.

(இ-ள்.) அறிவு நிறைந்தவர்களே! (அந்தநாட்டின் பெயர், தொண்டா கள் வாழும் நாடு எனப்) பொருள் காணப்படுதலின் அக்காரணத்தால் தொன்று தொட்டே, அதன் பெயரானது பிரமதேவன் வணங்கும் பேரரு ளாளனாய்த் திருக்கச்சியிலெழுந்தருளிய பெரியோனது (தொண்டர்கள் வாழும்நாடு) தொண்டைநாடு என்பதாம். ஆகவே அதனை எண்ணுதல் கெடாத இடுகுறி என்னுதல் பொருந்துமோ. (எ-று.) (எ)

தொண்டு என்பது ஐகாரச்சாரியை பெற்றுத் தொண்டை என வந் தது. தொண்டு-விகுதியேலாத தொழிற்பெயர். இது ஆகுபெயராயத் தொண்டரை யுணர்த்திற்று. இவ்வாறுகொண்டது கவிசமத்காரம். தொண் டநாடு என்றிருப்பினும் பொருள் அதுவேயாம்.

அ. வீட்டுவான்வெயிற்குலராதுவெஃகிநீர்
ஊட்டுவானுதவிதோர்ந்துலப்பிறாருவுங்
கோட்டுவான்மலர்பலங்கொடுக்குமென்னிலந்
நாட்டுவாழ்மாந்தர்சீர்நவிலற்பாலதோ.

(இ-ள்.) (அந்நாட்டின்கணுள்ள) கெடுதலில்லாத மரங்களும், தம்மை வெட்டுவோன் வெயிலினால் வாடாமறற்காத்து, (தமக்கு) நீர்விடுவோனது உதவியையறிந்து, (தமது) கிளைகளில் உயர்ந்த மலர்களையும் பழங்களையுங் கொடுக்குமென்றால், அந்நாட்டில் வாழும் மக்களின் உயர்ந்த குணம் சொல்லக்கூடியதோ? (எ-று.) (அ)

கூ. நகிற்கொடிமருங்குலந்நாட்டுமாதரார்
அகிற்புகைகுழற்கிடவஃதுமீதளாய்
முகிற்கணத்தடைதலான்முகிலும்வாயிதழ்
துகிர்க்கிணைவனிதையர்சுரியற்கேய்ந்தவே.

(இ-ள்.) தனபாரத்தால் துவளும் இடையினையுடைய அந்நாட்டுப் பெண்கள், தங்கள் கூந்தலுக்கு அகிற்புகையூட்ட, அப்புகையானது மேலெழுந்து மேகக்கூட்டங்களோடு சேர்தலாலே, அந்தமேகங்களும், பவளத்தையொத்த வாயிதழையுடைய பெண்கள் கூந்தலுக்கு ஒப்பாயின. (எ-று.) (கூ)

க0. நாலிருதிசையினும்பரந்துநாகமீ
தாலியம்முகிறரப்பெருகியம்புவி
மாலிகைமார்பினுத்தரியமானுதண்
பாலிமாநதிபயம்பரவுபண்ணைத்தே.

(இ-ள்.) முன்சொன்ன மேகங்கள் எட்டுத்திசைகளிலும் பரவி, ஆகாயத்திலிருந்து மழைத்துளிகளைப்பெய்தலாலே, அழகிய பூமிப்பிராட்டியாரது மார்பிலுள்ள மாலையையும் உத்தரீயத்தையும் ஒக்கும் குளிர்ச்சியையுடைய பாலாறு பெருக்கெடுத்து நீர் பாயுங் கழனிகளையுடையது (அந்நாடு.) (எ-று.) (க0)

கக. மீற்கணமருள்விழிவிமலைகேள்வனும்
மாற்கணியகமதாவயங்குவாரியும்
நாற்கவிபுகழுமந்நதிபுக்கார்தலாற்
பாற்கடலெனும்பெயர்படைத்ததென்பவே.

(இ-ள்.) கெண்டைமீனினங்கள் மருளுந் திருக்கண்களையுடைய பரிசுத்தையான பெரியபிராட்டியாருடைய நாயகனான எம்பெருமானுக்கு அழகிய இருப்பிடமாக விளங்கும் சமுத்திரமும், ஆசு மதுரம் வித்தாரம் சித்திரம் என்னும் நாலுகவிகளில் வல்லவர்கள் புகழும் அந்தப் பாலாறு புகுந்துநிறைதலாலே, பாற்கடல் என்னும் பெயரைப் படைத்ததென்று சொல்லுவர் (பெரியோர்). (எ-று.) (கக)

## பொய்கையாழ்வார்

திருவவதாரஸ்தலமான திருக்கச்சிமாநகரச்சிறப்பு.

வேறு

கஉ. இனையசீர்கெழுபாலிமாநதிமருங்கிமையோர்
முனைவர்வேதியர்விபுதர்நாற்கவிஞரோமுதலோர்
அனைவரும்பகுத்தளக்கொணுவளத்ததாமலர்பூ
நனைவரும்பொழில்புடைசெறிகச்சிமாநகரம்.

(இ-ள்.) இப்படிப்பட்ட சிறப்பு மிகுதியையுடைய பாலாற்றின் சமீபத்திலே தேவர்கள், முனிவர்கள், வேதியர்கள், மிகக்கற்றோர், நாலுகவிகளில் வல்லவர்கள் முதலிய அனைவரும் பிரித்துச் சொல்வதற்கரிய வளப்பத்தையுடையதாகும்; மலர்ந்த புஷ்பம் தேனைச்சொரிவதான சோலைகள் பக்கங்களில் நெருங்கப்பெற்ற பெருமைபொருந்திய திருக்கச்சிநகரம். (எ-று.) (கஉ)

நதிமருங்கு அளக்கொணு வளத்தது கச்சிமாநகரம் எனக்கூட்டுக.

கங. இணையிலாமுதற்பரம்பொருள்பலவடிவெடுத்தாங்
கணையுந்தன்மையிற்சங்குசக்கரம்புயத்தமைத்துப்
பிணையல்வண்டுளவந்திருநாமநூல்பிறங்குந்
துணைமலர்ப்பதப்பரமபாகவதராற்றுலங்கும்.

(இ-ள்.) தனக்குவமையில்லாத சிறந்த காரணப்பொருளானவன் பல திருவுருவங்கொண்டு அவ்விடத்தில் சேர்ந்திருக்குந் தனமைபோலே, சங்கு சககரங்களைத் (தங்கள்) திருத்தோள்களி லமைத்துக்கொண்டு வளப்பமான திருத்துழாய் மாலையும் திருநாமமும் திருப்பவித்திரமும் விளங்கப்பெற்றவரான இரண்டு திருவடித்தாமரைகளையுடைய பரம பாகவதர்களாலே பிரகாசித்துக் கொண்டிருக்கும் (அந்நகரம்). (எ-று.) (கங)

இங்கு பாகவதர்களின் திருவடியைக்குறித்தது "நாதனை நரசிங்கனை நவின்றேத்துவார்களுழக்கிய, பாததூளிபடுதலாலிவ் வுலகம்பாக்கியஞ் செயததே" என்னும் அருளிச்செயலின்படி இடத்தின் தூய்மையை விளங்க வைத்தற்கென்க.

கச. அருமைநான்மறையதனினும்புராணத்துமகன்ற
பொருண்மைசேருமாகமங்கள்சாத்திரத்தினும்புயல்போற்
கருமைமேனியன்செய்யதாமரைப்பதங்காட்டும்
பெருமைசேர்திருவாய்மொழியோதையேபெருகும்.

(இ-ள்.) கற்பதற்கும் பொருளை யறிந்துகொள்வதற்கும் அருமையாய் நாலுவகையான வேதங்களைக்காட்டிலும் புராணங்களைக்காட்டிலும் விரிவான பொருளமைந்த ஆகமங்களைக்காட்டிலும் (வேறு) சாஸ்திரங்களைக் காட்டிலும், மேகம்போலக் கரிய திருமேனியையுடைய பரந்தாமனது சிவந்த தாமரை போன்ற திருவடிகளை (எளிதில்) காட்டிக்கொடுக்கும் பெருமையினையுடைய திருவாயமொழியின் (பாராயண) ஓசையே (அந்நகரில்) விசேஷித்திருக்கும். (எ-று.) (கச)

கரு. மாடைபன்மணிக்கவரிதேர்நெருங்கணிமறுகும்
மேடைபொற்றுகிற்கொடிமதில்கோபுரம்விரைப்பூ
ஓடைபூகதத்துடைவைநந்தனவனமொளிர்பொன்
ஆடைமங்கையராடரங்களம்பலவமையும்.

(இ·ள்.) பொன்னுலமைந்த பலமணிகளையுடைய சாமரைபொருந்திய தேர்கள் நெருங்கும் அழகிய வீதிகளும்,மேடைகளும், அழகிய துகிற்கொடிகளையுடைய மதில்களும், கோபுரங்களும், மணங்கொண்ட புஷ்பங்கள் மலர்ந்த ஓடைகளும், கமுகவரிசைகளையுடைய உழவுக்கொல்லைகளும், நந்தனவனங்களும், பிரகாசிக்கும் பொன்னுடையையணிந்த மங்கையர் நடனஞ்செய்யும் நாடகசாலைகளும் கணக்கில்லாதனவாய்ப் பொருந்தியிருக்கும்.(எ-று.)

[எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீஹஸ்திகிரி.]

கசு. எந்தமாநகரமுமிந்தமாநகர்க்கிணையின்
றந்தமாநகர்காண்குவாமெனவுளத்தமையாச்
சுந்தரத்துடனெழுந்ததேபோலமீத்துலங்கும்
மந்தரத்திறற்கடல்கடைந்தோன்கரிமலையே.

(இ-ள்.) பெருமையையுடைய எந்த நகரமும் இந்தப் பெரிய திருக்கச்சிநகருக்குச் சமானமாவதில்லை: (அங்ஙனம் சமானமாகக்கூடியதுளதாயின்) அதனைக்காணக்கடவோமென்று நினைத்து அழகோடு மேலோங்கியதுபோல உயர்ந்து விளங்கியிருக்கும்; மந்தர மலையினாலே திருப்பாற்கடலைக்கடைந்த எம்பெருமானது ஸ்ரீஹஸ்திகிரி. (எ-று.) (கசு)

கஎ. ஆயவையமாளிகைவயினயன்மகமயர்நாட்
டேயவுத்தரவேதிநின்றெம்பிரான்றோன்ற
மேயபுண்ணியகோடிவான்மணிவெயில்விரிப்பச்
சேயவானவர்வணங்கிடவிளங்குமத்திகிரி.

(இ-ள்.) பிரமதேவனது நியமநத்தின்படி விசுவகர்மாவினால் உண்டான வையமாளிகையென்னும் சிறந்த இடத்தில் பிரமதேவன் யாகஞ்செய்யும் போது பரிசுத்தமான (உத்தரவேதி) வடக்கின்கண்ணமைந்த யாககுண்டத்திலிருந்து எமக்கு உபகாரகனான பேரருளாளப்பெருமான் ஆவிர்ப்பவித்தருளவும், பொருந்திய புண்ணியகோடி விமானமானது உயர்ந்த ரத்தின ஒளியை வீசவும் விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் வணங்கவும் அந்த ஸ்ரீ ஹஸ்திகிரியானது விளங்கிக்கொண்டிருக்கும். (எ-று.) (கஎ)

[பொய்கையாழ்வார் திருவவதாரம் பண்ணின பொற்றாமரைப் பொய்கை.]

கஅ. கதிரினேழ்பரிமாமணியிரதமுங்கடவுள்
மதிவிமானமுங்கடக்கொணுவம்மலைமதில்சூழ்
முதிரும்பன்மணிக்கோயில்வாழ்முகிலினைமுதிர்ந்த
கதியினதனைக்கண்ணனைக்கருணைவாருதியை

(இ-ள்.) சூரியனது ஏழு குதிரைகள்பூண்ட பெரிய இரத்தினமயமான தேரும் தெய்வத்தன்மையுள்ள சந்திரனது விமானமும் கடப்பதற்கரிய அந்தக் கரிகிரியில் மதில்களாற் சூழப்பெற்ற முதிர்ந்த பல மணிமயமான திருக்கோயிலில் நித்திய வாசஞ்செய்யும் மேகம்போன்றவனை, முதிர்ந்த கதியாகிய மோக்ஷத்துக்குத் தலைவனை, கண்ணனை, கருணைக்கடலை,(எ-று.) ()

கசு. வையமாமயின்மகிணனைமாயனைமணிப்பூஞ்
செய்யதாமரையுறைபெருந்தேவிநாயகனைத்
துய்யநான்முகன்றவத்தினற்றோன்றுமாதவனைப்
பையராவணைப்பாற்கடற்றுயில்பராபரனை.

(இ-ள்.) பெருமைபொருந்திய மயில்போன்ற பூமிப்பிராட்டியாருக்குக் கணவனை, மாயனை, பொகுட்டையுடைய அழகிய சிவந்த தாமரைமலரில் எழுந்தருளியிருக்கும் பெருந்தேவித் தாயாருக்கு நாயகனை, பரிசுத்தமாகிய பிரமனது தவத்தினால் ஆவிர்ப்பவித்த மாதவனை, படங்களையுடைய திருவனந்தாழ்வானாகிற அணையின்மீது திருப்பாற்கடலில் அறிதுயிலமரும் பராபரனை, (எ-று.) (கசு)

௨௦. வணங்குநான்முகன்வாசவன்முனிவரர்வானோர்
கணங்கடோய்வதுகதிதருகிற்பதுகருணைக்
குணங்களாலுயர்மாதவனருளெனக்குளிர்ந்த
தணங்குதீர்ப்பதக்கோயிலின்குடதிசையதுவால்

(இ-ள்.) வணங்கும் பிரமனும், இந்திரனும், முனிவர்கள் தேவர்களின் கூட்டங்களும் நீராடுவது; மோக்ஷந்தரவல்லது; கருணைக் குணங்களாலுயர்ந்த பெரியபிராட்டியாருக்கு நாயகனது திருவருள்போலக் குளிர்ந்தது; (பிறவி) வருத்தத்தை நிவர்த்திப்பது; எம்பெருமானெழுந்தருளிய அத்திருக்கோயிலின் மேற்குத்திக்கிலிருப்பது; (எ-று.) (௨௦)

௨௧. நீலந்தாமரைகுமுதமேமுதலியநெருங்கிச்
சீலஞ்சால்வயிணவருளமெனநனிதெளிந்து
கோலஞ்சார்மடநடையனமளியினங்குலவும்
ஞாலஞ்சால்புறவிளங்குபொற்றாமரைநளினி.

(இ-ள்.) நீலோற்பலம் தாமரை அல்லி முதலிய மலர்கள் நெருங்கி, ஞானவொழுக்கங்களையுடைய ஸ்ரீவைஷ்ணவர்களது திருவுள்ளம்போல மிகத்தெளிவுடைந்து, அழகிய இளமையான நடையையுடைய அன்னக் கூட்டங்களும் வண்டுகூட்டங்களும் பொருந்தி, உலகம் மேன்மையடையும்படி விளங்கியிருக்கும் பொற்றாமரைப்பொய்கை. (எ-று.) (௨௧)

நளினி-தடாகம். நளினமிருந்தறசரியது நளினி. நளினம்-தாமரை. இங்கே தாமரை நளினியென்றது 'சேற்றிற்பங்கம்' என்பதுபோல.

௧௮-வது முதல் இதுவரையில் உள்ள நான்கு பாக்களும் ஒருதொடர். கோயில்வாழ் முகிலினை நாதனை பராபரனை வணங்கும் கணங்களாடுவது, கதிதருகிற்பது, குளிர்ந்தது, கோயிலின் குடதிசையது பொற்றாமரை நளினி எனக் கூட்டுக.

[பொய்கையாழ்வார் திருவவதாரம்.]

வேறு

௨௨. வளங்கெழுமினையபொய்கையினின்மாதவன்
உளங்கெழுமாமலருதித்தசோமனிற்
றுளங்கலிறிருக்கரப்பணிலந்தூநறைத்
தளங்கொடாமரையினேர்தனயனாகியே.

(இ-ள்.) மிக்க வளங்கொண்ட இத்தகைய பொற்றாமரைத்தடாகத்தில், தேனையும் இதழையுமுடைய பரிசுத்தமான (ஓர்) பொற்றாமரைமலரில், (எம்பெருமானது) கலக்கமற்ற திருக்கைகளிலணிந்த ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வான், மாதவனது கலியாணகுணங்கள் நிறைந்த திருவுள்ளமாகிய பெருமை பொருந்திய மலரில் உதித்த சந்திரனைப்போலே ஒரு குழந்தையாகி, (எ-று.) (௨௨)

௨௩. துலைமதியோணமாந்தூயநாட்புகழ்
நிலைபெறத்தோன்றியங்கமுதநீள்குரல்
சிலைமுகில்கச்சிமால்செவியிற்சார்தலும்
உலைவில்சீர்க்கருடன்மீதொல்லையெய்தினான்.

(இ-ள்.) ஐப்பசி மாதத்தில், திருவோணமாகிய பரிசுத்தமான நக்ஷத்திரத்தில், தம்முடைய புகழானது நிலைபெறும்படி திருவவதாரஞ்செய்து அங்கிருந்தழுத பெருங்குரலானது, வில்லிட்டிருக்கும் மேகம்போலே திருக்கச்சியி லெழுந்தருளியிருக்கும் எம்பெருமானது திருச்செவியிற் சேர்ந்தவுடன் (அவ்விறைவன்) கெடுதலில்லாத சிறப்பினையுடைய பெரியதிருவடியின்மீதேறி விரைவாக அங்கு எழுந்தருளினன். (எ-று.) (உ௩)

ஒரு தொடரான மேலிரண்டு பாக்களையும் பணிலம் பொய்கையினில் தாமரையில் சோமனைப்போல், ஓர் தனயனாகி அழுதகுரல் செவியிற் சார்தலும் கச்சிமால் கருடன்மீது ஒல்லை யெயதினான் எனக்கூட்டுக.

[பொய்கையாழ்வார் அருள்பெறுவது.]

உ௪. புங்கவர்மலர்மழைபொழியமாதவர்
எங்கணுமிறைஞ்சிவாழ்த்தெடுப்பவேடலர்
பங்கயமலர்மிசைத்தோன்றும்பாலனைச்
செங்கரத்தெடுத்தணியாகஞ்சேர்த்தினன்.

(இ-ள்.) தேவர்கள் பூமாரிபொழிபவும் பெருந்தவத்தையுடையோர் எங்கும வணங்கிவாழ்த்தவும் இதழ்கள் விரித்த பொற்றாமரைமலரில் அவதரித்த (அந்தப்) பாலனை (கச்சிமால்) தன் சிவந்த திருக்கைகளாலெடுத்து அழகிய திருமேனியில் அணைத்தருளினன். (எ-று.) (உ௪)

உ௫. வண்டறுமலர்க்குழல்வனசமங்கைநீ
கொண்டணிமுலையருத்துகெனக்கோதையுந்
தண்டளிர்க்கரங்கொளாவருத்தத்தானமிர்
துண்டனன்றினம்புதிதுண்ணுங்கீர்த்தியான்.

(இ-ள்.) (பிறகு பெரியபிராட்டியாரைக்கடாக்ஷித்து) வண்டுகள் நீங்காத மலர்களை யணிந்த கூந்தலையுடைய தாமரைமலரிலிருக்கும் மங்கையே! (இந்தப்பாலனை) நீ எடுத்துக்கொண்டு (நினது) அழகிய முலையூட்டுவாயென் றருளிச்செய்யப் பெரியபிராட்டியாரும் குளிர்ந்த தளிரபோன்ற திருக்கைகளிற்கொண்டு திருமுலையூட்டவே தினமும் புதிதுபடும் பிரபாவமுடைய அப்பாலன் உண்டனர். (எ-று.) (உ௫)

உ௬. நாமமும்பொய்கையென்றிசைத்துநாரணன்
ஏமமாமருமறையியம்பிசெந்தமிழ்ப்
பாமறைநவில்கெனப்பரிந்துகேட்டனன்
காமமும்வெகுளியுங்கடிந்தகாட்சியான்.

(இ-ள்.) பெருமான், (அப்பாலனுக்குப்) பொய்கையார் எனத் திருநாமமுஞ்சார்த்தி, நிரதிசய இன்பந்தரும் அரிய ரசியார்த்தங்களை யருளிச்செய்து, செந்தமிழ்ப்பாக்களாலே வேதார்த்தங்களைச் சொல்லக்கடவாயென் றருளிச்செய்ய, காமத்தையும் வெகுளியையுங் கோபித்த ஞானக்கண்களையுடைய பொய்கையாழ்வார் விரும்பிக்கேட்டனர். (எ-று.) (உ௬)

உ௭. எண்ணிலாமுனிவரரமரரோத்திட
மண்ணியபொன்மதில்வளாயமாமணிப்

புண்ணியகோடியாம்விமானப்பூதர
நண்ணினன்கேடிலாவரமுநல்கினன்.

(இ-ள்.) (அதன்பின்னர்) கணக்கற்ற முனிசிரேஷ்டர்களும் தேவர்களும் துதிக்க அலங்கரித்திருக்கும் பொன்மயமான மதில்சூழ்ந்த பெருமை பொருந்திய இரத்தினமயமான புண்ணியகோடி விமானம் பொருந்திய ஸ்ரீஹஸ்திகிரியிலெழுந்தருளிய பெருமான் ஆழ்வாருக்குக் கேடில்லாத வரத்தையுங் கொடுத்தருளினன். (எ-று.) (உஎ)

உஅ. வரம்பெறுபொய்கையும்வணங்கிவாழ்த்திமால்
அரங்கமேமுதற்பதியனைத்துமாரண
நிரம்பியதமிழிணுனிகழ்த்தினைருள்
பரம்புபூதன்பவம்பகருவாமரோ.

(இ-ள்.) (இப்படி) வரத்தைப்பெற்ற பொய்கையாழ்வாரும், (பேரருளாளனை) வணங்கி வாழ்த்தி, (விடைபெற்றுக் கொண்டுபோய்) திருமால் எழுந்தருளியிருக்கும் திருவரங்கம் முதலிய எல்லாத் திருப்பதிகளிலும் வேதார்த்தங்கள் நிறைந்த தமிழ்ப்பாக்களையருளிச்செயதனர். (இனி ஆன்மாக்கள் விஷயத்தில்) திருவருள் பரப்பிய பூதத்தாழ்வாரது திருவவதார வைபவத்தைச் சொல்லுவோம். (எ-று.) (உஅ)

## பூதத்தாழ்வார்

திருவவதாரஸ்தலமான திருக்கடன்மல்லைச் சிறப்பு.

வேறு

உகூ. அறைந்தமாறிருக்கச்சிசூழ்தொண்டைநாடதனில்
நிறைந்தவாருதிதீரத்தினீலமேகம்போல்
உறைந்தநாயகன்றிருப்பதியூழிபேர்வுறினும்
மறைந்திடாதுமிக்குயர்புகழ்த்திருக்கடன்மல்லை.

(இ-ள்) முன் சொன்ன திருமாலினது திருக்கச்சிநகரைச்சூழ்ந்த தொண்டைநாட்டில், நிறைவுற்ற சமுத்திர தீரத்தில், நீலமேகம்போல நித்தியவாசம்பண்ணும் இறைவனது திருப்பதியாகும்; ஊழிகாலம் பெயர்ந்தாலும் மறையாமல் மிகவுமுயரும் புகழையுடையதான திருக்கடன்மல்லை. (எ-று.)

௩0. போதவேதியர்வேள்வியங்கியிற்சொரிபொரிபோற்
சீதவெண்டிரைதுகிர்வனத்தாரங்கள்சிதற
மீதமர்ந்தபுட்குலமிரீஇப்புகையின்மீவிரியாக்
கேதகைக்கிளர்வனம்புகாத்துயில்வளங்கெழுமும்.

(இ-ள்.) (அத்திருப்பதியானது) ஞானமுடைய வேதியர்கள் யாகாக்கினியிற் சொரியும் பொரியைப்போலே குளிர்ந்த வெண்மையான அலைகளானவை பவளக்காட்டில் முத்துக்களைச்சிதற, (அதனாலே அந்தப் பவளக்காட்டின்) மேல் பொருந்தியிருந்த பறவைக்கூட்டங்கள் அஞ்சியோடி, புகைபோல ஆகாயத்தில் பரவி, உயர்ந்த தாழைவனத்திற் புகுந்து துயிலுதற்குக் காரணமான வளப்பம் நிறைந்திருக்கும். (எ-று.) (௩0)

௩௧. மணியுஞ்செம்பொனுமுத்தமுஞ்சந்தமுமணியால்
அணியுமஞ்சிகைமான்மதத்தொடுநறையகிலும்
பணியும்வெண்ணிறப்பளிதமும்பற்பலகலையுந்
தணியுமாவணத்தொலிதிரையொலியினைத்தடுக்கும்.

(இ-ள்.) இரத்தினங்களும், சிவந்த பொன்னும், முத்தும், சந்தனமும், மணிகளால் அழகுபெறச் செய்த பெட்டியிலிருக்கும் கஸ்தூரியும், வாசனையுடைய அகிலும், ஆபரணங்களும், வெண்ணிறமுடைய கருப்பூரமும், பலவகையான ஆடைகளும் பொருந்திய கடைகளிலுள்ள ஓசையானது, கடலினோசையைத் (தன்னிலும் மிகாதபடி) தடுக்கும். (எ-று.) (௩௧)

[பூதத்தாழ்வார் திருவவதாரம் பண்ணின தடாகம்.]

௩௨. இனையமல்லையம்பதிவயினெம்பிரானெழிலைப்
புனையும்வாவியொன்றரவிந்தங்குவளைகள்பொதுளி
வினையியாவையுங்கடிந்துமாலடிபணிவிமலர்
நினைவினாழ்ந்தவர்புரியுமாதவத்தினீர்நிறையும்.

(இ-ள்.) இப்படிப்பட்ட திருக்கடன்மல்லையில், எம்பெருமானது அழகைக்கொண்ட தடாகமொன்று, தாமரை நீலோற்பலங்கள் தழைத்து, எல்லா வினைகளையுங் கடிந்து, ஸ்ரீயப்பதியின் திருவடிகளைப்பணியும் மலரகிதரான பாகவதர்களது திருவுள்ளம்போல கம்பீரஸ்வபாவமுடையதாய், அவர்கள் செய்யும் மகத்தான தவத்தைப்போலப் பரிசுத்தமான நீர் நிறைந்திருக்கும். (எ-று.) (௩௨)

[பூதத்தாழ்வார் திருவவதாரம்.]

௩௩. அலையினைப்பொருவத்தடாகத்திடையணிபொற்
கலையினைப்புனையெம்பிரான்றிருக்கதைகடறபாரா
நிலையினிற்றமிழ்மறைமுறைநிறுவுவானினையா
மிலைதருங்கருநீலமாகரமதாவிரும்ப

(இ-ள்.) (விசாலத்தால்) கடலுக்குச் சமானமாகிய அத்தடாகத்தினிடத்து, அழகிய பொன்னுடையைத்தரிக்கும் எம்பெருமானது அழகிய கதாயுதாழ்வான், பூமியினிடத்துத் தமிழ்வேதத்தை முறையாக நிறுத்தத் திருவுள்ளங்கொண்டு, (எம்பெருமான்) அணியும் கரிய நீலோற்பலமலரை (தமது திருவவதாரத்துக்கு) இடமாக விரும்பிக்கொள்ள, (எ-று.) (௩௩)

௩௪. கருத்தனுங்கிவெவ்வினைநனிதுணுக்கொடுகலங்க
நிருத்தநல்வினைதமிழ்மறையகவயினிகழப்
பெருத்தபூதமொத்தழுகுரற்றிசைதொறும்பிறங்க
உருத்தசெங்கதிரொனவதனிடைமைந்தனுதித்தான்.

(இ-ள்.) பூமியினிடத்துக் கொடிய வினையானது மனம் வருந்தி மிகுந்த அச்சத்துடன் கலக்கமடையவும், நல்வினையும் தமிழ்வேதமும் தாண்டவம் புரியவும், பெரியபூதம்போன்று அழுங்குரலானது திசைகள்தோறும் நிறைய, உதயமான சிவந்த சூரியன்போல அம்மலரில் ஒருகுழந்தையாகத் திருவவதாரஞ்செய்தனர். (எ-று.) (௩௪)

பூதமொத்து என்றது 'பூ ஸத்தாயாம்' என்கிற தாதுவின்படி எம்பெருமானால் ஸத்தை (நிலைமை) பெற்றவர்போல என்பது தோன்றவென்க.

4

[பூதத்தாழ்வார் அருள்பெறுவது.]

கடரு. விளங்குமைப்பசியவிட்டத்துவேதமோர்நான்கும்
உளங்குலாவவந்துதித்தவம்மதலையையுலவா
வளங்குலாமல்லைமாதவன்வந்தெடுத்தருளாற்
றளங்கொடாமரைத்தையல்கைத்தலத்தினிலளித்தான்.

(இ-ள்.) விளங்கும் ஐப்பசிமாதத்தில், அவிட்டநக்ஷத்திரத்தில், நான்கு வேதங்களும் மனங்களிக்க வந்தவதரித்த அக்குழந்தையை, கெடாத வளம் பொருந்திய திருக்கடன்மல்லையி லெழுந்தருளியிருக்கும் திருமால் வந்து எடுத்துக்கொண்டு, கிருபையோடு, இதழ்களையுடைய தாமரைமலரிலிருக்கும் பெரியபிராட்டியார் திருக்கைகளில் கொடுத்தருளினன். (எ-று.) (கடரு)

கடசு. கொடுத்தலும்புவியனைத்துமீன்றருண்மலர்க்குயிலும்
எடுத்துமார்பகத்தணைத்தணியிணைமுலையருத்தா
விடுத்தவக்கணத்தெம்பிரான்றிருப்புகழ்விரிக்கத்
தொடுத்தனன்பெயர்பூதனென்றமலனுஞ்சொற்றான்.

(இ-ள்.) (அங்ஙனம் பெருமான்) கொடுத்தவளவிலே உலகமெல்லா மீன்றருளும், தாமரை மலரிலிருக்கும் குயில்போன்ற பிராட்டியாரும் எடுத்துத் திருமார்பிலணைத்துக்கொண்டு அழகிய இரண்டு தனங்களும் ஊட்டி விடுத்த அந்த க்ஷணத்தில் (ஆழ்வார்) எம்பெருமானது திருப்புகழை விரிக்கத் தொடங்கினர். மலரகிதனுன பெருமானும் (அவருக்குப்) பூதத்தார் எனத் திருநாம முரைத்தருளினன். (எ-று.) (கடசு)

கடஎ. பரிவினோக்கியக்குமரனைப்பின்னரும்பரமன்
விரிதருந்தமிழ்த்தொடையினம்பதப்புகழ்விளம்பென்
றுரியநல்வரமளித்தகன்றனனுரவோனும்
தெரிவருந்தகைத்திருப்பதியெங்கணுந்திரிந்தான்.

(இ-ள்.) பரமன், பின்னரும் அக்குழந்தையைப் பிரீதியோடு கடாக்ஷித்து, (பொருள்) விரிவையுடைய தமிழ்ச்செய்யுட்களால் நமது பதத்தின் புகழைச் சொல்வாயாகவென்று உரிமையான நல்லவரமளித்து மறைந்தருளினன். ஞானவலிமையையுடைய ஆழ்வாரும், தெரிவதற்கரிய பெருமையுடைய திருப்பதிகளெல்லாந் தரிசித்து யாத்திரைசெய்தனர். (எ-று.) (கடஎ)

## பேயாழ்வார்

திருவவதாரஸ்தலமான திருமயிலைச்சிறப்பு.

கடஅ. பூதனிப்பரிசமைந்தனன்பொருவில்பொற்புரிசை
மீதமைத்தபைங்கதலிகைவிசும்பளாய்விரைதேர்
ஆதவற்கமைகால்செய்வட்டத்தினிலசையும்
மாதவத்தர்வாரணகர்கடன்மருங்கரின்மயிலை.

(இ-ள்.) பூதத்தாழ்வார் இவ்விதமாயிருந்தனர். ஒப்பில்லாத அழகிய மதில்களின்மேல் நாட்டிய நல்ல துகிற் கொடிகள் ஆகாயத்தையளாவி, வி[illegible]ந்து செல்லுந் தேரையுடைய சூரியனுக்கு அமைந்த விசிறியைப்போல

அசைவதற்கிடமாய், மாதவத்தோர் வாழும் நகரமாய, கடலுக்குச் சமீபத்திலிருப்பது திருமயிலையாகும். (எ-று.) (௩அ)

[பேயாழ்வார் திருவவதாரம் பண்ணின திருக்குளம்]

௩௯. நற்றவர்க்கிடமாயவந்நகர்வயினறைதேன்
துற்றவாம்பனீலோற்பலந்தாமரைதுவன்றிக்
கொற்றமாறிருக்கச்சியின்குணதிசைநவின்ற
பொற்றடந்தனக்கிணையெனவிளங்குமோர்பொய்கை.

(இ-ள்.) நல்ல தவசிகளுக்கிருப்பிடமாகிய அம்மயிலையினிடத்து வாசனையுந் தேனும் பொருந்திய ஆம்பலும் நீலோற்பலமும் தாமரையும நெருங்கி, வெற்றியையுடைய திருமாலெழுந்தருளியிருக்கும் திருக்கச்சிக்குக் கிழக்கில், முனபு சொன்ன பொற்றாமரைத் தடாகததுக்குச் சமானமாக விளங்கிகொண்டிருக்கும் ஒரு திருககுளம். (எ-று.) (௩௯)

[பேயாழ்வார் திருவவதாரம்.]

௪0. நாம்பரன்பதம்பரவிலார்க்குதவுவாணறவார்
ஆம்பல்வாயடைந்தத்தடத்தைப்பசிசதயம்
மேம்படும்படிமதலையாய்க்கேட்டுளோர்வெருவித்
தேம்பவேயழுதலுமதுகேட்டனன்றிருமால்

(இ-ள்.) எம்பெருமானுடைய திருவடிகளை வணங்காதவர்களுக்கு அச்சத்தைக்கொடுக்கும் ஸ்ரீநாந்தகாழ்வான, அத்தடாகத்தில் தேன் நிறைந்த ஓர் செவ்வல்லி மலரினிடத்தடைந்து, ஐப்பசிமாதத்துச் சதயநக்ஷத்திரம் மேன்மை யடையும்படி ஒரு குழந்தை வடிவங்கொண்டு, கேட்டவாசள் பயந்து தேம்பும்படி அழுதவளவிலே அதைக் கேட்டருளினவனுன எம்பெருமான், (எ-று.) (௪0)

நாம்-அச்சப்பொருளுணர்த்தும் உரிச்சொல். "பேநாமுருமென வரூஉங்கிளவி யாமுறைமூன்று மச்சப்பொருள" என்பது தொல்காப்பியம்.

[பேயாழ்வார் அருள்பெறுவது.]

௪௧. தண்டடத்தடைந்தலர்மிசைமகவினைத்தழுவிக்
கொண்டலர்த்திருமடந்தைகைக்கொடுத்தலுங்கோதை
தொண்டர்வாழ்வுறத்திருமுலையளித்தனள்சுருதி
விண்டவாயினற்பேயெனும்பெயருமால்விதித்தான்.

(இ-ள்.) குளிர்ந்த அத்தடாகத்தையடைந்து, அல்லிமலரினிடத்து ஆவிர்ப்பவித்திருக்குங் குழந்தையைத் தழுவிக்கொண்டு, புஷ்பத்தில் வீற்றிருக்கும் பெரியபிராட்டியாரது திருக்கைகளிற் கொடுத்தருளலும், அப்பிராட்டியார், தொண்டராகிய ஆழ்வார் வாழும்படி திருமுலையூட்டினர். எம்பெருமானும் வேதத்தைச் சொல்லியருளின திருவாயினலே அக்குழந்தைக்குப் பேயார் என்னுந் திருநாமத்தைக் கொடுத்தருளினன். (எ-று.) (௪௧)

"பேயனுயொழிந்தே னெம்பிரானுக்கே" என்னும் அருளிச்செயலின்படி பகவத் விஷயத்தில் அதராதிசயமுடையவராதலால் இவர்க்கு இத்திருநாமம் நிரூபகமாயிற்று.

சஉ. அருளினுற்றவக்குமரனுஞ்சதுமறையறியாப்
பொருளினைக்கதிதருதிருவடிமலர்புகழ்ந்தான்
இருளினைத்தெறுபரிதியிற்பரமதமெருக்கித்
தெருள்பெறுத்தவனியையெனுவகன்றனன்றேவும்.

(இ-ள்.) பிராட்டி பெருமான்களின் திருவருளாலிருந்த அக்குழந்தையும் நான்கு வேதங்களுமறியாத பரம்பொருளான பெருமானது மோக்ஷத்தைத் தருந் திருவடித்தாமரைகளைப் புகழ்ந்தனர். இருளைப்போக்குஞ் சூரியனைப் போல இதரசமயங்களையழித்து, பூமியிலுள்ளவர்களைத் தெளிவடையும்படி செய்வாயாக என்றருளிச்செய்து தேவப்பிரானும் சென்றருளினன். (எ-று.)

[ஆழ்வார்கள் மூவரும் சந்தித்தல்.]

சங. அய்யனேகியபின்னரவ்வணிநகர்க்கயலாஞ்
செய்யவான்பொழில்புடைபயிறிருவலிக்கேணித்
துய்யஞானத்தின்கொழுந்தினைச்சுருதிநாயகனைப்
பையராவணைத்துயில்பரந்தாமனைப்பணிந்தான்.

(இ-ள்.) எம்பெருமான் எழுந்தருளினபிறகு, (பேயாழ்வார்) அவ்வழகிய திருமயிலைக்குச் சமீபமான, செம்மையாகிய உயர்ந்த சோலைகள் பக்கங்களிற் சூழப்பெற்ற திருவல்லிக்கேணியி லெழுந்தருளியிருக்கும் பரிசுத்தமாகிய ஞானத்தின் கொழுந்தை, வேதங்களுக்குப் பிரதான நாயகனை, படத்தையுடைய சேஷசயனத்தில் அறிதுயிலமரும் பரந்தாமனைப் பணிந்தனர். (எ-று.) (சங)

சச. அங்குநின்றுமாலமர்திருப்பதியுளவனைத்தும்
பொங்குமன்பிறேரோர்தினம்பரவியேபூதன்
தங்குதென்கடன்மல்லைவந்தவனெதிர்தழுவ
மங்குறுழ்பொழிற்கச்சியிலிருவரும்வந்தார்.

(இ-ள்.) (அப்பால்) அங்கு நின்றும் புறப்பட்டு, எம்பெருமானெழுந்தருளியிருக்கும் திருப்பதிகளாயுள்ளவைகளை யெல்லாம் மிக்க பக்தியோடு ஒவ்வொருதினமாக வணங்கிக்கொண்டு, பூதத்தாழ்வார் எழுந்தருளியிருக்கும் அழகிய திருக்கடன்மல்லைக்கு எழுந்தருளி, (அங்கு) பூதத்தாழ்வார் எதிர்கொண்டுவந்து தழுவிக்கொள்ளவே, அவ்விருவருங்கூடி மேகங்கள் தங்குஞ் சோலைகள் சூழ்ந்த திருக்கச்சிநகருக்கு எழுந்தருளினார்கள். (எ-று.)

சரு. அவனுறைந்தருள்பொய்கைதாள்பரவினரவனும்
உவகையோங்குறத்தழுவினனிருவரையொருநாட்
சிவணியங்கருளாளனைப்பணிந்துகீட்டிசையிற்
கவனவெம்பரியினனெழப்பாலியைக்கடந்தார்.

(இ-ள்.) (வந்த ஆழ்வார்களிருவரும்) அங்கு எழுந்தருளியிருக்கும் பொய்கையாழ்வார் திருவடிகளை வணங்கினார்கள்: அவரும் ஆனந்தம அதிகரிக்க அவ்விருவரையுந் தழுவினர். ஒருநாள் மூவருங்கூடி அங்கு எழுந்தருளியிருக்கும் பேரருளாளப் பெருமானைப்பணிந்து, நடைவேக முள்ள குதிரைகளையுடைய சூரியன் கிழக்குத்திக்கில் உதிக்குமளவிலே பாலாற்றைக் கடந்தார்கள். (எ-று.) (சரு)

கொண்டருழ்கருங்குழற்கனகாங்கியைக்கூவா
எண்டருந்தவமதனைநீயழித்திபோயென்றான்.

(இ-ள்.) (இத்தவத்தைக்) கண்ட இந்திரன், இப்பார்க்கவமுனிவர் செய்யும் தவத்தின்பயன், யோசிக்குமிடத்துத், தேவலோகமோ பிரமலோகமோ சிவலோகமோ என்று சந்தேகித்து, மேகங்கள் தாழும் கருமையான கூந்தலையுடைய கனகாங்கியென்பவளையழைத்து, நீ போய் (பார்க்கவமுனிவன் செய்யும்) விசேஷமான தவத்தையழிப்பாயாக என்றுரைத்தனன். (எ-று.) (௧0)

[கனகாங்கி பார்க்கவருடைய தவநிலையைக் கலக்கல்.]

௧௧. விடுத்தவக்கனகாங்கியும்வேதியன்றவத்தைக்
கெடுத்துமீள்வலென்றரிவையர்பலர்புடைகெழுமி
எடுத்தவீணையிற்குரன்முதலிசைகளேழிமிழ
அடுத்தமாதவப்பார்க்கவன்றனைமருங்கணுகா

(இ-ள்.) (இந்திரன்) விடுத்த அக்கனகாங்கியும் வேதியராகிய பார்க்கவமுனிவரது தவத்தை யழித்துத்திரும்புவேனென்று (துணிந்து), பெண்கள் பலர் தனது பக்கங்களில் சூழ்ந்திருந்து எடுத்த வீணையில் குரல்முதலிய ஏழிசைகள் ஒலியாநிற்கப், பெருந்தவமமைந்த அம்முனிவரது சமீபத்திற் சேர்ந்து, (எ.று.)

குரல் முதலிய ஏழிசைகள்—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. மிடற்றாற்குரலும், நாவினாற்றுத்தமும், அண்ணத்தாற் கைக்கிளையும், சிரத்தாலுழையும், நெற்றியாலிளியும், நெஞ்சால் விளரியும், மூக்காற்றாரமும் பிறத்தலறிக. (௧௧)

௧௨. விரித்தகூந்தலிற்றொடைபுனைந்தணிபலவிளக்கி
நெரித்தமைப்புருவத்தைவேள்சிலையினினெறித்துப்
பரித்தகுண்டலம்படிமிசைப்படுத்தெடுத்தணிந்து
சிரித்திலங்குருத்திகழ்கனிவாயினுட்செறித்து

(இ-ள்.) விரிவையுடைய கூந்தலில் மாலையையணிந்து, பலவாபரணங்களைப்பூண்டு, நெரிப்பையுடைய கரிய புருவத்தை மன்மதன் வில்லைப் போலச் செவ்வையாக நிற்கவைத்து, (தான்) அணிந்தகுண்டலத்தைப் பூமியிலிட்டெடுத்தணிந்து, சிரித்தலால் விளங்கி ஒளிரும் கனிபோன்ற அதரத்தை வாயில் மறைத்து, (எ-று.) (௧௨)

௧௩. முகமலர்க்குறுவெயர்வினைப்பலபலமுறையே
நகமதிற்கொடுதெறித்திருகிரிநிகர்நகிலின்
அகமடுத்தவுத்தரியத்தைநீக்கிமீதணிந்து
மிகவனப்பொடவ்வரிவையர்க்கெதிர்மொழிவிளம்பி

(இ-ள்.) முகமாகிய மலரிலுள்ள குறுவெயர்வையைப் பலபலவிதமாக நகத்தாலே கொண்டு தெறித்து, இரண்டுமலைக்குச்சமானமாகிய தனங்களினிடத்திருந்திய உத்தரீயத்தை நீக்கி (மீண்டும் அவற்றின்) மேலணிந்து, மிக்க அழகோடு அப்பெண்களுக்கு எதிர்மொழிகளைச் சொல்லி, (எ-று.)

௧௪. விழித்துணைக்கயன்மதர்த்திடத்திரைகரைமிசையிற்
கொழித்தநித்திலத்தெதிர்நகைத்தனல்விழிக்கொழுந்தால்

அழித்தசித்தசக்கடவுளுக்குடல்கொடுத்தவனைப்
பழித்தடக்குபொற்புடனடிபடியிடைப்படிய

(இ-ள்.) கண்களிரண்டும் கயல்மீன்களைப்போலப் பிறழ, கடலினலைகள் கரையின்மேல் கொழித்த முத்துகளைப்போல எதிரோ நகைத்து. நெருப்புக்கண்ணின் கொழுந்தினாலே அழிக்கப்பட்ட மனமதனுக்குச் சரீரத்தைக்கொடுத்தவனைப் பழித்தடக்குவதான அழகுடனே தனது கால்கள் பூமியினிடத்துப்படிய, (எ-று.)

இக்கனகாங்கியின் அழகுக்கு முன்னே மன்மதன் சரீரத்தினழகு விளங்காமையால் அப்படிப்பட்ட சரீரத்தை மன்மதனுக்குக் கொடுத்தோர் பழிப்படைந்து அடங்க எனக்கூறவந்தோர் 'சித்தசக்கடவுளுக்கு உடல் கொடுத்தவனைப் பழித்தடக்கு பொற்பு' என்றார். (கச)

கரு. நின்றுபார்க்கவமுனிக்கெதிர்கதிர்வளைநிரைகள்
ஒன்றுசெங்கையில்வீணைகொண்டுறையினையொழியா
நன்றுபாணியினலமெனவிஞ்சையர்நாண
வென்றுளாளடலனங்கவேள்புகழெலாம்விரித்தாள்.

(இ-ள்.) நின்று, பார்க்கவமுனிவருக்கெதிரில் ஒளியுடைய வளையல்வரிசைகள் பொருந்திய செம்மையான கையில் வீணையை எடுத்து (அதன்) உறையை நீக்கி, (இந்த) இராகத்தின் நலம் நன்றென்று வித்தியாதரர்கள் நாணமடையும்படி அவர்களை (இசையில்) வென்றவளாகிய (கனகாங்கி), யாவரையும் வெல்லும் வெற்றியையுடைய மன்மதனது கீர்த்தியெல்லாவற்றையும் விரித்தனள். (எ-று.) (கரு)

கசா. வயிரநீங்கினபுட்களுமிருகமுமலையோ
டுயிரிலாதவுங்குழைந்தனதளிர்த்தனவுலவை
செயிரிலாதவம்முனிவனும்யோகத்தின்செவ்வி
பயிறனீத்திசையாற்கனகாங்கியைப்பார்த்தான்.

(இ-ள்.) (அப்போது) பறவைகளும் மிருகங்களும் (தமக்குள்ள) விரோதம் நீங்கின. மலைகளும் உயிரில்லாதவைகளும குழைந்தன. பட்டமரக்கொம்புகள் தளிர்த்தன. குற்றமில்லாத அந்தப்பார்க்கவமுனிவரரும் யோகத்தின் செம்மையைப் பயிலுதலை யொழித்து, இராகத்தினாலே கனகாங்கியைப் பார்த்தார். (எ-று.)

முன்னர் இசையைக்கேட்டு இசைவரும் வழியே கட்புலனைச் செலுத்திக் கனகாங்கியைப் பார்த்தனராதலால் 'இசையால் கனகாங்கியைப் பார்த்தான்' என்றார். "நீரறு தருக்களுந் தழைக்க நின்றுமுன், நாரதன் முதலியோர் நவிற்று நாதயாழ், பாரத வமர்புரி பச்சை மாமுகில், ஆரதர் விடையைவர் தாற்று கின்றதால்" என்றும் "என்றவன் பாடக் கேட்டே யிறைஞ்சின குறிஞ்சி யேகா, நின்றன விலங்கு சாதி நிலங்கொண்ட பறவையெல்லாம், அன்று மெய்ம்மறந்து சோர்ந்தார் கின்னரரமரர் தாழ்ந்தார்" என்றும் பிறர் கூறுதலுங் காண்க. (கசா)

களு. இழைத்தகைதவமியாவையுங்கண்டனனிவன்மேற்
கழைத்தடஞ்சிலையாளிபூவாளியாற்கடுத்தான்
உழைத்திரண்டினுமூசலாட்டாவியோர்வண்ணம்
பிழைத்திருந்தவச்சமாதிவிட்டுளமயல்பிடித்தான்.

(இ-ள்.) அவள் செய்த பொய்யான சரச சேஷ்டைக ளெல்லாவற்றை யுங் கண்டார். அங்ஙனங்கண்ட இவர்மீது கரும்பாகிய பெரிய சிலையை யுடைய மன்மதன் புஷ்பபாணங்களை விரைந்து பிரயோகித்தான். (அதனு லே) வருந்தி, உசுவாசநிசுவாசங்களாலே ஊசல்போலாடும் ஆவி ஓர்வித மாகப் பிழைத்துத் தாம் பொருந்தியிருந்த அந்தச் சமாதியைவிட்டுத் தம துளத்தில் மயக்கங் கொண்டவராய், (எ-று.) (கஎ)

[முனிவர் கனகாங்கியை முயங்கல்.]

கஅ. எனதுமாதவம்பலித்ததென்றெதிரொழுந்திறைஞ்சித்
தனதுமார்பகத்தவண்முலைமுழுகுறததழுவா
மனதுமாவியுங்கவாந்தெனைவருத்துதன்மரபோ
உனதுதாள்புகழடிமையான்புணர்தியென்றுரைத்தான்.

(இ-ள்.) எனது பெருந்தவம் பலித்துவிட்டதென்றுசொல்லி எதிரே யெழுந்து அவளை வணங்கித், தனது மார்பினிடத்து அவள் தனம அழுந்தும்படி யணைத்து, "எனது மனத்தையும் உயிரையும் அபகரித் துககொண்டு என்னை வருத்துவது (உனக்குத்) தகுதியோ? நான் உனது பாதங்களைப்புகழும் அடிமையாவேன்; என்னைத் தழுவுவாயாக"; என்றுரை த்தார். (எ-று.) (கஅ)

கசு. வரிவிழிக்கனகாங்கியுமயர்தவம்வழுவிப்
புரிவதித்தொழில்பழுதிதுதவிர்கெனப்புகன்றாள்
எரிவயிற்படுமெழுகினிற்றளர்ந்துளமிளையா
உரியவத்தவப்பயனுனதுருவெனவொருவான்.

(இ-ள்.) வரிகள் பொருந்திய கண்களையுடைய கனகாங்கியும் "செய் யும் தவந்தவறிச், செயவதாகிய இத்தொழில் பழுதாகும்; இதைத் தவிர் வாயாக" என்று சொல்லினள். (பார்க்கவமுனிவர்) அக்கினியிற்பட்ட மெ ழுகைப்போலத் தளர்ந்து உள்ளஞ்சோர்ந்து "எனக்குரியதாகிய அந்தத் தவத்தின் பயன் உனது உருவேயாகும்" என்றுரைத்து அவளை விட்டு நீங் காதவராய (எ-று.) (கசு)

வேறு.

உ0. சங்கரனிடமுந்தாதைநாவுமூதாதைமார்புஞ்
செங்கயல்விழியாய்தேரின்மகளிரோதெய்வமன்றோ
அங்கதுதெளிந்தேயந்நாட்கௌசிகனயர்ந்தானென்றுப்
பொங்கணிமுலைதன்மார்பம்புதைதரப்புணர்ந்தானன்றே.

(இ-ள்.) "செம்மையான கயல்போன்ற விழியையுடையாய்! உருத்திர னுடைய இடதுபாகத்தையும் அவனுக்குத் தந்தையாகிய பிரமனது நாவை யும் மூதாதையாகிய விஷ்ணுவின்மார்பையும் அறியுமிடத்துப் பெண்களே தெய்வங்களாயிருக்கிறார்களே யன்றோ? அதைத் தெரிந்தேயன்றோ அக்கா லத்தில் விசுவாமித்திரர் தளர்ந்தனர்" என்று கூறி, பூரித்திருக்கும் அழகிய அவள் தனங்கள் தமது மார்பிற் புதையும்படி தழுவினர். (எ-று.) (உ0)

[முனிவர் தீர்த்தயாத்திரை போதல்.]

உக. முயங்கியபின்னர்ப்பையுண்முதிர்திரைப்பரவைமூழ்கி
மயங்கியிம்மாயைதீரவல்லுநர்யாரோயென்றுப்

பயங்கிளர்தவத்தைநீக்தப்பாதகந்துடைப்பானெண்ணி
இயங்குநீர்சகங்கையாதியிருநதிபடியசசென்றான்.

(இ-ள்.) (இப்படி) தழுவியபின்னர், துன்பமாகிற அதிகமான திரைகளையுடைய சமுத்திரத்தில் முழுகி மயங்கி, இப்பெண்மாயையினின்று நீங்கவல்லவர்கள் யாவரென்று கொண்டு, பயனமிருவதான தவஞ்செய்வதை யொழித்த அப்பாதகம் போக்கவெண்ணி, விளக்கமுடைய நீரமைந்த கங்கைமுதலிய பெருமையையுடைய நதிகளில் நீராடச் சென்றார். (எ-று.)

[பக்திஸாரர் திருவவதாரம்.]

உஉ. அருட்கனகாங்கிதன்பாலச்சுதனங்கையாழி
கருப்பமுற்றிடலுமேனிகலைநிறைகதிரிற்காணச்
சுருக்குடைமருங்குறேன்றச்சூனிறைந்துளைந்துசோரப்
பொருகனெனத்தைமகத்தோர்புதல்வனைப்புவியினீன்றாள்.

(இ-ள்.) அக்கனகாங்கியினிடத்துக், கிருபைவடிவாய் அடியார்களைக் கைவிடாத பெருமானது திருக்கைகளிலிருக்கும் திருவாழியாழ்வான், கர்ப்பமாக வந்தடைதலும், அவளதுமேனி கலைகள் நிறைந்த சந்திரனைப்போல (வெளுத்துக்) காட்டவும், (இருப்பது தோன்றாமல்) நுட்பமான இடை தோன்றவும், கர்ப்பம் நிறைந்து, (அவள்) வருந்திச்சோர, (ரிஷிபிண்டம் இராத்தங்கா தென்கிறபடி) உடனே தைமாதத்தில் மகநக்ஷத்திரத்தில் பூமியினிடத்து ஒருபுதல்வனைப் பெற்றாள். (எ-று.) (உஉ)

* பருவமாமுகிலின்மின்போற்பயில்வுறுபிண்டந்தானுங்
கருவுடைப்பையிறேடுங்கண்செவிமுதலவாய
வுருவமின்னதெனநன்னருணர்வரிதாகித்தோன்றத்
தருவுடையமரர்நாட்டுத்தாக்கணங்கிறும்பூதுற்றாள்

(இ-ள்.) கார்காலத்து மேகத்திலுண்டான மின்னலைப்போலப் பொருந்திய அந்தப்பிண்டம், கர்ப்பப்பையுடன் கண் செவி முதலான உருவம் இப்படிப்பட்டன வென்று நன்றாக அறிவதற்கரிதாகத் தோன்றவே, கற்பகத்தருவையுடைய தேவலோகத்திலுள்ள தெய்வப்பெண்ணான கனகாங்கி ஆச்சரியமடைந்தாள். (எ-று.)

உங. ஈன்றவம்மகவைச்சூரலிறும்பில்வைத்திமையோர்மங்கை
சான்றவர்பரவுமாகண்டலனுறைதலத்தைச்சார்ந்தாள்
வான்றவழ்திகிரிச்செங்கேழ்மணிச்சுடர்வடிவம்பார்மேற்
றேன்றவந்திழிந்ததேபோற்றுலங்கினன்றெலைவிலானும்.

(இ-ள்.) அப்படிப்பெற்ற அக்குழவியை ஒரு பிரப்பம்புதரில் வைத்துவிட்டு, அத்தெய்வப்பெண் பெரியோர் வணங்கும் இந்திரனுறையும் தேவலோகத்தைச் சேர்ந்தாள். ஆகாயத்தில் சஞ்சரிக்கும் தேரையுடைய சிவந்த ஒளிபொருந்திய அழகிய சூரியனது வடிவம் பூமியின்மீது (எல்லோருக்குந்) தோன்றும்படி வந்திறங்கியது போல விளங்கினர் கெடுதலில்லாத ஆழ்வார். (எ-று.) (உங)

[பக்திஸாரர் பகவதநுக்கிரகம் பெறுதல்.]

உச. வந்தவண்மழிசைவாழுமான்மகிசாரநாதன்
அந்தமைந்தனைச்செங்கையாலணைத்தணியாகஞ்சேர்த்திக்

கந்தவாரிசப்பொன்கைக்கேகொடுத்தலுஞானக்காட்சி
தந்தருண்முலைப்பால்சாலவருத்தினள்கமலைதானும்.

(இ-ள்.) திருமழிசையில் நித்தியவாசஞ் செய்யும் திருமாலான மஹீஸார க்ஷேத்ரநாதன் அவ்விடத்துக்கு எழுந்தருளி, அந்தமைந்தனை (தமது) சிவந்த திருக்கையா லணைத்து அழகிய திருமேனியிற் சேர்த்து, வாசனையுடைய தாமரையி லெழுந்தருளிய பெரியபிராட்டியார் திருக்கையிற் கொடுத்தலும், அப்பெரியபிராட்டியும் ஞானமாகிய பார்வையைத் தந்தருளும் திருமுலைப்பாலை மிகவும் ஊட்டினர். (எ-று.) (உச)

உரு. திருமகண்முலையிற்றீம்பால்பரிதிநேர்சிறுவன்செங்கைப்
பெருவிரலுதவும்வண்ணமருளினன்பெருமான்றானும்
அருள்பலவரமுமீயாவாயுவுமளித்தான்பின்னும
இருவரும்புதல்வன்றன்னைவாழ்த்திவைத்தேகினரால்.

(இ-ள்.) (பின்னும்) பெருமானும் பெரியபிராட்டியாரது திருமுலைத் தடத்திலுள்ள இனியபாலைச் சூரியனுக்குச் சமானமான அக்குழந்தையினது சிவந்தகையிலுள்ள பெருவிரல் சுரக்கும்படி அருள்புரிந்தவனுய, (அடியார்க்கு) அளிக்கும் பல வரங்களுங்கொடுத்து (தீர்க்க) ஆயுளுங் கொடுத்தனன். பிறகு அப்பெருமானும் பிராட்டியாரும் அப்புதல்வனை வாழ்த்தி (அங்கு) வைத்துச் சென்றனர். (எ-று.) (உரு)

[ஆழ்வாரை அரிதாசர் கொண்டுபோய வளர்த்தல்.]

உசா. வள்ளன்மாலகன்றபின்னவ்வனத்திடைவளைந்துகூர்த்த
புள்ளமுங்கொண்டுஞாங்கர்ப்புகுந்தரிதாசனென்போன்
மெள்ளவேயெறியுங்காலைவேலியில்விரிந்தநீலப்
பள்ளவாருதியுட்டோன்றும்பரிதிநேர்மகவைக்கண்டான்.

(இ-ள்.) (இப்படி) உதாரத்துவமுடைய எம்பெருமான் நீங்கியபிறகு, (அவ்வூரிலிருப்பவராய்ப் புத்திரப்பேறில்லாத) அரிதாசனென்பவர், அவ்வனத்தினிடத்துப் புகுந்து வளைந்து கூர்மையான கொடுவாளைக் (கையிற்) கொண்டு அவ்விடத்தில் தாமதமாகப் பிரம்பு வெட்டிக்கொண் டிருக்கையில், விரிவையுடைய நீலநிறமான ஆழமுள்ள சமுத்திரத்திற் றோன்றும் சூரியனுக்குச் சமானமான அக் குழந்தையை அப்பிரப்பம் புதரில் கண்டனர். (எ-று.) (உசா)

உஎ. கான்றவம்மணியைக்காணுக்கட்செவிகவருங்காட்சி
போன்றவாவொடுகைக்கொள்ளாப்பொருந்தமார்பகத்திற்புல்லித்
தோன்றவாருதிபோலோகைதுணைவிழிவழிநீர்சோரத்
தான்றவாத்தவத்தனுயுட்கருதியேமனையைச்சார்ந்தான்.

(இ-ள்.) ஒரு சர்ப்பம் தான் உமிழ்ந்த அந்த மணியைக் கண்டு எடுத்துக்கொள்ளும் காட்சியைப் போல, ஆசையோடு கையிற்கொண்டு பொருந்தும்படி மார்பிலணைத்து (கரைகாணுத) சமுத்திரம்போலச் சந்தோஷந் தோன்றவும், இரண்டு கண்களினின்றும் ஆனந்தக்கண்ணீர் சோரவும், தாம் கெடாத தவத்தை யுடையவராக உள்ளத்தி லெண்ணிக்கொண்டே மனையை யடைந்து, (எ-று.)

'கான்றவமமணியைக்காணுக் கட்செவிகவருங்காட்சி' என்றது அவா வின் மிகுதியை யுணர்த்தி நின்றது. இராமனைத் திருவடியானவர் இலங்கை யிலிருந்த சீதாபிராட்டியாரைச் சேவித்துச் சக்கரவர்த்தித் திருமகனது திரு வாழியைக் கொடுக்கப், பிராட்டி அதனைக் கண்டு மகிழ்ந்து "இழந்த மணிபுற் றரவெதிர்ந்த தெனலானாள்" எனக் கம்பநாடர் கூறியவைகளையும் இங்குக் கட்டுரைத்ததனாலுமுணர்க. (உஎ)

உஅ. ஈய்ந்தனன்மனைவிபாலவ்விலங்கிழையொடிர்வந்தெங்கு
வாய்ந்ததிம்மகவாமுன்னைமாதவம்வந்ததென்று
வேய்ந்தபூண்முலையின்றீம்பாலருத்தலும்விரும்பானாக
ஆய்ந்தவரெவருமின்றதனைக்கெனவலையுற்றார்.

(இ-ள்.) (அக்குழந்தையை) மனைவியிடத்தில் கொடுத்தான். ஒளி விடும் ஆபரணங்களையுடைய அப்பாரியையானவள் (பாக்கியவசத்தால்) கிடைத்ததான இக்குழந்தையானது முன்செய்த பெரிய தவமே என் றுரைத்து ஆபரணங்களணிந்த தனது ஸ்தனத்தின் இனிய பாலை யூட்ட (அதனை ஆழ்வார்) விரும்பாதவராயிருக்க, இதனை யறிந்தவர் எவரும் (இக்குழந்தையைத்) தெய்வப்பெண் பெற்றதோவென்று சொல் லத் தொடங்கினார்கள். (எ-று.) (உஅ)

[கணிகண்ணார் திருவவதாரம்.]

உகூ. அதுதிடவிரதனென்னுமந்தணன்கேள்வன்பின்
விதுநிகர்வள்ளத்தின்பாலகொடுவரவிமலன்முற்றுங்
கதுமெனநுங்காவுள்ளங்களித்தனன்கண்டோரெல்லாம
இதுபுதிதெனநாடோறுமினியபாலவனுமீந்தான்.

(இ-ள்.) அவ்விசேஷத்தைத் திடவிரதரென்னும் (ஒரு) அந்தணர் கே ட்டு அன்புகொண்டு சந்திரனை நிகர்த்த வெண்மையான (ஒரு) பளிங்குவள்ளத் தில் இனிய பாலைக்கொண்டுவரப், பரிசுத்தரான ஆழ்வாரும் (அதனை) விரை வாக உண்டு திருவுள்ளங் களித்தனர். (அதைக்) கண்டவர்களெல்லோரும் இது ஆச்சரியமென் றுரைக்க, அத்திடவிரதரும் இப்படியே நாடோறும் இனிய பாலைச் சமர்ப்பித்து வந்தனர். (எ-று.) (உகூ)

கூ0. அளிக்குநாளாங்கோர்வைகலருந்துபாலதனிற்பாலன்
பளிகுவள்ளத்திற்பாகம்வைக்கவப்பார்ப்பானுண்ணுக்
களிக்குமுள்ளத்தனாகிக்கழிந்தமூப்பொழிந்துகண்ணால்
ஒளிக்குமவ்வுருவேள்பெற்றானென்னவோருருவம்பெற்றான்.

(இ-ள்.) (இப்படி) சமர்ப்பிக்கும் நாளில் ஒரு நாள் பாலனாகிய ஆழ் வார் தாம் அருந்தும் பாலில் (ஒரு) பாகம் (அந்தப்) பளிங்குவள்ளத்தில் வைக்க (அதை அந்தத் திடவிரதனென்னும்) பிராமணனுண்டு களிக்கின்ற உள்ளத்தையுடையவராகி, அதிகமான முதுமைப்பருவ மொழிந்து, மன் மதன், கட்புலனாகாத அவ்வுருவத்தை (இப்போது யாவருக்கும் புலப்படும் வண்ணம்) பெற்றானென்று சொல்லும்படி சமானமற்ற உருவத்தைப் பெற்றார். (எ-று.) (கூ0)

கூக. மற்றவன்மனைவிகோலவயிற்றின்மான்மலர்க்கையாழிக்
கொற்றமார்கலையொன்றெய்திவளர்தலுங்கருப்பங்கொள்ளாப்

பெற்றனள்புதல்வன்றன்னைப்பிறங்குநூற்பெருமையாவுங்
கற்றவந்தணனுஞ்சேயைக்கணிகண்ணனெனும்பேரிட்டான்.

(இ-ள்.) அவரது மனைவியின் அழகிய வயிற்றில் எம்பெருமானுடைய மலைபோன்ற திருக்கையிலுள்ள திருவாழியின் வெற்றியையுடைய ஒரு அமிசம் வந்தடைந்து வளர்ந்தலும், அவள் கர்ப்பங்கொண்டு, (ஒரு) புதல்வனைப் பெற்றனள். பெருமை நிறைந்த சாஸ்திரங்களெல்லாங் கற்ற அவ்வந்தணர், அக்குழந்தைக்குக் கணிகண்ணன் என்று நாமகரணஞ் செய்தனர். (எ-று.) (௫௧)

[ஆழ்வார் வளர்ந்து சாஸ்திராப்பியாசஞ் செய்தல்.]

௫௨. மறுவிலாவசுதேவன்பாலவந்தவதரித்தமாயோன்
தொறுவாகோனந்தகோபன்றொன்மனைவளர்ந்தாலென்ன
அறுதொழின்முனிவன்றன்பாலவதரித்தரிதாசன்பால்
உறுகுமரனுநாடோறும்வளர்ந்துவான்பிறையையொத்தான்.

(இ-ள்.) குற்றமில்லாத வசுதேவரிடத்து வந்து அவதரித்த கண்ணன், ஆயர்தலைவனான நந்தகோபரது பழமையான மனையில் வளர்ந்தது போல, அறுதொழிலையுடைய முனிவரிடத்து அவதரித்து அரிதாசனென்பவரிடத்துற்ற பிள்ளையாகிய ஆழ்வாரும் நாடோறும் வளர்ந்து ஆகாயத்திலுள்ள பிறையையொத்தனர். (எ-று.) (௫௨)

௫௩. நோக்கியபெரியோரெல்லாநுவலரிதிவன்சீரென்னச
சாக்கியஞ்சமண்மீமாஞ்சைதகவிலையாயிகத்தோ
டாக்கியசைவமவைசேடிகத்திலுற்றவற்றினூல்களை
நோக்கியேபொருளினோடெப்பனுவலுநன்குகற்றான்.

(இ-ள்.) பார்த்த பெரியோரெல்லாம் இவர் புகழ் சொல்லுதற்கரிதென்னும்படி சாக்கியம், சமணம், மீமாம்சை, தகுதியையுடைய நையாயிகத்தோடு சிவபிரானுண்டாக்கிய சைவம், வைசேஷிகம் ஆகிய சமயங்களிலிருந்து, அவற்றின் நூல்களை ஆராய்ந்து அர்த்தத்துடனெல்லா நூல்களையும் விளங்கும்படி கற்றனர். (எ-று.) (௫௩)

* பறபலசமயந்தோறும் புக்கொருபயனிலாதே
விறபனர்புகழமேவு மேதகைமழிசைக்கோமான
சொற்சிவவாக்கியப்பேர் துலங்கிடச்சைவராகி
நிற்பவக்காலந்தன்னி னெடியமாலன்பர்பேயார்

ஆங்குவந்தடைந்தன்னருக் ககந்தெளிவடையுமாறு
பாங்குடனுபதேசங்கள் பண்ணவேபுக்கபோதிற்
றுங்கியேசமயவாத மிருவருஞ்சாற்றப்பேயார்
ஓங்கிடத்தோற்றுப்பேயார்க் கடிமையாயுற்றானன்றே.

(இ-ள்.) பற்பல மதங்களிலும் பிரவேசித்து அங்கு ஒருபிரயோசனமுமற்றவராய, அறிவுடையோர் புகழும்படி யிருக்கும் திருமழிசையாழ்வார், சொல்லப்படும் சிவவாக்கியர் என்னும் பெயர் விளங்கும்படி சைவராயிருக்க, அக்காலத்தில் எம்பெருமானுக் கடியாராகிய பேயாழ்வார், அவ்விடத்துக்கெழுந்தருளி இவருக்கு மனந்தெளிவடையும்படி உரிமையுடன் உபதேசங்கள் செய்யப் புகுந்தபோது இருவருமெதிரிட்டுச் சமயவாதமுறைக்க, அவ்வாதத்தில் பேயாழ்வார் உயரவே சிவவாக்கியரான திருமழிசையார் தோல்வியுற்றுப் பேயாழ்வாருக் கடிமையாயினர். (எ-று.)

[சற்சமய மின்னறென்றுணர்ந்து தவநிலையிற் பொருந்தல்.]

௩௪. கற்றவச்சமயநூலிற்கதிதருஞானக்காட்சி
அற்றவமதித்துநீக்கியனையநீத்தழுங்கியுள்ளம்
நற்றவம்புரிவானெண்ணியிமயமால்வரையைநண்ணி
உற்றவன்பொருத்தற்காத்தவொருத்தனையுளத்துட்கொண்டு

(இ-ள்.) தாம் கற்ற அந்தச்சமய நூல்களில் மோக்ஷத்தைத் தரும் ஞானக்காட்சி இன்றியேயிருக்க, (அதனாலே) அவற்றை அவமதித்து நீக்கியொழித்து (நெடுங்காலம் அச்சமயவாராய்ச்சியில் காலஞ் சென்றதற்காக) மனம்வருந்தி, (அப்பால்) நல்ல தவஞ்செய்ய எண்ணிப் பெரிய இமயமலையைச்சார்ந்து, பொருந்திய அன்போடு கஜேந்திராழ்வானைக் காத்தருளின அத்துவிதீயனை எம்பெருமானைத் திருவுள்ளத்திற்கொண்டு, (எ-று.)

ஒருத்தல்-யானை. இவ்வாழ்வார் பிறசமயங்களைக் கைவிட்டபோது "சாக்கியங்கற்றோஞ்சமணங் கற்றோமச்சங்கரனார், ஆக்கியவாகமநூலாராய்ந்தோம்—பாக்கியத்தால், செங்கட்கரியவனைச் சேர்ந்தோநாந்தீதிலோம், எங்கட்கரியதொன்றில்." என்று அருளிச்செய்தனரெனக் கூறுவர். (௩௪)

வேறு.

௩௫. பொறிகளின்குணந்தொழிறவிர்த்துளமுறப்பொருத்தி
செறிகடுங்கனனடுவிருந்தயர்தவந்திருமால்
அறிகவென்றவணலகிலுளயர்ந்தனன்சிரத்தின்
நெறிகடந்துமீத்தவக்கனனிறைந்ததுநிமிர்ந்தே.

(இ-ள்.) ஐம்பொறிகளின் (புலன்களிற் செல்லும் சுபாவ) குணத்தையும் தொழிலையும் நீக்கித் திருவுள்ளத்தை ஒருபடியாகப் பொருந்தவைத்து, நெருங்கிய கொடிய அக்கினியின் நடுவிலிருந்து (தாம்) செய்யும் தவத்தைத் திருமால் அறியக்கடவர் என்று அங்குக் கணக்கற்றநாள் தவஞ்செய்தனர். (அந்தத்) தவமாகிய அக்கினி சிரத்தின் (பிரமரந்திர) நெறியைக்கடந்து உயர்ந்து மேலே நிறைந்தது. (எ-று.) (௩௫)

[கொங்கணசித்தன் ஆழ்வாரருள்பெறல்.]

௩௬. அங்கருந்தவமயர்தருங்காலையந்தரமேற்
கொங்கணப்பெயர்ச்சித்தனுங்கொடுவரிகடவாத்
தங்கலின்றியேபடர்தலுந்தவக்கனற்றடையால்
வெங்கடும்புலிதுணுக்குறுமீண்டதுவெருவி.

(இ-ள்.) அங்கு அரியதவஞ்செய்யும்போது, ஆகாயத்தின் மீது, கொங்கணசித்தனென்னும் பெயரையுடையவன், புலியை வாகனமாயேறிச் செலுத்தித் தங்குதலில்லாமற் செல்லுதலும், ஆழ்வாரது தபாக்கினியின் தடையினால் மிகக்கொடிய அப்புலியானது அச்சக்குறிப்படைந்து பயந்து திரும்பியது. (எ-று.) (௩௬)

௩௭. சித்தனுங்கொடுவரியொடச்சிகரியைச்சேரா
இந்தவம்புரிமுனிவனைக்காண்பனென்றிழிந்தே

கொத்தலர்ந்தபன்மரம்புடைபயின்மலைக்குகரத்
துத்தமன்றனைக்கண்டெதிர்வழுத்தலுமுரவோன்.

(இ-ள்.) கொங்கணசித்தனும் புலியோடு அம்மலையையடைந்து, இத்தகைய தவஞ்செய்யும் முனிவனைக் காணக்கடவே னென்றிறங்கிப், பூங்கொத்துக்களலர்ந்த பலமரங்கள் பக்கங்களிற் பொருந்திய அம்மலையின் குகையில் உத்தமராகிய ஆழ்வாரைச் சேவித்து, எதிர் நின்று தோத்திரஞ் செயதலும், ஞான வலிமையையுடைய ஆழ்வார், (எ-று.) குகரம்-குகை.

கூஅ. விழித்துநோக்கிநீயெவனெவைவிருப்பெனவினையை
இழித்துவாழ்தவச்செல்வயான்கொங்கணனிரும்பை
ஒழித்துமாழைசெய்விஞ்சைகண்டனன்றிரளுலத்தை
அழித்துமாழைசெய்விஞ்சைகண்டிலனெனவறைந்தான்.

(இ-ள்.) (திருக்கண்களை) விழித்துப்பார்த்து, நீயாவன்? (நின்) விருப்பங்கள் எவை? என்று அருளிச்செயய, (இரு) வினையை யழித்து வாழும் தவத்தைச் செல்வமாக வுடையீர்! நான் கொங்கண னெனபோன், இரும்பை (அதின் தன்மையை) யொழித்துப் பொன்னுக்கும் வித்தையைக் கண்டிருக்கிறேன்; திரண்டகல்லை (அதின் றன்மையை) அழித்துப் பொன்னுகச் செய்யும் வித்தையைக் கண்டிலேன் என்று சொல்லினன். (எ-று.) (கூஅ)

கூகூ. அரியதீதுகொலெனநகைத்தக்கணத்தலர்போல்
விரியடிக்கறைகுளிகைசெய்தளித்தலும்விடைகொண்
டுரியவிஞ்சைநன்றெனவியந்தோங்குபொன்னுருவந்
தெரியமால்வரைச்சித்திரகூடத்தைசசெய்தான்.

(இ-ள்.) (ஆழ்வார்) இது அரியதோ என்று நகைத்து, அப்பொழுதே மலரைப்போல விரிந்த தமது திருவடியழுக்கைக் குளிகைசெய்து கொடுத்தலும், கொங்கணசித்தன் விடை பெற்றுக்கொண்டு உரிய (இவ்) வித்தை நன்றென்று ஆச்சரியங்கொண்டு சிறந்ததான சித்திரகூட பருவதத்தை உயர்ந்த பொன்னுருவாகத் தெரியும்படி செய்தனன். (எ-று.) (கூகூ)

உ0. உளங்களித்துமால்வரையினவ்வுருவமிவ்வுலகில்
விளங்குறுதொளித்தகன்றனனகன்றபின்விரிந்த
களங்கொள்கந்தரக்கடவுளும்விடையினைக்கடவா
வளங்கொள்பார்க்கவன்மகற்கெதிருமையொடும்வந்தான்.

(இ-ள்.) (இப்படியானதினுல்) மனங்களித்துப் பெரிய சித்திரகூடத்தின் அப்பொன்னுருவம் இவ்வுலகில் விளங்காமல் மறைத்துவைத்துச் சென்றனன். (அப்படிக் கொங்கணசித்தன்) போனபிறகு, பரவிய விஷங்கொண்டிருக்கும் கண்டத்தையுடைய சிவபிரானும் உமாதேவியாரோடு ரிஷபவாகனமேறி வண்மையுடைய பார்க்கவமுனிவர் திருக்குமாரராகிய ஆழ்வாருக்கு முன்னே வந்து, (எ-று.) (உ0)

[சிவபிரானும் ஆழ்வாரும்]

உக. உன்னைமாதவத்துவந்தனமுளத்தவாவுதவி
நின்னையாள்கைநங்கடனெனநிறைதவத்தவனும்
முன்னைநாயகன்முகுந்தனென்கருத்துளான்மொழியில்
என்னைநீவரங்கேட்டிமீதென்வரமென்றான்.

(இ-ள்.) பெரியதவத்தால் உன்னையுவந்தோம்; உனது உளத்திலுள்ள விருப்பத்தைக் கொடுத்து உன்னையாள்வது நமது கடமையென்றுசொல்ல; நிறைந்த தவத்தையுடைய ஆழ்வாரும், முதன்மையான நாயகனாகிய முகுந்தப் பெருமாள, சொல்லுமிடத்து, எனது உள்ளத்திலெழுந்தருளியிருக்கின்றான்; நீ என்னை வேண்டிய வரங்கேட்பாயாக, என் வரம மேலானது என்று சொல்லியருளினர். (எ-று.) (௪௧)

[அடியில்வரும் வைபவம் குருபரம்பரைகளிற் கண்டது.]

உருத்திரமூர்த்தி, 'நீர் விரும்பினதொன்றைக் கேட்டுக்கொள்வீர்' என்ன, ஆழ்வார் புன்முறுவல்செய்து 'ஆகில் மோக்ஷந்தரவல்லையோ்ல் தாராய்' என்றார். அதற்கு 'அது என்னால் தரக்கடவதன்று, ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே தரவல்லன்' என்றா. ஆனால் 'இன்றுசாவாரை நாளைச் சாகும்படி பண்ணவல்லையோ' என்று கேட்க, 'அதுவுங் கர்மாநுகுணமன்றோ' என்றார். அப்பால் ஆழ்வாரும், "ஊசி மேவும் வழி யல்லூசி தனிற் பூண்ட நூல்போம் வரந்தருதி" என்று பரிகசித் துரைத்தருளினா.

௪௨. நகைத்துருத்திரகடவுளுநுதலவிரிநயனச
சிகைகொடுங்கனல்காட்டிவிண்ணடுங்குறச்சினந்தான்
பகைத்தனன்றெனுவோர்பதத்தாயிரம்பாவை
புகைத்தழற்சொரிநதெதிர்பொரக்காட்டினன்புனிதன்.

(இ-ள்.) (அதற்கு) உருத்திர மூர்த்தியும் சிரித்து விரிந்த நெற்றிக் கண்ணினின்றுள்ள சிகையோடு கூடிய கொடிய அக்கினியை வீசி, தேவலோகம நடுங்கக் கோபித்தார். (இப்போது சிவபிரானுடு) பகைபபது நன்றென்று, பரிசுத்தரான ஆழ்வார் (தமது) ஒரு திருவடியிலுள்ள பலவான கண்களானவை புகையோடு கூடிய அக்கினியை விட்டு அதற்கெதிராகப் பதஞ்செய்யக் காட்டினர். (எ-று.) (௪௨)

௪௩. விடையுகைத்தெரிவிழியுகநகையொடுவிரிநீள்
சடையுகச்சுழன்மழுவுகவுமையவடழுவாப்
புடையுகக்கதம்பொஙகியபுனிதன்மேற்பொழிவான்
கடையுகத்தெழுமழையினைவிதித்தனன்கடவுள்.

(இ-ள்.) சிவபிரான் ரிஷபத்தைச் செலுத்தி, சிரிப்போடு விழிகளில் அக்கினி சிந்தவும், விரிந்த நீண்ட சடாபாரம் (கீழே) விழவும், சுழலும் மழுவாயுதம் விழவும், உமாதேவியார் தழுவாமல் பக்கத்திற் செல்லவும், (தம்மோடெதிர்த்துக்) கோபித்த பரிசுத்தராகிய ஆழ்வார்மேற் பொழியும்படி உகாந்தகாலத்திற் பொழியும் (புஷ்கலாவர்த்தாதி) மேகங்களுக்கு உத்தரவளித்தனர். (எ-று.) (௪௩)

௪௪. எயினகைத்தெரியிட்டுளோனேவலாலெழுந்த
குயினதிக்கிறைபுனலெலாம்பருகிமீக்குழுமா
வெயின்மறைத்துயர்முனிபதவிழிக்கனன்மிசையே
பயிறரப்புனல்சொரிந்தவாவிடைவிடாப்பரந்தே.

(இ-ள்.) முப்புரங்களை நகைத்து எரித்தவராகிய சிவபிரானது ஏவலாலே யெழுந்த மேகங்கள் நதிகளுக்கு நாயகமான சமுத்திரத்திலுள்ள நீரையெல்லாம் உண்டு ஆகாயத்திற் சேர்ந்து பரவிச் சூரியனை மறைத்து,

உயர்ந்த மனனசீலராகிய ஆழ்வாரது திருவடிக்கண் ணெருப்பின்மீது பொருந்தும்படி ஓயாமல் நீர் சொரிந்தன. (எ-று.) (சச)

சரு. சொரிந்தநீரையம்முனிபதக்கனலுநெய்த்துளிபோற்
பரிந்துநுங்கியுமமைகிலாதெழுந்துமீபபற்றக்
கரிந்துவெண்டிரைககடலகுளித்தனமுகிறகணமும்
இரிந்துபோயினரிமையவாமுனிவரரெல்லாம்.

(இ-ள்.) (அப்படிப்) பெய்தநீரை அவ்வாழ்வாரது திருவடிக்கனலும் நெய்த்துளியைப்போல ஆக்கிரமித்து உண்டும், அதனோடு அமையாது வியாபித்து மேலேபற்ற (அந்த) மேகக்கூட்டங்களும் கரிந்து வெள்ளிய அலைகளையுடைய கடலில் குளித்தன. தேவர்கள் முனிவர்கள் எல்லாம் (ஆற்றாது) ஓடினர். (எ-று.) (சரு)

சசா. பார்த்தசங்கரன்றிகைத்தலுமிடத்துறைபாவை
நேர்த்தமாதவததவனியார்நவில்கெனசசிவனும்
கூர்ந்தநாந்தகக்குரிசிலைக்கருத்திலுட்கொண்டோன்
ஆர்த்தவக்கபாதபபெயர்யோகியென்றறைந்தான்.

(இ-ள்.) (இதைப்) பார்த்த சங்கரன் திகைத்து நின்றவளவிலே, அவரது இடது பாகத்திலிருக்கும் உமாதேவியார், 'தலைவா! (இம்) மாதவத்தோன் யாா? சொல்லுவீராக' என்றுகேட்கச் சிவபிரானும் 'இவர் கூர்மையான வாளையுடைய பெருமானைத் (தமது) திருவுள்ளத்திற் கொண்டவர்; பொருந்திய அக்ஷபாதரென்னும் பெயர்படைத்த யோகி' யென்று சொல்லினர். (எ-று.)

சஎ. அன்னவாசகங்கேட்டதிசயித்தனளணங்கும்
உன்னருஞசினங்கறைமிடற்றிறைவனுமொழித்துப்
பின்னாநண்பனீயெனத்தழீஇயுமையொடுமபெயர்ந்தான்
இன்னறீர்தவமுனிவனுந்தவம்புரிந்திருந்தான்.

(இ-ள்.) உமாதேவியாரும் அவ்வுரையைக் கேட்டு அதிசயித்தனர். பின்னர் கறைமிடற்றையுடைய சிவபிரானும் சொல்வதற்கரிய கோபத்தையொழித்து, நீ எனது நண்பனென்று தழுவி உமாதேவியாரோடு சென்றனர். தீமையற்ற தவத்தையுடைய மனனசீலரான ஆழ்வாரும் தவஞ்செய்துகொண்டிருந்தனர். (எ-று.) (சஎ)

[அடியில் வருவது வேறொரு செய்யுட்குருபரம்பரையிற் கண்டது.]

‡ பின்னும்வெகுண்டுபுரமட்ட பெருமான்வேறுநிகரிலதாய்
மன்னுஞ்சூலந்தனைவிடுப்பான் மதித்தாங்கதனைக்கைக்கொளலும்
அன்னதுணர்ந்தவசரீரி யமரர்தமக்குமறிவரியாய
இன்னபடைநீவிடுத்திடினு மெய்தியவனுலழிவெய்தும்.

‡ ஆதலாலிங்கிதனைவிடா தகறியெனவம்மொழிகேட்டுச்
சீதமதியுங்கங்கையுந்தண் செழுங்கொன்றையுஞ்சேர்செஞ்சடையோன்
பாதியுடலங்கொண்டமலை பயந்தமடவாடனைவெறுத்துப்
போதநாணுற்றிடபமிசைப் பொருந்திவிசும்பிற்போயினனால்.

(இ-ள்.) பின்னும் முப்புரங்களை வென்ற சிவபெருமான் கோபித்து வேறு ஒப்பில்லாததாயிருக்கும் சூலத்தைப் பிரயோகிக்க நினைத்து

அதைக் கையிற்கொள்ளுதலும் அதனை யறிந்த அசரீரி, தேவர்களுக்கும் அரிதானவரே! நீர் இந்தச் சூலத்தைப் பிரயோகித்தாலும் அது அவரை யடைந்து அவரால் அழிந்துபோகும். ஆதலாலே இங்கு இதனைப் பிர யோகிக்காமலே போயவிடுவீராக என்றுரைக்க அவ்வார்த்தையைக்கேட்டுக் குளிர்ந்த சந்திரனும் கங்கையும் குளிர்ந்த செழுமையான கொன்றைமலர் மாலையும் பொருந்திய சிவந்த சடையையுடைய சிவபெருமான் தனது பாதிசரீரத்தைக்கொண்டவராய் மலையரையன் மகளான உமாதேவியாரை (தம்மை ஆழ்வாரிடத்து வரப்பண்ணினதற்காக) வெறுத்து, மிக்க நாண மடைந்து ரிஷபவாகனமேறி ஆகாயமார்க்கமாகச் சென்றனர். (எ-று.)

[சுக்திஹாரன் ஆழ்வாரை வழிபட்டது.]

* சுத்திகாரனென்றொருதவன்சுவணகஞ்சுகமும்
பத்தியார்மணிவடமுமீந்தணிகெனப்பணிப்பப்
பத்திசாரனுநினைவிடைப்பரிதிபோன்றொளிருஞ்
சித்திரம்மெலாமேவியேசிறந்திடப்படைத்தே

* வேறுகஞ்சுகமும்மணிமாலையும்விருப்பிற்
றேறிவேயகுதிநீயெனச்செப்பவத்தவனும்
மாறின்மாதவத்தண்ணறன்மகிமைக்குமகிழா
வேறுநல்வியப்பொடுதொழுதேத்தியேகினனால்.

(இ-ள்.) சுக்திஹாரனென்னும் ஒரு தவசி (வந்து) பொன்னாலான சட்டையும் வரிசையான இரத்தினமாலையும் கொடுத்து இதனையணிந்துகொள் வீர் என்றுரைத்துக்கொடுக்க, ஆழ்வாரும் தமது சங்கற்பமாத்திரத்தில் சூரியனைப்போலப் பிரகாசிக்கும் சித்திரங்களெல்லாம் பொருந்திச் சிறக் கும்படி உண்டாக்கி வேறே சட்டையையும் இரத்தினமாலையையும் (கொடு த்து) நீ (இவற்றை) விருப்பத்துடன் அறிந்து தரித்துக்கொள்வாயாக என்று கொடுக்க அந்தச் சுக்திஹாரனும் ஒப்பில்லாத பெருந்தவத்தையுடைய ஆழ் வாரது மகிமைக்கு மகிழ்ந்து மேன்மேல் மிகுவதான நல்ல ஆச்சரியத் துடன் ஆழ்வாரை வணங்கித்துதித்துப் போயினன். (எ-று.)

[ஆழ்வாருக்கு எம்பெருமான் பிரத்தியக்ஷமாய்ச் சேவை சாதித்தல்.]

சஅ. வருடநூறுநூறெம்பிரான்றிருமரைமலர்த்தாட்
டெருடருந்தவமவணிருந்தயர்தலுந்திருவும்
அருடரும்புவிமடந்தையுமிருமருங்கமரக்
கருடன்மீதெழுந்தருளினன்கருணையங்கடவுள்.

(இ-ள்.) (இப்படிப்) பற்பலவருடங்கள் அங்கிருந்து எம்பிரானது அழ கிய தாமரைமலர்போன்ற திருவடிகளில் தெளிவடையும் தவத்தைச் செய்த லும் பெரியபிராட்டியாரும் அருள்தரும் பூமிப்பிராட்டியாரும் இரண்டு பக்கங்களிலு மிருக்கப் பெரிய திருவடியின்மீது கருணையங்கடவுளாகிய எம்பெருமானெழுந்தருளினன். (எ-று.) (சஅ)

சகூ. வரையறுதஞானக்குணத்தமைந்ததொல்வடிவும்
விரையலங்கலுமகுடகுண்டலங்களும்வெய்யோன்
புரையவேயொளிர்மணியொடுவற்சமும்பொலன்பூண்
நிரையடங்கலுங்கனகவாடையுநகைநிலவும்

(இ-ள்.) அளவுபடாத ஞானகுணங்களோடமைந்த அநாதியான திருவுருவும வாசனையுடைய வநமாலையும மகுடமும குண்டலங்களும் சூரியனுக கோபபாகப பிரகாசிககும் கவுஸ்துபததோடு ஸ்ரீவதசமும் அழகிய ஆபரணவாகனங்கள யாவும திருபபீதாமபரமும் திருமுததுககளின் பிரகாசமும் (எ-று.) (௪௯)

௫0. அரதனச சிலம்பதனொடுபரியகவணியும்
வரதபாணியுநதிகிரிசஙகொடுகதைவாளுஞ
சரதமாகியசாரஙகமுமொளிரதரததவததோர
கரதலசசரோருகஙகுவிததிருபுடைகளுல

(இ-ள்.) பொறசிலம்போடு பாதகிண்கிணியும் வரத ஹஸ்தமும் திருவாழியும திருசசஙகமும கதாயுதமும் வாளும் உண்மையான சாரங்கமும விளஙகவும, தவததோர்கள தமது கைகளாகிய தாமரையைக்குவிததுக் கொணடு இருபக்கஙகளிலும நெருங்கவும், (எ-று.) (௫0)

௫௧. சேனைநாயகன்முதலினாமருஙகுறத்தேவர்
தானைசூழதரததேவதுநதுமியொலிதழைப்பச
சோனைமாரியிலிடைவிடாதலாமழைசொரிய
யானைகாததவன்வருதலுமருந்தவனெழுந்தான்.

(இ-ள.) சேனை முதலியார் முதலியவர்கள் பக்கங்களிலிருக்கவும், தேவசேனைகள சூழவும், தேவதுநதுமியொலி தழைக்சவும, விடாமழையைப் போல இடைவிடாது மலர்மாரி சொரியவும, கஜேநதிராழவானைக் காத்தருளிய எமபெருமானெழுநதருளவே அரியதவத்தையுடைய ஆழவாரெழுநது, (எ-று) (௫௧)

௫௨. கண்டனன்றுணைககண்களாற்கவினெலாஙகருத்துட்
கொண்டனன்றனதுளமெலாங்கடவுளபாற்கொடுததான்
விண்டதென்பவமெனபபுகழ்நதாடினன்விரிந்த
புண்டரீகநேரடிகடன்முடிமிசைப்புனைந்தான்.

(இ-ள்) தமது இரண்டு கண்களாலே சேவித்து, (பெருமானது திருமேனியின) அழகையெல்லாம் கருத்திற் கொண்டனர்; தமது உளளததையெலலாம் பெருமானிடத்திற் சமாப்பிததனர்; எனபிறவி தொலைநததெனறு புகழநது ஆடினர்; அலர்ந்த தாமரையை யொத்த பெருமான திருவடிகளை (தமது) முடியின்மீது அலங்கரித்துக் கொண்டனர். (எ-று.) (௫௨)

௫௩. புளகமெய்தரவிழிகளானந்தநீர்பொழிய
இளகவென்புடனிதயமுமெதிரொழுந்தெந்தாய்
குளகருந்துமாமூலமேயெனவருங்கோவே
துளபமாலிகைமார்பமாதவவெனத்துதித்தான்.

(இ-ள்.) (தமது) திருமேனியில் புளகமுண்டாகவும், திருக்கண்களில் ஆநந்த நீர் பொழியவும், என்புடன் இருதயமும் கரையவும், பெருமானுக்கெதிரெழுந்து [illegible], "எந்தையே! இக்கஜேந்திராழவான் மூலமேயென்றழைக்க அவருக்கு முன்னெழுந்தருளிய [illegible]! திரு

த்துழாய்மாலையை யணிந்த திருமார்புடையவனே! பெரியபிராட்டியாருக்கு நாயகனே!'' என்று துதித்தனர். (எ-று.) (ருங)

ருச. புகழ்ந்தவத்தவக்குரிசிலுக்கருள்பொழிபுயலும்
அகன்றமுத்தொழிற்கரசுதானெனபதுமயனைச
சகந்தரத்தனதுந்தியிற்றந்ததுந்தருநான்
முகன்கணிச்சியைம்முகனையீன்றருளியமுறையும்

(இ-ள்.) (இப்படி) புகழ்ந்த அந்தத் தவசிரேஷ்டராகிய ஆழ்வாருக்கு அருள்மழை பெய்யும் மேகம்போன்ற பெருமானும், பெருகிய முத்தொழிலுக்கும் தானே தலைவனென்பதும், உலகைச் சிருஷ்டிக்கும்படி தனது திருவுந்தியினிடத்துப் பிரமதேவனைத் தந்ததும், அப்படிக்கந்த பிரமதேவன் மழுவேந்திய பஞ்சானனரான சிவபிரானை யீன்றருளிய முறையும், (எ-று.)

ருரு. இலங்குவித்தருட்பத்திசாரப்பெயரீந்து
கலங்குறுதுயர்பரமமாம்பதத்தையுங்காட்டித்
துலங்குநல்வரமுளவெலாமளித்தணிதுளவத்
தலங்கலெம்பிரான்விடைகொடுத்திருத்தியென்றகன்றான்.

(இ-ள்.) (ஆழ்வாருக்குப்) பிரகாசிக்கச் செய்து, அருளுடைய பத்திஸாரரென்னுந் திருநாமமளித்துக், கலக்கமடையாது உயர்ந்துள்ளதாகிய பரமபதத்தையுங் காட்டிக்கொடுத்து, விளங்கும் நல்ல வரங்களாயுள்ளனவெல்லாமீந்து, இருப்பாயாக வென்று நியமித்துத், திருத்துழாய்மாலையை யணிந்த எம்பிரான் அந்தர்த்தானமாயினன். (எ-று.) (ருரு)

[ஆழ்வார் முதலாழ்வார்களிடத்து உபதேசம் பெறுதல்.]

ருசா. கண்ணனேகியபின்னரங்கவன்றனைக்காண்பான்
அண்ணல்பொய்கைபேய்பூதனெய்தலுமஃதறிந்தே
எண்ணருந்தவனெதிர்நடந்தடிபணிந்திவணீர்
நண்ணயானனிபுரிந்ததெத்தவமெனநவின்றான்.

(இ-ள்) எம்பெருமான் அந்தர்த்தானமான பிறகு திருமழிசையாழ்வாரைச் சேவிக்கும்படி பெருமையிற் சிறந்த பொய்கையாழ்வார் பேயாழ்வார் பூதத்தாழ்வார் அங்கு எழுந்தருள, அதனையறிந்து எண்ணுவதற்கரிய தவத்தையுடைய ஆழ்வார் எதிர்கொண்டு நடந்து அவர்கள் திருவடிகளைப் பணிந்து, ''இவ்விடத்துக்கு நீங்கள் எழுந்தருள நான் விசேஷித்துச் செய்தது எந்தத்தவமோ'' என்று அருளிச்செய்தனர். (எ-று.) (ருசா)

ருஎ. பத்திசாரனென்றொருபெயரெம்பிரான்பணிப்ப
முத்தனாயினேனினகிணையெவரெனமொழியாச்
சித்தமூவருங்களித்தவன்றனைத்தழீஇச்சிவணி
மைத்தசோலைசூழ்திருவல்லிக்கேணியின்வந்தார்.

(இ-ள்.) முதலாழ்வார்கள் மூவரும், ''பத்திஸாரரென்று அத்தவிதியமான திருநாமம் எம்பெருமான் நியமிக்க அதனால் முத்தரானவரே! உமக்கொப்பானவர் யாவர்!'' என்றருளிச்செய்து சித்தங்களித்து அவரைத் தழுவிக்கொண்டு (நால்வருமாகக்) கூடி கருமையான சோலைகள் சூழ்ந்த திருவல்லிக்கேணிக்கு எழுந்தருளினார்கள். (எ-று.) (ருஎ)

ருஅ. அவணிருந்துபதேசமூவருமளித்தரிதாந்
தவளமண்டிருநாயகன்றிருநுதற்றரிப்ப
திவணிருந்தவமயர்ந்துநீயதுபடைத்திறையாற்
புவனமெங்கணும்விளக்குகென்றிசைத்தயாற்போந்தார்.

(இ-ள்) அங்கிருந்த மூவரும் ஆழ்வாருக்கு உபதேசமளித்துத் "திருமகளையன் திருநுதலிற் றரிப்பதாகிய வெண்மையான திருமண் அரிதாயுள்ளது; நீவிர் இங்கே பெரியதவஞ் செய்து இறைவனாலே அதைப் பெற்றுப் பூமியெங்கும் விளங்கச்செய்வீராக" என்று அருளிச்செய்து வேறிடஞ் சென்றார்கள். (எ-று.) (ருஅ)

[ஆழ்வார் தவஞ்செய்து திருமண் பெறுதல்.]

ருகூ. அக்கபாதனுங்கயிரவதீர்த்ததினயலாம்
மிக்கபூந்துணாவகுளநீழலின்மகிமிலைந்த
முக்கணும்முகநான்கினுனிமையவர்முனிவோர்
எக்கரோர்களும்வியப்பயோகத்தின்வீற்றிருந்தான்.

(இ-ள.) அக்ஷபாதராகிய ஆழ்வாரும், கைரவதீர்த்தத்துக் கடுத்த அதிகமான பூங்கொத்துக்களமைந்த மகிழமரத்தின் நிழலின்கண், சந்திரனை யணிந்தவராய மூன்று கண்களையுடைய சிவபிரானும் நான்கு முகங்களையுடைய பிரமதேவனும் தேவர்களும் முனிவர்களும் மற்றுமெவ்விடத்திலுள்ளவர்களும் ஆச்சரியப்படும்படி யோகத்திலெழுந்தருளி யிருந்தனர். (எ-று.) (ருகூ)

கூ0. மூவர்சொற்றவப்பரிசுளங்கொடுபுகழ்மூலத்
தேவனைக்கருத்தமைத்தியாண்டொருபதேழ்செறிநா
றேவறத்தவம்புரியமாதவனவணுற்றே
யாவதித்தலத்துனக்குவேண்டுவதிசையென்றான்.

(இ-ள்.) முதலாழ்வார்கள் மூவரும் அருளிச்செய்த அவ்வகையாகவே திருவுள்ளங்கொண்டு, (வேதங்கள்) புகழும் ஆதிமூலமாகிய தேவனைத் திருவுள்ளத்திற் கொண்டு, எழுநூற்றுப்பத்து வருஷம் ஓயாது தவம்புரிய, எம்பெருமான் அங்கெழுந்தருளி "இத்தலத்தில் உமக்கு வேண்டுவதியாது சொல்லுவீராக" என்றருளிச்செய்தனன். (எ-று.) (கூ0)

கூக. அருந்தவத்தனுமடிபணிந்தரியனவனைத்துந்
திருந்தலில்லினைநீநுதற்றரித்திடுதிருமண்
கருந்தடங்கடற்புவியெலாந்தரித்துநின்கழற்றாள்
பொருந்தவீந்தருள்புரிகெனத்திருவடிபுனைந்தான்.

(இ-ள்.) அரியதவத்தையுடைய ஆழ்வாரும் எம்பெருமான் திருவடிகளைப்பணிந்து, "அரிதான அனைத்தையுந் திருத்தமுடைய அருளினீர். தேவரீர் திருநெற்றியில் தரிக்குந்திருமண்ணைப் பெரியதும் விசாலமுமான கடல் சூழ்ந்த உலகத்திலுள்ளோரெல்லாரும் தரித்துக்கொண்டு தேவரீர் [illegible] கண்டையைத்தரித்த திருவடிகளையடையும்படி கொடுத்து அருள்புரிவீராக" என்றுரைத்து, (பெருமான்) திருவடிகளைத் (தமது முடியில்) தரித்துக்கொண்ட[illegible] (கூக)

கூஉ. அரியதத்திருமண்பெறற்கதனைநீயார்வம்
புரியவித்தலமபுரிந்ததுநவமகன்புனிதந்
தெரியநான்முகன்முதலினோர்ககரிதுநீதெரியிம
பெரியவித்தடங்கயிரவதிதத்துடபிறகரும.

(இ-ள்.) "அத்திருமண் பெறுவதற்ரரிதாகும்; அதனை நீர் விரும்பும்படி இந்தத்தலம் தவஞ்செய்தது; அததிருமண்ணின பரிசுத்ததையை அறிதல் பிரமன் முதலினோர்கட்கரிதாகும்; நீர் அராயவிருபாரர்பால் அத திருமண்ணானது மிகவும் விசாலமான இந்த அல்லிக்கேணியின தீர்த்தத்தில் உற்பத்தியாகும். (ஏ-று.) (கூஉ)

கூஙூ. எடுத்துநீநுதற்றரித்துமாநிலத்தவரொவர்க்குங்
கொடுத்துநம்பதங்கொடுத்தியென்றகன்றனன்கோவும்
அடுத்துவாரியுட்புவியைமாலெனமாயளித்தல
கடுத்திடத்திருமணமுனிதடத்திருட்கண்டான்.

(இ-ள.) (அதனை) யெடுத்து நீர் நெற்றியிற் றரித்துப பூமியிலுள்ளோர க்கெல்லாங் கொடுத்து நம்முடைய பதத்தைக் கொடுப்பீராய" என்றுரைதது பெருமானும் நீங்கினன். (முற்காலத்தில்) பெருமான் வராகமாய் சமுத்திரத்திற் பிரவேசித்துப் பூமியை உத்தாரணஞ் செயததுபோல ஆழ்வாருமதிருமண்ணை அவ்வல்லிக்கேணியிற கண்டனர். (எ-று.)

எம்பெருமான் ஏகார்ணவத்திற் பிரவேசித்துப் பூமியை யெடுத்தது போல ஆழ்வார அல்லிக்கேணியிற பிரவேசித்துத் திருமண்ணையெடுத்தனரெனக்கொள்க. (கூஙூ)

கூச. கண்டவத்திருமண்ணினைத்திருநுதல்கவின
அண்டர்போற்றுமாறிருப்பெயர்நினைந்தணிந்தலாந்த
முண்டகத்துநான்முகத்தவன்மகத்துமான்முளைத்த
வண்டடாந்தபூம்பொழினிறைகசசியேவந்தான்.

(இ-ள்.) (அப்படி) கண்ட அந்தத்திருமண்ணைத் தமது திருநெற்றி விளங்கத் தேவர்கள் போற்றும் பெருமானது திருநாமங்களை யநுசந்தித்து அணிந்துகொண்டு, மலர்ந்த தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவன் செயத யாகத்தில் பெருமான் ஆவிர்ப்பவித்தருளினதாய வண்டுகள் நெருங்கின பூஞ்சோலைகள் நிறைந்த திருக்கச்சிக்கு எழுந்தருளினர்.(எ-று.)

[திருக்கச்சித் திருவெஃகாவில் ஆழ்வார் யோகத்திலிருக்கையில் கணிகண்ணர் வந்து ஆசிரயித்தல்.]

கூரு. மழைத்தடம்புயல்பொருவவெஃகாவிடைமணிப்பூண்
குழைத்தடங்கண்மாறுயிறிருக்கோலமுட்கொள்ளாத்
தழைத்தவன்புளமயல்செலாதொருகுகைதனியே
இழைத்ததற்குணூற்றேழியாண்டினிதுவீற்றிருந்தான்.

(இ-ள்.) திருவெஃகாவினிடத்துக் குளிர்ந்த விசாலமான மேகம்போலே மணிகளையுடைய திருவாபரணங்களையும் திருக்குழையையுமணிந்து, அலர்ந்துயர்ந்த திருக்கண்களையுடையனான பெருமான் அறிதுயிலமர்ந்த திருக்கோலத்தைத் திருவுள்ளத்திற் கொண்டு, விரக்தியான பக்தியையுடை

ய திருவுள்ளம் புறத்திற்செல்லாது, தனியே யொரு குகையை யியற்றி அக்குகையில் நூற்றேழு வருஷம் யோகநிலையில் இனிதாக எழுந்தருளியிருந்தனர். (எ-று) (௬௫)

௬௬. நவிலுதற்கருந்தவனவணுறையுமந்நாட்பூந்
தவிசுடைச்சதுமுகற்றருமுகினமலாததடந்தாள்
புவியிலிறைதலநதொறும்பணிந்தந்நகர்புகுந்தான்
கவினுடைத்திடவிரதனீன்றருள்கணிகண்ணன்.

(இ-ள்) சொல்வதற்கரிய தவத்தையுடைய ஆழ்வார் அங்கு எழுந்தருளியிருக்கும் அந்நாளில், தாமரை யாசனத்தையுடைய பிரமதேவனை யளித்த மேகம்போன்ற பெருமானது தாமரை மலர்போன்ற பெரிய திருவடிகளை பூமியிலுள்ள தலங்கள்தோறும் பணிந்து அந்நகரித்திற பிரவேசித்தவரான அழகமைந்த திடவிரதர் பெற்றருளின கணிகண்ணரென்பவர், (எ-று.) (௬௬)

௬௭. அக்கபாதனைக்கண்டனனடிபணிந்தருண்மால
செக்காதாமரைததிருவடி மருவிவாழ்செலவ
மிக்கஞானததின்வேலையேமாதவவிளக்கே
புக்கவெனனையாண்டருளகெனப்பலமுறைபுகழ்ந்தான்.

(இ-ள்.) அக்ஷபாதராகிய ஆழ்வாரைச் சேவித்து அவர் திருவடிகளை வணங்கி, "கிருபாசொரூபியான பெருமானது செந்தாமரைபோன்ற திருவடிகளையடைந்து வாழும் செல்வமுடையவரே! மேலாகிய ஞானசமுத்திரமே! மாதவவிளக்கே! வந்தடைந்த என்னை யாண்டருள்வீராக" என்று பலமுறையும் புகழ்ந்தனர். (எ-று.) (௬௭)

௬௮. விரும்பியோகத்தைநீக்கியேநீதிடவிரதன்
தருமபுகழ்க்கணிகண்ணனோவெனமுனிசாற்றப்
பொரும்புகழ்க்கதிராழியோனிவனெனப்புளகம்
அருமபுறப்பணிந்தடியனேனுமெனவறைந்தான்.

(இ-ள்.) ஆழ்வார் திருவுளமுவந்து யோகத்தை நீக்கி "நீர் திடவிரதர் பெற்ற புகழமைந்த கணிகண்ணனோ" என்றுரைக்க, (அவர்) பகைவரோடு யுத்தஞ்செய்யும் கீர்த்தியமைந்த பிரகாசத்தையுடைய திருச்சக்கரத்தைத் தரித்த பெருமான் இவராகுமென்று துணிந்து புளகமுண்டாகப் பணிந்து, "அடியேன் கணிகண்ணனே ஆவேன்" என்றுரைத்தனர். (எ-று.) (௬௮)

௬௯. பரிந்துநோக்கியேயேமபுட்கரணிநீர்படிவித்
திரிந்திடப்பவம்பொருவிலெட்டக்கரமிசைத்துத்
தெரிந்துவேட்டுவன்கிருமியைத்தனதுருசெயல்போற்
புரிந்தளித்தலுமவனவர்க்கேவலேபுரிந்தான்.

(இ-ள்.) (ஆழ்வார்) கணிகண்ணரைப் பிரீதியோடு கடாக்ஷித்துப் பொற்றாமரைப்பொய்கை நீரிற்படியச்செய்து பிறவிகெடும்படி ஒப்பற்ற திருவஷ்டாக்ஷரி மந்திரத்தை யருளிச்செய்து, குளவியானது புழுவைத் தெரிந்தெடுத்துத் தன்னுருவாக்குதல் போல அருள்புரிந்து ரக்ஷிக்கக் கணிகண்ணர் ஆழ்வார்க்கு ஏவல் புரிந்துகொண்டிருந்தனர். (எ-று.) வேட்டுவன்-குளவி.

[ஒரு முதியவள் ஆழ்வாரருள் பெறல.]

வேறு.

எ0. அநதமுனிவனைத்தினமு மொருமுதியாளடிபரவ வாங்கோர்வைகல், நந்தலின்மாதவத்தவனு முனதுகருத்திசைதியென ஞானசகோவே, இந்தவடிவொழிந்திளமை யளித்தடியேன் றனையாட்கொ ளென்றுபோற்றச, சந்தமலர்ககரங்கொடவ டனைமுனைவன்றொடவிரதி தனைப்போலானாள்.

(இ-ள்.) மநநசீலராகிய அந்த ஆழ்வாரை ஒரு முதுமைப பருவமுடையவள் நாள்தோறும் வந்து திருவடிகள் வணங்க, ஒரு தினம் செடுதலில்லாத பெருந்தவசதையுடைய ஆழவாரும் "உனது அபிப்பிராயததைச் சொல்லுவாயாக" என்றுகூற, (அவள்) "ஞானத்தில் தலைவரே! இந்தவயோதிக வடிவை யொழித்து இளமைப் பருவத்தைக்கொடுத்து அடியேனை யாட்கொள்வீராக" வென்று துதிசெயய, ஆழவார் அழகிய மலர்போன்ற திருக்கைகள் கொண்டு ஸ்பர்சிக்க அவள் இரதியைப்போல் (உருவம பெற்றவள்) ஆனாள். (எ-று.) (எ0)

எக. ஆங்கவளுமுனியிருதாள் பணிந்துவிடைகொடுவீதி யணுகவெண்கோட், டோஙகலின்மீதந்நகருக் கிறைபவனிவருவோனகண டுருகிநோககிக், கோயசமுலையனையமுலைக கொடியைமணிசசிவிகையினுட் கொளளாவுள்ளந், தாஙகரியநசைபெருக வவளொடுந்தன்மணிககோயில சாாந்தான்மன்னோ.

(இ-ள்.) அவளும் ஆழ்வாரது இரண்டு திருவடிகளைப்பணிந்து விடைபெற்று கொண்டு வீதியையடைய, வெண்மையான தாதங்களையுடைய யானையின்மீது பவனிவருவோனாகிய அவ்வூரரசன் கண்டு உருகி (பலமுறையும் அவளைப்) பார்த்துக் கோங்கரும்பையொத்த முலையையுடையவளாயக கொடிபோன்ற அவளை அழகிய சிவிகையிற்கொண்டு உள்ளம் பொறுப்பதற்கரிய ஆசைபெருக அவளோடு தனது அழகிய அரமனைக்குச் சென்றான.(எ-று.)

எஉ. நஞ்சனையதுணைவிழிக்கார் குழல்வனிதையொடுங்கலவி நாளுநாளும், பஞ்சணையிலிமைப்பொழுதுந் தணவாதுநுகர்ந்து பல பருவநீங்கக், கஞ்சனையிலவள்வனப்புந் தனதிளமைகழிந்ததுவுங் கண்டுநாணி, வஞ்சனையோகலிவரவோ வெனதிளமைகழிந்ததெனு மம்மருற்றான்.

(இ-ள்.) விஷத்தை யொத்த இரண்டு கண்களையும் கரிய கூந்தலையுமுடைய அப்பெண்ணுடன் நாள்தோறும் பஞ்சணையின் மீது இமைப்பொழுதும் பிரியாது கூடியநுபவித்து (இப்படி) பல பருவங்கள் செல்லவே திருமகளுக்கொப்பான அவளது அழகும தனது இளமைப்பருவம் போனதுவும் கண்டுவெட்கி வஞ்சனையோ கலியின்வரவோ எனது இளமைப்பருவம் கழிந்ததே யென்று துன்புற்றான். (எ-று.) (எஉ)

[எம்பெருமான் ஆழ்வார் சொன்னவண்ணஞ் செய்தல்.]

எ௩. இன்னலுற்றிறைவனைப்பார்த் தரிவைநகைத்தெனக்கிளமை மீந்தான்வேதன், அன்னமுனியொருவனென வவனெவனுள்

ளானெனலு மரிவைசாற்ற, மன்னவனும்வழியுரைப்போர்க் கவனை யிவண்கொணர்மினென வநதுதூதா, பன்னரியகுணத்தவனைப் பார் வியுனையழைத்தனனிப் பாரவேந்தென்றார்.

(இ-ள்) (இப்படி) துன்புறற அரசனைப்பார்த்து அப்பெண் நகைபுரிந் து பிரமதேவனுக்குச்சமானமான முனிவரொருவர் எனக்கு இவ்விளமை யைக் கொடுத்தனா என்று கூற, அவர் எங்குள்ளாரெனலும் (ஆழவாரிருக்கு மிருப்பை) அப்பெண்சொலல, அரசனும் தூதருக்கு அமமுனிவரை யிஙகுக் கொணருவாருங்கோ ளென்று கட்டளையிட, (அந்தத்) தூதாகள் வநது சொலவதாகரிய உயர்ந்த குணங்களையுடைய ஆழ்வாரை வணங்கி "இந் நாட்டரசன் உம்மை யழைத்தனன்" என்றுரைத்தனர். (எ-று.) (எ௩)

எச. தூதரவ்விசைக்குதலுங் கணிகண்ணன்றனை நோக்கித் துற வோனுமபார, நாதன்மருங்கணுகியழைத் ததுவினவுகெனவவன் பா னண்ணககண்ணன், ஏதமகன்றிளமைநல மெய்தவருட்கவிதை யென்மீ திசைப்பாயென்னச, சீதரனையலதயலோாப புகழுகில மென்றிடவரசுரு சினந்தானன்றே.

(இ-ள்.) தூதர்கள் அதனைச் சொல்லலும் ஆழ்வாரும் சணிசண்ணரைக் கடாக்ஷித்தப பூமியையாளும் அரசனிடஞ் சென்று அழைத்ததைக் கேட்பா யாக வென்று நியமிக்க, (அங்ஙனமே) கணிகண்ணர் அரசனிடஞ்சேர, (அரச ன்) துன்பமான முதுமைமைநீங்கி நல்ல இளமைநலமையும்படி அருட்கவி யை என்மேற் பாடுவீரென்ன, (கணிகணணர்) "சீதரனையல்லாது பிறரைப் புகழ மாட்டோம்" என்றுகூற, அரசனும் கோபித்து, (எ-று.)

"ஆடவர்க ளெங்ங னகன்றொழிவார் வெஃகாவும், பாடகமுமூரகமும் பஞ்சரமா-நீடியமால், நின்று னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ, மனறார் பொழிறகச்சி மாண்பு" என்பது கணிகண்ணர் சீதரன் விஷயமாகப் பாடி ய பாட்டு. (எச)

எரு. தனதுவிழித்துணைகள்சிவந் தழல்பொழியக்கணிகண்ணன் றன்னைநோக்கி, எனதுநகர்விடுத்தகன்மி னெனக்குரவன்றனையுவ னு மெய்தியெந்தாய், மனதுகறுத்தரசுதன தணிநகாவிட்டகலவெ ன்றான் மலரோனன்ன, உனதுபதத்துகளடியேன் விடைகொள்கே னெனமுனியு முருத்துநக்கான்.

(இ-ள்.) தனது இரண்டு கண்கள் சிவந்து நெருப்பு வீசும்படி கணி கண்ணரைப் பார்த்து "(நான் சொன்னபடி பாடாமையால்) என்னூரை வி ட்டுப் போகக்கடவீர்கள்" என்றுகூறக், கணிகண்ணரும் தனது ஆசாரிய ராகிய ஆழ்வாரையடைந்து எனது ஸ்வாமியே! (அரசன் சொன்னபடி நா ன் பாடாமையால்) அவன் கோபித்துத் தனது அழகிய நகரைவிட்டுப் போ கச் சொல்லினன்; பிரமனைநிகர்த்த உமது திருவடித்துளாகிய அடியேன் விடைகொள்கின்றேன் என்றுரைக்க ஆழ்வாரும கோபிததுச்சிரித்து.(எ-று.)

## வேறு.

எசு. குமரனீதனைத்திடயான் வதிதுவனேயாண்டனைப்பக் கொ ண்டன்மேனி, அமலனீள்பணிப்பாயற் றுயில்குவனேயெனநவின் றுங் கரியைநோக்கிக் கமாவாரகடற்றுயில்வோய் கணிகண்ணன்

போகின்முன் றரியேன்யானும், விமலமார்பணிப்பாயல் சுருட்டி யுடன்வருகவென்று விரைவிறசென்முன்.

(இ-ள்.) குழந்தாய்! நீ யென்னைவிட்டு நீங்க நான் இங்கிருப்பேனே? நான் நீங்க மேகம்போன்ற திருமேனியையுடைய அமலன் நீண்ட சேஷ சயனத்தில் படுப்பனே? எனவுரைத்து அங்கெழுந்தருளிய பெருமானைச் சேவித்து ஒலியையுடைய நீண்ட கடலில் அறிதுயிலமர்ந்திருப்பவனே! கணிகண்ணர் போகின்றார்; நானும் அவரைவிட்டுத் தரித்திருக்கமாட்டேன்; பரிசுத்தமுடைய சேஷசயநத்தைச் சுருட்டி (எனனுடன) வருவீராகவென றுரைத்து விரைவாகச் சென்றார். (எ-று)

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி, மணிவண்ணா நீகிடக்க வேண்டா-துணிவுடனே, செந்நாப்புலவனயான் செல்கின்றேனினனுடைய, பைநாகப் பாயசுருட்டிக்கொள்" எனபது ஆழ்வார் அநநகரத்தை விட்டுப போகும்போது அருளிச்செயத பாசுரம். (எசு)

எஎ. துயிலமர்ந்தவெந்தையுந்தன் பணிப்பாயல்சுருட்டிமலரத் தோகையோடும், பயிலமரர்கணங்கண் முப்பான் முக்கோடியொடு ந்தனது பத்தன்பின்னே, எயிலமைந்ததிருநகாநீத் தெழுந்தருளப புறககோவி லிமையோரோடும், வெயிலமைந்தசுடரனைத்துங் கரந் துதிசையனைத்துமிருள் விழுங்கிற்றம்மா.

(இ-ள்.) துயிலமர்ந்த எம்பெருமானும் தனது சேஷசயநத்தைச் சுருட்டி மலரிலிருக்கும் மயில்போன்ற பிராட்டியோடும் பொருந்திய தேவ கணங்கள் முப்பத்துமுக்கோடியோடும தனது பக்தராகிய ஆழவாரபின னே மதிலமைந்த அழகிய நகரைநீங்கி யெழுந்தருள இதரமான கோயில் களிலிருக்கும் தேவர்களோடு ஒளியையுடைய சூரியசந்திரர்களும மறைய திசைகளையெல்லாம் இருள்மூடியது. (எ-று.) (எஎ)

எஅ. ஆயதரசனுங்கேளா யுளநடுங்கியவரிருக்கை யளவுஞ் சென்று, தூயமுனிவரன்சரணம் பணிந்தெளியேன்பிழைபொறுத்தி தொலலோயென்ன, நேயமுனிகணிகண்ணன் றனைவேண்டுகென வவன்முனிருபன்போற்ற, மாயவன்முன்செலவவரும் திருவெஃகாவெனும்பதியை வந்துசார்ந்தார்.

(இ-ள்.) (இப்படி) யானதை அரசனும் கேட்டு உளம் நடுங்கி அவர்களிருக்குமிடமளவும் சென்று பரிசுத்தமாகிய ஆழ்வாரது திருவடிகளைப் பணிந்து, தொல்லோய்! எளியேன் பிழையைப் பொறுப்பீராகவென்றுவேண்ட, அன்புமிகுந்த ஆழ்வார் கணிகண்ணரை வேண்டிக்கொள்க என்ன, அரசன் அக்கணிகண்ணர் திருவடிகளைப்போற்றப் பெருமான் முன்பேசெல்ல ஆழ்வாரும் கணிகண்ணர் முதலானோரும் திருவெஃகா எனனும் திருப்பதியை வந்து சேர்ந்தார்கள். (எ-று.) (எஅ)

எகூ. கணிகண்ணன்போக்கொழிந்தான் பணிப்பாயல்படுத்தியெனுங் கவியாலே, மணிவண்ணனிடக்கரங்கீழ் வலக்கரமேலாய்த் திருக்கண் வளர்ந்தான்பின்னர், பிணிவென்றதலமுனியுந் தான் சொன்னவண்ணஞ்செய்த பெம்மானென்று, அணிவண்ணமுகிலனை யார்க் கொருபெயரிட்டணிந்தா னலகில்காலம்.

(இ-ள்.) "கணிகண்ணன் போக்கொழிந்தான்—பணிப்பாயல் படுத்தி" என்னும் கவியாலே நீலமணிபோன்ற பெருமான் இடத்திருக்கை கீழாகவும் வலத்திருக்கை மேலாகவும் திருக்கண் வளர்ந்தருளினன. பின்னர் பந்தத்தைவென்ற தவத்தையுடைய ஆழ்வாரும் தாம் "சொன்னவண்ணஞ் செய்த பெருமான்" என்று கலியாணகுணங்களையுடைய மேகம்போன்ற பெருமானுக்கு ஒரு திருநாமமிட்டு அங்கு கணக்கற்றகாலம் எழுந்தருளியிருந்தனர். (எ-று.)

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீ கிடக்க வேண்டுந-துணிவுடனே, செந்நாப் புலவன்யான் போககொழிநதே நீயுமுனறன, பைநநாகப் பாயபடுத்துக் கொள்". என்பது ஆழ்வார் மீண்டுமெழுந்தருளினபோது அருளிச்செயத பாசுரம். (எகூ)

[ஆழவார் திருக்குடந்தையில் ஆராவமுதப் பெருமானைச் சேவித்தல்.]

அ0. நின்றிருந்துகிடந்தவரைப் பணிந்துவிடைகொடுகோவனெடியோற்போற்றித், துன்றிரும்பொற்சித்திரகூ டத்துவிழிதுயின்மாலைத் தொழுதுவாழ்த்தி, ஒன்றிருஞ்சீர்த்திருமுட்டம் பணிந்துவடகாவேரி யொருவிநீலக், குன்றினுஞ்சீர்பெறககிடந்த கோலவாராவமுதின் குடந்தைகண்டான்.

(இ-ள்.) (திருக்கச்சியில்) நின்ற இருந்த கிடந்த திருக்கோலங்கள் கொண்ட பல எம்பெருமான்களைப் பணிந்து விடைபெற்றுத் திருக்கோவலூர் த்ரிவிக்கிரம மூர்த்தியை வணங்கிப் பெருமைபொருந்திய அழகிய திருசசித்திரகூடத்தில் அறிதுயிலமர்ந்த பெருமானைத் தொழுதுவாழ்த்தி, நிலைபெற்ற பெருஞ் சிறப்பையுடைய ஸ்ரீமுஷ்ணத்தைப் பணிந்து, வடகாவேரியைவிட்டு நீங்கி, நீலமலையினும் சிறப்புண்டாம்படி கிடநத திருக்கோலத்தையுடைய ஆராவமுதப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்குடநதையைத் தரிசித்தனர். (எ-று.) (அ0)

அக. மேனிவந்தமணிமகுடக் கோபுரமீநிரைத்தழகு விரிபொற்றூசின், வானிவந்தமழையையெம தணிநகராராவமுத மாயோனென்னும், தேனிவந்தமலர்த்துளவத் தொடைமேகத்தருண் மழையாற் செழிக்குநீர்பைங், கானிவந்தமலைக்கேநீர் பொழிகென நீக்கவினசைதல் கண்ணிற்கண்டான்.

(இ-ள்.) (அந்நகரம்) மேலுக்குயர்ந்த அழகிய சிகரத்தையுடைய கோபுரத்தின்மீது வரிசையாகவைத்து அழகுவிரிந்த பொற்கொடிகளாலே ஆகாயத்திலுள்ள மேகத்தைக் (குறித்து) "எமது அழகிய நகரத்திலுள்ள ஆராவமுதமாயோனென்னும் தேனமர்ந்த மலர்களையுடைய திருத்துழாய்மாலையை யணிந்த மேகம்போன்ற பெருமானது அருளாகியமழையினாலே (உலகம்) செழிப்படையும்: நீங்கள் பசியகாடுகளுயர்ந்த மலைகளினிடத்து நீரைப் பொழிவீர்களாக" என்று நீக்குதல்போல அசைவதைக் கண்ணாற் கண்டனர். (எ-று.) (அக)

தற்குறிப்பேற்றம்: அந்நகரக் கோபுரத்தின் மீதுள்ள கொடிகள் அசைவது எங்ஙன மிருந்ததெனின், மேகங்களைநோக்கி அந்நகரமானது "எங்கள் ஆராவமுதப் பெருமானென்னும் மேகத்தின் அருளாகிய மழையால் உலகம் செழிக்கும்; நீங்கள் காயெர்ந்த மலைகளிடஞ் செல்க; இங்கே வேண்டா

வேண்டா" என்று சொல்லி அவைகளைத் தனது கொடிகளாகிற கைகளால் நீக்குதல்போல இருந்ததென்க.

**அஉ. எந்தைதுயி லமர்ந்தபிரான் பணிசுருட்டப் புவிநடுங்க விசைத்தாரின்னும், முந்தைநமதாரமுதை யேதிழைப்பான்வருவ திவண் முன்னியென்றுசு, சிந்தையலமரமேடை மணிமேடைமதி ல்கடொறுஞ் செறிந்துநோக்கும், நிந்தையில்பைங்கொடியனையார் பணிந்திடலபோற்றுயல்கொடியி னெருக்கங்கண்டான்.**

(இ-ள்.) எந்தையாகிய பள்ளிகொண்டபெருமான் பணிபபாயலைச் சுருட்டவும் அந்நகரம் நடுங்கவும் (பாட்டினைச்) சொன்னவராகிய ஆழ்வார், இன்னும முன்னேயுள்ள நமது ஆராவமுதப்பெருமானை எது செயவதற் காக எண்ணி இங்கு வருகின்றாரோ என்று சிந்தைகலக்கமடைந்து (சாதாரண) மேடைகளிலும மணிமேடைகளிலும மதில்களதோறும் இருந்து பார்க்கும் நிந்தையில்லாத பசியகொடிபோன்ற பெண்கள் பணிவதுபோல ஆடுங் கொடிகளின் நெருக்கத்தைக் கண்டனர். (எ-று.) (அஉ)

தறகுறிப்பேற்றம்: மேடைகளிலும் மதில்களிலும் உள்ள கொடிகள் அசைவது எப்படி இருந்ததென்றால், அவ்விடங்களில் இருந்து பார்க்கும கொடிபோன்ற பெண்கள், ஆழ்வார் வருகிறதைப்பார்த்து, "பணிபபாய லில் பள்ளிகொண்ட பெருமானை அப்பாயலைச் சுருட்டிக்கொண்டு தமக்குப பின்னே வருமாறு பாசுரமிட்ட இவா இங்கே நமது ஆராவமுதனை என்ன செயய எண்ணி வருகின்றாரோ" எனறெண்ணி அஞ்சிப பணிவதுபோ லிருந்தது என்பதாம்.

**அங. முன்னுமிவர்நமைத்திருமால் சுருட்டிநடந்தடிவருந்த முனிந்தார்முன்னம், இன்னுமிவாக்கஃதேயிண் டிவர்வருமுன்னக றுமெறு வெண்ணிச்சேடன், தன்னுடன்மண்டலித்துமுடி நிமிர்ந் துவிசும்பினிற்படரும் தன்மைபோலப், பொன்னுருவமதிலினொடு மணிமகுடக்கோபுரமீப் பொலிதல்கண்டான்.**

(இ-ள்.) சிந்திக்கத்தக்கவராகிய இவ்வாழ்வார், முன்பு திருமால் நம் மைச்சுருட்டி நடந்து திருவடிவருந்துமபடி கோபித்தனர்; இன்னுமிவாக்கு அதுவே (செய்கையாகும்); இவ்விடத்துக்கு இவர் வருமுன்னே நாம் போகக் கடவோ மென்றெண்ணி, ஆதிசேஷர் தமது திருமேனியை மண்டலாகார மாக வளைத்து முடியை மேலெடுத்து ஆகாயத்திற் செல்லுந்தன்மைபோ லே பொன்னுருவமாயிருக்கும் மதிலோடு மணிமயமான சிகரத்தையுடைய கோபுரம் மேலே தோன்றுவதைக் கண்டனர். (எ-று.) (அங)

**அச. கோடியாயிரம்பரிதி நிகராழிதனைப்பிரிந்தோர் குழவியா னேன், நேடியேயெனதருகு வருகின்றானெனக்கருதி நேயங் கூராக், கேடிலான்வாவுதனை யெதிரெழுந்துகாண்பதுபோற் கிளர் பொன்மேடை, பீடிகாதலம்புரிசை வீவற்றினிற்செம்மணியொளி மீப் பிறழ்தல்கண்டான்.**

(இ-ள்.) ஆயிர கோடி சூரியர்களையொத்த திருவாழியினின்றும் பிரிந் த ஒருகுழவிவடிவான ஆழ்வார், தேடிக்கொண்டு என்சமீபத்துக்கு வருகின் றனர் என்றெண்ணி அன்புகூர்ந்து, கேடில்லாதவரான ஆழ்வார் வரவை [illegible] காண்பதுபோல உயர்ந்த பொன்மேடை [illegible] மதில்

இவற்றிலுள்ள மாணிக்கங்களினொளி மேலே தோன்றி விளங்குவதைக் கண்டனா. (எ-று.)

ஆழ்வார், மிக்க ஒளிமயமான திருவாழியின அம்சமாதலால் அவர் வருகைக்கு மணியினொளி நேயங்கொண்டு எதிரெழுநது காண்பதுபோல விளங்கியதெனக்கொளக. (அச)

அரு. பாம்பணையிற்றுயிலமிர்தைக் கருங்கடலாககருதியதிற் ப
டிநதுமேகந், தாமபணைகூர்புவிபுரப்பானருணீர்கொண்டதுவலஞ்
சூழ தகைமைபோலக், காம்பணைபூகதங்கதலி வருக்கைமகிழதா
ழையிவை கலந்தொன்றுபபூந், தேம்பணைகணெருங்கிவந் தலர்
மதுவாரபொழின்மருங்கு செறிதல்கண்டான்.

(இ-ள) சேஷசயநத்தில் துயிலும் ஆராவமுதப்பெருமானைப் பெரிய கடலென்றெண்ணி, அக்கடலிற் படிந்து, மேகமானது கழனிமிகுதியையுடைய பூமியை யிரக்ஷிப்பதற்கு அருளாகிய நீரைக்கொண்டு பிரதக்ஷணம பண்ணுந தகைமைபோல, பூநதாள் பொருநதிய கமுகம்-வாழை-பலா-மகிழ-தாழை என்னுமிவைகள் கலநது ஒன்றுகி, அழகிய இனிய வயல்களை நெருங்கியுயாநது, புஷ்பங்களும் தேனும் பொருந்திய சோலைகள் பக்கங்களில நெருங்கி யிருக்கக் கண்டனா. (எ-று.) (அரு)

அசு. நிரந்தரமுந்தனதகல மரவணையோடரங்கேச னீங்காவகை,
வரந்தருமாதவமுயர்ந்தம் மாதவனுன்மதித்தவரம் வாய்த்தலாலே,
பரநதபெரும்புனன்முழுதுஞ் செழுந்துளவோடவன்றினமும் பரி
நதுசாத்தும், நரந்தமணங்கமழ்ந்துசுர நதியினுயர்காவேரி நதி
யைககண்டான்.

(இ-ள்.) எப்போதுந் தன்னிடத்தில் சேஷசயனத்தோடு திருவரங்க நாயகன நீங்காதவணணம் வரந்தருவதற்குரிய பெருந்தவஞ்செயது, அந்த மாதவனுல் தான் மதித்த வரத்தைப் பெற்றதினுலே, பரவிய தனது மிக்க நீர் முழுவதும் அப்பெருமான் விரும்பியணியும் செழுமையான திருத்துழாயோடு வாசனைத்திரவியங்களும் பரிமளித்துக்கொண்டு, கங்காநதியினும் பெருமையாலுயர்நத திருக்காவேரி நதியைக் கண்டனர். (எ-று.) (அசு)

அஎ. அந்தநதிப்புனல்படிந்து பன்னிருநாமத்தடைவே யாதி
மாயோன், தந்ததிருமண்டரித்து நியமமுடித்தணிவீதி சார்தலோ
டும், வந்தமுனிவரன்கேளா வகைவேதமோதும்வர் மறுத்துப்பின்
னர்ச, சிந்தனைசெய்திடமுதலீ றிடைதெரியார்மூங்கையரிற் றிகை
த்தாரன்றே

(இ-ள்.) (ஆழ்வார்) அந்தத் திருக்காவேரி நீரிற்படிந்து, பன்னிரு திருநாமத்தடைவாகக் காரணபூதனை மாயப்பிரான் (தமக்கு) அளித்த திருமணணைத்தரித்து, நியமங்களையெல்லாம் முடித்து, அழகிய திருவீதியில் செல்லுகையில், வேதமோதிக்கொண்டிருந்த பூசாரிகள் அதனை அங்கெழுந்தருளும் ஆழ்வார் செவிக்கொள்ளாதபடி சற்றே நிறுத்திவைத்துப் பின்னர் (அவர் சிறிதவமதிக்கத்தகாதே விட்டதறுவாயைச்) சிந்திக்கப்போக, முதலும் இறுதியும் நடுவும் தெரியாமல் ஊமையனைப்போலத் திகைத்தார்கள். (எ-று.)

அஅ. எய்தியவா நாலவருணத்திழிந்தவரென்றவமதித்தின் றிருக
கோதாத, செயதிமினித்தவறுதமைச சேர்ந்ததெனுமறையவாகளா
சிந்தித்தாய்ந்து, வெயதின்மழிசையர்பெருமான் றனையணுகித்திரு
வடிக்கே வீழ்ந்துபோற்றி, உய்திறனென்றெமககருளி யவமதித்த
பிழைபொறுத்தி யுரவோயென்றார்.

(இ-ள்.) இன்று இங்குவந்த ஆழ்வார் நாலாம் வருணத்தில் தாழ்ந்தவரென்று அவமதித்து வேதாத்தியயனஞ் செய்யாததால் இக்குற்றம் தம்மைச் சேர்ந்ததென்று சிந்தித்து யோசித்து, அவ்வேதியாகள் விரைவாகத் திருமழிசை யாழ்வாரை யடைந்து அவர் திருவடியில் விழுந்து துதித்து, "பெரியீர்! நாங்கள் உஜ்ஜீவிக்கும் விதமொன்றை எங்களுக்கு அளித்து (நாங்களும்மை) அவமதித்த பிழையைப் பொறுப்பீராக" எனறாாகள. (எ-று.)

அகூ. அண்ணலுமங்கருளினகத் தொருநீலநென்முறிப்ப வந்த
ணாளர், எண்ணரியசுருதிமுறை தெரிந்துதிருவடிமீண்டு மிறைஞ்
சிப்போந்தார், கண்ணனொடுந்திருவாழி யாழவாாபொற்றிருககோ
வில் கலந்துபோற்றி, உண்ணமிாதமனையதமிழ் நுவனறுவிடை
கொடுவீதி யுற்றான்மன்னோ.

(இ-ள்.) அங்கு ஆழ்வாரும் கிருபையுடைய திருவுள்ளத்துடனே ஒரு கறுப்பு நெல்லையெடுத்து உரித்துக்காட்ட அதனாலே பிராமணாகள் எண்ணறு வதற்கரிய வேதத்தின முறையைத்தெரிநது ஆழ்வார் திருவடிகளை மீண்டும வணங்கிப போயினர். ஆழவார் கணிசண்ணரோடு திருவாழியாழவாரது அழகிய திருக்கோயிலையடைந்து போறறி, உண்ணும அமிர்தம்போன்ற தமிழ ப (பாடல்களை) யருளிசசெயது விடைபெறறுக்கொண்டு திருவீதியை யடைந் தனா. (எ-று.)

ஆழ்வார், கறுப்பு நெல்லை நகத்தால் உரித்துக் காட்டின குறிப்பினால் வேதியா விட்ட இடத்திலுள்ள வசனமாகிய "க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நக நிர்பின்னம" என்பதைத் தெரிந்துகொண்டனரெனக. (அகூ)

கூ0. வளைதுளவச்செழுந்தொடையா ராவமுதுமழிசையர்கோன்
வருகின்றானைத், தனைநிகாசேனையர்முதலாம் பரிசனமுமுனிவரு
மித் தலத்திலுள்ளோர், எனைவருஞ்சென்றெதிர்கொண்மி னெனச
சேனைநாயகனு மிவர்களோடுந், துனைவினெதிர்நடந்தீச னருளப்
பாடெனப்புகலத் தூயோன்றானும்

(இ-ள்.) தொடுத்ததாயச் செழுமையான துளவமாலிகையையுடைய ஆராவமுதப்பிரான், "வருகின்ற திருமழிசைப்பிரானைத் தன்னை நிகர்த்தவராகிய சேனைமுதலியார் முதலிய பரிசனங்களும் முனிவர்களும் இந்த ஸ்தலத்திலுள்ள யாவரும் எதிர்கொண்டு சென்று அழைத்து வாருங்கோள்" என்றருளிச்செய்யச், சேனைமுதலியாரும் பெருமானருளிச்செய்த பரிசனங்களோடு விரைவாக எதிர்கொண்டு நடந்து பெருமானது அருளப்பாடென்றுரைக்கப் பரிசுத்தராகிய ஆழ்வாரும் (எ-று.) (கூ0)

கூக. மாதவருங்கடவுளரு மகிதலமும்மனைத்துலகும் வழுத்துஞ்
சேனை, நாதனிருதிருவடித்தா மரைவணங்கியுவகையுட னடந்து
நான்கு, வேதமுனிவருருபய வேதாந்தவிமல்ருறை வீதிநோக்கிக்,
காதரந்தீர்த்திருங்கோ புரவாயில்கண்களிப்பக் கண்டுபுக்கான்.

(இ-ள்.) முக்தர்களும் நித்தர்களும் உலகத்திலுள்ளாரும் எல்லா வுலகங்களிலுள்ளாரும் துதிக்கும் சேனைநாயகரது இரண்டு திருவடித் தாமரைகளை வணங்கிச், சந்தோஷத்துடன நடந்து நான்கு வேதங்களில் வல்ல மநசீலர்களும் உபயவேதங்களில் வல்ல விமலரும் நித்தியவாசஞ் செய்யும திருவீதிகளைநோக்கிச்சென்று, தீவினை நீங்கிய மோக்ஷத்தை யளிக்கும் திருக்கோபுரவாயிலைக கண்களிக்கும்படி சேவித்து (உள்ளே) பிரவேசித்தனர்.

**கூஉ. காமர்பலிபீடிகைபொற் கருடகம்பந்தனைவணங்கிக் கனகச்சோதி, ஏமமதின்மண்டபங்கோ புரங்கண்முதலியவளங்க ளெவையுநோக்கி, வாமமணிசிகரவிமா னககோயிலவலஞ்சூழ்ந்து மழைததமேகம், தாமரைபூத்தலையிறிருப் பாறகடன்மீதினிற்படிந்த தகைமைபோல**

(இ-ள்.) அழகிய பலிபீடத்தையும் பொன்னாலான கருடகம்பத்தையும் வணங்கி, பொற்பிரகாசமுடைதாயக் காவலான அழகிய திருமதில்-மண்டபம்-கோபுரங்கள் முதலிய வளங்களெவற்றையும் தரிசித்து, அழகிய மணிமயமான சிகரத்தையுடைய விமானம்பொருந்திய திருககோயிலை வலஞ்செய்து, மழையோடுகூடிய மேகமானது தாமரைகள்பூத்ததாகி அலையில்லாத திருப்பாற்கடலின் மேற்படிந்த தன்மைபோல (எ-று.) (கூஉ)

**கூ௩. கடிககமலத்திசைமுகனுங் கலைமதிசூடியுங்கிருதுக் கடவுடானும், தொடிககமலககரங்குவித்துத் துதிபபமுப்பான்முக்கோடி சுரருஞ்சூழ, அடிககமலம்வடதிசைதென் றிசைமகுடங்குடதிசைவெங் களககராழ்ந்த, படிககமலங்கொடுதெடுத்த திருமுகமண்டலங்குணக்கின் பாலதாகி**

(இ-ள்.) வாசனையுடைய தாமரையிலிருக்கும் திசைமுகனாகிய பிரமனும் சலைகளையுடைய சந்திரனைத்தரித்த சிவனும் யாகங்களுக்குத் தலைவனான இந்திரனும் கங்கணம்பூண்ட தாமரைபோன்ற கைகளைக்குவித்துத் துதிக்கவும், முப்பத்துமூன்றுகோடி தேவர்கள் சூழவும், திருவடிக்கமலம் வடதிசையாகவும், மகுடம் தென்றிசையாகவும், பின்புறம் மேற்றிசையாகவும், கடலில் ஆழ்ந்த பூமிக்கு அமலத்தையளித்து உத்தரிப்பித்த திருமுகமண்டலம கிழக்குத்திசையாகவும் செய்து, (எ-று.) (கூ௩)

**கூச. திருமடந்தைபுவியணங்கு திருவடித்தாமரைவருடச் செழுந்துழாயின், மருமலிந்ததொடைதிருமார் பகத்திலங்கப்பலவணியின் மணிவில்வீச, உருமலிந்தகதிரமணிப்பைத் தலையனந்தன் மீதுவிழித் துறங்குமாலைக், கருமலிந்தபவச்சலதிக் கரைகாட்டும் புணையையிரு கண்ணிற்கண்டான்.**

(இ-ள்.) பெரியபிராட்டியாரும் பூமிப்பிராட்டியாரும் திருவடித்தாமரைகளை வருடவும், செழுமையான வாசனைமிகுந்த திருத்துழாயின் திருமாலை திருமார்பில் விளங்கவும், பலவான ஆபரணங்களிலுள்ள மணிகளின் ஒளிவீசவும், நிறம்மிகுந்த ஒளிமயமான மணிகளையுடைய படங்களமைந்த தலைகளையுடைய திருவநந்தாழ்வான்மீது அறிதுயிலமரும் பெருமானைக், கர்ப்பவாசஞ்செய்தல் மிகுந்த பிறவிக்கடலின் கரையைக்காட்டுந் தெப்பத்தைத், தம்மிரண்டு திருக்கண்களாற் சேவித்தனர். (எ-று.) (கூச)

கூஉ முதல் இவை மூன்று பாவும் ஒருதொடர்.

கூரு. சரணமுதற்றிருமுடிகா றவயவத்தினழகனைத்துந் தடங்க ணுறுங், கரணமெடுத்துதவவுளங் கவாதலுமெய்புளகரும்பக் கண்ணீரவார, பிரணவமுற்பரம்பொருளே யுலகளந்தாயடியருளம் பிரியாவாழ்வே, அரணமதிற்குடந்தையிலா ராவமுதேயெனவணங்கி யருகினின்றான்.

(இ-ள்.) திருவடிமுதல் திருமுடிவரையிலுள்ள பெருமானது அவயவத்தின் அழகையெல்லாம தமது விசாலமான கண்களாகிய கரணமெடுத்துக் கொடுக்கத் திருவுள்ளங்கொள்ளுதலும், திருமேனி புளகமடையவும் கண்ணீர் சோரவும் "முதன்மையான பிரணவத்திற் சொலலப்படும் சிரேஷ்டமான பொருளே! உலகமளந்தவனே! அடியாரது உள்ளத்தைவிட்டுப் பிரியாத வாழ்வே! அழகிய மதில்சூழ்ந்த திருக்குடநதையி லெழுந்தருளியிருக்கும் ஆராவமுதே!" எனறு வணங்கிப் பெருமானருகில் நினறு, (எ-று.)

கூசு. தொடர்ந்தவேதமுமயனுஞ் சுரர்களுங்காண்டற்கரிதாந் துதித்துஞாலங், கடந்தசீரடியவாகட் கெளிதாகுமெனவுலகங் காண்டலவேண்டி, நடந்ததாளவருந்தியதோ நயனமலரலாத்தாது நாகமீதே, கிடந்தவாறென்னெழுந்து பேசுகிகேசவவெனுஞ்சொற்கேட்டுமாலும்

(இ-ள்.) "தேவரீரைத் தொடர்ந்த வேதமும் பிரமனும் தேவர்களும் காண்பதற்கரிதாகும்; தேவரீரைத் துதித்து உலகத்தை வெறுத்த அடியார்கட் கெளிதாகும் என்று சொல்லும்படி உலகத்திலுள்ளார் சேவிக்கவேண்டி, (முன்பு) நடந்த திருவடிவருநதியதோ? திருக்கண்மலரை யலாத்சாமல் சேஷசயநத்தின் மீது கிடக்கும் விதமென்? எழுந்து பேசுவாயாக கேசவனே!" என்னுஞ் சொல்லைக்கேட்டுப் பெருமானும் (எ-று.)

இங்கு ஆழ்வார் அருளிச்செய்தது திருச்சந்தவிருத்தத்தில் சுக-வதான "நடந்தகால்கள் நொந்தவோ நடுங்க ஞாலமேனமா, யிடாநமெய குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரங், கடந்தகால்பரந்தகாவிரிக்கரைக் குடநதையுட் கிடந்தவா றெழுந்திருந்து பேசுவாழிகேசனே" எனனும் பாசுரமாம். (கூசு)

கூஎ. வலக்கரமீதடுத்தமுடி யெடுத்துவிழித்தெழுந்தினிய வரமேதென்ன, அலக்கணகற்றியதவனு மடியனுக்காவெழுந்ததுலகனைத்துங்காண, நலக்கனகமுடிநிவந்து துயில்கெனக்கேடடொரு குகையங் நகரியோகத், திலக்கமதித்திடின்மூவா யிரத்தெழுநூற் றெண்பதியாண் டிருந்தானன்றே.

(இ-ள்.) வலது ஸ்ரீஹஸ்தத்தில் வைத்திருக்கும் திருமுடியை யெடுத்து விழித்தெழுந்து (உமக்கு வேண்டும்) இனியவரம் ஏதென்று கேட்க, துன்பத்தை நிவர்த்தித்த ஆழ்வாரும் "அடியேனுக்காக (தேவரீர்) எழுந்த சௌலப்பியத்தை உலகமெல்லாஞ் சேவிக்கும்படி நன்மையான பொன்முடியானது உயர்வாயிருக்கத் துயில்கொள்ளல் வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்துவிட்டு, அந்நகரத்தில் ஒரு குகையினிடத்துக் கணக்குமதித்தளக்குமிடத்து மூவாயிரத்தெழுநூற் றெண்பது வருஷம் யோகத்திலெழுந்தருளியிருந்தனர். (எ-று.) (கூஎ)

[அருளிச்செயல்.]

கூஅ. பொன்னுலகத்தவர்புகழுந் திருச்சந்தவிருத்தமுதற் பூநிலாய, என்னவெடுத்தீரறுபானவின்றுதிருவந்தாதி யெழுவாயின் சீர், அன்னமுகைநான்முகனை யெனப்பாடமுெண்ணூற்றுறருளிச் செயயாப, பன்னரியபரமபதம் பாகவதரனைவருககும பாரித்தானல.

(இ-ள்.) பொன்னுலகத்திலுள்ள தேவர்கள் புகழும் திருச்சந்த விருத்தத்தை முதலில் "பூநிலாய" எனறெடுத்து நூற்றிருபது செய்யுட்களாலருளிச்செயது, திருவந்தாதியை இனிய முதற சீர் அனனமேறும் "நான்முகனை" எனறெடுத்துத் தொண்ணூற்ருறு பாடல்களாலருளிச்செயது, சொல்வதறகரிய பரமபதம் பாகவதர்கள் யாவருக்கும் உண்டாகச்செயதனர். (எ-று.) (கூஅ)

*தூயவனந்நாளதனிற் றுத்தியரவணையான்மேற் சொற்றசீர்த்தி
மேயகவியனைத்தினையுங் காவிரிநன்னீரிலிட மீண்டெதிராந்து
ாயெழுநதுவருமிரண்டு நூலினையுந்தாமெடுத்துத் தராதலத்தின்
மீயிரு ருமுயிர்க்குதவி யுயவிப்பானதிருவுள்ளம் விழைந்திட்டானல்.

(இ-ள்.) பரிசுத்தரான ஆழ்வார், அக்காலத்தில் படப்பொறியையுடைய பாம்பணைப்பரமன் விஷயமாக அருளிச்செயத சிறபபுப் பொருநதியகவிகளையெல்லாம் திருக்காவேரியின் நல்ல நீரிலிட (அவைகளில்) எதிர்ந்து திரும்பித் தாவியெழுந்து வரும் இரண்டு நூல்களையும் தாம் எடுத்துப் பூமியினமீதிருக்கும ஆனமாக்களுக்களித்து உஜ்ஜீவிப்பிக்கத் திருவுள்ளத்தில் விருபபங்கொண்டனர். (எ-று.) திருக்காவேரியிலிட்டதும், எதிரேறிவந்ததும் அக்கவிகள் எழுதிய ஏடுகளெனக.

[எனவே இந்த இரண்டு பிரபந்தங்களும் திருக்காவேரி நீரில் எதிரேறி வந்தவைகளெனக் கொள்க.]

‡ அவ்விருநூற்றுப்பத்தோடாறெனுங்கவிதைதன்னுள்
ஒவ்வியேகமலைகேள்வனுவந்துறைகின்றவாகுந்
திவ்வியதேசமீரெண்செப்பியததனுக்கேற்ற
செவ்விசேர்நாமந்தன்னைத்தெளிவுறப்பகர்வாமன்றே.

‡ சீரரங்கந்திருவெஃகாதிருவல்லிக்கேணிதன்னோ
ரேகங்குடந்தைகோட்டியூர்குறுங்குடியோடோதும்
பேரெவ்வுள்வேங்கடம்மனபிற்திருப்பாடகந்து
வாரகைகூடலும்பாற்கடலும்வைகுந்தமாமே.

[சிறுபுலியூரில் தமது வைபவத்தை வெளியிடுதல்.]

**கூகூ. அங்குறைநாட்டிருமழிசை யோகிதனக்களித்தவர மவனிகாணத், தங்குதிருக்குடந்தையிலா ராவமுதைவிடைகொடுதாந் தணந்துவீதி, எங்குநவமணியிமைக்குஞ் சிறுபுலியூரெனும்பதியை யெய்திஞானம், பொங்குமருண்மாக்கடலை யுளக்கமலக்கிருத்திவலம் புரிவிற்செய்தான்.**

**(இ-ள்.) அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கும்போது திருமழிசை யாழ்வார், எம்பெருமான் தமக்கு அளிதத வரத்தைப் பூமியிலுள்ளோர் காணும்படி நிலைபெற்ற திருக்குடந்தையி லெழுந்தருளியிருக்கும் ஆராவமுதப்பிரா**

னிடத்து விடைபெற்றுக்கொண்டு (அவ்விடம்) நீங்கி, வீதிகளெங்கும் நவமணிகள் ஒளிவிடும் சிறுபுலியூரென்னுந் திருப்பதியை யடைந்து, பெருமைபொருந்திய கருணைக்கடலாகிய பெருமானை ஞானம் அபிவிருத்தியடைந்த தமது திருவுள்ளமாகிய தாமரையிலிருத்தி அனபோடு வலஞ்செயதனர். (எ-று.)

வேறு.

௧00. சிறுபுலிசையினுறைகருமுகிறிரிபதைசெறிதாணமீ
துறுமனனுருகிடவலம்வரலொடுமுலகுடையோனும்
மறுமலருறைதிருமணியொளிதரமுகமதிஞானம்
பெறுதவமுனிவருதிசைதொறுமுறைமுறைபிறழுதநதான்.

(இ-ள்.) சிறுபுலியூரில் நித்தியவாசஞ் செய்யும் சரியமேகம்போன்ற பெருமானது கங்காநதிபொருந்திய திருவடியின்மீது நிலைபெற்ற திருவுள்ளம உருகும்படி வலம்வருதலும, மெய்ஞ்ஞானம் நிலைபெறற தவத்தையுடைய ஆழ்வார் வருந்திசைகள் தோறும் முறைமுறையாக, உலகுடையவனை பெருமானும் ஸ்ரீவறசம் தாமரைமலரி லெழுந்தருளியிருக்கும் பிராட்டி கவுஸ்துபம் விளங்கும்படி சநதிரனபோன்ற திருமுகநதிரும்பினன். (எ-று.) (௧00)

௧0௧. திருமகளொடுமுறைமுகின்முனிவலம்வருதிசைதோறும
பெருகியகருணையொடலம்வருமஃதடிபெயராதே
மருமலாசிகழிகைதொடையணிதுகிலகடல்வருஞான
முருகலர்துளவமதணிதருதொழில்புரிமுனிகண்டான்.

(இ-ள்.) (இப்படி) திருமகளோடிருக்கும் மேகம்போன்ற பெருமான் ஆழ்வார் வலம்வருந் திசைகள் தோறும் பெருகிய கருணையோடு திரும்புவதை, அடிபெயராமல் வாசனையுடைய கோத்தமாலையும் பூமாலையும் அழகிய திருப்பரியட்டமும் திருப்யாற்கடலிற் பிறந்த ஞானமயமான வாசனை வீசும திருத்துழாயும் பெருமானுக்கணிவதான கைங்கரியஞ்செயயும் முனிவர் கண்டனர். (எ-று.) (௧0௧)

௧0௨. எவரிவ்ணனுகினொனமுனியுவகையொடெதிரெய்தாப்
பவமகல்கதியருணெடியவனெனவருபடிகண்டே
சிவனயன்முதலினர்புகழ்முனிவரனெழிறிகழ்தாண்மேல்
புவியினின்முடிபடிதரநறைமலர்கொடுபூசித்தான்.

(இ-ள்.) யாவர் இங்கு வந்தனரென்று அம்முனிவர் சந்தோஷத்தோடு எதிர்கொண்டு சென்று, பிறப்பு நீங்கும் மோக்ஷத்தைக் கொடுக்கும் பெருமானென்று சொல்லும்படி (ஆழ்வார்) வரும் விதத்தைப் பார்த்து, சிவன் பிரமன் முதலானவர்கள் புகழும் ஆழ்வாரது அழகுவிளங்கும் திருவடிகளின்மேல் பூமியில் முடிபடியும்படி நமஸ்கரித்து, வாசனையுடைய புஷ்பங்களைக் கொண்டு பூசித்தனர். (எ-று.) (௧0௨)

௧0௩. எழுந்துபவப்பிணிகடிதருமுகினிகரியலஞானக்
கொழுந்துவெளிப்படவந்ததுவோவிதுகூறென்னுந்
தொழுந்தகைமுனிவரனைக்கொடுமறையவர்தொகைதாண்மேல்
விழுந்திழிநிலைவைவமத்தினெனவெனவண்டாரால்.

(இ-ள்.) (பிறகு) எழுந்து பிறவிநோயை யறுக்கும் மேகம்போன்ற இசைந்த ஞானக்கொழுந்தானது வெளிப்படவந்தசோ இதனைச் சொல்லு வீராக என்று வணங்கும் பெருமையுடைய முனிசிரேஷ்டரைக் கூட்டமான கொடிய வேதியர்கள் இழிந்த குலத்தவனைத் தாள்மேல் விழுந்து தோத்திரஞ் செய்தனனென்று கோபித்தனர். (எ-று) (௧0௩)

௧0௪. வீழ்வினைமெய்ப்பொருளவேதமுஞானமுமேலானோன்
தாழ்வினையிற்சிறுதாதனடித்துணைதாழ்வோனே
ஊழ்வினையின்பரிசோகலியோகொடிதோவென்று
ஆழ்வினையைப்புரிமூடனைநூல்சிகையறுமென்றார்.

(இ-ள்.) "வினைகளைக்கெடுக்கும் உண்மையான பொருளையுடைய வேதமும் ஞானமும் அறிபவர்களிலே மேலானவன் தாழும் செய்கைபோலே சேவகனான தாஸனது அடிகளிரண்டையும் பணிந்தவனே! (நீ இங்ஙனஞ் செய்தது) ஊழ்வினையின் பரிசுதானோ? கலிதானோ? பாவமோ?" என்றுரைத்து "தாழ்ந்த செய்கையைச்செய்த (இந்த) மூடனது பூணூலும் சிகையும் அறுபடும்" என்று சொன்னார்கள். (எ-று.) (௧0௪)

௧0௫. நிறைதவவாடிவுடைநிமலனுமிதலையினெடுஞானத்
திறைவனையுதவியமுதலவனைவெளியிலணிடினலலால்
அறைதவரவனியிலறிலரினியெனவகமெண்ணு
மறைநவிற்றிருப்பதமதுவயிரியைவெளிவருகென்றான்.

(இ-ள்) நிறைந்த தவவேடமுடைய மலரகிதரான அடியாரும், சொற்புகழ்மிகுந்த பெரிய ஞானசைலவனான பிரமனைப் படைத்த காரணரான பெருமானை, "இனி இவரை வெளியிடாமலன்றி, சொல்லப்படும் தவமுடையவர்கள் பூமியில் அறியமாட்டார்கள்" என்று திருவுள்ளத்தில் எண்ணி, வேதங்கள் துதிக்கும் இரண்டு திருவடிகளையுடையவனும் மாமறைகளுக்கு வயிரியான பெருமானை, "வெளிவருக" என்று சொன்னார். (அப்போது) (எ-று.) (௧0௫)

௧0௬. அதிரசிறையுவணனதிருப்புயமலைநனியழகேறக்
கதிர்மணிமுடியணியிருகுழைபொலனிறைகலைவீச
எதிர்தருமலர்மதிபொருவியதிருமுகமெழில்வீற
முதிராகதியடியவர்பெறவினிதருடனிமுதல்வந்தான்.

(இ-ள்.) (சதுருக்கள்) அஞ்சுஞ்சொல்லும் சிறகுகளையுடைய பெரிய திருவடியின் இரண்டு புயங்களாகிய மலைகள் அழகதிகரிக்கவும், ஒளியுடைய மணிகளிழைத்த திருவபிஷேகமும் திருவாபரணங்களும் இரண்டு குண்டலங்களும் அழகு நிறைந்த ஒளிவீசவும், தோன்றிய கலைகள் விரியப்பெற்ற சந்திரனை யொத்த திருமுகம் அழகதிகரிக்கவும், முதிராத மோக்ஷத்தை அடியவர்கள் பெறும்படி இனிதாகக் கொடுக்கும் ஒப்பற்ற காரணபூதனான பெருமான் எழுந்தருளினன். (எ-று.) (௧0௬)

௧0௭. அருமறைதெரிவருமமலனதழகியவலர்பூநேர்
திருவடிபரவினனகைபுரிமறையவர்திரளெலா
மருவலர்துளவணிமுதலவனுமுனியிகழமடவோரதி
வெருவருமெரிநரகதனிடையிடர்கொடுவீழ்வாரால்.

(இ-ள்.) (அப்போது ஆழ்வார்) அருமையான வேதங்கள் தெரிவதற்கரிய மலரகிதுளை பெருமானது அழகிய மலர்ந்த தாமரையையொத்த திருவடிகளை வணங்கினர். சிரித்துப் (பரிகாசஞ்செய்த) பிராமணர்கள் கூட்டம் நாணமடையும்படி, வாசனையுடைய திருத்துழாயணிந்த முதல்வனை பெருமானும் (ஆழ்வாரைக் கடாக்ஷித்து) "உன்னையிகழ்ந்த அறிவில்லாதவர்கள் நெருப்பும் பயப்படும்படி எரிந்துகொண்டிருக்கும் நரகத்தினிடத்துத் துன்பங்கொண்டு வீழ்வார்கள். (எ-று.) (௧0எ)

௧0அ. உனையடிபரவியமுனிவரனெமதடியுறுவானென்
றனைவருமறிதரவருளினனமரரொடயலசென்றான்
எனையருளெனையருளினியுனதடிமையமெனவேதி
வினைபுரிமறையவராபரவினரவனடிமிகுமன்பால.

(இ-ள்.) "உன்னை அடிபரவிய முனிசிரேஷ்டன் எமது பதத்தையடைவன்" என்று யாவருமறியும்படி அருளிச்செய்து நித்திய சூரியரோடு நீங்கினன். (முன்பு) தீவினையைச்செய்த பிராமணர்கள் "என்னையருள்க என்னையருள்க இனியுமக்கடிமையேமாவோம்" என்று ஆழ்வார் திருவடிகளை மிக்க அன்போடு வணங்கினார்கள். (எ-று.) (௧0அ)

௧0௯. முகினிகர்முதல்வனைவழிபடுமறைதெரிமுனிவன்றாள
புகின்மறையருளரிபுரிகுவனெனமுனிபுகறந்தான்
மகிதலமிசையினியுனைநிகரிலையெனமறையோரும்
அகிலமுமுணர்முனியடிமருவினமைமையருளென்றார்.

(இ-ள்.) (அப்போது) ஆழ்வார் "மேகம்போன்ற முதல்வனை பெருமானை வழிபடும் வேதபாரகரான முனிவருடைய அடிகளை அடைக்கலம் புகுவீர்களாயின் பெருமான அருள்செய்வன" என்று அருளிச்செய்தனர். பிராமணர்களும "பூமியின்மீது இனியும்மை யொப்பவரில்லை" யென்று யாவருமுணர்ந்த முனிவருடைய திருவடிகளைச் சேர்ந்து, "எம்மை யருள்வீராக" என்றார்கள். (எ-று.) (௧0௯)

[யாகத்தில் அக்கிரபூசை பெறுதல்.]

வேறு.

௧௧0. அப்பரிசுபெரும்புலியூரடிகளுக்குச்சிலரானுகிச்
செப்பவதிசயித்தெழுந்துசென்றுபுரிசெழுந்தவத்தால்
ஒப்பரியதிருமழிசையோகியைக்கண்டுளமுருகி
எப்பவமுமினிக்கடந்தேனெனமலர்த்தாளிணைபணிந்தான்.

(இ-ள்.) அந்த விருத்தாந்தத்தைப் பெரும்புலியூரடிகளைச் சிலர் அடைந்து சொல்ல (அவர்) அதிசயமடைந்து எழுந்திருந்து சென்று செய்த நல்ல தவத்தினாலே ஒப்பில்லாத திருமழிசைப்பிரானைச் சேவித்து உள்ளங்கரைந்து எந்தப் பிறவியும் இனிக்கடந்தே னென்று (ஆழ்வாரது) மலர்போன்ற இரண்டு திருவடிகளை வணங்கி, (எ-று.) (௧௧0)

௧௧௧. ஏதமிலாவுனதடியன்புரிவேள்விக்கெழுந்தருள்கென்
றுதரவினுடன்கொணர்ந்தாங்கனைவருகருடவிருத்தி
வேதமுறைவழுவாதுபுரிவேள்விமிகவிளங்க
ஓதருமக்கிரபூசையுதவியுளமுவந்தனனால்.

(இ-ள்.) "குற்றமில்லாத உமக்கு அடிமையான நான் செய்யும் யாக சாலைக்கு எழுந்தருள்க" என்று பிரீதியுடன (ஆழ்வாரைச்) கொண்டுவந்து எல்லோருக்கும் இடையிலிருத்தி வேதத்திற் சொல்லும் முறைவழுவாது செய்யும் யாகம் மிகவும் விளங்கும்படி சொல்லுதற்கரிய அக்கிரபூசையைக் கொடுத்துச் சந்தோஷித்தனர். (எ-று.) (கககக)

ககஉ. சதுமறையின்முறைவேள்விசசடங்கிழைகருந்தகைசான்ற
முதுமறையோரதுகாணுமுனிந்துமறைமுதற்குமுன்னாள்
விதுமரபோன்முதற்பூசைவிழைந்துதவசிசுபாலன்
பொதுவனெனநகைத்ததுபோல்மிகவுநகைபுரிந்தனரால.

(இ-ள்.) நான்கு வேதங்களின் முறைப்படி யாகச்சடங்கைச் செய்யும் பெருமை நிறைந்த பழமையான வேதியர்கள் அதனைக்கண்டு கோபித்து, முறைமுதல்வனான கண்ணனெம்மானுக்கு முற்காலத்தில் சந்திரவமிசத்தனான தருமபுத்திரன் அக்கிரபூசையை ஆசைப பெருக்கத்தோடு கொடுக்க (அப்போது) சிசுபாலன் (கண்ணன்) இடையனென்று ஏளனமாக நகைசெய்தது போல, மிகவும் நகை புரிந்தார்கள். (எ-று.) (ககஉ)

ககங. இக்கணநந்தமைமையெலாமிவர்காணவேணுமெனறு
அகமலப்பதத்திலோராயிரமன்றளித்தோனும
சக்கரங்கொள்கையோனேயெனுஞானத்தமிழ்க்கவியாற்
செக்கமலத்தலாநெடுங்கட்பெருமாலைசசிந்தித்தான்.

(இ-ள்.) இக்கணத்தில் நம்பெருமையெல்லாம் இவர்கள் காண வேணுமென்று சிரேஷ்டமான கமலம்போன்ற ஆயிரமான சிரப (சிவபிராணுடைதிர்த்த) அக்காலத்தில் அளித்தவரான ஆழ்வாரும் "சக்கரங் கொள்கையனே" என்னும் ஞானத்தமிழ்க் கவியாலே செந்தாமரை மலர்போன்ற நீண்ட திருக்கண்களையுடைய பெருமானைச் சிந்தித்தனர். (எ-று.) (ககங)

"அக்கரங்களக்கரங்களென்றுமாவதெனகொலோ
இக்குறும்பைநீக்கியென்னையீசனுக்காவல்லையேல்
சக்கரங்கொள்கையனேசடங்கர்வாயடங்கிட
உட்கிடந்தவண்ணமேபுறம்பொசிந்துகாட்டிடே"

ககச. மாயவனுமதிமுகமுமணிமகரகுண்டலமுந்
தூயகவுத்துவமணியுந்துளவுமுதலியதுலங்க
நாயகிபூமடந்தைபுவிநளினமலர்த்தாள்வருடப்
பாயலரவினிற்றிருக்கண்பணைவெளிக்கேபாரித்தான்.

(இ-ள்.) பெருமானும் சந்திரன்போன்ற திருமுகமும் அழகிய மகர குண்டலமும் பரிசுத்தமான கவுஸ்துபமணியும் திருத்துழாயும் முதலியவைகள் விளங்கும்படி பெரிய பிராட்டியாரும் பூமிப்பிராட்டியாரும் தாமரை மலர்போன்ற திருவடிகளைவருட ஆதிசேஷசயனத்தில் திருக்கண் வளர்தலை வெளிக்குத் தோற்றுவித்தனன். (எ-று.) (ககச)

ககரு. சண்டமழிசையர்பெருமான்பணிந்தேத்திக்கருத்துவகை
கொண்டுசெழுந்தமிழ்கூறிக்குனித்தனன்பாற்குணாசடற்கே
பண்டுதுயில்பரிசவனைப்பழித்தமறையவர்காண
வண்டுளவத்தொடையீசன்காட்டியுடன்மறைந்தனனால்.

(இ-ள்.) திருமழிசையாழ்வார் சேவித்து வணங்கித்துதித்துத் திருவுள்ளத்தில் சந்தோஷங் கொண்டு செழுமையான தமிழ்ப்பாடலைக் கூறி வணங்கினர். அவரைப்பழித்த பிராமணர்கள் காணும்படி வளமான துளவமாலையணிந்த பெருமான் ஒலியையுடைய திருப்பாற்கடலில் முன்பு துயிலும் விதத்தைக்காட்டி உடனே மறைந்தருளினன். (எ-று.) (௧௧௫)

௧௧௬. அந்தணருந்திருமழிசையடிகளடி முடிசூடி
வந்தனையோடெமதுபிழைபொறுதியென்றுவழுத்திமணிச
சுந்தரப்பொற்பிரமவிரதத்தேற்றித்தொலைவிலருள்
தந்தடிமையெமைவிரும்புகெனப்பரவிச்சரணடைந்தார்.

(இ-ள்.) பிராமணர்களும் திருமழிசையாழ்வாரடிகளை முடியிற் சூடி "எங்கள் பிழையைப் பொறுப்பீராக" என்று வந்தனத்தோடு தோத்திரஞ் செய்து, ரத்தினமிழைத்த அழகிய பொன்மயமான பிரமரதத்திலேற்றி, கெடாத அருளைக்கொடுத்து அடிமையான எங்களை விரும்புவீராக வென்று வணங்கிச் சரணாகதி செய்தார்கள். (எ-று) (௧௧௬)

௧௧௭. பூசுரருக்கருள்சுரந்துபுவியுதரம்பொதிந்தோன்பேர்
பேசுமுபநிடதநிலைபிறழாதுபெருஞானத்
தேசுதருமுபதேசமளித்தடிமைத்திறமாக்கி
ஆசுதவப்புரிதவனுமலங்கினமவணிருந்தான்.

(இ-ள்.) குற்றம் கெடும்படி செய்த தவத்தையுடைய ஆழ்வாரும், பிராமணர்களுக்கு அருள்கொடுத்துப் பூமியைத் தன்றுவயிற்றிலிட்டடக்கிய பெருமானது கலியாணகுணங்களைச் சொல்லும் உபநிஷத்துக்களின் நிலைதவறாது பெரிய ஞானதேஜஸைக் கொடுக்கும் உபதேசமளித்து (அவர்களை) அடிமைத்திறத்தவர்களாக்கி அங்கு அநேககாலமெழுந்தருளியிருந்தனர். (எ-று.) (௧௧௭)

வேறு.

௧௧௮. ஆரியனுமெங்கைகணிகண்ணனொடுவண்டார்ந்
தேரியலரங்கமுதலாயபதியாவும்
பாரினிறைஞ்சிவளர்பல்லுயிர்புரந்தான்
காரியருண்மாறனுயர்காதைநவில்கின்றும்.

(இ-ள்) ஞானபூரணரான ஆழ்வாரும் எமது ஸ்வாமியான கணிகண்ணரோடு அவ்விடம் விட்டு நீங்கப், பூமியிலுள்ள அழகமைந்த திருவரங்க முதலாகிய திருப்பதிகளையெல்லாம் வணங்கிக்கொண்டு, விருத்தியடையும் பல ஆன்மாக்களை ரக்ஷித்தனர். (இனி) காரியர் பெற்றருளிய நம்மாழ்வாரது மேன்மையான சரித்திரத்தைச் சொல்லுவோம். (எ-று.) (௧௧௮)

[இவ்வாழ்வார் திருவவதாரம், முதலாழ்வார்கள் திருவவதாரஞ் செய்த வருஷத்தில் தைமீ கிருஷ்ணபக்ஷப் பிரதமை மகநக்ஷத்திரம் கூடிய ஆதிவாரத்தில் துலாலக்கினத்தில் என்றறிக. இவ்வுலகில் எழுந்தருளியிருந்த காலம் நாலாயிரத்தெழுநூறு வருஷமென்பர். யோகத்திலிருந்து திருநாட்டுக் கெழுந்தருளின இடம் திருக்குடந்தை.]

௩-வது பத்திசாரச்சருக்கம் முற்றிற்று.

---

திருமழிசையாழ்வார் திருவடிகளேசரணம்.

ஸ்ரீ

# ச-வது பராங்குசச்சருக்கம்.

[பொருநையாற்றின் சிறப்பு.]

க. பொதுவறத்திரைப்புணரிசூழ்புவியெலாம்புரப்பான்
விதுகுலத்தவதரித்தமீனவனெனும்வேந்தன்
முதுதமிழ்த்திருநாட்டினுக்கணியதாய்முரணு
மதுவடர்த்தமான்மலரடிக்கங்கையேமானும்.

(இ-ள்.) பொதுவாயிருத்தலின்றி (தனக்கேயாம்படி) அலைகளையுடைய கடல் சூழ்ந்த பூமியையெல்லாம் காக்குமவனாய், சந்திரகுலத்தில் பிறந்த மீனவனென்று சொல்லப்படும் அரசனாகிய பாண்டியனது பழமையான தமிழ் நாடாகிய பாண்டிநாட்டுக்கு ஆபரணம்போல விளங்கி, மதுவென்னும் அசுரனை விரோதித்து வென்ற பெருமானது மலர்போன்ற திருவடியில் பிறந்த கங்கைக்குச் சமானமாயிருக்கும். (எ-று.) (க)

உ. வரையின்வாளராமணிநிரைவரன்றிவாலருவி
தரையிற்றாழ்தரத்தழைத்தநீர்மணிநிறந்தழுவி
திரையின்பொன்னுடைதரித்தமாநிலமெனுந்திருவின்
புரையின்றாயசெம்பட்டினுத்தரியமேபொருவும்.

(இ-ள்.) மலையிலுள்ள ஒளியையுடைய பாம்புகளது மாணிக்கங்களின் கூட்டங்களை வாரிக்கொண்டு, பிரகாசத்தோடு கூடிய அருவிகள் தரையில் வீழப் பரவிய நீர், அம்மணிகளின் நிறங்கூடி, சமுத்திரமாகிய அழகிய ஆடையைத் தரித்த பூமிதேவியின் குற்றமற்ற சிவந்த பட்டுத்தரீயத்தை யொத்திருக்கும். (எ-று.) (உ)

ங. அடியிற்செம்மணியிடைபசுங்கனகநீளலைதோய்
முடியிற்றண்கதிர்முத்தினங்கன்னலென்முதிரை
படியிற்றன்னிருமருங்கினும்பயகுநீர்படியின்
நொடியிற்செங்கண்மால்பதந்தருநுதலினுந்தருமால்.

(இ-ள்.) அடியில் மாணிக்கமும், இடையில் பசுமையான பொன்னும், பெரிய அலைகளையுடைய முடியில் குளிர்ந்த பிரகாசத்தையுடைய முத்தினமும் உடையதாய்க், கரும்பு-நெல்-முதிரை என்னுமவைகளைப் பூமியிற் றன்னிரண்டு பக்கங்களினும் உண்டாக்கும்; (தனது) நீரிற் படிந்தாலும் (படிந்தவர்க்கு) நொடிப்பொழுதில் செங்கண்மாலுலகமாகிய பரமபதத்தைத் தரும்; (தன்பெயரைச்) சொல்லினும் (சொல்லினார்க்கு அவ்வுலகைத்) தரும். (எ-று.) (ங)

முதிரை-அவரை, காராமணி, கொள், துவரை முதலியன.

ச. பொன்னிமாதவம்புரிந்துவானதியினும்பொலிந்த
திங்ஙிலத்தெனமுக்குணத்தவரைநோற்றிறைஞ்சச்
சென்னிமானடுவயனடிசிவன்பயிறிறம்போற்
றன்னிலத்தில்வெண்டாளமாடகமணிதயங்கும்.

(இ-ள்.) இவ்வுலகில் திருக்காவேரிநதி பெருந்தவஞ்செய்து கங்காநதியினும் சிறப்புற்ற என்று (தானுஞ் சிறப்படையும்படி) சத்துவம்-இராசதம் தாமதம் என்ற மூன்று குணங்களை முறையே யுடையவர்களாகிய விஷ்ணு-பிரமன்-சிவன் என்பவர்களைத் தவஞ்செய்து வணங்கச், சிரத்தில் விஷ்ணுவும், இடையில் பிரமனும், அடியில் சிவனும் பொருந்தியிருக்கும் விதம்போலத் தனது நிலத்தில் வெண்மையான முத்தும்-பொன்னும்-மாணிக்கமும் விளங்கிக்கொண்டிருக்கும். (எ-று.)

பொன்னிமாநதி சிறப்படைந்த கதை: முன்னொருகாலத்தில் மேருமலையில் நதிமாதர்கள் கூடியிருந்தபொழுது, ஒரு கந்தருவன் அநதிக்கை நோக்கி வணங்கிப்போக, நதிமாதர்கள் அவ்வணக்கம் தங்கள் தங்களுக்கென்று பிணங்கிக், கந்தருவனைக்கேட்க, அவன் உங்களிற் சிறந்தவளுக்கென்றான். அப்பிணக்கு நீங்கப் பிரமனைக் கிட்டிக்கேட்டனர். பிரமன், கங்காநதி ஆதி பகவன் பாததாமரையிற் பிறந்தமையால் அன்னவளே சிறப்புடையள்; அவட்கே அவ்வணக்கமெனக், காவேரி சினந்து நான் கஙகையினும புனிதமாகக் கடவேனென்று பகவானை நோக்கித்தவஞ்செய்து அவனருளால் அவன திருமேனி ஸ்பர்சம்பெற்றுச் சிறப்படைந்தனள் என்பதாம். இதனை ஸ்ரீரங்கமான்மியத்தில் விரிவாய்க் காண்க. தரளம் ஆடகம் மணி என்பவைகள் வெண்மை, பொன்மை, செம்மை என்னும் நிறத்தால் மும்மூர்த்திகளின் குணங்கட் கொப்பாயின. (ச)

ரு. வானிலங்குமால்வரையினுள்ளவுமலிபூங்
கானிலுள்ளவுங்கழனியிலுள்ளவுங்கவர்ந்தேழ்
தானிலங்கியாகபொருந்தவுந்தழுவா
நானிலந்தனிற்போதரும்பொருநைமாநதியே.

(இ-ள்.) ஆகாயமளாவிய உயர்ந்த மலையிலுள்ளவைகளையும் மிக்க பூக்களையுடைய காடுகளிலுள்ளவைகளையும் கழனிகளிலுள்ளவைகளையுங் கொண்டு ஏழென்னுந்தொகை பொருந்திய சமுத்திரத்திற் சேரவும் அடங்காது பூமியில் பரவும் பொருநைமாநதி. (எ-று.) (ரு)

இவை யைந்துபாட்டும் ஒரு தொடர். பொருநைமாநதி, மானும் பொருவும் பயக்கும் தரும் தயங்கும் போதரும் எனமுடிக்க.

[திருக்குருகூர் வைபவம்.]

சா. பலவளந்திகழனையதோர்பொருநையின்பாங்கர்
புலவரந்தணர்புவியுளோரனைவரும்புகழக்
கலவமஞ்ஞைநேர்புடவிசெந்திருவொடுங்கரியோன்
குலவருந்திருப்பதிமதிதருதிருக்குருகூர்.

(இ-ள்.) பலவளங்களும் பொருந்திய அத்தகைய பொருநைநதியின் பக்கத்தில், தேவர் பூசுரர் மனிதர் ஆகிய யாவரும் புகழும்படி கலாபத்தையுடைய மயிலுக்குச்சமானமான பூதேவியார் செந்திருவாகிய பெரிய பிராட்டியார் என்னுமிவர்களோடு எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் அரிய திருப்பதியாகும், ஞானத்தைக் கொடுக்கும் திருக்குருகூர் என்னும் திவ்விய க்ஷேத்திரம். (எ-று.) (சா)

எ. உணர்வினுவிரண்டெழுத்தமைத்துறையினுணர்வான்
அணவரும்பதத்தரிதிருவடியறிந்தழியாக்

குணநிறைந்துயர்பரமபாகவதராங்குரவோர்
கணமுறைந்தெழினிறைதிருமாளிகைகளும்.

(இ-ள்.) (தமது) ஞானத்தில் திருவஷ்டாக்ஷரியை நிலைநிறுத்திச், சொல்லாலும் மனத்தாலும் கிட்டுவதற்கரிய பரமபதத்தையுடைய பெருமானது திருவடியின் பெருமையை யறிந்து, அழியாத நற்குணங்கள் பரிபூரணமாகி (அதனால்) உயர்ந்துள்ள பரமபாகவதர்களாகிய ஆசிரியர்களின் சமூகங்கள் நித்தியவாசஞ் செய்த அழகு நிறைந்த திருமாளிகைகள் அங்கு விளங்கிக்கொண்டிருக்கும். (எ-று.) (எ)

அ. வயங்குபற்பலமணிநிரைக்கனகவாண்மதிலும்
புயங்கமாலுயர்சினகரத்தாதனப்பொலிவும்
இயங்குழுமரொடுந்தரணிவானிலைவிடுத்திழிந்தே
தயங்கலன்றிவேறுவமையின்றெனவெழிறழைக்கும்.

(இ-ள்.) விளங்கும் பலவான மணிவரிசைகளிழைத்த பொன்மயமான ஒளியையுடைய திருமதிலும், ஆதிசேஷ சயனத்தையுடைய பெருமான் எழுந்தருளிய திருக்கோவிலின் ஆசனத்தின்பொலிவும், சூரியன் பரிவேஷத்துடன் தான் சஞ்சரிக்கும் ஆகாயநிலையை விட்டிறங்கி விளங்குவதன்றி வேறுவமானம் இல்லையென்று சொல்லும்படி அழகுடையனவாயிருக்கும். (எ-று.) (அ)

கூ. தெளிதரற்கரும்பரமமால்பதமெனத்தெரிந்தே
வெளியிடற்குளநுதலியகவுசிகம்விரித்தால்
எளிதெனப்படும்புவியினோர்க்கென்னவஃதிசையா
தளியுடைக்குருகூரொனுமழகினுக்கமையும்.

(இ-ள்.) (திருக்குருகூர்) யாவராலுந் தெளிவதற்கரிதான பரமமான திருமாலின் பரமபதமாகு மெனத்தெரிந்து (தெரிந்தபடியே) வெளியிடுதற்கு உள்ளந்துணிந்த சாமவேதமானது, விரித்துரைக்குமாயின் (அப்போது) பூமியிலுள்ளவர்களுக்கு எளிதாகத் தோன்றும் என்னில் அப்படி யாவருமறிந்து கொள்ளுதல கூடாது; (ஆயின்) கிருபையுடைய திருக்குருகூரொனும் அதின் அழகினால், (பரமபதமே திருக்குருகூரொன்பது) அமைந்திருக்கும். (எ-று) (கூ)

வேதங்களில் சிறப்பு நோக்கிச் சாமவேதமென்றார். அளியுடைமையால் திருக்குருகூருக்கெய்திய அழகாவது: பரமபதத்திலுள்ள சாமவேதத்தின் சாரமான திருவாய்மொழி தோன்றவும், நித்திய சூரியரில் தலைவரான சேனைமுதலியார் திருவநந்தாழ்வான் ஆகிய இவர்கள் ஆழ்வாராகவும் திருப்புளியாழ்வாராகவும் அவதரிக்கவும், பரமபதநாதன் தனது வாற்சல்லியாதி குணங்கள் தோன்றவும் பரத்துவம் விளங்கவும் ஆதிநாதப் பெருமானாக நித்திய சாந்நித்தியம் பண்ணி யெழுந்தருளி யிருக்கவும் தான் இடமாயிருந்து ஆன்மாக்கள் உஜ்ஜீவிக்கும்படி செய்யுங் கிருபையினால் வந்த சிறப்பாம். இதனால் திருக்குருகூர் பரமபதமாகுமென்று சாஸ்திரங்களில் தலைமையான வேதங்களாலே துணிந்து சொல்லப்பட்டாலும் யாவருமறிதலரிதாயிருக்குமெனவும் அவ்வேதஸாரமான பிரபந்தமும், பரமபதத்து நித்திய சூரியரும், எம்பெருமானும் இங்கு எழுந்தருளியிருக்கும் கிருபையே அதனை எளிதில் தெரிவிக்கு மெனவுமுணர்க.

கo. இருபிறப்பளர்தொழிலர்மூவிருதொழிலுறுவோர்
மருவுபறபலமணியணிமனைகளுமலிபூந்
தருவுடைக்கடிபொழில்களுந்தாமரைத்தடமுந்
திருமலர்ச்செழுந்துடவையுங்கணிப்பிலசெறியும்.

(இ-ள்.) இருபிறப்பாளர் பஞ்சகாலாநுஷ்டாந முடையவர்கள் ஆறு தொழிலையுடையவர்கள் ஆகிய வேதியர்கள் பொருந்திய பற்பல மணிகளிழைத்த திருமாளிகைகளும், மிகுந்த பூந்தருக்களையுடையனவாய் வாசனையுடைய சோலைகளும், தாமரைத்தடாகங்களும், அழகிய மலர்கள் பூத்த செழுமையான உழவுகொல்லைகளும, கணகற்றனவாகப் பொருந்தியிருக்கும். (எ-று.) (கo)

[ஆழ்வார் வமிசபரம்பரை.]

கக. வீடடைந்தவர்க்குதவுமப்பதிவயின்விருப்பாற்
சூடலங்கலந்துளவமாறிணைபபதந்தொழுவோன்
தேடரும்புகழ்விளைஞர்கோமான்றிருவழுதி
நாடனென்பவன்மரபினையாவரோசுவில்வார்

(இ-ள்.) தன்னைச் சேர்ந்தவர்கட்கு முத்தியைக் கொடுக்கும் அந்தத் திருக்குருகூரினிடத்துச் சூடிய அழகிய திருத்துழாய மாலையையுடைய பெருமானது இரண்டு திருவடிகளையும விருப்பத்தோடு தொழுவோர், பிறரிடத்துத் தேடுதற்கரிய கீர்த்தியையுடைய வேளாளர்கட்குத் தலைவரான திருவழுதிநாடனென்பவரது (ப்ரபந்த ஜாகூடஸ்தரான ஆழ்வார் அவதரித்து மஹத்தான கீர்த்தியையடைந்த) வமிசத்தின் பெருமையை (இத்தன்மையதென்று) சொல்லவல்லவர் எவர் (ஒருவருமில்லை). (எ-று.) (கக)

கஉ. மழவனங்கனேர்வனப்பிறனுயர்திருவழுதிக்
கிழவராழியார்கிளரறந்தாங்கிசீர்கெழுதோண்
முழவணிந்தசெந்தாமரைக்கண்ணர்பார்முழுதுந்
தொழவரும்புகழ்ச்சக்கரபாணியச்சுதரால்.

(இ-ள்.) (அவரது வமிசத்தவர்கள் முறையே) இளமையுடைய மன்மதனை யொத்த அழகாலுயர்ந்த திருவழுதிக்கிழவர், ஆழியார், உயர்ந்த அறந்தாங்கியார், சிறப்பு மிகுந்த மத்தளம்போன்ற தோள்களையுடைய செந்தாமரைக் கண்ணர், பூமிமுழுதும் தொழும்படி வந்த புகழையுடைய சக்ரபாணியார், அச்சுதர் என்பவர்களாம். (எ-று.) (கஉ)

கங. சீர்பரந்தபோர்க்கழியர்சேய்காரிசெந்திருவாழ்
மார்பர்தந்தருளுடையநங்கைப்பெயர்மயிலைத்
தார்பரந்தணிந்தயர்ந்தனன்றிருமணந்தழன்முன்
ஏர்பரந்துயர்வண்பரிசாரத்தினெய்தி.

(இ-ள்.) (இவ்வமிச பரம்பரையில்) சிறப்புப்பரவிய போர்க்கழியாரது திருக்குமாரராகிய காரியார் என்பவர், செந்திருவாழ் மார்பர் பெற்றருளின உடையநங்கையாரென்னும் திருநாமமுடைய மயில்போன்றவளை, அழகுபரந்து உயர்ந்த திருவண்பரிசாரத்தைச் சேர்ந்து, யாவருமறியத் திருமாலைசூட்டி அக்கினியின்முன் திருக்கண்ணலஞ் செய்துகொண்டனர். (எ-று.)

கச. கவிகையாலுயர்காரியுந்தெரிவையைக்கனகச்
சிவிகையாற்கொடுகுருகைமாநகர்வயிற்சேர்ந்தான்
புவிகையாற்றெழும்பொறைநிறைகற்புணர்புலனோர்
சவிகையாலருந்ததியினும்விளங்கினடையல்.

(இ-ள்.) ஈகையாலுயர்ந்த காரியாரும் உடையநங்கையாரான பெண் மணியைப் பொற்சிவிகையிற்கொண்டு திருக்குருகூரினிடத்திற் சேர்ந்தனர். பூமியிலுள்ளோர் கைகூப்பித் தொழும் பொறுமை, நிறைந்த கற்பு, அறியக் கூடிய ஞானம், நிறைந்த அழகு, ஒழுக்கங்களால் அருந்ததி தேவியினும் (அதிகமாக) விளங்கினர் உடையநங்கையார். (எ-று.) (கச)

[உடையநங்கையார் புத்திரப்பேறு வேண்டிப் பெறுதல்.]

கரு. அன்னைவாழ்மனையணுகியுமகிணனில்லடைந்தும்
பொன்னையேய்மலர்புனைகுழல்புவிமுறைபுரிநாள்
தன்னைமாநகர்நின்றுதன்பதிநகர்சார்வோள்
என்னையாள்பிரான்றிருக்குறுங்குடிவதிந்திருந்தாள்.

(இ-ள்.) தாய்வீட்டைச் சேர்ந்தும் புருஷன் மனையையடைந்தும் பொன்னையொத்த மலர்களை யணிந்த கூந்தலையுடைய உடையநங்கையார் பூமியில் தம் ஒழுக்கத்தைக் (குறைவறச்) செய்துகொண்டு வருநாளில் (ஒருநாள்), தன்தாய் ஊரினின்று தன்புருஷன் ஊருக்குப் போகுமவர், என்னையாளும் உபகாரகனை பெருமான் நித்தியவாசஞ் செய்யும் திருக் குறுங்குடியில் தங்கியிருந்தனர். (எ-று.) (கரு)

கசு. இருந்தநங்கையும்புதல்வரிலாமையானிதயம்
வருந்திவாசவன்றிசையரிதோன்றுமுன்வனசம்
பொருந்துதீர்த்தத்துண்மூழ்கிவார்புனற்கலைபுனைந்தே
பெருந்திருக்குறுங்குடிநம்பிபால்வரம்பெறுவாள்

(இ-ள்.) (அங்ஙனம்) இருந்த உடையநங்கையாரும் (தமக்குப்) புத்திர ரில்லாமையால் திருவுள்ளம் வருந்தி கீழ்த்திசையில் சூரியனுதிக்குமுன தா மரை பொருந்திய தீர்த்தமாடி நீண்ட ஈரவஸ்திரந்தரித்துப் பெருமை யுடைய திருக்குறுங்குடி நம்பியினிடத்து வரம்பெறுமவராய் (எ-று.) (கசு)

கஎ. அனந்தநாமமாலமர்திருக்கோவில்புக்கடியார்
சனந்தராதலம்பரவவேபொருவின்மாதவத்தோர்
மனந்தனிற்பயின்மாயனைப்பலியயல்வணங்கி
இனந்தழைக்கவோர்மகவெனக்கருள்கெனவிரந்தாள்.

(இ-ள்.) ஆயிரந் திருநாமமுடைய பெரியோன் எழுந்தருளிய திருக் கோவிலுட் புகுந்து, அடியார்களும் பூமியிலுள்ளாரும் வணங்கும்படி ஒப் பற்ற மாதவத்தோர்கள் உள்ளத்திற் பொருந்திய மாயப்பிரானைப் பலி பீடத்தினருகில் வணங்கி, "என் வமிசம் விர்த்தியாகும்படி ஒரு புதல்வனை எனக்கருள்வீரோ" என்று வேண்டினர். (எ-று.) (கஎ)

கஅ. தளவவெண்ணகைமயிலியல்கனவினிற்றகைசால்
துளவமால்புகுந்தளித்தனமகவெனத்துயர்தீர்ந்
திளவனம்பொருவரிவையும்பதிவயினெய்தா
அளவறிந்தறைதரற்கருமுவகைமிக்கமர்நாள்

(இ-ள்.) முல்லையையொத்த வெள்ளிய தந்தபந்தியையும் மயில்போற் சாயலையுமுடைய உடையநங்கையார் கனவில் பெருமைமிகுந்த திருத்துழாய மாலையையணிந்த எம்பெருமான் தோன்றி, (உனக்குப்) "புத்திரனை யளித்தோம்" என்றுரைக்கத், துயரந்தீர்ந்து இளமையான அன்னம் போன்ற உடையநங்கையாரும் தம்மூரினிடத்தடைந்து, அளவறிந்து சொல்லுவதற்கரிய சந்தோஷமிகுந்து வாழும் நாளில் (எ-று.) (கஅ)

கசு. கருணைவாரிதியெனும்பெயர்க்கரியமால்கவினார்
உருவமாகியசேனைநாயகனுளமுவந்தே
பொருவினான்மறைத்தமிழ்நவின்றுலகெலாம்புரப்பான்
அருணவாயிதழணங்கனாள்வயின்கருவடைந்தான்.

(இ-ள்.) கருணைக்கடலென்னும் பெயரையுடைய கரியமேனியனான பெருமானது அழகு நிறைந்த உருவமாகிய சேனைமுதலியார், திருவுளமுவந்து ஒப்பற்ற நான்கு வேதங்களைத் தமிழிற்சொல்லி உலகையெல்லாம் ரக்ஷிக்கும்படி, சிவந்த வாயிதழையுடைய தெய்வபபெண்ணுக்குச சமானமான உடையநங்கையாரிடத்துக் கர்ப்பத்தில் வந்தடைந்தனர். (எ-று.) (கசு)

உ0. நங்கையும்புகல்சேனைநாயகன்றிருநளினச்
செங்கைவேத்திரத்துரோமமுந்திகிரிபோற்றனமுஞ்
சங்கைநேர்தருவடிவமுமெம்பிரான்றனைபபோற்
கொங்கைமேற்கணுந்தோன்றிடக்கருப்பமேகொண்டாள்.

(இ-ள்.) உடையநங்கையாரும், வெற்றியுடைய சேனைநாயகரது அழகிய தாமரைபோன்ற சிவந்த திருக்கையிலுள்ள பிரம்பு போன்ற உரோமவொழுங்கும், அவரது திருச்சக்கரம் போன்ற தனமும், அவரது திருச்சங்கம போன்ற (வெண்மையான) வடிவமும், எம்பிரானைப் போல முலைக்கண்களுந் தோன்றும்படி, கர்ப்பங் கொண்டனர். (எ-று.) (உ0)

உக. வானகத்தொளிர்மின்னைநேர்மருங்குலும்வடிவுண்
டானதத்தகைமருங்குலிற்கலைநெகிழ்ந்தமிர்தந்
தானலர்ந்தசெவ்வாய்விளர்த்துண்டிசுருங்கிப்
பானலொத்தகண்குழிந்திடத்தளர்நடைபடைத்தாள்.

(இ-ள்.) ஆகாயத்தி லொளிவிடும் மின்னையொத்த (இதுவரையில் உரு விளங்காமல் நுட்பமான) இடையும் (இப்பொழுது) உருவுளதாயிற்று. அத்தகைய இடையில் ஆடையவிழ்ந்து, அமிர்தமுடைய சிவந்த வாய் வெளுத்து, உணவு குறைந்து, நீலோற்பல மலர்போன்ற கண் குழிந்து தோன்றத், தளர்ந்த நடையைப் பெற்றனர். (எ-று.) (உக)

[ஆழ்வார் திருவவதாரம்.]

உஉ. கலியுகத்துநாற்பத்துமூன்றாந்தினங்கடிகா
மலியுமூரிமாதத்துவைகாசிநாண்மழைக்கோள்
பொலியுநற்றினங்கற்கடகந்துலாம்புகழ
ஒலியுடைக்கடலுலகெலாம்விளங்கவந்துதித்தான்.

(இ-ள்.) (சேனைமுதலியார்) கலியுகத்தின் நாற்பது மூன்றாந்தினமாகிய வாசனையுடைய சோலைகள் தளிர்க்கும் வைகாசிமாதத்தில் விசாகநக்ஷத்

திரத்தில் சுக்கிரவாரத்தில் கற்கடலக்கினத்தில் துலாராசியில் ஒலியை யுடைய கடல் சூழ்ந்த புகழையுடைய உலகமெல்லாம் விளங்க வந்து அவ தரித்தனர். (எ-று) (௨௨)

வைகாசியில் விசாகமென்றதனால் பௌர்ணிமையுங்கொள்க.

௨௩. வலஞ்சுழன்றுதீவளர்ந்தமுத்தமிழினான்மறையும்
நிலங்கிளர்ந்தகான்றளிர்த்தவானலர்மழைநிறைந்த
அலர்ந்ததந்ரதுந்துமிபரமதத்தவர்க்குங்
கலங்கிநெஞ்சிடந்துடித்தனபுயங்களுங்கணணும்.

(இ-ள்.) (வேதியர் வளர்க்கும்) தீ வலமாகச்சுழன்று வளர்ந்தன; முத்தமிழில் நான்கு வேதங்களும் பூமியில் உயர்ந்தன; காடுகள்தளிர்த்தன; ஆகாயத்தில் மலர்மாரி நிறைந்தன; தேவதுந்துமி ஒலித்தது; பிறசமயத் தவர்க்கும் மனங்கலங்கிப் புயங்களும் கண்களும் இடமாகத் துடித்தன. (எ-று.) (௨௩)

௨௪. தனயன்சூதகமனைவயின்றனிப்பரந்தாமன்
றனைவிறமேறுன்றிஞானச்சுவையருத்துபுதுறந்தான்
அனையின்பாறருமுலையுணுதழுகைநீத்தரிதாள்
நினைவிற்றுங்கலால்விழிதிறந்திலனருணிறைந்தோன்.

(இ-ள்.) (இங்ஙனமவதரித்த) அத்தனயரது சூதகமனையினிடத்து அத்துவிதீயனான பரந்தாமன் விரைவாக எழுந்தருளி ஞானமிர்தத்தை யூட்டிச் சென்றனன். அதனால் (ஆன்மாக்களை உய்விக்க வேண்டி அவதரித்த) அருள்நிறைந்தவரான அத்தனயர் (தன்) அன்னையின் பாலைத்தரும் முலையையுண்ணாமலும் அழாமலும் பெருமானது திருவடிகளைத தம் திருவுள்ளத்திற் கொண்டிருத்தலால் திருக்கண்மலர் திறவாமலும் இருந்தனர். (எ-று) (௨௪)

௨௫. கலுழ்ந்திலன்றிருக்கண்மலர்திறந்திலன்கவினும்
மெலிந்திலன்சுதனெனவருட்காரியும்வினவாப்
பொலிந்துநின்றகோனருடெரிகிலமெனப்புன்கண்
நலிந்திடததளர்ந்தனனவன்றுயரியார்நவில்வார்.

(இ-ள்.) குமாரன் அழுதிலன்; திருக்கண்மலர் திறந்திலன்; திருமேனியின்) அழகும் மெலிந்திலன் என்று (அவரைப்பெற்றுத் தந்த) அருளையுடைய காரியார் கேள்விப்பட்டுப், பொலிந்துநின்ற பிரானது திருவருளைத் தெரியோமெனறுரைத்துத், துன்பம் தம்மை வருத்தத் தளர்வடைந்தனர். (அப்போது) அவர் கொண்ட துயரத்தை யாவர் சொல்லவல்லவர்கள். (எ-று.) (௨௫)

[உடையநங்கையார் இரங்கல்.]

(வேறொரு செய்யுட்குருபரம்பரையிற் கண்டது.)

வேறு.

இன்னமுதக்குடமிரண்டா மெனவோங்கிமிகவிம்மி
மன்னுதிருமுலைப்பால்கள் பீரோடமனமிரங்கத்
தன்னுடையதிருமகனை முன்னிலையாய்த்தவமிருந்த
அன்னநடையுடையநங்கை யிவையிவைகளறைகின்றாள்.

## வேறு.

† தப்பாகிலேயார் தவமேதமிழ்மாறு
அப்பாமுலேயிரண்டும் விம்மிநாறுற்றுகிலேன்
ஒப்பாரில்லாதாய் சுரந்துபீரோடுகின்ற
திப்பாலருந்தாய்நா ளெல்பிழைத்தேனென்னமுதே.

† ஒக்கலேமேலவைத்தோர் கரத்தாலுனைத்தாங்கித்
தக்கமுலேயூட்டத் தவமுன்புசெய்யாதேன்
மக்கடமைப்பெற்ற மடவார்முகநோக்கி
வெட்கினேன்மைந்தா விதியினையறுனேனே.

† சீரார்பொருநைத் திருநாடனுன்றந்தை
நாராயணன்குறுங்கை நம்பிதிருமுன்றினின்
றேரார்தவமன் றியற்றியுனைப்பெற்றவளைப்
பாராயோவப்பாநின் பங்கயக்கண்டான்விழித்தே.

† மானேர்விழியார்கள் மக்களழத்தாலாட்டி
ஏனேனெனச்சென் றெடுத்துமுலேப்பாலளிப்ப
நானேதுசெய்தேனென் னம்பீயமுதமரர்
தேனேசுரந்த திருமுலேப்பாலுண்கிலேயே.

† விண்ணார்மதிபோல் விதியிலியேன்மைந்தாநீ
உண்ணுமுலேப்பால் பிதிர்போக்கவோங்கறுந்
தண்ணாருவித் திரள்போன்றதாரையையென்
கண்ணார்மணியே விழித்தொருகால்காண்கிலேயே.

† நின்னுடையதாதை நினையீன்றசோபனத்தைத்
தென்னவனார்கேட்டோர் திருமாமணித்தொட்டில்
பொன்னுலகுமண்ணுலகும் போற்றவரவிடுத்தான்
என்னுடையதெள்ளமுதே யிதைக்குறித்துநோக்கிலேயே.

† ஏரார்திருப்பரிசா ரத்தினின்றுமென்றந்தை
சீராரொளிவீசுஞ் செம்பொன்மணித்தொட்டில்
பாராய்விடுத்தா னினக்கென்றேபாலகனே
ஓராயிரங்கதிரு மொவ்வாதிதனொளிக்கே.

† வேதவிதியா லெனேவேட்டுனைவிரும்பி
ஓதவரிய தவஞ்செய்துனையீன்ற
தாதையுனக்கமைத்த தண்டரளப்பூந்தொட்டில்
ஈதையுறநோக்கி யருளாயென்னின்னமுதே.

† இருக்காதிவேத மெடுத்தேதத்திக்காறு
உருக்காணுமென்பார் சிலருமையென்பார்
திருக்கால்கள்கைக ளுதறிச்சிறிச்சிறிதே
ஒருக்கால்மகனே யழுதாலுளனன்றோ.

† செய்யகனிவா யமுதந்திரண்டொழுக
ஐயருதவிக் குறும்போடணேந்தொருநாட்
பொய்யனேன்கொங்கையுறும் புத்தமுதைநீயருந்த
மெய்யனேகாண விரும்புவிதியற்றேனே.

† விண்ணுடயோர்பரிய மேதினியில்வாழ்வாரோ
பண்ணூர்மறையே பகலோனே நாண்மதியே
பெண்ணுயப்பிறந்துமகப் பெற்றாரோயென்னைமுலை
உண்ணப்புதல்வர்களு முண்டோவுலகத்தே.

† வாயாலழாதே மலசலமொன்றில்லாதே
தாயார்முலைப்பாலோர் சற்றுமருந்தாதே
ஓயாதிருந்தாற்று முறறுணைக்காண்பாராச்
சேயாருமுண்டோ செகத்திலிவரல்லாதே.

† உள்ளார்மகிழ்ச்சி யுடையாயகுறுநகையாய்
விள்ளாயகனிவாய் விழியாயதிருநயனங்
கொள்ளாயநீயம்ம்மிறை கோடாதுன்பொன்மேனி
பிள்ளாயுன்னுண்ணினைவைப் பெற்றோர்க்குப்பேசாயே.

† பேயக்கொளித்துக்காப்பிட்டுப் பெற்றேன்முலைவிம்மி
வாயக்கொளித்தையென்றால் மகனேயதுசெய்யாய
நோயக்கொளித்தனானத்தார் நோன்போவிதுநுவல்வாய
தாயக்கொளித்தசொல்லு முளவோவென்றாவேந்தே.

† ஆழிநீர்வண்ண னருளோநான்முன்செய்த
ஊழிவினைதானோ வுலகத்தீரெனனுடைய
தோழியீர்மைந்தனழா றுண்ணனெனசொறகேளான்
வாழியிதைநோக்கி வருத்தெனக்குக்கூறீரோ.

† மெய்ச்சொற்குறியால் விளங்கியிந்தமேதினியோர்
அசகுதுனாகுமிவ னென்னிலவன்றான்முனனாட்
பச்சைசகுழந்தைப் பருவத்திற்பூதனைதன
நச்சுமுலையுண்டானென்ன னானமுலையுண்ணானே.

† எடுத்திருத்திவைத்தா லிருப்பானசையான்
படுத்தணையிற்சரீயத்தாற படுப்பான்புறநகரான்
அடுத்துமுலையுண்ணென் றனைத்தாலமுதருந்தான்
தொடுத்திவைசேர்மைந்தனையா னேதுரைப்பேனென்றேழீ.

† சப்பாணிகொட்டாய சவழாயதளர்நடையென
அப்பாநடவா யமுதேபுறம்புல்காய
இப்பார்முதலாய வீரேழுலகேத்தும்
ஒப்பாரிலாதாய்நா னெங்ஙனுயிர்வாழ்வனென்றாள்.

வேறு.

உகூ. தூய்தலாமைதுறந்தபின்றோற்றமும்
வீய்தலானதுநீத்துயர்மெய்ப்பதம்
ஈய்தலாரருளெந்தையையேதமே
காய்தலார்கதிராழியங்கையனை

(இ-ள்.) பரிசுத்தமல்லாத பிரகிருதி சம்பந்தத்தைத் துறந்தபிறகு பிறப்பும் இறப்பும் நிவர்த்தித்து உயர்ந்த மெய்ப்பதவியை யளிக்கும் அருளோடு கூடிய எம்பெருமானுக்கு, தோஷங்களை நீக்குதலையுடைய ஒளிபொருந்திய திருவாழியைத் திருக்கையிலேந்தினவனுக்கு, (எ-று.) (உகூ)

உஎ. ஊறருந்தவர்வானவரோதிமம்
ஏறயன்சிவனேமுதல்யாவருங்
கூறரும்பெயரீசனேக்கோதிலா
மாறனென்றுவகுத்தனனாமமே.

(இ-ள்.) இடையூறில்லாத தவத்தையுடையவர்கள் தேவர்கள் அன்ன வாகனமேறும் பிரமன சிவன் முதலிய யாவரும் சொல்வதற்கரிய திருநாமத்தையுடைய ஈசனுக்குக் குற்றமில்லாத மாறனென்று திருநாமஞ்சாத்தினர். (எ-று.)

"கலௌதேவ: பராங்குச:" என்பதின்படி ஆழ்வார் எம்பெருமானது திருவவதாரமெனவுங் கூறுவதுண்டு. நிக்ரஹாநுக்ரஹங்கள் கூடியிராது கேவலம் அநுக்ரஹமே திருவுருவமாகவந்த வேறேயொரு தசாவதாரமாக விளங்குவோர் ஆழ்வார் பதின்மரென்று பணித்தருள்வர் ஸ்ரீமத் வேதாந்த தேசிகர். இன்னும் ஆழ்வார்களருளிச்செயல்களைப்பற்றி, "செய்யதமிழ் மறையனைத்துந் தெளியவோதித் தெரியாத மறைநிலங்கள் தெரிகின்றோமே" என்றும் அருளிச்செயவர். ஆழ்வார் எம்பெருமானது திருவவதாரமென்பது கம்பநாட்டாழ்வானருளிச்செய்த சடகோபரந்தாதி முதலிய தமிழ் நூல்களாலும் நன்குவிளங்கும். (உஎ)

உஅ. அழிவின்ஞானவமிழ்தினையாதிநால்
மொழியுநாசமின்முன்னவனலகலால்
பழியிலானும்பருகுதல்பார்க்குதல
ஒழியமோனரிலூமரின்வைகினன்.

(இ-ள்.) வேதத்தை (பிரமனுக்குச்) சொல்லியருளிய கெடுதலில்லாத முன்னவனாகிய பெருமான் அழிவில்லாத ஞானமாகிய அமிர்தத்தை அளித்தலினாலே பழியில்லாதவராகிய அக்குமாரரும், (பால்) உண்ணல் (கண் திறந்து) பார்த்தல் இன்றி, மௌனநிலையுடையார் போலவும் ஊமையனைப் போலவும் எழுந்தருளியிருந்தனர். (எ-று.) (உஅ)

உகூ. கண்டபேரருட்காரியிக்காளைமூனை
கொண்டன்மேனியனென்னவுட்கொண்டுபார்
உண்டமாதிருக்கோயிலினுய்த்துமென்
றெண்டவாததன்மனைவிககியம்பினன்.

(இ-ள்.) (இதனைக்) கண்ட பேரருளையுடைய காரியாரும், இக்குமாரன் கொண்டல் மேனியனான பெருமானாகுமென்று எண்ணிப், பூமியையுண்ட பொலிந்துநின்றபிரானது திருக்கோயிலிற் கொண்டுபோய விடுவோமென்று நினைத்து (அதனை, அக்குமாரர் விஷயத்தில்) விசாரம் நீங்காத தன் மனைவிக்குச் சொல்லினர். (எ-று.) (உகூ)

௩0. காதலன்சொன்மறுதவக்காரிகை
மாதவக்கொழுந்தாகியமைந்தனைச்
சேதலர்க்கரங்கொண்டுபின்செல்லவே
வேதநாயகன்கோயிலைமேயினன்.

(இ-ள்.) கணவன் சொல்லைக்கடவாத அவ்வுடையநங்கையார், பெருந்தவக்கொழுந்தாகிய அம்மைந்தனைச் சிவந்த மலர்போன்ற தமது திருக்கைகளிற்

கொண்டு பின்னேசெல்ல, வேதப்பிரதிபாத்தியனான பொலிந்து நின்றபிரானது திருக்கோயிலையடைந்தனர். (எ-று.) (ஙO)

ஙக. வந்தகாரியுநதேவியுமாமறை
அந்தமாலைவலம்வந்தடிதொழாக
கந்தமார்துளவப்புயக்கண்ணநீ
தந்தமாலவரநசாலவுநன்றெனு

(இ-ள்.) (அங்ஙனம்) வந்த காரியாரும் அவரது திருத்தேவியாரான உடையநங்கையாரும் பெருமை பொருந்திய வேதாந்தப் பொருளாகிய பெருமானை வலம்வந்து அவனது திருவடிவணங்கி "வாசனையுடைய திருத்துழாய மாலையணிந்த புயங்களையுடைய கண்ணனே! நீயளித்த பெரிய வரம் மிகவும் நன்றாயிருந்தது!" என்றுகூறி (எ-று.) (ஙக)

இதுமுதல் மூன்று செய்யுளுங் குளகம். எனுவருந்தி என்றுமாழ்கியிறையடி நீங்கலார் எனமுடிக்க.

ஙஉ. வருந்திமாயநின்மாயையைநீங்கலார்
திருந்திவேதன்சிவன்முதற்றேவரும்
பொருந்திலாவைம்புலனொடும்பூதலத்
திருந்திம்மானிடரோகடந்தேறுவார்.

(இ-ள்.) வருத்தமடைந்து, "மாயனே! நினது மாயையைப் பிரமன் சிவன் முதலியதேவரும் திருந்தி நீங்காகள். (ஆனபோது) பொருந்தாத ஐம்புலன்களோடும் பூமியினிடத்திலிருந்து இம்மானிடரோ அதனைக்கடந்து ஏறுவார்கள்?" (எ-று.) (ஙஉ)

ஙங. என்றுமாழ்கியிறையடிநீங்கலார்
ஒன்றுமாரவத்துலகமுண்டோனுடன்
சென்றுசேடன்சிநகரத்துத்தரம
நின்றுளான்புளியாயவணோர்ந்தனன்.

(இ-ள்.) என்றுரைத்து மயங்கிப் பெருமான் திருவடிகளை விட்டு நீங்காராயினர். (இதற்கு முன்பு) ஆதிசேஷர் சென்று பொருந்திய விருப்பத்துடன் உலகமுண்ட பெருமானுடனே அத்திருக்கோயிலின் உத்தரதிக்கில் திருப்புளியாழ்வாராய் எழுந்தருளியிருந்தனா. காரியாரும் அவ்விடத்தே சேர்ந்தவராய், (எ-று.) (ஙங)

ஙச. அத்திருப்புளிநீழலிலையனை
வைத்திருப்பமெனத்திருமாமலர்க்
கொத்திருக்குங்குழைமுகக்கொங்கைவாள்
ஒத்திருக்கும்விழியொடிறைந்தனன்.

(இ-ள்.) அந்தத்திருப்புளியின் நிழலில் ஐயனை வைத்திருப்போமென்று அழகிய பெருமைபொருந்திய மலர்க்கொத்துக்கள் விளங்கும் குழையோடுகூடிய முகத்தையும் கொங்கையையும் வாளொத்திருக்கும் விழியையுமுடைய உடையநங்கையாரோடு இருந்தனர். (எ-று.) (ஙச)

வேறு.

ஙரு. நோக்கிமைந்தனையிவனைநாமகவெனநுவலும்
பாக்கியங்குருகோனியைந்திலனெனப்பகரா

வாக்கினிற்புலம்பிசையெழக்கண்கணீர்வாரக்
காக்கிலாத்துயாககடற்படிந்திரங்குறுங்காலே

(இ-ள்.) (பிறகு) மைந்தனை நோக்கி, இவனை நாம் (நமது) மைந்தனென்று சொல்லிக்கொள்ளும் பாக்யத்துக்குக் குருகாபுரியிலெழுந்தருளிய பொலிந்துநின்றபிரான இசைநதியன் எனச்சொலலி, (தங்கள்) வாக்கில் அழுகை யோசையுண்டாகக், கண்களில் நீரொழுகத், தடுக்கவொண்ணாத துக்கமாகிற சமுத்திரத்திற் படிந்து வருந்துமபோது, (எ-று.) (௩௫)

௩௬. துன்பமுற்றுளந்தளரன்மின்றனயனுற்சுருதி
என்பதைத்தமிழ்நுவன்றுலகுயிர்களெலாமெளிதில்
தன்பதத்தைமாலுதவவுட்கருதலாற்றனிவாழ்
வன்பருக்கருள்சேனைநாயகனவதரித்தான்.

(இ-ள்.) "துன்பமடைந்து உள்ளந் தளரவேண்டா. (உங்கள்) குமாரனாலே சுருதியெனபதைத தமிழிலருளிச்செய்விக்கது, உலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் எளிதில் தனது பரமபதத்தைப் பெருமான் அருளுவதாகத் திருவுளங் கொண்டிருந்தலால், ஒப்பற்ற வாழ்வை அடியார்களுக்கு அருளும சேனைமுதலியார் (உங்களிடம்) அவதாரஞ்செய்தனர்". (எ-று.) (௩௬)

௩௭. என்னவானிலோரவாணிசொற்றலுமயிலியற்கார்
அன்னவார்குழலணங்குதடனகாரியுமதுகேட
டுன்னலாவருரொழித்துமைந்தனைவிடுத்தொருவார்
கன்னனேரமுந்தனயர்மேனசையெவர்கடந்தார்.

(இ-ள்.) என்று ஆகாயத்தில் ஒரு (அசரீரி) வாக்குச் சொல்லுதலும், மயில்போற சாயலும் மேகம்போனற நீண்ட கூந்தலுமுடைய உடையநங்கையாரோடு காரியாருமு அதனைக் கேள்வியுற்று, (இப்படிப்பட்டதென்று), நினைப்பதறகரிய துன்பத்தை யொழிந்து (தம்) மைந்தனை விட்டுநீங்காராயினர். எப்பொழுதும் தங்கள் மக்கள்மேலுள்ள ஆசையைக் கடந்தவர்கள் யார்? (ஒருவருமில்லையே.) (எ-று.) (௩௭)

௩௮. மைந்தனுந்திருமாறனதுதயநாண்மருவித்
தந்தஞானமாமமிர்தினாற்பசிப்பிணிதவிர்ந்தே
நந்தவாவொடுசலமலமின்றிநாடொறும்
பைந்தடங்கடற்பரிதிபோலவிளங்குருப்படைத்தான்.

(இ-ள்) அம்மைந்தரும், தமது அவதார தினத்தில் பெருமானெழுந்தருளி அளித்த ஞானமாகிய அமிர்தத்தினாலே, பசிப்பிணி நீங்கி, (இதர விஷயங்களில்) உண்டாகும் ஆசையில்லாதவராயச், சலமலங்களின்றி, நாள்தோறும் பசியநிறமுள்ள விசாலமான கடலிற்றோன்றும் அழகிய சூரியனைப்போல விளங்கும் திருமேனியையுடையவராயினர். (எ-று.) (௩௮)

௩௯. இருந்துபின்றவழ்ந்தெழுந்துநாட்டளாநடையிட்டுத்
திருந்துமாறிருக்கோயினமானதைையோர்திகிரி
பொருந்துதேர்க்கதிர்பொன்மலைவலம்வரல்பொருவ
வருந்தமின்றியேவலம்வராமதியெனவளர்ந்தான்.

(இ-ள்.) அதன் (பின்னர்) உட்கார்ந்து, அப்பால் தவழ்ந்து எழுந்து, புதிய தளர்நடையிட்டுத், திருத்தமுடைய பெருமானெழுந்தருளிய திருக்கோயில்

விமானத்தை ஒற்றைச் சக்கரம் பூண்ட தேரையுடைய சூரியன் மகமேருவை வலம்வருதல்போல வருத்தமின்றி வலம்வந்து சந்திரனைப்போல வளர்ந்தருளினர். (எ-று.) (௩௯)

௪0. காலமாறிருதிங்கண்மூன்றிம்முறைகழித்துச்
சீலமார்ந்துமாறிருவடிதருந்தவஞ்செய்வான்
கோலமாலவரைமுழைபுகுங்கோளரிக்குருளை
போலமாசகறிருபபுளிப்பொதுமபினுட்புகுந்தான்.

(இ-ள்.) இவ்விதமாக மூன்றுவருஷகாலம் கழித்துச், சீலமுடையவராயப், பெருமான் திருவடிகளை யளிக்கும் தவஞ் செயயுமபடி, அழகிய பெரிய மலைக்குகையிற் பிரவேசிக்கும் பலம் பொருநதிய சிங்கக்குட்டியைப் போலக் குற்றமறற திருப்புளியாழ்வாரது பொந்திற் பிரவேசித்தனர். (எ-று.) (௪0)

௪௧. அன்றுகாறுமைந்தனைவிடுத்தகல்கிலாராகி
ஒன்றுகாரியுமனைவியுந்தனயனையொருவாச
சென்றுகாமர்பொற்றிருமனைசேர்ந்தனர்சிறந்தார்
இன்றுகாதரந்தொலைந்ததென்றுலகெலாமேத்த.

(இ-ள்.) (அவதரித்தது முதல்) அன்று வரையில் குமாரனை விட்டு நீங்காதவராகிக் கூடியிருந்த காரியாரும் அவர்மனைவி உடையநங்கையாரும், தம் தனயனை விட்டுச் சென்று, அழகிய பொனமயமான தங்கள் திருமாளிகையைச் சேர்ந்து, இனறு நமது அச்சம் தொலைந்ததென்று உலகமெல்லாம் துதிக்கும்படி சிறந்தார்கள். (எ-று.) (௪௧)

௪௨. அய்யனுஞ்சிரமடர்பணையாப்பொறியலராப்
பையடர்நதபைந்தழையதாநாத்தளிரபயில்வாச்
செய்யபற்றிரள்பலமதாவுடலமுஞ்செறிவேர்
மெய்யதாவளரனந்தனுந்திருப்புளிவிளங்க

(இ-ள்.) (நமது) பரமாசார்யரான ஆழ்வாரும், சிரங்களானவை நெருங்கிய கிளைகளாகவும், படப்பொறிகளானவை மலராகவும், படங்களானவை நெருங்கிய பசுமையான தழையாகவும், நாக்கள் தளிரிருத்தலாகவும், செம்மையான பற்கூட்டங்களானவை பழமாகவும், மரமும் வேரும் சரீரமாகவும் வளரும் திருவனந்தாழ்வானுகிற திருப்புளியாழ்வார் விளங்கும்படி (எ-று.)

அயயனும் என்பது அடுத்த செய்யுளில் தவம்புரிந்தான் என்பதைக் கொண்டு முடிவதறிக. (௪௨)

௪௩. இருந்துகண்முகிழ்த்தெம்பிரான்பதமலரிதயம்
பொருந்துறத்திருக்கரங்குவித்தருந்தவம்புரிந்தான்
திருந்துபொற்புயககருடன்மேற்றிருவொடுந்திரைப்பார்
அருந்துமைப்புயல்வண்ணனுமவன்மருங்கணுகா

(இ-ள்.) எழுந்தருளியிருந்து, திருக்கண் மலர்களை மூடி, எம்பெருமானது திருவடித்தாமரைகள் தமது திருவுள்ளத்திற் பொருந்தத் திருக்கைகள் குவித்து, அரியதவஞ் செய்தருளினர். (அப்போது) திருத்தமான அழகிய புயங்களை

யுடைய கருடாழ்வான் மீது, கடல்சூழ்ந்த பூமியையுண்ட கரிய மேகவண்ணனை பெருமானும், பெரிய பிராட்டியாரோடு ஆழ்வாரிடத்துக்குவந்து, (எ-று.) (சந)

சச. பகலவர்பலகோடிபோல்விளங்குதன்படிவத்
தகலமுந்தெளிந்தறிவருமணியுருவமழகும்
விகலமின்றிமுற்றோற்றலான்மாறனும்விழித்தே
புகலருந்தவத்துருவனிறபணிந்தடிபுகழ்ந்தான்.

(இ-ள்.) பலகோடி சூரியனைப்போல் விளங்கும் தனது திருமேனியின் விரிவும், தெளிந்து அறிவதற்கரிதான நீலமணிபோன்ற உருவத்தினழகும் குறைவுபடாமல் (தமக்கு) முன்னே பிரத்தியக்ஷமானதனால், ஆழ்வாரும் விழித்துப்பார்த்துச், சொல்வதற்கரிய தவத்தையுடைய துருவனைப் போலப் பெருமான் திருவடியைப் பணிந்து துதித்தனர். (எ-று.) (சச)

துருவசரித்திரத்தைப் பாகவதபுராணத்திற் காண்க.

வேறு.

சரு. அருந்தவரமரர்போற்றவளக்கரோரகங்கைகொண்ட
பெருந்தவன்றமிழ்வேதத்திற்பிறங்கவப்பெரியோனுள்ளத்
திருந்தஞரகற்றியெஞசாமதியளித்திருமுத்திங்கள்
மருந்தமரருக்கன்றீந்தோன்மறையெலாம்வடித்துச்சொற்றான்.

(இ-ள்.) அரிய தவசிகளும் தேவர்களும் துதிக்கச் சமுத்திரத்தைத் தமது ஒரு உள்ளங்கையிற் கொண்ட பெருந்தவத்தையுடையவராகிய அகஸ்தியர் வளர்த்த தமிழானது வேதத்திலும் விழுமிதாய் விளங்கும்படி, அந்தப் பெரியோராகிய ஆழ்வாரது திருவுள்ளத்தெழுந்தருளியிருந்து, அஞ்ஞானத்தையழித்துக் குறைவுபடாத ஞானத்தைக் கொடுத்து, அன்று அமிர்தத்தைத் தேவர்களுக்கு அளித்தவனை பெருமான், சகலவேதங்களையும் ஆறுமாத காலம் வடித்தெடுத்துச் சொல்லியருளினன். (எ-று.) (சரு)

சசா. கூறருஞ்சுருதிநான்குந்தமிழினிற்கூறியார்க்கும்
பேறருங்கதிஞாலத்தோர்க்குதவெனப்பெயர்ந்தான்பின்னர்
மாறனும்பரிதிபோலும்வடிவொடுமறைகணான்கும்
ஊறருஞானத்தோடும்புளிவயினுறைந்தானன்றே.

(இ-ள்.) (பின்னர்) சொல்வதற்கரிய நான்கு வேதங்களையுந் தமிழிற் சொல்லி, யார்க்கும் பெறுவதற்கரிதான பரமபதத்தைப் பூமியிலுள்ளவர்கட்குக் கொடுப்பீராக வென்று பெருமான் எழுந்தருளினன். அதன் பின்னர் ஆழ்வாரும், சூரியனை யொத்திருக்கும் வடிவத்தோடும், நான்கு வேதங்களும் சுரக்கும் அருமையான ஞானத்தோடும் திருப்புளியாழ்வாரடியி லெழுந்தருளியிருந்தனர். (எ-று.) (சசா)

சஎ. அன்னவன்றமிழ்வேதத்திற்கதிகமாவவனிமீதே
மன்னவிந்திரைவாழ்மார்பனருச்சனைவடிவிற்கெல்லாம்
முன்னவனரங்கத்தீசன்முதுவயிணவருமுற்சேர்ந்
துன்னருந்தவத்தாயென்மேற்றமிழினிதுரைத்தியென்றான்.

(இ-ள்.) அப்படிப்பட்டவரான ஆழ்வாரது தமிழ்வேதத்திற்கென்றே பூமியின மீது அதிகமாய்த் (தான்) இருக்கும்படி, பெரியபிராட்டியார் நித்தியவாசஞ்செய்யும் திருமார்பையுடைய பெருமானது அர்ச்சாவதாரங்களுக்கெல்லாம் முற்பட்டவனுன ஸ்ரீரங்கநாதன், (ஒரு) முதுமைப்பருவமுள்ள ஸ்ரீவைஷ்ணவனுகி (ஆழ்வார்) முன்பு சேர்ந்து, "கிட்டுதற்கரிய தவத்தையுடையீர்! என்மீது தமிழ்ப்பாடலை யினிதாக அருளிச்செய்வீராக" என்றுன். (எ-று.) (சஎ)

ச அ. விழிமுகிழ்த்திருகைகூப்பிமவுனியாய்விளங்கியோகம்
ஒழிவிலாதுறைந்துளானுமியாவனீயுளாயென்றேத
அழிவிலாப்பதத்திறைனுமடியனேனரங்கதாதன்
பழியிலாயெனவன்றனைப்பலமுறைபழிச்சிநின்றுன்.

(இ-ள்.) திருக்கண்மலர்கள் மூடி, இருகைகள் கூப்பி, மவுனியாகி விளங்கி, யோகத்தில் ஒழியாது நிற்பவரான ஆழ்வாரும், நீயாவன்? சொல்வாயாகவென்று கூற, அழிவுபடாத பதவியையுடைய பெருமான், பழியிலாதீர்! அடியேன அரங்கதாசன என்று சொல்ல, ஆழ்வார் அந்தப்பெருமானைப் பலமுறையுந் துதித்து நின்றனர். (மங்களாசாசனஞ் செய்தனர்.) (எ-று.)

திருவாய்மொழி, தீர்க்கசரணுகதி என்னப்பெற்று மந்த்ரரத்நமாகிய த்வயத்தின் விவரணமாயிருப்பதனுல் இதனை யருளிச்செயயுமவர்களும் செவிசாத்துமவர்களும் ஆசரிக்கவேண்டும் நியமநத்தைக் கணிசித்தே திருவரங்கநகரப்பன 'அடியனேனரங்கதாதன்' என்று அடிமை கூறி, ஆழ்வார் திருப்பவளச்சோதிவாயதிறந்து பாடியருளப்பெற்றனனென்றறிக. ருஉ-ம் பாட்டில் 'அருந்தமிழடிமை நம்போற் புகல்பவர்க்கிசைத்தி' என்று அப்பெருமான் நியமித்ததும், ருகூ-ம் பாட்டில் 'யான் வரதராஜன்' என்றருளிச்செய்த அத்திகிரியருளாளனை ஆழ்வார் பாடிப்புகழாமையும் இந்நியதிபற்றியேயெனக. இதனுல் அவ்வரும்பெறற் பொருளைப் பெறத்தக்காரின்னுரெனவும், தகாதாரின்னுரெனவும் எம்பெருமானே வேறுவேறு விதமாயிருந்து வெளிப்படுத்தினனென்றுணர்ந்துகொள்க. இந்நியதி யுண்மையென்பதனை ஜகதாசார்யரான ஸ்வாமி எம்பெருமானுர் ஒருக்கால் திருக்குறுங்குடி நம்பியைச் சேவித்தபோது அப்பெருமான் * * * * "நீரித்தனை பேரையும் எங்ஙனே திருத்தினதென்று கேட்டருள, உடையவரும், தேவர் கேட்குங் க்ரமத்திலே கேட்கில் சொல்லுகிறேமென்னத், திருக்குறுங்குடி நம்பியும் தம் திவ்யஸிம்ஹாஸநத்தினின்று மிறங்கியருளி, ரத்நகம்பளத்திலெழுந்தருளியிருந்து, இவருக்கொரு ஆஸநத்தையுமிடுவிக்க, அதிலே ஸ்வாசார்யரான பெரியநம்பி யெழுந்தருளியிருக்கிறதாகப் பாவித்துக்கொண்டு, தாம் நிலத்திலேயிருந்து, திருக்குறுங்குடிநம்பி திருச்செவியிலே * * * * த்வயத்தை யநுஸந்தித்தருள, நம்பியும் போரவுகந்தருளி ராமாநுசனையுடையோம் என்றருளிச்செய்ய" என்று குருபரம்பராப்ரபாவத்தில் ஸ்ரீ இளையாழ்வார் வைபவத்தில் போந்த வசனங்களாலறிந்துகொள்க. (சஅ)

திருவாய்மொழி, த்வயமந்த்ர விவரணமென்பதனைப் பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த "ஸாரஸங்க்ரஹம்" என்னுங் கிரந்தத்திற் காண்க.

ச கூ. அத்தனும்விழித்துநோக்கியரங்கநாயகனீயாயின்
சுத்தநீர்த்திருக்காவேரியரவணைசுருங்கிநான்காம்

உத்தமமுடிவிமானம்பெட்டகமுயர்பொற்கோயில்
இத்தகவொடுநின்கோலங்காட்டுதியெனக்கீண்டென்றான்.

(இ-ள்.) (பின்னர்) ஆழ்வாரும் விழித்துக் கடாக்ஷித்து, நீ அரங்கநாயகனுயின், பரிசுத்தமான தீர்த்தத்தையுடைய திருக்காவேரியும், சேஷசயனமும், நான்கு வேதமாகிய உத்தமமான சிகரங்களையுடைய பிரணவாகார விமானமும், பெட்டகம்போலவுயர்ந்த பொன்மயமான திருக்கோயிலுமாகிய இந்த வைபவத்தோடு நினது திருக்கோலத்தை எனக்கு இங்குக் காட்டுவாயாகவென்றார். (எ-று.) (சகூ)

ருo. திதியைமுன்றிரியச்செய்ததேவனுந்திருக்காவேரி
நதியதனடுவுட்கோயினவமணிவிமானஞானம்
பொதியணியரவின்பாயலபுண்டரீகங்கள்பூத்த
முதியநீண்முகிலின்கோலங்காட்டவம்முனியுங்கண்டான்.

(இ-ள்.) முற்காலத்தில் திதியைத் திரியும்படி செய்த பெருமானும் திருக்காவேரிநதியும் அதனிடையில் திருக்கோயிலும நவமணிகளிழைத்த பிரணவாகார விமானமும், ஞானம் பொருந்திய அழகிய ஆதிசேஷசயனமும், தாமரைகள் பூத்திருக்கும் பழமையான நீண்ட மேகம்போன்ற திருக்கோலமும் ஆகிய இவைகளைக் காட்ட மநநசீலரான ஆழ்வாரும் தரிசித்து, (எ-று.)

திதியைத் திரியச்செய்ததாவது :—பாண்டவர்களும் துரியோதனுதியரும் யுத்தத்துக் கொருப்பட்டபோது துரியோதனன் சகாதேவனிடம வந்து தருமராசன் தலையைக் கொய்யக்கூடிய தக்க முகூர்த்தகாலம் நிர்ணயித்துக் கொடுக்கக்கேட்டனன். சத்தியத்தைக் கடைப்பிடித்த சகாதேவன் அங்ஙனமே முகூர்த்த நிர்ணயம் பண்ணிக்கொடுத்தனன. பாண்டவ சகாயனை கண்ணனெம்பெருமான் சதுர்த்தசியில் தர்ப்பணம் விட்டுத் திதியை மாருடப்பண்ணித் தருமராசன் தலைபோகாமல் செய்து பாண்டவர்களைக் காத்தருளினன் என்பதாம். (ருo)

ருக. களித்திடவுளமெய்போர்ப்பப்புளகநீர்கமலக்கண்ணீர்
துளித்திடத்தொழுதுஞானத்தொடைத்தமிழ்ச்சுருதியாற்பார்
அளித்திடுமுகிலைகோயிற்கதிபனையமுங்குற்றந்நாள்
விளித்திடுமிபங்காத்தோனைப்பாடினனவிழுமமில்லான்.

(இ-ள்.) திருவுள்ளங்களிக்கவும், திருமேனியிற் புளகம் போர்க்கவும், திருக்கண்மலர்களில் ஆநந்தபாஷ்பம் துளிக்கவும் வணங்கித், தாழ்வில்லாத ஆழ்வார், ஞானமயமான தமிழ்வேதப்பாக்களாலே, உலகத்தை ரக்ஷிக்கும் மேகம்போன்ற பெருமானை ஸ்ரீரங்கநாதனை அக்காலத்தில் வருந்தியழைத்த கஜேந்திராழ்வானைக் காத்த பெருமானைப்பாடியருளினர். (எ-று.) (ருக)

ருஉ. அகமகிழ்ந்தரங்கத்தீசனருந்தமிழடிமைநம்போற்
புகல்பவர்களிசைத்தியென்னுப்பொருவில்பொற்கோயில்புக்கான்
தகவுயர்கருடவெற்பின்முதல்வனுஞ் சார்ந்தம்மாறன்
பகர்முறைவடிவங்காட்டியடிமைசொற்றணிந்தான்பாடல்.

(இ-ள்.) அரங்கநகரப்பன் திருவுள்ளமகிழ்ந்து நம்மைப்போல் அடிமை சொல்வார்க்கு அரிய தமிழை யருளுவீராக வென்று (தனது) ஒப்பில்லாத திருக்கோயிலுக் கெழுந்தருளினன். பெருமைமிகுந்த சருடவெற்பான

திருமலையிலெழுந்தருளியிருக்கும் காரணபூதனான பெருமானும் எழுந்தருளி, அவ்வாழ்வார் அருளிச்செய்தபடி (தனது) ஸ்வரூபத்தைக் காட்டி அடிமையையருளிச்செய்து, (ஆழ்வாரருளிச்செய்த) பாடலை யணிந்துகொண்டனன். (எ-று.) (௫௨)

௫௩. மறைநுவல்சரிகிரீசன்வந்தியான்வரதராசன்
அறைகுதிகவியொன்றோதுவாசாரீதனையோமென்று
நிறைதவன்மறுப்பப்பின்னரடிமையாங்கொடியோன்கூற
இறைவிழிதிறத்தல்பேசலின்றியேயிருந்தான்மாறன்.

(இ-ள்.) வேதப்பிரதிபாத்தியனான சரிகிரியிலெழுந்தருளிய தேவராஜப்பெருமான் எழுந்தருளி, நான் வரதராஜன், (என்மேற்) கவிசொல்லுக வென்று கூற, நிறைந்த தவத்தையுடைய ஆழ்வார், அரசர்மீது (கவி) சொல்லோம் எனறுமறுக்கப், பின்னர் அப்பெருமான் அடிமையைக்கூற, ஆழ்வார் (முதலில் தன்னை ராஜன் என வெளியிட்டமையால்) சிறிதுங் கண்விழித்தலும் பேசுதலும் இன்றியே யிருந்தனர். (எ-று.) (௫௩)

௫௪. சங்கிமிர்திருக்காவேரிநதியுமந்நதியின்றென்பால
மந்திரத்தனந்தன்மேற்கண்வளர்திருவுருவுங்காட்டிச
செந்திருக்குடந்தையாராவமுதனாந்தேவதேவன்
முந்தியேயடிமைகூறிமுதுதமிழ்ப்பாடல்கொண்டான்.

(இ-ள்.) சங்குகள் சத்திக்கும் திருக்காவேரிநதியையும் அந்த நதியின் தென்புறத்தில் திருக்கோயிலில் திருவனந்தாழ்வான்மீது திருக்கண்வளரும் திருவடிவையுங் காட்டிச், செம்மையான திருக்குடந்தை ஆராவமுதனான தேவதேவன, ஆழ்வாருக்கு முந்தியே அடிமை கூறிப், பழமையான தமிழ்ப்பாடலைக் கொண்டனன். (எ-று.) (௫௪)

௫௫. உறந்தைமாறநூசையன்பில்கரம்பனூருயர்வெறுக்கை
சிறந்தவெள்ளறைபுள்ளம்பூதங்குடிதிருப்பேராதை
அறந்திகழ்புலியூர்சேறைகண்டியூராலிநாகை
பிறந்தைதிரழுந்தூர்நந்தலூர்திருக்கூடலூரே

(இ-ள்.) திருவுறையூர், உயர்ந்த திருச்சக்கரசோமணிக்கோயில், திருவன்பில், திருக்கரம்பனூர், உயர்ந்த திருவெறுக்கை, சிறப்புடைய திருவெள்ளறை, திருப்புள்ளம்பூதங்குடி, திருப்பேர்நகர், திருவாதனூர், தருமம் விளங்கும் திருச்சிறுப்புலியூர், திருச்சேறை, திருக்கண்டியூர், திருவாலித்திருநகரி, திருநாகை, பிறப்புநீங்கும திருவழுந்தூர், திருவிந்தளூர், திருக்கூடல் என்னும் திவ்வியதேசம். (எ-று.) (௫௫)

௫௬. கூடலூர்வில்லிபுத்தூர்குருகைசெங்குன்றூர்கோளூர்
வீடருணறையூராறனவிளைதிருமெய்யமவெஃகா
ஏடலர்பபொழில்சூழ்கோவலபிரிதிவிந்துவக்கோடெவ்வுள்
பாடகந்திருவண்வண்டூர்கவித்தலமபாரதன்பள்ளி

(இ-ள்.) திருக்கூடலூர், ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்குருகூர், திருச்செங்குன்றூர், திருக்கோளூர், முத்தியை யளிக்கும் திருநறையூர், திருவாறன்விளை, திருமெய்யம், திருவெஃகா, இதழ்களையுடைய மலர்ச்சோலைகள் சூழ்ந்த

திருக்கோவலூர், திருப்பிரிதி, திருவிற்றுவக்கோடு, திருவெவ்வுளூர், திருப்பாடகம், திருவண்வண்டூர், திருக்கவித்தலம், திருப்பார்த்தன்பள்ளி, (எ-று.)

ருஎ. ஊரகங்கடிகைகள்வனூர்திருப்புலியூர்மோகூர்
நீரகங்குளந்தைமுட்டம்புளிங்குடிநின்றவூர்வாழ்
காரகம்வல்லவாழ்சீரககணங்குடிகண்ணமங்கை
கூரகழ்த்திருத்தண்காலூர்காவைசெம்பொன்செய்கோயில்

(இ-ள்) திருவூரகம், திருக்கடிகை, திருக்கள்வனூர், திருப்புலியூர், திருமோகூர், திருநீரகம், திருக்குளந்தை, ஸ்ரீமுஷ்ணம், திருப்புளிங்குடி, திருநின்றவூர், வாழ்வையுடைய திருக்காரகம், திருவல்லவாழ், சிறப்பையுடைய திருக்கண்ணங்கடி, திருக்கண்ணமங்கை, உயர்ந்த அகழியையுடைய திருத்தண்காலூர், குளிர்ந்த சோலையையுடைய அழகிய திருச்செம்பொன்செய கோயில், (எ-று.) (ருஎ)

ருஅ. திருமணிக்கூடந்தெற்றியம்பலஞ்சீவைகுந்தம்
பொருவிலசித்திரகூடஞ்சீராமவிண்ணகரம்புன்மை
ஒருவிடவெந்தையட்டபுயகரமுயர்காவானம்
அருடிருநாவாய்வாட்டாறயிந்திரபுரமயோத்தி

(இ-ள்.) திருமணிக்கூடம், திருத்தெற்றியம்பலம், ஸ்ரீவைகுண்டம், ஒப்பற்ற திருச்சித்திரகூடம், சீராமவிண்ணகரம், புன்மையை நீக்கும் திருவிடவெந்தை, திருவட்டபுயகரம், உயர்ந்த திருக்காவானம், அருளையுடைய திருநாவாய், திருவாட்டாறு, திருவயிந்திரபுரம், திருவயோத்தி, (எ-று.) (ருஅ)

ருகூ. தொலைவில்லிமங்கைதேவன்றொகைமுடிததுங்கசிங்க
மலைகடன்மல்லைகண்ணைமாலிருஞ்சோலைபேரை
கலைநிலாத்திங்கட்டுண்டங்காவளம்பாடிகங்கை
தலைமிசைத்தரிததோன்போற்றும்வதரியாசிரமத்தானம்

(இ-ள்.) திருத்தொலைவில்லிமங்கலம், திருத்தேவனூர்தொகை, உன்னதமான சிகரத்தையுடைய திருச்சிங்கவேள்குன்றம், திருக்கடன்மல்லை, திருக்கண்ணபுரம், திருமாலிருஞ்சோலைமலை, திருப்பேரநகர், கலைகளையுடைய திருநிலாத் திங்கட்டுண்டம், திருக்காவளம்பாடி, கங்கையைத் தலையின்மீது தரித்த சிவபிரானபோற்றும் ஸ்ரீவதரியாசிரமமாகிய திவ்வியதேசம், (எ-று.)

கூo. விளங்குசாளக்கிராமநைமிசாரணியம்வெள்ளக்
குளந்திருவல்லிக்கேணிகுறுங்குடிகோட்டிமூழிக்
களங்கடித்தானநாங்கூர்காடகரைகங்கைக்கண்டம்
வளங்கொணீர்மலைவைகுந்தவிண்ணகர்வளராய்ப்பாடி

(இ-ள்.) விளக்கமுடைய ஸ்ரீசாளக்கிராமம், ஸ்ரீநைமிசாரணியம், திருவெள்ளக்குளம், திருவல்லிக்கேணி, திருக்குறுங்குடி, திருக்கோட்டியூர், திருமூழிக்களம், திருக்கடித்தானம், திருநாங்கூர், திருக்காட்கரை, கங்கைக்கண்டமென்னுங் கடிநகர், வளப்பமுடைய திருநீர்மலை, ஸ்ரீவைகுந்தம், திருவிண்ணகரம், விருத்தியையுடைய திருவாய்ப்பாடி, (எ-று.) (கூo)

கூக. சீவரமங்கைமாநந்திபுரவிண்ணகரந்தெய்வப்
பாவலர்புகழனந்தபுரம்பரிசாரம்பாரில்

மாவடமதுரைவெள்ளியங்குடிதுவரைவண்பூங்
காவளர்திருப்புல்லாணிவிண்ணகர்திருத்தண்காவே.

(இ-ள்.) ஸ்ரீவரமங்கை, பெருமைபொருந்திய திருநந்திபுரவிண்ணக ரம், தெய்வத்தன்மையுள்ள பாவலர் புகழும் திருவனந்தபுரம், திருவண்பரி சாரம், பூமியினிடத்துப் பெருமையுள்ள திருவடமதுரை, திருவெள்ளியங் குடி, திருத்துவாரகை, வளப்பமான பூஞ்சோலைகள் வளரும் திருப்புல்லா ணி, திருவிண்ணகரம், திருத்தண்கா, (எ-று.) (௬௧)

௬௨. வழிதருந்தலைமுற்சார்ந்தசங்கநாண்மதியமாயை
ஒழியரிமேயவிண்ணகரம்புருடோத்தமந்தேம்
பொழிலவரகுணமாமங்கைபரமவிண்புரிதிருப்புட்
குழியெனும்பெயர்களவாயத்தபதியொடுங்கோயிலோடும்

(இ-ள்.) நன்மார்க்கத்தை யளிக்கும் திருத்தலைச்சங்கநாண்மதியம், மாயையை யொழிக்கும் திருவரிமேயவிண்ணகரம், திருவண்புருடோத்த மம், தேன் பொருந்திய பொழில் சூழ்ந்த ஸ்ரீவரகுணமங்கை, திருப்பரமே ச்சுர விண்ணகரம், திருப்புட்குழி யென்று சொல்லப்படும் திருநாமங்கள் வாய்த்த திருப்பதிகளோடும் திருக்கோயில்களோடும் (எ-று.) (௬௨)

௬௩. அவணவணிலங்குகேடிலருச்சனையவதாரத்தான்
சிவனயனெவர்க்குந்தேவதேவனுந்திருவின்கேள்வன்
உவகையினடிமைவெவ்வேறுரைத்தவவாறுருவங்காட்டத்
தவமுனிவரனும்போற்றிப்புகன்றனன்றமிழ்ப்பாடல்.

(இ-ள்.) அங்கங்கு விளங்கும் அழிவில்லாத அர்ச்சாவதாரமானவன், சிவன் பிரமன் மற்ற எவர்க்கும் தேவதேவனும், பெரியபிராட்டியார் மணவாளனுமானவன், சந்தோஷத்தோடு அடிமையை வேறு வேறாகச் சொல்லி அவ்வாறே (தன) சொருபத்தைக் காட்டியருளத், தவத்தையுடைய மனசீலரான ஆழ்வாரும், அப்பெருமானைப் போற்றித் தமிழ்ப் பாடல்க ளருளிச் செய்தனர். (எ-று.)

௫௩-வது செய்யுள் முதல் இதுவரையில் சொல்லப்பட்ட திருப்பதி கள் சிலவேயன்றி யாவும் ஆழ்வார் அருளிச்செயலிலில்லை. ஆயினும் சில திவ்யதேசத் தெம்பெருமான்களுக்குத் தனிப்பதிகம் போலச், சில திருப் பதிகளுக் கில்லாது மொக்கைகளாயிருப்பது போலவே, சில திருப்பதி களைப் பாடலில்லாது போற்றினரெனக் கொள்ளக் கூடும்.

ஆழ்வார் மங்களாசாசனஞ் செய்த திருப்பதிகளை ௭௧-ம் செய்யுளி னடியிற்காண்க. (௬௩)

வேறு.

௬௪. அரியசெழுந்தமிழார்வ மமைதிபிறவாமையினு லரவின் பாயற், பெரியதிருப்பாற்கடலவை குந்தமொளிர்நவமணியாற் பி றழ்பொற்கோயில், உரியவிபூதியினுபய முயர்வறவேயுயர்ந்தமுத லுருவமெல்லாந், தெரியவெழின்மாறனுக்குக் காட்டிநவின்றடி மைதமிழ்த் தெரியல்பூண்டான்.

குசரான ஆழ்வார் எருந்தருளியிருக்க; (இவர்க்கு முன்னே) பரமபதத்தி லிருக்கும் குமுதனென்னும் நித்தியசூரியொருவர், பூமியிலுள்ளோர் போற் றும்படி ஞானமளிப்பதற்காகப் பெருமையுடைய திருக்கோளூரில் விஷ்ணு சேனரது திருத்தேவியாரான தேவதேவியார் கர்ப்பத்தையடைந்து, சூரிய னைப்போலச் சித்திரை மாதத்திற் சித்திரை நக்ஷத்திரத்திலவதரித்தனர். (எ-று.)

மதுரகவியாழ்வார் திருவவதாரம், துவாபரயுகம் எட்டுலக்ஷத்து அறு பத்து மூவாயிரத்து எண்ணூற்றெழுபத் தொன்பதாவதான ஈசுவரஙூ சித்திரைமீ சுக்லபக்ஷ சதுர்த்தசி, சித்திரை நக்ஷத்திரம, சுக்ரவாரம் எனக் கொள்க. (கூஎ)

கூஅ. தந்தைமறையவர்நாம முதற்சருமமுறைமுடிப்பத் தனய ன்றானும், முந்தைவடகலைதமிழ்நூல் முதற்கலைகளமுழுதுணர்ந்து முகுந்தன்பாதநு, சிந்தையமைத்தலைகடந்த மாருதிபோலிந்திரி யச செருக்குநீக்கி, எந்தைதிருவளர்மாப விணையடிக்காளாயுல கி லிணையின்றானான்.

(இ-ள்.) வேதியரான அவரது தந்தையார், திருநாமகரணமுதலிய கருமங்களைமுடிக்க, அத்தனயரும் முதன்மைபெற்றனவான வடநூல் தமி ழ்நூல்களில் தலைமைபெற்ற சாஸ்திரங்கள் யாவுமுணர்ந்து, முகுந்தனென பெருமானது திருவடிகளைத் தமது திருவுள்ளத்திலமைத்து, சமுத்திரத் தைக்கடந்த திருவடியைப்போல இந்திரியங்களின் கர்வத்தையொழித் து, எனக்குற்பாதகனுயத் திருவளர்மார்பனென பெருமானது இரண்டு திரு வடிகளுக்கடிமையாய, உலகில ஒப்பற்றவராயினர். (எ-று.) (கூஅ)

கூகூ. முக்கனிதேன்சருக்கரைபான் முதலசுவையனைத்தினுக்கு முதன்மைத்தாகி, மிக்கசுவைமுதலைய தமிழ்கவியானமறைப் பொருளாய் விளங்குங்கோளூர், மைக்கடனோதிருமேனி மால புகழைவிரித்திருதாள வணங்கிவாழ்த்த, நக்கனிரவொழித்தோனு மதுரகவியெனுநாம நலகினானல்.

(இ-ள்.) வாழை மா பலா என்னும் மூன்று கனிகளும் தேனும் சருக்கரையும் முதலானவற்றின் சுவை எல்லாவற்றிற்கும் முதன்மையான தாய, அதிக சுவையையுடைய அமிர்தம்போன்ற தமிழ்ப்பாடல்களால், வேதத்திற் சொல்லப்படும் பிரதானப்பொருளாய விளங்கும் திருக் கோளூரிலெழுந்தருளிய கரிய கடலை நிகர்த்த கருமேனியையுடைய பெரு மானது கீர்த்தியை விரித்து, அவனது இரண்டு திருவடிகளை வணங்கி வாழ்த்தச், சிவபெருமானது இரத்தலை யொழித்தருளிய பெருமானும் (அவருக்கு) மதுரகவியெனனுந் திருநாமமளித்தனன். (எ-று.) (கூகூ)

எ0. அத்தகையமதுரகவி யவனியின்மாலருச்சனையி னவதாரத் தை, எத்தலமும்புகுந்துபணிந் தினியதியமுனையினை யெய்தியா ங்கே, சித்தமுறப்புலனளைத்துந் தனியோகத்திருந்தயுதந் திகிரி வெய்யோன், ஒக்கதொருசெழுஞ்சோதி தெக்கணங்கண்டதுகா ண்பா னுவப்பிற்சென்றான்.

(இ-ள்.) அப்படிப்பட்டவரான மதுரகவியாழ்வார், பூமியின்மீது பெரு மானது அர்ச்சாவதாரத்தை எந்தத் திவ்விய தேசங்களுக்கும் போய்ப்

பணிந்து, இனிய யமுனையாற்றையடைந்து அங்கு புலன்கள் சித்தத்தின் வசமாகும்படி ஒப்பற்ற யோகத்திலிருந்து, தேஜையுடைய பதினாயிரஞ் சூரியர்களுக்குச் சமானமான ஒரு செழுமையான சோதியைத் தெற்குத் திக்கிறபார்த்து, அதனைக்கண்டு தெளியும்படி சந்தோஷத்தோடு பிரயாண மாயினர். (எ-று.) (எ0)

[மதுரகவியாழ்வார் ஆழ்வாரை யாசிரயித்தது.]

எக. நதிமலைகான்பலகடந்து திருக்குருகூராயதிரு நகரினண்ணிப், புதியதிருப்புளிப்பொதும்பி னவ்வுருவங்கண்டுடலம் புளகமபோர்ப்பக், கதிதருமாலினனந்தன் றிருப்புளியேயெனக்கருதிக் கண்ணீர்வார, மதிதருஞ்செந்தமிழ்க்கண்ணி நுண்சிறுத்தாம் பொருபானுன் மாறனறனை

(இ-ள்.) நதிகள் மலைகள் அடவிகள் பலவற்றைக்கடந்து திருக்குருகூராகிய ஆழ்வார்திருநகரியை யடைந்து, புதுமையான திருப்புளியாழ்வார் பொந்தில் (தாம் முனபுகண்ட) அந்தச்சோதியைச் சேவித்துத், திருமேனியிற் புளகம் போர்க்கவும், இவர் மோக்ஷத்தைக்கொடுக்கும பெருமானே; திருப்புளியாழ்வார் திருவனந்தாழ்வானே யெனவெண்ணிக் கண்ணீரொழுகவும், ஆழ்வாரை ஞானத்தைத்தரும் செந்தமிழான "கண்ணிநுண்சிறுத்தாம்பு" என்னும் பத்துப் பாட்டுக்களாலே, (எ-று.) (எக)

எஉ. வழுத்திமலரடிவணங்கி வலஞ்சூழ்ந்துதமிழ்மறையோய் வரம்பின்ஞானம், பழுத்தபராங்குசவடியேன றனையாட்கொண்டருளெனப் பரிந்துநோக்கி, முழுதவனுமறிவோய் நீவருந்தேலெலனைத்துயிர்க்கு முதலாயெட்டாம், எழுத்தினிடையுறைபரமன் சரண்பெறுமாறிசைப்பலென விசைப்பதானான.

(இ-ள்.) தோத்திரஞ்செய்து, அவரது திருவடிகளை வணங்கி வலம்வந்து, தமிழ்வேத மருளிச்செய்யுமவரே! எல்லையற்ற ஞானம்பழுத்த பராங்குசரே! அடியேனை ஆட்கொண்டருளுக எனறுகூறத், தவமுழுமையுமுடைய ஆழ்வாரும் பிரீதியோடு கடாக்ஷித்து நல்லஞானமுடையீர்! நீவிர் வருந்தவேண்டா: எவ்வுயிர்கட்குங் காரணபூதனாய்த் திருவஷ்டாக்ஷரிப் பிரதிபாத்தியனான பெருமானது பதம பெறும் விதத்தைக் கூறுகிறேனென்று அருளிச்செயவாராயினர். (எ-று.)

மேலிரண்டு செய்யுளு மொருதொடர். "கண்டவாற்றுற்றனதே யுலகென நின்றான்" எனகிறபடி தர்சன மாத்திரத்தாலே நம்மாழ்வாருக்கு எம்பெருமானது ஸர்வாதிகத்வம் விளங்கினபடியே, மதுரகவியாழ்வாருக்குத் தர்சன மாததிரத்தாலேயே நம்மாழ்வாரது ஆதிக்யம் விளங்கினமையால் இவ்வாறு துதித்தனர்.

மதுரகவியாழ்வார், திருக்குருகூரையடைந்து, பொலிந்து நின்ற பெருமான் சந்நிதியில் திருப்புளி யாழ்வாரடியில் நமமாழ்வாரைச் சேவித்து, "செத்ததின வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்" எனக் கேட்டதற்கு, நம்மாழ்வார் "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று அருளிச்செய்தனரெனக் கூறுவர். இதன் பொருளாவது: வினு—அசேதநமான பிரகிருதியில் ஆத்மாவுக்குச் சம்பந்தமுண்டாயின் எதை அநுபவித்துக்கொண்டு எங்கேயிருக்கும் என்பதாம். விடை—அத்தப்

பிரகிருதியையே அநுபவித்துக்கொண்டு அதிலே யிருக்கும் என்பதாம். இவ்வாறன்றி, வினு—பிரகிருதி சம்பந்தமுடைய ஆச்மாவுக்கு ஞானம் பிறந்தால் எதை அநுபவித்துககொண்டு எங்கேயிருக்கும் எனவும், விடை—அகார வாச்சியனுன எம்பெருமானை அநுபவித்துக்கொண்டு அவனிடத்தே யிருக்கும் எனவும் கூறுவதுமுண்டு.

வேறு.

எங. மூந்தியயுகங்கண் மூன்றினுந்தவத்தான் மகத்தினலருச்சனை முறையான், வந்திரவியையநோ திகிரிகைத்தரித்த மாதவன்வழங்குவான்முத்தி, பிந்தியயுகத்திற் பெயரினைப்புகலப் பிரமனும்பிறைமுடித்தவனும், நந்தினுநந்தா நான்மறைப்பொருளா நாயகனல்குவான்முத்தி.

(இ-ள்.) சென்ற கிரேத திரேத துவாபரமென்னும் யுகங்கள் மூன்றிலும் (முறையே) தவத்தாலும் யாகத்தாலும் அருச்சனையாலும், சூரியனையொத்த திருவாழியைத் தரித்த மாதவன வந்து முத்தியையளித்தருளுவன்; பிறபட்டகலியுகத்தில் அவனது திருநாமத்தை ஸ்மரணஞ்செயதால், பிரமதேவனும் பிறையையணிந்த சிவபிரானும் அழியினும் அழியாத நான்மறைப் பொருளான நாயகன முத்தியருளுவன். (எ-று.) (எங)

எச. ஆதலானவன்றன் பெயர்நவில்சுருதி யரும்பொருளனைத்தையு முணர்ந்தே, வேதநான்கினுக்கோ ரைந்தெனவியாதன் விதித்தவப்பான்மைபோல் விளங்கப், போதமார்பரதத் துவவியூகமெனும் பொருளுடைப்பரனையும் புகன்ற, சீதரன்சிதையா வருச்சனைவடிவின் சிறப்பையுந்தெளிதரச் செப்பும்

(இ-ள்.) ஆதலாலே அந்தப்பெருமானது திருநாம வைபவத்தைச் சொல்லாநின்ற வேதத்திற் கூறப்படும் அரிய பொருள்களை யெல்லாம் அறிந்து, வேதங்கள் நானகுடனே ஐந்தாம்வேதமென்னும்படி ஸ்ரீவேதவியாச மாமுனிவர் வகுத்த அந்தவிதம்போல விளங்கும்படி, ஞானமயமான பரதத்துவம் வியூகமென்னும் தலைமைவாய்ந்த பெருமானையும் அந்தச் சீதரனது அழிவில்லாத அர்ச்சாவதாரத்தின் சிறப்பையும் தெளியும்படி சொல்லப்பட்ட (எ-று.) (எச)

பரதத்துவம் வியூகம் அர்ச்சை இவைகளைச் சொல்லவே, உபலக்கணத்தால், மற்றைய விபவம் அந்தர்யாமித்வம எனனு மிரண்டும் சேரும்.

எரு. ஆதிநூன்மிருதி புராணபாஞ்சராத்தி ராகமமனைத்தையுந்தமிழிற், பேதியாதடக்கிச சதுவிதபொருளும் பிருதிவியுயிரெலாம் பெறநூல், கோதினன்காககி யவற்றினுறிதழா விருக்குவின்பொருளெலாங் குறையா, தோதினம்பனுவ லொன்றுபொய்ந்நின்ற வெனமுதற்கவிசனூா றுணரின்.

(இ-ள்.) ஆதிநூலான வேதம் ஸ்மிருதி புராணம் பாஞ்சராத்திராகமம் என்னும் இவைகளை யெல்லாம் தமிழில் பேதப்படாமலடக்கி, அறம்பொருளின்பம் வீடென்னும் நான்குவித புருஷார்த்தங்களைப் பூமியிலுள்ள உயிர்களெல்லாம் பெறும்படி, பிரபந்தங்கள் நான்காகச்செய்து, அவற்றில் நூறு சாகைகளையுடைய இருக்குவேதத்தின் பொருள்களெல்லாங் குறைவுபடாது

நூலொன்று சொல்லினோம்; உணருமிடத்து அது "பொயர்நின்ற" என்று சொல்லும் முதலையுடைய நூறுகவிகளாகும். (எ-று.) (எ௫)

**எ௬. சுருதியினிரண்டாந் தயிசுதிரியத்தேழ் காண்டமுஞ்சருக் கமாய்த் துலங்க, ஒருதிருப்பனுவல செககாமாமுகின்முந் தகவ லேழாய்ப்புகன் றாமேவாா, சுருதசிரானன்காகு சுருதியெண்பத் தேழ் கவியினோபனுவலொற்கவின, வருமுயறறிசுமந் தெழுந்து முந்தித்தென் றுதியாவழுவறவமைத்தேம.**

(இ-ள்.) வேதத்தில் இரண்டாவதான யஜுர் வேதத்தின் எழுகாண்டங்களும் சுருக்கமாகவிளங்கச் "செக்கர்மாமுகில்" என்பது முதலினுடைய அகவல் ஏழினால் ஒரு அழகிய நூலைப் புகன்று, ஞானவான்கள் சிந்திக்கும் சிறப்பையுடைய அதர்வணவேதத்தை அழகுண்டாகவரும் "முயற்றி சுமந் தெழுந்து முந்தித்" தென்று முதலாக எண்பத்தேழு கவிகளாலே ஒரு நூலாக வழுக்களின்றி வகுத்துரைத்தோம். (எ-று.) (எ௬)

**எஎ. அப்பனையின்றவனைப பரப்பிரமமெனுஞ் சாமவேதத்தையை ந்தவத்தை, வயமதாய்வயங்கு வடிவமைந்துளமூ வகையுயிர்கது லமெலா மகிழப், பயனருள்கவியா யிரத்தினேழிசையும் பயின்மு தற்பாடன்முற்பாதக், துயர்வறவெனுஞ்சீா முதலமூன்றடியிற் பிர ணவவெழுத்துமுந்தொளிர**

(இ-ள்.) பிரமனையளித்த பெருமானைப் பரப்பிரமமென்று சொல்லும் சாமவேதத்தை, ஐந்தவஸ்தைகளின் வசமாயிருக்கும் வடிவமுடைய மூவகையான உயிர்க்கூட்டமெல்லாம் மகிழும்படி மோக்ஷப்பிரயோசனத் தைக் கொடுப்பதாய, ஏழுவகையான இசைகள் பொருந்திய ஆயிரங்கவிக ளாலே, முதற்பாட்டின் முதற்பாதத்தில் "உயர்வற" என்னும் சீர் முதலாக, மூன்றடிகளில் பிரணவத்திலடங்கிய மூன்றெழுத்துக்களும் முற்பட்டு விளங்க (எ-று.) (எஎ)

ஐந்தவஸ்தையாவன: ஜாக்கிரம், சொப்பனம், சுஷுப்தி, துரீயம், துரீயாதீதம் என்பனவாம். மூவகையுயிர்: நித்தியர், முக்தர், பத்தர் என் போர்.

**எ௮. பகருபநிடதம் பாடலேழதனிற் பரமசித்தாந்தமோர்பத் தின், புகரிலாகமவுற் பத்திநூற்றொருபான் கவியின்மூன்றிடத்தி னிறபொருந்தத், தகவுடைதிருவாய் மொழியெனும்பெயரோர் பனுவலாத்தவலறச் சமைத்தேம், அகமகிழ்ந்தவைநீ யதிகரித்தறி தற் குரியைமற்றயலினோர்க் கரிதால்.**

(இ-ள்.) (பெரியோர்) சொல்லும் உபநிஷதம் எழுபாடலினும், பரம சித்தாந்தம் பத்துச் செய்யுளினும், குற்றமற்ற ஆகமவுற்பத்தி நூற்றொரு பது கவிகளினும், இப்படி மூன்றிடத்தினும் பொருந்தும்படி, பெருமையை யுடைய திருவாய்மொழி யென்னும் பெயரையுடைய ஒரு கிரந்தமாகக் குறைவுபடாமற் செய்தோம். நீர் அவைகளை மனமகிழ்வுடனே கற்றறிவ தற்குரியீர். அது பிறர்க்கு அரிதாகும். (எ-று.) (எ௮)

**எ௯. என்றுசொற்றிசைத்த பனுவனன்கினையு மின்னியநான்ம றைகளினிசையே, ஒன்றுறச்சந்தை யிரட்டையினுதாத்தா நுதா**

த்தமாஞ்சுரங்களோ டொருவா, நன்றுடைப்பொருளு நவிலரும் விசிட்டாத் துவிதமாநவிறலு நயவா, நின்றுகற்றவற்றின் பொரு ளெலாங்கருத்தி னிறைதலான்ஞானமு நிறைந்தான்.

(இ-ள்.) என்றருளிச்செய்து, தாமருளிச் செயத நான்கு பிரபந்தங்களை யும், நான்கு வேதங்களின் இனிய இசையே (இதற்கும்) பொருந்தும்படி இரட்டைச் சந்தத்தோடு உதாத்தம் அநுதாத்தமாகிய ஸ்வரங்களோடு, பிரி யாத நன்மையையுடைய அவற்றின் நன்மையான பொருளும் விசிஷ்டாத்து வைதபரமாகவே (ஆழ்வார்) அருளிச் செய்தலும், (மதுரகவியாழ்வார் அதி ல் அதிக விருப்பமுடையவராயிருந்து அவைகளைக்கற்று, அவற்றின் பொரு ள்களை யெல்லாம் தமது திருவுள்ளத்தில் நிறைத்தலாலே, ஞானமும் நிறைந் தவராயினர். (எ-று.) (எகூ)

‡ அந்தநான்கெனவுரைசெயும்பிரபந்தமதனுட்
பைந்துழாயணிமாதவனுவந்துவாழ்பதிகள்
வந்ததைந்தொடுமுப்பதாம்வடமதுரையும்வை
குந்தஞ்சீவரமங்கைசீர்குறுங்குடிவெஃகா

‡ அரங்கம்வேங்கடம்விண்ணகர்செங்குன்றூரனந்த
புரமயோத்திபாற்கடறுவரைப்புளிங்குடிகாட்
கரைகுளந்தைவாட்டாறுமூழிக்களமோகூர்
குருகைவல்லவாழ்தொலைவில்லிமங்கலங்கோளூர்

‡ சீர்பெறுந்திருமாலிருஞ்சோலைவெற்புபரி
சாரமாம்பதிதிருக்கடித்தானநாவாயவண்
பேர்குடந்தையாறன்விளைகணபுரம்புலியூர்
பேரைசீவரகுணமங்கைபேரொனுநகரே.

அ0. குறைவிலாஞானப் பராங்குசமாற குருகைநாயகசட கோ ப, பொறையிலார்கவிசூழ் புடவியும்புகழுந் தபோதனசதுமறைப் பொருளின், நிறையிலாமிதயத் தந்தநாரணனை நிறுத்துளாய்பவ மெனுநெடுநீர்த், துறையிலாழெனையா றாதெடுத்தளித்தா யென ப்பராயிருபதந் தொழுதான்.

(இ-ள்.) குறைவுபடாத ஞானத்தையுடைய பராங்குசரே! மாற ரே! குருகைநாயகரே! சடகோபரே! பொறுமையையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த பூமியிலுள்ளோர் யாவரும் புகழும் தபோதனரே! நான்கு வே தார்த்தங்கள் நிறைந்த இருப்பிடமான திருவுள்ளத்தில் அந்த வேதப்பிரதி பாத்தியனை நாராயணனை நிலைக்கவைத்தவரே! பிறவி யென்னும் பெரிய நீர்த்துறையான கடலிலழுந்தும் அடியேனை (அப்படி) யாழாது ரக்ஷித் தவரே! எனவணங்கி ஆழ்வாரது இரண்டு திருவடிகளையும் வணங்கினார். (எ-று.) (அ0)

அக. எனப்புகழ்மதுர கவியொடுமாறன் றிருப்புளியகவயி லிருந்தே, வனப்புயர்குருகூர்ப் பொலிந்துநின்றபிரான் மலரடிவழு த்தியே வணங்கக், கனப்புயனிகர்மா தவனுமுற்றோன்றிக் கருடனை மேற்றனதுருக் காட்டி, அனப்புளான்விடையான் புகழ்தரத்திரு த்தோள் வகுளமாலிகையுவந் தளித்தான்.

(இ-ள்.) என்று புகழும் மதுரகவியாழ்வாரோடு ஆழ்வார் திருப்புளியாழ்வாரடியி லெழுந்தருளியிருந்து, அழகுமிகுந்த திருக்குருகூரிலெழுந்தருளிய பொலிந்துநின்றபிரானது மலர்போன்ற திருவடிகளை வாழ்த்தி வணங்க, செறிந்த மேகம்போன்ற பெருமானும் ஆழ்வார் திருமுன்னரெழுந்தருளி கருடாழ்வான்மேரி லெழுந்தருளியிருக்கும் தமது திவ்விய மங்கள விக்கிரகத்தைக்காட்டி, அன்னப்பறவையையுடைய பிரமனும் ரிஷபத்தையுடைய சிவனும் புகழும்படி ஆழ்வார் திருத்தோளுக்கு மகிழம்பூமாலையை மகிழ்ந்தளித்தனன். (எ-று.) (அக)

அ௨. மாறனும்வகுளா பரணனும்பெயர்பின் வாய்த்துமன்பதையெலாம் வணங்கிப், பேறரும்பரம பதம்புகத்தமிழ்நான் மறையுடைப்பெரும்பொரு ளனைத்துங், கூறருமவிசிட்டாத் துவிதமாவிரித்தாட் கொண்டுவாழ்வித்தெழில குறையா, தேறருண்மதுர கவிதொழசசோதிக் கினிதெழுந்தருளிவீற் றிருந்தான்.

(இ-ள்.) அதனபின்னர் ஆழ்வாரும் வகுளாபரணரென்னும் திருநாமம் பெற்று, மக்கட்கூட்டமெல்லாம் வணங்கிப் பெறுதற்கரிய பரமபதம் புகும்படி தமிழிலான நான்கு வேதங்களின் பெருமையையுடைய பொருளெல்லாம் சொல்லற்கரிய விசிஷ்டாத்துவைதபரமாக விரித்துரைத்து, அவர்களை யடிமைகொண்டு வாழ்வித்து, (என்றும்) அழகு குறையாது அபிவிருத்தியாகும் அருளையுடைய மதுரகவியாழ்வார் தொழும்படி தன்னடிச்சோதிக்கு நன்கு எழுந்தருளி வீற்றிருந்தனர். (எ-று.) (அ௨)

நம்மாழ்வார் இவ்வுலகில் எழுந்தருளியிருந்த காலம் முப்பத்தைந்து வருஷங்களென்பர்.

---

மதுரகவியாழ்வார்

[ஆழ்வாருக்கு உற்சவாதி வைபவங்களை நடத்தினது.]

வேறு.

* மதுரகவியெம்பெருமானும்வையமையுறனையிகந்து
அதிருந்திரைத்தாமிரபருணியாற்றினீரையிறுகுவித்துக்
கதிர்சேர்ந்தவுலோகத்தாற் காரிமாறனருச்சையினைச்
சதிரார்ந்திடவேயியற்றுவித்துத்தக்கவளமும்புனைந்திட்டான்.

(இ-ள்.) மதுரகவியாழ்வாரும் உலக மயக்கத்தைக் கடந்து, சப்திக்கும் அலைகளையுடைய பொருநையாற்றின் நீரை இறுகச்செய்து, பிரகாசமுடைய அந்த உலோகத்தினாலே ஆழ்வாரது அர்ச்சாவதாரத்தினைத் திறமுண்டாகும்படி செய்வித்து, அதற்குச் செய்யத்தக்க பலவளங்களையும் அழகாகச் செய்தனர். (எ-று.)

வேறு.

‡ மாயவனருட்படிமதுரமாக்கவி
ஏயவம்மாறனல்லெழிலுருத்தனைத்
தூயவிக்கிரகமாய்த்துலங்கச்செய்ததை
ஆயவப்புளியினதடியில்வைத்தரோ.

(இ-ள்.) எம்பெருமானது நியமனத்தின்படி மதுரகவியாழ்வார் நிலைபெற்ற நம்மாழ்வாரது நல்ல திருவுருவத்தைப் பரிசுத்தமான அர்ச்சையாக விளங்கும்படி செய்து அதனை அங்குண்டாகிய திருப்புளியாழ்வாரடியில் எழுந்தருளப்பண்ணி, (எ-று.)

‡ பொன்னொடுமரகதம்புட்பராகமும்
மின்னிடுமணிகளுமேய்ந்திழைத்துவான்
மன்னிடுமண்டபமதிள்விமானமுந்
துன்னிடுகோபுரந்துலங்கச்செய்தனன்.

(இ-ள்.) பொன்னுடன் மரகதம் புஷ்பராகம் முதலிய ஒளிவிடும் ரத்தினங்களும் வைத்துச்செய்து ஆசாயத்தையளாவும் திருமண்டபமும் திருமதிளும் விமானமும் பொருந்திய கோபுரமும் விளங்கும்படி செய்வித்தனர். (எ-று.)

‡ பூடணவகைகளும்பொருந்துவத்திரம்
ஏடவிழ்பூமலரினியயாவையுஞ்
சூடிடலருத்துதல்சோர்விலாமலே
நாடொறுமுபசரிப்புடனடத்தியே

(இ-ள்) ஆபரணவகைகளும் நிலைபெற்ற ஆடைகளும் இதழ்கள் விரிந்து பூத்த மலர்களும் இனிதாகிய மற்றெவற்றையும் சூடுதல் நைவேத்தியஞ் செய்தல் ஆகிய இவைகளைச் சோர்விலாமல் நாள்தோறும் உபசரிப்புடனே நடத்தி, (எ-று)

‡ கருமுகின்மேனியுங்கமலக்கண்களும்
முருகவிழ்துளவமும்பொலிமுகுந்தனுர்
மருவுமாலயமுறைவழுவுறாமலே
திருவிழாமுதலவுஞ்செய்வித்தானரோ.

(இ-ள்.) கரியமேகம்போன்ற திருமேனியும் கமலம் போன்ற திருக்கண்களும் வாசனைவீசும் திருத்துழாயும விளங்கிய பொலிந்த நின்றபிரான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலிலும் முறைமை தவறாது திருவிழா முதலியவைகளையுஞ் செய்வித்தனர். (எ-று.)

‡ வருதினம்பலவுமவ்வாறதாய்ப்புரிந்
தொருபகல்கடிகையோர்நொடியிலேனுமம்
மருமகிழ்தொடையணிமாறனம்புயத்
திருவடிபிரிகிலான்சேர்ந்துவாழுநாள்.

(இ-ள்.) உண்டாகும் பல தினங்களும் அவ்வாறே செய்து ஒரு தினத்தில் ஒரு கடிகை ஓர் நொடிப்பொழுதிலேனும் வாசனையுடைய மகிழ்பூ மாலையணிந்த ஆழ்வாரது தாமரைபோன்ற திருவடிகளைப் பிரியாது கூடி வாழு நாளில், (எ-று.)

வேறு.

* விளங்குமத்தியயனமெனவீறுமகோற்சவந்தன்னைக்
களங்கமற்றமாறனுக்குக்காண்பான்றுணிந்துகோளூர்மன்
தளங்களோடுங்குருகைநகர்தன்னினின்றுமரங்கமெனும்
வளங்கொண்டோங்குநற்பதிக்கேவயங்குமன்பின்வழிக்கொண்டு

(இ-ள்.) விளங்கும் திருவத்தியயன மென்னும் பெருமையுடைய மகோற்சவத்தைக் குற்றமில்லாத ஆழ்வாருக்குச் செய்விக்கத்துணிந்து மதுரகவியாழ்வார் பரிவாரங்களுடன் திருக்குருகூரினின்றும் திருவரங்கமெனும் பலவளங்களுங் கொண்டுயர்ந்த நல்ல திருப்பதிக்கு விளங்கும் அன்புடன் வழிநடந்து, (எ-று.)

* வேதமோதாதுணர்வுற்றவிரசன்வந்தான்மெய்ம்மைநெறிப்
போதந்தனக்கார்கலியென்னும்புனிதன்வந்தானிவ்வுலகின்
ஏதங்கடந்தபெருந்தகையாமெம்மான்வந்தான்செழுந்தமிழின்
வேதநான்குமிசைத்திட்டவிமலன்வந்தானெனப்போந்தான்.

(இ-ள்.) வேதங்களையெல்லாம் ஓதாமலுணர்ந்த ஞானிவந்தார்; உண்மையான நெறியையுடைய ஞானத்துக்குக் கடலென்று சொல்லப்படும் பரிசுத்தர் வந்தார், இவ்வுலகின் தோஷத்தைக் கடந்த பெருந்தகையாகிய எமது ஸ்வாமிவந்தார்; செழுமையான தமிழில் நான்கு வேதங்களையும அருளிச்செய்த மலரகிதர் வந்தார் என்று (விருதுடன்) சென்றனர். (எ-று.)

* சங்கப்புலவோர்திருச்சின்னந்தன்னின்மாறன்விருதெல்லாம்
எங்கும்பொலியவொலியெழலுமிசையக்கேட்டுத்தாங்கூடி
எங்கட்கிணையாவேறொருவரிலரென்றிருந்தோமெம்மிக்கார்
அங்கண்புவியிலுள்ளார்கொல்லென்றேயறைந்துதடுத்தனரால்.

(இ-ள்.) சங்கப்புலவர்கள், திருச்சின்னத்தில் ஆழ்வாரது விருதெல்லாம் எவ்விடமும் விளங்குமபடி ஓசையெழவே, அதனை இசையக்கேட்டுத் தாங்கள் ஒன்று கூடி எங்களுக்குச் சமானமாக வேறொருவருமில்லை யென திருந்தோம்; எங்களினும் மேலானோர் அழகிய இடத்தையுடைய பூமியில் இருக்கிறார்களோ என்று கூறித் தடுத்தார்கள். (எ-று.)

* தூயமதுரகவியெம்மான்சொல்லும்புலவீர்கேட்பீரேல்
மாயனருள்சேர்மாறனிணைமாநீருலகத்திலொனலை
நேயமுடனேயறிகுதிராலென்றேகண்ணன்கழலிணையென்
மேயசீர்ச்செய்யுளைப்பொறித்துவிளங்குமுறியைக்கொடுவந்து

(இ-ள்.) (அப்போது) பரிசுத்தரான மதுரகவியாழ்வார் சொல்லுவாராயினர். சங்கப் புலவர்களே! கேட்பீர்களாயின் மாயனான பெருமானது திருவருள் கூடிய ஆழ்வாருக்குச் சமானமானோர் பெரிய நீர் சூழ்ந்த உலகத்தில் இல்லை யென்பதனை நேசத்துடனே அறிவீர்களாக என்று "கண்ணன் கழலிணை" என்னும் சிறப்புப் பொருந்திய செய்யுளை யெழுதி விளங்கும் ஒரு முறியைக் கொண்டுவந்து, (எ-று.)

கண்ணன்கழலிணை, நண்ணும்மனமுடையீர்
எண்ணுந்திருநாமம், திண்ணம்நாரணமே

திருவாய்மொழி, பத்தாம்பத்து ரு-ம் திருவாயமொழி முதற்பாட்டு.

* வயங்குஞ்சங்கப்பலகைதனில்வைத்திடலுமாங்கதுபுலவோர்
பயங்கொண்டிடவேயன்னவரைப்பயத்திற்றள்ளிமாறனருள்
சயங்கொள்கவியையேந்திநிற்கச்சங்கப்புலவோர்மிகத்துதித்து
நயங்கொள்கவிகளுன்மறைசொனாவீறன்மீதுரைக்கவெணி

(இ-ள்.) விளங்கும் சங்கப்பலகையில் வைத்திடுதலும் அச்சங்கப்பலகை, சங்கப்புலவர்கள் பயங்கொள்ளும்படி அவர்களை நீரில் தள்ளி ஆழ்வாரருளிச்செய்த வெற்றியைக்கொண்ட செய்யுளை யேந்தி நிற்கச் சங்கப்புலவர்கள் மிகவுந்துதித்து, இன்பத்தைக் கொண்ட கவிகளை, நான்கு வேதங்களையும் (தமிழில்) அருளிச்செய்த நாவின் வீறுபாட்டையுடைய ஆழ்வார் மீது சொல்ல நினைத்து, (எ-று.)

* ஈயாடுவதோகருடனெதிரொன்பாமுதல்வனெடுத்தோதிச்
சாயாப்புகழ்சேர்மாறன்மேற்றனியேபுலவோருரைக்கவவை
தூயார்சேமங்குருகையோவென் றுதுலங்குஞ்சீர்க்கவியொன்
றேயாயிலங்கவச்சமிறும்பூதுற்றேத்திநனிவிடுத்தார்.

(இ-ள்.) "ஈயாடுவதோ கருடன் எதிரோ" என்னும் பாட்டைச் சங்கத்துக்குத் தலைவன் எடுத்துரைத்து (அதன்பின்னர்) குறையாத புகழையுடைய ஆழ்வார் மீது சங்கப்புலவர்கள் தனித்தனியே கவிகளையுரைக்க, அச்செய்யுட்களெல்லாம் பரிசுத்தமுடைய "சேமங்குருகையோ" என்று விளங்கும் சிறப்பையுடைய ஓரே கவியாய விளங்க, (அவர்கள்) அச்சமும் ஆச்சரியமுங் கொண்டு துதித்து அதிகசம்பிரமத்தோடு (ஆழ்வார் திருவரங்கத்துக்கு) எழுந்தருளும்படி விடுத்தார்கள். (எ-று.)

ஈயாடுவதோகருடற்கெதிரேயிரவிக்கெதிர்மின்மினியாடுவதோ
நாயாடுவதோவுறுவெம்புலிமுன்நரியாடுவதோநரகேசரிமுன்
பேயாடுவதோவழகூர்வசிமுன்பெருமான்வகுளாபரணனருள்கூர்ந்
தோவாதுரையாயிரமாமறையின்னொருசொற்பெறுமோவுலகிற்கவியே.

சேமங்குருகையோசெய்யதிருப்பாற்கடலோ
நாமம்பராங்குசனோநாரணனோ—தாமம்
துளவோவகுளமோதோளிரண்டோநான்கும்
உளவோபெருமானுனக்கு.

ஆழ்வார் பாசுரம் சங்கப்புலவர்களைத் தாழ்த்தினது: "சுவடிறக்கத தொட ராசைக்களிற்றைத் தொடாந்திரண்டு, கவடிறக்கட்டிய பாசத்தளைக் சண் பரிந்துசங்கக், குவடிறக்குத்திய மாறப்பெயர்க்கொலை யானைநங்காட, இவடிறத்தொன்றும் படரந்திவான மிருள்கிளறதே" என்னும் சடகோப ரந்தாதி சஅ-ம் பாட்டில் ஆசையாகிய யானை ஓடச்செயது, பாசமாகிய தளையை யறுத்து, சங்கமாகிய குவடு சிதையும்படி குத்திய மாறனாகிய கொலையானை எனறு கம்பநாட்டாழ்வான் அருளிச்செயததனாலும் விளஙகும.

* பனுமதுரகவிப்பெருமான்பளகில்விழவுதனைமுடித்து
மன்னும்புகழெயதிப்புவியோர்மையலெல்லாமகற்றிநனி
துன்னும்பவமாம்பெருநோயைத்தணித்துத்தமிழ்நான்மறைசெய்த
தன்னொப்பில்லாப்பராங்குசனைத்தாழ்ந்துபோற்றியினிதிருந்தான்.

(இ-ள்.) யாவருஞ் சொல்லும் மதுரகவியாழ்வார் குற்றமற்ற திருவத்தியயன மகோற்சவத்தைச் சாத்து செயது, நிலைபெறற கீர்த்தியைப் பெற்று, இந்தப் பூமியிலுள்ளவர்களது மயக்க மெல்லாம் நிவர்த்தித்து, மிசப் பொருந்திய பிறவியாகிய பெரிய நோயை நீக்கித், தமிழில் நான்கு வேதங்களையருளிச்செய்த ஒப்பில்லாத ஆழ்வாரை வணங்கித்துதித்து, இனிதாக எழுந்தருளியிருந்தனர். (எ-று.)

வேறு.

† திருவாசிரியந்திருவிருத்தந்திருவந்தாதிதிருமால்சீர்
உருவாந்திருவாயமொழியென்றேயுரைத்தபிரபந்தங்களையும்
இருமாவினையிற்படுபவரையிசையத்திருத்தியோதுவித்திட்
டொருமாநொடியுஞ்சந்நிதியையகலாதாங்கேயுடனுறைந்தே.

(இ-ள்.) திருவாசிரியம், திருவிருத்தம், பெரியதிருவந்தாதி, ஸ்ரீயப்பதியின் கலியாணகுண உருவமாகிய திருவாய்மொழி என்று (ஆழ்வார்) அருளிச்செய்த பிரபந்தங்களையும், புண்ணியம் பாவம் என்னும் இரண்டு பெ

ரிய வினைகளிற்படும் ஆன்மாக்களை இசையும்படி திருத்தி ஓதும்படியாகச் செய்து, ஒருமாநொடியும் ஆழ்வார் சந்நிதியைப் பிரியாது கூடியிருந்து, (எ-று.)

† ஓதுமாண்டன்றிருநூற்றுநாற்பதிருந்திவ்வுலகனைத்தும்
பூதநாதனடியவராய்ப்பொருந்தும்வண்ணந்திருத்திநனி
வேதநாலுந்தமிழ்செய்தவிமலனருளாலுடல்விட்டே
சீதவிரசைப்புனலாடித்திருமாமணிமண்டபஞ்செறிந்தான்.

(இ-ள்.) சொல்லப்படும் வருஷங்கள் இருநூற்று நாற்பதுவரையில் எழுந்தருளியிருந்து, இவ்வுலகமெல்லாம் சகலவுயிர்களுக்கும் நாதனது அடியார்களாகப் பொருந்தும் வண்ணம் மிகவுந் திருத்தி, நான்கு வேதங்களையுந் தமிழாகச் செய்த ஆழ்வார் திருவருளாலே திருமேனியைவிட்டுக் குளிர்ந்த விரஜாநதியில் தீர்த்தமாடி, திருமாமணிமண்டபத்தை யடைந்தனர். (எ-று.)

---

வேறு.

அரவணைத்துயிலமலனென்றுபார
பரவருட்சடகோபன்பண்பிதால்
திரவருட்குலசேகரப்பெயர்ப்
புரவலர்க்கமைபுகழ்விளம்புவாம்.

(இ-ள்.) ஆதிசேஷசயநத்தில் அறிதுயில் கூரும் அமலனாகிய பெருமானென்று பூமியிலுள்ளோர் பரவும அருளையுடைய ஆழ்வாரது வைபவம் இதுவாகும். இனி ஸ்திரமான அருளையுடைய குலசேகரனென்னுந் திருநாமமுடைய ரக்ஷண தர்மத்தி லமைந்தவருக்கு அமைந்துள்ள புகழைச் சொல்லுவோம். (எ-று.)

பாராங்குசசருக்கம் முற்றிற்று.

---

நம்மாழ்வார் திருவடிகளேசரணம்.

மதுரகவியாழ்வார் திருவடிகளேசரணம்.

ஸ்ரீ

# ரு-வது குலசேகரச்சருக்கம்.

[கேரளநாட்டுச் சிறப்பு.]

க. பாரளந்தகல்விசும்பளந்தருடிருப்பதத்தின்
சீரளந்தறிதரற்கரிதாநெடுந்திருமால்
பேரளந்தறிதருகினும்பேசரும்பெருமைக
சேரளந்தனிநாடுநான்கெண்ணறங்கெழூஉம்.

(இ-ள்.) பூமியையளந்து அகன்ற ஆகாயத்தையுமளந்தருளின அழகிய திருவடிகளின் சிறப்பை அளந்து அறிவதற்கரியவனுன திரிவிக்கிரமனுகி வளர்ந்த பெருமானது திருநாமங்களை ஆயிரமென்று அளவிட்டு அறியினும், (அங்ஙனம்) அளவிட்டுச் சொல்வதற்கரிதான பெருமையையுடைய கேரளமென்னும் ஒப்பற்ற நாடானது முப்பத்திரண்டு தருமங்களும் நிறைந்திருக்கும். (எ-று.) (க)

உ. கருமணிக்கிரிகட்செவிமணிமுதிர்கதிர்வேய்
தருமணித்திரளிருமருங்கொளிர்தருந்தகையால்
இருமணிக்கண்கடரணிவான்மதியமாவிலங்குந்
திருமணிப்புயத்தரியெனத்திசைதொறுந்திகழும்.

(இ-ள்.) கருமையான அழகிய மலைகளானவை, பாம்புகளுமிழ்ந்த மணிகளும் முதிர்ந்த மூங்கில்கள் தந்த பிரகாசத்தையுடைய முத்துதிரளும் இரண்டு பக்கங்களிலும பிரகாசிக்குந தன்மையால், இரண்டு திருககண்களும் ஆகாயத்திலுள்ள சூரியனும் சந்திரனுமாக விளங்கப்பெற்று வீரலக்ஷ்மியை அழகிய புஜத்திலுடைய திருமாலைப்போலத் திசைகள் தோறும் விளங்கும். (எ-று.) (உ)

பாம்புமிழ்மணியைச் சூரியனுக்கும் மூங்கில்மணியைச் சந்திரனுக்கும் ஒப்பாகக் கொள்க. கிரிகள் அரியெனத் திசைதொறுந் திகழும் என்க.

ங. நீலகண்டமும்பிநாகமுமத்தியுநெருங்கிச்
சாலமாவிடைக்கதலிகையொடுமுழைதழுவி,
ஏலமாரமாலினவண்டுபயில்கொடியிடத்தான்
ஆலமுண்டவனிகர்தருசிகரவெற்பனந்தம்.

(இ-ள்.) (மலைகள்) நீலநிறமான தண்டங்களும் பெரிய நாகங்களும் யானைகளும் நெருங்கி, ஆச்சாமரம் மாமரம் பக்கங்களிலுள்ள வாழைமரம் என்பவைகளோடு குகைகளையுமுடையனவாகி, ஏலமும் சந்தனமும் மயக்கமுடைய இனமான வண்டுகள் பொருந்திய கொடிகளும் இடமாகக் கொண்டிருத்தலாலும்; (சிவபெருமான்) நீலநிறமான மிடறும் பிநாகமென்னும் வில்லும் யானைத்தோலுமுடையவராய், மிகுதியும் பெருமையையுடைய ரிஷபக்கொடியோடு மானையும் தழுவினவராய், வாசனைச்சாந்திருத்தலாலே பெரிய கூட்டமான வண்டுகள் பொருந்திய கொடிபோன்ற பார்வதிதேவியார் இடது பாகத்திலுடையவரா யிருத்தலாலும்; விஷத்தையுண்ட சிவபெருமானை ஒத்த சிகரத்தையுடைய மலைகள் அனந்தமாகும். (எ-று.)

சிலேடைவகையால் மலைக்கும் சிவபெருமானுக்கும் உவமை கற்பித்தலின் இது சிலேடையுவமை. (ங)

ச. வடம்படைத்துநால்வாயுடன்றாமரைமருவித
தடம்படக்கனவாரணம்பயின்றிடுந்தகையால்
கடம்படப்பலவளந்தருமலைகள்சூழ்கடற்பார்
இடம்படைத்தருணான்முகக்கடவுளுமெனலாம்.

(இ-ள்.) (மலைகள்) வட்டவடிவத்தைப்படைத்து, யானையுடனே தாவுகின்ற மரைகள் பொருந்திப், பக்கச்சாரலில் பெரிய பன்றிகள் சஞ்சரிக்குந் தன்மையினாலும; (பிரமன்) உலகைப் படைத்து, நான்கு வாயுடன தாமரையிலிருந்து, விரியுமபடி பெருமையுடைய வேதத்தைப்பயிலும் பெருமையாலும்; காடுகளுண்டாகிப் பலவளங்களையுங் கொடுக்கும் மலைகள், கடல்சூழ்ந்த பூமியைப்படைத்தருளிய நான்குமுகக்கடவுளாகிய பிரமனுக்குச் சமானமெனறுஞ் சொல்லலாம. (எ-று.) இதுவும் சிலேடையுவமை. (ச)

ரு. தாழைமாவருகைக்குலம்பூகதந்தமாலம்
வாழைவஞ்சுளமரவமேயாம்பிரம்வகுளம்
நீழையாண்மலர்மணத்தையெண்டிசைவயினிலாமாப்
பூழையங்கடாத்தளிககருள்வளத்தபல்பொருப்பே.

(இ-ள்.) தாழைமரம், மாமரம், பலாமரக் கூட்டம், கமுகமரம், தமாலமரம், வாழைமரம், அசோகமரம், குங்குமமரம், புளியமரம், மகிழமரம் என்னுமிவற்றின் பிரகாசமிக்க மலரின்வாசனையை, எட்டுத்திசைகளிலும் நிலைபெறறிருககும் யானைகளின் அழகிய மதசலத்தில் மொய்த்திருக்கும் வண்டுகளுககுக் கொடுக்கும வளப்பத்தையுடைய மலைகள் பலவாகும். (எ-று.)

நீழை-நீழல் என்பது எதுகைபற்றி மருவியது. நீழல்- ஒளி, பிரகாசம். பூழை-துவாரம். (ரு)

வேறு.

சு. செழுமணிநித்திலத்திரளின்சோதியால்
விழுமியபணியுமிழ்மணியின்வெய்யிலால்
எழுமதியினனிவரிரண்டுகாலமுந்
தழுவுமதறிவதுந்தண்மைவெம்மையால்.

(இ-ள்.) செழிப்புள்ள முத்துத்திரள்களின் சோதியாலும் சிரேஷ்டமான நாகங்களுமிழ்ந்த மாணிக்கத்தின் ஒளியாலும் (எப்பொழுதும் பிரகாசமாய்ப் பகல் இரவு விளங்காமையின்), உதயமாகும் சந்திர சூரியர்களாகிய இவர்கள் இரவிலும் பகலிலும் அங்கு தழுவுவதை யறிவதும் முறையே அவர்களுடைய தண்மையாலும் வெம்மையாலுமேயாம். (எ-று.) (சு)

எ. நரந்தமுமுருகுயிர்த்துதிர்த்தநற்கனி
நிரந்தரம்வரையரமகளிர்நீண்மலர்க்
கரந்தனிற்பிழைத்தபொற்கழுங்குகந்துகம்
பரந்தபோலருவியிற்பரப்பும்பாங்கெலாம்.

(இ-ள்.) (அங்குள்ள) நாரத்தையும் வாசனைவீசி உதிர்த்த நல்ல கனிகளை, எப்போதும் வரையரமகளிரது பெரிய மலர்க்கைகளினின்றுந்தவறிய அழகிய கழங்கும் பந்தும் பரவியதுபோல, பக்கங்களிலெல்லாம் அருவிகளாற் பரப்பும். (எ-று.) (எ)

அ. வான்றவழ்முகிலளாய்வருக்கைவாழைமா
ஈன்றருள்கனிகணெக்கிழிந்தசாற்றினல்
தேன்றவழ்ந்தளியிசைமுரலசசிந்துவே
போன்றகணியின்களைபுரளுமெங்கணும்.

(இ-ள்.) ஆகாயத்திற்றவழும் மேகத்தையளாவிப் பலா வாழை மா என்னு மரங்கள் தந்த கனிகள் பிளந்து (அவற்றினின்று) இறங்கிய சாற்றினல, தேன் தவழ்ந்து வண்டுகளிசைபாடச், சமுத்திரமே போன்று, எவவிடத்திலும் வயல்களின் களை புரண்டுகொண்டிருக்கும். (எ-று.) (அ)

கூ. வெண்ணிலவுமிழ்மணித்தரளம்வேழத்தின்
கண்ணிலவயின்வயிறுகுதலகார்முகம்
எண்ணிலவனங்கவேளெடுத்துமோகமே
உண்ணிலவலர்க்கணைபொழிதலொக்குமே.

(இ-ள்.) மூங்கிலின்கண் வெண்மையான நிலவு வீசும் அழகிய முத்துக்கள் கீழே இடங்கடோறும் சிந்துதலான தோற்றம், மன்மதன் கணக்கற்ற வில்லெடுத்து மோகமே தம்முள் நிலவுதலான மலர்க்கணைகளைப் பொழிதலை யொத்திருக்கும். (எ-று.) (கூ)

க0. தடந்தொறுங்கயலெழச்செய்யதாமரை
அடர்ந்தசெம்முகையுடைந்தலரப்புட்குலம்
படர்ந்ததுகனலெனுவெருவிப்பார்ப்பினம்
தொடர்ந்துபின்னரற்றிடசசோலைசேருமே.

(இ-ள்.) தடாகங்கள் தோறும் கயல்மீன்கள் குதித்தலாலே செந்தாமரையின் இதழ் நெருங்கிய சிவந்த பருவமான அரும்பு உடைந்து மலர்ந்தனவாக, (அது கண்ட) பறவைக்கூட்டம், அக்கினி பரவியதென்று பயந்து, அவற்றின் குஞ்சுகள் பின்தொடர்ந்து கூவாநிற்கச், சோலையை அடைவனவாகும். (எ-று.) (க0)

கக. தாமரையுமிழ்ந்தவெண்டரளந்தண்ணடை
மீமலிதரவொளிவிளங்குமோடைகள்
காமர்தாரகைக்கணங்கலந்தவானிழல்
தேமலர்ப்பொழிலினுட்டெரிவதொககுமே.

(இ-ள்.) தாமரைகள் உமிழ்ந்த வெண்மையான முத்துக்கள் குளிர்ந்த இலைகளின் மீது அதிகமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஓடைகள், அழகிய நக்ஷத்திரக்கூட்டங்கள் கூடிய ஆகாயத்தினது நிழல், தேனையுடைய மலர்ச் சோலையிற் றெரிவதை யொத்திருக்கும். (எ-று) (கக)

கஉ. விதுவெனுங்கடவுடன்விருப்பமாதர்மேற்
பதுமநாயகன்கரம்பயிலுமென்றுபார்
முதுபொழிலரணெனுமுன்னிவைத்தல்போல்
புதுமலருகுத்திருள்பொதுளும்பொங்கரே.

(இ-ள்) சந்திரனென்னுங் கடவுள், தனது விருப்பத்துக் குரிய மாதர்களாகிய அல்லி முதலிய மலர்கள் மீது தாமரைக்கு நாயகனாகிய சூரியனது

கைகள் (கிரணங்கள்) பொருந்துமென்று (அஞ்சி), பூமியிற் பழமையான பொழிலே காவலெனறு எண்ணி வைத்தது போலச், சோலைகள் புதிய மலர்களைச் சிந்தி இருள் நெருங்கியிருக்கும். (எ-று.) (கஉ)

[திருவஞ்சிக்கள நகரச்சிறப்பு.]

கங. இனையதோர்கேரளநாட்டில்யாரினும்
புனைவருந்தகையொடும்பொலியுமோர்பதி
நனைவரியளியினரன்றருந்துபூஞ
சினைகெழுபொழில்பயிறிருவஞ்சிக்களம்.

(இ-ள்.) இத்தன்மைத்தான ஒப்பற்ற கேரள நாட்டில் எவராலும் புனைந்துரைப்பதற்கரிய பெருமையோடும் ஓர் நகரம் விளங்காநிற்கும். (அது) அரும்புகளில் வரிசையுடைய வண்டுக்கூட்டங்கள் ஒலி செய்யா நின்று தேனையுண்ணும் பூங்கிளைகளையுடைய சோலைகள் சூழ்ந்த திருவஞ்சிக் களமாகும். (எ-று.) (கங)

வேறு.

கச. வளங்கொண்மேருமால்வரையின்மீதலகிலாவடிவாய்
விளங்குசெங்கதிர்வியப்பநூல்விதிவழாமேடைத்
தளங்கள்பொற்றகட்டிடையிடைசெம்மணிதயங்க
வுளங்கவர்ந்துவானுலகுளோர்வியந்திடவோங்கும்.

(இ-ள்.) வளங்களைக் கொண்டிருக்கும் மகாமேருவின்மேலே கணக் கில்லாத வடிவமாய விளங்கும் சூரியன் ஆச்சரியப்படும்படி, சிற்பநூலின் விதிமுறை வழுவாத உப்பரிகைகள், பொற்றகட்டினிடையிடையில் மாணிக் கம் ஒளிவிட, எல்லாருள்ளத்தையுங் கவர்ந்து, தேவலோகத்திலுள்ளவர் களும் வியக்கும்படி உயர்ந்திருக்கும். (எ-று.) (கச)

கரு. சுந்தரப்பணிமணிமரகதத்தினூற்றொழிலோர்
தந்தபற்பலபடிகமாடங்கள்வான்றயங்கல்
நந்தலாதநண்புடைமையாற்பருதியைநாடிக்
கந்தவாரிசத்தடமிசைநிவந்தவேகடுக்கும்.

(இ-ள்.) அழகிய நாகங்களின் மாணிக்கத்தாலும் மரகதத்தாலும் சிற்ப நூற்றொழில் வல்லோர் செய்த பற்பலவாகிய படிக மாடங்கள் ஆகாயத்தில் விளங்குதல், கெடாத நட்புடைமை யாலே சூரியனை நாடி வாசனையுடைய தாமரைத்தடாகங்கள் மேலெழுந்ததை யொத்திருக்கும். (எ-று.) (கரு)

கசு. கூந்தனேர்பொழின்மலர்மதுகரங்கடாங்கொழித்துப்
போந்ததென்றலோடளியினஞ்சாளரம்புகுதாச்
சேந்தமாலையம்பொழுதின்மாளிகைதொறுஞ்செறியும்
பாந்தளல்குலார்விழிகுவலயமெனப்பயிலும்.

(இ-ள்.) மாதரது கூந்தலை யொத்த சோலையிலுள்ள மலரிலுள்ள தேனையும் யானைமதத்தையும் வாரிவந்த தென்றற்காற்றோடு வண்டுக்கூட்டம் சாளரத்திற் புகுந்து, சிவந்த மாலைப்பொழுதில் மாளிகைகள் தோறும் பொருந்தியிருக்கும் பாந்தள்போன்ற அல்குலையுடைய பெண்களது கண்களை நீலோற்பலம் என்றெண்ணி அவற்றிற் பொருந்தும். (எ-று.) (கசு)

கஎ. அங்கமாதிமூவகைவழாநடித்திடுமரங்கிற்
பொங்கலும்பணைமுகிலெனக்குயினிரைபொழிலின்
தங்கணாயகர்த்தணந்துளமாதரிற்றளரும்
கொங்கலர்ப்புயமணைந்தவரொனமயில்குனிக்கும்.

(இ-ள்.) சரீரமுதலிய மூவகையுறுப்புக்கள் தவறுமல் நடநஞ்செய்யும் நாடகசாலையில் வாத்தியங்கள் கோஷித்தலும், அதை மேகமுழக்க மென்றெண்ணிப், பொழிலின் கண் குயிற்கூட்டங்கள், தங்கள் கணவரை நீங்கியுள்ள பெண்கள் போலத், தளரும்; வாசனையுள்ள மலர்மாலையணிந்த புயங்களையுடைய புருஷர்களை யணைந்த பெண்கள்போல, மயில்கள் ஆடும். (எ-று.) (கஎ)

அங்கமாதி மூவகை: சரீரம், பண், இசைக்கருவி என்பன.

கஅ. அளக்கருங்கிரியோரிடத்தமைந்தபோலணிகள்
கிளக்கருந்தகைமாடத்துண்மங்கையர்கெழுமித்
துளக்குகால்பொரநந்துருமணியினுற்றொகுத்த
விளக்கமெண்ணிலவிருளகெட வயின்வயின்விளங்கும்.

(இ-ள்.) கணக்கிடற்கரிய மலைகள் ஓரிடத்தில் அமைந்திருப்பனபோன்ற சொல்வதற்கரிய அழகையுடைய சிறந்த மாடங்களில் பெண்கள் கூடி நடையாடுங் கால்கள் ஒன்றோடொன்றுதாக்க அதனால் சிந்திய இரத்தினங்களாற் கூட்டிய நந்தா விளக்குகள் கணக்கற்றனவாய இருள்கெடும்படி இடங்கடோறும் விளங்காநிற்கும். (எ-று.) (கஅ)

ககூ. அலகில்லைபைத்தலையுரகர்மாநகரளவாழ்ந்து
நிலமிசைப்பளிங்கெனத்திகழகழிநீர்நிறைந்த
பலவிதழ்ச்செழுந்தாமரைமலர்களப்பணியின்
இலகுபைத்தலைப்பதுமராகச்சுவடெனலாம்.

(இ-ள்.) கணக்கற்ற படத்தோடு கூடிய தலைகளையுடைய நாகரது உலகம் வரையில் ஆழமுடையதாகி நிலத்தின்மீது பளிங்கைப்போலத் திகழும் அகழி நீரில் நிறைந்த பலவிதழ்களையுடைய செந்தாமரை மலர்களை, அந்தநாகரது பிரகாசமுடைய படத்தலையிலுள்ள பதுமராகத்தின் சுவடு எனறு சொல்லலாகும். (எ-று.) (ககூ)

உ0. கிரணவெண்மதிவிமானமுமெழுபரிகெழீஇய
தரணிவானவனிரதமுங்கடக்கருந்தகைசால்
அரணமுற்றுபொற்றுகிற்கொடிகணிப்பிலவமரர்
திரணடுங்கவான்புகுதராமின்னெனத்திகழும்.

(இ-ள்.) பிரகாசத்தையுடைய வெண்மையான சந்திரனது விமானமும் எழுகுதிரைகளைப் பூண்ட சூரியனது இரதமும் கடப்பதற்கரிய பெருமைமிகுந்த மதிலின்கண் நிறைந்து கணக்கற்றனவான அழகிய சீலைக்கொடிகள், தேவர்கூட்டம் நடுங்கும்படி தேவலோகத்திற் புகுந்து, மின்னலைப் போல விளங்கியிருக்கும். (எ-று.) (உ0)

உக. உயர்ந்தபொன்முடிக்கதிர்மணிக்கூவிரத்துருளி
சயர்தனத்துடன்கரிபரிமுதலியதானை

இயங்குபன்மணிவீதியுமாடத்தினெழிலும்
வியந்துவிண்ணுளோர்விரும்பவம்மாநகர்விளங்கும்.

(இ-ள்.) உயர்ந்த பொன்னாற்செய்த முடியும் பிரகாசமுடைய மணிமயமான துகிற்கொடியும் உருளையுமுடைய தேருடன் யானை குதிரை முதலிய சேனைகள் சஞ்சரிக்கும் பலமணிமயமான வீதியையும், மாடங்களினழகையும் தேவலோகவாசிகளும் வியப்படைந்து விரும்புமாறு அந்தப்பெரிய திருவஞ்சிக்கள நகரம் விளங்கிக்கொண்டிருக்கும். (எ-று.) (உக)

[அந்நகரரசன் சிறப்பு.]

உஉ நவிலருந்தகையினையமாநகர்க்கிறைநனியார்
புவிநிகழ்ந்துயர்பொறையினன்புனைமணிப்புயத்தான்
அவிர்செழுங்கதிர்த்திகிரிமாதவனணியலர்த்தாட்
கவினினைந்துவாழ்சுந்தரன்கலைக்கடல்கடந்தோன்.

(இ-ள்.) சொல்வதற்கரிய பெருமையையுடைய இந்நகரரசன், மிகப் பொருந்திய பூமியைப்போல நிகழ்ந்து உயர்ந்த பொறுமையையுடையவன், இரத்தினாபரணங்கள் பூண்ட புயத்தையுடையவன், விளங்கும் செழுமையான ஒளியையுடைய திருச்சக்கரத்தைத் தரித்த பெருமானது அழகிய மலர்போன்ற திருவடிகளின் பெருமையைச் சிந்தித்து வாழும் சுந்தரமுறரோன், சாஸ்திரமாகிய கடலைக்கடந்தவன, (எ-று.) (உஉ)

உங. தாருவைந்துடனவநிதிகேட்டவைதரவேழ்
பாருமொய்ம்பினிற்றாங்கியோர்குடைநிழல்பரப்பி
நேருமன்னவருயிர்கவர்வேலினனிருபர்
மேருவெண்மதிகுலத்தவதரித்தருளவேந்தன்.

(இ-ள்.) பஞ்சதருக்களுடன் நவநிதிகளும் கேட்டவைகளைத்தரும்படி ஏழுலகங்களையும் தன்வலிமையாலே தாங்கித், தனது ஒருகுடையின் நிழலை எங்கும்பரப்பி, யுத்தத்தில் நேர்ந்த மன்னவர்களது உயிரையபகரிக்கும் வேலையுடையவன், அரசர்களில் மகாமேருபோன்றவன், பரிசுத்தமான சந்திரவம்சத்திலவதரித்த வேந்தன், (எ-று.) (உங)

உச. புரந்தரன்புலவோர்குழாம்புரவலர்தவத்தோர்
நிரந்தரம்புகழ்நீதியானமனுவினைநிகர்வோன்
சுரந்ததண்ணளிநிறைவடிவாகியதோன்றல்
சரந்தருஞ்சிலைக்கொடியினன்பெண்ணையந்தாமன்.

(இ-ள்.) இந்திரனும் தேவர்கூட்டமும் அரசர்களும் தவசிகளும் எப்போதும் புகழும் நீதிமுறைமையாலே மனுவை ஒப்பவன், சுரத்தலான குளிர்ந்த அன்புதானே நிறைந்த வடிவமாகிய தோன்றல், பாணங்களைப் பிரயோகிக்கும் விற்கொடியையுடையவன், அழகிய பனம்பூ மாலையைத்தரித்தவன், (எ-று.) (உச)

உரு. பஞ்சின்மெல்லடிப்பரிபுரப்பாவையர்பார்வை
நஞ்சினுக்கமிர்தாயதோர்வனப்பினன்ஞாயில்
இஞ்சிகோபுரம்பலதழீஇயிமையவர்புரிநேர்
வஞ்சிமாநகர்மன்னவனெவரினும்வலியோன்.

(இ-ள்.) பஞ்சினும் மிருதுவாகிய அடியில் பரிபுரத்தையணிந்த பெண்களது பார்வையாகிய விஷத்துக்கு அமிர்தமாகிய ஒப்பற்ற அழகையுடையவன், உறுப்புகளமைந்த மதில்களும் கோபுரங்களும் பலகூடித் தேவலோகத்துக்குச் சமானமாகிய வஞ்சிமாநகரத்து மன்னவன், பிறரெவரினும் வலிமையுள்ளவன, (எ-று.) (உரு)

வேறு.

உசு. பொறையுடன்றருமமும்புகழும்வாய்மையும்
நிறையுமைம்பொறிகளாகிகமமேபுகல்
குறைவிலாஞானமெய்யாகக்கோன்மனு
முறைதவாமகிதலமுழுதுங்காப்பவன்.

(இ-ள்.) பொறுமையுடன் தருமமும் கீர்த்தியும் உண்மையும் நிறையும் ஐம்பொறிகளாகவும், வேதமே சொல்லும் குறைவில்லாத ஞானமானது சரீரமாகவுங்கொண்டு, செங்கோலாலே மனுமுறை கெடாது உலகமுழுதும் காப்பவன், (எ-று.) (உசு)

கோனுகிய மனு கூறிய முறை தவருது எனவுமாம்.

உஎ. கலியிருடிரந்துதண்கலைநிறைந்துசீர்
பொலிதரும்புகழ்நிலாவிரிகருமபொற்பினுல்
வலிகெழுதிரள்புயமன்னர்மன்னவன்
ஒலிகடற்புவியுடுபதியுமொத்தனன்.

(இ-ள்.) (சந்திரன்) வலிய இருளை நீக்கித் தண்ணிய கலைகள் நிரம்பி செம்மை விளங்கும் புகழத்தக்க சந்திரிகையை வீசும் பொற்பினுலும், (இவன்) வறுமையாகிய இருளை நீக்கிச் சாந்தமான சாஸ்திரவுணர்ச்சி நிரம்பி செம்மை விளங்கும புகழாகிய சந்திரிகையைப் பரப்பும் பொற்பினுலும், வலிமைமிகுந்த திரண்ட புயத்தையுடைய மனனர் மன்னவன், ஒலியயும் கடல் சூழ்ந்த புவியின்கண் சந்திரனையு மொத்தனன். (எ-று.) (உஎ)

தண்கலை யென்பதை, அரசனுக்குச் சாந்தமான சாஸ்திர வுணர்ச்சியும், சந்திரனுக்குக் குளிர்ந்த கலைகளுமாகக் கொள்க.

உஅ. பொருந்திறலெழுபரிபூட்டிவையமீ
திருந்தலம்வருகதிரிருளைநீககலான்
அருந்திறன்மடங்கலாதனத்தினல்கியே
திருந்தியம்புவிப்பகையிருளைத்தீர்த்தனன்.

(இ-ள்.) பொருதலான வலிமையையுடைய ஏழு குதிரைகளைப்பூட்டித் தேரின்மீதிருந்து திரிந்துவரும் சூரியன் இருளை மீண்டும் வாராது நீக்கமாட்டான்; (இவ்வரசனே) அரிய வலிமையையுடைய சிம்மாசனத்தில் தங்கியிருந்தே அழகிய பூமிதிருந்தப் பகையாகிய இருளை மீண்டும் வாராது தீர்த்தனன. (எ-று.) திருந்தி-செயவெனெச்சத் திரிபு. (உஅ)

உகூ. இசைதருமகமெலாமியற்றியெட்டெனும்
திசைதொறுந்திகிரியைச்செலுத்தித்திண்டிறல்

வசையிறன்புகழ்நிலைநிறுத்திமாண்புற
அசைவில்பொற்றம்பநாட்டவனிதாங்கினான்.

(இ-ள்.) கீர்த்தியைத்தரும் யாகங்களையெல்லாஞ் செய்து, எட்டுத் திசைகள்தோறும் தனது ஆக்கினைச் சக்கரத்தைச் செலுத்தித், தனது திண்ணிய வலியையும் குற்றமில்லாத புகழையும் நிலைநிறுத்தி மாட்சிமையுண்டாம்படி காற்றிலசைவதான விற்கொடி பொருந்திய பொன்னாலான ஸ்தம்பத்தை நாட்டிய பூமியைத்தாங்கினான். (எ-று.) (உக)

[கவுத்துவமணி அரசியின் கருப்பத்திற் சேர்ந்தது.]

ஙூ0. துங்கவெண்மதிகுலந்தொல்லைமாநிலம்
சங்கரன்றருதமிழ்சால்புற்றோங்கிட
அங்கவன்மனைவிதனகட்டிலாதிமால்
செங்கவுத்துவமணிகருவிற்சேர்ந்ததால்.

(இ-ள்.) பரிசுத்தமாய் வெண்மையான சந்திரகுலமும் பழமையான பெரிய பூமியும் சங்கரன தந்த தமிழும் பெருமையுற்று உயருமாறு, அங்கு அவ்வரசனது மனைவியின் வயிற்றினுள்ளே முதல்வனை பெருமானது சிவந்த கவுஸ்துபமணி கர்ப்பாசயத்திற் சேர்ந்தது. (எ-று.) (ஙூ0)

ஙூக. நெருங்குபூண்முலைமுகங்கறுத்துநேர்ந்தநூல்
மருங்குலுந்தடித்துணவிகந்துவாய்விளர்த்
திருங்கயல்விழிகுழிந்திரவிபோலொளி
தருங்குழைவனிதையுங்கருப்பந்தாங்கினாள்.

(இ-ள்.) நெருங்கிய ஆபரணமணிந்த ஸ்தனங்களின் முகங் கறுக்கவும், நுட்பமான நூல்போன்ற இடையும் பருக்கவும், உணவு வெறுக்கவும், வாய வெளுக்கவும், பெரிய கயல்போன்ற கண்கள் குழியவும், சூரியன்போலொளியைத்தரும் குழையையணிந்த அம்மாதும் கருப்பந் தாங்கினள். (எ-று.) (ஙூக)

[குலசேகராழ்வார் திருவவதாரம்.]

ஙூஉ. அணிதிகழமகபுனர்பூசததநதணன்
திணிசுடர்ப்பிரசுரணிராசிசேர்வுறப்
பணியுமிழ்மணியெனப்பரவைதோன்றிய
மணியிளங்கதிரொனமகவையீன்றனள்.

(இ-ள்.) அழகு விளங்கும் மாசிமாதத்துப் புனர்பூச நக்ஷத்திரத்தில் பிரகஸ்பதியும் ஒளிமிகுதியையுடைய சுக்கிரனும் இராசியிற் சேர்ந்திருக்க அக்காலத்தில், பாம்பு உமிழ்ந்த மாணிக்கம்போலவும், சமுத்திரத்திற் றோன்றிய அழகிய இளஞ்சூரியன்போலவும், ஒரு குழந்தையைப் பெற்றனள். (எ-று.) (ஙூஉ)

ஙூஙூ. சேடியரொருவர்முன்னொருவர்செம்மணிக்
கோடிகமதுமலர்க்கூந்தலாழ்தர
வாடியகொடியிடைவருந்தமுன்னலார்
ஓடினரரசனுக்கோகைகூறவே.

(இ-ள்.) செம்மையான அழகிய ஆடையும் தேனையுடைய மலர்களை யணிந்த கூந்தலும் சோரவும், வாடிய கொடிபோன்ற இடை வருந்தவும், (இவைகளை) எண்ணாதவராகி, அரசனுக்கு இச்சந்தோஷ செய்தியைச் சொல்லச், சேடியர், ஒருவர்முன் னொருவராக, ஓடினர். (எ-று.) (கூகூ)

கூச. கேட்டலுதிருபனுங்கிளாபொற்குன்றெனத்
தோட்டடங்கிளாதரத்துலங்குபொற்பணி
ஈட்டமுத்தணிவடமிலக்கவெண்ணில
வேட்டவைமுகிற்கணம்வீழநல்கினன்.

(இ-ள்.) (இச்செயதி) செவிப்படுதலும், அரசனும் உயர்ந்த பொற்குன்றுபோல் விசாலமான புயங்கள் பூரிக்க, மேகக்கூட்டங்களும் தோற்றுத் தாழுமாறு, பிரகாசமுடைய பொன்னாபரணங்களின் கூட்டத்தையும், அழகிய முத்துவடங்களையும், கணக்கில்லாத ஆடைகளையும், மற்றும் விரும்பினவற்றையும் அவர்களுக்குக் கொடுத்தனன். (எ-று.) (கூச)

[ஜாதகருமம்.]

கூரு. பொருநைமாநதிப்புனல்படிந்துபூசுரர்க்
கருமறைமுறைவழாதலகிருனங்கள்
மருவியகருணையோடளித்துமைந்தனை
உருகுகாதலினனியுவந்துநோக்கினன்.

(இ-ள்.) (பின்பு) பொருநையாற்றின் சலத்தில் நீராடிப், பிராமணர்களுக்கு அரிய வேதமுறை தவறாமல் கணக்கற்ற தானங்களைப் பொருந்திய கருணையோடு கொடுத்து, மிகவுவந்து, உருகும் அன்புடனே தன் மைந்தனைப் பார்த்தனன். (எ-று.) (கூரு)

கூசா. மூழுத்தநாளிராசியோடோரைமூதலர்
விழுத்தகைமுனிவனோர்வேள்வியந்தணர்
பழுத்தபேரன்பினூற்பழுதிலாமைதேர்ந்
தெழுத்தினிற்சாதகமியற்றினாரரோ.

(இ-ள்.) பழமையான தாமரைமலரிலிருக்கும் பெருஞ்சிறப்பையுடைய பிரமதேவனுக்குச் சமானமான யாகத்துக்குரிய பிராமணர்கள், ஆழ்வார் அவதரித்த நன்மை நிறைந்த நாள்-இராசி-சமயம் இவைகளில் தோஷமில்லாமையை யறிந்து, முதிர்ச்சியையுடைய பேரன்புடன் சாதகமெழுதினார்கள். (எ-று.) (கூசா)

[நாமகரணம்.]

கூஎ. பன்னிருநாளிறந்ததற்பின்பார்புகழ்
மன்னிளங்குமரனைமறைவலாளர்முன்
சென்னிநாமுறக்குலசேகரப்பெயர்
மின்னிலைவேலினன்விருப்பிற்சாத்தினன்.

(இ-ள்.) பன்னிருநாளுங் கடந்தபின், பூமியில் புகழ் நிலைபெறும் அவ்விளங்குமரனுக்கு, வேதம் வல்லார்களெதிரிலே, சோழன் பயமடையும்படி, மின்னும் அச்சவடிவான வேலைத்தரித்த அரசன், விருப்பத்தோடு, குலசேகரன் என்னுந் திருநாமஞ் சாத்தினன். (எ-று.)

மின் நிலைத்தலான வேல் எனவுமாம். (கூஎ)

[சவுளம், உபநயனம்.]

௩௮. சந்தநான்மறைமுறைசவுளமாயபின்
நந்தலாவிதியுபநயனமுற்றியே
விந்தமேபுயமெனவிரும்பவிந்தைகோ
மைந்தனும்வளரிளமதியின்மன்னினுன்.

(இ-ள்.) ஸ்வரத்தையுடைய நான்குவேத முறைப்படி சவுளமான பிறகு, கெடாத விதிப்படி உபநயனமுமுடிந்து, இச்குமரனது புயம் பர்வதமோ என்று விரும்பும்படி விந்தையுடைய தலைமைபெற்ற மைந்தரும் வளரும் இளஞ் சந்திரனைப்போல் விளங்கினர். (எ-று.) (௩௮)

[வித்தியாப்பியாசம்.]

௩௯. சுருதியின்கரைகடந்தலகிறுன்மைநூல
கருதியபொருளெலாந்தெரிந்துகாமர்சீர்
தருதிருவடிவினுற்சலதிமீதெழும்
பருதியினவனியோர்பரவலாயினன்.

(இ-ள்.) வேதாந்தார்த்தங்களை யறிந்து, கணக்கற்ற பழமையான நூல்கள் துணிந்த பொருள்களை யெல்லா முணர்ந்து, அழகிய சிறப்பைத் தரும் தமது திருமேனியினாலே கடலிற் றோன்றும் சூரியனைப் போன்று பூமியிலுள்ளோர் வணங்கும்படி யாயினர். (எ-று.) (௩௯)

௪0. சயந்தருங்கொய்யுளைதாழ்கடாசலம்
வயந்தரும்வாளயில்வரிவினுன்முறை
நயந்தருமேழிசைநலத்திலவிஞசையர்
வியந்தருள்புகழ்திசைவிளங்கத்தோன்றினுன்.

(இ-ள்.) வெற்றியைத்தரும் குதிரை, தாழ்ந்து விழும் மதத்தையுடைய மலைபோன்ற யானை, வலிமையுடைய வாள், வேல், கட்டுக ளமைந்த வில், ஆகிய இவை ஞானத்திலும் இன்பந்தருவதான ஏழிசைநலத்திலும் அவ்வத் துறையில் வல்ல புலவர்களும் வியக்கும (தமது) கீர்த்தி, திசைகளில் விளங்கும்படி தோன்றினர். (எ-று.)

குதிரையேற்றம் யானையேற்றம் வாட்போர் வேற்போர் விற்போர் என்பவைகளைச் சாஸ்திரரீதியாக விரும்பிக்கற்று அரிய ஏழிசைநலத்தில் வித்தியாதரரும் வியத்தலான கீர்த்தி எண்டிசையும் விளங்க வீற்றிருந்தார் எனவுமாம். (௪0)

[தவஞ் செய்யவிரும்பிய தந்தை மைந்தருக்கு முடி சூட்டுதல்.]

௪௧. ஆதிநூன்முறைதவாவருளுஞானமும்
நீதியுந்தருமமுநிறைந்தகல்வியும்
ஏதிவார்சிலைபயில்வெற்றின்சீலமும்
பேதியாவாய்மையும்பீடும்வீரமும்

(இ-ள்.) ஆதிநூலாகிய வேதத்திற் சொல்லும் முறைமை தவறாத அருளும் ஞானமும் நீதியும் தருமமும் நிறைவுற்ற கல்வியும் ஆயுதம் நீண்ட வில் ஆகிய இவைகளைப்பயிலும் சீலமும் பேதியாத உண்மையும் பெருமையும் வீரமும் (எ-று) (௪௧)

சஉ. பிறங்கியகுமரனைநோக்கிப்பேணலார்
திறங்கிளராதிவன்செலுத்துங்கோலென
அறங்கிளர்தவந்தனதாக்கவன்பினுன்
மறங்கிளர்வேலினுன்மகுடஞ்சூட்டினுன்.

(இ-ள்) விளங்கப்பெற்ற குமாரரைப் பார்த்து, சத்துருக்களது வலிமை யோங்காமல் இவர் செங்கோல் செலுத்துவரென்று, வீர மதிகரிக்கும் வேலைத் தரித்த அரசன், அருளுடைமை முதலிய அறங்களா லுயர்ந்த தவஞ் செய்யவேண்டி அக்குமாரருக்கு அன்பினாலே மகுடாபிஷேகஞ் செய்வித்தனன். (எ-று.) (சஉ)

[இராச்சியபார மேற்றல்.]

சங. மாதிரக்கிரிவடமேருமால்வரை
ஆதியிறசேடனுமதிசயித்திட
மேதினிபபொறையுளவனைத்தும்வேய்ந்திடும்
போதினிறபுதல்வனும்புயததிற்றங்கினன்.

(இ-ள்.) திக்குகள்தோறு முள்ள பர்வதங்களும் வடக்கின்கண்ணுள்ள பெரிய மேருமலையும ஆதிசேஷரும் அதிசயிக்குமபடி, பூமியில் தாங்கவேண்டிய எவற்றையும், தாம் அணியும் புஷ்பத்தைப் போல, அக்குமாரரும் புயங்களால் தாங்கினர். (எ-று) (சங)

அதிசயித்தலாவது: திக்குப்பர்வதங்களும் மேருவும் ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேடனுமாகிய நாமெல்லோருந தாங்கலான பூபாரத்தை இவர் ஒருவராகவே அநாயாசமாகத் தாங்குகின்றனரே என வியததலாம.

[அரசாட்சி.]

சச. பகலவன்றனக்கிருளுடைந்தபான்மைபோல்
இகலவர்திசைதொறுமிரியல்போயிடப்
புகலருமாதிநூறருமம்பூசுரர்
அகமகிழ்தரவுலகளிக்குங்காலையில்

(இ-ள்.) சூரியனெதிரில் இருள் சிதைந்தாற்போல இவரெதிரில் பகைவர்கள திசைகள் தோறும் ஓடிப் போகுமாறும், சொல்வதற்கரிய வேதமும் தருமமும் அந்தணர்களும் அகமகிழுமாறும், உலகத்தைக் காத்து வரும் போது, (எ-று.) (சச)

[பாண்டியன் புத்திரியை மணந்தபின் பகவத் ஜ்ஞானம் பெறுதல்.]

சரு. அறைகழன்மீனவனருளுமாதினை
மறைபுகன்முறைவழாவதுவைசெய்தபின்
இறைகுலசேகரனீரொண்ணுண்டின்மால்
நறைமலரடிதொழுஞானமேயினன்.

(இ-ள்.) ஒலிக்கும் வீரகண்டையைத் தரித்த பாண்டியன் பெற்ற புத்திரியை வேதஞ்சொன்ன முறை தவறாது திருமண முடித்த பின், குலசேகராழ்வார் பதினாறுவயதில் பெருமானது தேனையுடைய மலர்போன்ற பாதங்களைத் தொழும் ஞானத்தை யடைந்தனர். (எ-று.) (சரு)

௪௬. அம்பரீடன்றுளவலங்கல்வீடணன்
உம்பர்தாழ்சவுனகனுருக்குமாங்கதன்
நம்பருள்வீடுமனயந்துபோற்றவே
இம்பரினிராகவனிடத்தன்பாயினன்.

(இ-ள்.) அம்பரீஷர்-திருத்துழாயமாலை கொண்ட விபீஷணர்-தேவர்கள் வணங்கும் சவுனகர்-உருக்குமாங்கதர்-பாண்டவர்கள் ௧ம்புதலாய் அவர்கட்குத்தேசியமான அருளைச்செய்த பீஷ்மாசாரியர் எனபவர்களும் விரும்பிப் போற்றுமாறு இவ்வுலகில் இராமபிரானிடத்து பக்தியுடையாராயினர். (எ-று.) (௪௬)

[இராமாயண காலக்ஷேபம்.]

௪௭. நாட்டநீர்பொழிய!மெய்புளகநண்ணுற
வாட்டமில்வரிசிலைமாவிராகவன்
தோட்டடம்புகழருந்தூயமாக்கதை
கேட்டனனனுதினங்கேடில்கீர்த்தியான்.

(இ-ள்.) அழிவில்லாத கீர்த்தியையுடைய ஆழ்வார், கண்களில் ஆநந்த நீர் பொழியவும், திருமேனியிற் புளகமுண்டாகவும், சோர்வில்லாத கட்டமைந்த சிலையினையுடைய இராமபிரானது தோள்வலிமையைச் சொல்லும் அருமையும் பரிசுத்தமுமான பெருமைமிகுந்த சரிதமாகிய இராமாயணத்தை அனுதினம் சிரவணம் பண்ணிவந்தனர். (எ-று.)

இராமாயணம் இராமபிரானது தோள்வலிமையைக் கூறுவதென்பதனை "நீடிய வரக்கர்சேனை நீறுபட்டழியவாகை, சூடிய சிலையிராமன் றோள்வலி" எனக் கம்பநாட்டாழ்வான் கட்டுரைத்ததனு லுணர்க. (௪௭)

[பாகவத ஆராதநம்.]

௪௮. அரங்கமால்வேங்கடமாதியாம்பதி
பரம்பியபரன்மலர்ப்பாதம்போற்றியே
புரந்தருள்பரமபாகவதர்ப்பூசைசெய்
தூரன்புயில்வானிழலுறழவைகுநாள்

(இ-ள்.) திருவரங்கம் பெருமையுடைய திருவேங்கடம் முதலிய திருப்பதிகளில் எழுந்தருளிய எம்பெருமானது மலர்போன்ற திருவடிகளை வணங்கி, தம்மை யாண்டருளும் பரமபாகவதர்களைப் பூசித்து, ஊக்கத்துடன் பயிலுமவரான ஆழ்வார், அவர்கள் நிழலைப்போல வாழும்போது, (எ-று.) (௪௮)

வேறு.

௪௯. தனிநுதற்றிருமண்சுண்ணந்தரித்துளோர்சங்கமாழி
புனிதநூற்புண்டரீகமணிதுழாய்பொலிபொற்றேளார்
பனிநிலாவனையவெண்பட்டுத்தரீயத்தர்பாசம்
முனிதரும்பரமபாகவதரவன்முன்னர்ச்சார்ந்தார்.

(இ-ள்.) ஒப்பற்ற நெற்றியில் திருமண் சாந்தத்தைத் தரித்தவர்களும், திருச்சங்கும் திருவாழியும் பரிசுத்தமான பவித்திர நூலும் தாமரை மணி

யும் திருத்துழாய் மாலையும் பொலிந்த அழகிய தோளுடையவர்களும், குளிர்ந்த சந்திரன்போன்ற வெண்பட்டுத்தரீய முடையவர்களுமாயப் பாசங்களை வெறுக்கும் சில பரமபாகவதர்கள், ஆழ்வார் எதிரில் வந்தனர். (எ-று.)

ரு0. சாண்டலுங்கடிதுவேந்தனெழுந்தவர்கமலபாதம்
நீண்டபேருவகைபொங்கப்பணிந்தெழுந்தயலினில்லா
ஆண்டணையிருத்திப்போதாலருச்சியாவடிகளன்பால்
ஈண்டணுகுறயான்முன்னாளெத்தவமிழைத்தேனென்றான்.

(இ-ள்.) அரசரான ஆழ்வார் (அவர்களைச்) சேவித்தவுடன் விரைவாயெழுந்து, அவர்களது கமலபாதங்களை விர்த்தியான பேரன்பு அதிகரிக்கப்பணிந்து எழுந்து பக்கத்தில் நின்று, அவர்களை அங்குள்ள ஆசனத்திலிருத்திப் புஷ்பங்களாலர்ச்சித்து, "ஸ்வாமிகாள்! அன்பினாலே (நீங்கள்) இங்கு எழுந்தருளுமாறு முற்காலத்தில் நான் என்னதவஞ் செயதேனோ" என்றனர். (எ-று.) (ரு0)

ருக. தாயினும்பரிந்துபாகவதரவன்றன்னைநோக்கிக்
கோயினம்பெருமாணையமபெறுகெனக்கூறிவாழ்த்தித்
தூயிருந்திருமண்குல்லைத்தொடைதரத்தூசினேற்றான்
நீயிருந்தருளகென்றேவவிருந்தனனிருபாகோவும.

(இ-ள்.) பாகவதர்கள், தாயினும் பரிவுடையவராய, ஆழ்வாரை நோக்கித் 'திருவரங்கம் பெரிய கோயிலிலெழுந்தருளிய நம்பெருமாள் பக்தியைப் பெறுக' என்று சொல்லி வாழ்த்திப், பரிசுத்தமான பெருமை மிகுந்த திருமண்ணும் திருத்துழாயமாலையுந் தர, (அவைகளை ஆழ்வார்) ஆடையால் ஏந்திக்கொண்டனர். பிறகு பாகவதர்கள் நீவிர் இருக்கவென்று நியமிக்க, அரசர்க்கரசரான ஆழ்வாரும் இருந்தனர். (எ-று.) (ருக)

[பாகவதர்களது வரவைத் தடுக்க அமைச்சராதியர் செய்த சூழ்ச்சி.]

ருஉ. நாளுமிப்பரிசுபாகவதர்வருநலத்தைநாடி
ஆளுமிப்புவியினீர்மையாயகிலாதரசன்வைகக்
கோளுறுத்தமைச்சர்வேந்தன்குலமுதற்குரவர்கூடிக்
கேளுமித்தகைமையென்னாவயிர்த்திவைகிளத்தலுற்றார்.

(இ-ள்.) தினந்தோறும் இவ்விதமாகப் பாகவதர்கள் வரும் நலத்தையே நாடிக்கொண்டு, தாம் ஆளும் இந்தப்பூமியின் தன்மையை யாராயாமல் அரசரான ஆழ்வாரிருக்க; அரசனை அறிவுறுத்தும் அமைச்சரும் அரசன் குலத்துக்கு முதன்மையான குரவரும் தம்மிற் கூடி (ஒருவரோடொருவர்) 'இக்காரியத்தைக் கேளுங்கள்' என்று கோபங்கொண்டு இவற்றைச் சொல்லத் தொடங்கினார்கள். (எ-று.) (ருஉ)

ருங. நீணிலம்புரக்குநீர்மைநீத்துமாலடியார்நேயம்
பேணினனிராமகாதைப்பெருங்கடன்மூழ்கினானால்
வாணிலையணிகந்தேர்மாமதகரிவகைமையோரான்
ஏணிலையயில்வேல்வேந்தனென்செய்வேமிதற்கின்றென்னா.

(இ-ள்.) 'வலிய நிலையையுடைய கூர்மையான வேலைத் தரித்த நமது அரசன், பெரிய உலகத்தைக் காக்கும் விதத்தைக் கைவிட்டுத், திருமாலடி

யார்களின் அன்பையே விரும்பி, இராமாயண மென்னும் பெருங்கடலில் மூழ்கினன்; வாளை நிலையாகக் கொண்ட சேனை, தேர், குதிரை, மதமுடைய யானைகளின வகை தொகைகளை யறியான்; இதற்கு இன்று யாது செய வோம்' என்று (யோசித்து), (எ-று.) (ருகூ)

ருச. வாயில்காப்பவரைக்கூவிவந்தபாகவதர்மன்னன்
கோயிலுடபுகாதவண்ணந்தடுமினென்றுரைப்பக்கொண்ட
வேயின்மதத்தைகயர்செங்கைவேத்திரமிலேச்சரவெங்கட
டீயினரன்றுதொட்டுச்சிறந்துளோரைச்செயிர்ப்பதானார்.

(இ-ள்.) ஆழ்வாரது வாயில்காவலாளரை யழைத்து, 'வந்த பாகவதர்கள் அரசனது அரண்மனையிற் புகாமற்படிக்குத் தடைசெய்வீர்களாக' என்று சொல்ல, மூங்கிற்றண்டை யுடையவர்களும் தமது செம்மையான கையில் பிரம்பை யணிந்தவர்களும கொடிய கண்களிற் கோபத் தீயை யுடையவர்களுமான அவ்வாயில் காவலாளர்கள் அன்று முதல் சிறந்த பாக வதர்களை (உள்ளேபோகாதபடி) கோபிப்பவரானார்கள். (எ-று.) (ருச)

[வாயில்காவலரைச் சீறி ஆழ்வார் பாகவதர்களை மீண்டும் எழுந்தருளச்செய்தல்.]

ருரு. தக்கபாகவதர்சின்னாட்டடன்மருங்கணுகக்காணான்
மிக்கபேரன்புதன்றூற்றூதரைவினவலோடும
அக்கணம்பணிந்துபோற்றியையகேளனையர்வாயில்
புக்கனர்தடுப்பக்கோயிற்புறத்திறுத்தனர்களென்றூர்.

(இ-ள்.) தமக்குத் தகுந்த பாகவதர்கள் சிலநாளாகத் தம்மிடம் வரக் காணாதவராய மிகப்பெரிய அன்பினாலே தூதரைக்கேட்டலும், அப்போது அவர்கள் வணங்கித்துதித்து, "ஸ்வாமீ! கேட்பீராக; அப்பாகவதர்கள் வாயிலிற் பிரவேசித்தார்கள்; (நாங்கள்) தடுக்கவே அரணமனைக்கு வெளியில் தங்கினார்கள்" என்றுரைத்தனர். (எ-று.) (ருரு)

ருசு. உரைத்தலுமிராமராமவெனவுளைத்துருகிக்கண்ணீர்
நிரைத்தெழுந்தெனதுபாவநினைப்பவுங்கொடியதென்று
வரைத்தடம்புயத்தன்வாயில்வந்தவாமலர்த்தாண்மீதே
தரைத்தடமௌலிதோயத்தாழ்ந்தனன்றரிக்ககில்லான்.

(இ-ள்.) என்று சேவகருரைத்தலும், ராம ராமவென்று கூறி மனமுருகிக், கண்களில் நீர்ததும்பி எழுந்து, எனது பாவம் நினைப்பதற்குங் கொடிது என்றுரைத்து, மலைபோன்ற விசாலமான புயங்களையுடைய ஆழ்வார், தமது வாயிலருகில் வந்திருந்த பாகவதர்களது மலர்போன்ற திருவடிகளின் மீது பூமியினிடத்துத் தமது பெரிய மகுடந்தோயும்படி வணங்கி, அவர்களை விட்டுத் தரிக்காதவராய், (எ-று.) (ருசு)

ருஎ. கருதருங்கொடுமைநாயேனிழைப்பினுங்கருத்துட்காணு
தருடவாதளித்துக்கோடலடிகளுக்கழகென்றேத்தாத்
திருவடித்துணைகள்சென்னிவிழிதனிற்சேர்த்திப்பின்னர்
உருமணிவாயில்காக்குமிலேச்சரையுருத்துநோக்கா

(இ-ள்.) "நினைப்பதற்கரிய கொடிய வினைகளை நாயேன் செய்யினும் (அவைகளைத்) திருவுள்ளத்திற் கொள்ளாது, (அடியேன்) கெடாது அருள் கொடுத்து (அடிமை) கொள்ளுதல் ஸ்வாமிகளுக்கு அழகாகும்" என்று துதித்துப், பாகவதர்களது இரண்டு திருவடிகளையும் தலையிலும் கண்களிலும் சேர்த்துக்கொண்டு, பிறகு சிரேஷ்டமான அழகிய வாயிலைக் காக்கும் காவலாளனைக் கோபித்துப் பார்த்து, (எ-று.) (ருஎ)

ருஅ. இன்றுதொட்டெனையாள்பாகவதர்வரினிறைஞ்சிப்போற்றிக்
குன்றுறழ்கோயினம்பால்விடுகலிரொன்னிற்கொற்றந்
துன்றுவாட்கிரையாசுற்றத்தொடுமுமைத்தமிப்பனென்னுத்
தன்றுணைவிழிநீரோடுமவரொடுங்கோயிற்சார்ந்தான்.

(இ-ள்.) "இன்றுமுதல் என்னையாளும் பாகவதர்கள் இங்கு வருவார்களாயின், அவர்களை வணங்கித்துதித்து மலைபோன்ற அரண்மனையில் நம்மிடத்துக்கு விடீர்களாயின் வெற்றியையுடைய வாளுக்கிரையாகச் சுற்றத்தோடும் உங்களைக் கொல்வேன்" என்றுரைத்துத் தமது இரண்டு கண்களில் நீரோடும் பாகவதர்களோடும் அரண்மனையைச் சார்ந்து, (எ-று.)

ருகூ. அருக்கியமுதலியாவுமருண்முறையாற்றியம்பொன்
தருகியபீடத்தன்னார்தமையினிதிருத்தித்தானும்
இருகருதியெனவத்தக்கோரேவலானிருந்திராமன்
திருக்கதையெனுந்தேனுக்குச்செவியுளருசுரும்புசெயதான்.

(இ-ள்.) அருக்கியம் முதலிய யாவும் கொடுக்கவேண்டிய முறைப்படி கொடுத்து, அழகிய பொன்னாற்செய்த பீடத்தில் அவர்களை நன்கெழுந்தருளப்பண்ணித், தாமும் அம்மேலோர் இருப்பீராக வென்றுரைக்க அந்த நியமனத்தின்படி இருந்து, சக்கரவர்த்தித் திருமகனாரது திருக்கதையாகிய இராமாயணமென்னும் தேனையுண்ணத தமது செவியையும உள்ளத்தையும் வண்டுகளாகச் செயதனர். (எ-று.) (ருகூ)

*ஒருதினத்தினிற் காடுறைந்திடுமிரா கவனுடுகரனாதி
நிருதர்போர்செயவருதலுந்தனியொருவில்லொடுநெடியோனும்
பொருதிடறசென்றுப்போயினனென்பதைக்கேட்டலும்புவியாள்வோன்
வருதிர்நம்படைவயவருஞ்சேனையுமெனப்பரிமாவேறி

(இ-ள்.) ஒருதினம் தண்டகாரண்ணியத்தில் உறைந்த இராகவபிரானுடன் கரன் முதலிய அரக்கர் போர்செயய வருதலும், ஒற்றைக் கோதண்டத்துடன் உயர்ந்த இராமபிரானும் யுத்தஞ் செயவதற்காகத் தனியே சென்றனர் என்பதை உலகையாண்டருளும் ஆழ்வார் கேட்குதலும் நமது ஆயுதங்களையுடைய வீரரும் சேனையும் வருவீர்களாக என்று நியமித்துவிட்டுத் தாமும் குதிரையின்மீதேறி, (எ-று.)

*செல்லுந்தன்மையோர்ந்துரைசெயாசிரியனுந்தீயவர்தமைவாட்டி
வில்லியெபதிடவெதிர்செலாச்சனகனுர்விமலையுந்தழீஇக்கொண்டு
புல்லியேயிளைப்பினைத்தவிர்த்திட்டனனென்பதைப்புகலக்கேட்
டெல்லையில்லதோர்களிப்பொடுமீண்டனனிணையெனறனக்கில்லான்.

(இ-ள்.) போவதையறிந்து இராமாயணத்தை அருளிச்செய்யும் ஆசிரியரும் கோதண்டபாணியான இராமபிரான் அந்தக் கரதூஷணாதியரைக் கொன்று வரவே, ஜனகசக்கரவர்த்தியின் திருக்குமாரியான சீதா

பிராட்டியார் எதிர்கொண்டு சென்று தழுவிக்கொண்டு கூடியிருந்து யுத்தத்தால் நேர்ந்த இளைப்பை நிவர்த்தித்தனர் என்பதைச் சொல்லக்கேட்டு முடிவில்லாத சந்தோஷத்துடன் சமானமென்பது தமக்கில்லாத ஆழ்வார் மீண்டனர். (எ-று)

கூ௦. பரமபாகவதரன்றியயலொருபொருளும்பாரான்
சிரமறைமுகிலனோர்வண்ணன்றிருவடியலதுசேரான்
பிரமனுதியர்கோனுமமலதுநாவியலிற்பேசான்
உரமமர்கமலைநாதன்பதமலாதுளத்தினோரான்.

(இ-ள்.) பரமபாகவதர்களன்றி வேறொரு பொருளையும் பாரார்; சிறந்த குளிர்ந்த மேகத்துக்குச் சமானமான திருமேனியுடைய பெருமான் திருவடியல்லாது (வேறொன்றைச்) சேரார்; பிரமன் முதலானவர்கட்குத் தலைவனை அவனது திருநாமமல்லாது (மற்றொன்றை) நாவிற் பொருந்தப் பேசார்; மார்பிற் பொருந்திய பெரிய பிராட்டியின் நாதனது திருவடிகளல்லாது (பிறிதொன்றை) உள்ளத்தாலறியார்; (எ-று.) (கூ௦)

கூக. அனுதினமிராமகாதையரிகதையலதுகேளான்
தனுவொடுவிபவம்போகஞ்சகதலம்புரக்குந்தன்மை
எனுமிவைகழுவிற்றீயிலிருத்தலேயெனத்தேர்ந்தெண்ணி
மனுவினுமுயர்ந்தநீதிமன்னவன்வைகலுற்றான்.

(இ-ள்) பிரதிதினமும் இராமசரிதம் அரிசரிதம் அல்லாதவைகளைக் கேளார்; சரீரத்தோடு கூடிய வைபவம், போகம், உலகத்தை யாளுந்தன்மை ஆகிய இவைகள், கழுவிலும் தீயிலு மிருந்தாற்போலாமென்று எண்ணித் தெளிந்து, மனுவைக்காட்டிலும் உயர்ந்த நீதியையுடைய மன்னவரான ஆழ்வார் இருக்கலுற்றனர். (எ-று.) (கூக)

[பூமியைக்காக்குமாறு மந்திரிகள் ஆழ்வாரை வற்புறுத்தல்.]

கூஉ. செயிரில்பாகவதரோடிவ்வாறமர்தருசெய்யோனை
உயிர்தவாவமுதுண்போனைவிடமினிதுண்கென்போரிற்
பயிரினீரகளர்க்கேபெய்கென்றிழிந்திபகருவோரின்
வயிரவான்மணிப்பொற்றிண்டோண்மதியின்மந்திரிகணேக்கா

(இ-ள்.) குற்றமில்லாத பாகவதர்களோடு இவ்விதமாயிருக்கும் செவ்வைநெறியுள்ள ஆழ்வாரைப் பார்த்து, உயிரைக் கெடுக்காத அமுதமுண்ணுமவர்களை விஷத்தை நன்கு உண்ணும்படி சொல்வோர் போலவும், பயிருக்கு விடும் நீரைக் களர் நிலத்துக்கு விடுகவென்று இழிந்த புத்தி சொல்வோர் போலவும், உயர்ந்த வைரக்கற்களிழைத்த பொன்னுபரணமணிந்த திண்ணிய தோளுடைய மதியில்லாத மந்திரிகள், (எ-று.) (கூஉ)

கூங. கொற்றவாணிருபகாதிற்கினிமையாய்க்கூறுங்காதை
கற்றவாரியரோடுற்றாற்காசினிபுரந்ததாமே
முற்றவார்கலிசூழ்ஞாலமுறைமையிற்பொலியமுன்னோர்ச்
செற்றவாவுடனேகாக்குந்திறமைநுஞ்சீலமென்றார்.

(இ-ள்.) "வெற்றியையுடைய வாளைத்தரித்த நிருபனே! காதுக்கு இனிமையாய்ச் சொல்லுங்கதையைக் கற்ற பெரியோர்களோடு கூடிக்கேட்டிருந்தால் உலகத்தைக்காத்ததாகுமோ? சமுத்திரம் சூழ்ந்த உலக

முழுமையும் முறைமையாக விளங்கும்படி, மதிக்காத சத்துருக்களைச் செயித்துப் பிரீதியோடு காக்கவேண்டிய திறமையே உமக்குரிய நல்லொழுக்கமாம்'' என்றார்கள். (எ-று.) (௬௩)

[ஆழ்வார் மந்திரிகளைக் கோபித்தல்.]

௬௪. நவமணிமகுடஞ்சற்றேதுளக்கினனகைத்துவேந்தும்
அவாமுகமரிதினோக்கியரும்பொருளவனியாவும்
தவறிலபாகவதர்தந்தையிராகவன்சனகியெம்மோய்
இவணிவைநவிறல்போமினெனவயலேகினரால்.

(இ-ள்.) வேந்தரான ஆழ்வாரும் நவமணிகளிழைத்த மகுடத்தைச் சிறிது அசைத்து நகைத்து, அவர்களது முகத்தை அரிதாகப் பார்த்து, "எனக்கு அரிய பொருளும் பூமியும் மற்றையாவும் குற்றமில்லாத பாகவதர்களே; தந்தை இராமபிரானே; சானகித்தாயாரே தாயாவர்; இங்கு இவைகளை எனக்குக் கூறவேண்டா; போங்கோள்" என்றுரைக்க, அவர்கள் அப்பாற்போயினர். (எ-று.) (௬௪)

[பெண் பிள்ளைப்பேறு.]

௬௫. அனையசீரரசன்றேவியணிவயிற்றமரர்யாரும்
நினைவருநெடியோன்றேவிநீளைவந்துதிப்பநேயம்
புனைதனிமனுவைநோக்கியிளையெனப்புதல்விநாமந்
தனைவிதித்திடநாளுந்தளிரியல்வளர்ந்தாளன்றே.

(இ-ள்.) அப்படிப்பட்ட கலியாண குணங்களையுடைய ஆழ்வாரது திருத்தேவியாரது அழகிய வயிற்றில் தேவர்கள் யாரும் சிந்திப்பதற்கரிய பெருமானது தேவியாரான நீளாதேவி வந்து அவதரிக்க, நேசமுடன் ஒப்பற்ற சாஸ்திரத்தைப் பார்த்து அப்புதல்விக்கு இளையெனத் திருநாமமிடத், தளிர்போன்ற மெல்லிய சுபாவமுடைய அப்புதல்வி நாடோறும் வளர்ந்தனர். (எ-று.) (௬௫)

[இராமாயண காலக்ஷேபஞ் செய்தவர்க்குப் பொருள் கொடுத்தல்.]

௬௬. எழுவகைக்காண்டந்தன்னாலிராகவனிருதோள்வென்றி
தழுவுவுத்தமவான்மீகத்தவமுனிசாற்றுந்தொன்னூல்
வழுவறக்கேட்டிராமன்மலரடிமனததுட்கொளளா
முழுவதப்பொருளுங்காதைமொழிதருமுனிவர்க்கீந்தான்.

(இ-ள்.) ஏழுவகையான காண்டங்களாலே இராகவபிரானது இரண்டு திருத்தோள்களின் வெற்றியைச் சொல்லும் உத்தமமான தவத்தையுடைய வான்மீகமுனிவர் அருளிச்செய்த பழமையான இராமாயணததைத் தவறாமற் கேட்டு, அவ்விராமபிரானது மலர்போன்ற திருவடிகளை மனத்துட்கொண்டு, தமது சிறந்த பொருள் முழுதும் அச்சரிதத்தைக் கூறியருளிய முனிவருக் களித்தனர். (எ-று.) (௬௬)

[மந்திரிமார்கள் மீண்டுஞ் செய்த சூழ்ச்சி.]

௬௭. இம்மரபிராமகாதையிவருநாளிலங்குபல்பூண்
செம்மணிநீக்கித்தானுந்திருந்துபொற்றவிசிற்சேர்த்தி

மும்மலங்கழுவுவானின்முழுமுறைமுடிநெய்நீவி
மம்மர்தீர்ந்துயர்ந்தகோமான்மஞ்சனமாடச்சென்றான்.

(இ-ள்.) இவ்விதமாக இராமசரித்திரம் நடந்துவருநாளில், பிரகாச முடைய பல ஆபரணங்களையும் செவ்வையான இரத்தின ஆரங்களையும் அவிழ்த்துத் திருத்தமான பொன்னாசனத்திற் சேர்த்துவைத்துத், தாம் மும்மலங்களையுங் கழுவுவார்போல முறைப்படி தமது முடியில் எண்ணெய் தேயத்துக்கொண்டு, மயக்கந் தீர்ந்து மதிநலமுடையரா யுயர்ந்த தலைவரான ஆழ்வார் திருமஞ்சனமாடச் சென்றனர். (எ-று.) (சுஎ)

சுஅ. மனமழன்றமைச்சர்நாளும்வயிணவர்வஞ்சிவேந்தைத்
தினமருங்கணுகாவண்ணஞ்செகுப்பதோர்வினையந்தேர்வோர்
இனமணிப்பொலம்பூண்யாவுங்கரந்தனரிறையோன்றேடி
வினவுறிற்பரமபாகவதர்மிசைவிளம்பற்கென்று

(இ-ள்.) பாகவதர்கள், வஞ்சிவேந்தரான ஆழ்வாரிடத்துத் தினமுஞ் சேராவண்ணங் கெடுப்பதாகிய ஒரு தந்திரத்தை மனங்கொதித்துத் தேடுவார்களான மந்திரிகள், ஆழ்வார் தேடிக் கேட்பராயின் பரமபாகவதர் மீது சொல்வதற்கென்று இனமான இரத்தினங்களிழைத்த பொன்னாபரணங்களை யெல்லா மொளித்துவைத்தனர். (எ-று.) (சுஅ)

சுகூ. மஞ்சனமரபினாடிமணிநுதற்றிருமண்சாத்திக்
கஞ்சவாணயனத்தீசன்கழலிணைகருதிப்போற்றி
அஞ்சனக்கயற்கண்மாதரமைததபாலடிசின்மாந்தி
பஞ்சணைதுயின்றானுள்ளப்பங்கயப்பரமனேபோல்.

(இ-ள்.) முறைப்படி மஞ்சனமாடி, அழகிய நெற்றியில் திருமண்ணணிந்து, ஒளிபொருந்திய தாமரையைப்போன்ற திருக்கண்களையுடைய ஈசனது திருவடிகளிரண்டையுந் தியானித்து வணங்கி, மையிட்ட கயல்போனற கண்களையுடைய பெண்கள் அமைத்த பாலோடு கூடிய அமுதையுண்டு, தமது திருவுள்ளத் தாமரையிலிருக்கும் பரமனைப் போலப், பஞ்சணையில் திருக்கண் வளர்ந்தனர். (எ-று.) (சுகூ)

எ0. துயிலவனித்துப்பைம்பொன்றுதைமணித்தூணச்சோதி
வெயிலமர்மண்டபத்துவிண்ணவர்வேந்தன்போலக்
கயிலணிகனகப்பல்பூட்காவலர்கணங்கள்சூழ
அயிலணிவேலான்சிங்காதனத்துவீற்றிருந்தானன்றே.

(இ-ள்.) ஆழ்வார் துயிலுணர்ந்து, பசிய பொன்னாற்செய்த இரத்தினங்களிழைத்த தூணினது சோதியே வெயிலாகவுடைய மண்டபத்தில், கடைப்பூட்டையுடைய பொன்மயமான பல ஆபரணங்களையணிந்த மன்னவர் கூட்டங்கள் தம்மைச் சூழக், கூர்மையான வேலைத்தரித்த ஆழ்வார், தேவர்களுக்கு வேந்தனான இந்திரன்போலச், சிங்காதனத்தில் வீற்றிருந்தனர். (எ-று.) (எ0)

எக. அறையினிலுறைவோர்க்கூவியணியெலாமகிலங்காக்கும்
முறைதவாநிருபன்கேட்பமொய்ம்மணிப்பணிகள்வேந்தர்
நிறைதருமரசேயெம்பாலளித்திலர்சிலதமொன்ன
நறைகமழ்புயத்தான்றேரவெனவவர்நாடிக்காணார்.

(இ-ள்.) உலகத்தைக் காக்கும் மனுமுறை தவறாத மன்னரான ஆழ்வார், (தாம் ஆபரணங்களை வைத்த) அறையிலிருப்போரை யழைத்து ஆபரணங்களை யெல்லாங் கேட்க, "வேந்தர்கள் (சூழ்ந்து) நிறைந்திருக்கும் அரசே! ஏவல்செயவோர் இரத்தினங்களிழைத்த ஆபரணங்களை யெம்மிடத்திற் றந்திலர்" என்றுரைக்க, வாசனை வீசும் புயங்களையுடைய ஆழ்வார் "தேடுங்கள்" என்ன, அவர்கள் தேடிக்காணாதவராகி, (எ-று.) (எக)

எஉ. தங்கவான்மணிப்பொற்கோயிறவிசுநீர்சாருந்தானம்
எங்கணுந்தேடினோங்கண்டிலமணியிழைகளென்றார்
அங்கவர்புகறலகேளாவிழிசிவந்தலங்கற்றிண்டோட்
சிங்கவேறனையான்சாலசினந்திவைசெப்புகின்றான்.

(இ-ள்.) "தங்கமயமான உயர்ந்த மணிகளிழைத்த அழகிய அரண்மனையும் (ஆபரணங்களை வைத்ததாகிய) ஆசனமும் இன்னும் நீவிர் போகும் இடங்களும் மற்ற எவ்விடமும் தேடினோம்; மணிகளிழைத்த ஆபரணங்களைக் கண்டோமில்லை" என்றார்கள். மாலையையணிந்த திண்ணிய தோளையுடையராய ஆண்சிங்கம் போன்ற ஆழ்வார், அங்கு அவர்கள் சொல்வதைக் கேட்டுக், கண்கள் சிவந்து மிகவுங் கோபித்து, இவ்வார்த்தைகளைச் சொல்லுகின்றார். (எ-று) (எஉ)

எங. கலையிலார்கலிசூழ்ஞாலம்புரக்குநங்காவல்கண்டும்
விலையிலாமணிப்பூணாரங்கவன்றுளார்வேந்தரேனும்
மலையிலார்ந்துயர்பொற்றிண்டோட்டசமுகன்வலிமைமாய்த்த
சிலையிராகவன்றனாணைவாளினாற்சிதைப்பனென்றான்.

(இ-ள்.) "ஆடையைப்போல் சமுத்திரஞ் சூழ்ந்த பூமியையாளும் நமது வலிமையைக்கண்டும், விலையற்ற மணிகளிழைத்த ஆபரணங்களையும் ஆரங்களையும் அபகரித்தவர்கள் அரசர்களேயாயினும், மலையைப்போலுயர்ந்த அழகிய திண்ணிய தோளையுடைய இராவணனது வலிமையைக் கெடுத்த கோதண்டத்தையுடைய இராகவபிரானது ஆணைப்படி, (அவர்களை எனது) வாளைக்கொண்டு அழிப்பேன்" என்றனர். (எ-று.) (எங)

எச. கடலரவணைவாழீசனடியர்மேற்களவுசாற்றற்
கிடனிதென்றமைச்சாதம்மிளெண்ணியவ்விறைபாங்செய்திப்
புடவியாணிருபகேட்டிபுகலுமெம்புன்சொலென்னாத்
தடமலர்த்துணைத்தாண்மீதிற்பணிந்திவைசாற்றலுற்றார்.

(இ-ள்.) திருப்பாற்கடலில் ஆதிசேஷசயநத்திலெழுந்தருளியிருக்கும் பெருமானது அடியார்கள்மீது களவுசாற்றுவதற்கு இதுவே சந்தர்ப்பமென்று மந்திரிகள் தங்களுக்குள் ஆலோசித்துக்கொண்டு, அவ்வாழ்வாரிடத்துக்குப்போய, "பூமியையாளும் நிருபரே! சொல்லும் எங்கள் புல்லிய சொற்களைக் கேட்பீராக" என்று அவரது விசாலமான மலர்போன்ற இரண்டு தாள்களைப் பணிந்து, இவ்வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினார்கள். (எ-று.) (எச)

எரு. மண்ணைவாமனமாயோர்தாண் மறைத்தொருமலர்த்தாணீட்டி, விண்ணையுமறைத்தாய்ப்பாடி வெண்ணெயும்விதற்பர்கோமான், பெண்ணையுங்களவிற்கொண்டோர் தரணியைப்பெரும்பார்வேந்தன், கண்ணையுங்காணுவண்ணங் கரந்தருள்கரியமாயோன்

௭௬. அடியராயினரோயின்றேரரும்பொருள்கடவுளாவிப்
படியபலொன்றின்றென்னுபபகர்ந்துநின்பாங்கரன்னார்
நொடியளவிகவாதம்மவயலினர்ப்பொருந்தாய்நோனார்க்
கிடியனுய்களவியைந்தோர்ந்தியாவர்மீதிசைப்பதென்றார்.

(இ-ள்.) "வாமனவதாரமாகி ஒருதிருவடியால் பூமியை மறைத்து ஒரு மலரடியை நீட்டி ஆகாயத்தையும் மறைத்து, ஆயப்பாடியிலுள்ள வெண்ணெயையும் விதர்ப்பதேசத் தரசனது பெண்ணையும் களவினாலே கொண்டு, பாரதயுத்தத்திலே ஒப்பற்ற சூரியனை (தனது திருவாழியாலே) காணாதபடி மறைத்து, பெரிய பூமியையாளும் திருதராட்டிரன (பொய யாசனமிட்ட துரியன் சபையில் விசுவருபத்தைத்தரிசித்து 'உனதொளி கண்டகண் மறறொன்றுங் காணாமல் வாங்கென்ன' அவனது) கண்களைப் (பழையபடி) பார்வையில்லாவண்ணம் செயதருளிய கிருஷ்ணபகவானது அடியார்களான பாகவதர்களே உம்மைப் பெற்ற தாயதந்தையர்; அரிய பொருள்களாலும் தெய்வத்தாலும் இவ்வுலகில் (ஆவது) வேறொன்று மில்லை யென்று சொல்லி, உமது சமுகம் அப்பாகவதர்களை நொடியள வாவது பிரியாது; அயலோரையும் சேரமாட்டீர்; பகைவர்கட்கு இடிபோ ன்றவரே! (நடந்த) களவை இசைய யோசிதது யாவர்மேற் சொல்லலாம்" என்றார்கள். (எ-று.) (௭௫) (௭௬)

௭௭. ஆங்குரைத்ததுசொற்கேளாவுடல்பதைத்தழுங்கியாவி
தாங்குதற்கரிதாந்துன்பந்தலைகொளாசசாலமாழ்கி
வீங்குயிர்ப்பினனாய்க்கண்ணீர்வீழத்திருசெவியேவீழா
வாங்குவிலிராமராமவென்றனன்மறுக்கமிலலான்.

(இ-ள்) குற்றமில்லாதவரான ஆழ்வார், (மநதிரிகள்) சொல்லியதாகிய சொல்லைக் கேட்டுந் திருமேனி பதைத்து, உயிர்வருந்தி, பொறுபபதற்கரிய துன்பம் மேற்கொண்டு, மிகவும் மயங்கிப், பெருமூச்சுடையவராயக் கண் ணீர் சொரிந்து, செவிக ளிரண்டிலும் (அவ்வார்த்தை) விழாதபடி வளைக் குங் கோதணடத்தையுடைய இராமா இராமா என்றருளிச்செயதனர். (எ-று.) (௭௭)

௭௮. நிவந்திருபுருரஞ்செவ்வாய்துடித்தழனிகரக்கண்கள்
சிவந்துடலவெயர்த்துச்சற்றேநகைததிருசெங்கைகொட்டி
இவாந்ததுசினமெஙகோனும்பொறுககலானெழுந்துநோக்கி
அவம்புகன்மதியைசசான்ற வமைச்சருக்கறைவதானான்.

(இ-ள்.) புருவங்கள் மேலுயர்ந்து, சிவந்த வாய் துடித்து, அக்கினி யைப் போலக் கண்கள் சிவந்து, உடல் வியர்த்து, சிறிது நகைத்து, சிவந்த இரண்டு கைகளைக்கொட்டிக், கோபம் அதிகரித்தது. எமது தலைவராகிய ஆழ்வாரும் பொறுக்காதவராய் எழுந்து பார்த்து (பாகவதர்கள் மீது) அப வாதஞ் சொன்ன புத்தி நிறைந்த மந்திரிகளுககுச் சொல்லத் தொடங்கினார். (எ-று.) (௭௮)

௭௯. எமக்குமெங்குலத்துளோர்க்குமிதுதெரிந்தெமக்குக்கூறும்
நுமககுமீங்கிவைகேட்டோர்க்குநுவலிருசுடர்கள்சேடன்
சுமக்குநீள்புடவியோவில்காலமுந்தொலைவிலாத
தமக்குவைநரகமின்றேசமைத்தநீர்சான்றிரந்தோ.

(இ-ள்.) "எமக்கும், எமது குலத்திலுள்ளவர்களுக்கும், இக்களவைத் தெரிந்து எமக்குச் சொல்லும் உங்களுக்கும், இவ்விடத்தில் இவற்றைக் கேட்டவர்களுக்கும், ஆதிசேஷரால் சுமக்கும் பெரிய பூமியில் சூரிய சந்திரர்களுள்ள காலம் வரையில் தொலையாத இருட் கூட்டத்தையுடைய நரகத்தை இப்பொழுதே அமைத்து விட்டீர்கள்; ஐயோ! நீங்கள் நல்லறிவுடையவர்கள்! (எ-று.) (எக)

அ0. வருணநீர்மையினீங்கல்பகைமைகொள்வகைமைகாண்டல்
பொருணயந்தயலினோர்பாற்கவருதல்கொலைமைபுந்தி
மருணனுக்குதல்பொய்மாசுதவதனினைவழுவன்மாறுக்
கருணையைவிடுத்தலென்றுங்கனவினுங்கருதல்செய்யார்.

அக. ஏதமில்பரமபாகவதர்களென்றிவணியானே
தீதறயாருங்காணத்தெளிகுவன்தெளிகிலேனேல்
ஆதவன்மரபிராமனடியருக்கடியனல்லேன்
காதழலெயிற்றராவைக்கொணருதிர்கடிதினென்றான்.

(இ-ள்.) "வர்ண தருமங்களினின்று நீங்குதல், பகைகொள்ளும் வகையைக் காணுதல், பொருள் விரும்பி அயலவர்களிடத்தி லபகரித்தல், கொலை செய்தல், சிந்தை பேதமடைதல், பொய்யுடைமை, குற்றமுடைமை, தாம் கொண்ட தவத்தினின்று தவறுதல், கெடாத கருணையையொழித்தல் ஆகிய இவைகளை எப்பொழுதும் கனவிலும் எண்ணுதவர்கள் குற்றமில்லாத பரமபாகவதர்களே என்று இவ்விடத்தில் நானே குற்றமின்றி யாவருங் காணும்படி தெளிவேன். அப்படி தெளியேனென்னில், சூரியவமிசத்தி லவதரித்தருளின சக்கரவர்த்தித்திருமக னடியார்க்கு அடியேனல்லேன. (அதற்காகக்) கொலவதான விஷாக்கினியுள்ள பற்களையுடைய பாம்பை விரைவிற கொண்டுவாருங்கோள்" என்றார். (எ-று.) (அ0) (அக)

வேறு.

அஉ. அறைகழற்குரிசிலுக்கஞ்சியேவலோர்
இறையவடடரித்திலார்விரைவினேகியே
பிறையெயிற்றடுவிடம்பில்கிமல்குபைக்
கறைமிடற்றரவினைக்கடிதிற்றந்தனர்.

(இ-ள்.) சப்திக்கும் வீரகண்டையைத் தரித்த அரசனுக்குப் பயந்து, ஏவலாளர்கள், சிறிதும அங்கு பொறுத்திராதவராகி, விரைவாகப் போய பிறைபோன்ற பற்களில் கொல்லும் விஷத்தை அதிகமா யுமிழுவதான படத்தையும் கறுத்த கண்டத்தையு முடைய பாம்பை விரைவாகக் கொண்டுவந்தார்கள். (எ-று.) (அஉ)

அங. கொடியகாற்கோடனைத்தகையுங்கோளுடை
நெடியகாழரவினைநிதியின்கன்னலுட்
படியவேயரிதினில்விடுத்துப்பன்மணி
முடியுடைநிருபர்கோன்முன்னர்வைத்தனர்.

(இ-ள்.) கொடிதாகிய காற்கோடகனென்னும் பாம்பையும் வெல்வதான வலிமையும் பெரிய வயிரமு முடைய (அந்தப்) பாம்பைப் பொற்கரகத்தில் பொருந்தும்படி அரிதாக விடுத்துப், பலமணிக ளிழைத்த முடியையுடைய அரசர்கட் கரசரான ஆழ்வார் முன் வைத்தார்கள். (எ-று.) (அங)

அச. மன்னனும்புரவலரமைச்சர்மாதவர்
இந்நகாவயினுளோரொவருங்காண்மினென்
றுன்னருமுவகையானுரகன்மேற்றுயில்
தென்னரங்கேசனையுளத்திற்சிந்தியா

(இ-ள்.) அம்மன்னவரும், "அரசர்கள் மந்திரிகள் தவசிகள் இந்நகரத்திலுள்ளவர்கள் யாவருங் காணுங்கோள்" என்று நினைப்பதற்கரிய சந்தோஷத்தினராய் ஆதிசேஷர் மீது அறிதுயிலமரும் அழகிய திருவரங்கநாதனைத் தமதுள்ளத்திற் சிந்தித்து, (எ-று.) (அச)

அரு. சுருக்கவிழ்கமலநாண்முகையுட்டோய்ந்திடும்
அருக்கனதிளங்கதிர்மருளவாணபுள்
எருத்தமாலடியர்மேனிந்தையீதென
செருக்கராவிடங்கருட்செங்கையிட்டனன்.

(இ-ள்.) "மந்திரிகளுரைக்கும் இச்சொல், முருக்கவிழ்ந்த புதிய தாமரை யரும்பில் படியும் சூரியனது இளங்கதிர் மருளும்படி அன்புடைய திருவடியினது திருததோள்களி லெழுந்தருளும் எமபெருமானது அடியார்கள்மீது நிந்தையே" என்று சொல்லி, அகங்கரிக்கும் பாம்பிட்ட குடத்திற் றமது சிவந்த திருக்கையையிட்டனர். (எ-று.) (அரு)

அசு. படவரப்பள்ளியான்பதங்களேத்தியே
குடந்தனிற்றிருக்கரமிட்டகொற்றவன்
விடங்கலுழ்பாம்பினேடிட்டவில்லுமிழ்
தடமணியாழியையெடுத்துத்தந்தனன்.

(இ-ள்.) படத்தையுடைய ஆதிசேஷசயனத்தையுடைய திருவரங்க நகரப்பனது திருவடிகளைத் துதித்துக், குடத்தில் தமது திருக்கையையிட்ட ஆழ்வார், விடத்தை யுமிழும் பாம்போடு இட்டு வைத்திருக்கும் பிரகாசமுடைய பெரிய இரத்தினக் கணையாழியை யெடுத்துக் கொடுத்தனர்.(எ-று.)

அஎ. நடுங்கினர்புரவலரமைச்சர்நாணமுற்
றொடுங்கினர்தவத்துடன்றருமமோங்கின
விடுங்கதிரதிர்கழல்வேந்தர்வேந்தனும்
அடுங்கிளரயில்குறித்தவரைநோக்கினன்.

(இ-ள்.) அரசர்கள் நடுங்கினர்; மந்திரிகள் வெட்கமடைந்து அடங்கினார்கள்; தவத்தோடு தருமமும் உயர்ந்தன; பிரகாசமுடைய ஒலிக்கும் வீரகண்டையைத்தரித்த வேந்தர்க்கு வேந்தரான ஆழ்வாரும் (சத்துருக்களை) வெல்லும் உயர்ந்த வேலாயுதத்தைப் பார்த்து அம்மந்திரிகளையும் பார்த்தனர். (எ-று.) (அஎ)

[எம்பெருமான் சேவை சாதித்தல்.]

அஅ. கனைகழலொளிர்தருகமலபாதமும்
வனைதருபட்டிகைமருங்குமாமணி
புனைதருசுரிகையும்புலன்கொளுந்தியும்
நினைதொறுங்களிதருநீலமேனியும்

(இ-ள்.) (அப்போது) ஒலிக்கும் வீரகண்டை பிரகாசிக்கும் தாமரை போன்ற திருவடிகளும், அணிந்த அரைநாணையுடைய இடையும், பெரிய

மணிமயமான அலங்காரமான கவசமும், இடமுடைய உந்தியும், நினைக்குந்தோறும் தோஷத்தைக் கொடுக்கும் நீல நிறமான திருமேனியும், (எ-று.)

அகூ. ஒளிர்கதிர்புரைமணியுதரபந்தமும்
குளிர்நிலவனையநூல்குலவுமாபமும்
களிசுடர்நவமணிநலங்கொளாரமும்
அளிதிகழ்மதுமலரலங்கற்றோள்களும்

(இ-ள்.) பிரகாசிக்கும் சூரியனுக்குச் சமானமான அழகிய உதரபந்தமும், குளிர்ந்த சந்திரனைப் போன்ற பூணூல் விளங்கும் மார்பும், செறிந்ததாய்ப் பிரகாசமுடையதாய நவமணிகளாலான நலத்தையுடைய ஆரமும், வண்டுகள் நிறைந்த தேனையுடைய மலர்மாலை ளணிந்த தோள்களும், (எ-று.) (அகூ)

கூ0. அங்கசவரதனத்தணிகொளங்கதம்
கங்கணம்பிறழ்தருங்கமலகைகளும்
சங்கனகிரிவமுந்தரளமூரலும்
திங்கள்வான்வதனமுந்திலகநெற்றியும்

(இ-ள்.) திருமேனியிற் பிறந்ததுபோன்ற பொன்னாலான அழகையுடைய தோளணியும் கங்கணமும் விளங்கும் தாமரை போன்ற கைகளும், சங்கத்தைப் போன்ற கழுத்தும், முத்துப் போன்ற தந்தபந்தியும், சந்திரன் போன்ற பெருமை பொருந்திய முகமும், திலகமிட்ட நெற்றியும், (எ-று.)

அங்கசம் - சரீரத்திற் பிறந்தது. அங்கம் - சரீரம்; ஜம் - பிறத்தல். எம்பெருமான் சாத்தின திருவாபரணங்களைத் "திருமேனியிற் பூத்தது போன்ற திருவாபரணங்கள்" என்பர் பூர்வாசார்யர்கள்.

கூக. கருணையாலிகள்பொழிகமலக்கண்களும்
புருவமுமகரகுண்டலத்தின்பொற்சுடர்
தருமணிக்கபோலமுந்தயங்குபட்டமும்
குருமணிநாசியுமிதழின்கோலமும்

(இ-ள்.) கிருபையாகிய மழைத்துளிகளைப் பொழியும், கமலம் போன்ற கண்களும், புருவமும், மகரகுண்டலத்தின் பொலிவான சுடரையுடையதான அழகிய கபோலமும், விளங்கும் பட்டமும், சிரேஷ்டமாய் அழகிதான நாசியும், இதழினழகும், (எ-று.) (கூக)

கூஉ. கோடிபானுவின்மணிகுயிற்றிப்பொற்புறச்
சூடியமகுடமுந்துளவமாலையும்
தேடியசுருதிநேர்சிலையுஞ்சீற்றமே
நீடியகணையெலாநிறைந்ததூணியும்

(இ-ள்.) கோடி சூரியர்போல மணிகளிழைத்து அழகாகத் தரித்த திருவபிஷேகமும், திருத்துழாய்மாலையும், (பெருமானைத்) தேடியதான சுருதியை நிகர்த்த சார்ங்கமும், (விமுகர் விஷயததில்) கோபமே பொருந்திய கணைகளெல்லாம் நிறைந்த அம்பறாத்தூணியும், (எ-று.) (கூஉ)

கூங. திசையிருளிரிதரவிளங்கத்திண்சிலை
விசையவாளிலக்குவன்மிதிலைமாமயில்

நசையுடன்மருங்குறவரங்கநாயகன்
இசையிராகவன்வடிவெய்தியெய்தினன்.

(இ-ள்.) திசைகள் இருள்கெடும்படி விளங்கவும், திண்ணிய சிலையைத் தரித்த உயர்ந்த வெற்றியையுடைய இளையபெருமாளும் மிதிலாபுரியிலவ தரித்தருளின மயில்போன்ற சீதாபிராட்டியாரும பிரீதியுடன் அருகிலிருக் கவும், அரங்கநகரப்பன், கீர்த்தியையுடைய சக்கரவர்த்தித் திருமகன்வடிவங் கொண்டு (அங்கு) எழுந்தருளினன். (எ-று.) (கூங)

[ஆழ்வார் சேவித்துத் துதித்தல்.]

கூச. கண்டனனிருவிழிகமலங்காறரப்
புண்டரீகக்கரங்குவித்துப்போற்றுரு
அண்டர்நாயகசிலையதனைப்பெண்ணுருப்
பண்டளித்தருள்பதப்பங்கயத்தினய்.

(இ-ள்.) (அப்பெருமானை ஆழ்வார்) சேவித்து, (தமது) இரண்டு விழி களிலும் ஆநந்த பாஷ்பமொழுகத் தாமரைமலர்போன்ற கரங்களைக் குவித் துக்கொண்டு, "(யாவராலும்) போற்றுவதற்கரிய நித்திய சூரிகளுக்குத தலை வனே! கல்லைப் பெண்ணுரு வாகும்படி முன்பு ரக்ஷித்தருளிய திருவடிகளா கிற தாமரைகளை யுடையவனே! (எ-று.) கமலம்-நீர். (கூச)

கூரு. வாரணமூலமென்றழைப்பமாசுணப்
பாரணவுவணன்மேற்பரிவிற்சார்ந்தனே
நாரணனெனப்புகல்சிறுவனன்பினல்
ஆரணமதலையொன்றதனுட்டோன்றினய்.

(இ-ள்.) கஜேந்திராழ்வான் ஆதிமூலமென்றழைக்கப் பாம்புகளை யுண் ணும் பெரிய திருவடியின்மீது அன்போடெழுந்தருளினவனே! நாரணனே யென்று அநுசந்திக்கும் பிரகலாதாழ்வாரான சிறுவருக்குப் பிரீதியோடு வேதம்போன்ற ஒரு தூணிற் றோன்றினவனே! (எ-று.) (கூரு)

கூசா. மீனமேமுதலியவடிவமேதினி
தானவைவயகன்றிடத்தரித்தநேமியாய்
வானமுமவனியுமற்றுமுற்றுநீ
ஆனவாறெம்மனோக்கறியற்பாலதோ.

(இ-ள்.) மச்சாவதாரமுதலிய வடிவங்களைப் பூமியில் குற்றமறும் படிக்குத் தரித்தவனுன சக்ரபாணியே! ஆகாயமும் பூமியும் மற்றுள்ள எல் லாமும் நீயே ஆனவிதம் எம்மைப்போன்றவர்களுக்கு அறியத்தக்கதோ? (எ-று.) (கூசா)

கூஎ. தாரகப்பிரமமாந்தகைமைகூர்ந்தருட்
காரணத்தடியவாகருத்துள்வைகுநீ
வாரணித்திருமுலைமடந்தைதன்னெடும்
வீரவிற்கணையொடும்வெளியிற்போந்ததென்.

(இ-ள்.) தாரகப்பிரமமாகிய பெருமைமிகுந்து, அருளென்னுங் கார ணத்தாலே அடியார்களது உள்ளத்தில் எழுந்தருளியிருக்கும் நீ, கச்சணிந்த திருமுலைத்தடத்தை யுடைய பிராட்டியாரோடும் வீரத்தையுடைய வில்லை யுங் கணையையுந் தரித்து வெளியிற் றோன்றியது யாதுக்காக? (எ-று.)(கூஎ)

கூஅ. அடர்ந்தசீரவனிவானனிலம்யாவையுங்
கடந்ததாளெளிதினிற்காணநோற்றுளார்
இடந்தவானிலங்கொலோவென்முனோர்கொலோ
தடந்துழாய்மார்பினாய்தமியனேகொலோ.

(இ-ள்.) சிறப்புடைய பூமி ஆகாயம் வாயு முதலிய எல்லாவற்றையும் அளந்தருளின தேவரீரது திருவடிகளைச் சேவிக்கும்படி நோற்றவர்கள், முன்பு நீ இடந்தருளின உயர்ந்த பூமியி லுள்ளவர்களோ ? என முன்னோர்களோ? திருத்துழாய மாலையை யணிந்த விசாலமான திருமார்புடையாய! அடியனே தானோ ?" (எ-று.) (கூஅ)

கூகூ. என்றினையனநவின்றிருகணீர்தரப்
பொன்றிகழ்புயத்தின்மெய்ப்புளகம்பொஙகுறத்
தன்றிருக்கரஙகுவித்துகஎநந்தன்மையான்
சென்றிருதிருவடிசென்னிசோத்தினான்.

(இ-ள்) என்று இப்படிப்பட்டவைகளைச் சொல்லி, இரண்டு கண்களிலும் நீரரும்பவும், வீரலக்ஷ்மி பொருந்திய புஜத்திலும் சரீரத்திலும் புளக மதிசரிக்கவும், தமது அழகிய கரங்களைக் குவித்து, ஆநந்தத்தாற் குதிக்குந் தன்மையை யுடைய ஆழ்வார், சென்று, (பெருமானது) இரண்டு திருவடிகளில் தமது முடியுற வணங்கினர். (எ-று.) (கூகூ)

[எம்பெருமான் ஆழ்வாரைக் கடாக்ஷித்தல்.]

க00. பருகுகாதலினடிபணிந்தபார்புகழ்
நிருபர்கோமகனையந்நீலமேனியான்
பெருகுமாதரவருள்பிறங்கநோக்கித்தன்
இருகையாலெடுத்துமார்பிறுகப்புல்லினான்.

(இ-ள்.) பருகுதலான ஆசையோடு (பெருமானது) திருவடிகளைப் பணிந்த பூமியிலுள்ளோர் புகழும் அரசர்க்கரசரான ஆழ்வாரை, நீலமேனியையுடைய அந்த சக்கரவர்த்தித் திருமகன், விருத்தியாகும் ஆதரத்தோடு அருள் அதிசரிக்கும்படி கடாக்ஷித்துத், தனது இரண்டு திருக்கரங்களாலெடுத்து மார்பி லழுந்த அணைந்தருளி, (எ-று.) (க00)

க0க. எமதுபாகவதரையெம்மினேக்கிமாண்
பமர்தரவொருபகலருச்சித்தேத்தினோ
தமதுதாளரனயன்சதமகாதியர்
பமரமார்மலாகடுப்பணியவாழ்குவார்.

(இ-ள்.) "எமக் குரியவர்களான பாகவதர்களை எம்மைப் போலவே பாவிததப் பெருமையோடு ஒருபகலாவது அர்ச்சித்துத் துதித்தவர்கள், தமது திருவடிகளைச் சிவன் பிரமன் இந்திரன் முதலியவர்கள் வண்டுகளையுடைய மலர்களைத் தூவிப் பணியும்படி வாழ்வார்கள். (எ-று.) (க0க)

பமரம் - ப்ரமரம் - வண்டு.

கoஉ. அத்தகைநமதுபாகவதராயுயர்
முத்தாகடமதகமகிழவுரிநீர்
இத்தலத்தலகினுள்வழிபட்டேத்தினை
உத்தமவுனதுசீருணாதற்பாலதோ.

(இ-ள்.) அப்படிப்பட்ட பெருமையை யுடைய நமது பாகவதர்களாய உயர்ந்த முக்தர்களது திருவுள்ள மகிழும்படி கடல்சூழ்ந்த இவ்வுலகில் கணக்கற்ற நாட்கள் (அவர்களை) வழிபட்டுத் துதித்தனை; உத்தமனே! உனது நற்குணம் (ஒருவரால்) அறியத் தககதோ? (எ-று.) (கoஉ)

கoரு. அளக்கர்சூழ்மகிதலத்தின்னுமாங்கவர்
உளக்கருணையின்முறைவழிபட்டோருநள்
வளக்சடுந்திகிரியோர்வரையிலசோடிபோல்
விளக்கமாந்துயர்பதமேவுகென்றனன்.

(இ-ள்.) இன்னும் சமுத்திரஞ் சூழ்ந்த உலகத்தில் பாகவதர்களது திருவுள்ளக் கருணையின்படி வழிபட்டவர்கள், சக்கரங்களும் வளமான வேகமுமுடைய தேரையுடையவரான கணக்கற்ற கோடி சூரியர்கள் போல் பிரகாசத்தை யுடையதாகி உயர்ந்த பரமபதத்தை அடைவாராக" என்றருளிச்செய்தனன. (எ-று.) (கoரு)

[அழகிய மணவாளன் விஷயமாக ஆழ்வார் பாசுரஞ் சொல்லுதல்.]

கoச. இருளிரியச்சுடரெனவெடுத்துமெய்ப்
பொருளுபநிடதமேபுணர்த்துப்பொற்புய
நிருபனுமவணிராகவனைநேரிலா
ஒருவனைப்புகழ்ந்துபாட்டொருபதோதினன்

(இ-ள்.) (பிறகு) அவ்விடத்தில் பொன்னணி யணிந்த புயத்தையுடைய ஆழ்வார், 'இருளிரியச்சுடர்' என்றெடுத்து உபநிஷத்தின் மெய்ப்பொருள் களைச் சேர்த்து இராகவபிரானை, ஒப்பற்ற ஒருவனைப் புகழ்ந்து பத்துப் பாட்டுக்க ளருளிச்செய்தனர். (எ-று.) (கoச)

[அரங்கநாயகன் கருடாரூடனாயச் சேவை சாதித்தல்.]

கoரு. அகமகிழ்ந்தரங்கநாயகனுமாடகச
சிகரிநேரிலக்குவன்சிதைபாங்குறத்
தகைமைசேர்தனுமலர்த்தடக்கைதாங்கிய
நிகரிலாவடிவினைக்கரந்துநீக்கியே

(இ-ள்.) அரங்கநாயகனும் திருவுள்ள மகிழ்ந்து பொன்மலைக்குச் சமான மான இளைய பெருமாளும் சீதாபிராட்டியாரும் பக்கத்தி லிருக்கப் பெருமைபொருந்திய கோதண்டத்தைத் தாமரை மலர்போன்ற பெரிய திருக்கையிற் றரித்த ஒப்பற்ற வடிவை மறைத்து, (எ-று.) (கoரு)

க0சு. மான்மதசசிந்துரவனப்புநெற்றியும்
பான்மதிமுகமுமின்பவளமூரலும
கான்மலிதுளபமுங்கருணைககண்களும்
நீன்மலிமேனியுநேமிசங்கமும்

(இ-ள்.) கஸ்தூரிநாமமும் சிந்தூரமும் விளங்கும் அழகிய திருநெற்றியும், வெண்மையான சந்திரன் போன்ற திருமுகமும, இனிய பவளம் போன்ற புன்சிரிப்பும், வாசனை மிகுந்த திருத்துழாய மாலையும், கருணை மிகுந்த திருக்கணகளும, நீலநிற மிகுநத திருமேனியும், திருவாழியும், திருச்சங்கமும் (எ-று.) (க0சு)

க0எ. சிலைகதைவாண்மலாதிகழுஞ்செங்கையும்
மலைபொருவியபுயவனப்புமார்புநீள்
அலைகடறறருகவுத்துவமுமாரமும்
நிலைபெறுகதிர்மணிநிறைபொலனுடையும்

(இ-ள்.) சார்ங்கமும் கதாயுதமும் வாளும் தோன்றி விளங்கும் திருக்கைகளும, மலைக்குச் சமானமான புயங்களினழகும், திருமார்பும், பெரிய அலைகளையுடைய திருப்பாற் கடலில் வந்த கௌஸ்துபமும், முத்தாரமும், நிலைபெற்ற பிரகாசமுடைய மணிகள் நிறைந்த திருபபீதாம்பரமும் (எ-று.) (க0எ)

க0அ. அவணதியிவணளித்தளித்தபாதமும்
உவணனதிருகுவடிறமும்பொறபுயம
சிவணநான்முகன்முதறறேவர்சூழ்தரச
சுவணமால்வரைமழைமுகிலிறறோன்றினன.

(இ-ள்.) மேலுலகத்தி லிருந்த சங்காநதியை இவ்வுலகத்திற் பிரவேசிக்கத் தந்து (உலகத்தை) ரக்ஷித்த திருவடிகளும், பெரிய திருவடியின இரண்டு மலைகளுக்குச் சமானமான அழகிய திருத்தோள்களில் விளங்கும்படி, பிரமன் முதலிய தேவர்கள் சூழப், பொன்மலைமேல் கவிந்த குளிர்ந்த மேகம்போலத் தோன்றினன். (எ-று.) (க0அ)

க0கூ. சனகனாதியருளந்தழைத்தநாதனைப்
பனகமாசயனனைப்பதுமறரணன்
அனகமாதவர்பாரவரங்கதநீசனைக்
கனகவாண்மணிமுடிநிருபன்கண்டனன்.

(இ-ள்) ஜநகர் முதலிய முனிவர்களது உள்ளத்தில் தழைத்தவனான நாதனை, பெருமைபொருந்திய ஆதிசேஷ சயநத்தையுடையவனை, தாமரையிலிருப்பவனான பிரமனும் பாபரகிதரான மகாதவசிகளும் வணங்கும் திருவரங்கத்துக்கு நியாமகனை, பொன்னாற்செயத ஒளியுடைய மணிகளிழைத்த முடியையுடைய நிருபரான ஆழ்வார் தரிசித்தனர். (எ-று.) (க0கூ)

[சேவை சாதித்த பெருமானை வாழ்த்திவணங்கி ஆழ்வார் வரம்பெறுதல்.]

கக0. விழிவழிப்புனறாப்புளகமெய்தா
மொழிவழித்துதிதாமுடி யுந்தாழ்தரக்
கழிதருபரிவுடன்கருணைக்கங்கைநீர்
வழிதருமலரடிவணங்கிவாழ்த்தினான்.

(இ-ள்.) கண்ணின் வழியாக ஆநந்த பாஷ்ப முண்டாகவும், திருமேனியிற் புளகமுண்டாகவும், சொல்லின் வழியாகத் துதிகளுண்டாகவும், திருமுடியும் தாழவும், பெரிய ஆசையோடு கருணையை யுடைய கங்கைநீர் வழியும் மலர்போன்ற திருவடிகளை வணங்கி வாழ்த்தினர். (எ-று.) (கக0)

கக்க. ஆதியேபிரமனுமரனும்போற்றிய
சோதியேநறைகமழ்துளவமார்பனே
வேதியேபுரிதருவேள்விநாதவென்
றோதியேபரவினனுருகுமுளளத்தான்.

(இ-ள்.) உருகும் திருவுள்ளத்தையுடைய ஆழ்வார், "காரணபூதனே! பிரமனும சிவனும் போற்றிய சோதியே! தேனமணம் வீசும் திருத்துழாய் மாலை யணிந்த திருமார்பனே! ஓமகுண்டத்தில் செய்யப்படும யாகங்களுக்கு நாயகனே!" என்று சொல்லி வணங்கினர். (எ-று) (கக்க)

ககஉ. தேடருமபொருண்மைமுற்புகன்றசீரதா
ஆடரவணைத்துயிலரங்கநாதனை
வீடருண்முதல்வனைவிரிஞ்சனறுதையைப்
பாடன்முப்பஃதினாற்பரிந்துபோற்றினன.

(இ-ள்.) முன்புசொன்ன தேடுவதற்கரிய உபநிஷத்தின் பொருள்கள் சிறக்கும்படி, ஆடும் பாம்பணையில் அறிதுயி லமரும் திருவரங்கநாதனை, மோக்ஷத்தை யருளும் காரணபூதனை, பிரமனுக்குத் தந்தையை, முப்பது பாட்டுக்களால் விரும்பிப் போற்றினர். (எ-று.) (ககஉ)

ககங. புள்ளரசிருபுயம்பொலியப்பொன்னுடை
வள்ளலுநிருபனைமகிழ்ந்துநோக்கியே
உள்ளமுந்தெமக்கருளுமக்கியாமிவண்
எள்ளருந்தகைவரந்தருவதேதெனறான்.

(இ-ள்.) பெரிய திருவடியின் இரண்டு புயங்கள் பொலியும்படி பொன்னுடையையணிந்த உதாரகுணசீலனுன பெருமானும், ஆழ்வாரை மகிழ்ந்து நோக்கி, "முன்பு உமது உள்ளத்தை எமக்கு அளித்த உமக்கு யாம் இவ்விடத்துத் தரக்கூடிய பழிப்பில்லாத பெருமையை யுடைய வரம் யாது?" என்றருளினன். (எ-று.) (ககங)

ககச. இறைஞ்சினன்பரமபாகவதரின்னருள்
நிறைந்திடவெனக்கவர்க்கடிமைமேயநான்

குறைந்திடாதயர்தரக்கருணைகூர்கென
மறைந்திடாதுயர்புகழ்மன்னன்வேண்டினன்.

(இ-ள்) மறையாமல் உயருங் கீர்த்தியையுடைய ஆழ்வார், (பெருமானை) வணங்கி, "அடியேனுக்குப் பரமபாகவதர்களது இனிய அருள் நிறையவும் அவர்களுக்கு நான் நேயமான அடிமையைக் குறையாமற் செய்யவும் கருணை செயவாயாக" என்று வேண்டினர். (எ-று.) (ககச)

[அரங்கநாதன் ஆழ்வாரது புத்திரியை மணம்புரிதல்.]

ககரு. அவ்வரமருள்புரிந்தரங்கத்தெம்பிரான்
செவ்வயினிருபனீயந்தசெந்தமிழ்
எவ்வமிலகருநகுழலிளையையீய்திடேல்
உவ்வயினவதுவைசெய்குதுமென்றோதினன்.

(இ-ள்) திருவரங்கத் தெம்பிரான், அவ்வரத்தை யருள்புரிந்து, "செம்மையான வேலைத் தரித்த நிருபரான ஆழ்வீர்! நீர்பெற்ற செந்தமிழைப் போல தோஷமில்லாத கரிய கூந்தலையுடைய இளையைத் தருவையாயின் இவ்விடத்தே திருமணஞ் செயதுகொள்வோம்" என்றருளினன். (எ-று.) ()

ககசா. இந்திரைமகிணனீதிசைப்பவேதமில்
சந்திரவெழிறகுலத்தரணிவேந்தனும்
முந்தியவுவகையுங்கடலுண்மூழ்கினன்
சிந்தினன்பவமெனசசெருககுஞ்சிந்தையான்.

(இ-ள்) பெரியபிராட்டியாருக்கு நாயகனான பெருமான் இதனையருளிச் செயதவளவிலே குற்றமில்லாத அழகிய சந்திரவமிசத்தராயப் பூமியை யாளும் ஆழ்வாரும் முற்பட்டதான சந்தோஷக் கடலில் முழுகி, என் பிறப்பை யொழித்தேனென்று மிகமகிழும் சிந்தையுடையவராகி(எ-று.) ()

ககஎ. திருமலரடிமுதற்சென்னிகாறுநீ
டுருமணிமணிகளாலொப்பித்தோதியின்
மருமலாசசிசழிகைவனைந்துமான்மதம்
பெருமணககலவைமெய்பிறங்கக்கோட்டியே.

(இ-ள்.) தாமரைமலர் போன்ற திருவடி முதல் திருமுடி வரையில் பெரியதாகிய சிரேஷ்டமான ரத்தினாபரணங்களால் அலங்கரித்துக் கூந்தலில் வாசனையுடைய மலர்மாலை சாத்தி, கஸ்தூரியும் அதிக வாசனையுடைய கலவைச்சாந்துகளும் திருமேனியில் விளங்கவணிந்து,(எ-று.) (ககஎ)

ககஅ. விடுசுடர்மணிமுடிவிபுதர்மாதவர்
தொடுகழலரசர்கண்முன்னர்தொன்முறை
வடிவகன்மகிறுதன்மயிலைமஙகலத்
தொடுமலர்கர்கரத்துதகத்தீந்தனன்.

(இ-ள்.) பிரகாசம் விடும் ரத்தினங்களிழைத்த முடியை யுடைய தேவர்கள் மகாதவசிகள் வீரகண்டையைப் பூண்ட அரசர்கள் ஆகிய இவர்க

ளுக்கு முன்னே வேத விதிப்படி களங்கமற்ற சந்திரன் போன்ற நெற்றியையும் மயில் போன்ற சாயலையுமுடைய இளையை மங்கலத்தோடு மலர் போன்ற கைகளில் உதகபூர்வகமாகக் கொடுத்தனர். (எ-று.) (ககஅ)

ககசு. பொன்னணிவனமுலைப்பொருவில்பூமகள்
அன்னவடனையணியரங்கத்தெம்பிரான்
மன்னழகியமணவாளனும்பெயர்
தன்னழகதனிலுற்சகமுங்காணவே

கஉ0. இன்னியமுழங்கமாதவத்தரேத்திட
பன்னியநானமறைபணிலமார்த்தெழக்
கன்னியர்பலாண்டிசைகழறக்கால்கதிர்
வன்னியைவலஞ்செயாவதுவைசெய்தனன்.

(இ-ள்.) தேமல் பூத்த அழகிய தனங்களையுடைய ஒப்பற்ற பெரிய பிராட்டியாருக்குச் சமானமான இளையை, திருவரங்கத் தெம்பிரான், தனது அழகினால் நிலைபெற்ற அழகிய மணவாளனென்னும் பெயரை உலகத்திலுள்ளோர் காணும்படி இனிய வாத்தியங்கள் கோஷிக்கவும் மாதவத்தர்கள் ஏத்தவும் (ஆகமங்களுக்கு இசைத்தைச்) சொல்லிய நானகு வேதங்களும் சங்குகளும் ஒலித்தெழவும் கன்னியர்கள் பல்லாண்டிசையைப் பாடவும் பிரகாசம் விடும் அக்கினியை வலஞ் செய்து திருமணம் புரிந்தனன். (எ-று.) (ககசு) (கஉ0)

கஉக. பரியகமங்ககம்பதக்கங்கங்கணம்
தெரியணிநித்திலந்திகழ்மேகலை
விரியணிமணிமுடிவிளங்குகுண்டலம்
உரியனவரசாகோனுதவக்கைக்கொளா

(இ-ள்.) காலணிகளும் தோளணிகளும் பதக்கங்களும் கங்கணங்களும் தெரியும் அழகிய முத்துக்கள் விளங்கும் மேகலைகளும் பலவான ஆபரணங்களும் மணிகளிழைத்த திருமுடிகளும் விளங்கும் மகாகுண்டலங்களும் (பெருமானுக்கு) உரியனவாகும்படி அரசர்க்கரசனான ஆழ்வார் சமர்ப்பிக்க அவற்றைக் கைக்கொண்டு (எ-று) (கஉக)

கஉஉ. விளைவருகருணையான்விடையுமீந்துவால்
வளைசிலைதிகிரிவாள்கதைவயங்குற
அளைநுகர்கரியமாலரங்கமாநகர்
இளையெனுமயிலொடுமினிதினேகினன்.

(இ-ள்) அதிகரித்த கருணையினாலே விடையுமளித்து, ஒளிபொருந்திய பாஞ்சசன்னியம் சார்ங்கம் சக்கரம் நாந்தகம் கதாயுதம் இவைகள் தோன்ற, வெண்ணெயுண்ட கரிய திருமேனியையுடைய பெருமான், இளையென்று சொல்லும் மயில போன்றவரோடு, திருவரங்கமாநகரத்துக்கு நன்கு எழுந்தருளினன். (எ-று.) (கஉஉ)

[பிழை பொறுக்கும்படி விண்ணப்பித்த அமைச்சரை ஆழ்வார் கொண்டாடுதல்.]

கஉ௩. இன்னமீர்கதியருளீசனேகிய
பின்னர்பாகவதர்களுடனும்பீடமீ
மன்னனுமகிழ்வுடன்வைகுநகாலையில்
அன்னவனடிமருங்கமைச்சரீண்டியே

(இ-ள்.) தன்பம் நீங்கிய மோக்ஷத்தைக் கொடுக்கும் பெருமான் எழுந்தருளின பிறகு, ஆழ்வாரும் பாகவதர்களுடன் பீடத்தின்மீது மகிழ்ச்சியோடு வீற்றிருக்கும்போது, அவ்வாழ்வாரது திருவடிகளில் மந்திரிகள் கூடி (இ-ள்.) (கஉ௩)

கஉச. பிழைத்தியாம்புரிந்தவிப்பெற்றிமாதவம்
தழைத்தநீபொறுத்தியென்றிறைஞ்சிச்சாற்றலும்
அழைத்தனனமைச்சரையருளினோக்கிநீர்
இழைத்தனதீமையன்றென்றுகூறுவான்

(இ-ள்.) "தவறி நாங்கள் செய்த இக்குற்றத்தை மஹத்தான தவம் தழைக்க தேவரீர் பொறுப்பீராக" என்று வணங்கிச் சொல்லலும், ஆழ்வார், மந்திரிகளையழைத்துக் கிருபையோடு நோக்கி, "நீங்கள் செய்தது தீமையன்று" என்று அருளுவாராயினர். (எ-று.) (கஉச)

கஉ௫. வேள்விகளயர்ந்துமாதவத்தின்மேவியும்
கேள்விநூலசதுமறைசெழுமவோதியும்
ஆள்வினைபுரிந்துநல்லறங்களாற்றியும்
தாள்வினைவலங்கொடுதலத்துலாவியும்

(இ-ள்.) "(உலகத்தில்) யாகங்கள் செய்தும், பெருந்தவத்தி லிருந்தும், கேள்வியோடு நான்குவேத சாஸ்திரங்களை நிறையக் கற்றும், பல முயர்சிகள செய்தும், நல்ல தருமங்களைச் செய்தும், வலிய கால்களால் நடத்தலைக் கொண்டு திவ்விய தேசசஞ்சாரஞ் செய்தும், (எ-று.) (கஉ௫)

கஉசு. சுரநதிமுதலியபடிந்துந்தோமில்சீர்
வரனதிகந்தரும்வரையின்வைகியும்
உரனதிதெளிந்துடலியோகத்தொல்கியும்
பரனடிகாண்கிலார்பவமுந்தீர்கிலார்.

(இ-ள்.) "கங்காநதி முதலியவைகளில் முழுகியும், குற்றமற்ற சிறப்பையுடைய அதிக வரங்களைக் கொடுக்கும் மலைகளி லிருந்தும், ஞானம் அதிக தெளிவடைந்து யோகாப்பியாசத்தாலே சரீர மிளைத்தும், (பலர்) பெருமானது திருவடியைக் காணமாட்டார்கள்; தங்கள் பிறவியும் நீங்கமாட்டார்கள். (எ-று.) (கஉசு)

கஉஎ. விண்ணகமுனிவரர்விபுதர்வேலைசூழ்
மண்ணகந்தனிலுளோர்வசையினீவிர்யான்

எண்ணரும்பரகதியெளிதினெய்துறக்
கண்ணனையெனதுளங்களிப்பக்காட்டினிர்.

(இ-ள்.) "தேவலோகத்தி லுள்ள முனிவர்களும் தேவர்களும் சமுத்தி ரஞ் சூழ்ந்த பூமியி லுள்ளவர்களும் குற்ற மில்லாத நீங்களும் நானும் எண் ணுவதற கரிய பரமபதத்தை எளியதா யடையும்படிக்குக் கண்ணனாகிய பெருமானை என்னுள்ளங் களிக்கக் காட்டினீர்கள். (எ-று.) (கஉஎ)

கஉஅ. ஆதலானும்மினுமதிகர்யாவரோ
காதலாசூரவருநசஞ்ருந்துங்கண்களும்
ஓதலாஞானமுமுணரவுமுண்மையும்
ஈதலாந்தவமுநீரெனகவென்றேத்தினான்.

(இ-ள்.) "ஆசையாலே உங்களிலும் அதிகமானவர்கள் யார்? பிரீதியு டைய ஆசாரியர்களும, மனதும், கண்களும், சொல்லாகாத ஞானமும், தெ ளிவும், உண்மையும, (வேண்டியதை வேண்டியபடியே) கொடுப்பதாகிய தவமும் எனக்கு நீங்களே!" எனறுரைத்து அவர்களைத் துதித்தனர்.(எ-று.)

[மைந்தருக்கு மகுடஞ் சூட்டல்.]

கஉசு. ஈன்றரங்கேசனுக்கீந்தபாவைமுற்
றோன்றலாய்விளங்குதன்சுதனைத்தொன்முறை
சான்றவரொடுபுவிபுரக்கசசாற்றியே
மான்றறாமதியினான்மகுடஞ்சூட்டினான்.

(இ-ள்) திருவரங்கநக ரப்பனுக்கு (தாம்) பெற்றுச் சமர்ப்பித்த பெண் மணிக்கு முன்பிறந்தவராய விளங்கும் தமது புத்திரரைப், பழமையான முறைப்படி பெரியோர்களோடு கூடி பூமியையாளும்படி நியமித்து, மயர் வற்ற மதிநலமுடைய ஆழ்வார், அப்புத்திரருககு மகுடஞ்சூட்டினர்.(எ-று.)

[இராமாயண காலக்ஷேபம்.]

கங0. மைந்தனுந்தந்தைசொன்மரபின்மாண்பமைந்
திந்தமாநிலம்புரந்தினிதின்வைகினான்
பந்தமிலவனுமாலடியர்பாங்குறச
சிந்தனையிராமகாதையினிறசேர்த்தினான்.

(இ-ள்.) அப்புத்திரரும் தமது தந்தையாகிய ஆழ்வார், நியமித்த முறை யே, மாட்சிமை பொருந்தி இந்தப் பெரிய பூமியை இனிது காத்திருந்தனர். பந்தமற்ற ஆழ்வாரும் பாகவதர்கள் தம்பக்க லுறறிருக்கத் தமது மனத் தை இராமாயண காலக்ஷேபத்திற் சேர்த்தனர். (எ-று.) (கங0)

கஙக. ஞானமெய்ப்பரமபாகவதர்நண்புறத்
தானகைத்தமைத்தவர்சரணம்போற்றியே
மானவனிராகவன்மாசில்காதைகேட்
டேனமினிருபர்கோனுறையுங்காலையில்

(இ-ள்.) ஞானவடிவான பரமபாகவதர்கள் நட்போடு தம்மிடத்து க்கு வரத் தாம் (ஆனந்தத்தாலே) நகைத்து (அவர்களைத்தம்மிடத்தில்) இரு த்தி அவர்களது திருவடிகளைப்போற்றி, புருஷோத்தமனான இராகவபிரா னது குற்றமற்ற சரித்திரத்தைக் கேட்டுக், குறைபாடில்லாத வேந்தர்க்கு வேந்தரான ஆழ்வார் எழுந்தருளி யிருக்கும்போது, (எ-று.) (கசுக)

வேறு.

கசுஉ. ஓதநீருவரியாவுமொருகணைக்குணவுசெய்தோன்
காதைநாணாளுங்கூறுங்கலைமுனிகலைமாரீசன்
பேதையைமருட்டக்கூறித்தசமுகச்சிதடன்பெட்பாற்
சீதையைக்கவர்ந்ததன்ஞன்பரிவினுற்றெரியக்கூறுன்.

(இ-ள்.) திரைகளையுடைய சமுத்திர நீரை யெல்லாம் ஓரே பாணத் துக்கு உணவாகச் செய்தோனான இராமபிரானது திருக்கதையை நாடோ றும் காலக்ஷேபஞ் செய்து வரும் சாஸ்திரம் வல்ல முனிவர், ஆழ்வாரது பரமபக்தியைக் கருதி, மான்வடிவமான மாரீசன் சீதாபிராட்டியாரை மயக்கும்படிக்குச் சொல்லிப், பத்துத் தலைகளையுடைய அறிவிலானான இராவணன் தன் ஆசையாலே பிராட்டியாரைக் கொண்டுபோன செய்தி யைத் தெரியச்சொல்லார். (எ-று.) (கசுஉ)

கசுஙு. ஆயவேதியன்றன்காதற்சுதனஃதறியானோர்நாள்
நேயமார்நிருபன்கேட்பநிசழ்த்துவோனிருதர்கோமான்
மாயமேற்கொடுபைங்கூந்தற்சனகியைவலிதின்வவ்விப்
போயவாறழல்போலன்ஞன்செவியினுட்புகுதச்சொற்ருன்.

(இ-ள்.) அதனையறியாமல், அந்த வேதியரது ஆசைக்குமாரர், நேசத் தையுடைய ஆழ்வார் கேட்கும்படி ஒருதினம் இராமாயண காலக்ஷேபஞ் செய்து வந்தவர், இராக்ஷசாதிபனான இராவணன் மாயஉருவங் கொண்டு பசுமையான கூந்தலையுடைய சீதாபிராட்டியாரைப் பலாத்காரமா யெடுத் துக்கொண்டு போன வரலாற்றை, அவ்வாழ்வாரது செவிகளில் அக்கினி போல் பிரவேசிப்பதாகப், பிரசங்கித்தார். (எ-று.) (கசுஙு)

கசுச. சொற்றதீமொழிகாதிற்கூர்சுடுசரத்தொகையோர்கோடி
உற்றபோற்படுமுன்பார்போற்றுயர்பொறையுறையுளோவாச்
செற்றமேகுடிபுக்காற்போனகைத்திருந்திருகண்சேப்ப
வெற்றிவேற்புயங்கள்கொட்டாவெய்துயிர்த்தெழுந்தான்வேந்தன்.

(இ-ள்.) சொன்ன தீயைப்போன்ற மொழி, கூர்மையும் வெப்பமு முடைய சரங்களின் தொகை ஒருகோடி யுற்றதைப் போல, அரசரான ஆழ்வார் செவியிற் படுமுன்னே, பூமியிலுள்ளோர் போற்றும் உயர்ந்த பொறுமைக்கு இருப்பிடமான திருவுள்ளத்தில் ஒழியாத கோபமே குடி புகுந்ததுபோல இருந்து நகைத்து, இரண்டுகண்களுஞ் சிவந்துகாட்ட, வெ ற்றியையுடைய வேலைத்தரித்த புயங்களைக் கொட்டிப், பெருமூச்செறிந்து ழுந்து, (எ-று.) (கசுச)

௧௩௫. துனைவினிற்றிணிகையார்த்துத்தொடிமலர்க்கரத்திற்றேலா
றுனையயிற்கதிர்வாள்வாங்கியிமையொடுநொடியாங்கால
வினையினிற்பரிநோற்றென்றும்பிறக்கிடுவிரைவான்மீதூர்
நினைவினிற்கடிதுகோயில்வாயிலினெறியேவேட்டான்.

(இ-ள்) விரைவாகத் திண்ணிய ஆயுதவகுப்புகளைக் கட்டிக் கங்கண மணிந்த கைகளில் தோல்வியடையாத நுனியிற் கூர்மையுடைய பிரகாச முடைய வாளாயுதத்தை வாங்கி கண்ணிமைப் பொழுதோடு கைந்நொடிப் பொழுது மாகும காலஅளவில் குதிரையானது தவம் பண்ணியும் எக்காலத்தும் பிற்படுவதான விரைவுடன் நெருங்குதலான மனத்தினுங்கடுக அரமனை வாயிலின் வழியை விரும்பி யடைந்தார். (எ-று.) (௧௩௫)

௧௩௬. வருதிர்நமதுதானைவாம்பரிமதமாத்திண்டேர்
தருதிர்கொடியமாயதசமுகபோகலபோகல்
பெருகுதிரத்துவெம்பேய்குளித்திடப்பிறங்குவாளாற்
பொருதுவனினையின்றென்றுவேறினான்புரவிமீதில்.

(இ-ள்) "நமது சேனைகளே! வாருங்கோள்; தாவிப்பாயுங் குதிரைகளையும் மதயானைகளையும் திண்ணிய தேர்களையுங் கொண்டுவாருங்கோள். கொடிய மாயத்தையுடைய தசமுகனே! போகவேண்டா; போகவேண்டா. பெருகுமபடியான இரத்தத்தில் கொடிய பேய்கள் குளிக்கும்படி விளங்கும் வாளாயுதத்தாலே இப்பொழுதே உன்னை வெல்லுவேன்" என்று சொல்லிக் குதிரையின் மீதேறினார். (எ-று.) (௧௩௬)

௧௩௭. சிரங்களைந்தழலுட்பெய்துபுரிதவத்திண்மைநாடி
வரங்கடந்தவனுமேருமலைசிலைவணக்கிமாயாப்
புரங்கடந்தவனுநின்னைக்காபபினும்புயங்கால்சென்னி
கரங்கள்வேறுகககொய்வன்யாவரமேற்காவலசெய்வார்.

(இ-ள்.) "உனது தலைகளைக் களைந்து அக்கினியி லிட்டு நீ செய்த தவ வலிமையை நாடி வரங்கள் தந்தவரான பிரமாவும், மகமேரு மலையைச் சிலையாக வளைத்து அழியாத முப்புரங்களை வென்ற சிவபிரானும் உன்னைக் காத்தாலும், உனது புடம-கால்-தலை-கரங்கள இவைகளை வேறுவேறாகும்படி யறுப்பேன்; அதன்மேல் உன்னைக் காப்பார் யாவரோ? (எ-று.) (௧௩௭)

௧௩அ. என்னையீன்றுலகியாவுமீன்றருளிராமன்றேவி
தன்னைநீவிரும்பல்சீயத்துணவைநாய்தனிவேட்டற்றால்
அன்னையைவிடுத்தேகாதெவ்வானிடத்தடைந்தாயேனும்
உன்னையானுயிருண்டல்லான்மீள்கலேனுயிரும்வேண்டேன்.

(இ-ள்.) "என்னைப் பெற்று உலகங்களை யெல்லாம் பெற்றருளிய இராமபிரானது திருத்தேவியாரை நீ விரும்புவது, சிங்கத்தின் உணவைத் தனிமையான நாய் விரும்பியது போலாம். நீ எனது தாயை விடுத்துப் போகாமல் எந்த உயர்ந்த இடத்தை யடைந்தாயாயினும், உன்னை உயிருண்டல்லாமல் நான் மீள மாட்டேன்; என்னுயிரையும் வேண்டேன்", (எ-று.) (௧௩அ)

கஙகூ. எனப்புகன்மொழியான்சீற்றத்திடைவிடாவிதிர்க்கும்வாளான்
சினத்தெழுநகையான்றூணத்திறலரித்தெழிப்பினார்ப்பான்
அனற்கொழுவடவைகாலோடிலங்கைதீய்த்திடச்சென்றங்கே
மனக்கடும்புரவிதென்பாற்றூண்டினான்வயிரத்தோளான்.

(இ-ள்.) என்று சொல்லும் சொல்லையுடையவராய், கோபத்தாலே இடைவிடாமல் ஆடும் வாளையுடையவராய, கோபத்திலுண்டாகும் சிரிப்பையுடையவராய், தூணிற் சட்டிய வலிமையை யுடைய சிங்கர்ச்சனையைப் போல் சர்ச்சிப்பவராய், வயிரமான தோள்களை யுடைய ஆழ்வார், வடவா முகாக்கினி உஷ்ணத்தைக் கொண்டு காற்றோடு கூடி இலங்கையைத் தீய்த்து விடும்படிக்குச் சென்றது போல, மனோவேகத்தையுடைய குதிரையைத் தெற்குமுகமாகத் தூண்டினார். (எ-று.) (கஙகூ)

கச0. அண்டர்பூவருடம்பெய்தார்பரமபாகவதரார்த்தார்
எண்டபோதனர்களாசிமொழிந்தனரிறையோனெஞ்சிற்
புண்டரீகக்கண்மாலூர்வயினனிற்புரவியென்னும்
சண்டமாருதமுந்தாவாவிலங்கைமேற்சார்ந்ததம்மா.

(இ-ள்.) (அப்போது) தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள்; பரமபாகவதர்கள் ஆரவாரித்தார்கள்; எண்ணும தபோதனர்கள் ஆசிமொழி சொன்னார்கள்; ஆழ்வார் திருவுள்ளத்தில் எழுந்தருளியிருக்கும் செந்தாமரையைப் போன்ற திருக்கண்களையுடைய பெருமான் ஏறிச்செலுத்தும பெரிய கருவடியைப் போல, குதிரை யென்று சொல்லும் சண்டமாருதமும் இலங்கைமேற் றாவிச் சார்ந்தது. (எ-று.) (கச0)

கசக. இலக்குவன்சனகன்பாவையிருமருங்கணுகவிந்து
குலக்குலசேகரப்பேர்க்கொற்றவன்றுயரங்கோபம்
விலகத்தானெடியோன்வென்றியிராகவவேடந்தாங்கி
வலகருஞ்சிலைகூர்வாளியொடுமெதிர்மகிழ்வின்வந்தான்.

(இ-ள்.) இளைய பெருமாளும் சீதா பிராட்டியாரும் இருபக்கங்களிலுமிருக்க, சந்திரகுலசேகரனென்னுந் திருநாமத்தையுடைய வெற்றியாளரான ஆழ்வாரது துயரமும கோபமும் விலகும்பொருட்டுப், பெருமான், வெற்றியையுடைய சக்ரவர்த்தித் திருமகனார் உருவந்தரித்து, வலிமையுடைய வளைந்த கோதண்டத்தோடும கூர்மையான பாணத்தோடும், ஆழ்வாருக் கெதிரில் மகிழ்ச்சியோடு எழுந்தருளினர். (எ-று.) (கசக)

கசஉ. சரணடைந்தவர்களாவித்துணையைமாதவனைத்தாழார்
முரணடர்த்துலவாவென்றிமூரிவெஞ்சிலையினானை
அரணமாநகரயோத்தியவதரித்தடியாரந்தக்
கரணமாசகற்றினானைக்கண்களாலிருபல்கண்டான்.

(இ-ள்.) திருவடி யடைந்தவர்களது ஆவிக்குத் துணையாயிருப்பவனை, பெரிய பிராட்டியாருக்கு நாயகனை, சத்துருக்களது வலியை யடக்கிக் கெடாத வெற்றியை யுடைய வலிய கோதண்டத்தை யுடையவனை, பெருமை

பொருந்திய மதில் சூழ்ந்த திருவயோத்தியில் அவதாரஞ் செய்து அடியார்களது அந்தக்கரணத்திலுள்ள குற்றங்களை நீக்கினவனை, ஆழ்வார் திருக்கண்களாற் சேவித்தனர். (எ-று.) (கசஉ)

கசங. பொடிப்பமெய்புளகங்கண்ணீர்பொழிதரப்புருவம்பொற்றோள்
துடிப்பமார்பதனோடாவாவனிலனிழிந்துதொல்லோன்
அடிப்பதுமந்தன்சென்னிமிலைந்தனனடியாரெண்ணம்
முடிப்பவன்கரத்தாலன்னோன்றனைத்தழீஇமுயங்கினானால்.

(இ-ள்.) திருமேனியிற் புளக முண்டாகவும் கண்களில் நீர் பொழியவும் புருவமும் அழகிய தோளும் மார்பும் துடிக்கவும் வியப்புக் கொண்டவரான ஆழ்வார் பூமியிலிறங்கிப் பெருமானது திருவடித் தாமரைகளைத் தமது தலையி லணிந்து கொண்டனர். அடியார்களது எண்ணங்களை முடித்துக் கொடுக்கும் பெருமான் தமது திருக்கைகளாலே அவ்வாழ்வாரைத் தழுவியணைத்தனன். (எ-று.) (கசங)

கசச. தாடகைக்கசனியேதேயரதன்றவத்தின்பேறே
வீடணர்க்கினியவாழ்வேபரிதிசேய்க்கினியநட்பே
கூடகக்கரனாவிக்கோர்கூற்றமேயெனமீக்கூறும்
ஆடகக்கிரிபோல்வானையமலனுமருளினோக்கா.

(இ-ள்.) "தாடகையாகிய மலைக்குப் பேரிடி யானவனே! தசரதருடைய தவத்தின் பிரயோசன மானவனே! விபீஷணாழ்வானது இனிமையான வாழ்வுக்குக் காரணமானவனே! சூரிய புதல்வனாகிய சுக்கிரீவ மஹாராஜருக்கு அழியாத தோழனே! வஞ்சனையையுடைய கரன் உயிருக்கு ஒப்பற்ற யமனே! என்று அதிகமாகத் துதிக்கும் பொன்மலை போன்ற ஆழ்வாரை மலரகிதனான பெருமானும் கிருபையோடு பார்த்து, (எ-று.) (கசச)

கசரு. கழுமலுற்றினையனின்றாய்சனகியைக்கவர்ந்துபோய
முழுமனைக்குலங்களோடுமுடித்தணிமுறுவற்செவ்வாய்ச்
செழுமலர்க்குயிலைமீட்டேங்காணெனத்திருவைக்காட்டத்
தொழுமதிகுலத்தினானுந்துள்ளினனுவகைதூண்ட.

(இ-ள்.) "சோகங்கொண்டு வருந்தவேண்டா; நினது தாயாகிய சானகியை யபகரித்துக் கொண்டுபோன மூடனை அவனது குலங்களுடன் முடித்துவிட்டு, அழகிய தந்தபங்கியையும் சிவந்த வாயினையு முடையவளாய்ச் செழிப்புடைய தாமரை மலரிலிருக்கும் குயில் போன்ற பிராட்டியை மீட்டுக்கொண்டு வந்தோம்; காண்பாயாக" என்று சீதாபிராட்டியாரைக் காட்டச், சந்திரகுலத்தவராய்த் தொழக்கடவரான ஆழ்வாரும் தமக்குள்ளேயுள்ள சந்தோஷந் தூண்ட ஆநந்தத்தாற் றுள்ளினர். (எ-று.) (கசரு)

கசசு. அடுவரிப்புலிவாய்க்கோட்பட்டகன்றதோர்புனிற்றுவார்வங்
கொடுவரியினிற்றேர்ந்தெய்தக்கண்டதன்குழக்கன்றேபோல்
வடுவரியிங்கட்கேயவரிவிழிவதனத்தானைத்
தொடுவரிசிலையோன்காணத்துணையடிதொழுதுநின்றான்.

(இ-ள்.) கொல்லுந் தொழிலையுடையதாய் வரிகளுள்ள புலிவாயில் அகப்பட்டகன்ற ஒரு தலையீற்றுப் பசுவை ஆசையுடனே வழியில் தேடி அடையக் கண்ட அதன் சிறு கன்றைப் போல, களங்கமாகிய குற்றம் பொருந்திய சந்திரனை யொத்த செவ்வரிகருவரி பரந்த கண்களையுடையதான திருமுகமுடைய பிராட்டியாரைப், பிடிக்கப் படுவதாய்க் கட்டு ளமைந்த வில்லைத் தரித்த ஆழ்வார், சேவித்து, அவரது இரண்டு திருவடிகளையும் வணங்கி நின்றனர். (எ-று.) சந்திரனையொத்த முகமெனக. (கசசு)

கசஎ. செல்லறுத்தெனையாள்மூலத்தேவனுஞ்சிலைக்கைகொண்ட
மல்லல்வேடத்தைநீத்தேவரமருளலர்சங்காழி
வில்லடுகதைநீண்மேகமேனிநீள்வீடங்கமென்றோட்
பல்லவத்துணைத்தாட்பைங்கட்பார்மயில்பதுமப்பாவை

(இ-ள்.) துன்பத்தை நிவர்த்தித்து என்னை யடிமை கொள்ளும் ஆதிமூலமாகிய தேவனும், கோதண்டத்தைக் கையினிடத்துக் கொண்ட பெருமை பொருந்திய வேஷத்தை நீக்கி, அபயஹஸ்தமும், பாஞ்சஜந்நியமும், திருவாழியும், சார்ங்கமும், போர் செய்யும் கதாயுதமும், நீண்ட மேகம்போன்ற திருமேனியும், உயர்ந்த ஆண்மையுடைய மென்மையான திருத்தோள்களும், தளிர்போன்ற பாதத்தையும் பசிய திருக்கண்களையுமுடையரான பூமிப்பிராட்டியாரும் பெரிய பிராட்டியாரும் (எ-று.) (கசஎ)

கசஅ. பகிரதிச்சமலந்தந்தபதமலர்க்கமலம்பைம்பொற்
றுகின்மணித்திருவுந்தித்தாமரைநறைத்துளவின்றாமஞ்
செகின்மிசைத்திகழ்முந்நூல்செந்திருமணிவருசசந்தேயம்
அகிலமும்புரக்கும்பார்வையிருகுழையணிகிரீடம்

(இ-ள்.) கங்காநதி சலத்தைப்பெற்ற பாததாமரைமலர்களும், பசும்பொன்னுடையும், அழகிய திருவுந்தியாகிய தாமரையும், தேனையுடைய திருத்துழாய் மாலையும், தோண்மேல் விளங்கும் முப்புரிநூலும், சிவந்த கவுஸ்துபமும், ஸ்ரீவற்சமும, உலகமெல்லாவற்றையுங் காக்கும் பார்வையும், இரண்டு குழைகளும், அழகிய கிரீடமும் (எ-று.) (கசஅ)

கசகூ. மற்றுளவனப்பியாவும்பிறழ்தரமறைகளார்ப்ப
முற்றுசீர்ச்சனகனாரதாதியர்முன்னின்றேத்தச்
சுற்றுறக்குமுதனாதிபரிசனந்துவசந்தொங்கல்
பற்றுதீபங்களாதிமங்கலம்பரிசிற்சார

(இ-ள்.) மற்றுமுள்ள அழகெல்லாம் பிரகாசிக்கவும், வேதங்கள் கோஷிக்கவும், முதிர்ந்த சிறப்பையுடைய சனகர் நாரதர் முதலியவர்கள் முன்னின்று துதிக்கவும், குமுதர் முதலிய பரிசனங்கள் சுற்றிலு மிருக்கவும், கொடி பீலிக்குஞ்சம் பற்றக்கூடிய தீபங்கள் முதலிய மங்களங்கள் தக்கபடி சேர்ந்திருக்கவும் (எ-று.) (கசகூ)

கருO. அருந்தகைச்சேனைநாதன்திருக்கரப்பிரம்பானஞ்சி
நெருங்குநான்முகன்முக்கண்ணன்புரந்தராதியர்கணிங்கார்

மருங்குறவயினதேயன்மணிப்புயமலேமீயாவும்
தருமபராபரன்முற்றேன்றக்கண்டனன்றரணிவேந்தன்.

(இ-ள்.) அரிய பெருமையினையுடைய சேனைமுதலியாரது திருக்கைகளிலுள்ள பிரம்புக்குப் பயந்து நெருக்கமடையும் பிரமன் சிவன் இந்திராதியர்கள் நீங்காதவர்களாகிப் பக்கங்களிலிருக்கவும், பெரிய திருவடியின் அழகிய புயங்களாகிய மலைகளின்மீது எல்லாவற்றையும் தந்த பராபரனாகிய பெருமான் தமக்குமுன்னே சாக்ஷாத்காரமாகச் சேவித்தனர் பூமிக்கரசரான ஆழ்வார். (எ-று.) (கூ௰)

கருக. விதிர்த்துடல்புளகம்போர்ப்பவிழிகணீர்பொழியமென்மேற்
குதித்துளமதர்த்தானந்தக்கடலினுட்குளித்துவீயாக்
கதிகிறைதிருத்தாள்சென்னிமிலேச்சினன்கரங்கள்கூப்பித்
துதித்தனனவனானந்தத்தகைமைபார்குணித்துச்சொல்வார்.

(இ-ள்.) திருமேனி சிலிர்ப்புற்றுப் புளகமுண்டாகவும் திருக்கண்கள் நீர்பொழியவும் மேனமேலும் குதித்து, திருவுள்ளம் களித்து, ஆனந்தக் கடலிற் குளித்து, அழியாத மோக்ஷத்துக்குத் தலைவனான எம்பெருமானது திருவடிகளைத் தமது தலையி லணிந்து திருக்கரங்களைக் கூப்பிக்கொண்டு துதித்தனர். (இப்படியான) அவ்வாழ்வாரது ஆநந்தப் பெருமையை அளவிட்டுச் சொல்வார்கள் யார்? (ஒருவருமில்லை.) (எ-று.) (சுருக)

கருஉ. கவினவாம்பரியினேடைக்குரிசிலேக்கமலக்கண்ணன்
பொலிமணிவிமானமேற்றிக்கொண்டுவைகுந்தமபுககான்
ஒலிகடலுலகதளோாதன்றிருமொழியோதிவாழ
மலிகதிரமணிமார்பண்ணலபதத்துமன்னவனுமவாழ்ந்தான்.

(இ-ள்.) கடிவாளத்தை யுடையதாய்த் தாவும் குதிரையோடு அவ்வாழ்வாரைக், கமலம் போன்ற திருக்கண்களை யுடைய பெருமான, பொலிவுற்ற அழகிய விமானத்தி லேற்றிக்கொண்டு வைகுந்தம் புகுந்தனன். ஒலிக்கும் கடல் சூழ்ந்த உலகத்தி லுள்ளவர்கள் தமது திருமொழியைப் படித்து உஜ்ஜீவியா நிற்க, மிகுந்த பிரகாசமுள்ள கௌஸ்துபமணியை யணிந்த மார்பையுடைய பெருமானது பரமபதத்தில் ஆழ்வாரும் வாழ்வாராயினர். (எ-று.)

[வேறு குருபரம்பரையிற் கண்டது.]

*மாறன்குருகாநகர்க்கணித்தாவளங்கூர்பிரமபுரியிலரி
ஏறென் குலசேகரப்பெருமானெழிலார்திருமேனியையெய்தாப்
பேறென்றறிந்தேயறவோர்தாம்பெற்றுமறைசொல்விதமுறைபே
தேறன்புடனேதிருப்பள்ளிபடுத்துமகிழ்விற்சிறந்தனரால்.

(இ-ள்) நம்மாழ்வாரது திருக்குருகூருக்குச் சமீபமாய் வளமிகுதியையுடைய பிரமபுரி யென்னு மூரில், ஆண்சிங்கமென்று சொல்லப்படும் குலசேகராழ்வாரது அழகிய திருமேனியைத் தருமவான்கள் பெற்று, இது நமக்குப் பெறுப்பேறு என்றறிந்து, வேதத்திற் சொல்லும் முறைப்படி, தேர்ந்த பிரீதியுடனே திருப்பள்ளி படுத்து மகிழ்ச்சி மிக்கனர். (எ-று.)

வேறு.

கருரு. வானவன்குலக்கார்குலசேகரமன்னன்
ஆனவன்கதையறைந்தனமறைகுவாமணிப்பூண்
நானவன்முலைத்திருவுறையூரில்வாழ்நங்கை
தானவன்மதுத்திறல்கொண்மாயனைப்புணர்சரிதம்.

(இ-ள்.) சந்திரவமிசத்தி லவதரித்த பெருமையை யுடைய குலசேகராழ்வாரது சரிதத்தைச் சொன்னோம்; இனி அழகிய ஆபரணங்களையும் கஸ்தூரியையு மணிந்த திருமுலைத் தடங்களையுடைய திருவுறையூர் நாய்ச்சியார், தானவனாகிய மதுவென்னு மசுரனது வெற்றியை யழித்த பெருமானை யடைந்த சரித்தைச் சொல்லுவோம். (எ-று.) (கருரு)

---

[சிலதிவ்ய தேசங்களின் விஷயமாக ஆழ்வாரருளிச் செய்த திருப்பதிகங்கள் ஆழ்வார் அவ்வத்திவ்விய தேசங்களுக் கெழுந்தருளி மங்கலாசாசனஞ் செயதவைகளென வேறு செய்யுட் குருபரம்பரைகளிற் சொல்லப்படுகின்றன.

‡ அன்னகுலசேகராழ்வாரருந்தமிழாற்
பன்னும்பனுவல்பத்துடனேயோரைந்தாய்
மன்னுங்கவிதையதில்மாதுகுடிவாழ்மார்பன்
றன்னூர்திருப்பதிகளெட்டெனவேசொல்லுவரால்.

‡ சீராரும்பொன்னரங்கஞ்சித்திரகூடத்துடனே
ஏராரும்விற்றுவககோட்டெமுனைநதிகண்ணபுரம்
காரார்வடவேங்கடம்வல்லவாழொடுமே
பேராரயோத்திநகரென்னவேபேசுவரால்.]

இவ்வாழ்வார் கலியுகம் இருபத்தெட்டாவது வருஷமான பராபவ வருஷம் மாசிமாதம் சுக்லபக்ஷ துவாதசி புனர்பூசம் வியாழக்கிழமை கூடின தினத்தில் திருவவதரித்தனரெனவும் அறுபத்தேழு வருஷகாலம் இவ்வுலகில் எழுந்தருளியிருந்தன ரெனவுங் கூறுவர்.

## ௯-வது குலசேகரச்சருக்கம் முற்றிற்று.

ஸ்ரீ

# ௩-வது பதுமைச்சருக்கம்.

இப் பதுமைச்சருக்கம் உறையூர் நாய்ச்சியார் வைபவத்தை யுரைப்பது. இவரை வளர்த்து அரங்கநக ரப்பனுக்குச் சமர்ப்பித்த சோழபூபதியின் காலத்தி லவதரித்தவர் திருப்பாணாழ்வா ராதலால், அவ்வாழ்வார் வைபவத்தைச் சேர இந்நாயச்சியார் வைபவ முரைக்க நேர்ந்தது. இது ஆறுயிரப்படி குருபரம்பரையில் வெகு சுருக்கமாகச் சொல்லப்பட்டுளது.

[திருவுறையூர்.]

௧. விலங்கலாஞ்சைய மீதினுமேதினி
துலங்கலாயரங்கேசனற்றோளிணை
அலங்கலாகிமந்தாகினியாற்றினும்
பொலங்குலாவியபொன்னியின்றென்கரை

(இ-ள்.) சையமாகிய மலையின் மேலிடத்தைக் காட்டிலும் பூமியே விளங்குதலாகத் திருவரங்கநாதனது நல்ல இரண்டு தோள்களிற் சாத்திய திருமாலை போன்றதாய, கங்காநதியினும் அழகு பொருந்திய திருக்காவேரியாற்றின் தென்கரையில், (எ-று) (௧)

காவேரியாறு, வடகாவேரி தென்காவேரியாகப் பிரிந்து கோயிலைச் சூழ்ந்து போய்க் கூடுதலால், "தோளிணை அலங்கலாகி" என்றார். "கங்கையிற் புனிதமாயகாவிரி" என்னும் அருளிச்செயலை நோக்கி 'மந்தாகினியாற்றினும் பொலங்குலாவிய பொன்னி' என்றார்.

௨. புறந்தயங்குபுரிசைப்பொற்கோபுரம்
சிறந்தபன்மணிச்சித்திரமேடையின்
நிறம்படர்ந்தெண்டிசையிருணீக்குசீர்
உறந்தையென்பதொருதிருமாநகர்.

(இ-ள்.) பக்கங்களில் விளங்கும் மதில், பொற்கோபுரம், சிறந்த பலரத்தினங்க ளிழைத்த சித்திரத்தொழி லமைந்த மேடை என்னு மிவைகளின் ஒளிபரவி, எட்டுத்திசைகளிலு முள்ள இருளை நீக்கும் சிறப்பினையுடைய திருவுறையூர் என்று பெயர் சொல்லப்படுவது, பெருமை பொருந்திய ஒரு அழகிய நகரமாகும். (எ-று.) (௨)

௩. விண்டலத்தில்விளங்கமராவதி
அண்டர்கோனுக்கமைந்துளதாமென
மண்டலத்தின்மனுகுலம்வாழவே
புண்டரீகன்புனைந்ததப்பொன்னகர்.

(இ-ள்.) ஆகாயத்தில் விளங்கும் அமராவதி யென்னும் நகரம் தேவேந்திரனுக்கு அமைந்திருப்பது போலப், பூமியினிடத்துச் சோழவமிசம் வாழும்படி பிரமன் அலங்காரமாகப் பண்ணினதாகும், அந்தப் பொன்மயமான (உறையூர்) நகரம். (எ-று.) (௩)

[சோழபூபதி.]

ச. அந்தமாநகர்வைகியன்றூர்கலி
மந்தராசலத்தாற்கடைமாதவன்
சந்தமாமணித்தாமரைத்தாளிணை
எந்நாளுமிதயத்திருத்தினன்.

(இ-ள்.) அந்தப் பெருமைபொருந்திய நகரத்திலிருந்து, அக்காலத்தில் பாற்கடலை மந்தரமலையாலே கடைந்த மாதவனது அழகிய ஆபரணம் பூண்ட தாமரைபோன்ற இரண்டு திருவடிகளையும் எந்நாளும் தன் இருதயத்தில் வைத்து, (எ-று.) (ச)

ரு. வேளியாணர்விழைந்திடமேவலார்
தாளில்வீழத்தரணிபுரந்துளான்
வாளிராவயக்குத்தமல்லப்பெயர்
ஆளிவாளருக்கன்குலத்தண்ணலே.

(இ-ள்.) (தன்) அழகை மன்மதனும் விரும்பவும், சத்துருக்கள் பாதங்களில் விழவும், பூமியைக்காத்தனன்; (எவருடைய) வாளும் அழிதலான வலிமையுடைய குத்தமல்லன் என்னும் பெயர்கொண்டு சிங்கம்போன்றவனாகிய ஒளியுடைய சூரியகுலத்தரசன். (எ-று.) (ரு)

ச-வது ரு-வது பாக்களிரண்டும், குத்தமல்லப்பெயர் ஆளியான அண்ணலானவன் மாதவனது தாமரைத்தாளிணை இதயத்திருத்தித் தரணிபுரந்துளான் என இயைதல் காண்க.

[சோழபூபதி வந்து திருவரங்கநாதனைச் சேவித்தல்.]

சா. யானைவையமிவுளிவில்வாளயிற்
றானைசூழ்தரசசங்கினமார்த்தெழச
சோனைவானிற்றுவைத்திடத்துந்துமி
ஏனைவான்பணைவாரியினேங்கவே

(இ-ள்.) யானை, தேர், குதிரை, வில்லையும் வாளையும் வேலையுமுடைய காலாள் இவைகள் தன்னைச் சூழவும், சங்கக்கூட்டம் ஒலித்தெழவும், துந்துமி சோனைமாரியைப் போல ஒலிக்கவும், இதரமான உயர்ந்த வாத்தியங்கள் சமுத்திரம் போற் கோஷிக்கவும், (எ-று.) (சா)

இதுமுதல் மூன்றுங் குளகம்.

எ. குடைகள்வட்டக்கொடிவிளக்கங்குடி
தொடையல்சாமரமங்குசந்தோரணம்
மிடைபொலங்கயன்மீன்முதன்மங்கலம்
அடையவார்த்தெழுவந்தியரார்க்கவே

(இ-ள்.) வட்டமான குடைகள், கொடிகள், மங்கலவிளக்குகள், குடிகள், மாலைகள், சாமரங்கள், அங்குசங்கள், தோரணங்கள், நெருங்கிய அழகிய கயல்மீன்கள் முதலிய மங்கலங்களெல்லாம் ஆர்ப்பரித்து எழவும், மங்கலப்பாடகர் பாடவும், (எ-று.) (எ)

அ. பாகசாதனன்பண்ணவர்சூழமா
மேகமீதிலிம்மேதினிமேவனோர்
ஆகவேந்தரனுசூறவாங்கொர்நாள்
நாகமீதிலரங்கத்தைநண்ணினான்.

(இ-ள்.) இந்திரன், தேவர்கள் சூழும்படி, கரிய மேகத்தின்மீது இப் பூமியையடைவதை யொக்கும்படியாக, மன்னர்கள் சூழும்படி அங்கொரு தினம் யானையின்மீது திருவரங்கத்தை யடைந்தனன். (எ-று.) (அ)

கூ. தரங்கவார்புனற்சானவிதன்னினும்
வரங்களாலுயர்வானதிழூழ்கிவான்
புரங்களுவிற்பொடிபடுத்தோன்புகழ்
அரங்கநாயகன்கோயிலேயண்மினான்.

(இ-ள்.) அலைகளோடு கூடிய விஸ்தாரமான நீரை யுடைய கங்காநதி யினும் வரங்களா லுயர்ந்ததாகிய உயர்ந்த திருக்காவேரி யாற்றில் நீராடி, ஆகாயத்திற் சஞ்சரிக்கும் முப்புரங்களை அக்கினிச்சுவாலைகளாலே சாம்ப ராக்கிய சிவபெருமான் புகழும் திருவரங்கநாயகனது திருக்கோயிலே யடைந்தனன். (எ-று.) (கூ)

க0. பழுதுதீர்ந்தபணிப்பலிமூர்த்தியைத்
தொழுதுபுள்ளிறைதோன்றத்துவசமீ
தெழுதுதம்பமிறைஞ்சித்தன்னிந்தியம்
முழுதுமார்வமுதல்வயின்முற்றவே

(இ-ள்.) பழுதற்ற தொழி லமைந்த பலிபீடத்தைத் தொழுது, பெரிய திருவடியானவர் தோன்ற வெழுதிய துவசத்தை மேலிடத்தி லுள்ள ஸ்தம் பத்தை வணங்கித், தனது இந்திரியங்கள் முழுதும் ஆர்வமுதலான அப்ப னிடத்துச் சேரும்படி, (எ-று.) (க0)

கக. மறையினான்முகன்வாசவன்வார்சடைப்
பிறையினான்புகழ்பெட்டகக்கோயிலே
முறையினான்குவலஞ்செய்துமூலமாம்
இறையினான்மணிமண்டபமெய்தினான்.

(இ-ள்.) வேதங்களை யோதும் பிரமன், இந்திரன், நீண்ட சடையினிடத் துப் பிறையை யணிந்த சிவபிரான் ஆகிய இவர்கள் புகழும் பெட்டகம் போன்ற திருக்கோயிலே அவ்விடத்தில் முறையாக வலஞ்செய்து, ஆதிமூல மாகிய பெருமானது அழகிய மண்டபத்தையடைந்து, (எ-று.) (கக)

கஉ. சயனையாதிவிசயனைத்தாடொழு
தயனைநாபியினன்றருளாரணப்
பயனைநாளும்பயிலடியார்கடம்
வயனைமாயனைவாழ்த்திவணங்கினான்.

(இ-ள்.) முதலில் ஜயனையும் விஜயனையும் திருவடிதொழுது, அன்று பிர மனைத் (தனது) திருவுந்தியிற் பெற்றருளினவனும் வேதத்திற் சொல்லப் படும் பிரதானமான பயனானவனை, எப்போதும் ஆசிரயித்த அடியார்கள்

வசமா யிருப்பவனை, ஆச்சரியமான குணசேஷ்டிதங்களை யுடையவனைத் துதித்துப் பணிந்தனன். (எ-று.) (கஉ)

கங. முண்டகத்தின்முளைத்தெழுமூலமே
தண்டரும்பொருள்பூத்தருள்சாகையே
அண்டர்தேடுமரும்பலமேயருள்
எண்டவர்க்கொழியாச்சுவையின்பமே.

(இ-ள்.) தாமரையினிடத்து ஆவிர்ப்பவித்து எழுந்தருளிய மூலப் பொருளானவனே! கெடுதலில்லாத பொருள்கள் உற்பத்தியாகும் வேத சாகைகளானவனே! தேவர்கள் தேடும் அருமையான பிராப்பியரூபமானவனே! அருளையே யெண்ணியிருக்கும் தவசிகளுக்கு ஒழியாதே சுவைக்கும் இன்பமானவனே! (எ-று.)

பெருமான் முளைத்த தாமரையாவது ஆசநபதுமமாம். பரமபதநாதன் ஆயிரமிதழ்ப் பதுமத்திலும், சூரியமண்டலாந்தர்வர்த்தியான நாராயணன் தாமரையின் மீதும், ஹயக்ரீவ மூர்த்தி வெண்டாமரைமலரிலும் எழுந்தருளியிருப்பதாக நூல்களிற் கூறுவதாலும் "தண்டாமரை சுமக்கும் பாதப் பெருமானை" என்று ஆழ்வாரும், "ஆஸநபத்மத்திலழுத்தின திருவடிகளும்" எனப் பூர்வாசார்யர்களும் அருளிச் செயதிருத்தலாலும் 'முண்டகத்தின் முளைத்தெழு மூலமே' என்றார். இச்செயயுளில் மூலம், சாகை, பலம் சுவையின்பம் என்பவைகள் வேர், கிளை, பழம், சுவையினினிமை, என முறையே பொருளாய முறையணியும், இறைவனை யிவ்வாறு உருவகப்படுத்தியதால் உருவகவணியும், இவைகளே காரணப்பொருள், வேதசாகை, பலரூபமாயிருத்தல், அநுபவித்தொழியாது சுவைக்குமின்பம் எனவேறு பொருள்தரலால் சிலேடையணியும் விரவிநிற்றல் காண்க. (கங)

கச. மாந்தரங்கமலத்தயன்மாதுமை
காந்தரங்கம்புளகெழுகங்கைதாழ்
பூந்தரங்கநதித்துயிலவோய்பொருப்
பேந்தரங்கவிடர்க்கடற்றெப்பமே.

(இ-ள்.) மனிதர்களும், அழகிய கமலத்திலிருக்கும் பிரமனும், அழகிய உமாதேவியாரின் நாயகரான சிவபிரானும், சரீரம் புளகெழுவாராக, கங்கை தாழ்ந்து வணங்கும் அழகிய அலைகளை யுடைய திருக்காவேரியின் மத்தியில் அறிதுயிலமர்ந்தவனே! கோவர்த்தநகிரியைத் தாங்கிய திருவரங்கனே! இடராகிய கடலைக் கடப்பதற்கான தெப்பம் போன்றவனே! (எ-று.)

கரு. மீனமாமைவராகம்விறலரி
மானவாமமழுவிலலம்படை
ஆனமூவர்கண்ணன்பரியாமுயர்
ஞானவாரிதியேயருளுதனே.

(இ-ள்.) மீனம், ஆமை, வராகம், வெற்றியை யுடைய நரசிங்கம், சிரேஷ்டமான வாமநம், மழுவும் வில்லும் கலப்பையும் முறையே ஆயுதமாக வுடைய பரசிராமன், ரகுராமன், பலராமன் என்னு மூவர், கண்ணன், கற்கி என்னும் திருவவதாரங் கொண்ட உயர்ந்த ஞானசமுத்திரமே! கிருபா சக்தியை யுடைய தலைவனே! (எ-று.) (கரு)

கசு. என்றிறைஞ்சியிறையினைத்தாண்மலர்
ஒன்றிருஞ்செழுந்தீர்த்தமுண்டொண்மணி
துன்றிமின்சடகோபமுஞ்சூடியே
வென்றிவேந்தன்விடைகொடுமீண்டனன்.

(இ-ள்.) என்று, பெருமானை வணங்கிப் பெருமையை யுடைய செவ்விய ஸ்ரீபாததீர்த்தம் உண்டு, ஒளியையுடைய மணிகள் நெருங்கி மின்னும் ஸ்ரீ சடகோபமும் தரித்து, வெற்றியை யுடைய அரசன் விடைபெற்றுக்கொண்டு திரும்பினன். (எ-று.) (கசு)

[பெரியபிராட்டியார் பதுமையாராக ஆவிர்ப்பவித்தல்.]

கள. மஞ்சுலாவுமணிமதின்மாநகர்
புஞ்சவாகைப்புரவலன்போநெறி
அஞ்சவாவியிலம்புயமாடகக்
கஞ்சவாண்மலர்க்கண்ணியையீன்றதே.

(இ-ள்.) திரண்ட வெற்றிமாலையை யணிந்த அரசன், மேகந் தவழும் அழகிய மதிலை யுடைய பெரிய (உறையூர்) நகரத்துக்குப் போகும் வழியில், அன்னங்களை யுடைய தடாகத்தி லுள்ள (ஒரு) தாமரை மலரானது, பொற்றாமரை மலரின்கண் ணெழுந்தருளியிருக்கும் பெரியபிராட்டியாரைப் பெற்றது. (எ-று.) (கள)

கஅ. மதித்தவாரிதிமாமலர்க்கஞ்சமீ
துதித்தவாறிவ்வுலகமுங்காணவே
விதித்தவாவணியோணத்துமேவலும்
கதித்தவாண்மணித்தோளவன்கண்டனன்.

(இ-ள்.) (தேவர்கள்) கடைந்த பாற்கடலில் பெருமை பொருந்திய தாமரை மலரின்மீது ஆவிர்ப்பவித்த விதத்தை இவ்வுலகிலுள்ளாருங் காணுமாறு, அவதாரத்துக்கென்று நியமிக்கப்பட்டதான ஆவணி மாதத்தில் திருவோண நக்ஷத்திரத்தில் (பிராட்டியார்) அவதரித்தவுடனே, உயர்ச்சியான ஒளிபொருந்திய மணிகளை யணிந்த தோள்களை யுடைய அரசன் கண்டனன். (எ-று.)

[பதுமையாரைச் சோழபூபதி யெடுத்து வளர்த்தல்.]

வேறு.

கக. தன்னகமலர்க்குளுறைசக்கரமலர்க்கை
முன்னவனைவிட்டிவணடத்தன்முறைமைத்தே
என்னவுநினைத்தவனிடத்திடுகருத்தோ
மன்னவன்மணித்தொடிமலர்க்கையினெடுத்தான்.

(இ-ள்.) மன்னவன் இரத்தின மிழைத்த கங்கண மணிந்த மலர் போன்ற கைகளாலே (பிராட்டியாரை) யெடுத்தனன். (அப்படி யெடுத்தது), தனது மனமாகிய மலர்க்குள் நித்தியவாசஞ் செய்யுமவனாய்த் திருச்சக்கரத்தைத் தரித்த மலர் போன்ற கையனாய் யாவர்க்கும் முற்பட்டவனானவனை விட்டு இவ்விடத்திருத்தல் முறைமையாகுமோ என்று நினைத்து, அந்தப்பிராட்டியைப் அப்பெருமானிடத்தி லிடுவதான கருத்தேயோ. (எ-று.) (கக)

இதுவும் அடுத்த செய்யுளும் கவிக்கூற்று.

உ0. சித்தமகிழ்வுற்றவனெடுத்ததுநிலைக்கார்
சத்தலைகடற்கவர்கவுத்துவநிகர்க்கும்
அத்தடமடக்கொடியலாக்கைகொடருடபார்
உத்தமபுரகவெனவளித்ததுவுமொக்கும்.

(இ-ள்.) மனமகிழ்ந்து (பிராட்டியை) அரசனெடுத்த தோற்றமானது:— வில்லிட்டிருக்கும் மேகம் போன்ற எம்பெருமானுனைவன் தொனிக்கும் திருப்பாற்கடலினின்று அடைந்த கௌஸ்துபமணியை யொத்த அந்தத் தடாக மாகிய பெண்ணானவள், தனது தாமரை யாகிய கையால், "அருளுள்ள அரசனே! (இவளை) வளர்ப்பாயாக" என்று சொல்லிக் கொடுத்ததையு மொத்திருக்கும். (எ-று.) (உ0)

உக. எடுத்தவன்மலர்க்கையினிடுக்கணையிழித்தே
விடுத்தனனுளக்கனிவிருந்தலின்வியப்பின்
அடுத்தனன்மணித்திரளமைத்தமனையற்பாற்
கொடுத்தனன்மனைக்குயர்குலக்கொடிகரத்தில்.

(இ-ள்.) மலர் போன்ற கைகளாலே எடுத்த அரசன், துனபங்களைத் தாழ்த்தி விடுத்து, உள்ளத்தில் அன்புமிகுதியா லுண்டான ஆச்சரியத்துடன், மணித்திரள்களமைத்த தன அரமனை யடைந்து, இல்வாழ்க்கைக்குச் சிறந்தவளான தன் மனைவியின் கரத்தில் அன்போடு கொடுத்தனன். (எ-று.) (உக)

உஉ. களித்தனடளிர்த்தனள்களிக்கடலகத்தே
குளித்தனள்கரத்துணைகுவித்தனள்குறைப்பார்
அளித்தவரிறைத்தவமடுத்ததெனவறகா
ஒளித்தமினுசுப்பினளுரைத்தனளுவப்பால்.

(இ-ள்.) (அவ்வளவிலே), நிலையாமல் பிரகாசிக்கும் மின்னல் போன்ற இடையை யுடைய மனையாள், களிப் படைந்தனள்; பூரித்தனள்; சந்தோஷ சாகரத்திற் குளித்தனள்; இரண்டு கைகளையுங் குவித்தனள்; பூமியின் குறைப்பாகங்களை (சிற்சில பாகங்களைக்) காக்கும் அரசர் தலைவனான சோழபூபதியின் தவப்பயனே (தன்னை வந்து) சேர்ந்த தென்று உவப்பால் உரைத்தனள். (எ-று.) (உஉ)

உரு. அன்றுசனகன்புவியணங்கினையகத்தே
சென்றுதவவந்துகொடிருந்திழைநிகர்ப்பாள்
கன்றுபயில்கஞ்சநிகருங்கைகொடுகற்பாற்
குன்றுநிகர்கொங்கையமிர்தன்பொடுகொடுத்தாள்.

(இ-ள்.) முற்காலத்தில் சனகமகாராசன், பூமி பெற்ற சீதாபிராட்டியாரைத், தன் மாளிகைக்குட், சென்று கொடுக்க, வந்து ஏற்றுக்கொண்டிருந்தமான ஆபரணங்களை யுடைய சனகராசன் மனைவியாரை நிகர்த்தவளாகி, வளைகளை யணிந்தனவும் தாமரையை யொத்திருப்பனவு மான கைகளைக்கொண்டு, கற்பினாலே மலைக்குச் சமானமான கொங்கையி லுள்ள அமிர்தத்தை அன்போடு கொடுத்தனள். (எ-று:) (உரு)

உச. அண்டர்மனைபுக்குயரடுக்குறியதிற்பால்
உண்டலைகடற்றுயிலொருத்தனதுரப்பால்

கொண்டவனுக்கிவள்கொடுத்தனண்முலைப்பால்
எண்டரவெனிற்சுவையெதற்குயர்விசைப்பாம்.

(இ-ள்.) இடையர்களது வீடுகளிற் பிரவேசித்து உயரமாக அடுக்கிய உறியிலுள்ள பாலை யுண்டு அலைகளை யுடைய திருப்பாற் கடலில் அறிதுயிலமரும் ஒப்பற்றவனான பெருமானது உரப்பாலைக் கொண்டவனுக்கு, இவ்வரசன் மனைவி எளிதாக முலைப்பால் கொடுத்தனள் என்னில், எந்தப் பாலுக்கு உயர்வைச் சொல்லுவோம். (எ-று) (உச)

உரப்பா லென்றதை மார்பாகிய இடமெனப் பொருள் கொள்க.

உரு. செந்திருவையொப்பரிபசிந்துரநுதற்கூர்
சந்திரனிகர்த்தொளிர்தருங்குயிலினைப்பூ
உந்தியயனைத்தருமுகுந்தனதுரத்தார்
இந்திரைதனைபபதுமையென்றுபெயரிட்டார்.

(இ-ள்.) சிவந்த நிறத்தை யுடைய பிராட்டியை, ஒப்பற்ற சிந்தூரப் பொட்டிட்டு விளங்கும் நெற்றியானது ஒளிமிகுந்த சந்திரனை யொத்துப் பிரகாசிக்கும் குயிலை, தாமரையாகிய உந்தியினிடத்துப் பிரமனைப் பெற்ற முகுந்தனது மார்பினிடத்தில் நித்தியவாசஞ் செய்யும் இலக்குமியைப், பதுமை என்று பெயரிட் டழைத்தார்கள். (எ-று) (உரு)

உசா. சதங்கைநுதலிற்சுடிகைதண்டைகனகத்தாழ்
குதம்பைதரளத்தொடைகுறுந்தொடைதிருத்திப்
பதங்கள்கவினப்பரிபுரம்பலபயிற்றிக
சதம்பமுலைமைகுழலகவின்பெறவளர்த்தாள்.

(இ-ள்.) சதங்கை, நெற்றியிலுள்ள சுட்டி, தண்டை, பொற்றூழ், குதம்பை, முத்துமாலை, சிறியமணிமாலைகள் என்னுமிவைகளை யணிந்து, பாதங்கள் அழகுபெறும்படி பல பாதகிண்கிணிகளைத்தரிசநூ, வாசனைச்சாந்து பூசிய தனமும் கரியகூந்தலு முடைய அரசன்மனைவி, பதுமையானா அழகுபெறும்படி வளர்த்தனள். (எ-று.) (உசா)

உஎ. உவந்தரியதொட்டிலையுகைந்தடலுரப்பார்
தவழ்ந்தனையிருத்திடவிருந்தினிதுசற்றே
இவர்ந்துநடைகற்கலுமிளங்கொடிதழைத்தே
சிவந்தநளினக்கொடிதினம்பலகழித்தாள்.

(இ-ள்.) அருமையான தொட்டிலை யுவந்தும் (தொட்டிலிற் கிடந்தும்), எழுந்தும், வலிமை யுடைய மார்பாலே பூமியில் தவழ்ந்தும், அன்னையிருத்த நன்கு இருந்தும், சற்று எழுந்தும், நடைகற்ற வளவிலே, சிவந்த தாமரையில் வீற்றிருக்கும் பெரியபிராட்டியாகிய இளங்கொடி போன்ற பதுமையார், நாளுக்குநாள் வளர்ந்து பலதினங்களைக் கழித்தனர். (எ-று.)

உஅ. பேதையையகற்றினள்பெதும்பைவயதுற்றுள்
கோதையைமிகக்கரியகொண்டையின்முடித்தாள்.
போதிலயனைத்தருமரங்கன்முதல்பொற்பார்
காதையைவிரித்தனள்சழங்குகளெடுத்தே.

(இ-ள்.) பேதைப் பருவத்தை யொழித்துப் பெதும்பைப பருவத்தை யடைந்தனர். தமது மிகவும் கரியகூந்தலைக் கொண்டையாக முடித்த னர். தாமரைமலரி லிருக்கும் பிரமனைச் சிருஷ்டித்த திருவரங்கனது முதன்மையாயப் பொலிவுற்ற சரித்திரங்களைக் கழங்குக ளெடுத்தாடி விரித் துப்பாடினர். (எ-று.) (உஅ)

ஐந்து முதல் எழுவய தளவும் பேதைப்பருவம்; எட்டு முதற் பதினொரு வயதளவும் பெதும்பைப்பருவம்.

உகூ. சொல்லியமுதற்பருவமெஞ்சவளர்தோளாள
மெல்லியன்மலர்க்கையொளிவிஞ்சைமனையாடாள்
அலலியல்பொழிற்றிருவரங்கரிசைபாடாள்
வல்லியன்முலைப்பருவமங்கைவடிவானாள்.

(இ-ள்.) முன்பு சொல்லிய முதன்மையான பருவங்கள் மிஞ்சின அள விலே, வளரும் தோள்களையுடைய பதுமையார், மிருதுவான சுபாவத்தை யுடைய மலர்போன்ற கைகளால் பிரகாசிக்கும் சிற்றில்கோலி விளையாடா ர்; இருள் கூடிய சோலை சூழ்ந்த திருவரங்கநாயகனது கீர்த்தியைப் பா டார்; அப்போது சூதாடுசெருவி போன்ற தனங்களையுடைய மங்கைப்பரு வத்துக்குரிய வடிவுடையவரானார். (எ-று.) (உகூ)

பன்னிரண்டு முதல் பதின்மூன்று வயதளவும் மங்கைப்பருவம்.

[பதுமையார் அரங்கேசனிடத்து விரமோக மடைதல்.]

வேறு.

ஙo. அரவணையில்விழித்துறங்கு மரங்கேசன்றனையகத்துளமை த்தலாலே, பரவுமவன்படையுமய லகலாதுபுறங்காக்கும் பான் மையேபோல், உரமருவுவரிசிலையுங் கதிர்வாளும்வலம்புரியு முல ப்பில்சோதி, விரவுதிகிரியுமடங்கை நுதல்விழிகந்தரமுலையாய் விளங்காநின்றாள்.

(இ-ள்) ஆதிசேஷசயனத்தில் அறிதுயிலமரும் திருவரங்கநாயகனைத் திருவுள்ளத்தி லமைத்தலினாலே, யாவரும் வணங்கும் அவனது ஆயுதங் களும் அப்புறம்போகாமல் வெளியிடத்தைக் காத்துக்கொண்டிருக்கும் வி தம்போல, வலிமைபொருந்திய கட்டுகளமைந்த சிலையும் பிரகாசமுடைய வாளும் சங்கமும் கெடுதலில்லாத பிரகாசமுடைய சக்கரமும் முறையே பதுமையாரது புருவமும் கண்களும் கழுத்தும் தனங்களுமாக விளங்கியிருந் தனர். (எ-று.) (ஙo)

சிலை-புருவம், வாள்-கண்கள், சங்கம்-கழுத்து, சக்கரம்-தனம் என நிரனிறையாகக் கொள்க. அரங்கன் கோயிலிலிருப்ப ஆயுதங்கள் அகலாது புறங்காப்பதுபோல, அவன் பதுமையாரது உள்ளக்கோயிலிலமைந்திருப்ப, அவ்வாயுதங்கள் பதுமையாரது அவயவங்களாய் விளங்கியிருந்தன என்ப தாம். .

ஙக. ஈன்றதாமரைப்போல வதனமுமம்மலர்மதுப்போ லினிய வாக்குங், கான்றமாமணிப்போலு மொளிநகையுமளிகுலம்போற்

சதுப்புகாப்பட், டோன்றமாபொருட்டனைய பொன்னிறமும்
படைத்தழகின் ஞேறுறமெலலாஞ், சான்றமாமலர்மடந்தை யரங்
கேசன்றனைப்பரவுந தகைமைபூண்டாள.

(இ-ள்) (இன்னும்) தன்னையீன்ற தாமரைமலரைப்போன்ற திருமுகமும், அந்த மலரிலுள்ள தேனைப்போன்ற இனிமையான சொல்லும், அழ உமிழ்ந்த பெருமை பொருந்திய முத்துப்போன்ற பிரகாசமுடைய பற்களும், (அம்மலரிற் படியும்) வண்டுகள் போன்ற கூந்தலும், (அம்மலரின்) மகதியிறஞ்ேறுறு ம அந்தப் பெருமை பொருந்திய பொருட்டுக்குச் சமானமான பொன்னிறமும் அடைந்து, அழகின காட்சியெல்லாம் நிறைந்த பெருமை பொருந்திய மலரிற் பிறந்த பதுமையார், திருவரங்கேசனை வணங்கும் விரதத்தை மேறகொண்டனர். (எ-று.) (௬௧)

௬௨. கார்படியுங்கொடைமிளிக் குத்தமல்லன்றவமடந்தை கா
லைமாலை, நீரபடியிற்சந்திரபுட் கரணிதிருககாவேரி நீரிலாடும்,
தார்படியுங்குழறகணியி னரஙகேசன்பததுளவத் தாமஞ்சூடும,
பேர்படியிறபுகனறிடுமகா லெம்பெருமானறிருநாமம் பேசுமா
தோ.

(இ-ள்.) மேகம் போன்ற ஈகையும் வலியு முடைய குத்தமல்லனது தவத்தி லுதித்த பதுமையார், காலையும் மாலையும் நீராடினுல் சந்திரபுஷ்கரணி திருககாவேரி நீரிலேயே ஆடுவார்; பொருந்துங் கூந்தலுக்கு மாலையைச் சூடினுல் திருவரங்கேசனது திருவடித் திருத்துழாயமாலையையே சூடுவார்; பூமியில் ஒருவர் பெயரைச் சொல்லுமிடத்து அவ்வெமபெருமானது திருநாமங்களையே சொல்லுவார்; (எ-று.) (௬௨)

௬௩. சோதிவால்வளைகதைவாள் கசசிமலலைமயிலைவயிற் றூய்
நீர்வாவிப், போதில்வாழ்பொய்கைபூ தன்பேயன்றவதரித்த பொ
ருவிலகாட்சி, ஆதியோகியர்முதலோர் பரந்தாமனருண்முறையே
யந்நாட்கூறுமு, கோதிலாதுயாந்தசெழுந் தமிழ்மறையேயனுதின
முங் கூறக்கேட்கும்.

(இ-ள்.) மிக்க ஒளியையுடைய பாஞ்சஜந்நியமும், கதாயுதமும், நாந்தகமும் முறையே திருக்கச்சியிலும், திருக்கடன்மலலையிலும், திருமயிலையிலும் பரிசுத்தமான நீரையுடைய தடாகங்களிலுள்ள புஷ்பங்களில் வாழ்வெய்திய பொயகையாழ்வாரும், பூதத்தாழ்வாரும், பேயாழ்வாருமாக அன்று அவதரித்த ஒப்பற்ற ஞானத்தையுடைய ஆதியோகியர் முதலானவர்கள், பரந்தாமனுன பெருமானது அருளப்பாட்டின முறைப்படி, அக்காலத்தில் சொல்லியருளியதாயக் குற்றமற்றுயர்ந்த செழுமையான தமிழ்வேதமே எப்போதும் (பெரியோர்) ஓதக் கேட்பார்; (எ-று.) (௬௩)

௬௪. வள்ளையினுற்றமதுமகி ணைப்புசழுமாதர்தமை வயிர்த்து
நோக்கும், கொள்ளைமலர்க்கடிகாவிற் கூகூவென்னுங்குயிலைக்
கொதித்துநாடும், எள்ளுங்கொழின்மூககி னிகுளையையாதித்த
னிமா லிசைகூறென்னும், கிள்ளையைத்தன்கரத்தேந்தி யரங்கேசன்
றிருப்பெயர்கீ ளைத்தாயென்னும்.

(இ-ள்.) வள்ளை யென்னும் பாட்டாலே தங்கள் புருஷர்களைப் புகழும் பெண்களைக் கோபித்துப் பார்ப்பார்; மிக்க மலர்களிலுள்ள வாசனையுள்ள சோலைகளில் கூகூவென்று கூவுங் குயிலைக் கோபத்தோடு தேடுவார்; எள்ளின மலரையொத்த அழகிய மூக்கை யுடைய தோழியைப் (பார்த்துக்) காரணபூதனான ஒப்பற்ற பெருமானது கீர்த்தியைச் சொல்லுவாயாக வென்பார்; கிளிப்பிள்ளையைத் தமது கையிலேந்திக்கொண்டு, அரங்கேசன் திருநாமத்தையே நீ சொல்லுவாயாக வென்பார்; (எ-று.) (ருச)

வள்ளை யென்பது உலக்கையை யோச்சிக்கொண்டு தமது தலைவரது வளங்களைக் கூறிப் பெண்கள் பாடும் ஓர் பாட்டு.

ருரு. சேயிதழ்நாவிற்கருத்தி லுவமையிலெட்டக்கரமே செப்புந்தேரும், வேயினிணைமணித்தோளி லெழுதிடுங்காறசங்காழி விரும்பாநிற்கும், தூயினியதிலகமிடற் கத்தூரியொடுதிருமண் துலங்கச்சாத்தும், கோயிலினுட்புகுதருங்காற் றிருவரங்கம்பெருங்கோயி லெனக்கூறும்.

(இ-ள்.) சிவந்த இதழை யுடைய பதுமையார், ஒப்பற்ற அஷ்டாக்ஷரத்தையே நாவாலே சொல்லுவார்; அவ்வஷ்டாக்ஷரத்தையே கருத்தாலே சிந்திப்பார்; மூங்கில்போன்ற அழகிய இரண்டு தோள்களில் சித்திரமெழுதும்போது திருச்சங்கும் திருவாழியுமே விரும்புவார்; பரிசுத்தமும் இனிதுமான திலக மிடுவதாயின் கஸ்தூரியோ திருமண்ணை விளங்கும்படி யணிவார்; கோயிலுட்புகும்போது திருவரங்கம் பெரியகோயிலென்று கூறுவார்; (எ-று.) (ருரு)

ருசு. காமாரிநம்பெருமான் சரிதைபுகறவைப்பயனைக் கருதிநாடும், பூமாரிபொழிந்துநான் முகனயர்ந்தவருச்சனையின் பொலிவைத்தேரும், தேமாலைவெண்சுதிரோன் புரிதவத்தைநினைந்ததனிற் சிந்தைகூரும், கோமாசிறருமவன்மா கயிங்கரியம்புரிதகைமை குறித்துப்போற்றும்.

(இ-ள்.) நம்பெருமாளுடைய வைபவத்தைச் சொல்லும் சிவபெருமானது தவத்தின் பிரயோசனத்தைச் சிந்தித்துத் தேடுவார்; நான்கு முகங்களை யுடைய பிரமன் பூக்களை மாரி போலச் சொரிந்து அரங்கநாதனுக்குச் செய்த அர்ச்சனையின் பெருமையைத் தெரிவார்; தேன் பொருந்திய மாலையை யணிந்த ஒளிபொருந்திய சந்திரன் செய்த தவத்தை நினைத்து அதைச்சிந்திப்பார்; குற்றமற்ற தர்மவர்மா வென்னு மரசன் அரங்கநகரப்பனுக்குக் கைங்கரியங்கள் செயத பெருமையைக் குறித்துப் போற்றுவார்; (எ-று.) (ருசு)

சிவபெருமான் நாரதபகவானுக்கு ஸ்ரீரங்கநாதன் வைபவத்தைக் கூறியதும் பிரமதேவன் ஸ்ரீரங்கநாதனை முதன்முதல் அர்ச்சித்தும் சந்திரன் தவஞ்செய்து சித்திபெற்றதும் தர்மவர்மா என்னும் சோழபூபதி பலவான கைங்கரியங்கள் செய்ததும் பிரமாண்ட புராணத்திற் கூறப்படும் ஸ்ரீரங்கமஹாத்மியத்தா லறிக.

ருஎ. பொன்னிநதிதனதகலம் பொருந்தமுயறவத்தகைமை புகழ்ந்துவாழ்த்தும், சென்னிநவமணிக்குழையா னிழைத்தமணிப்

பாயலின்றன் சிறப்பைத்தேரும், கன்னிபகீரதிதலைநாட டிருமலர்த்தாளுய்த்துயர்ந்த கவினியாவும், பன்னியநான்மறைமுடியி லடிபிணையைப்பரித்துமகிழ் பரிசுபார்க்கும்.

(இ-ள்) காவேரிநதியானது தன்னிடத்துத் (திருவரங்கநகரப்பன்) பொருந்தும்படி செய்த தவப்பெருமையைப் புகழ்ந்து வாழ்த்துவார்; சோழராசன் நவரத்தினக் கூட்டங்களாலே செய்த அழகிய ஆதிசேஷசயநத்தின் சிறப்பைச் சிந்திப்பார்; கன்னியாகிய கங்காநதியானது முற்காலத்தில் அழகிய மலர் போன்ற திருவடிகளை யடைந்து உயர்ந்த அழகெவற்றையும் சொல்லிய நான்கு வேதங்களின் சிரத்திலுள்ள திருவடிக ளிரண்டையும் தரித்து மகிழும் விதத்தையே பார்ப்பார்; (எ-று:) (௩எ)

௩அ. கணமுமிடைபிரியாத சானவியைவியந்துபதக்கமலம்போற்றும, மணமலிபூந்துழலுருக்கு மணிவனிதைவரமதனை மதித்துவாழ்த்தும், குணநிலவுமாயிரமீ ரெண்டகைசால்கோவியாசீர்குறியாநிற்கும், அணவரியபதத்துகளா னகல்சாபத்தகலிகையன்பதனையேத்தும்.

(இ-ள்.) ஒரு க்ஷணப் பொழுதும் இடைபிரியாத கங்காதேவியை வியந்து பெருமானது பாதமாகிய கமலத்தைப் போற்றுவார்; வாசனை மிகுந்த மலர்களை யணிந்த கூந்தலை யுடைய உருக்குமணிததாயாரது வரத்தை மதித்து வாழ்த்துவார்; குணங்கள் பொருந்திய பெருமை நிறைந்த பதினாறாயிரம் கோபிகைகளது சீரைக் குறிப்பார்; அடைவதற் கரிய திருவடித்துகளாலே நீங்கிய சாபத்தையுடைய அகலிகையின் பக்தியை யேத்துவார்;(எ-று.)

௩கூ. நீலமலர்மலர்காயா நெடுங்கடனீலோற்பலம்வா ணேமிமாயோன், கோலமெனக்கருதியிரு கரங்கள்குவித்துவகையுளங் கூராநிற்கும், ஆலமருந்தியகடவு ளறைந்தபுராணந்தினமு மன்பிற்கேட்கும, ஞாலமயினளினவனம புரிதவத்தினலமதுவே நலமென்றோதும்.

(இ-ள்.) கருங்குவளை மலர், காயா மலர், நெடிய கடல், நீலோற்பலம் (இவைகளை) ஒளிபொருந்திய சக்கரத்தையுடைய பெருமானது திருமேனியழகென வெண்ணி இரண்டு கைகள்கூப்பி உள்ளத்தில் சந்தோஷ மடைவார்; விஷத்தை யுண்ட சிவபெருமான சொல்லிய புராணத்தைத் தினமும் அன்போடு கேட்பார்; பூமிப்பிராட்டி தாமரை வனத்தில் செய்த தவத்தின் நலமே நன்மையென்று சொல்லுவார்; (எ-று.) (௩கூ)

௪0. புண்டரிகத்தடங்காணிற் றிருநாபிதனைக்கருதும் பொழிலைககாணில், அண்டர்பிரானணிதுளவ வனங்கருதும்பவளமிதழாகக்காணும், மண்டலத்தண்கதிரிரவி வரக்காணிற்சங்காழி வடிவிற்காணும், கண்டபொருளெவையுமணி யரங்கேசன்வடிவாகக் காணுமாதோ.

(இ-ள்.) தாமரைத் தடாகத்தைக் காணின் (பெருமானது) திருநாபியை யெண்ணுவார்; சோலையைக் காணின் நித்தியசூரிகட்குத் தலைவனான பெருமான் அணியும் திருத்துழாய வனத்தைச் சிந்திப்பார்; பவளத்தைக்

காணின் (பெருமானது) இதழாகக் காண்பார்; மண்டலாகாரமான குளிர்ந்த சந்திரனும் சூரியனும் வரக்காணின், திருச்சங்கு திருவாழிகளின வடிவமென்று காணபார்; தாம் கணட கண்ட பொருள்களெல்லாம் அழகிய அரங்கேசன் வடிவாகவே (தோன்றக்) காண்பார். (எ-று.) (௪௦)

வேறு.

௪௧. எந்நாடோறுமிம்முறைமகோயிற்கிறைவோனை
உன்னாநாடுமோதிமமொப்பாளொருநாளிற்
பன்னாகின்றேபாயல்யிசைக்கண்படைகூடாவா
தன்னாலொத்தானுற்றகனாவிற்றனிகண்டாள்.

(இ-ள்.) இவ்விதமாக எந்நாளும் சிந்தித்து நாடிக்கொண்டிருக்கும் அன்னத்துக்குச் சமானமான பதுமையார், ஒருநாளில் கோயிலுக்குத் தலைவனான பெருமான் பேரைச் சொல்லிக்கொண்ட படுக்கையினிடத்து நித்திரை செயபவர், தாம கண்ட கனவில் தனக்குத்தானே நிகர்த்தவனான பெருமானைத் தனியாகக் கண்டனர். (எ-று.) (௪௧)

௪௨. உற்றகனாவிற்கண்டுகளிப்போடுவகைத்தேன்
பெற்றனளுண்டாளபேசருநீர்மைபிரியத்தான்
நற்றவமின்றேமுற்றியதென்றானனியாவம்
சொற்றனள்காணாளத்துயிலேகத்துளவோனை.

(இ-ள்.) தான் அடைந்த கனவில் (பெருமானைக்) கண்டு சந்தோஷித்துக் களிப்பாகிய தேனைப்பெற்று உண்டு சொல்வதற்கரிய ஒபபுரவான பிரியத்தாலே (எனது) நல்லதவம் இன்றையதினமே முடிவுற்றது என்று (தமது) அதிக காதலைச் சொல்லினர். அந்த நித்திரை நீங்கினவுடன் திருத்துழாய மாலையையணிந்த பெருமானைக் காணாதவராயினர். (எ-று.) (௪௨)

௪௩. மேவுதனுக்கூராழிதிருத்தாள்விரிதாமம்
தாவுபுயதேர்வால்வளைபொற்பார்தனிநாதன்
பாவுமுளத்தாளாவிபதைத்தாளபடர்காதல்
வாவுதிரைப்பாலாழிநிகர்த்தாள்மயலானாள்.

(இ-ள்.) பொருந்திய சார்ங்கம், கூர்மையான திருவாழி, திருவடிகள், விரிந்த (திருத்துழாய) மாலை பொருந்திய புஜங்களின் அழகு, பாஞ்சஜந்யத்தின அழகு, இவைகளையுடைய ஒப்பற்ற அரங்கநாதனை பரவியிருக்கும் உள்ளத்தை யுடையவராகி உயிர்பதைத்தார்; விர்த்தியாகும் காதலானது தாவும் அலைகளையுடைய பாற்கடலை நிகர்த்து வியாமோகமுடையவ ரானார். (எ-று.) (௪௩)

௪௪. காலையினிற்பார்மேலுயிர்கட்காகளிகூர
வேலையுதித்தேகீட்டிசையிற்றேர்மிசைவானோன்
சோலைமயிற்போல்வாளலமுற்றேதுயர்மூழ்க
மாலைபரப்பாமேல்கடலிற்போய்மறைவானன்.

(இ-ள்.) பூமியின் மீதுள்ள உயிர்களுக்குப் பொருந்திய களிப்பு அதிகப்படக் காலைபொழுதில் சமுத்திரததி லுதித்து, கிழக்குத் திக்கில் தே

ரின்மீது வரும் சூரியன், சோலையிலுள்ள மயில் போன்றவரான பதுமையார் வருந்தித் துன்பத்தில் முழுகும்படி, மாலைப்பொழுதைப் பரப்பி மேல் கடலிற் போய் மறைந்தனன். (எ-று.) (சச)

சரு. அந்திவிதந்தோவந்தகனென்றாளழல்வாடை
முந்திவருங்காலெனசெய்வதென்றாண்முனிவாய்வேள்
வந்தணைந்கோலுந்திடிலெந்தோமறைவென்றாள்
புந்திதளர்ந்தாளெந்தையைநொந்தாள்புகலகின்றாள்.

(இ-ள்.) ஐயோ! இந்த அந்திப்பொழுது எமனேயாகு மென்றனர். (காமுகர்க்கு) அக்கினி வீசும் வாடைக்காற்று முற்பட்டு வரும்போது செயலாவது யாதோ என்றார். கோபத்தோடு மன்மதன் வந்து மலர்ப்பாணங்களெந்தையும் எய்தால் நான மறைவது எங்ஙனமென்றார். மனந்தளர்ந்தார். பின்னர் எம்பெருமானை நொந்து சொல்லுவாராயினர். (எ-று.)

சசு. வரிவிலிறுத்தாய்விடைதழுவுற்றாய்மலாவானிற்
பரிவிலளித்தாயுததிமதித்தாயபடைசெய்தாய
தெரிவையருக்காவயாதொழின்மற்றுந்தெரிவார்யார்
அரியபதத்தாயெனையுமளித்தாலருளன்றே.

(இ-ள்.) (சீதாபிராட்டியாருக்காகக்) கட்டுகளமைந்த (சிவன்) வில்லையொடித்தனை. (நப்பின்னைப் பிராட்டிக்காக) எழுரிஷபங்களையுந் தழுவினை. (சத்தியபாமையாருக்காகத்) தேவலோகத்திலுள்ள பாரிஜாத மலரை விருப்பத்தோடு கொடுத்தனை. (பெரியபிராட்டியாருக்காகச்) சமுத்திரத்தைக் கடைந்தனை. (உருக்குமணிபபிராட்டியாருக்காகச்) சண்டைசெய்தனை. (இப்படிப்) பெண்களுக்காக (அவர்களைப் பெறும்படி) மற்றும் நீ செய்த தொழில்களைத் தெரியுமவர்கள் யார்? அருமையான பதத்தை யுடையவனே! (அப்பெண்களைப்போல) அடியேனையும் ரக்ஷித்தால் அழகாகு மல்லவோ? (எ-று)

சஎ. பரவையொலித்தாலதனையடக்காய்பதியொன்றோ
இரவையகற்றாய்வருவதழைத்தாலிதுவென்றோ
குரவைநடித்தாய்குடவரிடத்தாய்குழலோசை
வரவையகற்றாயவருமுனகோமரபென்றோ.

(இ-ள்.) குரவைக் கூத்தாடிய பெருமானே! (எனக்கு வருத்த முண்டாகக்) கடலொலிக்குமாயின் அதனை யடக்காய்; அக்கடல் நினக்கு ஒரு திருப்பதி யென்றோ? இராப்பொழுதை நிவர்த்தி செய்யாய்; அவ்விரவு நீ அழைத்தால் வருவ தென்றோ? இடைய ரிடத்தினை றுண்டாய்ப் புல்லாங்குழலோசை வருவதைப் போக்காய்; அவ்விடையர் உனக்கு ஓர் முறையான வர்களென்றோ? (எ-று.) (சஎ)

சஅ. குவலயநற்றாமரையிதயத்தேகுலவாசைத்
தவலதகற்றாவருள்புரிபொற்பார்சசிபானு
உவமையினிறகேவிழியெனதுட்சோர்வுணர்வாயேல்
நவமலுரைககூர்விழியெனமிகவோர்நவின்ஞானம்.

(இ-ள்) நீலோற்பலம், நல்ல தாமரை இவைகளின் இதயத்திற் பொருந்திய விருப்பத்திற் குண்டாகிய குறைவை நீக்கி அருள்புரியும் பொலி

வை யுடைய சந்திர சூரியர்கள் ஒப்பில்லாத உனக்கே திருக்கண்களாவர்; எனது மனச்சோர்வை யறிவாயாயின, சொல்லப்படும் உனது ஞானம் புதுமையில்லாத உயர்ச்சி மிகுந்த கண்ணாகுமென்று பெரிது மறிவாயாக. (எ-று.) (௪௮)

௪௯. முதுநளிபெற்றேகுவலயநட்பாமொழிசோதி
விதுபுவனத்தேவருகொடுமைக்கோவினையென்மேற்
கதுவவழறநீவடவைநிகர்த்தேகதிர்காலும்
இதுவுமுனக்கோரருள்கொறரிப்பேனெளியேனே.

(இ-ள்.) மிகவும் அன்புடையவராகிப் பூமியிலுள்ளோர் நட்பாகச் சொல்லும் பிரகாசமுடைய சந்திரன், பூமியில வருவதான யாதொரு கொடுமையின் பொருட்டோ வினையையுடைய என்மீது படும்படி உஷ்ணமான வடவாமுகாக்கினியை யொத்துக் கிரணங்களைச் சொரியா நின்றது இப்படி செயயுமிதுவும் உனக்கோரருள்தானோ? எளியேனான நான் தரிக்கவல்லேனோ? (எ-று.) (௪௯)

௫௦. கழைவரிவிற்காலவளையமலர்க்கூர்கணைமாரி
மழையின்மிகுத்தேசொரிதருகிற்பான்மதனேயோ
விழைவினளித்தாயெனதுயிருக்கோர்வினையாகக்
குழைதுளவத்தாயழகித்தருட்கோர்குறையாதோ.

(இ-ள்.) மனமதனே கரும்பாகிய வரியையுடைய வில்லைக் கால்வளையும்படிசெய்து கூர்மையான மலர்ப்பாணங்களை மாரிக்காலத்து மழையினும் அதிகமாகச் சொரியவல்லான; என உயிருக்கு ஒருதீவினையாகவே அவனை விருப்புடனே பெற்றருளினாய் போலும்; துளிர்களையுடையதான திருத்துழாய் மாலையையுடையவனே! உன செயல் அழகிதே; (என்னிடத்துச் சிதகியாதிருக்க) உன்னருளுக்கு (வந்த) ஒரு குறை யாதோ? (எ-று.) (௫௦)

வேறு.

௫௧. என்றுளமுருகிநைந்திளையுமேந்திழை
தன்றுணைவியர்க்குமோசாற்றுகின்றிலள்
ஒன்றுமதுணர்ந்திலரோணாமாதருந்
துன்றுநண்புடைமையாற்றுணுக்கமெய்தினார்.

(இ-ள்) என்று மனமுருகி வருந்தி இளைக்குமவராய் ஆபரணங்களைத்தரித்தவரான பதுமையார், தமது தோழிமார்களுக்குமோ (அதனைச்) சொல்லமாட்டார். இவ்விஷயமொன்றையும் அறியாதவர்களான தோழிப் பெண்களும் நெருங்கிய சிநேகமுண்டாயிருப்பதினால் (பதுமையாரைப் பார்த்து) அச்சமடைந்தார்கள். (எ-று.) (௫௧)

௫௨. திருகுவெங்கனவிடைச்செழும்பொற்பாவைபோன்
மருவுசெந்தவிசின்மேன்மயங்குதையலை
இருகணீர்பொழிதரவெடுத்துச்சேடியர்
அருமணியரமியமத்தினேகினார்.

(இ-ள்.) முறுகி எரிவதாய் வெப்பமுள்ள அக்கினியினிடைப்பட்ட செழுமையான பொற்பாவையைப் போலே பொருந்திய செம்மையான ஆசநத்தின்மீது மயங்கிக்கிடக்கும் பதுமையாரைத் தோழிமார் இரண்டுகண்களும் நீர் பொழிய எடுத்துக் கொண்டு அருமையான மணிகளிழைத்த நிலாமணி முற்றத்துக்குப் போயினர் (எ-று.) (ருஉ)

ருங.
அரிகெழுதாமரையணையையாயிழை
பிரிதலானுற்றதிப்பிணியென்றெண்ணியோ
புரிமலர்க்குழலினார்புண்டரீகத்தின்
விரிமலரமளியின்மீதுசேர்த்தினார்.

(இ-ள்) ஆராயந்த ஆபரணங்களைத் தரித்த பதுமையார் வண்டுகள் அதிகரித்திருக்கும் தாமரை யாசனத்தைவிட்டு முன்பு பிரிந்து வந்திருப்பதினாலேயே இந்நோய் வந்ததெனறெண்ணியோ, கட்டமைந்த மலர்களணிந்த கூந்தலையுடைய தோழியர்கள் தாமரைமலர்களாலே மலர்ந்திருப்பதான புஷ்பசயனத்தின்மீது சேர்த்தார்கள்? (எ-று.) (ருங)

இது முதல் நான்கு செய்யுளுங் கவிக்கூற்று.

ருச.
காமர்பொற்சிவிறிநீர்கன்னனீர்தருத்
தேமலர்க்குழலியர்சொரியத்தேமறை
ஓமநற்கனலினெய்யுகுத்ததொத்ததால்
தாமரைச்செழுமலர்தருதலின்கொலோ.

(இ-ள்) அழகிய பொன்மயமான விசிறிநீரையும் கரகத்திலுள்ள நீரையும் தருக்களிலுள்ள தேனையுடைய பூக்களையணிந்த கூந்தலையுடைய பெண்கள் சொரியவே, தெய்வத்தன்மையுள்ள வேதசம்மதமான யாகாக்கினியில் நெய்யைச் சொரிதலை யொத்திருந்தது. இதற்குக் காரணம் பதுமையாரைச் செழிப்பான தாமரைமலர் பெற்றதேயோ? (எ-று.) (ருச)

பதுமையாரைத் தாமரைமலர் பெற்றமையால் தாமரையின் றன்மையைப் பதுமையாருக்கு ஆரோபிக்கப்பட்டது. நெய்யால தீ யோங்குவதும், நீரால் தாமரை சிறப்பதும் உவமையெனக.

ருரு.
அரவினங்கருவளராதலால்விடம்
பரவியுட்குலவியபான்மையேகொலோ
கரமுறச்சந்தனக்கலவைமாதரார்
உரமிகப்பூசலுமுளநடுங்கினாள்.

(இ-ள்.) பாம்பினினங்கள் (சந்தனமரத்தின்) நடுவிடத்தே வளர்தலுண்டாமாதலால் (அப்பாம்பின்) விஷம் (சந்தனக்கட்டையில்) பரவி உள்ளே பொருந்திய தன்மை தானோ, பெண்கள் தங்கள் கைகளாலே சந்தனச் சாந்தைத் தமது மார்பில் அதிகமாகப் பூசவே பதுமையார் மனநடுங்கினர். (எ-று.) வளர்-முதனிலைதொழிற் பெயர். (ருரு)

ருசு.
விரிந்தகால்விசிறியான்வெருவிக்கண்ணினீர்
சொரிந்துவாய்புலர்ந்துமெய்துளங்கிச்சோர்ந்தனள்
எரிந்தகாமக்கனலினியகேண்மையைப்
புரிந்தகாலுமமிகப்பொங்கிற்றாகவே.

(இ-ள்.) எரிந்ததாகிய சாமத்தியானது, தனக்கு இனிய உறவைச்செய்த காற்றுப்பட்டளவிலே அதிகரித்ததாகவே, விரிவான விசிறிக்காற்றினாலே பயந்து சண்களில் நீர் சொரிந்து வாயுலர்ந்து மெய்நடுங்கிச்சோர்ந்தனர். (எ-று) (௫௬)

காற்றின் சகாயன் என நெருப்புக்கொரு பெயருண்டு.

௫எ. மலரினாலெழினிமீவிதானமாதரார்
சிலரிந்நோய்தணிக்குவான்றெரிந்துசெய்தவும்
அலரிவார்சணையினாகூடமாங்கவள்
விலகுறுதிகலிவேள்விரித்ததொத்ததால.

(இ-ள்.) மலர்களாலே திரைச்சீலையும் மேற்கட்டியுமாகப் பெண்கள், சிலர் கூடி இந்தக் (காம நோயைத் தணிக்கும்படி தெரிந்து செய்தவைகளும் அவ்விடத்தினின்றும் பதுமையார் விலகிப் போய்விடாதபடி மன்மதன படைத்து மலராலாகிய நீண்ட அம்புகளாலே சரகூடங் கட்டினதை யொத்திருந்தன. (எ-று.) (௫எ)

௫அ. விதத்தியதொழிலெலாம்விளங்குமாடகச்
சித்திரவீணையிற்சிறந்தவேழிசை
முத்தினிறபொலிதருமுறுவல்வஞ்சிபால்
மதமிமமாகவேமருவமாழ்கினாள்.

(இ-ள்.) வித்தியாதரர்களது இசைத்தொழில்களெல்லாம் விளங்குவதாகிய பொன்மயமாய்ச் சித்திரமாயமைந்திருக்கும் வீணையினிடத்து உச்சமான ஏழுவகையான இசைகளும் முத்தைப்போல விளங்கும் பல்வரிசையையுடைய வஞ்சிக்கொடிபோன்ற பதுமையாரிடத்து சமனிசையாயிருக்கவே மயங்கினார். (எ-று.) (௫அ)

௫௯. சேடியரினையனவிழைத்துஞசேயிழை
நீடியதுயர்க்கடன்மூழ்கநேயமாய்
வாடியங்கவளினும்வருந்திமாழ்கினார்
கூடியவரந்தைதாங்கொண்டதொப்பவே.

(இ-ள்.) தோழியர்கள் இப்படிப்பட்டவைகளைச் செய்தும் பதுமையார் பெரிதாகிய துயரமாகிய கடலில் முழுகவே, அங்கு கூடியதான துன்பத்தைத தாங்கள் கொண்டதுபோல நேசத்தினாலே வாடிப் பதுமையாரினும் வருந்தி மயங்கினார்கள். (எ-று.) (௫௯)

௬0. தணிவருந்துயரொனுஞ்சலதிமூழ்கிய
மணிநகைக்கிரங்கிமாமலர்க்கணீருக
அணிபொழிலகளுகனியரற்றலபோலவே
பிணிமுககுரலொலிபெருத்ததெங்கணும்.

(இ-ள்.) தணிப்பதற்கரிய துன்பமென்னும் சமுத்திரத்தில் முழுகிய முத்தைப்போன்ற பற்களையுடைய பதுமையாருக்கிரங்கிப் பெருமை பொருந்திய மலர்களாகிய கண்களாலே பனிநீராகிய கண்ணீர் சிந்துதலாக, அழகிய சோலைகளும் அதிகமாகப் பிரலாபிப்பது போல, மயில்களின் குரலொலிகள் எவ்விடத்திலும் அதிகரித்தன. (எ-று.) (௬0)

இது முதல் ஒன்பது செய்யுளுங் கவிக்கூற்று.

௬௧. மருகுலவார்குழலவண்மனத்துடகாமத்தி
இருசிசூழரங்கமால்வருவதெண்ணுபு
அருசியப்புறத்தகன்றழுங்கிச்சேர்தல்போல்
விருசியலழுங்கிமெய்விளர்த்ததீபமே.

(இ-ள்.) மேகம் போன்ற நீண்ட கூந்தலையுடைய பதுமையாரது மனத்தின்கண்ணுள்ள சாமத்தியானது, மதில் சூழ்ந்த திருவரங்கப்பெருமான் வருவதை யெண்ணிப் பயந்து வருந்தி அப்பால் போய்ச் சேர்வது போலே, தீபங்கள் ஓங்கி யெரிதலான (தமது) சுபாவங் கெட்டு உடல் வெளுத்தன (ஒளிமழுங்கின). (எ-று.) (௬௧)

௬௨. நாரணன்விருப்புயநயந்தநாண்மலர்த்
தாரணங்கணங்குவேள்சரந்தடுத்தலின்
காரணங்கூக்குரல்கடிதிற்காட்டியே
வாரணமெனும்பெயர்வாய்த்தசேவலே.

(இ-ள்.) ஸ்ரீமந்நாராயணனுடைய அழகிய புயங்களை விரும்பிய புதிய மலர்மாலையை யணிந்த பதுமையாருக்கு வருத்தந் தரும் மன்மதனுடைய பாணங்களைத் தடுப்பதின் காரணத்தைத், தமது கூக்குரல்களாலே விரைவாகக் காட்டி, அதனாலே சேவல்கள் வாரண மெனும் பெயர் பொருந்துவன வாயின. (எ-று.)

வேள் சரந்தடுத்தலின் காரணமாவது பொழுது புலர்தல். வாரணம்-சங்கு, கோழி. பொழுது புலரு மளவில் கோழி கூவுதலானது, மன்மதனை வென்றே மெனச் சங்கத்துவனி செய்தாற் போலே யிருந்தது என்பதாம்.

௬௩. அளித்ததாமரைத்துணைக்கலக்கணீர்மிகத்
துளித்துவாய்திறந்தவடுயரருசொற்றல்போல்
நளித்தடநறவுகுத்தலர்ந்துநண்ணுபு
களித்தவண்டிசையொடுகலந்துநின்றவே.

(இ-ள்.) பதுமையாரைப் பெற்ற தாமரையாகிய தன் துணைவிக்குச், சோகக் கண்ணீரை அதிகமாகச் சிந்தி, வாயைத் திறந்து, பதுமையாரது துயரத்தைச் சொல்லுவது போலக், குளிர்ந்த தடாகங்கள் தேனைச் சிந்தி, பூமலர்ந்திருந்து, களித்திருக்கும் வண்டுகளி னிசையோடு சேர்ந்து நின்றன. (எ-று.)

பொழுது புலர்ந்த வளவிலே தடாகங்களில் தேன் ஒழுகுவதும் புஷ்பங்கள் புஷ்பித்திருப்பதும் வண்டுகள் ஒலிப்பதும் அன்று பார்த்தவர்க்கு எங்ஙனம் தோன்றிய தெனின், பதுமையாரைப் பெற்ற தாமரையாகிய தாயிடத்திலே, தடாகங்க ளானவை தேனாகிய கண்ணீரைச் சொரிந்து புஷ்ப மாகிற வாயைத் திறந்து வண்டிசை யாகிய அழுகுரலுடனே பதுமையாரது துயரை விளக்குவன போன்றன என்பதாம். (௬௩)

௬௪. கானலமுறவளர்கமலந்தந்தபூங்
கானலர்குழல்படர்காண்கலாமையாற்
றேனலர்த்தடங்களுஞ்செழுங்கண்மூயபோற்
பானலங்குலமலர் முகிழ்த்தபாங்கெலாம்.

(இ-ள்.) நாளமானது நலமுற வளரும் கமலமலர் பெற்றெடுத்த, புஷ்பவாசனை வீசுதலான கூந்தலையுடைய பதுமையாரது துயரத்தைக் காணக்கூடாமையாலே, தேனையுடைய மலர்கள் பூத்த தடாகங்களும் செழுமையான கண்களை மூடிக்கொண்டது போல, அழகிய சிறந்த நீலோற்பல மலர் பக்கங்களிலெல்லாம் குவிந்தன. (எ-று.) மூயதல்-மூடுதல்.

பொழுது புலர்ந்த அளவிலே தடாகங்களில் நீலோற்பலங்கள் குவிதலானது, பதுமையாரது துயரத்தைக் காணக் கூடாமையாலே, தடாகங்கள் கண்ணைமூடிக் கொண்டாற்போன்றிருந்தது என்பதாம். (சுச)

சுரு. அடுகருங்களிற்றையுமலகின்மற்றையும்
வடுவிலவெண்குடையையுமதன்மறைத்தல்போற்
படுகருங்கங்குலும்படர்ந்தமீனமும்
தொடுசுடாத்திங்களுந்தோற்றமற்றவே.

(இ-ள்.) யுத்தஞ்செய்யும் யானையையும் கணக்கற்ற (தனுசு, கன்னி, மீனம், விண்மீன்) ஆகிற மற்றவைகளையும் குற்றமற்ற வெண்மையான குடையையும் மன்மதன மறைத்துக்கொண்டது போல, பட்டுப்போன கருமையான இரவும் (ஆகாயத்திற) பரவிய நக்ஷத்திரங்களும் பிரகாசமுடைய சந்திரனும் தோற்றமற்றன வாயின. (எ-று.)

இருள் யானையாகவும், தனுசு வில்லாகவும், கன்னி சேனையாகவும், மீனம் கொடியாகவும், முல்லைமலர்போனற விண்மீன்கள் காளாஞ்சியாகவும் மலர்க்கணையாகவும், திங்கள் குடையாகவுங் கொள்க. (சுரு)

சுசு. கிளக்கரும்போதருள்கிளியைக்கங்குலாம்
வளக்கரும்போதுகாத்தவனிவானகம்
விளககரும்போதின்பால்விடுத்துநீங்கிற்றால்
அளக்கருந்துயரினியகலும்பாலதே.

(இ-ள்.) சொல்வதற்கரிய தாமரைமலர் பெற்றெடுத்த கிளிபோன்ற பதுமையாரை, இரவாகிய வளமான கரும்பொழுதானது காவல் செய்திருந்து, பூமியையும் ஆகாசத்தையும் விளங்கச்செய்யும் அரிய பகற்பொழுதினிடத்து விட்டு நீங்கிற்று. பதுமையாரது அளவிடற்கரிய துன்பமானது இனி நீங்கற்பாலதே யாம். (எ-று.) (சுசு)

சுஎ. தகரமென்குழலிறைனக்குத்தண்டுழாய்
மகரகுண்டலமதிவதனமாதவன்
அகமகிழ்தரமணமயர்தறாதினாற்
பகர்மொழியெனமணிப்பணிலமார்த்தவே.

(இ-ள்.) குளிர்ந்த திருத்துழாய்மாலையும் மகரகுண்டலங்களு மணிந்த சந்திரனைப் போலும் முகத்தை யுடைய மாதவன், மனமகிழும்படி மணஞ்செய்து கொள்வதை, மயிர்ச்சாந் தணிந்த மிருதுவான கூந்தலை யுடைய பதுமையாருக்குத் தூதினாலே சொல்லும் மொழியைப் போலே, அழகிய சங்குக ளொலித்தன. (எ-று.) (சுஎ)

சுஅ. கங்கையம்பதமலர்கருத்துட்டாங்கிய
மங்கையைநலிதருமையனேய்தெற

அங்கையாலரங்கமால்விடுத்தவாழிபோற்
செங்கையாதவன்குணதிசையிற்றேன்றினன்.

(இ-ள்.) கங்காதேவியைப் பெற்ற அழகிய பாததாமரைகளைத் தமது திருவுள்ளத்தி னிடத்திற் ருங்கிய பதுமையாரை வருத்தும் வியாமோகமாகிய நோய கெடும்படி, திருவரங்க நகரத்தி லெழுந்தருளிய பெருமான தனது அழகிய திருக்கைகளாலே விடுத்த சக்கராயுதத்தைப் போலே, சிவந்த கிரணங்களை யுடைய சூரியன் கீழ்த்திசையி லுதயமாயினன். (எ-று.) (சுஅ)

சுகூ. வேந்தனும்புரிதுயிலுணர்ந்துமேதினி
மாந்தருமுனிவரும்வழுத்தமாமயில்
காந்தனதிருபதக்கமலஞ்சிந்தியா
நீந்தருமறைமுறைநியமமுற்றியே.

(இ-ள்.) சோழமகாராசனும், தான் செய்யும் துயிலுணர்ந்து, பூமியிலுள்ள மக்களும் முனிவர்களும் துதியாநிற்கையில, பெரியபிராட்டியாராகிய மயிலின மணவாளனான பெருமானது இரண்டு திருவடித்தாமரைகளைச் சிந்தித்து, கடப்பதற் கரிய வேத விதிப்படி நித்தியகருமாநுஷ்டாநங்களை முடித்து, (எ-று.) (சுகூ)

எ0. தளர்ந்தநுண்ணிடைமணித்தரளமூரலார்
உளந்தருமுவகைமிக்கோங்கத்தாங்கிய
கிளர்ந்தமங்கலம்புடைகெழுமகேழமணி
வளந்தருமண்டபமதனிலவைகினான்.

(இ-ள்.) நுடங்கிய நுட்பமான இடையையும் முத்தைப்போன்ற பற்களையு முடைய பெண்கள் உள்ளத்தி லுண்டான சந்தோஷம் அதிகரிக்கத் தாங்கிய சிறந்த அஷ்டமங்கலங்கள் சூழநின்று விளங்காநிற்கப் பிரகாசமுடைய ரத்தினங்களின வளம் பொருந்திய மண்டபத்தில் வீற்றிருந்தனன். (எ-று)

எக. யாமமுற்றுறக்கடலிடரின்மூழ்கிய
தாமரைச்செல்விதன்றகவியாவையும்
ஏமமுற்றன்னைமிகுளைமாதராந்
தூமலர்க்குழலியர்சொல்லக்கேட்டனள்.

(இ-ள்.) இராத்திரி முழுமையும் துன்பக்கடலில் முழுகிய தாமரைச் செல்வியாகிய பதுமையாரது சுபாவங்களையெல்லாம், தோழிகளாகிய பரிசுத்தமான மலர்களையணிந்த பெண்கள் கூறவே, தாயும் கலக்கமுற்று அதனைக் கேட்டனள். (எ-று.) (எக)

எஉ. அரந்தையுற்றரசன்மாட்டரசிகூறலும்
புரந்தரக்கடவுளைப்பொருவுவேந்தனும்
நரந்தமைக்கருங்குழனளினப்பாவையைச்
சரந்தருவிழியினாய்தருதியீண்டென்றான்.

(இ-ள்.) கேட்ட அரசி வருத்தமடைந்து அரசனிடத்து அது செய்தியைச் சொல்லுதலும், தேவேந்திரனை நிகர்த்த அரசனும், "பாணத்தைப் போலுங் கண்களையுடைய பெண்ணே! வாசனையுடைய மையைப் போலக் கரிய தான கூந்தலையுடையவராய்த் தாமரைபெற்ற பாவையான பதுமையாரை இவ்விடம் கொண்டுவருக" என்றான். (எ-று.) (எஉ)

௭௩. தேவியொடரசர்கோனுரைப்பசேடியர்
நாவியங்கருங்குழனளினப்பாவையைக
காவியங்கண்ணியைக்கனகப்பன்மணிப
பூவிரியணிகளாறபொற்பமண்ணினா.

(இ-ள்.) அரசர்க்கரசன் தன மனைவியோடு இப்படி சொல்லத், தோழியர்கள் (சென்று) கஸ்தூரிச் சாந்தணிந்த அழகிய கரிய கூந்தலை யுடைய தாமரையிற் பிறந்த பாவை போன்றவளை, நீலோற்பல மலர்போலுங் கண்களை யுடையவளை, பொன்னாலும இரததினங்களாலு மான அழகு விரிந்த ஆபரணங்களாலே அழகு பெறும்படி அலங்கரித்து, (எ-று.) (௭௩)

௭௪. சிலம்பணிநூபுரஞ்சிலம்பமேகலை
புலம்பிநுண்ணிடைதனம்பொறுமைக்கேங்குற
அலம்வரத்தளிர்புரையடியுஞசேப்புற
நிலம்புகழரசன்முன்னோயத்துய்த்தனா.

(இ-ள்) சிலம்பும் அழகிய நூபுரமும் ஒலிக்கவும், நுண்ணிய இடையானது தனததைத் தாங்காமைக்காக மேகலையானது புலம்பி ஏங்கிச் சஞ்சல மடையவும், தளிர்போன்ற திருவடிகள் சிவக்கவும், பூமியி லுள்ளோர் புகழும் அரசனுககு முன்னர் அன்புடனே சேர்த்தனர். (எ-று.) (௭௪)

௭௫. கொன்னவிறிணிபுயக்குத்தமல்லனும்
மன்னவன்றிருமகள்வதனநோககுற
இன்னலினெடிதுயிரத்திரஙகியீனறதாய்
அன்னவடனையழைத்தருகிருத்தியே

(இ-ள்.) சத்துருக்களைக் கொல்லுதலைக் கொண்ட வலிய புயங்களை யுடைய குத்தமல்லனாகிய மன்னவனது அழகிய திருமகளாரான பதுமையாரது திருமுகத்தைப் பார்த்து, வருத்தத்தாலே பெருமூச் செறிந்து, மனமிரங்கிப், பதுமையாரை யழைத்து, பெற்றதாய தன அருகிலிருத்திக் கொண்டு (எ-று.) (௭௫)

௭௬. கடிமணம்புரிதரக்கணவனின்னுளப்
படியினிலவன்றனைபபகாதியென்றலுங்
கொடியிடைமயிலியறகுமுதசெய்யவாய்ப்
பிடிநடைவனிதையும்பெரிதுநாணினாள்.

(இ-ள்.) "(நினக்குத்) திருமணஞ் செய்வதற்கு நின்னுள்ளத்தின்படி கணவன் எவனோ அவனைச் சொல்லுவாயாக" வென்னலும், கொடிபோன்ற இடையையும் மயில்போன்ற சாயலையும் ஆம்பலைப்போன்ற சிவந்த வாயையும் பெண்யானையைப் போன்ற நடையினையு முடைய பதுமையாரும் மிகவும் வெட்க மடைந்து, (எ-று.) (௭௬)

௭௭. உயிரினுநாணினுமுயர்ந்ததேதெனிற்
செயிரிலாக்காப்பெனுஞசிறப்பைநோக்கிகொல
பயில்குணமும்பரினுயர்ந்தபைங்கதிர்
அயிலனிமணிமுடியரசைநோக்கியே

(இ-ள்.) "உயிரைக் காட்டிலும் நாணத்தைக் காட்டிலும் உயர்ந்தது யாது" என்று கேட்டால், (அதற்கு விடையாக,) "குற்றமில்லாத தற காப்பே யாகும்" என்று சொல்லப்படும் சிறப்பை நோக்கியோ, வானுல கம் வரையிலுயர்ந்த பொருந்திய குணத்தையும் பசுமையான ஒளியை யுடைய வேலையும் அழகிய முடியையு முடைய அரசனைப் பார்த்து, (எ-று) (எஎ)

எஅ. மரகதமலையெனவாளராமிசை
அரதனப்பெட்டகத்தரங்கமேவிய
சரதநாயகனுயிர்த்தலைவனாகவே
விரதமுற்றவன்புயம்விரும்பினேனென்றாள்.

(இ-ள்.) மரகதமலை யென்று சொல்லும்படி, ஒளி பொருந்திய ஆதிசேஷர் மீது, இரத்தினப்பெட்டியான திருவரங்கத்தி லெழுந்தருளிய சத்தியத்துக்கு நாயகனை பெருமானே என் உயிர்த்தலைவனாகும்படி விரதமடைந்து, அவ னது திருப்புயங்களை விரும்பினேன் என றனர். (எ-று.) (எஅ)

வேறு.

எகூ. திருமகண்மொழிந்தமாற்றஞ்செவிபுகத்திருந்தாரஞ்சப்
பொருமயினிருபர்கோனும்புதல்வியைநோக்கிநெஞ்சம்
உருகியேநகைத்திகோதையுரைக்குமீதுழுவன்ஞானம்
பெருகியோபெண்மைக்கேற்றபேதைமையோசொல்லென்றான்.

(இ-ள்.) பதுமையார் சொல்லிய இச்சொல் செவியிற் பிரவேசித்த வள விலே, சத்துருக்கள் பயப்படும்படி யுத்தஞ் செய்யும் வேலைத் தரித்த அரசர்க் கரசனும், தன் புத்திரியான பதுமையாரைப் பார்த்து நெஞ்சுருகி நகைத்து, "இப்பெண்மணி சொல்லும் இது, இடைவிடாது தொடர்ந்த ஞானம் அதிகரித் துத்தானோ? அல்லது பெண்தன்மைக்கேற்ற பேதைமையேயோ?" என்ற னன. (எ-று.) (எகூ)

அ0. உளத்தினிற்கருதிசசோதியுந்தியம்புயத்துளானும்
கிளத்தருந்தகைசால்வென்றிகெழுமியகுலிசத்தோனும்
துளககமிறவத்தோர்வானோர்முதலினோர்தொல்லோர்யாரும்
அளக்கொணாமுதலைகோயிலரங்கமாநகருளானை

(இ-ள்.) பிரகாச முடைய உந்தித் தாமரையி லிருப்பவனான பிரமனும் சொல்வதற் கரிய பெருமையுடைய வெற்றி மிகவு மதிகரித்த வச்சிராயுதத் தைத் தரித்த இந்திரனும் கெடுத லில்லாத தவசிகள் தேவர்கள் முதலிய பழ மையானவர்கள் யாவரும், உள்ளத்திலெண்ணி அளவிடுவதற்கரிய காரண பூத னானவனை, கோயிலென்னும் திருவரங்கமாநகரத்தி லெழுந்தருளி யிருப் பவனை, (எ-று.) (அ0)

அக. பூதமைந்தவற்றினையபொறியைந்தாய்ப்புலனைந்தாகிக்
கோதடர்பவத்தைநீங்காக்குதலையேமுணர்வதெங்ஙன்
ஏதறிந்திசைத்தாயன்றேயெனநவின்றிழிகணீரான்
ஓதருந்துயரான்செய்வதுணர்கிலானுயங்குங்காலை

(இ-ள்.) பஞ்சபூதமயமாய் அவற்றுடனுண்டாகிய ஐம்பொறிகளாயும் ஐம்புலன்களாயும் குற்றமுடையதாய வருத்தும் பிறவியை நீங்காத சிறுவர்களான நாம் அறிவதெப்படி? அன்னையே! எதை யறிந்து சொன்னாய்! என்று ஒழுகும் கண்ணீருடனே சொல்வதற்கரிய துக்கங் கொண்டு செய்யவேண்டுவனவற்றை யறியாளாய் வருந்தும்போது, (எ-று.) (அக)

[பதுமையாரது திருமணம்.]

அஉ. தனையுயிர்த்தலைவனாகத்தையல்சொற்றதுவுஞ்சான்ற
கனைகழற்குத்தமல்லன்கேட்டுளங்கவலுமாறும்
புனைமணியரங்கத்தீசன்கருதியப்பொலன்றோள்வேந்தன்
நினைதரீர்த்தணங்கைமன்றல்புரிகுவானிவர்ந்தோனுகி

(இ-ள்.) தன்னை உயிர்த்தலைவனாகப் பதுமையார் சொல்லியதையும், நிறைந்த சத்தத்தை யுடைய வீரகண்டையைத் தரித்த குத்தமல்லராசன் (அதைக்) கேட்டு உள்ளம் வருந்தும் விதத்தையும், கௌஸ்துபமணி யணிந்த திருவரங்கநாதன் திருவுளத்திற் கொண்டு, அழகிய தோளை யுடைய அந்த வேந்தனது சிந்தனையை யொழித்துப், பதுமையாரைத் திருமணஞ் செய்ய விரும்பினவனாகி (எ-று.) (அஉ)

அஙு. விரிகருணையினுற்சேனைநாதனைவிளித்துமேல்பாற்
புரிநிசுளையர்கோன்றன்பாற்போந்தவன்புதல்வியாய
வரிவிழிப்பதுமைதன்னைவதுவைநாம்வனையுநீர்மைக்
குரியயாவையுஞ்சொற்றன்னுளக்கருத்துணர்தியென்றான்.

(இ-ள்.) அதிகரித்த கிருபையினாலே சேனைபதியாழ்வானை யழைத்து, "(இவ்விடத்துக்கு) மேற்றிசையிலுள்ள நிசுளாபுரிக்குத் தலைவனைவனிடத்துக்குப்போய அவனது புத்திரியாகிய செவ்வரிகருவரி பரந்த கண்களை யுடைய பதுமையை நாம் கண்ணாலஞ் செய்துகொள்ளும் விதத்துக்குரிய யாவற்றையுஞ் சொல்லி அவனது அபிப்பிராய மறிவாயாக" வென்றருளிச் செய்தனன். (எ-று.) (அஙு)

அச. போற்றினன்விடைகொண்டம்பொன்விமானமீப்பொருவில்ஞானந்
தோற்றியகுமுதனுதிசனகனுதியர்கள்சூழப்
பாற்றிகழ்பணைவெண்சங்கங்கலித்தெழப்பசும்பூகச்செந்
தாற்றினுனறவுகாலுநிசுளைமாநகரஞ்சார்ந்தான்.

(இ-ள்.) (சேனைத்தலைவர், உடனே பெருமானைப்) போற்றி விடைபெற்றுக்கொண்டு, அழகிய பொன் விமானத்தின்மீது ஒப்பற்ற ஞானமுடையவர்களான குமுதனாதியரும் சனகனாதியரும் சூழ்ந்துவரவும் பாலைப்போல விளங்கும் பருத்த வெண்மையான சங்கங்கள் பேரொலி செய்யவும் பசுமையான கமுகின் சிவந்த குலையினின்று தேனொழுகும் பெருமை பொருந்திய நிசுளை மாநகரத்தை யடைந்தனர். (எ-று.) (அச)

அரு. எண்ணில்வான்பரிதியோர்மானத்திவர்ந்தியங்களேங்க
விண்ணில்வாராநின்றுரொன்றருமணிவிமானந்தன்னைக்
கண்ணில்வான்கண்டோர்கோன்மாட்டிசைக்குமுன்கதிர்விமானம்
மண்ணில்வாணிருபன்கோயில்வாயில்வந்திழிந்ததம்மா.

(இ-ள்.) ஆகாயத்தி லுள்ள கணக்கற்ற சூரியர்கள் ஒரு விமானத்தி லேறிக்கொண்டு வாத்தியங்க ளொலிக்க ஆகாய மார்க்கமாக வருகிறார் களென்று அருமையான மணிக ளிழைத்த விமானத்தைக் கண்ணாலே ஆகாய த்திற் கண்டவர்கள் அரசனிடத்துச் சொல்வதற்கு முன்பு, பிரகாசமுடைய அந்த விமானம் பூமியில் வாளைத் தரித்தவனான அரசன் மாளிகையின் ஆசார வாசலினிடத்தே வந்திறங்கியது. (எ-று) (அரு)

அசு. கடிதெழுந்தரசர்கோமானெதிர்செலாக்கமலப்பூநேர்
அடிமுடியனைத்துநோக்கியங்கைவேத்திரத்தாளுகி
நெடியமால்சேனைக்கீசனிவனெனுநியமித்தம்பொற்
றொடிமணிக்கரங்கள்கூப்பிப்பணிந்தயறுதித்துநின்றான்.

(இ-ள்.) அரசர் கோமான் விரைவா யெழுந்து எதிர்சென்று, சேனைநாயக ரது தாமரை மலருக்குச் சமானமான திருவடி திருமுடி (முதலிய) எல்லா வற்றையும் பார்த்து, அழகிய கைகளில் பிரம்புடையவராகிப் பெருமானது சேனைகளுக்கு நியாமகராயிருப்பவர் இவரேயா மென்றெண்ணி, அழகிய பொற்றொடியால் அலங்கரிக்கப்பட்ட கைகளைக் கூப்பிப் பணிந்து துதித் துப் பக்கத்தில் நின்றனன். (எ-று.) (அசு)

அஎ. பழியகன்மணிவிமானத்தீசனுமிழிந்துபைந்தார்ப்
பொழினரபதியைத்தோளாற்றழீஇமணிப்பொலன்கைப்பற்றி
விழிநனிகருணைபொங்கவவனொடுங்கோயின்மேவி
எழினவமணிப்பொற்சிங்காதனத்துவீற்றிருந்தானன்றே.

(இ-ள்.) சேனைமுதலியாரும், குற்றமற்ற மணிகளிழைத்த விமானத்தி னின்று மிறங்கி, பசுமையான மாலையும் பெருமையு முடைய அரசனைத் தோள்களாற் றழுவி, இரத்தினாபரணம் பூண்ட அழகிய கைகளைப் பற் றிக்கொண்டு, திருக்கண்களில் மிகவுங் கருணை யதிகரிக்க, அரசனோடு அரமனை யை யடைந்து, அழகிய நவமணிக ளிழைத்த பொற்சிங்காதனத்தில் வீற் றிருந்தனர். (எ-று.) (அஎ)

அஅ. கருதருமுவகைபொங்கக்களித்துளங்குத்தமல்ல
நிருபனுமெனையாட்கொண்டநேமியோய்நீயீண்டென்பால்
வருதவமுன்னைநாளெம்மரபினிலெவரோவாய்த்தார்
இருமையும்புரந்தாயென்னுப்பலபுகழ்ந்திறைஞ்சிநின்றான்.

(இ-ள்.) குத்தமல்லராசனும் சொல்வதற் கரிய, சந்தோஷ மதிகரிக்க உள் ளம் களிப்படைந்து, "என்னை யாட்கொண்டருளின சக்ராயுதமுடையவரே! தேவரீர் இங்கு என்னிடத்துக்கு வருவதற்கான தவத்தை முற்காலத்தில் என் வமிசத்தில் எவர் செய்தனரோ? இம்மையிலும் அம்மையிலும் என்னை இரட்சித்தீர்" என்று பலவாறு புகழ்ந்து வணங்கி நின்றனன். (எ-று.) (அஅ)

அகூ. நின்றமன்னவனைத்தம்பாங்கிருத்திவாணிருபநின்பால்
இன்றணியரங்கத்தீசன்விடுத்தனனெனைநீயீன்ற
மின்றணிமருங்குற்செவ்வாய்ப்பதுமையைவிரும்பியின்னே
மன்றல்செய்வதற்காவுன்றன்மனக்கருத்துரைத்தியென்றான்.

(இ-ள்.) (சேனைமுதலியார், அப்படி) நின்ற அரசனைத் தம்மருகிலிருத்தி "வாளைத்தரித்த நிருபனே! திருவரங்கநாதன, நீ பெற்ற, மின்னல் பின்னிடும் இடையையும் சிவந்த வாயையு முடைய பதுமையாரை விரும்பி, இப்பொழுதே கலியாணஞ் செய்வதற்காக நின்னிடம் இன்று எனனை விடுத்தனன. உனது மனக்கருத்தைச் சொல்வாயாக" வென்றனர். (எ-று.) (அகூ)

கூ0. புகன்மொழிசெவியிற்சாரவெழுந்துடல்புளகம்போர்ப்ப
அகமகிழ்ந்தவனானந்தநடம்புரிந்தயன்மறொன்றும்
பகாகிலனெனையாளீசன்பதமலாப்பதுமம்பலகாற்
சகமுடிதழுவததாழ்ந்தான்பரிவுருத்தரித்ததன்னான்.

(இ-ள்.) (அப்படி) சொன்ன சொல் செவியிலே சார்ந்ததும், அவ்வரசன் எழுந்து உடல் புளகம் போர்க்க அகமகிழ்ந்து ஆநந்தத்தாண்டவஞ் செய்து அயலான வேறொன்றையும் சொல்லாதவனாகி, எனனையாளும் நியாமகனான சேனைமுதலியாரது பாதமாகிய தாமரைமலர்களைப் பலமுறையும் பூமியில் முடிபடும்படி வணங்கி, அன்பே ஒரு உருவங் கொண்டதுபோ லானான. (எ-று.) (கூ0)

கூக. ஆர்கலிமதித்துமாயாதமுதெளிதருந்தவாய்ந்த
சீாகடறிவலைகொவ்வாதிதறகெனுஞ்செருககானசெல்லல்
கூர்தரும்பவநீததுயந்தோமென்பதோர்குறிப்பான்கோல
வாரகழன்மணிததாடசேனைநாயகன்வதனநோக்கா

(இ-ள்.) பேரொலியுடன் கடைந்து இறவாமல் அமிர்தத்தை எளிதாக உண்பதற்கு வாய்த்த சிறப்புடைய கடலானது, தான கொண்ட இந்தச் சந்தோஷ மாகிற கடலுக்குத் திவலைக்கு மொப்பாகாது எனனும் மனக்கிளாச்சியை யுடையவனாய், வருத்தம் மிகத்தரும் பிறவியை யொழித்து உஜ்ஜீவித்தோம் எனபதான ஒப்பற்ற குறிப்பையுடையவனாய்ப், பெரிய வீரக்கழலை யணிந்த அழகிய திருவடிகளை யுடைய சேனைநாயகரது திருமுக மண்டலத்தைப் பார்த்து, (எ-று.) (கூக)

கூஉ. அயன்முதலுயிரியாவுமலகிலாவுலகுந்தந்த
புயன்மதிலரஙகத்தீசனவனவெபபொருளும்பூந்தாமா
இயன்மயிலனையகூந்தற்பதுமையையியதற்காய
செயன்மகிழடியேற்கெந்தாயினையந்தநீசெய்கவென்றான்.

(இ-ள்.) பிரமன்முதலிய எல்லா வுயிர்களையும் கணக்கற்ற வுலகங்களையும் தந்தருளிய மேகமண்டலமட்டு முயர்ந்த மதில்களையுடைய அரங்கத்தெம்மானுக்கு, எந்தப்பொருளும் உரியனவே. ஆகையால், அழகிய பாதமும் மயில்போன்ற சாயலும் கூந்தலுமுடைய பதுமையாரை யளிப்பதற்காகிய காரியத்திலே மகிழ்கின்ற அடியேனுக்கு எமது ஸ்வாமியே! தேவரீரும் இயைந்தவைகளைச் செய்தருள்வீராக என்றான். (எ-று.) (கூஉ)

கூங. வேந்தர்கோனுரைகேட்டுள்ளங்களித்தெழாவிமலன்றானும்
மாந்தளிர்பொருவும்பூந்தாட்பதுமையைவதுவையின்றே
பாந்தண்மீத்துயிலெங்கோமான்புரிமுறைபகர்வனென்னா
சாந்தமற்புயத்தானுக்குவிடைகொடுத்தரங்கஞ்சார்ந்தான்.

(இ-ள்.) அரசர்க்கரசனான சோழமகாராசன் சொல்வதைக் கேட்டு, உள்ளங் களித்தெழுந்து மலரகிதரான சேனைமுதலியாரும "மாந்தளிருக்குச் சமானமான அழகிய பாதங்களை யுடைய பதுமையாரை, ஆதிசேஷர்மீது அறிதுயிலமரும் எமது பெருமான கண்ணாலஞ் செய்யும் முறைமை இன்றை யதினமே (யென்று) சொல்லுகிறேன்" என்று, சாந்த மணிந்து வலிமை யமைந்த புயங்களை யுடைய அரசனுக்கு நியமித்துவிட்டுத், திருவரங்க நகரை ச்சார்ந்தனர். (எ-று.) (கூங)

கூச. அரவணைத்துயில்பொற்கோயிலரங்கநாயகன்றாளன்பாற்
பரவியவ்வரசன்பான்மைபகர்ந்தனன்பதுமையென்னுங்
குரவலரணிகுழற்பூங்கோதையாங்கோதில்சீர்த்திப்
புரவலனமைச்சர்க்கூவாவணிநகர்புனைமினென்றான்.

(இ-ள்.) பொன்மயமான திருவரங்கத்தில் அரவணையில் அறிதுயிலமரும் அரங்கநாயகனை திருவடிகளை அன்போடு வணங்கி அச்சோழமகாராசன் இணங்கியதைச் சொல்லினர். பதுமையாரென்று சொல்லும் குராமலர்களை யணிந்த அழகிய கூந்தலையுடைய பூஞ்சோலையராலாகிய குற்றமற்ற கீர்த்தி யையுடைய அரசன், மந்திரிமார்களை யழைத்து, அழகிய நகரத்தை அலங்க ரிப்பீர்களாக வென்றுரைத்தனன். (எ-று.) (கூச)

கூரு. அக்கணமமைச்சர்சாற்றற்குரியவர்க்கறையவன்னோர்
மைக்கருங்கரிகளேறிமுரசினான்மறுகுதோறும்
புக்கணியரங்கத்தீசன்வருமுறைபுகன்றியாரும்
இக்கணநகரிமாணவலங்கரித்திடுமினென்றார்.

(இ-ள்.) அந்த க்ஷணத்திலேதானே மந்திரிமார்கள் சொல்லுவதற் குரியவர்களுக்குச் சொல்ல, அவர்கள் மையைப்போற் கருமையான யானை களின்மீ தேறிக்கொண்டு வீதிகடோறும் பிரவேசித்து, அழகிய திருவரங்க நகரப்பன் வருவதைப் பேரிகைகள் கொட்டிச் சொல்லி, யாவரும் இந்த க்ஷணமே நகரம் மாட்சிமை பெறும்படி அலங்கரித்திடுங்கோ ளென்ற னர். (எ-று) (கூரு)

கூசா. களிப்பெனுங்கடலுளந்தக்கடிநகரவர்களெல்லாங்
குளித்தனரரங்கக்கோயின்முகினிகர்கோலத்தானை
வெளிப்படக்காண்பேமென்னும்விருப்பினால்விரைவிற்சாலத்
தெளித்தனரபனிநீர்சந்தந்தெருத்துகளடங்கமாதோ.

(இ-ள்.) காவலோடு கூடிய அந்த நகரத்திலுள்ளவர்களெல்லாம் திரு வரங்கக்கோயிலில் மேகம்போன்ற திருக்கோலமுடையபெருமானை வெளிப் படக் காணப்போகிறோ மென்னும் ஆசையாலே சந்தோஷமென்னுங் கடலி லமுழ்ந்திக் குளித்தார்கள். தெருக்களிலுள்ள தூசளடங்கும்படி விரைவாகப் பனிநீரையும் சந்தனத்தையும் அதிகமாகத் தெளித்தார்கள். (எ-று.) (கூசா)

கூஎ. காவணமிழைத்துப்பைம்பொற்கதலிகைகமுகுகன்னல்
ஆவணவீதிதோறுமணிபெறநிறுவியாரம்
பூவணமணியின்றாமம்பொழிமழைபொருவநாற்றிக்
கேவணமணியின்சோதிகிளர்ந்ததோரணங்களார்த்தார்.

(இ-ள்) பட்டுத்தலமைத்துப், பசுமையும் அழகு முடைய வாழையும் கமுகும் கரும்பும் கடைத்தெருக்க டோறும் அழகு பெறும்படி நிறுத்தி, முத்து மாலைகளும் அழகிய நிறமுடைய ரத்தினமாலைகளும் பொழியும் மழைத் தாரைகளைப் போலத் தொங்கவிட்டுப், பதித்திருக்கும் ரத்தினங்களின் பிரகாச மதிகரித்த தோரணங்களைக் கட்டினார்கள். (எ-று) (௯௭)

௯௮. ஆடகமணிப்பொற்கும்பமலகிலவமைத்துச்செம்பொற்
பாடகமலர்த்தாண்மாதர்பணிமணிவிளக்கமேற்றிச
சூடகத்தளிர்க்கைசெம்பொற்பீடிகைதொகுத்துச்சோதி
நீடகவெழுதுங்கோலநித்திலத்தொகையாற்றீட்டி

(இ-ள்.) பொன்னாலாயினவும் ரத்தினங்களிழைத்தனவுமான அழகிய கணக்கற்ற கலசங்களை யமைத்துச், செம்பொன்னினாலான பாடக மணிந்த மலர் போன்ற பாதங்களை யுடைய பெண்கள், (சித்திரத்) தொழிலமைந்த அழகிய விளக்குகளை யேற்றி, வளைய லணிந்த தளிர் போன்ற கைகளாலே செம்பொற் பீடத்தை யமைத்து, உயர்ச்சி தரும்படி எழுதுங் கோலத்தைப் பிரகாச முடைய முத்துச் ஜோதிகளாலே தீட்டி, (எ-று.) (௯௮)

௯௯. துகிற்கதலிகைதோய்மாடந்தொறுமழைத்துளிகால்சோதி
முகிலணங்கண்டதோகைமுறைமையிற்களித்துமொய்த்தாங்
ககிற்புகைத்தினியசாந்தினாளெலாமெழுகிக்கோங்க
நகிற்கொடியிடைநோவெண்ணார்நகரலங்கரித்தாரன்றே.

(இ-ள்) துகிலமைந்த கொடிகள் பொருந்திய மாடங்கள் தோறும, மழைத்துளிகளைப் பெய்யும் பிரகாச முடைய மேகக் கூட்டத்தைக் கண்ட மயில்களைப் போல் சந்தோஷித்துக் கூடி, அவ்வவ் விடங்களில் அகிற்புகை யெழுப்பி, இனிய சந்தனச் சேற்றிலே மெழுகிக், கோங்கரும்பைப் போன்ற தனபாரத்தாலே ஒசியும் இடையின் நோயை யெண்ணாதவர்களாகி நகரை யலங்காரஞ் செய்தார்கள். (எ-று.) (௯௯)

௧௦௦. திருவளரங்கத்தீசன்மகிழ்வுறத்திருவயோத்தி
நிருபர்கோனிக்குவாகுவமைநிகேதனமுநீதித்
தருமவன்மாநேயத்தாற்புனைநகரத்தின்சால்பும்
பொருவமன்னவன்பொற்கோவிலபுலனுறப்புனைந்தார்மன்றே.

(இ-ள்.) திருவரங்கநாயகன் திருவுள்ள மகிழுமாறு அரசர்க்கரசனான இக்ஷ்வாகு மகாராசன் திருவயோத்தி நகரில் அமைத்த திருக்கோயிலையும், நீதியையுடைய தர்மவர்மா மிகுந்த பிரீதியோடு அலங்காரமாகச் செய்த திருவரங்க நகரத்தின் மேன்மையையும் ஒப்பாகும்படி, சோழமகாராசனது அழகிய அரமனையை அழகுபெற அலங்கரித்தார்கள். (எ-று.) (௧௦௦)

௧௦௧. செங்கதிர்மணிக்கும்பத்திற்களிற்றின்மேற்றிருக்காவேரி
துங்கமாநதியிற்கோயிலுரிமையின்றொகையோர்தூய
மங்கலமரபிற்றந்தமஞ்சனமகிழ்விறுடிப்
புங்கவனரங்கத்தீசன்புனைந்தனன்பூண்கள்பின்னும்.

(இ-ள்.) சிவந்த பிரகாசமுடைய ரத்தினங்களிழைத்த குடத்தில் யானையின்மீது திருக்காவேரி யென்னும் பரிசுத்தமும் பெருமையு முடைய நதியினின்று கோயிலுக் குரியவர்களான அனைத்துக் கொத்தி லுள்ளவர்களும்

தூய்மையான மங்கல முறைப்படி கொடுவந்த திருமஞ்சன தீர்த்தத்தில் தலைவனான திருவரங்கநாதன் மகிழ்வுடன் நீராடிப் பின்னும் பலவான ஆபரணங்களை யணிந்தனன். (எ-று.) (௧0௧)

௧0௨. பாதநூபுரம்பொற்றண்டைகங்கணம்பதக்கம்பைம்பொற்
பூதரபுயக்கேயூரங்குழைமுடிமுதலபூண்கள்
கோதகன்றிலங்குஞ்சோதிநவமணிக்குலத்தாலெயார்க்கும்
ஆதவன்முதற்கோளென்பதறைதலபோலணிந்தானன்றே.

(இ-ள்.) திருவடிகளிலணியும் நூபுரம், பொன்னாலான தண்டை, கங்கணம், பதக்கம், பசும்பொன் மயமான மலைபோன்ற புயங்களிலணியும் கேயூரம், மகரகுண்டலம, திருவபிஷேகம் முதலிய ஆபரணங்களைச், குற்றமற்று விளங்கும பிரகாசமுடைய நவரத்னக கூட்டங்களாலே சூரியன முதலிய நவக்கிரகங்களேயென்று யாக்குஞ் சொல்லுவதுபோல, அணிந்தனன். (எ-று.) (௧0௨)

௧0௩. சதுமறைபுகன்றசிறப்பவளமாந்திருமண்சாத்தி
முதுநறைகமழ்கத்தூரிதரித்தலர்முருகவின்பூந்தார்
குதுகுலத்துளவினொடுமணிந்துசெஞ்சாந்துங்கொட்டா
வதுவையின்கோலங்கொண்டான்மணிமறுவபங்குமார்பன்.

(இ-ள்.) நான்கு வேதங்களும் சொன்ன சிறப்பின்படி வெண்மையான திருமண்ணை யணிந்து, நல்ல வாசனை வீசும் கஸ்தூரியைத் தரித்து, முருக்கின மலர்மாலையும தனக்குகப்பான திருத்துழாய மாலையும் அணிந்து, செஞ்சாந்தும் பூசி, கவுஸ்துபமணியும் ஸ்ரீவற்சமும் விளங்கும் திருமார்பையுடைய பெருமான் திருமணக்கோலங் கொண்டனன். (எ-று.) (௧0௩)

௧0௪. கன்னலவின்மதனன்றாதையிவனெனக்கவிஞர்கூற
இன்னதேவனப்பாமென்னிறறுந்தகுமெனசசங்காழி
மின்னகுகதைவாளகஞ்சம்விளங்கவேவிலங்கலபோலும்
பன்னகவயிரிதோண்மீதேறினன்பணிலமார்க்க.

(இ-ள்.) கரும்புவில்லை யுடைய மன்மதனுக்குத் தகப்பன் இவனேயாமென்று கவிவல்லோர் கூறவும், அழகென்பது இவ்வளவேயாமெனறுரைப்பின் அது தகுந்ததும எனறு சொலலவும், சங்கும ஆழியும் சார்ங்கமும் பிரகாசமுடைய கதையும் வாளும் தாமரையும் விளங்க, மலைக்குச் சமானமான பெரியதிருவடியின திருத்தோளின்மீது சங்குகளொலிக்க ஆரோகணித்தனன். (எ-று.) (௧0௪)

௧0௫. தவளநீள்கவிகைசேடன்சாமரந்தரணிசோமன்
பவனனேயாலவட்டம்பாவகன்பலசெந்திபம்
உவகையினெடுத்தாரோவாமங்கலமுள்ளயாவும்
இவர்வினன்மருங்குந்தேவர்கணங்களேயெடுததச்சூழ்ந்தார்.

(இ-ள்.) நீண்ட வெண்குடையை ஆதிசேஷரும், சாமரத்தைச் சூரிய சந்திரரும், ஆலவட்டத்தை வாயுவும், பலவான செம்மையான தீபங்களை அக்கினியும், சந்தோஷத்தோடு எடுத்துக்கொண்டார்கள். (இன்னும்) கெடாத மங்கலங்களாயுள்ளன எல்லாவற்றையும் ஆசைப் பெருக்கத்தோடு தேவகணங்களெடுத்துக்கொண்டு நாலு பக்கங்களிலுஞ் சூழ்ந்தார்கள். (எ-று.) (௧0௫)

௧0௬. வேத்திரத்திருக்கைச்சேனைநாயகன்முதலவியாக்
காத்திரப்பொய்கையாதிபரமயோகியர்தாட்களுசத்
தோத்திரச்சனகனாரதாதிபாகவதர்தொல்சீர்
ஏத்திடவொழியாநான்குசுருதிசேர்ந்திருபாங்கெய்த

(இ-ள்.) பிரம்பைத் திருக்கைகளிற் றரித்த சேனைமுதலியார் முற்பட்டுச் செல்லவும், கெடாத (அப்பிராகிருதத்) திருமேனியை யுடைய பொய்கையாழ்வார் முதலிய பரமயோகிகளும் (பெருமானது) பாததாமரையைத் தோத்திரஞ்செய்யும் சனகர் நாரதர் முதலிய பாகவதர்களும் பெருமானது அநாதியான கலியாணகுணங்களை வர்ணித்துச் சொல்லவும், அழிவில்லாத நான்கு வேதங்களுஞ் சேர்ந்து இருபக்கங்களிலு மிருக்கவும் (எ-று.) (௧0௬)

௧0௭. கோடிமுப்பான்மூன்றென்னுங்குலவுபுத்தேளிர்சூழ
நீடிருமலர்த்தாளின்சீரின்னரர்நெருங்கியேத்தச
சூடியதுளவமாலைதுயல்வரத்தொலையாவீடு
நாடிருநான்குசெங்கணான்முகனொருபாலண்ண

(இ-ள்.) முப்பத்து மூன்று கோடியென்று சொல்லும் பொருந்திய தேவர்கள் சூழவும், (உலகமளக்க) நீண்டனவாகிய இரண்டு தாமரைமலர் போன்ற திருவடிகளின சீரை வித்தியாதரர்கள் நெருங்கித் துதிக்கவும், சூடிக்கொண்டிருக்கும் திருத்துழாய்மாலை அசையவும், முடிவில்லாத மோக்ஷத்தை நாடும் எட்டுக்கண்களையும் நான்கு முகங்களையு முடைய பிரமன் ஒருபக்கத்தி லிருக்கவும், (எ-று.) (௧0௭)

௧0௮. வாசவன்கங்கைசூடிமாதவர்வணங்கிவாழ்த்தப்
பேசருந்தகைசாறேவதுந்துமிபிறங்கியார்க்க
ஈசனுமரங்கத்தெந்தையிருகுழைமணிகள்சோதி
வீசவாணகையுஞ்சற்றேவிளங்கிடநடந்தான்மெல்ல.

(இ-ள்.) இந்திரனும் சிவபிரானும் மாதவர்களும் வணங்கி வாழ்த்தவும், சொல்வதற்கரிய பெருமை மிகப்பெற்ற தேவதுந்துமி மிகுதியு மொலிக்கவும், நியாமகனுன திருவரங்கத்தி லெழுந்தருளிய எமது பெருமான் இரண்டு மகரகுண்டலங்களிலுள்ள மணிகளின் பிரகாசம் வீச, ஒளியுடைய புன்முறுவலுஞ் சிறிது விளங்கிட, மெல்லச் சென்றனன். (எ-று.) (௧0௮)

௧0௯. சாரணர்விரைவினோடித்தரணிபன்சரணஞ்சூடா
வாரணங்காத்தவீசன்வருமுறையறையுமுன்னே
நாரணனரங்கதாமனான்முகாதியர்கோன்ஞான
பூரணன்வந்தானென்னுக்காகளம்புகலக்கேட்டான்.

(இ-ள்.) சாரணர்கள் விரைவாகவோடிச் சோழபூபதியின் பாதங்களைச் சூடி, கஜேந்திராழ்வானைக் காத்தருளின ஈசன் வரும் விதத்தைச் சொல்லு முன்னே, "நாரணன் வந்தான்; அரங்கதாமன் வந்தான்; பிரமாதியருக்குத் தலைவன் வந்தான்; ஞானபூரணன் வந்தான்" என்று திருச்சின்ன மொலிப்பதைக் கேட்டனன். (எ-று.) (௧0௯)

௧௧0. சொல்லியவொற்றர்க்கம்பொற்றுகிலணிதொகையில்செம்பொன்
வல்லியநிகர்வேல்வேந்தன்கொடுத்துளமகிழ்ச்சிபொங்கச்

சில்லியந்தடந்தேர்கைம்மாகுரகதத்திரள்வாள்செவ்வேல்
வில்லியலணிகத்தோடுமெழுந்தெதிர்விரைவிற்சென்றான்.

(இ-ள்.) புலியை யொத்தவனை வேலைத் தரித்த சோழபூபதி, (அப்படி) சொல்லிய சாரணர்களுக்கு அழகிய பொன்னுடை ஆபரணம் கணக்கற்ற செம்பொன் இவைகளைக் கொடுத்து, உள்ளத்தில் சந்தோஷ மதிகரிக்க எழுந்து, சக்கரம் பூண்ட அழகிய விசாலமான தேரோடும் யானைகளோடும் குதிரைக்கூட்டங்களோடும் வாளும் செம்மையான வேலும் வில்லுமுடைய சேனைகளோடும் எதிர்கொண்டு விரைவாகச் சென்றான். (எ-று.) (கக0)

கக௧. கரிகடாமுகிலாவம்பொற்கவடுமீன்கணமாத்தானம்
சொரியுநீர்மழையாக்கண்டத்தொலியிடிசும்மையாக
விரியவோர்கார்காலத்தைக்காட்டியேசூழவேந்தன்
புரியினுந்திருக்காவேரியெனவுளத்துனைவிற்போந்தான்.

(இ-ள்) யானைகளே மேகமாகவும், அழகிய பொன்னாலான கழுத்திடு கயிறு நக்ஷத்திரக்கூட்டங்களாகவும், சொரியும் மதஜலம் மழையாகவும், கண்டத்தினோசை இடியினோசையாகவும் பரவும்படி ஒரு கார்காலத்தை வெளிப்படுத்தித் தன்னைச்சூழச், சோழபூபதியின் நகரத்திலும் திருக்காவேரி வந்ததென்னும்படி மனவேகத்துடன சென்று, (எ-று.) (ககக)

கக௨. கண்டனனரசாகோமான்கருணைவாரிதியைக்காமர்
புண்டரீகக்கண்ணனைப்புளகமெய்போர்ப்பக்கண்ணீர்
கொண்டலிற்பொழியநெஞ்சமுருகுறக்கோலஞாலம்
பண்டளந்தருடாள்பல்காற்பணிந்தெதிர்பரவிநின்றான்.

(இ-ள்.) சோழபூபதி, கருணைக்கடலானவனை அழகிய தாமரை மலர் போன்ற திருக்கண்களுடையானவனை எதிர்கொண்டு சேவித்தவனாகித், தனது மெய் புளகத்தினாலே போர்க்கவும் கண்ணீரானது மேகம்போற் பொழியவும் நெஞ்சமுருகவும், அழகிய பூமியை முன்பு அளந்தருளிய திருவடிகளைப் பலமுறையும் பணிந்து, (பெருமானுக்கு) எதிராகத் துதித்து நின்றான். (எ-று.) (கக௨)

கக௩. எழுமதிலரங்ககோயிலீசனையிறைஞ்சியேத்தித்
தொழுதயனிற்குங்கோமான்றனையருள்சுரப்பநோக்கிச்
செழுமதினிசுளைபுக்காங்கெம்பிரான்றிருத்தோணின்று
வழுவகல்மணிப்பொற்பாதுகத்தின்மேல்மலர்த்தாள்வைத்தான்.

(இ-ள்.) (அப்படி) எழுமதில்களாற் சூழப்பட்ட திருவரங்கக் கோயிலிலெழுந்தருளிய பெருமானை வணங்கி வாழ்த்தி அடங்கிப் பக்கத்தில் நிற்கும் சோழபூபதியை அருள்சுரக்கும்படி கடாக்ஷித்து, செழுமையான மதில்சூழ்ந்த நிசுளாபுரியிற் பிரவேசித்து, அங்கு எம்பிராஞன பெரிய திருவடியின் திருத்தோள்களினின்று குற்றநீங்கிய மணிகளிழைத்த பொற்பாதுகையின் மீது (தனது) மலர்போன்ற திருவடிகளை வைத்து, (எ-று.) (கக௩)

கக௪. வீக்கியகழற்கால்வேந்தைவியந்துவிண்ணவர்களெல்லாம்
பாக்கியமிவனதேயென்றிசைத்திடப்பதுமநாபன்
தேக்கியகருணைபொங்கிப்பொழிதரச்செம்பொன்வெற்பைத்
தாக்கியநிவப்பதோர்பொன்மண்டபமதனைச்சார்ந்தான்.

(இ-ள்.) தேவர்க ளெல்லாம் வீரகண்டையைத் தரித்த கால்களை யுடைய அரசனைப் புகழ்ந்து பாக்கிய மென்பது இவனதே யென்று சொல்லும்படி, பதுமநாபனான பெருமான், நிறைந்த கருணையானது பொங்கிப் பொழியத் தக்கதாகச், செம்பொன் வெற்பாகிய மகாமேருவைத் தாக்கும்படி உயர்ந்ததாயிருக்கும் ஒப்பற்ற மண்டபத்தை யடைந்தனன். (எ-று.) (கககச)

ககரு. கின்னரர்வீணையோதைகெழுமவிஞ்சையர்கள்பாடப்
பன்னருங்கருடரோத்தப்பரமபாகவதர்வாழ்த்த
அன்னமென்னடையார்கூந்தலரம்பையர்மரபினாடப்
பொன்னலாமாரிதூவிப்புரந்தராதியர்களேபோற்ற

(இ-ள்.) கின்னரர்களது வீணையோசை யதிகரிக்கவும், வித்தியாதரர்கள் பாடவும், சொல்லற்கரிய கருடர்கள் துதிக்கவும், பரமபாகவதர்கள் பல்லாண்டு கூறவும், அன்னம்போன்ற மெல்லிய நடையையுடையாராயக் கூந்தலையுடையாரான அரம்பையர் முறையாக நிருத்தஞ் செய்யவும், தேவேந்திரன முதலானவர்கள் பொனமயமான மலர்களை மழையைப் போலத் தூவிப் போற்றவும், (எ-று.) (ககரு)

ககசா. குருமணிநிரையான்மாணக்குயிற்றியவிதானஞ்சோதி
தருமணிவயிரத்தூணந்தைந்தமண்டபத்தினுபபண்
திருநிழலலகிறுநாமணிதொறுந்திகழததோதற்
கருவடிவனந்தங்காட்டியரியணையமாந்தானன்றே.

(இ-ள்.) சிரேஷ்டமான இரத்தின வரிசைகளாலே சிறப்புறும்படி அலங்கரித்த மேற்கட்டியும பிரகாசத்தைத் தரும் வயிரமணிக ளிழைத்த தூணகளும் நெருங்கிய மண்டபத்தி னிடையில், தனது அழகிய நிழல் கணக்கற்ற பலவான மணிகள் தோறும் விளங்குதலால தெளிவதற்கரிய வடிவங்கள் அநேகங் காட்டிச் சிம்மாசனததி லெழுந்தருளினன. (எ-று.) (கககா)

ககஎ. கங்கையம்பதத்தெங்கோமானருண்முறைகமலம்போலுஞ்
செங்கைவேத்திரத்தானன்குமுகனோடோர்தெரிவைவாழப்
பங்கையீந்தவனைநீவிரிருமெனப்பணிப்பப்பலகால
அங்கையான்மலாத்தூய்ப்போற்றியிருந்தனரணையின்பாங்கர்.

(இ-ள்.) கங்கையை யளித்த அழகிய திருவடிகளை யுடைய எமதுபெருமானது திவ்வியாக்கினையின்படி தாமரையை யொத்திருக்கும் சிவந்த கையில் பிரம்பைத்தரித்த சேனைமுதலியார், நான்கு முகங்களையுடைய பிரமதேவனையும், ஒப்பற்ற பார்வதிதேவியார் வாழும்படிக்குத தமது இடதுபாகத்தையளித்த சிவபெருமானையும், நீங்கள் வீற்றிருங்களென்று பலமுறையுஞ் சொல்ல, அவர்கள் தமது அழகிய கைகளால் மலர்கள் தூவிப் போற்றிப் பெருமானது அணையின் பக்கத்தி லிருந்தனர். (எ-று.) (ககஎ)

ககஅ. வான்றவழ்பரிதிகோடிகோடியின்வயங்கலானும்
மூன்றதாமூலகிற்றேவர்முனிவரர்நிறைதலானும்
நான்றபூந்துளவமாலைநாயகனுறைதலானும்
ஆன்றவைகுந்தமாகவணிநகர்விளங்கிற்றம்மா.

(இ-ள்.) ஆகாயத்திற் சஞ்சரிக்குங் கோடாகோடி சூரியர்களைப் போலப் பிரகாசிப்பதாலும், மூன்றுலகிலு முள்ள தேவரும் முனிவரும் நிறைந்திருத்தலாலும், தொங்கியதாகிய அழகிய திருத்துழாயமாலையை யணிந்த நாயகன் எழுந்தருளியிருத்தலாலும், நிறைந்த ஸ்ரீவைகுண்டமெனனலாம்படி அழகிய நிசுளாபுரி விளங்கியது. (எ-று.) (கக௮)

கக௯. தழங்கினமுரசமார்த்த துந்துமிசங்கராசி
முழங்கினசுருதிநான்குமுறைமுறைமுடுகியார்த்த
வழங்கினவோதைசின்னமகரயாழொலித்மாதின்
பழங்கணீங்கியதென்றெண்ணுபார்த்திபன்களிப்புமிக்கான்.

(இ-ள்.) பேரிகைகள் ஆர்த்தன; தேவதுந்துமிகள் சப்தித்தன; சங்குக்கூட்டங்கள் முழங்கின; நான்கு வேதங்களும் முறைமுறையாக விரைந்து கோஷித்தன; திருச்சின்ன வோசை எங்குந் தெரிந்தன; மகரவீணை ஒலித்தன; பதுமைப் பிராட்டியாரது வருத்தம் நீங்கியதென்று எண்ணிச் சோழபூபதி களிப்பு மிகுந்தவனாகி, (எ-று.) (கக௯)

க௨௦. நலமிகுதினமுநாளுமிராசியுந்திதியுநாதன்
அலதுமற்றயலொன்றின்றாலெனமதித்தகத்துளெண்ணி
உலகமெங்குலமுநாமுமுயர்ந்தனமுயர்ந்தோமென்றுச
சிலதியர்வதனநோக்கிக்கொணருதிதிருவையென்றான்.

(இ-ள்.) நன்மை மிகுந்த தினமும் நக்ஷத்திரமும் இராசியும் திதியும் பெருமானே யல்லது இதரமாக வொன்றுமில்லை யென்று மதித்து மனத்திலெண்ணி, உலகமும் எமது குலமும் நாமும் உயர்ந்தோம் உயர்ந்தோமென்றுரைத்துத், தோழியர்கள் முகத்தைப்பார்த்துப் பதுமையாரைக் கொண்டு வாருங்க ளென்றான். (எ-று.) (க௨௦)

க௨க. தனத்தினுத்தரியந்தாரகணநிகர்தரளக்கோவை
கனத்துநீள்கதுப்புநானங்கமழ்தொடைகனகப்பைம்பூண்
இனத்திறனிவராகொங்கைக்கிடையுநூலிடைநோவெண்ணார்
அனத்தினுநடைமெல்லென்றவடித்தளிர்மெலிதற்கஞ்சார்.

(இ-ள்.) (தோழியரும் அவ்வளவிலே) தனத்தின்மீதுள்ள உத்தரீயம், நக்ஷத்திரக்கூட்டங்களை யொத்த முத்துமாலை, கனத்து நீண்ட கூந்தலில் கஸ்தூரி, பரிமளிக்கும் மாலை, பசும் பொன்னாலான ஆபரணம், இவைகளினங்களைக் கவனியாமலும், கொங்கைக்கிடையும் நூல்போன்ற இடையின் நோவையு மெண்ணாமலும், அன்னத்தினும் மெல்லிய நடையையுடைய தளிர் போன்ற அடிகள் மெலிவதற்கு அஞ்சாமலும், (எ-று.) (க௨க)

க௨௨. ஒருவரினொருவர்முந்துற்றோடிநீடுவகைவாரி
பெருகல்போனுதலில்வேர்வுபிறழ்தரப்பிரவாளத்தைப்
பொருவுசேயிதழ்வாய்மூரனகைநிலாப்பொடிப்பவெய்தின்
நிருபர்கொன்றேவிபாதம்பணிந்தெழாநெருங்கினின்றார்.

(இ-ள்.) ஒருவரினும் மற்றொருவர் முற்பட்டு ஓடிப், பெருகிய சந்தோஷ சமுத்திரம் பெருகுவது போல நெற்றியினிடத்து வேர்வுண்டாகவும்,

பவளத்தை யொத்த சிவந்த இதழையுடைய வாயில் சிரிப்பினாலே பற்க ளில் நிலவுண்டாகவும், விரைவாக இராஜமஹிஷியின் பாதங்களைப் பணிந் தெழுந்து நெருங்கி நின்று, (எ-று.) (கஉஉ)

கஉங. நீவியங்கலைசூழ்மின்னேர்மருங்குலாய்நிருபர்கோமான்
ஆவியேயனையாய்வேந்தனெமைநனியருளினோக்கிக்
கூவியேயரவிந்தப்பூங்குயிலினைக்கொணர்மினென்றாங்
கேவினன்விரைவினவ்வாறிழைத்தியென்றினிமைசொற்றார்.

(இ-ள்.) கொய்சகத்தையுடைய அழகிய ஆடையைத் தரித்த மின் போன்ற இடையையுடையாய்! சோழபூபதியின உயிரனையாய்! சோழ பூபதி எங்களை நல்லதாகிய அருளினாலே நோக்கிக் கூவி, தாமரையிற் பிறந்த அழகிய குயில்போன்ற பதுமையாளைக் கொண்டுவாருங்க ளென்று கட்டளையிட்டனன்; விரைவாக அவ்வாறு செயவாயாக வென்று இனிமை யாகச் சொன்னார்கள். (எ-று.) (கஉங)

கஉச. அம்பரமளவன்றென்னுமுவகையாளமிர்தச்செவ்வாய்
விம்பமேயனையாள்சொற்றோர்தமையருள்விரியநோக்கிக்
கும்பமென்முலைமீமுத்துவடமணிக்குலப்பூணாரம்
இம்பரினரிதாம்பைம்பொற்கலைமுதலெவையுமீந்தாள்.

(இ-ள்.) ஆகாயத்தினளவன்று (அதற்கும் மேற்பட்டது) என்று சொல் லும் சந்தோஷத்தை யுடையவளாய் அமிர்த மூறும் செவ்வாயானது கோ வைப்பழத்துக்குச் சமானமான சோழபூபதிமனைவி, (அப்படி) சொன்ன தோழிகளைக் கிருபை அதிகரிக்கும்படி பார்த்து, கும்பமென்று சொல்லும் தனத்தின் மீதுள்ள முத்துமாலை, இரத்தினங்களிழைத்த சிறந்த ஆபரணம், ஆரங்கள், இவ்வுலகத்தி லரிதாகிய பசும்பொன் மயமான ஆடை முதலாகிய எவைகளையும் (அவர்க்குக்) கொடுத்தனள். (எ-று.) (கஉச)

கஉரு. பார்த்திபனுரைத்தபான்மைத்தேவியும்பதுமப்பாவை
நேத்திரமனையபாங்கிமாதர்பானிகழ்த்தக்கங்கை
ஏத்திருந்திருக்காவேரிமஞ்சனம்படிவித்தீன்ற
பூத்திரள்பொருவுங்கையாற்றையலைப்புனைதலுற்றார்.

(இ-ள்.) சோழபூபதி சொல்லிய கட்டளையை அரசன் மனைவியும் பது மையாருக்கு நேத்திரம்போன்ற தோழிப்பெண்களிடத்துச் சொல்லக், கங் காதேவி யேத்தும் பெருமையுடைய திருக்காவேரி நீரினாலே மஞ்சனமாட்டு வித்து, (பதுமையாளைப்) பெற்ற புஷ்பக்கூட்டங்களை யொத்த (தமது) கை களாலே பதுமையாளை அலங்கரிக்கத் தொடங்கினார்கள். (எ-று.) (கஉரு)

வேறு.

கஉகூ. பெற்றதிருப்பாற்கடலி னுடனுதித்தவமுதுடனே பிறந்த பெண்ணை, மூற்றமுதலவதரித்த திருவழகைக்கடலுலக முழுதுங் காண, விற்றவலின்முத்தநிரை வெண்ணிறக்கோசிகம்புனைந்து மென்றோண்மீதும், உற்றதரளத்துதயக் கோசிகத்தினணிந்தா ருத்தரீயம்.

(இ-ள்.) தன்னைப் பெற்ற திருப்பாற்கடலில் தன்னோடுதித்த அமிர்தத்துடன பிறந்த பெண்ணனவளை, முதன் முதலிலவதரித்த அழகே திருவுருவானவளைக், கடல் சூழ்ந்த உலகமுழுதும் காணும்படி, குறைபடாத ஒளியுடைய முத்துவரிசைகளை யுடைய வெண்மையான பட்டுச்சேலையை யுடுத்தி, மெல்லிய தோள்களின்மீதும் பொருந்திய முத்தினொளியை யுடைய அச்சேலையினாலே உத்தரீய மணிந்தார்கள். (எ-று.) (கஉசு)

கஉஎ. கொழுனனணியரங்கேச னவன்றுயிலுந்திருவணையோ கொடியநாக, முழுமதியேதிருவதனப் பேதையிவள்வதனமென முயங்கிற்சாலக், கழுமல்கொடுவெருவுமதற் கிவட்டிருத்துவா மெனத்தோ கருத்தினார்போற், செழுமணிப்பைந்தலையரவ நிகர் கனகச்சிலம்பணியைத திருத்தாட்கிட்டார.

(இ-ள்.) கணவனாகிய அழகிய திருவரங்கநாதன் துயிலும் அழகிய அணையோ கொடிய நாகமாயிராநின்றது; இப்பதுமையாரது திருமுகமோ பூர்ணசந்திரனே என அந்நாகம் முயங்கின், இவர் மிகவும் நிறைந்த பயமுடையவ ராவர். அதற்காக இப்போதே பழக்கப்படுத்தி வைக்கலாமென்று எண்ணின கருத்துடையவர்களைப் போல, செழுமையான மணியமைந்த படத்தையுடைய பாம்பைப் போன்ற பொற்சிலம் பாபரணத்தை அழகிய திருவடிகட் கிட்டார்கள். (எ-று.) (கஉஎ)

கஉஅ. கோகனகத்தலர்மகளைக் குவளைவிழித்தளவநகைக் குமுதச் செவ்வாய்ப், பாகனையமொழியணங்கை மணிகளினாகரமெனவே பகருமேழு, சாகரமுமேகலையாத் தரித்தகுவலயமதனிற் றையலென்ன, மேகலைபன்மணிக்கரங்கள் விரிப்பவணிந்திடையினுக் கோர் மெலிவுசெய்தார்.

(இ-ள்.) தாமரைமலர் பெற்ற மகளை, கருங்குவளை போன்ற கண்களும் முல்லையரும்பு போன்ற பற்களும் செவ்வாம்பல் போன்ற சிவந்த வாயும் பாகுபோன்ற சொல்லுமுடைய திருமகளை, இரத்தினங்கட் கிருப்பிடமென்று சொல்லப்படும் ஏழுகடலும் ஆடையாகத் தரித்த பூமியில் ஓர் பெண்ணென்றெண்ணிப், பல இரத்தினங்கள் கிரணங்களை விரிப்ப, மேகலாபரணமணிந்து, இடையினுக்கு ஒரு மெலிவை யுண்டாக்கினார்கள். (எ-று.) (கஉஅ)

கஉகூ. மகளிர்மணிக்கந்தரமும் வலம்புரியுநித்திலத்தை வாய்க்குமென்றே, பகர்முதுமையிவளதணி மிடற்றெவருங்காண்மினெனப் பாரிப்பார்போற், ககனவுடுநிரைபொருவு தரளவடம்பலபுனைந் தார் கனகக்கும்ப, நிகர்முலையையவர்நிறைத்தார் பயோதரமாங் காரணப்போ நிறைந்தமாதோ.

(இ-ள்.) பெண்களின் அழகிய கழுத்தும் சங்கும் முத்தையுடையனவாயிருக்குமென்று சொல்லும் பழமொழியின் றன்மையை இப்பதுமையாரது அழகிய கழுத்தில் யாவருங் காணுங்கோ ளென்று தோற்றுவிப்பார்போலே ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரவரிசையை யொத்த முத்துமாலைகள் பலவற்றைத்தரித்துப் பொற்கும்பத்தை யொத்த தனங்களை அவர்கள் நிறைத்தார்கள்; அதனால் அவைகள் பயோதரமென்னும் காரணப்பெயர் பொருந்துவனவாயின. (எ-று.) (கஉகூ)

பயோதாம் என்பதற்குப் பாலைத்தரித்திருப்பது என்பது இயற்கைப் பொருள். இங்கு பால் போல வெண்மையான முத்துமாலையைத் தரித்ததனால் பயோதர மென்றார்.

**கஙo. வனிதைதுணைத்திருக்கரமாா சண்பகமாலையினின்மணி வண்டினஞ்சால், இனிமைதழைத்திறைகொளசசோத் தின்றியையாதவுஞ்சிலரா னியைந்ததாமே, குனிசிலைமைப்புருவநறைக் கோகனகத்திருவருளே கூர்ந்துமாடசி, நனிதழைத்தவணங்கனையார் புணர்ப்பினியையாதனவெஞ் ஞான்றுமின்றால.**

(இ-ள்.) பதுமையாரது இரண்டாகிய அழகிய கைகளிற் பொருந்திய சண்பகமாலையினில், அழகிய வண்டுக்கூட்டங்கள் நிறைந்த இனிமையடைந்து இடங்கொண்டிருக்கச் சேர்த்து, (எப்போதும்) ஒன்றோடொன்றியையாதனவும் இன்று சிலரால் இயைவனவாயின. (ஆகையால்) வளைத்த சிலையைப்போன்ற கரிய புருவத்தையுடைய தேனையுடைய தாமரைமலரிலெழுந்தருளிய பெரியபிராட்டியாரது திருவருளை மிகப்பெற்றுப் பெருமை மிகத்தழைத்த தெய்வப்பெண்கள் போன்ற பெண்களது சூழ்ச்சியினால் இயையாதன எக்காலத்துமில்லை. (எ-று.) (கஙo)

சண்பகமலரின் வாசனைபட்டதும் வண்டுகள் மோகித்தும்விழும். பதுமையாரது திருக்கையிலிட்ட சண்பகமாலையிற் படிந்த வண்டுகட்கு அவ்வாறின்மை திருவருளேயெனறார். இதனால் இயல்பிற் பகையுடைய பெரிய திருவடிக்கும் திருவனந்தாழ்வானுக்கும் எம்பெருமான் சந்நிதியிற் பகையின்மைபோல, பிராட்டியார் சந்நிதியிற சண்பகமலருக்கும் வண்டுகட்கும் பகையின்மை விளங்கவைத்தனரென்க.

**கஙக. மறவாதுநமைவிரும்புந் தாமரையாய்வளாத்தவனம் மரபில்வேந்தன், பிறவாதுநமைவிழியாய்த் தரித்தபிரான்மணம்புரிவோன் பிறவியாவும், நிறவாளிநிகர்விழியா டிருககாதிறகணியாகினிறைந்தியாணர், சிறவாவென்றிருதருணப் பரிதியடைந்தெனமணியின் றிருத்தோடிட்டாா.**

(இ-ள்.) மறவாமல் நம்மை விரும்புந் தாமரை (பதுமையாருக்குத்) தாயாகும்; அவரை வளர்த்தவன் நம வமிசத்தரசனவன்; பிறந்து படாமல் நம்மைத் தன் கண்ணாகக்கொண்ட பெருமான அவரை மணமபுரிவோனவன்; நிறம்வாய்நத அம்புபோன்ற கண்களையுடைய பதுமையாரது திருச்செவிகளுக்கு ஆபரணமாவோமாயின், நம்முடைய பிறப்பெல்லாம் நிறைவுற்றுப் புதுமை சிறவா (நம்முடைய பிறப்புகள் அறவொழியும்) என்று கொண்டு, இரண்டு இளஞ் சூரியர்கள் அடைந்தாற்போல அழகிய இரத்தினக்காதணி யிட்டார்கள். (எ-று.) (கஙஉ)

**கஙஉ. பௌவநனந்தலைத்துயில்மா றேவியருட்குவலயமாம் பவளச்செவ்வாய், மௌவனகைவயின்றவலாம் பிணியகற்றியுயர்வர முன் வாய்த்தேமிம்மா, தவ்வனிதைக்குயர்ந்துகுவ லயவிழிவாய்த் தனள்சாறு மடைந்தேமாகில், எவ்வாமும்பெறவெளிதென் றிந் துநினைத்தடைந்தெனத் திருமணிட்டாா.**

(இ-ள்.) திருப்பாற்கடலினிடையில் அறிதுயிலமரும் பெருமானது தேவியாரான அருளையுடைய (குவலயம்) பூமிப்பிராட்டியாகிய பவளம் போன்ற செவ்வாயும் மல்லிகைபோன்ற பற்களுமுடையா ரிடத்தே நாம் குறைவுபடும் பிணியை யொழித்து உயர்ந்த வரத்தை முன்பு பெற்றோம்; இப்பதுமையாரான மாது, அப்பூமிப்பிராட்டியாரினு முயர்ந்து (குவலயம்) நீலோற்பலம் போன்ற கண்களைப் பெற்றிருக்கின்றனர்; அவரை நாம் சரணடைந்தோமாயின் எவ்விதமான வரமும் பெறுதற்கெளிதாகும் என்று நினைத்துச் சந்திரன் வந்திருந்தது போலத் திருமண்ணிட்டார்கள். (எ-று.) (கஙூஉ)

கஙூஙூ. தரித்ததிருமண்ணெனும்பேர்ச் சந்திரனீன்றருளுமணித் தரளமேயோ, பரித்துதவுமவனிடத் தமிர்தின்றொருதுளியிழியும் பான்மையேயோ, தெரித்துணர்தலரிதெனநித் திலவணிபொற் றிலவலர்போற் சிறந்தமூக்கின், விரித்தநிலவுடனணிந்தார் அதற் குவமைதெரிந்தினிநாம் விளம்பலென்னும்.

(இ-ள்.) பதுமையார் தரித்த திருமண்ணென்னும் பெயரையுடைய சந்திரன் பெற்ற அழகிய முத்தந்தானோ? அச்சந்திரன் தான் வைத்திருந்து கொடுக்கும் அமிர்தத்தின் ஒப்பற்ற துளி யிறங்குந்தன்மைதானோ? இன்னபடி யென்று தெரிந்தறிவதரிதென்று முத்தாபரணத்தை அழகிய எள்ளின் மலரைப்போற் சிறந்த மூக்கினிடத்துப் பரவிய பிரகாசத்துடன் அணிந்தார்கள்; அவ்வணிக்குச் சமானமானதைத் தெரிந்து இனி நாம் சொல்வது என்ன பயன்படும். (எ-று.) (கஙூஙூ)

கஙூச. ஐந்துபடைதரித்ததிரு வரங்கேசனகமகிழ்வுற் றணிகத்தூரி, தந்துதிருமண்டொடங்கப் புருவநனந்தலைகதுப்பின் காறுஞ்சால, இந்துநிகர்திருவதனத் தெரிவையாதீட்டினரதுவு மென்னையின்ற, செந்துவர்வாய்த்திருநுதற்கோ ரழகாகித்தானதனாற் சிறந்ததன்றே.

(இ-ள்.) பஞ்சாயுதங்களைத் தரித்த திருவரங்கநாதன் மனமகிழ்ந்து அணியுங் கஸ்தூரியைக் கொடுவந்து திருமண் சாத்தியிருக்கு மிடமுதலாகப் புருவத்தின் மத்தியாயக் கேசம்வரையில் சந்திரன்போன்ற அழகிய முகமுடைய பெண்கள் மிகுதியுந் தீட்டினார்கள்; அக்கஸ்தூரியும் எனனைப்பெற்றவராய்ச் சிவந்த பவளம் போன்ற திருவாயையுடைய பதுமையாரது அழகிய நெற்றிக்கு அழகாய், அதனாலே சிறந்தது. (எ-று.) (கஙூச)

கஙூரு. நொடைபுகறலரியதிரண் மணித்தரளச்சுடிகைதிரு நுதன்மேற்சாரப், படைபொருவுபுருவநடு விலங்கவணிந்தார்துருக்கம் பைம்புருரம், இடைக்கருமையதுதழுவிற் றதற்களகக்கருநாகம் விடத்தைக்கால, விடையிழிதலோமுகமா மதியினமிர்தயினுவோ வினையேதென்பாம்.

(இ-ள்.) விலை சொல்வதற்கரிய திரண்ட அழகிய முத்துச்சுட்டியைப் பதுமையாரது அழகிய நெற்றியின் மீது பொருந்த வில்லையொத்த புருவத்தின் நடுவிடத்தே விளங்கும்படி யணிந்தார்கள். கஸ்தூரியினாலே பசிய புருவங்களானவை நெருங்கிய கரிய நிறத்தை யடைவனவாயின. அக்கருமையை, கூந்தலாகிய கருநாகம் தனது விஷத்தையுமிழ அவ்விஷம் அவ்

விடத்தில் இழிவதோ ? அன்றி முகமாகிய சந்திரனது அமிர்தத்தை யுண்ணும் நாவோ ? என்று சொல்வதல்லது அதற்கு ஒப்பு வேறெதைச் சொல்லுவோம். (எ-று.) (கருரு)

**கருசு. ஓதையுததியினமிர்தோ டொருமலர்மீதுதித்தபரி சுறந்தைவாவிப், போதையடைந்தவதரித்தா ளிவடிருவேயெனத்தெளியும் புலனிலாது, கோதைமிசைத்திருவெனவோ ரணிபுனைந்துதெரிவையர்தங் குலத்திற்கெல்லாம், பேதையொன்றொருநாமம் பிறப்பித்தாரவர்கள்பெயர் பிறிதேதென்பாம்.**

(இ-ள்.) ஓசையை யுடைய சமுத்திரத்தில் அமிர்தத்தோடு ஒப்பற்ற தாமரைமலரி லுதித்த விதமாகத் திருவுறையூரில் தடாகத்திலுள்ள தாமரை மலரை யடைந்து அவதரித்தவரான இப்பதுமையார் பெரியபிராட்டியாரோ யென்று தெரியும் அறிவில்லாது, (அவரது) கூந்தலின்மீது திருவென்று சொல்லும் ஒரு ஆபரணத்தைத் தரித்துப், பெண்களின் குலத்துக்கெல்லாம் பேதையொன்று யாவருஞ் சொல்லும் ஒரு பெயரை யுண்டாக்கிக்கொண்டார்கள்; (அப்படிப்பட்டவர்களான) அப்பெண்களின் பெயரை வேறென்ன வென்று தான் சொல்லுவோம். (எ-று.) (கருசு)

**கருஎ. அலைப்பாழியுடைப்பூவி னழகியபூவனைத்துமணி யலங்கலாகக், குலப்பாவைதிருவதுவை காண்குவாமெனவொருபாற் குழீஇயபோல, கலப்பாரமுலைமடவார் பலமலரின்றொடைபுனைந்தார் கமலைதானும், மலர்ப்பாவையெனுநாமம் பிறந்தையினனன் றிவனப் பானும்வாய்த்தாள்.**

(இ-ள்.) கடல்சூழ்ந்த வலிமையுடைய பூமியினிடத்துள்ள அழகிய பூக்களெல்லாம் (நாம்) அழகிய மாலையாயிருந்து நமது குலப்பாவையாகிய பதுமையாரது திருக்கண்ணாலத்தைக் காணக்கடவோமென்று ஓரிடத்திற் கூடியதுபோல நவமணிகள் கலந்த ஆரமணிந்த தனங்களையுடைய பெண்கள் பலவாயுள்ள மலர்மாலைகளை யணிந்தார்கள்; பதுமையாரும் மலர்ப்பாவை யென்னும் பெயரைப் பிறந்ததினாலேயே யன்றி அழகாலும் பொருந்தினர். (எ-று.) (கருஎ)

**கருஅ. குங்குமமான்மதகரந்தஞ் செழும்பனிநீரொடுகலவைக் குளிர்செஞ்சாந்தும், பொங்குமுலைமிசைக்களபக் கும்பமொளிர்கம் பலத்தாற் போர்த்தாலென்னச, செங்குமுதவிதழ்மடவார் சதுர்த்திருதாண்முதலாகத் திருவின்மேனி, எங்குமணிகலையணிந்தார் கலவையினான்மணக்கோல மெவையுஞ்செய்தார்.**

(இ-ள்.) வாசனையுடைய கும்பத்தைப் பிரகாசிக்கும் சிவந்த ஆடையாற் போர்த்தது போல, செவ்வாம்பல் போலும் இதழையுடைய பெண்கள் குங்குமமும் கஸ்தூரியும் மற்றும் வாசனைத் திரவியங்களும் செழுமையான பனிநீரோடு கலந்ததான குளிர்ச்சியுடைய சிவந்த சாந்தும் பூசித்திருக்கும் முலையின்மீது சாத்தி, இரண்டு பாதங்கள் முதலாகப் பதுமையாரது திருமேனி யெங்கும் ஆபரணமும் ஆடையு மணிந்தார்கள்; சந்தனத்தினால் மணக்கோல மெல்லாம் செய்தார்கள். (எ-று.) (கருஅ)

வேறு.

கநகூ. அரனிடத்துமையிரதிநாமகள்சசியரம்பை
பரனிவட்புரிவதுவையானிவணுறப்பார்த்தேம்
வரனிறைக்கொடியிவளெழிற்கவர்கள்சீர்மதிப்பின்
உரனிலேக்கலேயுததியோர்திவலேயுமுறழார்.

(இ-ள்.) பெருமான் இப்பதுமையாரைத் திருக்கலியாணஞ் செய்து கொள்ளுவதினுல் சிவபிரானது இடது பாகத்திலிருக்கும் உமாதேவி இரதி சரசுவதி இந்திராணி அரம்பை (இவர்களே) இங்கு வந்திருக்கக் கண்டோம்; பெருமை நிறைந்த கொடிபோன்ற இப்பதுமையாரது அழகுக்கு அவர்கள் அழகு வலிமைபெற்றுநிற்க மதித்துப்பார்த்தால் அலேகளேயுடைய சமுத்திரத்தின் முன்னே ஓர் திவலே எவ்வளவு அவ்வளவும் ஒவ்வார்கள். (எ-று.)

கச0. நன்றுநன்றிவள்வனப்பெனுவியந்துநீர்ஞாலத்
தொன்றுமாதருளிவட்கிணைபித்தருமுரையார்
தொன்றுசார்ந்தகண்ணேறெலாமின்றறத்துடைப்பாம்
என்றுபோற்றிநீராஞ்சனமிகுளேயெடுத்தார்.

(இ-ள்.) இவளழகு நன்று நன்று என்றுரைத்து ஆச்சரியமடைந்து, சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலிருக்கும் பெண்களில் இவருக்குச் சமானமாயிருப்பாரைப் பித்தர்களுஞ் சொல்லமாட்டார்கள்; தொடர்ந்து பற்றிய திருஷ்டி தோஷமெல்லாம் இன்று நீங்கும்படி நீக்கக்கடவோ மென்று வாழ்த்திப், பெண்கள் நீராஞ்சன மெடுத்தார்கள். (எ-று.) (கச0)

கசக. அமிர்தமேயெமதாவியேயகிலளறுரந்
திமிர்தனக்குலதெய்வமேசெழுமலர்த்திருவே
நிமிர்தடம்புயநேமிமாயனேச்சுரர்நிரைசூழ்ந்
திமிர்தருஞ்சவைக்கெழுந்தருள்குதியெனவிசைத்தார்.

(இ-ள்.) அமிர்தமே! எமது உயிரே! அகிற்சேறும் சந்தனமும் பூசிய ஸ்தனங்களேயுடைய குலதெய்வமே! செழுமையான தாமரைமலரிலிருக்கும் பெரியபிராட்டியே! உயர்ந்தும் விசாலமுமான புயத்தில் சக்ரத்தையுடைய பெருமானேத் தேவக்கூட்டங்கள் சூழ்ந்து ஆரவாரித்துக்கொண்டிருக்கும் சபைக்கு எழுந்தருள்வாயாக வென்று சொல்லினர். (எ-று.) (கசக)

கசஉ. பரிபுரத்தொடுபாடகமேகலேபசும்பொற்
சரிமணித்தொடியங்கதநவமணிச்சரங்கள்
அரியநித்திலத்தணிவடந்திரண்மணியாரம்
விரிகதிர்க்குழைபிலம்பகஞ்சுடிகையில்விளங்க

(இ-ள்.) பாதச்சிலம்போடு பாடகம், மேகலே, பசும்பொன்னுலான சரியென்னுங் கைவளே, மணிமயமான வளேயல், தோளணி, நவமணி யாரங்கள், அருமையான முத்துக்களான அழகிய மாலே, திரண்ட ரத்தின ஆரம், பிரகாசமிகுந்த குண்டலம், நுதலணிமாலே, நெற்றிச்சுட்டி விளங்கவும், (எ-று.) (கசஉ)

கசந. சென்னியிற்றிருவிளம்பிறைதரமதிதிகழ
மன்னியற்பலமலர்கமேய்மருங்குறமகளிர்

கன்னியர்க்கரசிவள்கொலென்றனைவருமுகருத
மின்னியற்கொடிமருங்குலாள்கடந்தனண்மெல்ல.

(இ-ள்.) சென்னியில் திருவென்னு மாபரணம் இளம்பிறையான சிறந்த சந்திரன்போல விளங்கவும், பொருந்திய அழகையுடைய பலவகையான மலர்களைத் தூவிப் பெண்கள் பக்கத்திலிருக்கவும், மாதர்கட்கரசி யிவளே யென்று எல்லோரு மெண்ணவும், மின்னற்கொடி போலும் இடையையுடைய பதுமையார் மெதுவாக நடந்தனர். (எ-று.) (கசங)

கசச. தரங்கவார்புனற்பொன்னியினனந்தலைதயங்கும்
அரங்கநாயகனவையகத்துவகையோடணுகாக்
கரங்கள்வானவர்முனிவரர்குவித்திடக்களிற்றிற்
கிரங்குமாதவன்வலத்தரியணையிடத்திருந்தாள்.

(இ-ள்.) அலைகளோடு கூடிய பெருநீரையுடைய திருக்காவேரியின் மத்தியில் எழுந்தருளிய திருவரங்க நாயகனிருக்கும் சபையினிடத்தில் சந்தோஷத்தோடடைந்து, தேவர்களும் முனிவர்களும் கைகள் குவிக்கும்படி கஜேந்திராழ்வானுக்குத் திருவுள்ளமிரங்கிய பெருமானது வலதுபக்கத்தில் சிம்மாசனத்தி லெழுந்தருளினர். (எ-று.) (கசச)

கசரு. என்னையாளுடைநாதனுஞ்சேனையினிறையோன்
தன்னைநோக்கலுந்தானவனும்பெருந்தகையும்
முன்னைநாயகன்வதுவையின்சடங்குநூன்முறையே
பொன்னைநோக்கிநீமுடிக்குதியெனவருள்புரிந்தான.

(இ-ள்.) என்னை யடிமையாகவுடைய பெருமானும் சேனைநாயகரை நோக்கலும் பரமாகாசத்துக்கு நிர்வாஹகராகிய பெருந்தகையையுடைய அவரும் காரணபூதனாகிய பெருமானது கண்ணாலச் சடங்கைச் சாஸ்திர முறைப்படி நீ முடிப்பாயாக வென்று தேவகுருவை நோக்கி அருள் புரிந்தனர். (எ-று.) (கசரு)

கசசு. குருவுநான்முகனைம்முகன்புரந்தரன்குழுமாண்
ஒருவுறுமுனிவராகணத்தென்றனையுவந்தே
அருளினோக்கியீதறைந்தனையென்னினின்னடியேன்
பொருவின்மாதவத்தேனெனுப்பணிந்தெழாப்புகழ்ந்தான்.

(இ-ள்.) தேவகுருவும், பிரமன் சிவன் இந்திரன் (முதலானவர்கள்) கூட்டத்தில் பெருமை நீங்காத முனிவர்கள் சமூகத்தில் சந்தோஷித்து என்னைக் கிருபையோடு நோக்கி இதனை யருளிச்செய்தீ ரொன்னில் தேவரீர்க் கடியேனை நான் ஒப்பற்ற பெருந்தவத்தை யுடையேனேனென்று பணிந்தெழுந்து துதித்து, (எ-று.) (கசசு)

கசஎ. நவைதெறுந்தவர்வசிட்டனாதியரொடுநாதன்
சவைநனந்தலைநிவந்தபந்தரின்பணைசங்கம்
எவைகளுந்தழைந்திடமறைமுறைவழாதிழைப்பான்
கவைஞர்போற்றிடத்தொடங்கினன்வதுவையின்கருமம்.

(இ-ள்.) குற்றம் நீங்கிய தவசிகளோடும் வசிட்டர் முதலானோரோடும் பெருமானெழுந்தருளிய சபைக்கிடையில் அமைந்த பந்தலில் வாத்தியங்களும் சங்கங்களுமெல்லாம் ஒலிக்கும்படி வேதமுறை தவறு தியற்றுவதற்காகச் சடங்கினர் போற்றும்படி கண்ணாலச் சடங்கை ஆரம்பித்தனர்.(எ-று.)

கசஅ. புரிந்துவேதிசந்தனத்தொடுமலர்களாற்புனைந்து
விரிந்தபொற்செழும்பாலிகைநிரைத்துநீர்மிகவும்
சொரிந்தபன்மணிக்கும்பங்குரவகைதுலங்கத்
தெரிந்தபறபலசாரமவ்வயின்வயின்செபித்து

(இ-ள்.) ஓமகுண்டமமைத்து சந்தனத்தாலும் மலர்களாலும் அலங்கரித்து விரிந்த செழுமையுடைய பொற் பாலிகைகளைப் பரப்பி, தீர்த்தங்கள நிரப்பிய கும்பங்களையும் முளைவகைகள் விளங்கும்படி தெரிந்த பலவான நவதானிய விரைகளையும் அவ்வவ்வகைகளில் மந்திர பூர்வமாகச் சேர்த்து, (எ-று) (கசஅ)

கசகூ. சுடர்குருப்புகைசங்கபாத்திரமெழிற்சுருவம்
அடர்சுருக்கருக்கியமதுபருக்கமக்கதஞ்சீர்
படாபொரிகருவைதருப்பைமற்றுரியவும்பணித்து
இடரறததழலவளர்ததுமுந்தாகுதியிழைத்தான்.

(இ-ள்) தீபபாத்திரம், நிறமுடைய தூபபாத்திரம், சங்கபாத்திரம், அழகிய சுருவம், நெருங்கிய சுருக்கு, அருக்கியம், மதுபர்க்கம், அக்ஷதை, சிறப்புப்பரவிய பொரிக்குவியல், தர்ப்பை மற்றும் உரியவைகளை யமைத்து விக்கினமின்றி அக்கினிவளர்த்து முற்பட ஆகுதி செய்தனர். (எ-று.) ()

கரு0. அலர்ந்ததாமரைசசெங்கணனெண்கணனழகார்
சிலம்பினனமராபதிக்கிறைமுதற்றேவா
கலந்தபோவையகத்தவன்புரிமணக்கரும
நலந்தனைப்புகழ்ந்தவனிமானிடர்கொலோகவில்வார்.

(இ-ள்.) எட்டுக்கண்களையுடைய பிரமன் அழகையுடைய கைலாய மலையையுடைய சிவன் அமராவதிக்குத் தலைவனான இந்திரன் முதலிய தேவர்கள் கூடிய பெரிய சபையினிடத்தில் மலர்ந்த தாமரை மலர்போன்ற சிவந்த கண்களையுடைய எம்பெருமான் செய்துகொள்ளும் மணச்சடங்கின் நலத்தைப் புகழ்ந்து சொல்வார் பூமியிலுள்ள மனிதர்களோ? (எ-று.) (கரு0)

வேறு.

கருக. மதியமிர்தகலைநிலவை யணுவளவுந்தெரிந்தறியா வனசம் பொன்னி, நதியரவணைநெடியோன் றனையடைந்துவிழியாய நலத்தானந்த, கதியருளுமலர்வனிதை திருவதனநிறைமதியின் கவினியாவும், புதியவுவகையினேக்கிற் றுயர்ந்தவர்ச்சாந்தவர்க்கரிய பொருளொன்றின்றால்.

(இ-ள்.) சந்திரனது அமிர்தமயமான கலைகளாலுண்டாகும் நிலவை அணுவளவும் அறிந்தறியாத தாமரையானது, திருக்காவேரியில் அரவணையிலமர்ந்த எம்பெருமானை யடைந்து திருக்கண்களாகிய நலத்தாலே, நிர

திசய ஆனந்தமயமாகிய மோக்ஷமளிக்கும் பதுமையாரது திருமுகமாகிற நிறைந்த சந்திரனது அழகையெல்லாம் புதிதான சந்தோஷத்துடன் பார்த்தது. ஆதலாலே உயர்ந்தவர்களை யடைந்தவர்களுக்கு அருமையான பொருள் ஒன்றுமில்லை. (எ-று.) (கடுக)

கடுஉ. கொடியிடையுநம்பெருமான் றிருமுகமண்டலநோக்கல் குறிப்பக்கூற, முடிவிலவாவெனுநிலவான் விழிக்குவளையலர்ந்த வதன் முன்னேநெஞ்சுட், படிநெடுநாண்வெயிலவிரிய விரிந்தில வாண்டவையல்லாற் பரிதிசோமன், வடிவரிகைத்திகிரிவளை காட்டலுமுற்றுறக்காண்டல் வாய்த்தாளின்றால்.

(இ-ள்) கொடிபோன்ற இடையினையுடைய பதுமையாரும் நம்பெருமானது திருமுகமண்டலத்தைப் பார்க்கக் குறிக்கவே, சொல்லிமுடியாத அவா என்னும் நிலவினாலே பதுமையாரது திருக்கண்களாகிய கருங்குவளை மலர்கள் மலர்வதற்கு முன்னே, உள்ளத்திற் பொருந்திய பெரிய நாண மாகிய வெயில் விரிந்ததனாலே அவை ஆண்டு மலர்ந்திலவாயின. அது வல்லாமலும் பெருமானது வரிகளையுடைய கையிலுள்ள சுதர்சன பாஞ்ச சந்நியங்கள் சூரிய சந்திரருடைய வடிவைக் காட்டவே முகமண்டலம் முடிவுபெறக் காண வாய்க்கவில்லை. (எ-று.) (கடுஉ)

கடுா. இவளுதரத்தயன்முதல்வா னவர்கள்சராசரமுலக மெனைத்துமீன்றுட, குவளைதழைத்திடினுதரத் துயிர்கருமதாமலகிலுல குயிர்கடோறும், அவனவணிற்றனித்தனிகாத் தருள்காப்பினிவள் காப்பே யழகென்றாய்ந்தோ, பவளவிதழ்க்கொடியிடைகைக் கழகியபொற்காபபணிந்தான் பதுமக்கையான்.

(இ-ள்.) திருவயிற்றினிடத்துப் பிரமன் முதலிய தேவர்களும் சராசரமாகிய உலகமெவையு மீன்றுளாகிய இப்பதுமையாருக்குச் சந்தோஷமுண்டாயின் திருவயிற்றிலுள்ள உயிர்களுக்கும் சந்தோஷமேயாம். கணக்கற்ற உலகங்களிலும் உயிர்களினிடத்தும் அங்கங்கிருந்து தனித்தனியாக ரக்ஷிக்கும் ரக்ஷிப்பிலும் இவளைக்காப்பதே யழகாகுமென் றாராய்ந்தோ, பவளம் போன்ற இதழும் கொடிபோனற இடையுமுடைய பதுமையாரது திருக்கைகளுக்குத், தாமனாமலர் போன்ற திருக்கைகளையுடைய பெருமான், அழகிய பொற்காப்பை யணிந்தனன். (எ-று.) (கடுா)

கடுச. திரிபதைநீளொருபதமேற் றுயர்ந்துவிளங்கினளவளித் திருக்காவேரி, விரிநதியுங்கமலைதிருக் கரத்தோடுங்கரமேற்பின் விளங்கிமாட்சி, பெரிதடைவளெனுங்கருத்தோ தன்கையினாற்பொன் கையொடும் பிறழ்வேல்வேந்தன், புரியுதகமெனும்பெயரா னுவந்துதிருக்காவேரிப் புனலையேற்றான்.

(இ-ள்.) கங்காதேவியானவள் பெருமானது உயர்ந்த திருவடிகளாலே ற்கப்பெற்று உயர்ந்து விளங்கினள்; இந்தத் திருக்காவேரி யென்னும் விரிந்த நதியையும் பதுமையாரது திருக்கைகளோடும் தனது திருக்கரங்களாலேற்பின் விளங்கிப் பெருமையை யதிகமாக அடைவாளென்னுங் கருத்தோ, தனது திருக்கைகளாலே பதுமையாரது கைகளோடு பிரகாசிக்கும் வேலைத் தரித்த சோழபூபதி தாரையாக வார்த்த உதகமென்னும் பெயரினால் சந்தோஷித்துத் திருக்காவேரி நீரையேற்றான். (எ-று.) (கடுச)

கருரு. வாமனமாய்மாவலிபாற் றயரதன்சேயாய்மிதிலை வாழ்கோ மான்பாற, பூமகளால்வந்துதக மேற்றதிருக்கரங்கடல்சூழ் புவி வேந்தன்பாற, றுமைப்பூமகள்பொருட்டா லேற்றதுவாலுதகமெ னுஞ் சலசச்செங்கண், ஏமமதிற்றிருவரங்க நம்பெருமான்றிருக் கரத்தி னியல்பிதேயாம்.

(இ-ள்) வாமனவதாரமாய மாவலியினிடத்தும், சக்ரவர்த்தித் திருமகனாய ஜனகமகாராசனிடத்தும், பூமகள் பொருட்டாக நீரையேற்ற திருக்கைகள், கடல்சூழ்ந்த பூமியையாளும் சோழபூபதியினிடத்துப் பதுமையார் பொருட்டாக நீரை ஏற்றன. பொனமயமான மதில்சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளின தாமரைபோன்ற சிவந்த கண்களையுடைய நம்பெருமானது திருக்கரத்தின் இயல்பு இதுவேயாம். (எ-று.) (கருரு)

பூமகள என்றதை வாமனவதாரத்தில் பூமிதேவி பொருட்டாக என்றும், இராமாவதாரத்தில் மலர்மகளான பெரியபிராட்டியார் பொருட்டாக என்றும இரட்டுற மொழிதலாகக் கொள்க. உதகமெனும் கலசம்-உதகமான சலத்திலே சனிப்பது-தாமரை.

கருசு. நாணுடைமையரிவையருக் கணியதனையிவள்வயினீர் ஞாலமெல்லாங், காணுமெனக்காட்டுதல்போற் றிருமிடற்றின்மங்கல நாண் கரியோன்சேர்த்தான், வாணுதலுந்தானகில நாயகியாகினு மணிகா மற்றின்றென்றே, பூணுதலானதுதெரிந்தோ வுயிரினு நாண்சிறந்ததெனுப் புலவர்சொல்வார்.

(இ-ள்.) நாணுடைமை பெண்களுக்கு அழகாகும்; நீர் சூழ்ந்த பூமியிலுள்ளோர்களெல்லாம் அதனை இப்பதுமையாரிடத்துக் காணுங்கள் என்று காட்டுவது போலப் பதுமையாரது திருக்கழுத்தில் பெருமான் மங்கல நாணைச் சேர்த்தான். ஒளி பொருந்திய நெற்றியையுடைய பதுமையாரும், தான் அகிலலோக நாயகியாயினும், அழகிய காவல் வேறில்லை யெனறே (அம்மங்கலநாணைப்) பூண்டதைத் தெரிந்து தானோ, புலவர்கள் உயிரினும் நாண் சிறந்ததெனறு சொல்வார்கள். (எ-று.) (கருசு)

கருஎ. கண்ணனெழிற்கணையாழி யங்குலியத்தொடுதரித்த கமலச் செங்கை, வெண்ணகைசசெந்திருக்கையி னுழிசிறுவிரல்தரித்த வியனோக்கி, உண்ணயந்துதனக்குயர்ந்த தகவுடையதாயதனோ டுறவுகூறும், வண்ணமெனப்பதுமமலர் வனிதைதிருக்கரம்பிடித் தான் மகிழ்வினோடும்.

(இ-ள்.) அங்குலியத்தோடு அழகிய கணையாழியைத் தரித்த கமலம் போன்ற சிவந்த கையானது, வெண்மையான நகையையுடைய பதுமையார் திருக்கையில் சிறுவிரல், மோதிரந் தரித்த பெருமையைப் பார்த்து, உள்ளம் விரும்பி, தனக்குச் (சரியாக) உயர்ந்த சிறபபுடையதான அந்தத் திருக்கையுடனே உறவு கொண்டாடும் விதமென்னும்படி, பதுமையாரது திருக்கைகளைக் கண்ணனான பெருமான் மகிழ்ச்சியோடு பிடித்தான். (எ-று.) (கருஎ)

கருஅ. அயனைமுதலானறியாப் பரமபதத்தமரருநா மவனிவாழ் வோர், நயனமுணர்தரவெளியா யினமினிவேறணங்குளதாய் நய

**வாரநம்மின், உயாதகவின்கடவுளய லுளதாகிநினைந்துகட லுல கோருள்ளம், மயர்வுறவஞ்சனைபுரிவா மெனுங்கருத்தோதிருவொ டுதீவலமாய்வந்தான்.**

(இ-ள்.) பினபு பெருமான பதுமையாரோடு தீயை வலமாக வந்தான். (அங்ஙனம் வலம்வநத காரணம்)—பிரமனை முதலாகவுடைய சிவபெருமா னறியாத பரமபதத்தில் அமர்தலரிய நாம் பூமியில் வாழ்வோரது கண் களறியும்படி வெளிப்பட்டோம்; இனிவேறு தெயவமுண்டென்று விரும்ப மாட்டார்கள்; (ஆகையால்) நமமிலும் உயர்ந்த பெருமையையுடைய தெய வம் வேறுண்டென்பதாக நினைத்துக் கடல்சூழ்ந்த உலகத்திலுள்ளோருள் ளம மயக்கமடையும்படி வஞ்சனை செயவோ மென்னுங் கருததோ? (எ-று.)

**கருக. சிலம்புஞான்றெடுத்ததுநந் திருககரமித்திருவடியுஞ் சிலம் புதாங்கி, இலங்குநீளம்மியுமோா சிலம்பெடுத்ததிவைதொழிலா னிணையேபோனற, துலங்குசீாகவினிறனு நிகர்பெறுத்துவாமென வுட டுக்கினுன்போன், மலங்குபூணமணிக்கரததா னவடிருத்தாள் பிடித்தமைத்தா னம்மிமீதே.**

(இ-ள்.) முறகாலத்தில் நமது திருக்கரம் சிலம்பு (மலையை) எடுத் தது; இந்தப (பதுமையாரது) பாதமும சிலம்பு (சிலமபைத்) தாஙகி விள ங்கா நின்றது; அம்மியும் ஒரு சிலம்பு (மலையினின்று) எடுத்தது; இவை (சிலம்பெடுத்த) தொழிலால் (ஒன்றுக்கொன்று) சமானமே போன்றன: இனி விளங்கும் சீர் வாயநத அழகிய நிறததையும் சமானமாக்குவோ மென்று திருவுள்ளத்தி லாராயந்தவன் போல, அசையும் ஆபரணங்களை யணிந்த தனது திருக்கைகளால் அபபதுமையாரது திருவடியைப் பிடிதது அம்மியின்மீது அமைத்தனன. (எ-று.) (கருக)

**கசு0. யானுமுனதுயாபொடுகற புணாாதுகனலியின்முன் னிகை த்தவந்நாள், தானுணராவெனக்குமுன துயர்புரைத்தவாங்கதுசெ ந்தளிர்க்கையாற்றேன், மானுமொழியாய்தவள மலர்தூவிவணங்கு கென வணங்குவிப்பான், போனுனைவேல்விழிகரத்தாற் றழ லிடைவெண்பொரிசொரிந்தான் புவனமீன்றோன்.**

(இ-ள்.) தேன்போன்ற சொலலையுடையாய! நானும், உனது உயர்வுட ன கறபையறியாமல அக்கினியினிடத்துப் புகச்செயத அக்காலத்தில் அவ் வக்கினி அவ்விடத்தே உன் பெருமையைத் தானறிந்துகொண்டு எனக்கு முரைத்தது. ஆதலால் சிவநத தளிர்போன்ற கைகளாலே, வெண்மை யான மலர்களைச் சொரிந்து அவ்வக்கினியை வணங்கென்றுரைத்து வண ங்குவிப்பவனபோல, கூரிய வேல்போன்ற திருக்கண்களையுடைய பதுமை யாரது திருக்கைகளால் உலைகத்தந்த எம்பெருமான் அக்கினியினிடத்து வெண்மையான பொரிகளைச் சொரிநதனன். (எ-று.) (கசு0)

அக்கினியினிடத்துப் புகச்செயதது, இராமாவதாரத்தில் சீதாபிராட் டியாரை இலங்கையிற சிறையினின்று மீட்டபோது.

வேறு.

**கசுக. தடவியாளமீத்துயில்புரிந்தருள்பரந்தாமன்
அடவியாரணுமொடுநடந்தரக்கரையழித்தோன்**

கடவியாரணக்சருடனேபுலகெலாங்காப்போன்
புடவியாவதுவையின்றெழிலுளவெலாம்புரிந்தான்.

(இ-ள்.) விசாலமான ஆதிசேஷர்மீது அறிதுயிலமர்ந்தருளும் பரந்தாமனே, காட்டில் ஸீதாபிராட்டியாரோடு நடந்து அரக்கரை யழித்தவன், வேதவடிவான பெரிய திருவடியைச்செலுத்தி உலகத்தையெல்லாம் ரக்ஷிப்பவன், அவன், பூமியில் நடைபெறுவனவாகிய மணத்தின கிரியைகளாயுள்ளவைகளை யெல்லாம் செய்து முடித்தனன். (எ-று.) (கசுக)

கசு௨. தேவர்மாதவர்சித்தாவிருஞ்சையர்களித்திறத்தோா
யாவருங்கருதுதற்குமெட்டாதமாலெய்திய
பூவலங்கருழ்புனேகுழறனேமணம்புரியக
காவலன்றனிகுத்தமலலனுமுளங்களித்தான.

(இ-ள்.) (இப்படி) தேவர், மகத்தான தவசிகள், சித்தர், வித்தியாதரர்கள, இவ்வகைப்பட்டவர்கள யாவரும் எண்ணுவதற்கு மெட்டாத பெருமானை வந்து, பூமாலையணிந்த அலங்காரமாய விளங்கும் கூந்தலையுடைய பதுமையாரைத் திருமணஞ்செயய (அதனால்) அரசனுகிய ஒப்பற்ற குத்தமல்லராஜனும் உளங்களித்தான. (எ-று.) (கசு௨)

கசுங. அராவணைத்துயிலரங்கநாயகனுயிரனைத்தும்
விராயமெய்ப்பொருளெனமறைவிரிக்குஞசொனமெய்யே
குராமலர்க்குழறகொடியிடைமணநலங்குறியா
சராசரப்பொருடனித்தனியுவகைபூத்தனவே.

(இ-ள்.) ஆதிசேஷசயநத்தில் அறிதுயிலமரும் திருவரங்கநாயகனுக்கு உயிர்களனைத்தும் கூடிய உண்மையான சொத்தென்று வேதஞ்சொல்லும் சொல் ஸத்யமேயாகும்; குரவமலர்களை யணிந்த கூந்தலையும் கொடிபோன்ற இடையினையுமுடைய பதுமையாரது திருக்கலியாணத்தின் வைபவத்தைக் குறித்துச் சராசரப்பொருள்களெல்லாம் தனித்தனியே சந்தோஷமடைந்தன. (எ-று.) (கசுங)

கசுச. உதித்தசெங்கதிரொளிமழுங்கிடவொளிமணிம்ப
பதித்ததோள்வலயங்கடகங்கதிப்பதக்கம்
மதித்தளக்கொணுமகுடகுண்டலமணிமதாணி
துதித்திடுங்கனகாம்பரந்திதிலத்தொடையல

(இ-ள்.) உதயமான சிவந்த சூரியன் ஒளிமழுங்கும்படி பிரகாசமுடைய மணிகளை மேலே பதித்திருக்கும் வாகுவலயம், கடகம், பிரகாசமுடைய பதக்கம், மதித்து கணக்கிடுதற்கரிய கிரீடம், குண்டலம், அழகிய பெரும்பதக்கம், துதிக்கும் பீதாம்பரம், முத்துமாலை, (எ-று.) (கசுச)

கசுரு. கோவைபாடகங்கோசிகநூபுரங்குழைவான்
காவைவென்றகைக்குத்தமலலப்பெயர்நிருபன்
யாவையும்மகட்சீதனமெனவினிதீந்தான்
பூவைவண்ணனுமுவகையான்கவர்ந்தருளபுரிந்தான்.

(இ-ள்.) கோத்தமாலை, பாடகம், பட்டுச்சீலை, நூபுரம், பெண்களணியும் குண்டலம் யாவையும் ஆகாயத்திலுள்ள கற்பத்தை வென்ற கைகளையுடைய குத்தமல்லனென்னும் பெயரையுடைய அரசன் தன் மகளுக்குச

சீதனமென்று நன்கு அளித்தனன. பூவைவண்ணனான பெருமானும் (அவைகளைச்) சந்தோஷத்தினாலே அங்கீகரித்து அருள்புரிந்தனன். (எ-று.)()

கசுசு. அனையவேந்தனுக்கன்பினால்விடைகொடுத்தருளிய
புனையுநீள்குழற்பூமகள்சிவிகையின்போதத்
துனையும்வாரசிறைக்கருடன்மீதிமையவர்சூழத்
தனையொவ்வாதவனரங்கமாநகர்வயின்சார்ந்தான்.

(இ-ள்.) அப்படிப்பட்ட அரசனுக்கு அனபோடு விடைகொடுத்தருளி, அலங்காரமாய விளங்கும் நீண்ட கூந்தலையுடைய பதுமையாரா, சிவிகையின்மீது வர, விரைந்துசெல்லும் நீண்ட சிறகுகளையுடைய கருடாழ்வான மீது நித்தியசூரிகள் சூழும்படி தனக்கொப்பில்லாதவனான பெருமான் திருவரங்கமாநகரை யடைந்தனன். (எ-று.) (கசுசு)

கசுஎ. இலங்குவானகத்திளமதிக்கங்கைவீற்றிருககும்
பொலங்குலாமுடிப்புராந்தககடவுளும்பொருவில
நலங்கொளுந்தியினளினமீதுதித்தநான்முகனும்
அலங்கலுழ்முடிவாசவனமராமாதவரும்

(இ-ள்.) விளக்கமுடைய ஆகாயத்திற் றோன்றும் இளஞ்சந்திரனும் கங்காதேவியும் வீற்றிருக்கும் அழகு பொருந்திய முடியையுடையவராய முப்புரங்களை யெரித்த சிவபெருமானும், ஒப்பற்ற பிரபாவாதிசயமுடைய பெருமானது திருவுந்தியிலுண்டான தாமரையிற் றோன்றிய நான்கு முகங்களையுடைய பிரமனும், மாலைதாழ்ந்திருக்கும் முடியையுடைய இந்திரனும், தேவரும், தவசிகளும், (எ-று.) (கசுஎ)

கசுஅ. ஏனையோர்களுமெம்பிரான்றிருவடியிறைஞ்சிச
சேனைநாயகன்விடைகொடுத்திடவுளஞ்செருக்கிச
சோனைமாமுகிலெனப்பணைமுறைமுறைதுவைபபத
தானையோடுதம்பதிவயின்றனித்தனிசார்ந்தார்.

(இ-ள்.) மற்றுமுள்ளவர்களும் எம்பெருமானது திருவடிகளை வணங்கிச், சேனாபதியாழ்வான விடைகொடுக்க உள்ளம் மிகமகிழ்ந்து, விடாமழை பொழியும் கரியமேக மெனனும்படி வாத்தியங்கள் முறையாக ஒலிக்கச், சேனைகளோடும் தங்கள் தங்கள் பதிகளுக்குத் தனித்தனியாகச் சார்ந்தார்கள். (எ-று.) (கசுஅ)

கசுகூ. நிலத்தர்வானவர்பணிதரமறைபுகழ்நிகழ்த்தச
சொலத்தகுந்தகைப்பரமபாகவதாகடுதிப்பக்
குலத்தினானுயர்கோழிவேந்தருண்மலர்க்கோதை
வலததுவாழமால்பணியிடத்தினிதுகண்வளர்ந்தான்.

(இ-ள.) பூமியிலுள்ளவர்களும் தேவர்களும் பணியவும், வேதங்கள கீர்த்தியையெடுத்துச் சொல்லவும், சொல்லக்கூடிய பெருமையையுடைய பரமபாகவதர்கள் துதிக்கவும், குலத்தாலுயர்ந்த சோழபூபதி பெற்ற மலரின்மீதிருக்கும் பதுமையார் வலதுபக்கத்தில் வாழாநிற்கப் பெருமான் ஆதிசேஷசயநத்தில் இனிதாகக் கண்வளர்ந்தருளினன். (எ-று.) (கசுகூ)

௧௭0. திலகவாணுதற்றெய்வமங்கையர்புடைதிகழ
அலகில்வானவரவனியோரடியிணைபரவ
மலரின்மாதுறையூர்மயிலெனும்பெயர்வாய்த்தே
இலகுமாடசுககோயிலுண்மகிழ்ந்துவீற்றிருந்தாள்.

(இ-ள்.) திலகந்தீட்டி விளங்கும் ஒளிபொருந்திய நெற்றியையுடைய தெய்வப்பெண்கள் பக்கத்தில் விளங்கவும், கணக்கற்ற தேவர்களும் பூமியிலுள்ளவர்களும் இரண்டு திருவடிகளை வணங்கவும், பதுமையார் உறையூர் நாயச்சியார் என்னுந் திருநாமம பெற்று, பிரகாசிக்கும் பொன்மயமான திருக்கோயிலினிடத்து மகிழ்ந்து வீற்றிருந்தனர். (எ-று.) (௧௭0)

௧௭௧. கோழிமாநகர்குத்தமல்லப்பெயர்க்குரிசில்
ஆழிநாதனுக்கணிமணிக்கோயில்பொன்னரணம்
ஊழிநாளினுமுலப்பிலாமேருவினுயர்ந்த
வாழிமாமணிக்கோபுரமமைத்துளமகிழ்ந்தான்.

(இ-ள்.) உறையூரென்னும் பெருமைபெருந்திய நகரத்திலிருக்கும் குத்தமல்லனென்னும் பெயரையுடைய அரசன், திருவாழியைத தரித்த பெருமானுக்கு அழகிய மணிமயமான திருக்கோயில், திருமதில், ஊழிகாலத்திலும அழியாத மேருவைப்போ லுயர்ந்த மங்களகரமாயப் பெரிய மணிமயமான கோபுரம் இவைகளை நிருமித்து உளமகிழ்ந்தனன. (எ-று.) (௧௭௧)

வேறு.

௧௭௨. வரந்தாவிலாதடியார்க குதவுதிருமாதுறையூ ரலர்மேன் மங்கை, சரந்தாவுகயலனைய விழியரங்கேசனைமணந்த தகைமையிதால், புரந்தாதிநான்முகனைம் முகன்முதலாவுயிரனைத்தும் புவனமீன்ற, பரந்தாமன்றிருவடித்தா மரைபரவும்பாணர்பிரான் பான்மைசொலவாம்.

(இ-ள்.) அடியார்க்குக் கெடாது வரமருளும் திருமாது, உறையூரிலெழுந்தருளிய அலர்மேன்மங்கை, பாணத்தைப்போலத்தாவும் சேற்கெண்டையைப் போன்ற திருவிழிகளையுடையார் ஆகிய பதுமையார் திருவரங்கேசனை மணந்த பெருமையிதுவாகும். (இனி) இந்திரன், முதன்மைபெற்ற பிரமன், சிவன் முதலாகிய உயிர்களனைத்தையும் பூமியையும் பெற்ற பரந்தாமனது திருவடித்தாமரைகளைத் துதிக்கும் திருப்பாணாழ்வாரது வைபவத்தைச் சொல்லுவாம். (எ-று.) (௧௭௨)

௯-வது பதுமைசசருக்கம் முற்றிற்று.



ஸ்ரீ

# எ-வது முனிவாகனச்சருக்கம்.

[உறையூர் மதங்கச்சேரி.]

க. சொற்றவுறந்தைநகர்க்கயல்தொல்சீ
பெற்றமதங்கர்பிறங்கியசேரி
நற்றகைவீணைநலங்களியாவும்
உற்றதனுகரமொத்திடுமன்றே.

(இ-ள்.) (முன்பு) சொல்லிய உறையூர் நகரத்துக்கருகில் பழமையான சீரையுடைய மதங்கர்கள் கூடிய சேரியானது நல்ல பெருமையுடைய வீணையின் நலங்களெல்லாம் பொருந்தி அதன் உறைவிட மொத்திருக்கும். (எ-று.) (க)

உ. ஓதவுணர்ந்திடவோருருவிலலா
நாதமெனும்பொருள்நானிலமெலலாம்
கீதமெனுமபெயராய்நிறைகேள்விச
சூதர்மருங்குதுலங்கினதமமா.

(இ-ள்.) ஓதவும உணரவும் ஓருருவில்லாத நாதமென்று சொல்லப்படும் பொருள், பூமியெல்லாம் கீதமென்று சொல்லும பெயரையுடையதாய (அங்கே) நிறைந்த கேள்வியையுடைய பாணர்களிடத்தில் துலங்கிற்று. (எ-று.) (உ)

௩. அங்கவர்பாலிசையாசையினலவாழ
சங்கரியாமுமைதானுமுதித்தே
எங்கணுஞாலமிறைஞ்சிடவின்னும
செங்கரவீணைசிறந்திடநின்றாள்.

(இ-ள்.) அங்கு, அப்பாணர்களிடத்துள்ள இசையின்மீது கொண்ட ஆசையினாலே வாழ்க்கையையுடைய சங்கரியாகிய உமாதேவியார் தாமுமவதரித்துப் பூமியெங்கும் வணங்கும்படி இன்னும் சிவந்த (தமது) கையினிடத்து வீணை சிறக்கும்படி நின்றனர். (எ-று.) (௩)

ச. உந்தியவீணையொலித்தலுமொன்றாய்
இந்தியமாறுமியற்றருஞானம்
முந்தியமோனமுனிககணமொப்பாய
வந்தியலாளிகைம்மாவினமாழ்கும்.

(இ-ள்.) மீட்டிய வீணை யொலித்தலும், இந்திரியங்களாறும் ஒருபடிப்பட்டு, செய்தற்கரிய ஞானயோகம் முறபட்ட மௌனநிலையையுடைய முனிவர் கூட்டங்களை யொத்து, வந்து கூடிய சிங்கமும் யானைக்கூட்டங்களும் மயங்கும். (எ-று.) (ச)

ஆறு இந்திரியம்: மெய், வாய, கண், மூககு, செவி, மனம்.

ரு. வண்ணவளைக்கைமதங்கியர்தம்மேல்
எண்ணமமைத்திவறித்தளர்வோர்தம்
உண்ணலமிக்குருகிக்களிகூர
விண்ணசைமுற்றுகுறிஞ்சிவிரிப்பார்.

(இ-ள்.) நிறமுடைய வளையலையணிந்த கைகளையுடைய மதங்கியரான வர், தங்கள் மீது எண்ணம்வைத்து ஆசைப்பெருக்குடையவர்களாகித் தளர்வோர்களுடைய உள்ளம் நலமிகுந்து உருகிக் களிப்படையும்படி சுவர்க்கத்தினிடத்துள்ள ஆசை முதிர்தலான குறிஞ்சிப்பண்ணை விரித்துப் பாடுவார்கள். (எ-று.) (ரு)

சு. மாதர்மிகுந்தமதங்கியர்தம்மைக்
காதலரங்ககல்காரணமெய்திற்
கோதகலவீணையினிற்குரலகொண்டே
ஏதமின்மாலையெடுத்திசைசெய்வார்.

(இ-ள்.) அழகுமிகுந்த மதங்கியர்களைக் கணவர்கள் பிரிந்து செல்லுங்காரணம் நேர்ந்தால், குற்றநீங்கிய வீணையில் குரல்கொண்டு குற்றமற்ற மாலைப்பண்ணை எடுத்துப் பாடுவார்கள். (எ-று.) (சு)

எ. யாணருமழைககவினேழிசையாழின்
பாணாமிடற்றிசைபமபுதலோடும்
சேணவணிற்பயில்வீணையர்சேரா
மாணவிசைகருருகாமகிழ்கிற்பார்.

(இ-ள்.) அழகிய அவ்விடத்தில் அழகிய எழிசைகளமைந்த வீணை போலே பாணர்களது கண்டத்திசை பரவினமாத்திரத்தில், ஆகாயத்திலுள்ள கந்தர்வர்கள் சேர்ந்து பெருமையுடைய அந்த இசைக்கு உருகி மகிழ்வார்கள். (எ-று.) (எ)

அ. வண்டடர்சோலைமயிற்குலமாடக்
கொண்டலவரத்திரள்கோகிலமோட
எண்டருமேகவிராகமெடுத்தே
அண்டாசெவிககமுதாகவளிப்பார்.

(இ-ள்) வண்டுகள் நெருங்கிய சோலைகளில் மயிற்கூட்டங்களாடவும் கூட்டமான குயில்களோடவும் மேகங்கள் சமீபிக்கும்படி எண்ணுதலான மேகராகத்தைத் தேவர்கள் செவிக்கு அமுதாகும்படி, எடுத்துப் பாடுவார்கள். (எ-று.) (அ)

கூ. இலக்கணநீர்மையினேழிசைப்பாணர்
துலககலுமாமறியானைதுரங்கம்
குலக்கருமஞ்ஞைகுயிற்றிரளன்றி
விலக்கரிதாவுழைமேவிவிரும்பும்.

(இ-ள்.) இலக்கணமுறைப்படி எழிசைகளைப் பாணர்கள் பாடவே பன்றி, ஆடு, யானை, குதிரை, கூட்டமாய்ப் பெருமையையுடைய மயில், குயில் இவைகளின் திரளேயன்றி, விலக்குவதற்கரிதாக மான்களும் பொருந்தி விருப்பமடைந்திருக்கும். (எ-று.) (கூ)

க0. ஐங்கருவித்தொழிலாவனவெல்லாம்
சிங்கலிலாதயர்சென்னியர்தம்பால்

தங்கணிவிருசைதனைப்புகழ்தந்தே
வெங்கதிர்சூழதருமேதினிவெஃகும்.

(இ-ள்.) ஐந்துவிதமான இசைக்கருவிகளாலாகிய தொழில்களையெல்லாம் குறையாதியற்றும் பாணர்களிடத்துப பொருந்திய அழகிய கானவித்தையைப் புகழ்ந்து வெப்பமுடைய சூரியன் சூழ்ந்துவரும் பூமியிலுள்ளவர்கள் விரும்புவார்கள். (எ-று.)

ஐங்கருவிகளாவன: தோறகருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பன.

[திருப்பாணாழ்வார் திருவவதாரம்]

வேறு.

கக. ஆயதோர்மதங்கசசேரியகவயினகிலமீன்ற
மாயவன்றிருமார்பத்தின்வருசசமோர்மதலையாகித்
தூயகார்த்திகையையத்திற்றுலங்கிடவந்துதோமில
தேயமுமுயிரியாவுஞ்சிறந்திடவுதித்தகன்றே.

(இ-ள்.) இப்படிபபட்ட மதங்கச்சேரியினிடத்து உலகங்களையெல்லாம் பெற்ற மாயவனது திருமாரபினிடத்துள்ள ஸ்ரீவதசம் ஒரு குழந்தைவடிவாகிப் பரிசுத்தமான கார்த்திகை மாதத்தில் உரோகணி நட்சத்திரத்தில் அந்நாள் விளங்கும்படி வந்து, குறறமறற தேசங்களும் எல்லா உயிர்களும் சிறக்கும்படி அவதரித்தது. (எ-று.) (கக)

கஉ. அருமறைமுனிவர்வானோரனைவருமலர்த்தாள்போற்றுந்
திருவுடன்வருச்சமஙகட்சேர்தலாற்றிருந்தாரஞ்சப்
பெரருமயிற்கழற்காற்சென்னிப்புரவலனுறந்தையென்னும்
பெருநகர்திருமான்மாபுபிறங்குசீர்பெற்றதாமே.

(இ-ள்.) அரியவேதங்களை யுணர்ந்த முனிவர்கள் தேவர்கள் யாவரும் திருவடிகளைப் போற்றும் பெரியபிராட்டியாருடன் ஸ்ரீவற்சம் அவ்விடத்திற் சேர்தலாலே, சத்துருக்கள் பயப்படும்படி யுத்தஞ்செயயும் வேலையும் வீரகண்டையைத்தரித்த காலையுமுடைய சோழமகாராசனது உறையூரென்று சொல்லும் பெரியநகரமானது, பெருமானது திருமார்புபெற்ற வைபவத்தைப் பெற்றதாயிற்று. (எ-று.) (கஉ)

கங. உதித்தவத்தனயன்கார்கோளுரகநாண்வரையிற்பூட்டி
மதித்தமுதமரர்க்கீந்தோன்வனசமாமலர்த்தாணெஞ்சுட்
பதித்தவன்கருணைத்தீம்பால்பருகிமன்பதையும்வானும்
துதித்ததிசயிக்கஞானசகுடனொனத்தோற்றம்பெற்றான்.

(இ-ள்.) அவதரித்த அந்தத் தனயர், பெருமையும் வலிமையுமுடைய பாம்பாகிய கயிற்றை மந்தரமலையிற பூட்டிக் கடைந்து அமிர்தத்தைத் தேவர்கட் களித்த பெருமானது தாமரையைப்போன்ற பெருமைபொருந்திய திருவடிகளைத் திருவுள்ளத்திற் பதியவைத்து, அப்பெருமானது கடாக்ஷமாகிய இனியபாலையருந்தி, மக்களும் தேவர்களும் துதித்து அதிசயிக்கும்படி ஞானசூரியனென்னும்படி திருவுருவத்தைப் பெற்றனர். (எ-று.) (கங)

[ஆழ்வார், இசையால் திருவரங்கநாதனை யுகப்பித்தல.]

கச. மாமலராத்திருவின்கேள்வனிலஞ்சியாமடுவுட்பூத்த
தூமலரகக்குழவிக்கோதுந்தொன்மைநூல்நான்கிற்றூய்தாம்
சாமவேதத்துட்டோன்றுங்கீதமாந்தகைமைசான்ற
காமர்பைங்கொடிமீதோங்கிக்கலாவுகொள்கொம்புமானான்.

(இ-ள்.) பெருமைபொருந்திய தாமரைமலரில் வீற்றிருக்கும் பெரிய பிராட்டியாருடைய நாயகனது திருவுந்தியென்னும் மடுவினிடத்துண் டாகிய பரிசுத்தமான தாமரைமலரிலுதித்த குழவியான பிரமதேவனுக்கு உபதேசித்தருளிய அநாதியான வேதங்கள் நான்கில் பரிசுத்தமான சாமவேதத்திற் றோன்றிய கீதமென்னும் பெருமைமிக்க அழகிய பசிய கொடியானது மேலேயெழுந்து படரும் கொள்கொம்பு மாயினர். (எ-று.)

கரு. குரகதத்தனிக்கிரிவெய்யோனேழுன்றுமுன்குடகாவேரி
வரநதிபடிந்துதூயமணிவடமணிந்துவானோர்
பரவுதாளரங்கநற்போற்றிப்பனிருதிருமண்சாத்திக்
கரகமலங்கள்கூப்பிக்கருத்தருஞ்சீலமுற்றி

(இ-ள்.) ஏழுகுதிரைகளும் ஒற்றைச் சக்கரமுமுடைய சூரியன் உதயமாகுமுன், மேற்றிசையிலிருந்து பெருகும் திருக்காவேரி யென்னும் சிரேஷ்டமான நதியில் நீராடிப், பரிசுத்தமான மணிவடம் அணிந்து நித்தியசூரிகள் துதிக்கும் திருவடிகளையுடைய திருவரங்கநாதனைத் துதித்துத் துவாதசோர்த்துவ புண்டரங்களைச் சாத்திக், கரங்களாகிய கமலங்களைக் கூப்பி, எண்ணுவதற்கரிய பக்தி நிறைந்து, (எ-று.) (கரு)

கசு. வெயில்விரிமணிபொற்குன்றின்விளங்கியவிமானச்சோதி
எயில்விரிகனகக்கோயிலீசனையெம்பிரானைக்
குயில்பொருவலரின்கோதைக்கொண்கனைக்கோதில்ஞானம்
பயில்பராபரனைக்கோலப்பங்கயப்பதத்தினானை

(இ-ள்.) பிரகாசமுடைய மணிகளமைந்த பொன்மலையைப்போல விளங்கிய பிரணவாகாரவிமானச் சோதியும் திருமதில்களும் பொருந்திய பொன்மயமான திருக்கோயிலி லெழுந்தருளிய ஈசனை, எம்பிரானை, குயிலைப்போன்றவரான தாமரைமலரில் வீற்றிருக்கும் பெரியபிராட்டியாருக்கு நாயகனை, குற்றமற்ற ஞானமுடைய பராபரனை, அழகிய தாமரையைப்போன்ற திருவடிகளையுடையவனை, (எ-று.) (கசு)

கஎ. ஆதிநான்முகத்தோனிக்குவாகுவுக்களிப்பவம்பொற்
சோதிமாமதிலயோத்தித்தொன்னகரடைந்துளானை
ஏதிவாளிசிலையிராமனிலங்கைவீடணனுக்கீய
நீதியார்திருக்காவேரிநனந்தலைநிறைந்துளானை

(இ-ள்) முதன்மையான நான்கு முகங்களையுடைய பிரமன் இக்ஷ்வாகு மகாராசனுக்குக் கொடுக்க அழகிய பொற்பிரகாசமுள்ள பெரிய மதிலையுடைய திருவயோத்தியாகிய புராதனமான திருநகரத்தை யடைந்திருந்தவனை, பாணத்தைப் பூட்டும் நீண்ட கோதண்டத்தையுடைய இராமபிரான் இலங்கையையாளும் விபீஷணாழ்வானுக் களிக்க (வந்து) நீதியையுடைய திருக்காவேரி மத்தியில் நிறைந்திருப்பவனை, (எ-று.) (கஎ)

கஅ. குடதிசைமவுலிபாதங்குணதிசைமுதுகின்கோலம்
வடதிசைவதனந்தெற்காந்திசைவயின்வயங்கவானிற்
கடவுளர்முனிவர்வேதங்காசினிவணங்கிவாழ்த்தப
படவரவணையிற்றுஞ்சும்பசுந்துழாயலங்கலானே

(இ-ள்.) மேற்றிசையில் திருமுடியும் கிழ்த்திசையில் திருவடியும் வட திசையில் திருமுதுகின ழகும தெற்குத் திசையினிடத்துத் திருமுகமண்டல மும் விளங்குமபடி, தேவலோகத்திலுள்ள தேவர்கள் முனிவர்கள் வேதங் கள் பூமியிலுள்ளவர்கள் வணங்கித் துதிக்கப், படத்தையுடைய ஆதிசேஷ சயநத்தில் அறிதுயிலமரும் பசிய திருத்துழாயமாலையை யுடையவனே, (எ-று.) (கஅ)

“குடதிசைமுடியைவைத்துக் குணதிசைபாதநீட்டி, வடதிசைபின்பு காட்டித் தென்றிசையிலங்கைநோக்கிக், கடனிறகடவுளெந்தை யரவணை த்துயிலுமாகண், டுடலெனக்குருகுமாலோ வெனசெயகேனுலகத்தீரே.” எனறார் திருமாலையில்.

கசு. தருமமேமுதலநான்குபொருள்களுந்தகைசாறன்றாள்
ஒருவுறாவடிமைபூண்டோர்க்குதவிவாழுலகின்றோனே
அருமறையவையுட்சாமமவனிமீதுதித்தபோற்றல
பொருவவேழிசையானாளும்பரிவினாற்புகழுங்காலே

(இ-ள்.) தருமம் முதலிய நான்கு பொருள்களையும் பெருமைமிகுந்த தன் திருவடிகளில் நீங்காத அடிமைபூண்டவர்களுக்குக் கொடுத்து வாழும உலகங்களையெல்லா மீன்றவனே, அருமையான வேதங்களில் சாமவேதம பூ மியிலவதரித்துப் போறறுவதுபோல எழிசையாலும் தினமும பக்தியோடு (ஆழ்வார்) துதிக்கும்போது, (எ-று.) (கசு)

உ0. புலரியினெழுந்துமந்தாகினியினும்பொலிகாவேரி
நலமிகுபுனலுட்டோய்ந்துநவையுகத்திருமண்சாத்திச்
சலசமாமணிபூங்குல்லைமணிவடந்தரித்துத்தாழா
அலரியோன்றோன்றுமுன்னமாங்கொர்நாளரங்கமுற்றான்.

(இ-ள்.) ஒருநாள் விடியற்காலத்தி லெழுந்து கங்காநதியினும் வைப வத்தையுடைய திருக்காவேரியின் நன்மைமிகுந்த நீரிறபடிந்து, குற்றமறு ம்படி திருமண்ணணிந்து தாமரைமணிமாலையும் அழகிய திருத்துழாய மணி மாலையுந்தரித்து, காலந் தாழ்க்காது வரும் சூரியன் உதயமாகு முன்னே திருவரங்கநகரத்தை யடைந்தனர். (எ-று.) (உ0)

உக. பகிரதிபுகழ்காவேரித்திருமுகத்துறையிற்பைம்பொற்
றுகில்கதைதிகிரிவில்வாடுலங்குசங்கணிந்தசோதி
முகினிகர்பரனைநான்குமுறைவலமுளத்தான்முன்னி
மகிதலத்திறைஞ்சித்தென்பால்வாயில்கண்காணநின்று

(இ-ள்.) கங்காநதி புகழும் திருக்காவேரியின் திருமுகத்துறையில் பசிய பொன்னுலான ஆடையும் கதாயுதமும் சக்கரமும சார்ங்கமும் நாந்தகமும் பிரகாசமுடைய சங்கமும அணிந்த ஒளியுடைய மேகம் போ

ன்ற பெருமானை நான்கு முறை வலமாகத் திருவுளத்தாலெண்ணிப் பூமியில் வணங்கித் தென்புறமுள்ள திருவாசல் தமது திருக்கண்களுக்குத் தோன்றும்படி நின்றுகொண்டு, (எ-று.)

இச்செய்யுள் ௯0-வது செய்யுளோடு கண்காணநின்று, பாடலுற்றான் என முடிதலறிக. (உக)

உஉ. சாமவேதத்துனின்றும்பிறந்ததுதரணியீன்றோன்
நாமகளுடனேபாடநயந்ததுநளினநாபன்
ஏமமாவிழைந்துகேட்டற்கினிமையதிமையோர்மண்ணோர்
ஆமவர்க்காவநல்காவராகப்பேராயகீதம்

(இ-ள்.) சாமவேதத்தினின்றும் பிறந்ததும், உலகைச் சிருஷ்டித்த பிரமதேவன் சரஸ்வதி தேவியாருடனே கூடிப் பாட விரும்பியதும், எம்பெருமான் களிப்புடனே விரும்பிக் கேட்பதற்கினிமையானதுமாகித, தேவர்கள் மனிதர்களானவர்களுக்கு ஆநந்தத்தைக் கொடுத்து வராகமென்னும் பெயரையுடைய இசையானது, (எ-று.)

கீதம்-ராகம், ஸ்வரம், தாளம் என்னும் மூன்றின் சேர்க்கையாலுண்டாவது. (உஉ)

உ௩. இனியகாந்தருவமென்றுங்கிலக்கணவிதியாயார்க்கும்
முனிவருஞ்சிறப்பின்றன்றமுத்திகாரணமுமாகி
நனியிலக்கியத்திற்சாரநவிறருங்கானமென்னுந்
துனியிறேசிகமுமாகித்தொல்லைநாட்டோன்றிற்றம்மா.

(இ-ள்.) தனியே இலக்கணவிதியிலமைந்த இனிமையான காந்தருவமென்னும் பெயருடையதுமாய, யாருக்கும் வெறுப்பதறகரிய நிறைந்த முத்தியின்பத்தைத் தருவதாகி, இலக்கியத்தில் மிகவுமமைந்து துன்பமில்லாத தேசிகமென்னும் பெயருடையதுமாய நன்றாகச் சொல்லப்படும் கானமென்னப்பெற்று முற்காலத்திற் றோன்றியது. (எ-று.)

காந்தருவம்-இலக்கணவிதியமையப் பாடுவது. தேசிகம்-செவிக்கினிமை நோக்கிப் பல தேயத் திசைவிகற்பங்களைக் கூட்டிப்பாடுவது. (உ௩)

உச. மந்தரமிதயங்கண்டமத்திமஞ்சிரத்திற்றாரம்
முந்தமூவிசையாய்ப்பாணிமுறைக்கெலாம்பொதுமைத்தாகும்
இந்தநீர்மையினென்றற்கொன்றிரட்டியாமிசையிவற்றாற்
பந்தமாஞ்சுருதிநாலைந்திரட்டியாம்பகுக்குங்காலை

(இ-ள்.) இதயத்தில் மந்தரமாகவும் கண்டத்தில் மத்யமமாகவும் சிரத்தில் தாரமாகவும் முற்படும்படி மூன்றிசையாயச் சங்கீதத்தின் முறைகட்கெல்லாம் பொதுவாயிருக்கும். இந்தத்தன்மையினாலே இம்மூன்றிசைகளும் ஒன்றற்கொன்று இரட்டித்த இசையையுடையனவாகும்; பிரிக்குமிடத்து இவற்றால் கூடிய ச்ருதி இருபத்திரண்டாகும். (எ-று.)

மந்தரம்-மந்தவிசை, மத்யமம்-சமனிசை, தாரம்-உச்சவிசை. இவற்றின் நிலைகள் முறையே இதயம், கண்டம், சிரமெனக்கொள்க. ஒன்றற்கொன்று மாத்திரை இரட்டித்திசைப்பது [ஸ்த்தாயி] எனப்படும். ச்ருதி-செவியினால் எந்த சப்தம் கேட்கப்படுகிறதோ, அது, ஷட்ஜமம் முதலான ஸ்வர அவயவ லக்ஷணமுடைய குறிலளவான சப்தவிசேஷம்.

உஉ-வது ச்ருதிகளாவன: க-தீவ்ர, உ-குமுத்வதி, ௩-மந்த, ௪-சந்தோவதீ, ரு-தயாவதி, ௬-ரஞ்ஜநி, எ-ரதிகா, அ-ரௌத்ரி, ௯-க்ரோத, க0-வஜ்ரிகா, கக-ப்ரஸாரிணி, கஉ-ப்ரீதி, க௩-மார்ஜநி, க௪-க்ஷிதி, கரு-ரக்தா, க௬-ஸந்தீபிநி, கஎ-ஆலாபிநி, கஅ-மதந்தி, க௯-ரோஹிணி, உ0-ரம்யா, உக-உக்ர, உஉ-க்ஷோபிணி, என்பனவாம். இவற்றுக்கு ஜாதி-தீப்த, ஆயத, கருண, மருது, மத்ய என ஐந்தாம். க, அ, க0, உக-தீப்த; உ, ௯, கக, க௬, க௯-ஆயத; ரு, கஎ, கஅ-கருண; ௩, எ, கஉ, க௪-ம்ருது; ௪, ௬, க௩, கரு, உ0, உஉ-மத்ய எனக்கொள்க. (உரு)

உரு. நிடாதகாந்தாரமோரொன்றிவ்விருசுருதிநீர்மை
கெடாததெய்வதமானேறுசுருதிமும்மூன்றுகீதம்
விடாதபஞ்சமமேசட்சமத்திமம்விளம்பிலேதந்
தொடாதமுந்நான்கதாகத் தொகைபெறுஞ்சுருதிகாணில்.

(இ-ள்.) அந்த ச்ருதியைக் காணுமிடத்து, நிஷாதம் காந்தாரம் என்னும் ஒவ்வொரு ஸ்வரமும் இரண்டிரண்டு ச்ருதியை யுடையனவாகவும், தன்மைகெடாத தைவதம் ரிஷபம் என்னும் ஸ்வரங்கள் ஆறு ச்ருதியையுடையனவாகவும், இசையைவிடாத பஞ்சமம் ஷட்ஜமம் மத்யமம் எனும் ஸ்வரங்கள் சொல்லப்படும் குற்றம்பற்றாத பன்னிரண்டு ச்ருதியையுடையனவாகவுந் தொகை பெற்றிருக்கும். (எ-று.)

முன் செய்யுளிற் காட்டிய உஉ-சுருதிகளில், நிஷாதத்துக்கு உக, உஉ-ம், காந்தாரத்துக்கு அ, ௯-ம் தைவதத்துக்கு கஅ, க௯, உ0-ம், ரிஷபத்துக்கு ரு, ௬, எ-ம, பஞ்சமத்துக்கு க௪, கரு, க௬, கஎ-ம், ஷட்ஜமத்துக்கு க, உ, ௩, ௪-ம மத்யமத்துக்கு-க0, கக, கஉ, க௩-ம் உரிய ச்ருதிகளெனக. இவ்வாறன்றி நிஷாதத்துக்கு உஉ-வதும், காந்தாரத்துக்கு ௯-வதும, தைவதத்துக்கு உ0-வதும் ரிஷபத்துக்கு எ-வதும், பஞ்சமதுக்கு கஎ-வதும் ஷட்ஜமத்துக்கு ௪-வதும், மத்யமத்துக்கு க௩-வதும் நியதிச்ருதிகளெனவும் படும.

உ௬ சாற்றுநாலைந்திரண்டாஞ்சுருதியினிசைத்தவாதேழ்
தோற்றுமாங்கவற்றைச்சுத்தசுரமென்றுலகஞ்சொல்லும்
வேற்றுமைசுரமேழென்றும்விரிந்தவீராறதென்றுந்
தேற்றுறுவகைத்தாங்கானத்தேசிகமுறைமைதேரின்.

(இ-ள்.) சொல்லப்படும இருபத்திரண்டு சுருதியின் இசை கெடாது ஏழாகத் தோற்றுமவற்றை சுத்தஸ்வரமென்று உலகத்திலுள்ளார் கூறுவர். தேசிகப்பண்ணின் முறைமையைத் தெரியுமிடத்து வேறுபட்ட ஸ்வரங்கள் ஏழென்றும், விரிந்த பன்னிரண்டென்றும் தேறப்படாத தன்மையனவாகும். (எ-று.)

ஸ்வரம் ஏழாவன: ஷட்ஜமம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம என்பனவாம. இவைகட்குச் சங்கேதாக்ஷரங்கள் ச ரி க ம ப த நி என்னு மேழுமாம். ஸ்வரம் பன்னிரண்டாவன: க-வது ஷட்ஜமம். இதற்கெழுத்து ச; உ-வது சுத்த ரிஷபம், இ-து ரி; ௩-வது சதுச்ருதிரிஷபம், இ-து ரி; அல்லது சுத்தகாந்தாரம, இ-து க; இவ்விரண்டிக்கும் தொனி ஒன்றே; ௪-வது ஷட்ச்ருதிரிஷபம், இ-து ரி; அல்லது சாதாரணகாந்தாரம், இ-து க; இவ்விரண்டிக்கும் தொனி ஒன்றே; ரு-வது அந்தரகாந்தாரம், இ-து க; ௬-வது சுத்தமத்யமம், இ-து ம;

எ-வது ப்ரதிமத்யமம், இ-து ம; அ-வது பஞ்சமம், இ-து ப; கூ-வது சுத்த தைவதம், இ-து த; க0-வது சதுச்ருதிதைவதம், இ-து த; அல்லது சுத்த நிஷாதம், இ-து நி; இவ்விரண்டுக்கும் தொனி ஒன்றே; கக-வது ஷட்ச்ருதி தைவதம், இ-து த, அல்லது கைசி நிஷாதம், இ-து நி; இவ்விரண்டுக்கும் தொனி ஒன்றே; கஉ-வது காகலிநிஷாதம், இ-து நி. இவ்வாறுன பன்னிரண்டு ஸ்வரங்கள், பதினாறு பெயர்களுடையனவாகு மென்றறிக. ஸ்வரம்: ஸ்வ-(ஸ்வகீயமாக) தானே, ரம்-(ரஞ்ஜிப்பது) மகிழ்விப்பது. (உகூ)

உஎ. புகாமுகநிடதங்காட்டும்புல்லமேயிடபம்புல்லுந்
தகரினிசைகாந்தாரந்தநதிடுமயிலேசட்சம்
பகர்தருகருஞ்சமாகுமததிமம்பாய்மாவோதை
நிகரிறெய்வதமாம்பஞ்சமங்கருங்குயிலினீர்மை.

(இ-ள்.) நிஷாதம் - யானை பிளிறுதல், ரிஷபம் - எருது தொனித்தல், காந்தாரம் - ஆடு கத்துதல், ஷட்ஜமம் - மயில் ஒலித்தல், மத்யமம - அன்றில் கூவுதல், தைவதம் - குதிரை கனைத்தல், பஞ்சமம் - கருங்குயில் இசைத்தல் போல ஓசையையுடையனவாம். (எ-று.)

காட்டும், புல்லும், தந்திடும், பகர்தரும், நிகரில் என்னும் அடைமொழிகட்கு, காட்டப்படும், பொருந்திய, கொடுக்கும், சொல்லப்படும், ஒப்பற்ற என முறையே பொருள் கொள்க. (உஎ)

உஅ. அததகையாயகீதம்ராகமாம்புமானகளாறுய
மைத்தகண்மாதராறைந்தாகியாறெட்டாய்மைந்தர்
சுத்தமேவிக்ருதமென்னுஞ்சுரத்தொடும்புணரிசூழ்ந்த
இத்தலமனைத்துமலகிற்றியாவரும்விரும்பமாதோ.

(இ-ள்.) அத்தகையான இசையானது, இராகங்கள் ஆறு ஆணாகவும், முப்பது கரிய கண்களையுடைய பெண்ணாகவும், நாற்பத்தெட்டு மைந்தர்களாகவும், சுத்தம் விக்ருதம என்னும் ஸ்வரங்களுடன் யாவரும் விரும்பும்படி இவ்வுலகமெங்கும் பரவியது. (எ-று.)

ராகம்-ஸ்வர வர்ணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஜநங்களின் மனதை ஆநந்திப்பிக்கும் ஓசை விசேஷம்; இதனை ஆண், பெண், மைந்தரெனப் பிரிதநுத் தொகைப்படுததி இவ்வாசிரியர் ஒருவகையைத தழுவி யுரைத்தாரேனும், இன்னும் பலவகையாகவும் பிரிக்கப்படும். இசைநூல, "அநநதாவை ராக:" என்றுரைக்கின்றது. சுத்தஸ்வரம-ஸ்வரங்களை முறையே இசைத்துப்பாடுவது; விக்ருதஸ்வரம்-முறையேயுள்ள ஸ்வரங்களி னிடையிடையே வேறு ஸ்வரங்களைக் கூட்டிப்பாடுவது. (உஅ)

உகூ. ஆயவககீதநதனனையநதரமுறையுளாக
மேயகந்தருவர்விண்ணோர்வியந்திடக்கிரீவம்விம்மாச்
சேயகண்ணிமையாக்கமஞசெய்திடாக்கபோலஞ்சேந்த
தூயவாயிதழ்புரூரந்துடிததிடாவெயிறுந்தோன்று

(இ-ள்.) இப்படிப்பட்டதாகிய அந்தக் கீதத்தை, ஆகாயத்தை யிருப்பிடமாகவுடைய கந்தருவரும தேவர்களும் ஆச்சரியப்படும்படி, கழுத்து விம்மாமலும், செம்மையான கண்களிமைக்காமலும், சரீர மசைக்காமலும், கதுப்பும் சிவந்ததாய்ப் பரிசுததமான வாயிதழும் புருவமுந் துடிக்காமலும், பற்கள் தோன்றாமலும், (எ-று.)

"கருங்கொடிப் புருவமேறு கயனெடுங் கண்ணுமாடா, வருங்கடி மிடறும்விம்மா தணிமணி யெயிறுந் தோன்று, விருங்கடற் பவளச்செவ்வாய திறந்திவள் பாடினளோ, நரம்பொடு வீணைநாவி னவின்றதோ வெனவு நைந்தார்." என்றார் சிந்தாமணியில். (உகூ)

௬0. விழியிலானந்தவாரிமிகுதரப்புளகமேனி
ஒழிவிலாதரும்பமேன்மேலுள்ளநின்றுவகையூற
அழிவிலாப்புலன்களைந்துமயல்செலாதகத்தோடொன்றப்
பழியில்காந்தருவம்வீணைப்பாணியான்பாடலுற்றான்.

(இ-ள்.) திருக்கண்களில் ஆனந்த பாஷ்பம் அதிகரிக்கவும், திருமேனி ஒழியாமற் புளகிக்கவும், மேலும்மேலும் திருவுள்ளத்தினின்று ஆனந்த மதிகரிக்கவும், நிலைமைகெடாத ஐம்புலன்களும் புறத்திற் செல்லாது மனத்தோடு பொருந்தவும், பழிப்பில்லாத காந்தருவமென்னு மிசையை வீணையைத் திருக்கையிற்கொண்ட திருப்பாணாழ்வார் பாடத்தொடங்கினர். (எ-று)

புலன்-என்றது புலன்களிற் செல்லுமாசைகளை. (௬0)

வேறு.

௬க. ஆறாதவென்றியசுரேசனாவிகொள்வான்
மீனாகவெண்டிரைநீர்வேலைதனிலவந்துதித்தாய்
கானார்பொழிற்கூந்தற்காசினிமானைக்கமடம்
தானாகித்தாங்கித்தளருந்தவறீர்த்தாய்.

(இ-ள்.) கெடாத வெற்றியையுடைய அசுரேசனான சோமுகாசுரனது உயிரைக் கொள்ளும்பொருட்டு வெண்மையான திரைகளையுடைய நீர் நிறைந்த கடலில் மீனவதாரமாக வந்து பிறந்தாய்; வாசனையுடைய சோலையைப்போன்ற கூந்தலையுடைய பூமிதேவியை ஆமையாகித் தாங்கி அவள் தளரும் குறையை நீக்கினாய்; (எ-று.)

கூர்மாவதாரம் பாற்கடலைக் கடைந்தபோது கொண்டதென்று வழங்குவதாயிருக்க, இவர் பூமியைத் தாங்கக் கொண்டதென்று கூறியது யாது பற்றியெனின், ஆதி கூர்மமாய் அண்டத்தைத் தாங்கிக் கொண்டிருப்பவனான பெருமான் பாற்கடலிலிட்ட மந்தரமலை கீழே யமிழ்ந்தபோது அக்கூர்மவுருவத்தோடே வந்து தாங்கினன் என்பது பற்றியென்க. (௬க)

௬உ. பாடகத்தாட்பூமான்பரவையுண்மூழ்காதளித்தே
ஆடகக்கண்ணனையடர்கோலமாகினின்றாய்
கூடகப்போர்வென்றிக்கனகனுயிர்கொள்வதற்கு
நீடகப்பொற்றூணினரசிங்கமாய்நிறைந்தாய்.

(இ-ள்.) பாடகமணிந்த பாதங்களையுடைய பூமிதேவி, மகா சமுத்திரத்தில் மூழ்கி விடாமல் எடுத்து ரக்ஷித்துப் பின்னர் இரணியாக்ஷனைக் கொன்ற வராகாவதாரமாகி நின்றாய்; வஞ்சனையும் யுத்த வெற்றியுமுடைய இரணியனுயிரைக் கொள்வதற்குப் பெரியதாய் அவனிடத்துள்ளதான பொற்றூணில் நரசிங்காவதாரமாய் நிறைந்தாய்; (எ-று.) (௬உ)

௬௬. ஓவலிலாவேள்வியுஞற்றியுலகேழளிக்கும்
மாவலிபான்மூவடிமண்வாமனமாய்வந்திரந்தாய்

காவலினுறுயிரங்கைக்கார்த்தவீரன்புயத்தின்
தாவலியைத்தீரகசுமழுத்தாங்குருவந்தான்றரித்தாய்.

(இ-ள்.) கெடாத யாகத்தைச் செய்து ஏழுலகங்களையுங் காக்கும் மாவலியினிடத்து வாமனுவதாரமாய் வந்து மூவடி மண்ணை யாசித்தாய்; காக்கும் வல்லமையுள்ளவனுன ஆயிரங் கைகளையுடைய கார்த்தவீரியார்ச்சுனன் புயத்தில் விருத்தியடையும் வலிமையைத் தீர்க்குமபடி மழுவாயுதத்தைத் தாங்கும் பரசுராமாவதாரத்தைக் கொணடாய். (எ-று.)

கார்த்த வீரியார்ச்சுனன், தன்னுளுகையில் யாவரோனும் ஒரு தீங்கு நினைப்பராயின் அப்பொழுதே அவர்க்கெதிரோ தோன்றிக் கண்டித்து அரசு புரிந்தவனுதலால் 'காவலினுன்' என்றூர். (௩௩)

௩௪. கஙகாதரன்றன்கயிலைமலைவேர்பறித்தோன்
சிஙகாதனவென்றிதெறுவான்சிலையெடுத்தாய்
சஙகாழிநீககித்தனிநாஞ்சிமுன்றரித்துப்
பைங்காசினிக்கேபலதேவனுயுதித்தாய்.

(இ-ள்) கங்கையைத் தரித்த சிவபிரானது கைலைமலையின் வேரைப் பறித்தெடுத்தவனுன இராவணனது சிங்காசனத்துக்குரிய வெற்றியை யழிக்கும்பொருட்டுக் கோதணடத்தைக் கொண்ட இராமாவதாரமாயினுய்; சங்கையும் சக்ரத்தையு மொழித்து ஒப்பற்ற கலப்பையைத் தரித்து நல்ல பூமியினிடத்து நம்பிமூததபிரானவதாரங் கொண்டாய்; (எ-று.) (௩௪)

௩௫. பஞ்சவர்கடங்குறையும்பார்மடந்தைதன்பொறையும்
கஞ்சனுயிருங்களைவானகண்ணனெனவந்துதித்தாய்
வஞ்சருயிரகவரானவாகருவாழ்வருளி
அஞ்சலெனககற்கியவதாரமாகநின்றுய்.

(இ-ள்.) பாண்டவர்களுடைய குறையும் பூமிதேவியின் பாரமும் கஞ்சனுயிரும் போக்கும்படி கண்ணனுகத் திருவவதாரங் கொண்டாய; இனி வஞ்சகர்களுயிரைக் கொண்டு தேவர்களுககு வாழ்வை யளித்து அஞ்சேலென்று சொல்லுவதற்குக் கற்கியவதாரமாமாறு நின்றுய; (எ-று.) (௩௫)

௩௬. தாழ்வாரிசமடுவிற்சாலவலிதான்றளாந்தே
வீழுவாரணமூலமெய்ப்பொருளேயென்றநாட்
பேழ்வாய்க்குறுந்தாட்பிணரிடங்கர்பின்னமுறப்
போழ்வான்றிகிரியுடன்புள்ளரசிற்றேன்றினுய்.

(இ-ள்.) ஆழமுடைய தாமரை மடுவில் மிகவும் வலிகுறைந்து தளர்ந்து வீழும் கஜேந்திராழ்வான் மூலமெய்ப்பொருளே யென்றநாளில் பெரிய வாயையும் குறுகிய கால்களையுமுடைய சர்க்கரை வடிவுள்ள முதலை பின்னமடையப் பிளக்கும்படி திருச்சக்கரத்தோடு கருடாழ்வான் மீது தோன்றினுய்; (எ-று.) (௩௬)

௩௭. முக்கட்டழன்மேனிமுத்தலைவேற்கைத்தலத்துச்
செக்கப்பிறையிதழித்தேமாலைசேர்வேணி
பக்கத்துமைமேவும்பால்புரையும்வெண்ணீற்று
நக்கற்கிரவகற்றிநல்லுணர்வுநல்கினுய்.

(இ-ள்.) மூன்று கண்களையும் அக்கினிபோன்ற மேனியையும் கையில் சூலத்தையும் மாலைப்பொழுதிற தோன்றும பிறையும் தேனையுடைய கொன்றைமாலையும சேர்ந்த சடையையும் உமாதேவியார் பொருந்திய இடது பாகத்தையும் பாலை யொததிருக்கும் வெண்மையான நீற்றையுமுடைய சிவபிரானுக்கு இரத்தலை நிவர்த்தித்து நல்ல ஞானததைக்கொடுத்தாய்; (எ-று.) (௩எ)

௩அ. கற்றூவரையிகழ்ந்துகையாற்கடல்கலக்கும்
மற்றூக்குங்கோலாமதுகயிடவாக்கடிந்தாய்
விறற்றூழ்மவுலிவினதைசுதன்மீதிவர்ந்தே
பொற்றூமமாலிதிறலபொன்றவெனறியாழிதொட்டாய்.

(இ-ள்.) கல்லான வலியமலையை யிகழ்ந்த கைகளாலே கடலைக் கலக்கிய பிறர் யாருக்குந் தோல்வியடையாத மது வென்பவனையும் கைடவனெனபவனையுங் கொனறாய; பிரகாசத்தோடு கூடிய மகுடத்தையுடைய கருடாழ்வான் மீதேறி அழகிய மாலையையுடைய மாலியென்னு மசுரனது பராக்கிரமம் கெடும்படி வெற்றியையுடைய சக்கராயுதப் பிரயோகஞ் செயதாய்; (எ-று.) (௩அ)

௩௯. புண்டரீகத்தோனும்புரமூன்றெரித்தோனும்
எண்டகைசாலவேளவிககிறையாயவிந்திரனும்
மண்டழனீரவான்கால்வகையாயபூதமைந்தும்
அண்டர்முனிவோரனைவருநீயாகினின்றாய்.

(இ-ள்.) தாமரையிலிருப்பவனான பிரமனும் முப்புரங்களையு மெரித்த சிவனும எண்ணும் பெருமைமிகுநத யாகங்களுக்குத் தலைவனான இந்திரனும் பூமி அக்கினி நீர் ஆகாசம காற்று எனனும் வகையான ஐந்து பூதங்களும் தேவர்களும முனிவர்களனைவரும் நீயாகி நினறாய; (எ-று.) (௩௯)

௪0. ஓரேழ்பரிததிகிரியொண்கதிராய்வெண்கதிராய்க்
காரேழ்வரையேழ்கடலேழுமாய்நிறைந்தாய்
ஈரேழுலகனைத்துமெட்டககரததுனது
பேரேபுகலபபிரணவமாய்வீடளித்தாய்.

(இ-ள்.) ஏழு குதிரைகளும் ஒற்றைச் சக்கரமுமுடைய சூரியனும் சந்திரனும் ஏழு மேகங்களும் ஏழு மலைகளும் ஏழு கடலுமாகி நிறைந்தாய; பதினாலுலகத்தவரும் திருவஷ்டாக்ஷரத்தில் உனது திருநாமததையே சொல்லும் பிரசித்தமான பிரவணமாகி மோக்ஷத்தைக் கொடுத்தாய. (எ-று.)

௪க. என்றினையமீக்கூறிசைக்குமிசையாழிசையோ
டொன்றிநயம்வெவ்வேறுருவாமையானுருகிக்
குன்றினையநீர்வறந்தகோடரமபூங்கொத்தலர
வென்றிநயகாந்தருவமேதகவிறபாடினார்.

(இ-ள்.) என்று இப்படிப்பட்ட (பெருமானது) வைபவத்தைப் புகழும் இசையானது வீணையினிசையோடு கூடி ஆழ்வாரது இசையின் நயமும் வீணையினிசையின் நயமும் வேறு வேறாகப் பிரியாது ஒத்திருத்தலால் மனமுருகி, மலையினிடத்துத், தான் கெடும்படி நீர் வற்றிய காந்தள், பூங்கொத்

னுக்கள் மலர, வெற்றி பெற்ற நயத்தையுடைய காந்தருவப் பண்ணை மேன்மையாகப் பாடினர். (எ-று) (சக)

வேறு.

சஉ. பங்கயாசனத்தினன்பரமன்றாள்புகழ்
துங்கவேதத்தினுஞ்சுவையதாகியே
அங்கண்மாநிலந்தொழவனந்தன்மேற்றுயில
செங்கணாயகன்றிருக்கோயில்சேர்ந்ததே.

(இ-ள்) (அந்த இசையானது), தாமரை மலரை யாசனமாகவுடைய பிரமனுடைய பெருமானது திருவடிகளைப் புகழும் பரிசுத்தமான சாம வேத கானத்தைக் காட்டிலுஞ் சுவையுடையதாகி, அழகிய இடத்தையுடைய பெரிய பூமியிலுள்ளோர் வணங்கும்படி திருவநந்தாழ்வான் மீது அறிதுயிலமரும் சிவந்த திருக்கண்களையுடைய திருவரங்கத் தெம்பெருமானது திருக்கோயிலைச் சேர்ந்தது. (எ-று.) (சஉ)

சங. கேட்டலுமாரபகங்கெழீஇயகேழ்கிளர்
வாட்டடங்கண்ணினாளவதனநோக்கியே
பூட்டகவனமுலைப்பூவையிவ்விசைப்
பாட்டரிதிவணெனாபரமன்கூறினன்.

(இ-ள்.) (அவ்விசையைக்) கேட்டமாத்திரத்தில் பெருமான், தனது திருமார்பில் வாழ்கின்ற பிரகாச மிகப்பெற்ற வாளைப்போலும் விசாலமான திருக்கண்களையுடைய பெரிய பிராட்டியாரது திருமுகமண்டலத்தை நோக்கி, ஆபரணங்கள் பெருமையடையும்படி அழகிய தனங்களையுடைய பெண்ணே! இந்த இசைப்பாட்டு இவ்வுலகத்தில் அரிதென்று அருளிச் செய்தனன். (எ-று.) (சங)

[பெரியபிராட்டியார் புருஷகாரஞ்செய்தல்.]

சச. அலகிலாவுயிரொலாமளித்ததாமரைத்
திலகவாண்பிறைநுதற்றிருவின்செல்வியும்
உலகில்வாழுயிரொலாமுனக்கொன்றென்பதும்
இலகுகாந்தருவமேயின்பமென்பதும்

(இ-ள்.) கணக்கற்ற உயிர்களையெல்லாம் பெற்றருளினவளாயத் தாமரையில் வீற்றிருந்து திலகப் பொட்டிட்டு விளங்கும் பிறையைப் போன்ற நெற்றியையுடைய பெரிய பிராட்டியாரும், "தேவரீருக்கு உலகத்தில் வாழும் உயிர்களெல்லாம் ஒன்றேயென்பதையும், விளங்கும் காந்தருவமென்னு மிசையே இன்பமென்பதையும், (எ-று.) (சச)

சரு. வானவர்முனிவரார்மாசில்வேதியா
ஆனவரனைவருமறிந்துபோற்றவே
ஊனகமுருக்கிசையுணர்ந்துளானையுன்
றேனகமலர்ப்பதஞ்சேர்த்துகென்றனள்.

(இ-ள்.) தேவர்கள், முனிவர்கள், குற்றமற்ற வேதியர்களானவர்களனைவரும் அறிந்து போற்றுமாறு, சரீரத்தையும் மனத்தையு முருக்கும்

இசையை அறிந்திருக்கு மாழ்வாரைத் தேவரீரது தேனையுடைய மலரைப் போன்ற திருவடிகளில் சேர்த்துக்கொள்வீராக'' என்றனர். (எ-று.) (சரு)

[லோகசாரங்கமுனிவர் ஆழ்வாரை முனிதல்.]

சசு. அய்யனுங்கருணையானழகிதேயெனுச
செய்யவாய்மலர்ந்தருடடேவிக்கோதினன்
வெய்யவன்குணதிசைவிளக்குமுன்னமால்
துய்யதாள்விளக்குறுந்தொழிறொடங்குவான்

(இ-ள்.) பெருமானும் கருணையினாலே இது அழகேயாமெனறு சிவந்த திருவாய மலர்ந்து கிருபையோடு கூடிய பிராட்டிக்கருளினன். சூரியன் கிழக்குத்திக்கைப் பிரகாசிக்கவைத்து உதயமாகுமுனனே பெருமானது பரிசுத்தமான திருவடிகளை விளக்கும தொழிலை (திருவாராதநததை) ஆரம்பிக்கும்பொருட்டு, (எ-று.) (சசு)

சஎ. பொன்னியந்துறைபபுனல்படிந்துபூந்துழாய்ச
சென்னியன்றரித்தருடிருமண்சாத்துபு
தன்னியன்மறைமுறைமுடித்துச்சாலநீர்
மன்னியமணிக்குடமலாகைத்தாங்கியே

(இ-ள்.) திருக்காவேரியின் அழகிய துறையில் நீராடி, அழகிய திருத்துழாய மாலையையணியும் திருமுடியையுடைய பெருமான் தரிததருளும் திருமண்ணையணிந்து, தனது நித்தியானுஷ்டாநங்களை வேதமுறைபபடி முடித்து, மிக்க தீர்த்தத்தையுடைய அழகிய திருமஞ்சனக்குடத்தை மலர் போன்ற கைகளில் எடுத்து, (எ-று.) (சஎ)

சஅ. வருமவனுலகசாரஙகமாமுனி
அருமறைவயிணவரணிகொள்வீதியிற்
றிருமுகத்துறையணிநெறியிற்செய்யதாட
கருநிறப்பாணனைக்கண்ணிற்கண்டனன்.

(இ-ள்.) வருமவராகிய லோகசாரங்க மாமுனிவர், அரிய வேதங்களையுணர்ந்த வைணவர்கள் அணியாயிருக்கும் வீதியில் திருமுகத்துறைக்கு அணித்தான வழியில், சிவநத தாளையும் கரிய நிறத்தையுமுடைய திருப்பாணாழ்வாரைக் கண்களாலே கண்டனர். (எ-று.) (சஅ)

சகூ. காண்டலும்விழிகடுங்கனலிற்சேப்புற
மூண்டதோர்வெகுளியான்முனிவர்வானவர்
ஈண்டணிவீதிநீயெய்தனீதியோ
தீண்டல்போகுதியெனச்சிறிதுங்கேட்டிலான்

(இ-ள்.) கண்டமாத்திரத்தில், கண்கள் கொடிய நெருப்பைப் போலச் சிவக்கும்படி மூண்ட கோபத்தையுடையவராகி, "முனிவர்களும் தேவர்களும் நெருங்கிய அழகிய திருவீதியில் நீ வருவது நீதியாகுமோ? தீண்டாதே போவாயாக'' வெனறு சொல்ல, (ஆழ்வார் அச்சொல்) சிறிதுங் கேளாதவராகி, (எ-று.) (சகூ)

ரு0. பற்றவாவொடுமலாப்பாதம்போற்று
நிறறலானலகிலாநிந்தைகூறியே
கறறநான்மறைமுனிவிலகிக்காய்கதிர்
கொற்றநேமிப்பிரான்கோயில்புக்கனன்.

(இ-ள்.) பற்றிய பரமபக்தியோடு (பெருமானது) கமலபாதங்களைப் போற்றி நிற்பதினாலே, பலவான நிந்தைகளைச் சொல்லி, நான்கு வேதங்களைக்கற்ற லோகசாரங்க மாமுனிவர் ஒதுங்கிப் போய, வீசும் பிரகாசத்தையும் வெற்றியையுமுடைய சுதரிசனத்தைத் தரித்த பெருமானெழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுட் புகுந்தனர். (எ-று.) (ரு0)

[அரங்கநகரப்ப னருளப்பாடு.]

ருக. பணநிரையனந்தன்மேற்பருவக்காரெனக்
குணமுதற்கடவுளாயருளின்கோலமாய்
உணர்வுடன்றனிவிழித்துறங்குமெம்பிரான்
மணமலிதுழாய்முனிவரனைநோக்கியே

(இ-ள்.) படத்தின் வரிசையையுடைய திருவநந்தாழ்வான் மீது பருவகாலத்திற் றோன்றும் மேகம்போலக் கலியாண குணங்களையுடைய முதற்கடவுளாய, அருளே யோருருவங் கொண்டவனாய், சருவஞ்ஞத்துவத்தோடு தனியாக விழித்திருந்தே யுறங்குமவனான எம்பிரான், வாசனைமிகுந்த திருத்துழாயையுடைய லோகசாரங்க முனிசிரேஷ்டனைப் பார்த்து, (எ-று.) (ருக)

ருஉ. உயாகுலத்துதிப்பினுமுளத்தினேயமும்
அயர்தவந்தருமமுமறிவுஞானமும்
பெயாநமதிசைதகுடும்பீடுமில்லரேற
கயவரங்கவரெனக்காண்டல்வேண்டுமால்.

(இ-ள்.) உயர்நத குலத்திலுதித்தாலும், உள்ளத்தில் பக்தியும் செய்யக்கூடிய தவமும் தருமமும் ஸாராஸார விவேகமுள்ள ஞானமும் நமது திருநாமத்தைச் சொல்லும் பெருமையும் இல்லாதவர்களாயின், அவர்களைக் கீழ்மக்களென்று அறியவேண்டும். (எ-று.) (ருஉ)

ருங. ஞமலியிற்றுவிழிபவதனைநண்ணினும
எமதுநாமந்தெரிந்திசைப்பராமெனிற்
கமலநான்முகனினுங்கனற்கண்ணனினும்
அமலரேயவரெனவறிதல்சீலமாம்.

(இ-ள்.) நாயினுங் கடைப்பட்ட இழிந்த பிறப்பை யடைந்தாலும், எமது திருநாமத்தைத் தெரிந்து சொல்லுவார்களாயின், அவர்கள், தாமரையிலிருக்கும் நான்கு முகங்களையுடைய பிரமனிலும், அக்கினி நேத்திரத்தையுடைய சிவபிரானிலும், பரிசுத்தமானவர்களென்று அறிவது நன்மையாகும்.

ருச. இன்பவேழிசையினனெமதுசீர்புகழ்
அன்பர்யாரினுஞ்சிறந்தவனையின்றுநீ
துன்பமாய்வருந்துறசுளிதனீர்மையோ
பொன்பயில்கோயிலுட்கொணர்திபோயென்றான்.

(இ-ள்.) இன்பத்தைத்தரும் எழிசையினாலே எமது வைபவத்தைக் கீர்த்திக்கும் அன்பர்கள் யாவரினும் சிறந்த திருப்பாணாழ்வாரை, இன்று நீ, துன்பப்பட்டு அவர் வருந்தும்படி, கோபிப்பது தக்கதோ? இப்போதே போய் (அவரைப்) பொன்மயமான திருக்கோயிலுக்குக் கொண்டு வருவாயாக வென்றருளினன. (எ-று.) (ருச)

ருரு. புகலுரைகேட்டலும்புனிதமாதவன்
மிகவுளநடுங்குறுவியாததுவாய்புலாந்
தகமுறமாமலரடிகளபோற்றியே
ககபதியினுமிககடிதினோடினான்.

(இ-ள்.) (இப்படி பெருமான்) சொல்லிய சொல்லைக் கேட்ட மாத்திரத்தே, பரிசுத்தரான லோகசாரங்கமாமுனிவர் மிகவும் உள்ளம் நடுங்கி வியர்த்து வாயுலர்ந்து, மனமொருப்படும்படி பெருமை பொருந்திய பெருமானது திருவடிகளைப் போற்றி, கருடாழ்வானைக் காட்டிலும் விரைவாயோடி, (எ-று.) (ருரு)

[ஆழ்வார் முனியேறித் தனிபுகுந்து முதல்வனையடைதல்.]

ருசா. சேணணிமதிற்புறத்தெருவிற்சேரிசைப்
பாணர்கோன்பதமலர்பணிந்துபோற்றினான்
காணல்கேட்குதலிலன்கமலைநாயகன்
தாணலஞ்சுருதியிற்சாற்றுஞ்சிந்தையான்.

(இ-ள்.) ஆகாயத்தைச் சேர்ந்திருக்கும் திருமதிலுக்குப் புறத்திலுள்ள திருவீதியில் இசைபாடும் திருப்பாணாழ்வாரது திருவடிகளாகிற மலர்களை வணங்கித் துதித்தனர். (அப்போது) அரங்கநாயகியாருக்கு நாயகனான பெருமானது திருவடி வைபவத்தை நல்ல சுருதியினாலே கீர்த்திக்கும் திருவுள்ளத்தையுடைய ஆழ்வார், அதனைக் காண்பதும் கேட்பது மின்றியே தமமை மறந்திருந்தனர். (எ-று.) (ருசா)

ருஎ. எடுத்தனன்புயங்களிற்சன்னல்பின்னல்கீழ்ப்
படுத்தனன்மலர்கடுப்பரவினானவர்
அடுத்தனரரவணையரங்கத்தீசன்முன்
விடுத்தனனருச்சனைவேதபாரகன்.

(இ-ள்.) திருவருச்சனை புரியும் வேதபாரகரான லோகசாரங்க முனிவர் (ஆழ்வாரை) புயங்களில் எடுத்தனர்; சன்னல்பின்னலாகப் புயங்களின் கீழிடமான கக்கத்திற் கொண்டனர். அப்போது மலர்களைத் தூவித் துதித்துத் தேவர்கள் கூடினார்கள். பிறகு ஆதிசேஷசயநத்திலிருக்கும் திருவரங்க நகரப்பன் சந்நிதானத்தில் விடுத்தனர். (எ-று.) (ருஎ)

ருஅ. கண்டனன்விரிஞ்சனுங்காணொணப்பதப்
புண்டரீகத்தனைப்புவியின்கேள்வனைத்
தண்டரிதிகிரிவிற்சங்கந்தாங்கிய
அண்டர்நாயகன்றனையரங்கத்தீசனை

(இ-ள்.) (அப்போது) திருப்பாணாழ்வார், பிரமதேவனுங் காணக்கூடாத திருவடித்தாமரைகளை யுடையவனை, பூமிப்பிராட்டியாருக்கு நாயக

ளை, தண்டு-வாள்-சக்கரம்-சார்ங்கம்-சங்கம் இவைகளை யேந்திய நித்திய சூரிகளுக்குத் தலைவனை, திருவரங்கப் பெருமானைச் சேவித்தனர். (எ-று.)

ருகூ. ஆடினனகமகிழ்ந்தரியதாண்முடி
சூடினன்விழிமலர்ப்பதத்திற்சூடினன்
நீடினனிசைபொருணிறையச்செந்தமிழ்
பாடினனொருபதுபாடல்பாணர்கோன்.

(இ-ள்.) திருவுள்ளஞ் சந்தோஷித்து ஆடினர்; (பெருமானது) அருமையான திருவடிகளை முடியிற் சூடிக்கொண்டனர்; தமது திருக்கண்மலர்களைப் பெருமானது திருவடிகளில் சேர்த்தனர்; ஆராமையாலே ஸ்தம்பித் திருந்தார்; இசையும் வேதாந்தார்த்தங்களும் நிறையச் செந்தமிழ்ப்பாடல்கள் ஒருபது பாடினர் திருப்பாணாழ்வார். (எ-று.) (ருகூ)

சூ0. அத்தகுபாடல்முந்தமலனாதியென்
றுத்தமன்றொடங்கியாங்குரைத்துவெண்டிரை
மைத்தடங்கடல்புடைவளைந்தமாட்சிகூர
இத்தலத்துயிர்கள்வாழ்வெய்தச்செய்தனன்.

(இ-ள்.) அப்படிப்பட்ட பெருமையையுடைய பாடல்களை முதலில் "அமலனாதி" யென்று தொடங்கி உத்தமராகிய ஆழ்வார் அவ்விடததிலருளிச்செயது, வெண்மையான அலைகளும் கருமையும் விசாலமுமுடைய சமுத்திரம் சுற்றும் வளைந்திருக்கும் பெருமையையுடைய இப்பூமியிலுள்ள உயிர்கள் வாழ்வடையும்படி செயதனர். (எ-று.) (சூ0)

‡ அன்னசெயகையனுயபாணனும்
பன்னுசெந்தமிழ்பபாடல்பத்தினுள்
பொன்னரங்கநற்புகழ்கொள்வேங்கடம்
என்னுமிப்பதியிரண்டுமெயதுமே.

சூக. விண்ணவர்முனிவரர்வியப்பவெய்யவன்
கண்ணகல்கதிருடன்கலக்குங்காட்சியிற்
பண்ணமைசுருதியாழ்ப்பாணர்கோமகன்
அண்ணறன்றிருமணியகலஞ்சேர்ந்தனன்.

(இ-ள்.) தேவர்களும் முனிவர்களும் ஆச்சரியப்படும்படி சூரியன் இடமகன்ற ஒளியுடன் சேருவது போல, இசையமைந்த சுருதியோடு கூடிய வீணையையுடைய திருப்பாணாழ்வார் பெருமானது அழகிய கௌஸ்துப மணியும் திருமார்பத்தை யடைந்தனர். (எ-று.) (சூக)

சூஉ. விரித்தநூன்முனிவரன்புயத்துமேம்படப்
பரித்தலானவனியோர்பழங்கணீக்குசீர்
விரித்தசைபவன்முனிவாகனும்பெயர்
தரித்துமேதனதுதானத்தைச்சார்ந்தனன்.

(இ-ள்.) பிரவர்த்திக்கப்பட்டதான சாஸ்திரங்களை யுணர்ந்த லோகசாரங்க மாமுனிவர் தமது புயத்தினால் மேம்படும்படி தாங்கியதினாலே, பூமியிலுள்ளவர்களது துன்பங்களை நீக்கும் பிரபாவத்தை விரித்துப் பெரு

மான் விஷயத்தில் ஈடுபட்டவரான ஆழ்வார் முனிவாகனரென்னுந் திருநாமத்தைத்தரித்துத் தமது ஸ்வஸ்தாநமான பெருமானது திருமார்பையடைந்தனர். (எ-று.) (சூஉ)

வேறு.

சூரு. முண்டகச்செம்மலர்க்கடவுண்முனிவரிமையவர்முதலோர்
எண்டகைசாலேழிசையாழ்ப்பாணர்பிரானியலபிதுவால
வண்டருமாமலரலங்கன்மதிலரங்கேசனுக்களித்த
தொண்டரடிப்பொடியெனும்பேர்முனிசரிதஞ்சொல்லுவாம்.

(இ-ள்.) சிவந்த தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமன் முனிவர்கள் தேவர்கள் முதலியவர்கள் எண்ணும் பெருமை மிகுதியையுடையவராய ஏழிசையோடு கூடிய வீணையைத்தரித்த திருப்பாணாழ்வாரது வைபவம் இதுவாகும். வண்டுகள் நிறைந்த அருமையும் பெருமையுமுடைய திருமாலையைத் திருமதில் சூழ்ந்த திருவரங்கேசனுக்கு அளித்த தொண்டரடிப்பொடியாழ்வார் என்னுந் திருநாமத்தையுடைய மகாசீலரது வைபவத்தைச் சொல்லுவோம். (எ-று.) (சூரு)

இவ்வாழ்வார் கலியுகம் முந்நூற்று நாற்பத்திரண்டாவது வருஷமான தாமதிவருஷம் கார்த்திகை மாதம் ரோகிணி நக்ஷத்திரம் கிருஷ்ணபக்ஷம் துவிதியை திதிகூடிய புதவாரதினம் அவதரித்து ஐம்பது வருஷகாலம் இவ்வுலகி லெழுந்தருளி யிருந்தனரென்பர்.

முனிவாகனசசருக்கம் முற்றிற்று.



ஸ்ரீ

# அ-வது விப்பிரநாராயணச்சருக்கம்.

[திருமண்டங்குடி.]

க. புகழுருவநிலைநிறுத்தைம் பொறியுருவஞ்சரணடைந்த புறவுக்கீந்து, மகவிரதத்தருளியிறேனர் சுரபிதுயர்தணித்திடுவான் மகிழ்வுற்றூர்ந்துஞ், சகமுழுதுமொருதனிக்கோல் செலுத்துமனுகுலவேந்தர் தமிழ்ச்சோணாட்டிற், பகரரியவளத்தமரர் பதிநிகர் மண்டங்குடியாம் பதியொன்றுண்டால்.

(இ-ள்.) கீர்த்தியினுருவத்தை நிலைநிறுத்தும்படி ஐம்பொறிகள் கூடிய சரீரத்தைச் சரணமடைந்த புறவுக்குக் கொடுத்ததும், பெரிய இரதத்தைப்போல் அருளோடு இந்திரனை ஒருபசுவின் துயரைத் தீர்க்கும்பொருட்டுச் சந்தோஷத்துடன அதன்மீது ஏறியிருந்தும், உலகமுழுதும் ஒன்றான ஒப்பற்ற செங்கோலையே செலுத்தும் மனுவமிசத்திற் பிறந்த வேந்தர்கள் வாழும் தமிழின்வளமிகுந்த சோழநாட்டில் சொல்வதற்கரிய வளத்தையுடைய அமராவதியை யொத்த திருமண்டங்குடியாகிய ஒரு திருப்பதியுண்டு. (எ-று.) (க)

இந்திரன வேடுவனுயும அக்கினி புறுவாயும் வேற்றுருவங் கொண்டனராக, வேடுவனுற் றுரத்தப்பட்ட புறவம் சிபிச்சக்கரவர்த்தியைச் சரணடைதலும் அவ்வரசர் கோமான் அப்புறுவைக்காக்க வேண்டித் தன் சரீரத்துள்ள தசையை யெல்லாம் அவ்வேடுவனுக்கு அரிந்து கொடுத்தனனென்பதும்; ஒருகால் அசுரரால் வருத்தப்பட்ட இந்திராதி தேவர்கள் தங்களுக்குத் துணையாய் நின்று அசுரருடன் போர்புரியுமாறு வேண்டப்பெற்ற ககுத்ஸ்தமகாராஜன், தான் விரும்பியபடி இந்திரன் இடபமாய்த் தன்னைத்தாங்கப் போர்க்களத்தே நின்று அசுரரை வென்றனன் என்பதும் இங்கு குறித்துள்ள பழைய கதைகள்.

உ. திருமண்டங்குடிபாரம் பரைதரித்தபாகவதர் செழிப்புற்றோங்கத், தருமண்டங்குடிபுகுந்த மலர்நாபிமுகிலுறையுந் தகைசாலந்த, ஒருமண்டங்குடிநாக முயர்தாழைவனமலர்நீழ்த் துகுபராகம், மருமண்டங்குடித்தமுனி வரன்புகலுந்தமிழ்வளர்த்தான் மலையைமானும்.

(இ-ள்) திருமண்ணைத் தமது குடியில் பரம்பரையாகத் தரித்த பாகவதர்கள் செழிப்படைந்து ஓங்கும்படி சிருஷ்டிக்கும் அண்டமுறையும் தாமரைபூத்த திருநாபியையுடைய மேகம்போன்ற பெருமான் நித்தியவாசஞ் செய்யும் பெருமைமிகுந்த ஒப்பற்ற அந்தத் திருமண்டங்குடியானது, புன்னையினதும் உயர்ந்த தாழையினதும் அழகிய மலரைவிட்டுச் சிந்தும் மகரந்தங்கள் வாசனை பொருந்திய சமுத்திரநீரைக் குடித்த அகத்தியமுனிவரர் வீற்றிருப்பதான சிறப்பித்துச் சொல்லப்படும் தமிழ்ப்பாஷையை வளர்த்த பாண்டியனது பொதியமலையை யொத்திருக்கும். (எ-று.) (உ)

ஙா. சுருதியொலிகடலொலியை மறைக்குமிழைத்தருள்வேள்வித் தூமஞ்சோதிப், பருதியொளிமறைக்குமுயர சடகோபன் றமிழ்சசுருதி படிக்குமோதை, கருதியொருமுறைபுகற லரிதுமலர்க்கடிகாவுங் கனகமேடை, மருவியொளிர்கதலிகையு மழைத்தமுகின்மண்டலத்தை மறைக்குமாதோ.

(இ-ள்.) வேதாத்தியயந வோசை கடலோசையை மறைக்கும். செய்யும் யாகப்புகை பிரகாசமுடைய சூரியனொளியை மறைக்கும். பெருமையையுடைய ஆழ்வாரது தமிழ்வேதத்தை அத்தியயநஞ் செய்யும் ஓசை இப்படிப்பட்ட தென்று ஒருமுறை எண்ணிச்சொல்வ தரிது. புஷ்பங்களின் வாசனையையுடைய சோலையும் பொன்மேடைகளில் பொருந்தி விளங்கும் வாழையும் குளிர்ந்த மேகமண்டலத்தை மறைக்கும். (ங)

ச. அத்தகையவளம்பதியி லரிதிருத்தாளிணைபணியு மந்தணாளர், முத்தழலுஞ்சதுமறையின் முறைவளர்ப்போர்முன்சிகையோர் முந்நூன்மார்பர், எத்தகையமகமுழுது மிழைத்தவர்நூற்றெழுவோர்மற் றிவருட்சால, உத்தமனுனிலம்புகழும் வேதாந்தியொருவாதனக் குவமையில்லான்.

(இ-ள்.) அப்பெருமைவாய்ந்த வளப்பத்தையுடைய திருப்பதியில் பெருமானது இரண்டு திருவடிகளை வணங்கும் அந்தணர்கள், மூன்று தீயையும் நான்குவேத விதிப்படி வளர்ப்பவர்கள், முன்குடுமியுடையவர்கள், முப்புரிநூ லணிந்தவர்கள்; எப்படிப்பட்ட யாகமெல்லாம் செயதவர்கள் எழுநூறு திருநாமங்களாவர். இவர்களில் மிகவும் உத்தமர்; பூமியிலுள்ளோர் புகழும் வேதாந்தங்களை யறிந்தவர்; ஒருவரும் தமக்குச் சமானமில்லாதவர். (எ-று.) (ச)

[தொண்டரடிப்பொடி யாழ்வார் திருவவதாரம்.]

ரு. அலகில்பலபவங்கடொறு மயர்தவத்தானவன்மனைவி யகட்டிலீரேழ், உலகுமுயிருளவனைத்து முந்தியந்தாமரைப்பயந்தவொருவன்மார்பம், இலகுவனமாலிகையோர் மகவாகிக்கருப்பமுற விலவசெவ்வாய்த், திலகநுதன்மடவாரலுஞ் சிறுவனைமார் கழிக்கேட்டை சிறககவீன்றாள்.

(இ-ள்.) கணக்கற்ற பலபிறவிகள்தோறும் செய்த தவத்தினாலே அவரது திருத்தேவியாரது வயிற்றில், பதினாலுலகங்களையும் அவற்றிலுறையும் உயிர்களௌல்லாவற்றையும் திருவுந்தியிற் பூத்த அழகிய தாமரைமலரில் பெற்ற ஒப்பற்ற பெருமானது திருமார்பில் விளங்கும் வனமாலையானது ஒரு குழவியாகிக் கர்ப்பத்தையடைய, இலவமலர்போலச் செவ்வாயும் திலகப்பொட்டிட்டு விளங்கும் நெற்றியுமுடைய அம்மடவாரும், மார்கழி மாதத்தில் கேட்டை நக்ஷத்திரம் சிறக்கும்படி ஒரு சிறுவனைப் பெற்றனர்.

சூ. மறையவனுமதலைதிரு வதனமகிழ்வுடனோக்கி மரபின்வானோர்க், கிறையவனதருளிதென விப்பிரநாரணப்பெயரிட் டியல்பினியாவும், குறையதகன்றிடச்சவுள முபநயனமுடித்தனனக் குமரன்சில, நிறையமறைபடித்துமறைப் பொருளாயவரிசரணநேயமிக்கான்.

(இ-ள்.) அவ்வேதியரும் குழவியின் அழகிய வதனத்தை மகிழ்வுடன் பார்த்து, நமது வமிசத்தில் நித்திய சூரிகட்குத் தலைவன் செய்த அருளிதுவாகுமென்று கொண்டு, விப்பிரநாராயண ரென்று திருநாமகரணஞ் செய்து, சவுளம் உபநயனம் முதலியயாவும் குறையாமல் முறைப்படி முடித்தனர். அச்சிறுவர் ஒழுக்கம் நிறையும்படி வேதாத்தியயநஞ் செய்து வேதப்பொருளாகிய பெருமானது திருவடிகளில் பக்தி மிகுந்தனர். (எ-று.) (சூ)

[ஆழ்வார் துளவத்தொண்டில் உறைதல்.]

எ. வேதமுதலியபனுவ லருந்தருமந்தவமெவையும் விரிஞ்சன்போற்றும, நாதனதுபணிவிடையி னினியனவின்றெனக்கருதா நண்ணிக்கோயில், பாதமலர்குணதிசைபொன் முடிகுடபாலுறத்துயிலும் பரனையேத்தி, ஆதரவினெடுந்திருநந் தனவனமொன் றழகுறவே யமைப்பதானான்.

(இ-ள்.) வேதம்முதலிய சாஸ்திரங்கள் சொல்லும் தருமம் தவம் ஆகிய எவைகளும் பிரமதேவன் போற்றும் பெருமானது கைங்கரியத்தினும் இனியனவாகாவென்றெண்ணித் திருவரங்கத்தை யடைந்து, திருவடித்தாமரைகள் கிழக்குத் திசையாகவும் திருமுடி மேற்குத் திசையாகவு மிருக்கும்படி அறிதுயிலமரும் மேலோனான பெருமானைத் துதித்துப் பிரீதியோடு அழகுபெறும்படி திருநந்தனவனமொன்றை நிருமிக்கத் தொடங்கினார். (எ-று.) (எ)

அ. செங்கணரவணைத்துயின்மா லரங்கேசன்றிருமகுடத் திசையின்பாங்கர், வெங்கடுவேய்மடற்றாழை பதித்தணுவும்புகலரிதா வேலியாக்கி, அங்கணிலங்கணிசசியினாற் பொடிபடுத்தாவுணக்கியெரு வமையப்பெய்தே, எங்கணுமாமலர்த்தருவின் கன்று நிரைத்தனன்சிறிது மேதமில்லான்.

(இ-ள்.) சிறிதும் குற்றமில்லாத விப்பிரநாராயணர், சிவந்த கண்களையுடைய ஆதிசேஷசயனத்தில் அறிதுயிலமரும் பெரியோனான திருவரங்கநகரப்பனது திருமகுடமிருக்கும் மேற்றிசையினிடத்து, வெவ்விய முட்செடியும் மூங்கிலும் மடல்களையுடைய தாழையும் நாட்டி, அணுவும் புகுவதற்கரிதாக வேலியை யுண்டாக்கி, அழகிய இடத்தையுடைய பூமியைத் தறிகையினாலே பொடியாக்கி, உலரவைத்து, பொருந்தும்படி எருவிட்டு, பெருமைபொருந்திய மலர்களையுடைய செடிகளை எவ்விடத்தும் வரிசையாக வைத்தனர். (எ-று) (அ)

வேறு.

௯. துளவம்பித்திகைவலம்புரிபட்டிமாதுளங்கம்
தளவமாலதிசிந்துரந்தருசெருந்திமந்தாரங்
குளவிசண்பகங்காவிரங்கூதளங்குருக்கை
அளவிலாமருக்கொழுந்துவேறிடம்பெறுத்தமைத்தான்.

(இ-ள்.) திருத்துழாய் கருமுகை நந்தியாவர்த்தம் பட்டியென்னுஞ்செடி மாதுளை முல்லைக்கொடி சிறுசண்பகம் அல்லது மல்லிகை வெட்சி செருந்திச்செடி செம்பரத்தை மலைப்பச்சை சண்பகம் காவிரம் கூதாளி குருக்கத்தி அளவில்லா மருக்கொழுந்து இவைகளை வேறிடமின்றி யமைத்தனர். (எ-று.) (௯)

௧௦. மாவருக்கைபூகதங்குளவஞ்சியாமலகம்
நாவறெங்கெலுமிச்சைவெள்ளிறகைழநாரந்தம்
யாவரும்பணிப்பிபலருசந்தனமிரவி
தேவதாருவல்லாதனயாவையுஞ்செறித்தான்.

௨—௦

(இ-ள்.) மா பலா பூகம் குளவஞ்சி நெல்லி நாவல் தெங்கு எலுமிச்சை விளா கரும்பு நாரத்தை யாவரும்பணியும் அரசு சந்தனம் இரவி, தேவதாரு இவைகளல்லாத யாவற்றையும் நாட்டினர். (எ-று.) (க0)

கக. வரம்புகால்வகுத்திறைகருநீர்விரைந்திருமருங்கும்
பரம்புமாறவற்றவற்றினுககமைதரப்பாத்தி
குரம்புசூழ்பெறவிரித்துஞாங்கரின்மிககுளிர்நீர்
நிரம்புமோடையிற்பதுமைநீலோறபலநிறைத்தான்.

(இ-ள்.) அணையையுடைய கால்வாயகளை யமைத்து, இறைக்கும் நீர் விரைவாக இருபக்கங்களிலும் பரவும்படி அவையவைகட் சமையுமபடி பாத்திகளைக் கரைகள் சூழ்ந்திருக்கும்படி விரித்து, பக்கங்களில் மிகக் குளிர்ந்த நீர் நிரம்பிய ஓடைகளில் தாமரை நீலோற்பலம் என்பவைகளை நிறையவைத்தனர். (எ-று.) (கக)

க௨. புரிந்தநந்தனவனமுதற்குரியவாம்பொழுது
தெரிந்துகன்னனீாதெளித்துநீண்முதலவையின்மிகபூச
சொரிந்துநாண்முறையிறைத்துமாங்கொருநொடிசதுணையும்
பிரிந்திடாதுகாத்தழகுறவளாத்தனன்பெரியோன்.

(இ-ள்.) (இங்ஙன) மியற்றிய நந்தனவனம் முளைப்பதற்குரிய சமயமறிந்து, கரசத்தாலே நீரைத்தெளித்தும், உயரும் முளை அங்கு தோன்றினதும் நீரைவிட்டும், பிறகு நாள்கடோறும் முறையாக இறைத்தும், நந்தனவனத்தை ஒரு நொடிப்பொழுதும் பிரியாமல காவல் செயது, அழகுபெறும்படி பெரியோரான ஆழவார் வளர்த்தனர். (எ-று.) (க௨)

க௩. கறையலரிப்பணிப்பாயன்மாலுலகெலாங்காக்கும்
இறைவனெம்பிரானிருந்துவாழ்வுறதத்னிதயம
உறையுளாக்கியோர்குரம்பையாண்டமைத்தினிதுறையும்
மறைவலான்பரிவாமெனத்தழைத்ததவ்வனமே.

(இ-ள்.) விஷத்தையுடைய ஆதிசேஷசயநத்திலமரும் பெருமானும் உலகமெல்லாவற்றையும் ரக்ஷிக்கும தலைவனுமான எமபிரான் இருநது வாழத் தமது திருவுள்ளத்தை ஒரிருபபிடமாக்கி, அந்நந்தனவனத்தில் ஓர் சிறு குடிலையுண்டாக்கி அதில் இனிமையாக வாசஞ்செயயும் வேதங்களையுணர்ந்த ஆழ்வாரது பரமபக்தியைப்போலவே அவ்வனம் தழைத்தது. ()

க௪. பாங்கிலாரணநாரணன்பதித்தபாதவங்கள
தீங்கிலாதுறத்தழைத்துமீதுயாந்தவத்திறன்முன்
நீங்கிலாதவனீாதருமுதவியையினையா
வோங்கிமாலபதமீதெனக்காட்டலேயுறழும்.

(இ-ள்.) அவ்விடத்தில் வேதங்களையுணர்ந்த விப்பிரநாராயணரான ஆழ்வார் உண்டாக்கிய மரங்கள், தீங்கின்றி மிகுதியுந்தழைத்து மேலேயுயர்ந்த அத்திறமானது, ஆழ்வார் நீங்காது நீரூட்டும் உதவியை யெண்ணி மேலேயுயர்ந்து பெருமானது பரமபதம் இதோ என்று காட்டுவதையொத்திருக்கும். (எ-று.) (க௪)

கரு. போற்றுமாழ்வான்றனக்குமாதவத்தினர்புலவோர்
சாற்றுமுத்தியாம்பலந்தனைத்தருகுவான்றருக்கள்
தோற்றுபற்பலநிறத்தவாமிணர்கண்மீத்துதைய
ஆற்றுமேழிசையளிமிழற்றிடவலர்ந்தனவே.

(இ-ள்.) அவ்விடத்தில் யாவரும் போற்றும் ஆழ்வாருக்கு மாதவத்தோரும் தேவரும் புகழ்ந்து சொல்லும் முத்தியாகிய பலத்தைக் கொடுப்பதற்காக, மரங்களானவை, உண்டாகும் பற்பல நிறங்களையுடைய பூங்கொத்துக்களின் மீது நெருங்கி ஏழுவகையான இசைகளைப்பாடும் வண்டுகள் ஒலிக்கும்படி மலர்ந்தன. (எ-று.) (கரு)

கசு. பொருந்தமாலத்தோடகன்றுயர்பொழிலினும்பிரசம்
அருந்துதேனொடுமலகிலாதுகுதருமலர்கள்
திருந்துவாமனமாயுயர்மாதவன்றிருத்தாள
பொருந்துவானதிப்புனிதநீர்த்துளிகளேபொருவும்.

(இ-ள்.) ஒன்றோடொன்று நெருங்கிப் பச்சிலைப்பரப்போடு விசாலமாகி உயர்ந்த சோலையில் வண்டுகளுண்ணும் தேனுடனே கணக்கற்றுச் சிந்தும் மலர்கள், திருத்தமுடைய வாமனாவதாரமாய் உயர்ந்தவனான பெருமானது திருவடிகளில் பொருந்திய ஆகாய கங்கையின் பரிசுத்தமான நீர்த் துளிகளை யொத்திருக்கும். (எ-று.) (கசு)

கஎ. உவாவிலோடதிவரினுறுமகிணனையொருவா
அவாவினோடுடனடைந்ததாரகைக்கணமவன்சீர்
தவாதநலவரம்பெறுதவான்றவம்புரிதகைபோற்
குவாலுடைத்துணர்பயந்தனவல்லிப்பைங்கொடிகள்.

(இ-ள்.) பூரணகாலத்தில் ஓஷதிகளிடத்திற் பொருந்தும் சந்திரனை தங்கள் கணவனை நீங்காது ஆசையாலே அவனுடனே அங்கு வந்தடைந்த நக்ஷத்திரக் கூட்டங்கள், அவனது சீர் குறையாத நல்ல வரம்பெறும்படி தவஞ்செய்யும் பெருமையைப் போல, அங்குள்ள கணக்கற்ற பசுமையான கொடிகள் கூட்டமாகவுடைய பூங்கொத்துக்களைப் பூத்தன. (எ-று.) (கஎ)

கஅ. அங்கவன்புரிபணிவிடைக்ககமகிழ்ந்தரங்கத்
தெங்கணாயகன்றிருவுருக்காட்டியதெனவே
சங்கநேமிசார்ங்கமாவொளிர்தருந்தடங்கள்
பங்கயச்செழுமலருடனலர்ந்தனபானல்.

(இ-ள்.) அங்கு ஆழ்வார் செய்யும் கைங்கரியத்துக்கு மகிழ்வடைந்து, திருவரங்கத்தி லெழுந்தருளிய எங்கள் நாயகன் தனது திருவுருவத்தைக் காட்டினனென்னும்படி, சங்கம் நேமி சார்ங்கம் மா இவைகள் விளங்கும் குளங்கள் செழுமையான தாமரைமலர்களோடு நீலோற்பல மலர்களும் மலர்ந்தன. (எ-று.)

சங்கம் நேமி சார்ங்கம் மா இவைகளைத் தடத்துக் கிட்டுக்கூறும் போது சங்கு சக்கிரவாகம் சாதகம் வண்டு எனவும் பெருமானுக்கிட்டுக் கூறும்போது சங்கு சக்கரம் சார்ங்கம் பிராட்டி எனவும் கொள்க.

பானலானது திருமேனியும், பங்கயமானது கண் கை காலுமாக உருங் காட்டியதென்க: "எல்லியங் குவளைக்கானத் திடையிடை மலர்ந்து நின்ற, அல்லியங் கமலங்கண்டா லண்ணல்தன வடிவுகண்டாள்" என்றார் கம்ப நாடரும். (கஅ)

கசு. அனையநந்தனவனத்துயர்தரும்பொழிலடரும்
சினைகள்பைங்கொடிகாவிகடாமரைத்திரள்கள்
நனைதரும்பலமலர்விரிந்தவையெலாநாடித்
தனையொவ்வாதவன்விழிகளித்துவகையுட்டழைத்தான்.

(இ-ள்.) அப்படிப்பட்ட நந்தனவனமாகிய வளரும் சோலையில், நெருங்கிய கிளைகளும் பசிய கொடிகளும் கருங்குவளைகளும் தாமரைக் கூட்டங்களும் அரும்பியுண்டாகும் பலவான மலர்கள் மலர்ந்தவைகளை யெல்லாம் கண்டு, தமக்கொப்பில்லாத ஆழ்வார் திருக்கண்கள் களிப்புறும் பரிதோஷத்தாலே திருவுள்ளந் தழைத்தனர். (எ-று.) (கசு)

உ0. துயிலுணர்ந்தரங்கேசனற்றுணையடிதுதியா
வெயிலவன்குணதிசையெழுமுன்னர்காவேரி
பயிலசெழும்புனல்படிந்துநான்மறைமுறைப்படியே
குயிலுந்தேவராதியர்கெதிரருக்கியங்கொடுத்து

(இ-ள்.) (காலையில்) துயிலுணர்ந்து, அரங்கேசனது நல்ல திருவடிகளிரண்டையும் துதித்து, சூரியன் கிழக்குத்திக்கில் உதயமாகு முன்னமே திருக்காவேரியில் பொருந்திய செழுமையான நீரில் ஸ்நானஞ்செய்து, நான்கு வேதங்களின் முறைப்படி யாவருஞ் சொல்லும் தேவர்கள் முதலானவர்களுக்கு எதிராக அர்க்கியத்தைக் கொடுத்து, (எ-று.) (உ0)

உக. தாமரைத்தொடைதுளவமாலிகைபுயந்தரிய
நாமமாறிரண்டருண்முறைதரித்தியனவின்று
காமர்தாமரைக்கடவுளென்றனைவருங்கருதப்
பூமலிந்தநந்தனவனத்திடைநனிபுகுந்தா

(இ-ள்.) தாமரைமணிமாலையும் திருத்துழாய மணிமாலையும் புஜங்களில் விளங்கப் பன்னிரு திருநாமங்களையும் முறைப்படி தரித்து, மந்திரம் ஜபித்து, அழகிய தாமரையிலிருக்கும் பிரமதேவனென்று அனைவருமெண்ணும்படி புஷ்பங்களதிகமான நந்தனவனத்தினிடத்து நன்குறப்புகுந்து, (எ-று.) ()

உஉ. கைதுலங்கநீர்கொடுகழீஇக்கருந்துழாய்முதல
கொய்துமூவகைமலர்பறித்தணியபூங்கூடை
பெய்துநீர்தெளித்தாதவன்றோன்றுமுன்பிணையல்
செய்துநல்குவானவ்வயின்மாளிகைசேர்ந்து

(இ-ள்.) திருக்கைகள் சுத்தமாகும்படி நீரைக்கொண்டு கழுவி, பெருமைபொருந்திய திருத்துழாய முதலியவைகளைப் பறித்து, மூன்றுவகையாகிய மலர்களையும் பறித்து, அழகுடைய திருப்பூங்கூடையிலிட்டு, நீர் தெளித்து, சூரியனுதிக்குமுன் மாலையாக்கிச் சமர்ப்பிக்கும்படி அவ்விடத்துள்ள தமது திருமாளிகையை யடைந்து, (எ-று.)

"நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ" என்னும் ஆழ்வாரருளிச் செய லின்படி 'மூவகைமலர்' என்றார். கொடிப்பூ புதற்பூ என்பன நிலப்பூவி லடங்கும். (உஉ)

உ௩. துலங்குபன்மணிநிகர்மலர்ப்பிடிகைமீசசொரியா
நலஙகுறுதவைபழுதறத்தனிததனிநாடி
அலங்கலபூஞ்சரந்தண்டைசெண்டணிநுதற்சுட்டி
இலஙகுதோடுமுன்றிரைவிதானம்பெறவிழைத்து

(இ-ள்.) பிரகாசமுடைய பலமணிகளை நிகர்த்த மலர்களைப் பீடத்தின் மீது சொரிந்து, அவைகள் நலங்காமல் பழுதான புஷ்பங்களைத் தனித் தனியாகச் சோதித்து, மாலை பூஞ்சரம் தண்டை செண்டு அழகிய நுதற் சுட்டி பிரகாசமுடைய தோடு முன்றிரை மேற்கட்டியாயமையும்படி செ யது, (எ-று.) பீடிகை-பிடிகை எனக் குறுக்கல் விகாரம் பெற்றது. (உ௩)

உ௪. வளங்கொடடடினிட்டலங்கல்வெண்டுகிலினுன்மறையா
உளஙகளிப்புறமலாகைகயிற்றூங்கிமீதோஙகி
விளங்குகோபுரமதில்செழுகோயிலுண்மேவித்
துலங்குறுவிமானந்தனைவலஞசெய்துதொழுது

(இ-ள்.) அம்மாலைசளை வளப்பமான தட்டிலிட்டு வெண்மையான வஸ் திரத்தாலே மறைதது, உள்ளம் களிப்புண்டாகுமபடி மலர்போன்ற கைகளி லெடுத்து, ஓங்கி விளங்கும கோபுரமும் மதிலும தோன்றும் திருக்கோயி லையடைந்து, விளங்கு, பிரணவாகார விமானத்தை வலஞ்செயது தொ ழுது, (எ-று.) (உ௪)

உ௫. ஆதிநாயகனடிமலரருசசனைபுரியும்
கோதிலாமுனிவரன்றனைபபணிந்தவைகொடுத்தான்
சோதிநீலமாலவரையெனத்துயிலுமாதவனும்
போதினனணிமலரினுமழகுறப்புனைந்தான்.

(இ-ள்.) ஆதிநாயகனை திருவரங்கநாயகனது திருவடிகளை யர்ச்சனை செய்யும குற்றமற்ற முனிவரைப் பணிந்து அவைகளை யளித்தனர். அம்முனி வர், பிரகாசமுடைய நீல நிறத்தையுடைய பெரியமலை யென்று சொல்லும் படி அறிதுயிலமர்ந்த பெருமானும் ஆதியில் பிரமதேவன் சமர்ப்பித்த புஷ் பத்தினும் அழகு பெறும்படி அவைகளைச் சாத்தினர். (எ-று.) (உ௫)

உ௬. முன்னரங்கவன்புயந்தணவாத்தொடைமுனிவன்
என்னவோர்வடிவெடுத்திடற்கடுத்ததேயெனத்தேர்ந்
தன்னதோர்பவமகற்றிமுற்றொருடையலாமதற்கோ
தென்னரங்கமாற்கலங்கலேசாத்தியதிறனே.

(இ-ள்.) முன்பு எம்பெருமானது திருப்புயங்களை விட்டுப்பிரியாத வனமாலிகையானது, தான் மகாசீலனொன்னும்படி ஒருவடிவெடுப்பதற் குக் கூடியதே என்றுணர்ந்து, அப்படிப்பட்ட ஒரு பிறப்பை நீக்கி முனிரு ந்த வனமாலிகையா யமைவதற்கேயோ? (ஆழ்வார்) அழகிய திருவரங்கத் தெம்பெருமானுக்குத் திருமாலையைச் சமர்ப்பித்த துணிவு. (எ-று.)

வனமாலிகையின் அம்சமான ஆழ்வார் திருமாலை சமர்ப்பிப்பதை இங்ஙனம் உத்ப்ரேக்ஷிக்கிருர். (உ௬)

உஎ. நாளுநாளுமிம்முறைமலர்த்தொடையலேநலஙி
நீளுமாவணநகாவயிற்பலியினுணிறைத்துத
தாளுமேனியுங்கரங்களுமிதயமுநதளரா
தாளுநாயகன்பணிவிடைபுரிந்தநாளதனில

(இ-ள்.) தினந்தோறும் இவ்விதமாக மலர்மாலைகளைச் சமர்ப்பித்துப், பெரிய கடைவீதி வளப்பத்தையுடைய அந்நகரத்தினிடத்து உஞ்சவிருத்தி செய்து அமுது பண்ணி, திருவடிகளும் திருமேனியும் திருக்கைகளும் திருவுள்ளமும் சோர்வடையாமல், அடிமைகொள்ளும் பெருமானது கைங்கரியம் செய்துவரும் நாளில், (எ-று.) (உஎ)

உஅ. சதிர்மணித்திருபபெட்டகத்தனந்தன்மேற்கவினார்ந்
தெதிர்மலாத்திருக்கண்வளர்ந்துலகையாளிறையோன்
முதிர்மலாததொடைகயிங்கரியததுமமுனிவோன
மதிமனப்பரிவினுகதிருவுளமிகமகிழா

(இ-ள்.) பிரகாசமுடைய மணிமயமான அழகிய திருக்கோயிலில் திருவநந்தாழ்வானமீது அழகுடையதாயுயரும மலாபோனற திருக்கண் வளர்ந்து உலகத்தையாளும் பெருமான, சிறநத மலர்மாலை கைங்கரியத்திலும் அம்முனிவரது மதிப்புடைய திருவுள்ளத்திலுள்ள பக்தியினாலும் திருவுள்ளம் மிகவுமகிழ்ந்து, (எ-று.). (உஅ)

[ஆழ்வார் தேவதேவி மயக்கிற்படுதல்.]

உகூ. உததிசூழ்நிலத்தின்பமுந்துதவிமேலுயரும
பதமுநலகுவான்கருதியோரரமகளபசுந்தேன்
குதலையாளைமேதினிவயின்விடுப்பமென்குழறகாா
மதாவிழிக்கயல்வனிதைமாலருண்முறைவந்தாள.

(இ-ள்.) கடல்சூழ்ந்த உலக இன்பத்தை (ஆழ்வாருக்கு) முதலிற் கொடுத்துப் பிறகு உயர்நத பரமபதமும் கொடுக்கத் திருவுளங்கொண்டு, நல்ல தேனைப் போன்ற குதலைச் சொற்களையுடையவளான ஒரு தெய்வப் பெண்ணைப் பூமியினிடத்து விடுக்க, மிருதுவும் கருமையுமுள்ள கூந்தலும் சேற்கெண்டை போன்று மருளும் கணகளுமுடைய அப்பெண், பெருமானருளப்பாட்டின்படி வந்து, (எ-று.) (உகூ)

௩0. வண்மையார்புனற்பொன்னிமாநதிக்கரைவடபால்
அண்மையாயவெள்ளறையில்வாழ்கணிகைபொற்பகலாப்
பெண்மையாள்விடகண்டகிக்குவமைமேற்பிறங்க
ஒண்மையாணரோர்புதல்வியாயவனிமீதுதித்தாள்.

(இ-ள்.) வளப்பமுடைய நீர் நிறைந்த திருக்காவேரி நதிக்கரையின் வடபாரிசத்துக் கருகான திருவெள்ளறையில் வாழும் தாசியும் அழகு நீங்காத பெண் தன்மை யுடையாளுமான விடகண்டகிக்குச் சமானமற்றுப் பிரகாசமும் அழகுமுள்ள ஒரு புதல்வியாய்ப் பூமியிலுதித்தனள். (எ-று.) (௩0)

௩௧. உதித்தபாவையைத்தேவதேவிப்பெயருவப்பான்
விதித்ததாய்விடகண்டகிவளர்த்தலும்விளங்கிக்
கதித்தபோமதனிவளுமோரிரதியாக்கருத
மதித்தபாற்கடலமுதநேர்மொழியினாள்வளர்ந்தாள்.

(இ-ள்.) அப்படி பிறந்த அப்பெண்ணைச் சந்தோஷத்தினாலே தேவதேவியென்னும் பெயரிட்ட தாயாகிய விடகண்டகி வளர்த்தலும், உயரும் போரையுடைய மன்மதன இவளும் ஒரு இரதியாவளென்றெண்ணும்படி, கடைந்த பாற்கடலிலுதித்த அமிர்தத்துக்குச் சமானமாகிய சொல்லையுடைய தேவதேவி விளங்கி வளர்ந்தனள். (எ-று.) (௩௧)

௩௨. பருவநான்குநீத்தைந்தினிற்பரதநூற்பான்மை
ஒருவுறுதுதாள்கரஞ்சிரநயனங்களுடனே
மருவுபற்பலதொழிறவாத்திறத்ததின்வாய்ப்ப
பொருவினாடகத்தரம்பையையியம்புறப்பொலிந்தாள்.

(இ-ள்.) நான்காம வயதொழித்து ஐந்தாம் வயதில் பரதசாஸ்திரத்தின் விதங்கள தவறாமலும், பாதங்கள் கைகள் தலை கண்களுடனே பொருந்திய பற்பலவான தொழில்கள் கெடாமலும் (தனது) வல்லமையாலே (அவைகள்) சித்தித்தலால் ஒப்பற்ற நாடகத்தில் அரம்பையென்று சொல்லும்படி விளங்கினள். (எ-று.) (௩௨)

௩௩. கீதமோதத்தின்வாணியுந்துதித்திசைகிளத்த
நாதவீணையினலத்தின்மாதங்கிசீர்நவில
மாதராயாவருமன்பினாண்மானமேமருவப்
பாதமீதுகாமுகரவாவினிற்றினம்பணிய

(இ-ள்.) சங்கீதங்களைப் பாடுவதினாலே சரசுவதியும் துதித்து (அவள்) கீர்த்தியைச் சொல்லவும், நாதத்தையுடைய வீணையின் நலத்தினாலே மதங்கமாது (அவள்) சீரைச் சொல்லவும், பெண்கள் யாவரும் அன்போடு வெட்கமடையவும், காமுகர்கள் ஆசையோடு தினமும் (அவளது) பாதங்களிற் பணியவும், (எ-று.) (௩௩)

௩௪. மகரகேதனனூல்புகன்முறையெலாமனத்தாற்
புகரிலாவகைதெளிந்துவிஞ்சைகளெலாம்புரிந்து
தகரவார்குழற்கருங்கணாள்விண்ணுளோர்தலத்தோர்
மிகவியப்புறத்தேயமேழெட்டையும்வென்றாள்.

(இ-ள்.) மீனக் கொடியையுடைய மன்மதனது நூலாகிய காமசாஸ்திரம் சொல்லும் விதங்களையெல்லாம் மனத்தினாலே குற்றமில்லாதபடியறிந்து, (அதற்கிணங்கிய) வித்தைகளை யெல்லாஞ்செய்து, வாசனையுடைய நீண்டகூந்தலையும் பெரிய கண்களையுமுடைய தேவதேவியானவள், தேவலோகத்திலுள்ளவர்களும் பூமியிலுள்ளவர்களும் மிக அதிசயிக்கும்படி ஐம்பத்தாறு தேசத்திலுள்ளவர்களையும் வென்றனள். (எ-று.) (௩௪)

௩௫. அன்னபூங்கொடியணங்கனாளாங்கோர்நாளதனிற்
கன்னனேர்மொழிக்கன்னியர்கணம்புடைசூலவ

மின்னவிர்ந்தொளிர்நவமணிச்சிவிகையின்மீதே
உன்னருந்திறற்சென்னிவாழுறந்தைவந்துற்றாள.

(இ-ள்.) அப்படிப்பட்ட பூங்கொடிபோன்ற தெய்வப்பெண்ணான தேவதேவி, அங்கு ஒரு நாட்பொழுதில் கரும்புபோன்ற சொல்லையுடைய பெண்கள் கூட்டம் தன்னைச் சூழ்ந்துவரப், பிரகாசமுடைய நவமணிகளிழைத்த சிவிகையின்மீது நினைத்தற்கரிய வலிமையுடைய சோழராஜன் வாழும் உறையூர் நகரத்தை வந்தடைந்து, (எ-று.) (கூரு)

கூசு. பழுதிலபானுவின்மரபினான்பாரெலாம்பரவுரு
செழுமணிப்புயசென்னிமன்னவனவைசேராது
தொழுதுநாற்றிசைநிருபருமணிமுடிதுளக்க
எழுகுரற்பயின்மாடகயாழ்கரத்தெடுத்தாள்.

(இ-ள்.) குற்றமற்ற சூரியவமிசத்தனாய்ப் பூமியிலுள்ளோ ரெல்லாம் வணங்கும் செழுமையான மணிகளையுடைய ஆபரணமணிந்த புயங்களையுடைய சோழமகாராசனது சபையையடைந்து, தொழுது, நான்கு திசையிலுள்ள அரசர்களும் அழகிய முடியசைக்க, ஏழுநரம்புகளமைந்த முறுக்காணியையுடைய வீணையைக் கையிலெடுத்து, (எ-று.) (கூசு)

கூஎ. ஆடகத்துகிலுறைகழித்தணிதனைத்தனையா
மாடகத்தினறகுரல்விசித்திசைமுறைவழாது
சூடகத்தளிரககரத்துகிர்விரலினற்றாண்டிப
பாடகத்துணைப்பதத்தினள்பாடினள்பரணி.

(இ-ள்.) பொன்மயமான துணியாற்செய்த உறையை யொழித்து, அழகிய தனங்களிலணைத்து, முறுக்காணியினால் தனது குரலிற் பிறக்கு மோசையோடு கூட்டி, வளையலணிந்த தளிர்போன்ற கைகளிலுள்ள பவளம் போன்ற விரலினாலே தூண்டிப், பாடகமணிந்த இரண்டு பாதங்களையுடைய தேவதேவி இசைமுறை வழுவாது பரணியைப் பாடினள். (எ-று.) (கூஎ)

பரணி-ஆயிரம் யானைகொன்ற தலைவனைத் துதித்துப்பாடும் பிரபந்தம்.

கூஅ. யாழுங்கந்தரத்திசையுமொன்றாகியேயிமையோர்
வீழுந்தன்மையேழிசையினால்விஞ்சையர்வியந்தார்
சூழுந்தாதகியலங்கல்சேர்மணிமுடிதுளக்கா
வாழும்பொன்னிநாட்டிறைவனுமனமிகமகிழ்ந்தான்.

(இ-ள்.) வீணையும் கண்டத்தினிசையும் ஒன்றாய்க்கூடித் தேவர்கள் விரும்பும் விதமான ஏழிசையினாலே வித்தியாதரர்கள் ஆச்சரியமடைந்தார்கள். சூழ்ந்த ஆத்திமாலையணிந்த அழகிய முடியை யசைத்து, வாழ்க்கையையுடைய சோழமகாராசன் மிகவும் மனமகிழ்ந்து, (எ-று.) (கூஅ)

கூகூ. விலாழியங்கலினக்குசைவாசியுமெழில்பெற
றுலாவுழும்மதக்கறையடிப்புகர்முகவுவாவும்
நிலாவிரிந்தவெண்ணித்திலச்சிவிகைபூணிரையுங்
குலாவுபொன்மணிமேகலைத்துகில்பலகொடுத்தான்.

(இ-ள்.) வாய் நுரையையுடையதாய் அழகிய கடிவாளத்தையும் கயிற்றையுமணிந்த குதிரையும், அழகுடையதாயத் திரிவதான மூன்று மதங்களும் பெரிய காலும் புள்ளிகளமைந்த முசமுமுடைய யானையும், நிலவுவிரிந்த வெண்மையான முத்துச்சிவிகையும், ஆபரணவரிசையும், பொன்மயமான அழகிய மேகலாபரணமும், ஆடையும் பலவாகக் கொடுத்தனன். (எ-று.) (௩௯)

௪0. களைசெயாதபேருவகையாள்கதிர்முடிகழற்கால்
விரைசெய்தாதகியலங்கருமிருபுயம்விசயப்
புரைசையானைமேலவேந்தனைவிடைகொளாப்புளினத்
திரைசெய்மாநதியரங்கமாநகர்வயிற்சேர்வாள்.

(இ-ள்.) வரம்புசெய்யவொண்ணாத பெரிய சந்தோஷத்தையுடையவளான தேவதேவி, பிரகாசமுடைய முடியும் வீரகண்டையணிந்த பாதமும் வாசனையுடைய ஆத்திமாலை தாழும் இரண்டு புயங்களும் ஜயமுமுடையவனாய் கழுத்தணிகயிற்றையுடைய யானைமீதுள்ளவனான சோழமகாராசனிடத்து விடைபெற்று, மணற்குன்றுக ளுடையதாயத் திரைகளோடுகூடிய பெருமைபொருந்திய திருக்காவேரிநதி சூழ்ந்த திருவரங்கநகரத்தைச் சேருமவள், (எ-று.) (௪0)

வேறு.

௪௧. ஆதவனழற்கதிராறறலாமையான்
மாதர்களனைவருமவருந்திவாடலும்
வேதநாரணப்பெயர்விமலன்மேவிய
பாதவமதுமலர்ப்பழுவநண்ணினள்.

(இ-ள்.) சூரியனது அக்கினிமயமான கிரணங்களைப் பொறுக்கமுடியாமல் பெண்களனைவரும் வருந்திவாடுதலும், விப்பிரநாராயண ரென்னும் திருநாமத்தையுடைய விமலரான ஆழ்வார் எழுந்தருளிய மரங்களில் தேனையுடைய மலர்கள்பொருந்தி யிருக்கும் நந்தனவனத்தை யடைந்தனள். (எ-று ) (௪௧)

௪௨. தகுந்தமணியமணித்தரளத்தார்வடம்
மிகுந்தணிகொங்கையாண்மின்னனாரொடுந்
தொகுந்தகைமயில்கண்மைத்தொகையுட்டோய்ந்தெனப்
புகுந்தனண்மதுமலர்பொதுளும்பொங்கரே.

(இ-ள்.) தகுந்த பொன்மணிகளையும் ஒழுங்கான முத்துவடங்களையும் அதிகமாகவணியும் கொங்கையையுடைய தேவதேவி, நெருங்கிய கலாபத்தையுடைய மயில்கள் இருட்கூட்டத்திற் புகுந்ததுபோல, மினபோன்ற பெண்களோடும் தேனையுடைய மலர்கள் நெருங்கிய சோலையிற் பிரவேசித்தனள். (எ-று.) (௪௨)

௪௩. பங்கயமதுமலர்வனத்துட்பான்மொழிக்
கொங்கையோதிமமிறைகொள்ளுந்தன்மைபோல்
செங்கைவேல்விழியுமோர்சோலைநீழலின்
மங்கையர்திரள்புடைமருவவைகினள்.

(இ-ள்.) தேனையுடைய தாமரைமலர் வனத்துள் அன்னம் இருப்பிடங்கொள்ளுந் தன்மையைப்போல, பால்போன்ற சொல்லும் கொங்கையும் செம்மையான கையும் வேல்போன்ற கண்களுமுடைய தேவதேவியும் ஒப்பற்ற சோலையின் நிழலில் பெண்களின் கூட்டம் தன்னைச் சூழத் தங்கியிருந்தனள். (எ-று.) (௪௩)

௪௪. விழியிணையளியினங்கரங்கண்மென்றளிர்
மொழிபசுங்கிளியணிமுறுவன்முல்லையா
எழிலிசைகுயிலதாவியலுமஞ்ஞையாப்
பொழிலெனவிளங்கினர்பொருவின்மாதரே.

(இ-ள்.) கண்களிரண்டும் வண்டுக்கூட்டங்களாகவும், கைகள் மிருதுவான தளிராகவும், சொல் பசுங்கிளியாகவும், அழகிய பற்கள் முல்லையாகவும், அழகிய இசை குயிலாகவும், சாயலும் மயிலாகவும், ஒப்பில்லாத பெண்களனைவரும் சோலைபோலே விளங்கினார்கள். (எ-று.) (௪௪)

௪௫. பிறைநுதலிவடனைப்பிறழ்கட்பேதையர்
அறைதருமொழிச்சுவையதனுக்கஞ்சியே
தறையிடத்துகுந்துமெய்தளர்ந்துதண்பொழில்
நிறைகனியுடைந்துகண்ணீர்சொரிந்தவே.

(இ-ள்.) பிறையைப்போன்ற நெற்றியையுடைய தேவதேவியினிடத்துப் பிறழும் கண்களையுடைய பெண்கள் பேசும் சொல்லின் அழகுக்குப்பயந்தே, குளிர்ந்த அந்த நந்தனவனத்தில் பழுத்த கனிகள், பூமியினிடத் துதிர்ந்து சரீரம் தளர்ந் துடைந்து கண்ணீர் சொரிந்தன. (எ-று.)

௪௬. ஆயநந்தனவனத்தலகிருமரை
தூயநன்மணிவடந்துளவமாலிகை
மேயமார்பகத்துநூல்விளங்கவெண்ணிலா
ஏயவேநுதற்றிருமண்பொற்பேறவே

(இ-ள்) அந்த நந்தனவனத்தில் பரிசுத்தமான நல்ல பலவான தாமரைமணிவடமும் துளவமணிமாலையும் பொருந்திய திருமார்பினிடத்துப் பூணுநூல் விளங்கவும், வெண்மையான நிலவுபோல நெற்றியில் திருமண்ணின் அழகு அதிகரிக்கவும், (எ-று.) (௪௬)

௪௭. அளியினான்மாதவனழகினாடல்வேள்
ஒளியினானுதாசனனுவமையாகத்தேன்
துளியினான்மலர்வனத்தொழில்செய்வான்றனைத்
தளியினார்முகிற்குழற்றையனோக்கினாள்.

(இ-ள்.) கிருபையினாலே திருவரங்கநகரப்பனும், அழகினாலே ஆடலையுடைய மன்மதனும், பிரகாசத்தினாலே அக்கினியும் உவமையாகும்படி, தேன்துளிகளால் தாழ்தலான மலர்கள்பொருந்திய நந்தனவனத்தில் தொழில்புரியும் ஆழ்வாரை, நீர்த்துளிகளையுடைய மேகம்போன்ற கூந்தலையுடைய தேவதேவி கண்டனள். (எ-று.) (௪௭)

௪௮ தனதுகட்குவலயச்சரங்கடைப்பவும்
மனநினைந்தயல்விடாமுனிவன்மாட்சிதேர்ந்

தனநடைக்குயின்மொழிவியப்புற்றுவிநோர்
இனவளைக்கரமலரிருளைக்கோதுவாள்

(இ-ள்.) தன்னுடைய நீலோற்பலம்போன்ற கண்ணாகிய பாணங்கள் படவும், மனத்தை வருந்தி அயலிற்செல்லவிடாத மநநிலரான ஆழ்வாரது பெருமையையுணர்ந்து, அன்னம்போன்ற நடையும் குயில்போன்ற சொல்லையுமுடைய தேவதேவி ஆச்சரியமடைந்து, இனமானவளையல்களையணிந்த மலர்போன்ற கைகளையுடைய உயிருக்குச் சமானமாகிய தோழியைப் பார்த்துச் சொல்லுவாளாயினள். (எ-று.) (சஅ)

சகூ. வானவர்மணிமுடிநிருபர்மாதவர்
மோனர்களெவருமென்மொழியின்மாழ்குவார்
பூநனிவனத்தொழில்புரியிவ்வேதியன்
தேனமர்குழலினாய்சிறிதுநோக்கிலான்.

(இ-ள்.) வண்டுகள் நிறையும் கூந்தலையுடைய தோழியே! தேவர்கள், மணிகளிழைத்த முடியையணிந்த அரசர், தவத்தோர், மோநநிலையையுடையவர் ஆகிய எவர்களும் என்னுடைய சொல்லொன்றினாலே மயங்கிப் போவார்கள். பூக்களையுடைய நந்தனவனத்தில் நன்றாகத் தொழில்புரியும் இப்பிராமணனோ (என்னைச்) சிறிதேனும் பார்த்திலன். (எ-று.) (சகூ)

ரு0. விடைகடாவிறைதழன்மேனிப்பாகமுஞ
சடையுமாமடநலாாதமக்கன்றீய்ந்தனன
அடையமார்பகத்தைமாலரிவைக்கீய்ந்தனன்
இடைவிடாதயனுநாவாணிக்கீய்ந்தனன்.

(இ-ள்.) இடபத்தைச் செலுத்தும் சிவபெருமான், (தமது) அக்கினியொத்த மேனியிலொருபாகத்தையும் சடையையும் பெருமைபொருந்திய இளமையையுடைய பெண்களுக்கு அக்காலத்திற் கொடுத்தனர்; மகாவிஷ்ணு (தமது) மார்பை ஒரு பெண் அடையும்படி கொடுத்தனர்; பிரமதேவனும் (தமது) நாவை சரசுவதிதேவிக்கு இடைவீடின்றிக் கொடுத்தனர். (எ-று.) (ரு0)

ருக. ஆதலான்மாதர்மேலார்வநீங்கினூர்
பூதலம்வானமெப்புறத்துமில்லையால்
வேதபாரகன்முழுவெதிரனோமிக
ஏதமார்மூகனோவிழிந்தபேடியோ

(இ-ள்.) ஆகையாலே பெண்களின்மீது ஆசையற்றவர்கள் பூமியினும் ஆகாயத்தினும் எவ்விடத்தினுமில்லை. இந்த வேதியன், முழுச்செவிடனோ? அல்லது மிகவும் துன்புற்ற ஊமையோ? அல்லது இழிவான பேடியோ? (எ-று.) (ருக)

ருஉ. அந்தனோவிரதமொன்றமைந்துளான்கொலோ
இந்தநீர்மையனிவனென்றுகூறெனக்
குந்தநேரிணைவிழிக்கொடியுங்கூர்நிலா
மந்தவாணகையொடம்மயிலைநோக்கியே

(இ-ள்.) அல்லது குருடனோ? விரதமொன்றைக் கொண்டிருப்பவனோ? இவனை இத்தன்மையன் என்று (எனக்குச்) சொல்லுவாயாக என்று சொல்ல, வாளபோன்ற இரண்டு கண்களையுடைய கொடிபோன்ற தோழியும், அதிகரித்த நிலவைப்போல ஒளிபொருந்திய புன்சிரிப்புடன் அந்த மயிலபோன்ற தேவதேவியை நோக்கி, (எ-று.) (௫உ)

௫௩. உனைநிகர்பவாக்குணீயுரைத்துளோர்களின்
வினைதவவயர்தலவ்விரதவானலால
அனைவருமாமவனரங்கநாயகன்
தனைவிரும்பலினைவைதணந்தநீர்மையான்.

(இ-ள்.) அந்த விரதவான ஒருவர் நீங்கலாக, உன்னால் உரைக்கப்பட்ட எல்லோருடைய நல்வினையும் கெடும்படி உன்னையொத்தவர்களுக்குள் அனைவரும் அயர்தலாகும்: அவரோ அரங்கநாயகனை பக்திசெய்பவராதலால் குற்றம் நீங்கிய தன்மையுடையவராவர். (எ-று.) (௫௩)

௫௪. வருதிரைப்பாற்கடன்மருந்தயின்றவாய்
வெருவருங்கடுஞ்சுவைவேம்பைவெஃகுமோ
திருவரங்கேசனைத்தெளிந்தபார்வைவே
றொருவரைபொருளெனவுறறுநோக்குமோ.

(இ-ள்.) அலைகளையுடைய பாற்கடலிலுதித்த அமிர்தத்தை புண்ட வாயானது பயப்படக்கூடிய கசக்குஞ்சுவையையுடைய வேம்பை விரும்புமோ? (அதுபோலே) திருவரங்கேசனை யுள்ளபடிகண்ட (அவரது) பார்வை, பிறரை யொருபொருளென்று உற்றுப்பார்க்குமோ? (எ-று.) (௫௪)

௫௫. மேனகையுருப்பசியரமபைவெண்மணித
தூநகைத்திலோத்தமைபுவியிறந்தேன்றினும்
நானகையிரவவாய்நளினநாண்மலா
ஆனகையணங்கனையவாவொன்றில்லனால்.

(இ-ள்.) வாசனையுடைய செவ்வல்லிமலர் போலும் வாயையுடையவளே! புதிய தாமரைமலர்போன்ற கைகளையுடைய தெய்வப்பெண்ணுக்குச் சமானமானவளே! மேனகை, ஊர்வசி, அரம்பை முத்துப்போன்ற பரிசுத்தமான பற்களையுடைய திலோத்தமை இவர்கள் பூமியிற் பிறந்துவரினும (அவர்கள் விஷயத்தில்) ஒரு ஆசையுமற்றவராவர். (எ-று.)

௫௬. புலன்களைந்தினுமுளம்பொருந்துறுதவன்
நலங்கவாந்திடலரிதெனைநத்துமோ
அலங்கலங்குழலினுமெனலுமாடகச்
சிலம்பணிதெரிவையுஞ்செயிர்த்துநோக்கியே

(இ-ள்.) ஐம்புலன்களிலும் மனம் பொருந்தாத இவனை நமது நலத்தைக் கொள்ளுதலென்பது அரிதாக அடையுமோ? மாலையையணிந்த அழகிய கூந்தலையுடையவளே! என்று (தோழி) சொல்லுதலும், பொன்னாலான சிலம்பையணியும் தேவதேவியும் கோபித்துப் பார்த்து, (எ-று.)

௫௭. நுடங்குதிடைவிதழ்மணிநகையின்றாநிலாப்
பொடுந்திடவியாறுதற்புருவமீசசெல •

வடித்திடுமயில்விழிசிவப்பமாசில்பூங்
கொடித்தகையிகுளைபாலொருசொற்கூறுவாள்.

(இ-ள்.) இதழ் துடிக்கவும், அழகிய பற்களினின்று சுத்தமான நிலவு உண்டாகவும் (வெடிசிரிப்புண்டாகவும்), வியர்வையுடைய நெற்றியின்மீது புருவஞ் செல்லவும், வடித்திருக்கும் வேல்போன்ற கண்கள் சிவக்கவும், குற்றமில்லாத பூங்கொடிபோன்ற அழகையுடைய தோழியினிடத்து ஒரு சொல்லைச் சொல்லுவாள், (எ-று.) (௫௭)

௫௮. சென்றவெண்டிசையுமென்றிருவின்விஞ்சையின்
வென்றநானிவனையும்வென்றிலேனெனில்
உன்றனதடிமையீண்டிவனைவெல்வனேல்
என்றனதடிமைநீயென்றுகூறினாள்.

(இ-ள்.) சென்ற எட்டுத்திக்கையும் என் அழகாலும் வித்தையாலும் ஜயித்தநான் இப்பிராமணனையும் வெல்லாவிடின உனக்கடிமையாவேன்; இங்கு இவனை வெல்லுவேனாயின எனக்கு நீ அடிமையாவாயாக என்று சொல்லினள். (எ-று.) (௫௮)

௫௯. செயிர்மதக்கரிமணிச்சிவிகைவாம்பரி
உயிர்முதற்பாங்கியோடொருவரின்றியே
அயில்விழிக்குயின்மொழியகற்றியந்தணன்
பயின்மலர்த்துடவையுடபடாதலுட்கொளா

(இ-ள்) வேல்போன்ற கண்களையும் குயில்போன்ற சொல்லையுமுடைய தேவதேவி, கோபமும் மதமுமுடைய யானையையும் அழகிய சிவிகையையும் தாவும் குதிரையையும் உயிர்போன்ற முற்பட்டவளான தோழியோடு ஒருவருமின்றி எல்லாரையும் போகவிட்டு, ஆழ்வார் பொருந்திய நந்தனவனத்திற் போகவெண்ணி, (எ-று.) (௫௯)

௬௦. சுடர்மணியணியெலாந்துகிலினுட்பொதிந்
தடர்மரப்பொதும்பிடைககரந்திட்டத்துடைப்
புடவைநூன்மருங்குலிற்புனைந்துபொற்பணி
வடமுலைத்திருமணிவடமுஞ்சாத்தியே.

(இ-ள்.) பிரகாசமுடைய ரத்தினாபரணங்களை யெல்லாம் வஸ்திரத்தில்முடிந்து நெருங்கிய மரப்பொந்தினிடத்து ஒளித்துவைத்து, சிறப்புடைய (காவிப்) புடைவையை நூல்போன்ற இடையிலணிந்து, பொன்னாபரணமும் ஆரங்களுமணியும் முலையின்மீது அழகிய (தாமரை, திருத்துழாய) மணிமாலைகளையு மணிந்து, (எ-று.) (௬௦)

௬௧. முற்றிருட்குவையெனமுடிந்துமொய்துழாய்
சுற்றிருங்கருங்குழலெருத்தந்தோய்தரப்
பொற்றிருவல்லிவெண்மலர்கள்பூத்தென
நற்றிருமண்ணைமுந்நான்குமெண்ணியே.

(இ-ள்.) முதிர்ந்த இருட்கூட்டமென்று சொல்லும்படி பெரியதான கரியகூந்தலை முடித்து, அதில் நெருங்கிய திருத்துழாய் மாலையைச்சுற்றிப்

பிடரியிற்படியும்படி விட்டு, பொன்மயமான அழகிய கொடியொன்று வெண்மையான மலர்களைப் பூத்ததுபோல நல்ல திருமண்ணைப் பன்னிரண்டு திருமந்திரங்களையும் எண்ணி யணிந்து, (எ-று.) (௬௧)

௬உ. அஞ்சனவிடத்தையுள்ளாக்கராவினில்
வஞ்சனையனைத்தையுமனத்தினுட்கொளாப்
பஞ்சனபதயுகப்பரிவுந்தேர்கலாள்
நஞ்சனவிழிநடந்தவனைநண்ணினாள்.

(இ-ள்.) கரியவிஷத்தை யுள்ளே கொண்டிருக்கும் பாம்பைப்போலத் தன்னுடைய வஞ்சனையை யெல்லாம் மனத்திலடக்கிக்கொண்டு, விஷம் போன்ற கண்களையுடைய தேவதேவி, பஞ்சுபோன்ற இரண்டு பாதங்களின் வருத்தத்தை யறியாதவளாகி நடந்து, ஆழ்வாரை யடைந்தனள். (எ-று.) (௬உ)

௬௩. அடியனேனடியனேனென்னுமாசகல்
கொடியனார்வினயமேநுவலுநாவினாள்
முடிதவாமுனிபதமுளரியோடுபா
படியவேபணிந்தெழூஉப்பரிவிற்போற்றினாள்.

(இ-ள்.) அடியேன் அடியேன் என்னும் குற்றமற்ற வார்த்தையையுடையவர்களது விநயத்தையே சொல்லும் நாவையுடையவளாகி, கெடாத ஆழ்வாரது பாததாமரையோடு தனது முடிபடியும்படி பூமியிற் பணிந்தெழுந்து பிரீதியோடு போற்றினாள். (எ-று.) (௬௩)

௬௪. அளக்கருந்தகைமைசாலரங்கத்தீசனை
உளக்கமலத்துளேயொளித்தயோகியே
துளக்கமிறவப்பலந்துதைந்ததாருவே
தளற்கருமறுபகைதடிந்தவேதியே.

(இ-ள்) அளவிடுதற்கரிய பெருமையிருந்த திருவரங்கநாயகனைத் திருவுள்ளமாகிய தாமரைமலரில் மறைத்துவைத்திருக்கும் யோகியே! கலங்குதலில்லாத தவமாகிய பழம் நெருங்கியுள்ள விருக்ஷமே! தள்ளுதற்கரிதாகிய ஆறுபகைகளையும் வெட்டியெறிந்த ஆயுதமே! (எ-று.) (௬௪)

௬௫. அரங்கர்தாண்மலர்க்கணியாயதும்பியே
தரங்கஞானத்தவச்சலிலவாரியே
வரங்களாகியகலைமலர்ந்ததிங்களே
சுரங்கலாமறையுறைசொரியுமேகமே.

(இ-ள்.) திருவரங்கரது பாததாமரைமலர்கட்கு அலங்காரமாகிய பிரமரமே! ஞானம்-அலையாகவும் தவம்-நீராகவுமுள்ள சமுத்திரமே! வரங்களாகிய கலைகள்விரிந்த சந்திரனே! சுரத்தோடு கூடிய வேதார்த்தமாகிய நீர்த்துளியைப் பெய்யும் மேகமே! (எ-று.) (௬௫)

வேறு.

௬௬. என்றுபற்பலவெடுத்திசையிசைத்தடிவிடா
தொன்றுமைக்குழன்மடக்கொடிமனத்தையுணரா

துன்றுதாமமணிநாமமொடுதூயமொழியும்
நன்றுபெற்றவமுதத்துருவுநாடிநவில்வான்.

(இ-ள்.) என்று பற்பலவற்றைப் புகழ்ச்சியாக எடுத்துச்சொல்லித் திருவடிகளைவிடாது இருக்கும் கரியகூந்தலையுடைய இளங்கொடிபோன்ற தேவதேவியின் அபிப்பிராயத்தை யறிந்து, அவளிடத்துள்ள மணிமாலையும் அழகிய நாமமும் தூய்மையான சொல்லும் நன்மையுடைய அமுதம்போன்ற இனிய உருவும் கண்டு ஆழ்வார் சொல்லுவார் (எ-று.) (௬௬)

௬௭. யாவணீயெழுதியாதுனதுளத்ததிவணீ
மேவவேதுவேதிசைத்தியெனவேதமுனிவோன்
ஓவமாணுருவமுற்றுநடைபெற்றதுறழத்
தேவதேவியுமெழுந்திவைதெரிந்துரைசெய்வாள்.

(இ-ள்.) வேதமுனிவரான ஆழ்வார், நீ யாவள்? எழுந்திருப்பாயாக; உன் உள்ளத்திலிருப்பது யாது? இங்கு நீவரக் காரணம்யாது? சொல்லுவாயாக என்றுரைத்தருளச், சித்திரம் மாட்சிமையுடைய உருவம்பெற்று நடைபெற்றதுபோலத் தேவதேவியு மெழுந்து தெரிந்து இவற்றைச் சொல்லுவாள். (எ-று.) (௬௭)

௬௮. எனதுசுற்றமொடியாய்விபவமேதுமிகவா
மனதுபற்றறவிடுத்தரிமலர்ச்சரணமே
நினதுளத்துறவமைத்தருணிறைத்தநெறியாற்
கனதுயர்க்கடல்கடத்துவையெனக்கருதியே

(இ-ள்.) என்னுடைய சுற்றத்தோடு தாயையும் விபவங்களெவற்றையும் ஒழித்து, மனதின் (இதர விஷயத்திலுள்ள) பற்றுக்கள் அறும்படி விட்டுப், பெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளையே தேவரீரது திருவுள்ளத்திலமைத்து அவனது திருவருளை நிறைத்துக்கொண்டிருக்கும் நீதியினாலே எனது பெரிய துன்பமாகிய கடலைக் கடத்துவீரென்றெண்ணி, (எ-று.) (௬௮)

௬௯. அடிமைபுக்கனனரிற்கணிகையேற்குய்பவமே
பொடிபடக்கருணைவைத்தருளெனப்புயலினீர்
வடியயிற்கணுதவப்புளகமல்கமடமான்
நெடிதுயிர்த்தலுமனக்கருணைவந்துநெகிழா

(இ-ள்.) அடிமைபுகுந்தேன்; குற்றத்தையுடைய வேசியான எனது பிறவி பொடியாகும்படி நான் உஜ்ஜீவிக்கும் கருணை வைத்தருள்வீராகவென்று, வடித்த வேல்போன்ற கண்கள் மேகம்போல நீரைச்சொரியப் புளகமுண்டாக இளமான்போன்ற தேவதேவி பெருமூச்சு விடுதலும், ஆழ்வாருக்குத் திருவுள்ளமலர்ந்து கருணைவந்து, (எ-று.) (௬௯)

௭0. இனையபொற்பாவனைத்துயிலுமெந்தைபதமே
நினைவில்வைத்தயர்தவத்தினினிறைந்தகலையோன்
றனைவருத்துபிணியைத்தனிதடிந்தகிலமீ
துனையுமிப்பவமொழிக்குமிவனுற்றிடெனலும்

(இ-ள்.) இந்தப் பொலிவுநிறைந்த ஆதிசேஷசயநத்தில் அறிதுயிலமரும் எமபெருமானது திருவடியே, (அதனை) மனதில்வைத்துச் செய்த தவத்தினாலே கலைகள் நிறைந்தவனான சந்திரனை வருத்தும் க்ஷயரோகத்தைத் தனியாக நிவர்த்தித்தது; உன்னையும் பூமியின்மீது இப்பிறவியையொழிக்கும். இங்கு இருந்திடுவாயாக என்று சொல்லுதலும், (எ-று)

எக. அந்தவாய்மையமுதிற்செவியகம்புகுதவே
சந்தவார்குழன்மடப்பிடியுமோகைததையா
நந்தலாதவரமுத்திதருஞானமுதலா
எந்தநீர்மையுமெனக்குனருளென்றுதொழுதாள்.

(இ-ள்.) ஆழ்வாரருளிய அச்சொல் அமிர்தம்போற் செவியிற் பிரவேசிக்கவே, அழகிய நீண்ட கூந்தலையுடையவளாய் இளமைப்பருவமுள்ள பெண்யானை போன்ற தேவதேவியும் சந்தோஷமிகுந்து, கெடாத உயர்ந்த மோக்ஷத்தையருளும் ஞானம் முதலாக எல்லா விசேஷங்களும் எனக்கு உமதருளே யாகுமென்று தொழுதனள். (எ-று.) (எக)

எஉ. வேதவித்தனையவேதியன்விருப்பமுறவே
மாதவத்தரொனநந்தனவனத்துண்மருவா
ஏதமற்றுயர்தவத்தவனிறைததபுனறுன்
தாதவிழ்த்ததருவிற்குமடையிற்றருகுவாள்.

(இ-ள்.) வேதத்துக்கு வித்துப்போன்ற ஆழ்வார் விரும்பினதினாலே மகாதவத்தையுடையவர்கள் போல நந்தனவனததிற் பிரவேசித்து, குற்றமற்றுயர்ந்த தவத்தையுடைய ஆழ்வார் இறைத்த நீரை மகரந்தத்தை உதிர்க்கும் தருக்களுக்கு மடைவழியே பாய்ச்சுவாள். (எ-று.) (எஉ)

எ௩. உளைதரும்புரவியாதவனுதிக்குமுனமே
வளைதயஙகுதிரைமாநதியில்வந்துபடியா
முளைதரும்பிறையினாமமுறைமுற்றிமுருகின்
தளையவிழ்ந்தமலரந்தணனின்முந்துதருவாள்.

(இ-ள்.) பிடரிமயிரையுடைய குதிரைகளை யுடையவனான சூரியன் உதிக்குமுன்னமே, சங்குகள் அசையும் அலைகளையுடைய பெருமைபொருந்திய திருக்காவேரி நதியில் நீராடி, உதிக்கும் பிறையைப் போன்ற திருநாமம் முறைப்படி யணிந்து, வாசனையுடைய முறுக்கவிழ்ந்த மலர்களை ஆழ்வாரினும் முற்பட்டுக் கொண்டுவருவாள். (எ-று.) (எ௩)

எ௪. இடையிடைக்குருமணித்திரளிழைத்ததெனவே
தொடையல்பறபலதொடுத்துதவுகிற்பள்சொரிநீர்
மடையடைக்குவள்குடப்புனல்விடுப்பள்மலர்போ
துடைமுதற்கிளர்தரக்களையுறக்களைகுவாள்.

(இ-ள்.) இடையிடையே சிரேஷ்டமான இரத்தினங்களை யிழைத்ததென்று சொல்லும்படி மாலைகள் பற்பலவற்றைத் தொடுத்துக் கொடுப்பாள்; விட்ட நீரின மடையையடைப்பாள்; குடத்தாலே நீர்விடுவாள்; மலரும் புஷ்பங்களையுடைய செடியும மரங்களும் விருத்தியாகும்படி மிகுதியாகக் களைகளைவாள். (எ-று.) (எ௪)

எரு. தொழிறனிற்றளர்தவத்தரசனைத்துணைவிழைல்
எழிலகொளுக்கமதெடுத்துடனியக்கிநுதல்வேர்
பொழிவதைத்தனியகற்றிமெய்புலாந்ததெனநீர
விழிதுளித்தரிதிருப்பெயர்விரிதருருகுவாள்.

(இ-ள்.) நந்தனவனத் தொழிலாலே தளரும் ஆழ்வாருக்கு விரைவோடு அழகிய விசிறியை யெடுத்து உடனே விசிறி, நெற்றியில் வேர் பொழி வதைத் தனியே நீக்கி, திருமேனி வாடியதேயென்று கண்களில் நீர்விட்டு அரியினது திருநாமத்தைச் சொல்லி உருகுவாள். (எ-று.) (எரு)

எசா. உண்டியந்தணனுவந்துதவுசேடமுகவா
வண்டியங்குமலர்மாதவிநிழற்கணமருவிக்
கண்டினந்தனிதுயின்றுபலகாலமொருவா
எண்டியங்கினள்முடிந்ததிலைவஞ்சினமென.

(இ-ள்.) தினமும் ஆழ்வார் சந்தோஷித்தளிக்கும் சேஷமான பிரசா தத்தை யுட்கொண்டு, வண்டுகள் சஞ்சரிக்கும் புஷ்பங்களையுடைய குருக் கத்தியின நிழலிற பொருந்தித் தனியாகக் கணதுயின்று, இபபடி பலகாலங் கழித்து நமது சபதம் முடியவில்லையே யெனறு மனங்கலங்கினள். (எ-று.)

எஎ. ஓதரும்படிவமாகியுயிராகியுணர்வாய்
வேதனும்பணியரங்கமுறைமெயககடவுளே
மாதவனசிறிதுமென்றனிடமாதாபுரியான்
நீதருந்தகைமையன்றியொருநிரமையுளதோ.

(இ-ள்.) சொல்வதற்கரிய உருவங்களாகப் பரிணமிக்கும் பிரகிருதி யாகியும் ஆன்மாக்களாகியும் ஆன்மாககளுக்குள்ள ஞானமாகியுமிருந்து பிரமதேவனும பணியும் திருவரங்கத்தில் நித்தியவாசஞ் செயயும் உண்மை யான தெயவமே! ஆழ்வார், சிறிதும் என்னிடத்து விருப்பஞ் செயகிறாரில்லை; இது நீ செய்யும் விதமேயன்றி வேறொரு தன்மையுண்டோ. (எ-று.) (எஎ)

எஅ. கருணைவைத்தெனையளித்தருளெனக்கரியகார்
வருணமெய்க்கடவுளைப்புவனமன்னுயிரெலாம்
அருணலததிகிரியசுதனையன்பினினையா
தருணமைக்கயல்விழிக்கொடிதளாந்துருகினாள்.

(இ-ள்.) கிருபைவைத்து என்னை ரக்ஷித்தருள்வாயாகவென்று கரிய மேகநிறமுள்ள திருமேனியையுடைய கடவுளானவனை, பூமியிற் பொருந் திய உயிர்களை யெல்லாம் ரக்ஷிக்கும் நலத்தையுடைய சக்கிராயுத மணிந்த அச்சுதனானவனை பக்தியோடு நினைந்து, மையிட்டு இளமையான கயல் போல் மிளிரும் கண்களையுடைய கொடிபோன்ற தேவதேவி தளர்ந்து உருகினாள். (எ-று.) (எஅ)

எகூ. அந்தவஞ்சிகனவிற்றனியரங்கநெடுமால்
வந்தரங்கையுறனின்றனதுவஞ்சினமியாம்
நந்தலின்றிநனியின்பமொடுநாளைமுடியத்
தந்தனம்வரமெனப்பரிவுதந்தொருவினான்.

(இ-ள்.) இப்படி பிரார்த்தித்த அந்தக் கொடிபோன்றவளது கனவில் ஒப்பற்ற திருவரங்கத்தி லெழுந்தருளிய பெருமான் தோன்றி, "துன்பமுறுதே; நாம் உனது சபதம் கெடுதலின்றி மிக்க இன்பத்தோடு நாளைததினமே முடிவு பெறும்படி வரங்கொடுத்தோம்" என்று தனதருளைத் தந்து நீங்கினன. (எ-று.) (எகூ)

அ0. அரவினிற்றுயிலமர்ந்தருளரங்கனிருதாள்
பரவிடுந்தளிரியற்றெரிவைபையுடவவேழ்
புரவியெந்திரமுகத்திணையில்பொற்பினுடனே
இரவியுங்கடலுதித்தனனிலங்குகுணபால்.

(இ-ள்.) ஆதிசேஷ சயநத்தில் அறிதுயிலமர்ந்தருளும் திருவரங்கநாதனது இரண்டு திருவடிகளை வணங்கும் தளிர்போன்ற சுபாவத்தையுடைய தேவதேவியின் துன்பங் கெடும்படி, ஏழு குதிரைகளையுடைய தேரினிடமாக பிரகாசமுடைய கிழக்குத்திக்கில் ஒப்பற்ற அழகோடு சூரியனுமுதயமாயினன். (எ-று.) (அ0)

அக. புரிதருந்துயிலுணர்ந்துகனவிற்புயலேநேர்
பெரியவன்றருவரததைநனிபேணியடையா
அரியகந்தநிறைசந்தமலராயனவெலாங்
கரியபைம்பொழிலிடைத்தனிகொணர்ந்துகரவா

(இ-ள்.) தான் செய்யும் நித்திரைநீங்கி, கனவினிடத்து மேகம்போன்ற பெருமானளித்த வரத்தை நனருகச் சிந்தித்து, இருண்ட பசுமையான நந்தனவனத்தி னிடத்தடைந்து, அருமையான வாசனைநிறைந்த அழகிய புஷ்பங்களை யெல்லாம் தனியாகக் கொண்டுவநது மறைத்துவைத்து, (எ-று.)

அஉ. மனமகிழ்ந்தரிபதத்துணைவழுத்திமயிலே
அனமடந்தையுமிருந்தனளரந்தையகலாள்
தனதுள்வஞ்சனைவிரிந்தெனவிருட்டதையவே
கனலியுங்குடதிசைக்கடல்கரந்தனனரோ.

(இ-ள்.) மனதுமகிழ்ந்து பெருமானது இரண்டு திருவடிகளைத் துதித்து, மயிலு+குச்சமானமான தேவதேவியுமிருந்தனள்; (ஆயினும) தனது வருத்தம் நீங்காதவளான தேவதேவியினது உள்ளத்திலுள்ள வஞ்சனை விரிந்ததுபோல இருள் பரவும்படி சூரியனும் மேற்றிசைக்கடலி லொளித்தனன். (எ-று.) (அஉ)

அ௩. சரிந்தகங்குலெனமீமிசையினிற்கனலுமுற்
றெரிந்தமின்களுருமுக்குரறெழித்தமழைகால்
சொரிந்தவந்தெதிர்தொடர்ந்தபலகாறுளைவொடே
விரிந்தவெள்ளமுழைதேர்கவரிமிக்கதுரலே.

(இ-ள்.) அவ்விரவு சரிந்ததென்று சொல்லும்படி ஆகாசத்தில் அக்கினியும பொருந்தி மின்னல்கள் எரிந்தன; இடியின் குரல்கள் ஆரவாரித்தன; மேகங்கள் மழை சொரிந்தன; வந்து எதிராகப் பலவான காற்றுக்கள் தொடர்ந்தன; விரைவோடு வெள்ளங்கள் விரிந்தன; வளையைத்தேடும் கவரிமானின் குரலோசை மிகுந்தன. (எ-று.) (அ௩)

அச. காரணன்றெரிவைசிந்தனைநலந்தருவதோர்
காரணந்தனிலெழுந்தமழைகால்பொழியவே
ஆரணந்தெரியவன்றனதகங்களிகொளா
சீரணிந்தமலர்நந்தனவனந்தெரிகுவான்

(இ-ள்.) நாராயணனான பெருமான் தேவதேவியின் எண்ணத்தை நன்மையாகத் தருவதாகிய ஓர்காரணத்தினாலே எழுந்த மேகங்கள் மழை பொழியவே, வேதார்த்தங்களை யுணர்ந்த ஆழ்வார் தமதுள்ளம் சந்தோஷங் கொண்டு, சிறப்பை யணிந்த மலர்களையுடைய நந்தனவனத்தைக் காணும் படி, (எ-று.) (அச)

அரு. மாளிகைப்புதவவாயிலினைவந்துதகையுந்
தாளினைத்தடைவிடுப்பவயறனகலுமுன
நீளிணர்க்குருகையின்கணெதிர்நின்றுமெலிவேய்த்
தோளியைப்பயிறடித்தணிதுலங்குசுடரால்

(இ-ள்.) தமது திருமாளிகையின் கதவையுடைய வாசலினிடத்து வந்து மூடியதாளை நீக்க, (அவ்விடத்தினின்று) புறம்போவதற்கு முன்னே, நீண்ட பூங்கொத்துக்களையுடைய குருக்கத்தியினிடத்துத் தமக்கெதிராக நின்று வருந்தும் மூங்கில் போன்ற தோள்களையுடைய தேவதேவியை, அப்போது உண்டாகும் மின்னலின் அழகிய பிரகாசத்தாலே (எ-று.) (அரு)

அசு. கண்டனன்கருணைவந்துமழைகால்வனவிடா
கொண்டல்நீநனையலவாவெனமலர்க்கொடியனாள்
விண்டவண்டளவெனத்தருணவெண்ணகைகொளா
அண்டர்நாயகனருட்டகையிதாகுமெனவே

(இ-ள்.) பார்த்தனர்; (உடனே) கருணைவந்து, மேகம் மழைபெய்வதொழியாது; நீ நனையாதே வாவென்றுரைக்க, மலர்களையுடைய கொடிபோன்ற தேவதேவி, பூத்த வளப்பமான முல்லையென்னும்படி வெண்மையான புன்னகை கொண்டு பெருமானது அருளின் பெருமை யிதுவாகுமென்று (துணிந்து) (எ-று.) (அசு)

அஎ. கோடரத்திடைமறைத்தவணிகோசிகமெடா
வாடரத்தகைமணித்திரள்வனைந்துவளமா
ஆடரப்புரையுமல்குலிடைமல்கவழகே
நீடரத்தவொளிர்கோசிகமுடுத்துநிலவ

(இ-ள்.) முன்பு, மரப்பொந்தில் மறைத்து வைத்த தனது அழகிய ஆடைகளை யெடுத்து, பிரகாசிக்கும்படி பெருமையுடைய இரத்தினாபரணங்களை யணிந்து, வளமாக ஆடும் பாம்புக்குச்சமானமான அல்குலும் இடையும் விளங்கும்படி அழகு விருத்தியாகும் தன்மையையுடைய ஆடையைப் பிரகாசிக்கும்படி பொருந்தவணிந்து, (எ-று.) (அஎ)

அஅ. அலர்முடித்தினியபாகடையெடுத்தனமெனா
நலமுறத்தனிநடந்தரியநாலுமறைதேர்
பலமனைத்துமுணர்மாமுனிவரன்பயிறரும்
பொலன்மிகுத்ததிருமாளிகையினுட்புகுதலும

(இ-ள்.) புஷ்பங்களை முடித்து, இனிய தாம்பூலத்தையெடுத்து, அன்னமென்று சொல்லும்படி நன்மையுண்டாகத் தனியே நடந்து, அருமையான நான்கு வேதங்களுஞ் சொல்லும் புருஷார்த்தங்களை யெல்லாமுணர்ந்த பெருமைபொருந்திய ஆழ்வார் எழுந்தருளியிருக்கும் அழகுமிகுந்த திருமாளிகையினுள்ளே பிரவேசித்தலும், (எ-று.) (௮௮)

௮௯. ஐயமுந்தஞராகத்திடைதரா நலியவே
பையவந்தவன்மலர்ப்பதமுறுந்திசைதனிற்
றையனின்றவடனைத்தவனிருந்தருள்கெனப்
பொய்யடைந்தனையபூவையுமிருந்தனளரோ.

(இ-ள்.) சந்தேசம், முறைபடும் வருத்தத்தைக் கொடுத்து நலிவுசெய்ய, மெல்லவந்து, அழகார் திருவடிகள் பொருந்திய திசையில் நின்ற தேவதேவியை ஆழ்வார் இருந்தருள்வாயாக என்ன, (சத்தியத்தினிடத்துப்) பொய்யடைந்தது போன்ற தேவதேவியு மிருந்தனள். (எ-று.) (௮௯)

வேறு.

௯0. வாண்மணிக்கடகச்செந்தாமரைக்கையான்மறைவலாளன்
றாண்மலர்த்துணைகண்மெல்லத்தழீயிருந்தனத்திற்சார்த்தி
நீண்மதக்கரிக்கைபோலுங்கவானமிசையமைத்துநீல
வேண்மலர்க்கணைதோயநெஞ்சத்தைவராவிளம்பலுற்றாள்.

(இ-ள்.) ஒளிபொருந்திய மணிகளிழைத்த கடகம் பூண்ட செந்தாமரைபோன்ற கையினாலே வேதங்களையுணர்ந்த ஆழ்வாரது இரண்டு திருவடித்தாமரைகளை மெதுவாகத் தழுவி, பெரிய தனத்தினிடத்துச் சாரவைத்து, மதத்தையுடைய யானையின் நீண்ட துதிக்கையை யொத்திருக்கும் தொடையின்மேலிருத்தி, நீலநிறத்தையுடைய மன்மதனது பாணங்கள் படிந்ததுபோல வருந்திச் சொல்லத் தொடங்கினள். (எ-று.) (௯0)

௯௧. நந்தனவனத்தையோம்புந்தொழிலினானாளுநாளும்
நொந்தனதிருத்தாடீண்டுந்தவப்பயனுவலற்பாற்றே
வந்தனனடிமைகொண்டாய்பவமகல்வரமும்வாய்ந்தேன்
எந்தநற்றவமுற்செய்தேனுனதருட்கிலக்கமானேன்.

(இ-ள்.) நந்தனவனத்தைப் பாதுகாக்குந் தொழிலினாலே நாளுநாளும் நொந்தனவாகிய திருவடிகளை நான் தீண்டப்பெறுந் தவப்பயன் சொல்லக்கூடியதோ? (அடியேன், தேவரீர் சமுகத்துக்கு) வந்தேன்; அடிமை கொண்டீர்; (என்) பிறவிகெடும் வரமும் பெற்றேன்; எந்தத் தவத்தை முற்காலத்திற் செய்தேனோ? (இப்போது) உமது அருளுக்கு இலக்காயினேன். (எ-று.) (௯௧)

௯௨. ஈறிலாவிபவங்கேளிரினமெலாமிகந்தியாண்டும்
மாறிலாநினதுபூந்தாமரையடிமறைபுக்கேனால்
கூறிலாவுயிருமாவிக்கொழுநனுங்குலத்தின்றேவும்
வேறியாரினிநீயல்லாலரிபதம்பெறினும்வேண்டேன்.

(இ-ள்.) முடிவில்லாத விபவமும் பந்துக்களினமும் விட்டு எப்போதைக்கும் மாறுதலில்லாத தேவரீரது திருவடித்தாமரைகளில் அடைக்கலம் புகுந்தேன்; பிரியாத உயிரும் உயிர்போன்ற கணவனும் குலதெய்வமும்

தேவரீரேயல்லாது வேறியாவர்? இனி நான் பெருமானது பதவியைப் பெற்றாலும் வேண்டேன். (எ-று.) (௬உ)

௬௩. எனதுமுற்றவப்பேறுன்றோளிணையுமார்பகமும்யாணர்க்
கனகநற்பணித்தார்க்கொங்கைத்துணைகளுங்கலந்தொன்றாதற்
குனதுளத்தருளகாணேனென்றுருகுமவ்வுரையினாலும்
வனமலர்க்கணைவேளாலுமனமிகமருண்டான்மன்றோ.

(இ-ள்.) எனது முற்காலத்தின் தவப்பலனாக உமது இரண்டு தோள்களும் மார்பும் அழகிய பொன்னாற்செய்த நல்ல ஆபரணங்களோடு மாலைகளை யணிந்த முலைகளிரண்டும் சேர்ந்து ஒன்றாவதற்குத் தேவரீரது திருவுள்ளத்தில் கிருபை வருவதைக் காணேன் என்று உருகும் அந்தச் சொல்லினாலும் அழகிய மலர்ப்பாணங்களையுடைய மன்மதனாலும் (ஆழ்வார்) மிகவும் மன மருண்டனர். (எ-று.) (௬௩)

௬௪. மருமலர்க்குழலிப்பான்மைமொழிகளான்மருண்டகாலை
உருமிடித்துரறக்கைகாலுடல்பனித்துயிர்த்துசால
வெருவலுற்றனள்போல்வேதவிமலன்மேல்விரைவின்வீழாப்
பெருமுலைத்தடங்கண்மார்பிற்புதைதரப்பிணித்தாள்கையால்.

(இ-ள்.) வாசனையுடைய மலர்களை யணிந்த கூந்தலையுடைய தேவதேவியின் இந்த நல்ல சொற்களாலே (ஆழ்வார்) மருண்டபோது, இடியிடித்துக் கர்ச்சிக்கவே, கையும் காலும் உடலும் நடுங்கிப் பெருமூச்சு விட்டு மிகப்பயந்தவள்போல் வேதங்களை யுணர்ந்த பரிசுத்தரான ஆழ்வார்மீது விரைவாக விழுந்து பெரிய முலைத்தடங்கள் (ஆழ்வார்) திருமார்பிற் புதையும்படி கையால் கட்டிக்கொண்டனள். (எ-று.) (௬௪)

௬௫. கலையெலாமுணர்ந்தபான்மைமுனிவரன்கருத்தையோர்வாள்
முலையெலாமுரத்துண்மூழ்கமுயங்கியும்முனிவுகாணாள்
தொலைவிலாவுவகைபூப்பக்கருப்புரந்துதைந்தபாகோ
டிலைதவாதளிப்பக்கொண்டானிறையருட்கிவனென்செய்வான்.

(இ-ள்.) சாஸ்திரங்களை யெல்லாம் உணர்ந்த நற்குணத்தையுடைய ஆழ்வாரது கருத்தை யறியுமவளாய்த் தனது தனங்களெல்லாம் அவர் மார்பிலழுந்தக் கட்டிக்கொண்டும் அவரிடத்துக் கோபங் காணாதவளாகிக் கெடாத சந்தோஷமதிகரிக்கக் கருப்பூரம் கலந்த தாம்பூலத்தைக் குறையாது கொடுக்க (ஆழ்வார்) பெற்றுக் கொண்டனர்; எம்பெருமானது திருவருளுக்கு இவ்வாழ்வார் யாது செயவார்? (எ-று.) (௬௫)

௬௬. மணியிதழமுதம்பூந்தேன்மதுகரநுகர்ந்தாங்குண்ணாப்
பணிவனமுலையுந்தோளுமார்பமும்பயிலப்புல்லித்
தணிவருமுவகைவாரிமூழ்கினன்சலதிமீதே
அணிமணிப்பசும்பொற்றிண்டேரருக்கனுமுதயஞ்செய்தான்.

(இ-ள்.) புஷ்பத்திலுள்ள தேனை வண்டுண்ணுவதைப் போல் அழகிய இதழமிர்தத்தை யுண்டு, ஆபரணங்களணிந்த அழகிய தனமும் தோளும் மார்பும் சேரவணைத்துத் தணியாத சந்தோஷ சமுத்திரத்தில் (ஆழ்வார்) முழுகினர்; (அப்போது) சமுத்திரத்தின்மீது அழகிய மணிமயமாய்ப் பசும் பொன்னாற்செய்த திண்ணிய தேரின்மீது சூரியனு முதயமாயினன். (எ-று.)

௯௭. இம்மரபலகிளுளவ்விலங்கிழையின்பந்துய்க்கும்
செம்மறைமுனிவன்றன்னைத்தெருட்டினள்சிந்தைவேருய்
மைம்மலர்விழியார்பின்போம்பாண்டகன்மதலைமான
அம்மடவரல்பின்ருவெள்ளறையவளகத்தைச்சார்ந்தான்.

(இ-ள்.) இவ்விதமாகக் கணக்கற்ற நாட்கள் பிரகாசிக்கும் ஆபரணங்களணிந்த அந்த தேவதேவியின் இன்பத்தை யனுபவிக்கும் செம்மையான வேதங்களையுணர்ந்த ஆழ்வாரை (அவள்) மனம் வேருக மாற்றினள்; (ஆழ்வாரும்) மையிட்ட மலர்போனற கண்களையுடைய தாசிகள் பின்னே சென்ற கலைக்கோட்டு முனிவர்போல அத்தேவதேவியின் பின் திருவெள்ளறையிலுள்ள அவளது வீட்டை யடைந்தனர். (எ-று.) (௯௭).

௯௮. ஆவியேயனையபாங்கியெதிர்நடந்தடியின்வீழா
ஓவியமனையாய்பார்மீதுனக்கிணையொருவருண்டோ
தாவிலாத்தவத்திளுனைச்சபதத்தின்முறையேதந்தாய்
காவியங்கண்ணூர்யாருமியானுமுன்னடிமைகண்டாய்

(இ-ள்.) உயிர்போன்ற பாங்கி, எதிராக நடந்து வந்து, தேவதேவியின் பாதத்தில் வீழ்ந்து, சித்திரப்பதுமை யொத்தவளே! பூமியின்மீது உனக்குச் சமானமாவாரொருவருண்டோ? கெடுதலில்லாத தவத்தையுடைய ஆழ்வாரை (நீ செய்த) பிரதிக்கினையின்படியே கொண்டுவந்தாய; நீலோற்பலம் போன்ற கண்களையுடைய பெண்கள் யாவரும் நானும் உனக்கு அடிமையே கண்டாய (எ-று.) (௯௮)

௯௯. என்றவப்பாங்கிதன்னைத்தழீஇமனையெய்திச்சின்னுள்
முன்றவப்பயனுல்வேதமுனியொடுமுயங்குங்காலை
இன்றலர்கொடுமெய்ப்பாலினிசைநரைசிறுகட்பேழ்வாய்
கன்றழற்பொருவுதீமைக்கண்டகிப்பெயர்மோய்காணு

(இ-ள்.) என்று சொன்ன அந்தப் பாங்கியைத் தழுவிக்கொண்டு மனையையடைந்து, சிலகாலம் முன்செய்த தவப்பயனுலே வேதங்களை யுணர்ந்த மநநசீலரான ஆழ்வாரோடு இன்பம் அநுபவித்துக் கொண்டிருக்கும்போது, இல்லாதனவாகிய பழிமொழிகளைத் தூற்றிக்கொண்டு சரீரத்தில் பாலைப் போல (வெண்மையாய்) உள்ள நரையும் சிறிய கண்களும் பெரிய வாயும் கன்றும் அக்கினிபோன்ற தீமையுமுடைய விடகண்டகியென்னும் பெயரையுடைய தேவதேவியின் தாயானவள் கண்டு, (எ-று.) (௯௯)

௧00. பொறுக்கலாவுளத்தளீன்றபுதல்வியைச்சுளித்துநோக்கி
வெறுக்கைநீகுயிற்றினல்லால்வேறுமோர்விபவமுண்டோ
மறுக்கலாய்முனிவன்றன்னையெனக்கொடுவசனம்பேசி
ஒறுக்கலாத்தளர்ந்தாளுள்ளமவளுமற்றவன்பாலுற்ருள்.

(இ-ள்.) பொறுக்காத உள்ளத்தையுடையவளாகித் தான்பெற்ற மகளாகிய தேவதேவியைக் கோபித்துப் பார்த்து, நீ பொன்னைச் சம்பாதிக்காவிடில் பெருமை வேறென்றுண்டோ ? (நீயோ) ஆழ்வாரை மறுக்கமாட்டாயென்று கொடிய சொல்லைச் சொல்லத் (தேவதேவி) அச்சொல்லை மறுக்காமல் மனந்தளர்ந்தனள், கண்டகியும் ஆழ்வாரிடத்தே யடைந்து, (எ-று.) ()

கOக. அருந்திறனிருபர்நாளுமலகிலாயிரம்பொன்னன்பால்
தருந்திறைகவர்மான்சிந்தைதளர்ந்துநின்வயத்தளாக
மருந்தினையளித்தாய்நின்னால்வருவதோர்பயன்மற்றுண்டோ
இருந்திடல்போதியென்னாப்புறப்படுத்திடுக்கண்செய்தாள்.

(இ-ள்.) அரிய வலிமையையுடைய அரசர்கள் பலநாட்களிலும் ஆயிரம் பொன்னை அன்போடு கொடுக்கும் திறையைப் பெறும் எனது மான்போன்ற பெண் மனந்தளர்ந்து நின்வசமாகும்படி மருந்தைக்கொடுத்தாய்; உன்னாலே வருவதாகிய ஒருபயன் வேறுண்டோ? இருக்கவேண்டாம்; போய்விடு என்று வெளிப்படுத்தி வருத்தமுண்டாக்கினள். (எ-று.) (கOக)

கOஉ. புறத்தொர்வேதிகைசார்ந்தார்வப்புணரியுண்மூழ்கிப்புன்கண்
உறத்தளர்ந்தரங்கத்தெந்தாயுனதருட்டகவிதேயோ
நிறத்தழற்செக்கர்வானநிறைநிலாவிடத்தினீர்மை
மறத்தடலனங்கன்கூற்றம்வடிவிலாவாடைபாசம்

(இ-ள்.) (ஆழ்வார்) புறமான வேறொரு திண்ணையையடைந்து, ஆசையாகிய சமுத்திரத்தில் முழுகி, வருத்தமுண்டாகத் தளர்ந்து, திருவரங்கத்திலெழுந்தருளிய எனக்குக் காரணபூதனே! உனது அருட் பெருமை இதுதானோ? நிறத்தையுடைய அக்கினிமயமான செவ்வானததில் நிறைந்த சந்திரன் விஷத்தின் றன்மையாகவும், கோபித்து யுத்தஞ்செய்யும் மன்மதன் யமனாகவும், வடிவில்லாத வாடைக்காற்று பாசமாகவும், (எ-று.) (கOஉ)

கOங. ஆயபான்மையினாற்சாலவடியனேன்வருந்தக்கங்குல்
மூயதின்றெனையாள்கென்றான்முனிவரன்முளரிச்செங்கண்
நாயகன்வறிதேகேளாநகைத்தலுநளினப்பாவை
மாயநீநகைத்ததகேதுவேதெனவள்ளல்சொல்வான்.

(இ-ள்.) ஆகியதன்மையாலே அடியேன் மிகவும் வருந்தும்படி இருள் மூடியது; இப்பொழுது என்னையாள்வாயாக வென்றன ராழ்வார். தாமரையைப் போன்ற சிவந்த திருக்கண்களையுடைய பெருமான இச்சிறுமையைக் கேட்டு நகைத்தலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பெரியபிராட்டியார், ஆச்சரிய குணசேஷ்டிதங்களையுடையீர்! நீர் நகைப்பதற்குக் காரணம் யாதென்னப் பெருமான் அருளிச் செய்வானாயினன். (எ-று) (கOங)

கOச. தருமலர்த்துடவையோம்புந்தகைமையோன்றவறிலாதான்
அருமறைதனினுந்தூயனன்பர்யாவரினுமன்பன்
பொருவருநமதுமாயைப்புணர்ப்பினாற்பொதுமாதின்பால்
தெருமருமுளத்தானம்மைநினைத்தலுஞ்சிரித்தேமென்றான்.

(இ-ள்.) மரமும் மலருமுடைய நந்தனவனத்தைக் காக்கும் பெருமையுடையவன், குற்றமில்லாதவன், அரிய வேதங்களினும் பரிசுத்தமானவன், அன்பர்கள் யாவரினும் அன்பன், (ஆகிய ஆழ்வான்) ஒப்பற்ற நமது மாயா சம்பந்தத்தினால் வேசியினிடத்துக் கலங்கும் உள்ளத்தையுடையவனாய் நம்மை நினைத்ததனால் சிரித்தோம் என்றருளினன். (எ-று) (கOச)

கOரு. கேழ்கிளாவனசமாதுங்கேசவநினதுமாயை
காழ்விடமிடற்றினானுங்கமலனுங்கடக்கலாற்றார்

சூழ்வினைபரமபாகவதர்களைத்தொடரலாமோ
ஆழ்வினையதனைநீகியவனிகருதியவனையென்றாள்.

(இ-ள்.) நிறமும் மணமுமுள்ள தாமரைமலரி லெழுந்தருளிய பெரிய பிராட்டியும், ஸ்வாமீ! உமது மாயையைக் கொடிய விஷத்தைக் கொண்ட கண்டத்தையுடைய சிவனும் தாமரையிலிருக்கும் பிரமனும் கடக்கமாட்டார்கள்; ஆயினும் சூழ்ந்த அந்த மாயை, பரமபாகவதர்களைத் தொடரலாமோ? (ஆழ்வார்) வருந்துவதை நீக்கி அவரை ரக்ஷிப்பீரென்றனர். (எ-று.)

கOசு. மையணிமிடற்றுக்கூர்வாயெயிற்றுவாய்வயங்குதுத்திப்
பையரவணையின்மேற்கண்படைபுரிபரமன்பைமபூந்
தையலையருளினோக்கிபபவளவாய்த்தரளமூரல்
ஐயநுண்ணிடையாய்நீயின்றறைந்தவாறயாவலென்று

(இ-ள்.) கருமையுடைய கண்டத்தையும் கூரிய பற்களையுடைய வாயையும் விளங்கும் படப்பொறியையும் படத்தையுமுடைய ஆதிசேஷசயநத்தின் மீது அறிதுயிலமரும் பெருமான், பசுமையான தாமரைப்பூவி லெழுந்தருளிய பெரிய பிராட்டியாரைக் கிருபையோடு பார்த்து, பவளம் போன்ற வாயையும் முத்துப்போன்ற பற்களையும் அழகிய நுண்ணிய இடையையுமுடையவளே! நீ யிப்போது சொன்னபடி செயவேனென்று, (எ-று.) ()

கOஎ. தொழுந்தகைநிருதாகோமான்றருமணிச்சுடர்பொற்கிண்ணம்
எழுந்தலர்க்கரத்தினேந்திக்கங்குலினிருதாள்பார்மீ
தழுந்தவோர்பிரமசாரியாகிவெள்ளறைவாழார்வச
செழுந்தகைகணிகைதேவதேவிசேர்பினிதிற்சேர்ந்தான்.

(இ-ள்) எழுந்து, தொழுதகூடிய பெருமையுடைய விபீஷணாழ்வான் சமர்ப்பித்த அழகும் பிரகாசமுமுள்ள பொன் வட்டிலை மலர்போன்ற திருக்கைகளிலேந்தி, அவ்விரவில் இரண்டு திருவடிகளும் பூமியின்மீது படிய ஒரு பிரமசாரிவடிவமாகி, திருவெள்ளறையில் வாழும் அன்பும் செழுமையான அழகுமுடையவளாய, தாசியான தேவதேவியினிடத்து இனிதாக வடைந்தனன. (எ-று.) (கOஎ)

கOஅ. அயன்மறையமரர்காணுவடிமலரள்கமாகும்
புயலெழிற்கணிகைவாயிலபொருந்தமுபபுரமுற்செற்றோன்
மயலிரவொழித்தகையான்புதவினைப்புடைத்துமையார
கயல்விழித்தேவதேவிதிறக்குதிகபாடமென்றான்.

(இ-ள்.) கூந்தலாகிய மேகத்தையுடைய அழகிய (அந்தத்) தாசியின் வாசலில் பிரமனும் வேதங்களும் தேவர்களும் காணாத திருவடித் தாமரைகள் பொருந்தும்படி (நின்று), முற்காலத்தில் முப்புரங்களை வென்ற சிவபிரானுக்கு மயக்கத்தைத்தரும் இரத்தலை நீக்கிய திருக்கைகளாலே கதவைப்புடைத்து, மையிட்டிருக்கும் கயல்போன்ற கண்களையுடைய தேவதேவியே! கதவைத் திறப்பாயாக என்றனன். (எ-று.) (கOஅ)

கOகூ. மேவருநீயாரொன்னவிப்பிரநாரணன்றன்
ஏவலாணுமக்குச்சாலவிருநிதிகொணர்ந்தேனென்றான்
ஆவலானவளையின்றாள்கடிதுவந்தணிகொள்வாயிற்
காவலாங்கதவைநீகியழைத்தனள்காதலோடும்.

(இ-ள்.) இங்கு வந்த நீ யாரென்ன, (பிரமசாரியும்) நான் விப்பிர நாராயணரது சேவகன, உங்களுக்குப் பெரிய நிதியைக் கொண்டு வந்தே னென்றனன். தேவதேவியைப் பெற்ற விடகண்டகியும் ஆசையோடு விரைந்துவந்து அழகுடைய வாசற்காவலாயிருக்கும் கதவைத் திறந்து பிரீதியோ டழைத்தனள். (எ-று.) (கoக)

ககo. நகுமணிசசுவணக்கிண்ணத்தொடுமவண்மனையுறுதன் புகுதலுங்கண்டுபூந்தாளபணிந்தனளபுகழ்ந்தியாணர் மிகுபரியங்கத்தையவிருகவெனகுரவன்மேவந் தகுமிதின்மிசையான்கையாற்றீண்டினுந்தவறுமென்று

(இ-ள்.) பிரகாசிக்கும் மணிமயமான பொனவட்டிலோடும் அவள் மனைக்குள் பெருமான் பிரவேசித்தலும் கண்டு, அவனது அழகிய திருவடி களைப் பணிந்து புகழ்நது, ஐயா! அழகுமிகுந்த கட்டிலில் இருப்பாயாக வென்றுரைக்க, (பிரமசாரியும்) இதினமீது (எனது) ஆசிரியரான விப்பிரநா ராயணர் எழுந்தருளத்தகும்; (இதனை நான்) கையினுற் றீண்டினுங் குற்ற மாகு மெனறுரைத்து, (எ-று) (ககo)

ககக. இருந்தயன்மணிப்பொற்கிண்ணமினிதினீந்தீகையாளர் தருங்கலைமணிநும்வேட்கையாவையுந்தருவலயானே திருந்துமெங்குரவன்வேண்டிறபொருளரிதன்றுதேடற் கருந்தகையரங்கத்தீசனபொருளெலாமவனவென்றான்.

(இ-ள்.) வேறோரிடத்தி லிருந்து, மணிமயமான பொன்வட்டிலை இனி தாகக் கொடுத்து, தார்மிகர்கள கொடுக்கும் வஸ்திரத்தையும் மணிகளையும் (இன்னும்) உமது விருப்ப மெவற்றையும் நானே கொடுப்பன்; திருத் தமுடைய எமது ஆசிரியா வேண்டுவராயின் பொருள் அரிதன்று; தே டுவதற்கரிய பெருமையையுடைய திருவரங்கப் பெருமானது செல்வமெல் லாம் அவருடையனவே யென்றனன். (எ-று.) (ககக)

ககஉ. பகருநம்பெருமான்பாதபங்கயம்பரிவிற்பல்கால் அகமகிழ்வுடனேதேவதேவித்தாய்வணங்கியைய புகரிலாரியனுலவேதப்புனிதநீர்ப்புணரிசூழுந சகதலத்துயர்நின்கேண்மைபடைத்தனந்தவமென்றின்றால்.

(இ-ள்.) யாவரும் புகழ்ந்து சொல்லும் நம்பெருமானாகிய பிரமசாரி யின் திருவடித் தாமரைகளைப் பிரீதியோடும் அகமகிழ்ச்சியோடும தேவ தேவியின் தாயாகிய கண்டகியானவள் பலமுறையும் வணங்கி, ஐயா! வே தங்களை யுணர்ந்த பரிசுத்தரே! நீரையுடைய சமுத்திரம் சூழ்ந்த பூமியினிட த்து உயர்ந்த உமது நட்பைக் குற்றமில்லாத (உமது) ஆசிரியராலே யடைந் தோம்; ஒரு குற்றமு மில்லை. (எ-று.) (ககஉ)

ககங. கனகமுமணியும்பூணுங்கலைகளுங்கருணைநீங்கா அனகமாதவனிற்சாலவரியவோவருளிலர்போற் சினமடவரல்பாற்செய்யாத்தணந்தனர்தெரிவைதானுந் தனதவாவினிற்கண்டுஞ்சாளழைத்திவண்டருதியென்றாள்.

(இ-ள்.) பொன்னும் மணியும் ஆபரணமும் ஆடைகளும், கருணைவிட்டு நீங்காத பரிசுத்தராகிய விப்பிரநாராயணரைவிட மிக அருமையாகுமோ? (அவர்) கிருபையில்லாதவர் போல எனபெண்ணினிடத்துக் கோபங்கொண்டு விட்டு நீங்கினர்; என்பெண்ணும் தனது ஆசையினாலே உறக்கமில்லாதவளாயினள்; ஆகையால் (அவரை) யழைத்து இவ்விடத்துக்குக் கொண்டுவருவீராக வென்றனள். (எ-று.) (௧௧௩)

௧௧௪. அயற்றுயிலந்தணனென்றனையடைந்தரங்கத்தீசன்
புயற்கருங்குழலாளின்பால்விடுத்தனளபுலம்பிச்சாலத்
துயர்க்கடலழுந்தியாதுந்துய்த்திலள்வருகியென்றுக்
கயற்கணாளகத்துட்சேர்த்திககலந்தனன்கனகக்கோயில்.

(இ-ள்.) திருவரங்கநாதன், புறத்தில் உறங்கும் விப்பிரநாராயணரை யடைந்து, மேகம்போன்ற கரிய கூந்தலையுடைய தேவதேவி (என்னை) உம்மிடம் விடுத்தனள்; புலம்பி மிகவும் துக்கசாகரத்தி லழுந்தி ஒன்றும் புசித்தாளில்லை; வருவீராகவென்று (ஆழ்வாரை) கயலைப்போன்ற கண்களை யுடைய அவளது அகத்தில் சேர்த்துவிட்டுப் பொன்மயமான திருக்கோயிலை யடைந்தனன். (எ-று.) (௧௧௪)

௧௧௫. அந்தணன்மணிபபூட்கொங்கையணங்கினையணையின்மீதச
சந்தனப்புயமுமார்பும்பொருந்துறத்தழுவித்தாமக்
கந்தபாரளகஞ்சோரமுயங்கினன்கதிரோன்கீழ்பால
பைந்தடங்கடலிறமுன்றுமுன்னமேபரமன்கோவில்

(இ-ள்.) விப்பிரநாராயணர் இரத்தினாபரணங்களை யணிந்த தனங்களையுடைய தேவதேவியைப் படுக்கையின்மீது சிறந்த சந்தனமணிந்த புயங்களும் மார்பும் பொருந்தும்படி தழுவி, மலர்மாலைகளை யணிந்து வாசனையையுடைய அளகபாரஞ் சோரும்படி அநுபவித்தனர். சூரியன கீழ்த்திக்கில் நல்லதும் விசாலமுமான கடலில் உதயமாகு முன்னமே, பெருமானது திருக்கோவிலில் (எ-று) (௧௧௫)

௧௧௬. ஆர்த்தனசங்கம்பேரியதிர்ந்தனவலகில்காளம்
கூர்த்தனவோதைசாலக்குமுறினகுடிலககொம்பு
சீர்த்தனபடகந்தக்கைதிண்டிமஞ்சிலைத்தயாவும்
போர்த்தனவொலியாரேழுபுணரிசூழ்புவனமெங்கும்.

(இ-ள்.) சங்குகள் ஒலித்தன; பேரிகைகள் அதிர்ந்தன; கணக்கற்ற எக்காளங்களின் ஓசை மிகுந்தன; கோணைக்கொம்புகள் மிகவும் குமுறின; தம்பட்டமும் பறைகளும் தாள வொத்தோடொத்து நடந்தன; பெரும்பறை சப்தித்தன. இவ்வொலிகள் எல்லாம் ஒலியையுடைய ஏழு சமுத்திரமுஞ் சூழ்ந்த உலகமெங்கும் போர்த்தன. (எ-று.) (௧௧௬)

௧௧௭. தோமில்பாகவதரோகாங்கியர்வயிணவர்கள்சோதி
நேமிமால்ரங்கக்கோயிலணிதிருக்காப்புநீக்கி
பூமிவானிறைஞ்சும்வாயிற்புகுந்துபொற்கிண்ணங்காணார்
நாமியாவருமுற்றேங்கிநாடினார்கரிற்காணார்.

(இ-ள்.) குற்றமற்ற பாகவதர்களும் ஏகாங்கியரும் வைஷ்ணவர்களும், பிரகாசமுடைய சக்ராயுதனை எம்பெருமானெழுந்தருளிய திருவரங்கத் திருக்கோயிலிலுள்ள அழகிய திருக்காப்பை நீக்கிப், பூமியிலுள்ளவர்களும் தேவலோகத்திலுள்ளவர்களும் வணங்கும் துவாரத்திற் பிரவேசித்துப், பொன்வட்டிலைக் காணுதவர்களாய், யாவரும் அச்சமுற் றேங்கி நகரத்தில் விசாரித்துக் காணுதவர்களாயினர். (எ-று.) (கசஎ)

கசஅ. முடிபுனைநிருபன்றன்பாரத்தலத்துளோரொவருமொய்த்தார்
நெடியமான்மணிப்பொற்கிண்ணநகாண்கிலாநீர்மைகூறிக்
கடிதுநீதருதியென்றேகாங்கியர்கதித்தபொற்பூட்
பிடியருண்மாரிவாங்கிப்பிறங்குகந்தரங்கள்கொய்தார்.

(இ-ள்) முடியையணிந்த அரசனது நகரத்திலுள்ளவர்கள் யாவரும் வந்து மொய்த்தார்கள்; பெருமானிடத்தே ஏகாங்கியர் அழகிய பொன்வட்டில் காணுத விதத்தைச் சொல்லி அதனை விரைவில் தருவாயாகவென்று பொருந்திய பொன் பூண் கட்டிய பிடியையுடைய அரிவாளை யெடுத்து விளங்குங் கழுத்தை யறுத்துக்கொண்டார்கள். (எ-று,) (கசஅ)

அருண்மாரி என்பது-அரிவாளுக்கு இடுகுறிப் பெயராகச் சம்பிரதாயத்தில் இக்காலத்தும வழங்கும் சொல். திருமங்கையாழ்வார், கோயிலில் திருமதில் கட்டுவிக்கும் போது தொண்டரடிப்பொடி யாழ்வார் திருமாளிகை யெதிர்ப்படவே, திருவரங்கத் தெம்பெருமானுக்குத் தாங் கட்டுவிக்கும் திருமதிலினும் தொண்டரடிப்பொடி யாழ்வாரது மங்களாசாசனமே சிறந்த காவலெனத் திருவுள்ளங்கொண்டு திருமதிலை ஒதுக்கிக் கட்டுவித்தனராம். அதனை யறிந்த தொண்டரடிப்பொடி யாழ்வார் தமது திருநந்தனவன கைங்கரியத்துக்குரிய ஓர் கருவியாகிய அரிவாளுக்கு "அருண்மாரி" எனனும் திருமங்கை யாழ்வாரது திருநாமத்தை யிட்டனரென ப் பெரியார் பணிப்பர். (கசஅ)

கசக. மறமுருத்தனையவீரவயிணவர்மணிப்பொற்சோதி
புறமுருத்தொளிரும்பல்கோபுரந்தொறுமிவர்தலுற்றூர்
அறமுருத்தனவேசிங்காதனத்திருந்தழிவில்ஞானத
திறமுரைத்துலகங்காககுஞ்சிட்டருஞசினமேற்கொண்டார்.

(இ-ள்.) கோபம் முளைத்தாற் போன்ற வீரவைஷ்ணவர்கள் மணிமயமாயப் பொன்னொளிகொண்டு புறத்தே தோன்றி விளங்கும் பல கோபுரங்கள் தோறும் ஏறத் தொடங்கினார்கள்; தர்மம் உருக்கொண்டது போலவே சிங்காசனத்தில் எழுந்தருளியிருந்து அழியாத ஞானவிஷயங்களை யருளிச்செயது உலகிலுள்ளாரைக் காக்கும் சிஷ்டஜனங்களும் கோபம் மேற்கொண்டார்கள். (எ-று.) (கசக)

வீரவைஷ்ணவர்கள், கோபுரங்களின் மீதேறினார்களென்றது அவைகளினின்று விழுந்து உயிர் நீத்தற்கென்க. இவர் ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்திரத்தில் விதந்தெடுத் தோதப்பட்ட பிள்ளை திருநறையூரரையரைப் போல் அத்தியவஸாயமுடையாரென்க. இவ்வரையர்தாம், பகவத் சந்நிதியில் விமுகரிட்ட தீப்பற்றினவாறே, குடும்பத்துடன் சந்நிதிக்குட் செல்ல, அவரது திருமகளார், "அப்பா சரீரமெரிகிறது" என்ன, அரையர் "குழந்தாய் விரஜாநதியிற் குளிர நீராடி பரமபதத்தில் நிரதிசயப்பேரின்ப

மெய்துவோம்; ஒரு க்ஷணகாலம் பொறுத்திரு" எனக் கூறி எம்பெருமான் திருமேனியில் நெறிப்புப்படாதபடி அணைத்திருந்து குடும்பத்துடன் திருநாட்டுக் கெழுந்தருளினராம். இப்பெரியோர், எம்பெருமானை சேதநோஜ்ஜீவனார்த்தமாகப் பரிக்கிரகித்திருக்கும் அர்ச்சாவதாரத்தில் திரவிய நிரூபணம் பண்ணுதே ஈசுவரத்வபுத்திபண்ணி, அவ்விருப்பு நித்யமாயச் செல்லவேண்டுமென்று திருப்பல்லாண்டு பாடி மங்களாசாசனம் பண்ணுமவராகையால், அவ்வர்ச்சாவதார விஷயத்தில் ஒரு அவத்யம் நேருமாயின் தரித்திருக்கப் பெறுமை அவரது பரமபக்தியின் பரிபாகமிருந்தபடி யென்க.

கஉ0. நடுங்கினனரசும்பஞ்சராத்திரநலங்கொணூல்சொற்
றிடுந்தகைநவிதோடதாராதனைபுரிமறையோர்க்கூவி
விடுஞ்சுடர்மணித்திருப்பெட்டகத்திலுண்மேவுகிண்ணங்
தொடுந்தகையினர்யார்நீரேகொடுமெனுச்சுளிந்துசொற்றான்.

(இ-ள்.) அரசனும் நடுங்கிப, பாஞ்சராத்திர மென்னும் நன்மையைக் கொண்ட சாஸ்திரம் சொல்லும் பிரகாரங்களை நனகறிந்து திருவாராதனை செய்யும் வேதியர்களை யழைத்து, பிரகாசமுடைய அழகிய திருக்கோயிலில் பொருந்திய பொன்வட்டிலைத் தொடுவோர்கள் வேறியார்? அதனை நீங்களே கொடுங்களென்று கோபித்துச் சொல்லினான். (எ-று.) (கஉ0)

வேறு.

கஉக. ஆயகாலையிலிற சஞ்சலவாணி தேவதேவிக்கிய லடியாள, நாயகனரங்கத் தெம்பிரானருளாற கோபுரவாயலி னண்ணித, தூயபாகவதா தலத்துளோரொவருந் துயருறகக்கண்டுள மிரங்கா, நேயவேதியனோ கிண்ணமறறெமபால நெருனல்வந்தளித்தன னென்றுள.

(இ-ள்.) அந்தச் சமயத்தில் தேவதேவிக்கு அடியாளாகிய சஞ்சலவாணி யென்பவள், எல்லாவுலகத்துக்கும் நாயகனுகிய திருவரங்கத்தெம்பிரானருளாலே திருக்கோயிற் கோபுரவாசலை யடைந்து, பரிசுத்தரான பாகவதர்களும் இன்னும் அவ்விடத்திலுள்ளவர்களெவர்களும் வருத்தமடையப் பார்த்து மனமிரங்கி, நேசத்தையுடைய ஒரு வேதியன், வட்டிலொன்றை எம்மிடத்துக்கு நேற்று வந்து கொடுத்தனனென்றனள். (எ-று.) (கஉக)

கஉஉ. கேட்டகாவலாளரசன்முன்விடுப்ப வவளுமம்முறையவண் கிளத்த, வாட்டடங்கண்ணுளுடனும்வெள்ளறையில் வந்தனர்வனமணி வளாளங, காட்டலுந்தவிசி னிருந்தமாதவனைக் கன்னிதன்னெடுமணிக் கயிற்றாற், றேட்டலஞ்சுருங்க விசித்தனர் வைதார் பிடித்தனர்நடந்தனர் தொடர்ந்தே.

(இ-ள்.) (அதைக்) கேட்ட காவலாளர்கள் (அவளை) அரசன் முன்னே (கொண்டுபோய) விடுக்க, அவளும அவ்விதமாகவே அவ்விடத்திற் சொல்ல, (காவலாளர்கள்) வாளைப்போன்ற விசாலமான கண்களையுடைய சஞ்சலவாணியோடு திருவெள்ளறைக்கு வந்து, அழகிய வட்டிலை (தேவதேவியின் அகத்தில்) காட்டலும், படுக்கையின் மீதிருந்த ஆழ்வாரைத் தேவதேவியோடு நல்ல கயிற்றாலே தோளிடம் சுருங்கும்படி கட்டி, வைது, பிடித்துத் தொடர்ந்து நடந்தார்கள். (எ-று.) (கஉஉ)

௧௨௩ வீதியிற்கண்டோ ரழுதுகைவிதிர்ப்பார் விப்பிரன்விமல னென் றிசைப்பார், கோதியறுகணிகை யிடத்தினின்றென்பார் முன்னைநாட்கொடுமையீ தென்பார், நீதியறறவனித் தரணிவேந் தென்பா ரிவர்க்கிதுநீர்மையன் றென்பார், ஏதிவிற்கதைசங் காழி யந்திருக்கை யெம்பிரான்மாயையீ தென்பார்.

(இ-ள்.) (இவர்களை) வீதியிற் கண்டவர்கள் அழுது கைவிதிர்ப்பார்கள்; விப்பிரநாராயணர் மலரகிதரோ யென்பார்கள்; வேசியினிடத்திற் குற்ற மில்லை யென்பார்கள்; இது பூர்வகாலத்திற் செய்த கொடியவினை யென் பார்கள்; இப்பூமியையாளு மரசன நீதியறறவனென்பார்கள்; இச்சேவகர் களுக்கு இப்படிச் செய்வது தகுதியன றென்பார்கள்; இது நாந்தகம் சார் ங்கம் கதை சங்கம் சக்கரம இவைகளைத்தரித்த அழகிய திருக்கைகளையுடை ய எம்பிரானது மாயை யென்பார்கள்; (எ-று.) (௧௨௩)

௧௨௪. தவவின்மாதவததோர் தவறிலரெனினும் பழவினைதவிர் வதன் றென்பார், திவலையாதிரைவெண் டிரிபதைதரித்த சிவ னயன்றேவரோ யெனினும, அவரவர்புரிதீ வினையனுபவத்தா னன் றியேயகல்வதன் றென்பார், எவரெவர்க்கினிநண் பீசனேயென் பார் மொய்ப்பவிட்டனர்கடி திறைமுன.

(இ-ள்.) குறைவற்ற மகாதவத்தையுடையவர்கள் ஒரு குற்றமில்லா தவர்களாயினும முன்செய்த வினை தப்பிப் போவதன்றென்பார்கள்; துளிக ளோடு கூடிய அலைகளையுடைய வெண்மையான கங்காதேவியைத் தரித்த சிவனேயாயினும பிரமனேயாயினும் தேவர்களேயாயினும அவரவர்கள் செய்த கொடியவினை யனுபவத்தாற போவதேயன்றி வேறு விதத்தாற் போவதன்றென்பார்கள்; இனி எவரெவர்களுக்கும எம்பெருமானே துணைவ னென்பார்கள்; இப்படிச் சொல்லுமவர்கள் கூடி மொய்க்கும்படி (ஆழ்வாரை யும் தேவதேவியையும) விரைவாக அரசன்முன விட்டார்கள். (எ-று.) ()

௧௨௫. கண்டனனுறந்தைக காவலன்றிருமால கதிர்மணிக்கிண் ணநீ களவிற, கொண்டனையெனிற்கூ றுதியெனசசிறிதுங கோதி லாமாதவக கொழுந்தும், அண்டமீன்றருளு மரஙகநாயகனே யறி வன்யானறிகிலே னென்றான், வண்டடாகுழற்கார் பொதுமகளனை யாம் வஞ்சகிமன்னன்முன் வந்தாள்.

(இ-ள்.) உறையூருக்குத் தலைவனான அரசன் (இவர்களைக்) கண்டு திரு வரங்கநாயகனது பிரகாசத்தையுடைய மணிமயமான வட்டிலை நீ களவி னாலே கொண்டாயாயின் (உண்மை) கூறுவாயாகவென்று சொல்லச், சிறிதும் குற்றமில்லாத ஆழ்வாரும் அண்டங்களைப் படைத்த திருவரங்கநாயகனே யறிவான் நானறியே னென்றார்; வண்டுகள் நெருங்கிய கரிய கூந்தலை யுடைய தேவதேவியின் தாயான வஞ்சனையுடையவள் அரசன முன்வந்து; (எ-று.) (௧௨௫)

௧௨௬. அடித்தாசனைத்தாள் பணிந்துபார்முறையா ளய்யமா ணுக்கன்கை யதனிற், கொடுத்திவன்வி[illegible]ந கவர்ந்தனங்கணிகை க் கோதையர்கொள்கையீ தன்றே, ப[illegible]பூஞ்சயனத் தலருறுத் துகினும் பனிக்குமென்பாவையைப் பிணித்தார், விடுத்திடக்கரு ணை புரிகெனக்கரங்கள் விதிர்த்தழுதவனிமேல் விழுந்தாள்.

(இ-ள்.) அடுத்து, அரசனது பாதங்களை வணங்கிப், பூமியை முறைப்படி யாளும கோமானே! இந்த விப்பிரநாராயணனை (தனது) மாணுக்கன்கையில் (வட்டிலைக்) கொடுத்தனுப்பப் பெற்ரும்; வேசியர்களது செயலிதுவல்ல வோ? தான் படுத்திருக்கும் பூம்படுக்கையிலிருக்கும் புஷ்ப முறுத்தினுலும் வருந்தும் என் பெண்ணைக் கயிற்றல் கட்டிக்கொண்டு வந்தவர்கள் விடுதலை செய்யும்படி கருணை செய்வாயாக வென்று கைகள் நடுங்கி அழுது பூமி யின்மீது விழுந்தனள். (எ-று.) (கஉகூ)

கஉஎ. அவையிலந்தணாக ளறிஞர்களரச ரனைவருங்கணிகைய ராஞேர், எவைகட்டுங்கிடினுங் கவர்மதியியற்கை யென்றலுநன் றெனவிறைவன், நவையிலங்கவளை விடுமினென்றுரைப்ப விடுத் தனர்முடிவிலா ஞானச், சுவைதிரண்டனைய முனிவனைநயனங் களைகெனச்சுளிந்துசொற் றனனல்.

(இ-ள்.) சபையிலுள்ள அந்தணர்களும் அறிஞர்களும் அரசர்களனை வரும், வேசிகள் (யார்) எவற்றைக் கொடுப்பினும் பெற்றுக்கொள்ளும் சிந் தையையுடையரா யிருத்தல் இயற்கையே யெனறு சொல்லுதலும், (அதற் கு) அரசன் நன்றென்று சம்மதித்து, அங்கு குற்றமில்லாதவளான தேவ தேவியை விட்டுவிடுங்களென்று கட்டளையிட, (சேவகர்) விட்டார்கள். முடிவில்லாத ஞானமான சுவை திரண்டது போன்றுள்ள ஆழ்வாரது கண்களைப் பிடுங்கிவிடுங்க ளென்று கோபித்துச் சொல்லினன் (அரசன்). (எ-று.) (கஉஎ)

[அரங்கநாயகன் ஆழ்வாரை மீட்டல்.]

கஉஅ. திகிரிவாள்சங்கஞ சிலைகதைமிளிரத் திருமணிமார்பிட ஞ் செழிப்பத், துகிரிதழ்நயனம் பிறழ்தரநுதற்கத தூரிநாமமு மிகத் துலங்கப், பகிரதிபடியும் பதாம்புயங்கவினப் பசுந்துழாய் திரள்புயம் பயில, வகிர்மதியெயிற்றந ககதிர்மணியின் மகரகுண் டலமுடி வயங்க

(இ-ள்.) (அப்போது) சக்கரம் நாந்தகம் சங்கம் சார்ங்கம் கதாயுதம் இவைகள் ஒளிவிடவும், பிராட்டியும் ஸ்ரீவற்சமும் திருமார்பில் விளங்கவும், பவளம்போன்ற திருவதரமும் திருக்கண்களும் பிரகாசிக்கவும், திருநெற்றி யிலிருக்கும் கஸ்தூரித் திருநாமம் மிகத்துலங்கவும், கங்கை பொருந்தியிருக கும் திருவடித்தாமரைகள் அழகுறவும், பசிய திருத்துழாய மாலை திரண்ட திருப்புயங்களிற் பொருந்தவும், பிளவுபட்ட சந்திரன்போன்ற பற்களை யுடைய நாகத்தின் மாணிக்கமமைந்த மகரகுண்டலமும் திருமுடியும் விளங்கவும், (எ-று.) (கஉஅ)

கஉகூ. நிறைகதிர்கனகாம் பரந்திசைவிளங்க வந்தரதுந்துமி நெருங்கப், பிறைமுடித்தவனு மறைபடித்தவனு மருங்குறத்துதி யொலிபிறங்க, அறைபுறக்கழற்காற் புயவலியுவண னதிர்சிறை யெதிரொலி யதனுன், மறையவன்மனத்துட் டுயரமும்பிணித்த பாசமுமகலமால் வந்தான்.

(இ-ள்.) நிறைந்த பிரகாசமுடைய திருப் பீதாம்பரம் திசைகளில் விளங்கவும், ஆகாய அந்துமி ஒலிக்கவும், மூன்றும் பிறையைத் தரித்த சிவனும் வேதங்களை ஓதிய பிரமனும் பக்கங்களிலிருக்கவும், (எல்லோருடைய) தோத்திர சப்தம் அதிசரிக்கவும, சப்திக்கும் அழகிய வீரகண்டையைத் தரித்த திருவடியும் புயவலிமையுமுடைய திருவடியின் அதிரும் சிறகுகளின் எதிரொலியினாலே வேதங்களையுணர்ந்த ஆழ்வாரது திருவுள்ளத்திலிருந்த துயரமும் ஆழ்வாரைக் கட்டிய பாசமும ஒழியும்படி பெருமான் எழுந்தருளினன். (எ-று) (கஉகூ)

கங0. யாவருங்காண்டற் கரியதாளரங்கத் தீசனைநாசமொன் றில்லாத், தேவரும்பரவுந் தேவனைககண்ணுன் முனிவரன்காண்டலுஞ் செருக்கி, ஓவரும்புளகம் பொடிப்பமெய்விழிநீர் பொழிதரக் களித்துள முருகா, நீவரத்துயரஞ் சனனமுங்கடந்தே னினியெனுப்பணிந்தெதிர் நின்றுன்.

(இ-ள்.) யாவரும் சேவிப்பதற்கரிய திருவடிகளையுடைய திருவரங்கத் தெம்பெருமானை, ஒரு நாசமுமில்லாத நித்தியசூரிகளும் வழிபடும் தேவனுனவனை, தமது திருக்கண்களாலே மறநசீலரான ஆழ்வார் சேவித்தலும், மிகமகிழ்ந்து, திருமேனியில் ஒழியாத புளகமுண்டாகவும், திருக்கண்கள் பாஷ்பம் பொழியவும், களித்துத் திருவுள்ள முருகி, எம்பெருமானே! தேவரீர எழுந்தருளவே இனி அடியேன் துயரமும் சனனமும் கடந்தேன் என்று பணிந்து எதிர்நின்றனர். (எ-று) (கஙO)

கஙக. எழுந்துளநடுங்கா வெதிர்பணிந்தரங்கத் தீசனேயெனமல ரிணைத்தாள, தொழுந்தகையரசன் றனைமுகநோக்கிச சுளிந்து நம்மன்பருட் டுயோன், அழுந்துறுந்துயரா னம்பொருளளித்தால் டர்ப்பதென்னவனைநீ யெனனச, செழுந்துளவணிந்தோ னவின்றுபொற்கோயிற் றேவர்சேனைகளொடுஞ் சோந்தான்.

(இ-ள்.) எழுந்து உள்ளம் நடுங்கி எதிராகப்பணிந்து திருவரங்கத் தெம்பெருமானே! யென்று புஷ்பம்போன்ற இரண்டு திருவடிகளையும் வணங்கும் பெருமையையுடைய அரசனது முகத்தைப்பார்த்து வெறுத்து நமது அடியார்களில் பரிசுத்தரான ஆழ்வார் அழுந்தும் துயரத்தை யுடையராயிருப்பதினாலே நமது பொருளை (வேசிககு) அளித்தால் அவரை நீ வருத்துவது ஏன்? என்று செழுமையான திருத்துழாயமாலையை யணிந்த பெருமான் அருளிச்செயது, பொன்மயமான திருக்கோயிலில் (தன்னுடனிருந்த) தேவர்களோடும் சேனைகளோடும் சேர்ந்தனன். (எ-று.) (கஙக)

கஙஉ. போயபின்னரசன் முனிவனைப்பணியாப் புன்மையின் பிழையெலாம் பொறுத்தி, நீயரங்கேச னினதடியவருக் கடியன் யானெனப்பல நிகழ்த்தித், தூயபன்மணிப்பொற் சிவிகைமீதேற்றி மைந்தருந்தேவியுஞ் சுற்றத், தாயமுஞ்சூழ நகர்வலம்புரிவித் தராங்கமாநகருட னடைந்தான்.

(இ-ள்.) (இப்படி பெருமான்) எழுந்தருளினபிறகு, அரசன் ஆழ்வாரைப் பணிந்து, (நான் செயத) அற்பமான பிழைகளையெல்லாம் பொறுப்பீராக; தேவரீர் திருவரங்கநாதனே! நான் தேவரீரது அடியாருக்கடியேன்

என்று பலவறறைச் சொல்லிப், பரிசுத்தமான பலமணிகளிழைத்த பொற் பல்லக்கின் மீதெழுந்தருள்வித்துத், தனது மைந்தரும் தேவியும் சுற்றமும் மகளிர் கூட்டமும் புடைசூழ நகர்வலஞ் செயவித்துத், திருவரங்கமாநக ரத்துக்கு ஆழ்வாரோடு வந்தடைந்தனன. (எ-று) (கஙஉ)

கஙஙு. அரசர்கோமாற்கு விடைகொடுத்தருளா வனகனுகனி மணி மதில்சூழ், முரசதிரகோவில் வலஞ்செயாக்கரிய முகுந்த னைகருணைமா முகிலை, வரசரோருகனும் பணிபதாம்புயனை வண் டுழாய்மாலை மாதவனைப், புரசைமாககளிற்றின் றுயாதணித்தவ னைப் புனிதனைப்போறறுவான் புகுந்தான்.

(இ-ள்.) (பிறகு) ஆழ்வாரும் அரசர்க்குத் தலைவனான சோழபூபதிக்கு விடைகொடுத்தருளி, மிக அழகிய திருமதில்கள் சூழ்ந்ததாய்ப் பேரிகை யொலிக்கும் திருக்கோயிலை வலஞ்செய்து, கரியநிறத்தையுடைய முகுந் தனை, கருணையையுடைய பெரிய மேகம்போன்றவனை, சிரேஷ்டமான தா மரையிலிருக்கும் பிரமனும் பணியும் திருவடித்தாமரைகளை யுடையவனை, வளப்பமான திருத்துழாயமாலையை யணிந்த மாதவனை, கழுத்திடு கயிற் றையுடைய பெருமைபொருந்திய கஜேந்திராழ்வானது விபத்தை நிவர்த தித்தவனை, பவித்திரமானவனைத் துதிக்கத்தொடங்கினர். (எ-று.) (கஙங)

கஙச. தயித்தியவரவிற் குவணனேபிறவிச சலதியின்மிதவை யே தவறே, பயிறறுதீவினையாம் பனிககுவெங்கதிரோ வறுமையாம் படுபிணி மருந்தே, செயிரகுமஞ்ஞான விருட்கொளிவிளக்கே யவாவெனும்பஞ்சியின் றீயே, குயிற்றுபல்சமய வுழிஞையின்கா லே செருக்கெனுஙகரிக்கொாகோ ளரியே.

(இ-ள்.) தயித்தியர்களாகிய சர்ப்பங்களுக்குக் கருடனே! பிறவியாகிய சமுத்திரத்துக்குத் தெப்பமே! குறறங்களைச் செய்விக்கும் தீவினையாகிய பனிக்கு வெப்பமான சூரியனே! வறுமையாகிய பெரும்பிணிக்கு ஔஷத மே! வருத்தும் அஞ்ஞானமாகிய இருளுக்குப் பிரகாசமுடைய விளக்கே! (அப்ராப்தவிஷயங்களில்) ஆசையென்னும் பஞ்சிக்கு நெருப்பே! கூடிய பல சமயமாகிய சிறுபூளைப் பூக்களுக்குக் காற்றே! அஹங்காரமென்னும் யானைக்கு ஒப்பற்ற பலம் பொருந்திய சிங்கமே! (எ-று.) (கஙச)

கஙரு. அடியரன்பாங்கு வலயத்தின்மதியே மனமெனுமளிக் குத்தா மரையே, முடிவிலாத்தருமப் பயிர்க்குவார்புனலே தேவ சாதகத்திற்கு முகிலே, கடிவரும்பொழிலா மயிற்குமால்வரையே பொன்னெனுங்குயிற்குத்தென் காலே, வடிவமைசேடப் பணிக் கொருமணியே தவத்தராங்கிளிக்குமாங் கனியே.

(இ-ள்.) அடியார்களது அன்பாகிய குவளைமலருக்குச் சந்திரனே! அடியார்களது மனமென்னும் வண்டுக்குத் தாமரையே! முடிவற்ற தரும மென்னும் பயிருக்குச் சொரியும் நீரே! தேவராகிய சாதகப்பக்ஷிக்கு மேக மே! களிப்புடைய பூமிதேவியாகிய மயிலுக்கு உயர்ந்த மலையே! பிராட்டி யென்னும் குயிலுக்குத் தென்றற்காற்றே! வடிவமுடைய ஆதிசேஷனாகிய பாம்புக்கு அத்வியதீயமான மாணிக்கமே! தவசிகளாகிய கிளிக்கு மாம்பழ மே! (எ-று.) (கஙரு)

கருசு. அலகிலாதனவா முனதுநாமத்தொன் றுயினுங்கருதவு மயியாக, கலரியாவரினுங கடையனேனிருகண் காணவேகருடன் மேல் வந்தாய், சலதிவாளரவின் றவிசினமேற்றுயில்செந் தாம ரைத்தையனு யகனே, உலகெலாமபயந்த வுநதியமபுயத்தா யெ னப்பராயுருகினு னுயாந்தோன்.

(இ-ள்.) கணக்கற்றனவாகிய தேவரீரது திருநாமத்தில் ஒன்றையாயி னும் சிந்திப்பதற்கறியாத தாழ்நதவர்கள யாவரினும கடைப்பட்டவனை அடியேனது இரண்டு கண்களும் சேவிக்கும்படி கருடாழ்வான்மீது எழுந் தருளிவந்தாய! திருப்பாறகடலில் ஒளியுடைய ஆதிசேஷசயநத்தினமீது அறிதுயிலமருமவனுயச் செந்தாமரைமலரி லெழுநதருளியிருக்கும பெரிய பிராட்டியாருக்கு நாயகனே! உலகங்களெல்லாவறறையும் பெற்றதான திருவுநதித் தாமரையையுடையவனே! எனறு வணங்கி யுருகினர் உயர்ந் தவரான ஆழ்வார். (எ-று.) (கருசு)

[திருமாலையும திருபபளளிபெழுசசியும அருளிச்செயதல்.]

கருஎ. காவலிற்புலனை வைததெனத்தொடஙகிக கவினநாற்பத் தைந்து கவியால, பாவலாககுணாதற கருமபொருட்டிருமாலைப் பெயர்ப்பனுவன்முற பகரா, தேவருககுரிய திருப்பளியெழுசசி கதிரவன்குணதிசைச சிகரம, ஆவதிற்பொடிதத்தா னெனவெடுத் தணியார் கவியொரீரைந்து னறைநதான.

(இ-ள்.) "காவலிற் புலனைவைதது" எனறு உபக்ரமித்து அழகு பெறும் படி நாற்பத்தைந்து செயயுட்களாலே பாட்டுகளில் வல்லவர்களுக்கும் அறிவதறகரிதான பொருளையுடைய திருமாலையென்னும் திருநாமத்தை யுடைய பிரபந்தத்தை முன்னே யருளிசசெயது, தேவனுகிய எம்பெரு மானுக்குரிய திருபபளளியெழுசசி யெனனும பிரபநதத்தைக் "கதிரவன குணதிசைச் சிகரம் வநதணைநதான" எனறு உபக்ரமிதது அழகுடைய கவிகள் பத்தினுலே யருளிச் செயதனர். (எ-று.) (கருஎ)

அன்னசீர்க்கவிதையோரைம்பத்தைநதினிற
பன்னகவணையினுன்பதிகண்மூனறதாம்
பொன்னரங்கமவடமதுரைபூமபொழின்
மன்னுசீரயோத்தியாநகரமெனபவே.

[தொண்டரடிபபொடி என்னும் திருநாமம் பெறுதல்.]

கருஅ. அத்தகைமுனிவன் றனையணியரங்கத் தெம்பிரானரு ளுட னேககி, எததகைவரமுந் தருகுவஙகேட்டி யென்னவம்முனி வனு மிறைஞ்சி, உத்தமர்பரவுன் னடியவர்திருத்தாட் டுகட்பெய ருதவுதி யென்ன, சித்தநன்றுவகை யொடுபணிந்திரந்தா னவ்வர மளித்தனன் றிருமால்.

(இ-ள்.) சிரேஷ்டமான பெருமையையுடைய ஆழ்வாரை, அழகிய திரு வரங்கத் தெம்பிரான் கிருபையோடு கடாக்ஷித்து, எப்படிப்பட்ட வரமும் கொடுக்கிறோம் கேட்பாயாக வென்றருளிச் செயய, ஆழ்வாரும் வணங்கி,

உத்தமர்கள் வணங்கும் உனது தொண்டர்களது திருவடிப்பொடி யென்னும் பெயரை யளிப்பாயாக வென்று சித்தத்தில் நல்ல களிப்புடன் பணிந்து வேண்டினர். பெருமான் அவ்வரமளித்தனன். (எ-று.) (கருஅ)

[ஆழ்வார் திருநாடலங்கரித்தல்.]

கருகூ. உன்னருந்தொண்ட ரடிப்பொடியெனும்பே ருலகெலா மூதவினே னுதவ, அன்னதோர்வரம்பெற் றுலகெலாமப்பே ரறைதரவரங்கமா நகரிற், பின்னருந்தொடையற் பணிவிடைபுரியா நம்பெருமாள்பதம் பெற்றான், சொன்னவத்தேவ தேவியுமவன்றோட் டோய்தலானடைந்தன டுணைத்தாள்.

(இ-ள்.) (இப்படி) நினைப்பதற்கரிய தொண்டரடிப்பொடி யென்னும் பெயரை உலகங்களையெல்லா மீன்ற பெருமானளிக்க அப்படிப்பட்டதாகிய சிறந்த வரத்தைப் பெற்று உலகத்திலுள்ளவர்களெல்லாம் அத்திருநாமத்தையே சொல்லத் திருவரங்கமாநகரில் அதன்பின்னரும் திருமாலை கைங்கரியஞ்செய்து நம்பெருமாள் திருவடியை யடைந்தனர். முன்பு சொன்ன தேவதேவியும் ஆழ்வாரது திருத்தோள்களை யணைந்ததினாலே பெருமானது அடியிணைகளை யடைந்தனள். (எ-று.) (கருகூ)

வேறு.

கசரு0. தெரிந்தபன்மலர்த்தொடையரங்கேசற்குத்தினமும்
புரிந்ததொண்டர்களடிப்பொடித்திருக்கதைபுகன்றாம்
விரிந்தபொற்கிழியகற்றிடக்கறறுளோர்வணங்கச் [வாம்.
சொரிந்தமெய்ப்பொருட்பட்டர்கோன்பெரும்புகழ்சொல்

(இ-ள்.) தேர்ந்தெடுத்ததாகிய பலமலர்களாலாகிய மாலையைத் திருவரங்கேசனுக்குத் தினமும் சமர்ப்பித்த தொண்டரடிப்பொடி யாழ்வாரது திவ்ய சரித்திரத்தைச் சொன்னோம். இனி மிக்க பொற்கிழியறும்படி கற்றவர்கள் வணங்கத்தக்கதாக (பாண்டியன் சபையில்) சொரிந்த மெய்மையான பொருள்களையுடைய பெரியாழ்வாரது பெரிய கீர்த்தியைச் சொல்லுவோம். (எ-று.) (கசரு0)

தொண்டரடிப்பொடி யாழ்வார், கலியுக வருஷம் இருநூற்றெண்பத் தொன்பதாவதான பிரபவஸ்ரீ மார்கழிமீ கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி திதி கேட்டை நக்ஷத்திரம் மங்களவாரதினம் திருவவதரித்து இந்நிலவுலகில் நூற்றைந்து வருஷம் எழுந்தருளியிருந்தனரென்பர்.

விப்பிரநாராயணச்சருக்கம் முற்றிற்று.

ஸ்ரீ

## கூ-வது பட்டநாதச்சருக்கம்.

க. ஒலிதிரைக்கடல்சூழ்ஞாலத்துறைதுளித்துதவாவிண்ணை
வலிதினிற்றளைசேர்த்தாண்டவழுதிவாழ்வளநாட்டின்பம்
பொலிதிருப்பதியொன்றேசால்புரிசைகோபுரம்பொற்கோயில்
வலிதிறற்கழுமுட்பாணிக்ககற்றினோன்பதத்தினேங்கும்.

(இ-ள்.) ஓசைபெற்ற அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த பூமியினிடத்து மழைபெய்து உதவிசெயயாத மேகத்தைப் பலாத்காரமாக விலங்கிட்டாண்ட பாண்டியன் வாழும் வளமான பாண்டிய நாட்டினிடத்து, இன்பங்கள் மிகுதியாகப் பெற்ற திருபபதியொனறு, நிறைந்த மதிலும் கோபுரமும் பொனமயமான திருக்கோயிலுமுடையதாகி வலிய சூலத்தைத் தரித்த சிவபிரானுக்கு இரத்தலை நீக்கின பெருமானது பரமபதத்தைப்போல உயர்வடைந்திருக்கும். (எ-று.) (க)

உ. நற்றவர்தருமஞானநவிறமிழ்நான்குவேதங்
கற்றவர்கருமஞானங்கடந்தவர்கடவாமாயை
அற்றவரரிதாணேயமறுதவரமுக்காறின்னல்
செற்றவர்பரமபாகவதர்கடந்திரளேமலகும்.

(இ-ள்.) (அங்கு) நல்லதவத்தை யுடையவர்கள், தருமமும் ஞானமும் சொல்லப்படும தமிழ் வேதங்கள் நான்கையும் கற்றவர்கள், கருமமும் ஞானமும் கடந்தவர்கள், கடக்கவொண்ணுத மாயையற்றவர்கள், பெருமானது திருவடிகளில் பக்தி நீங்காதவர்கள், பொறுமையும் துன்பமும் ஜெயித்தவர்கள், பரமபாகவதர்கள் ஆகிய இவர்கள் சமூகமே மிகுந்திருக்கும். (எ-று.) (உ)

ங. புண்ணியம்புரிந்தோர்வாழும்பொருவில்பொன்னகரொப்பாமென்
றெண்ணினும்பழுதாமெண்ணிலித்தலத்திணையொன்றின்றல்
நண்ணியங்கயனையீன்றநாரணனிருத்தலாலே
மண்ணில்வைகுண்டமென்றேபுகல்வரான்மதிவலாளர்.

(இ-ள்.) புண்ணியஞ்செய்தவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒப்பற்ற தேவலோகம் (இத்திருப்பதிக்கு) ஒப்பாகுமென்று எண்ணினும (அது) பழுதேயாகும்; நினைத்துச் சொல்லுமிடத்து இத்திருப்பதக்குச் சமானமொனறுமில்லை யாகும். அவ்விடத்தில் பிரமனைச் சிருஷ்டித்த நாராயணன் எழுந்தருளியிருத்தலாலே (அதனை) பூமியினிடத்துள்ள வைகுண்டமென்றே ஞானவான்கள் சொல்லுவார்கள். (எ-று.) (ங)

ச. எழுதுசித்திரப்பொன்மாடத்திழைத்தசெம்மணியாலியாமப்
பொழுதுபுக்கறியாதந்தப்புரியினுட்புறத்துச்சூழ்ந்த
செழுமலர்ப்பொழிலான்வெய்யோன்கதிர்புகாசிறந்தயாணர்
முழுதுமப்பதியுட்டோன்றிவிரிந்ததால்புவனமூன்றும்.

(இ-ள்.) எழுதிய சித்திரங்களையுடைய பொன்னாற்சமைந்த மாடங்களில் இழைத்த மாணிக்கங்களாலே அந்தத் திருப்பதியில் இராப்பொழுது பிரவேசித்தறியாது; அத்திருப்பதியின் புறத்தில் சூழ்ந்திருக்கும் செழுமை

யான மலர்களையுடைய சோலைகளாலே சூரியனது கிரணம் பிரவேசித்தறியாது; சிறந்த அழகு முழுவதும் அந்தத் திருப்பதியிலுதித்து மூன்றுலகங்களிலும் பரவியதாயிருக்கும். (எ-று.) (ச)

ரு. அறம்பொருளின்பமூன்றுமளித்துமேலழியாதென்றுஞ்
சிறந்தகைவலமேநல்குஞ்செழுந்துழாய்மார்பன்றேவி
பிறந்தகமதுவாமென்னிற்பெருமையைப்பிறழுமாறு
நிறந்தவாஸனசபீடத்திறைவனுமிசைத்தலாமே.

(இ-ள்.) அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று புருஷார்த்தங்களைக் கொடுத்து அதற்குமேல அழியாமல் என்றும் சிறந்ததாகிய மோக்ஷத்தைக் கொடுக்கும் செழுமையான திருத்துழாய மாலையையணிந்த திருமார்பையுடைய பெருமானது தேவியாகிய பூமிப்பிராட்டி அவதரித்த அகம் அத்திருப்பதியாமென்று சொல்லின் அத்திருப்பதியின பெருமையை ஒளியையுடைய பொன்னின நிறங்கெடாத தாமரையாகிய ஆசனத்தையுடைய பிரமதேவனாலே சொல்லுவது கூடுமோ? (கூடாது). (எ-று.) (ரு)

சு. அன்னதோர்வில்லிபுத்தூரருமறையவருள்வேதம்
பன்னலாலவிண்டுசித்தன்மனைவயிற்பறவைவேந்தன்
உன்னருந்தகையோடானிச்சோதியினுலகம்போற்றத்
தொன்னலமறைத்தோர்சேயாயவனியிற்றோற்றஞ்செய்தான்.

(இ-ள்.) அப்படிப்பட்டதாகிய ஒப்பற்ற ஸ்ரீவில்லிபுத்தூரில் வாசஞ் செய்யும அரியவேதங்களையுணர்ந்த அந்தணர்களில் வேதம் சொல்லும் நல்ல வமிசத்தையுடைய விஷ்ணுசித்தரது திருமாளிகையில், பெரிய திருவடி, நினைப்பதற்கரிய பெருமையோடு ஆனிமாசத்தில் சுவாதிநக்ஷத்திரத்தில் உலகத்திலுள்ளோர் போற்றும்படி, தனது பழைய சொரூபத்தை மறைத்து, ஒரு குழந்தையாகப் பூமியிலவதரித்தனர். (எ-று.) (சு)

எ. பயந்தவேதியனுஞ்சேயதன்வனப்புடன்பண்புநோக்கி
வியந்துசீர்விண்டுசித்தனெனும்பெயராவிதித்துமேலோர்
நயந்துளசவுளமாதிகருமநன்னாளிற்செய்தான்
வயங்குமால்பரிவியற்கைவாய்த்ததெனவளர்ந்தான்மைந்தன்.

(இ-ள்.) (அவரைப்) பெற்ற விஷ்ணுசித்தரும் அக்குழவியின் அழகும் குணமும் பார்த்து ஆச்சரியமடைந்து, சிறப்பையுடைய விஷ்ணுசித்தரென்று திருநாமகரணஞ் செய்து, மேலோர்கள் விரும்பியுள்ளனவாகிய சவுளம் முதலிய கருமங்களை நல்லநாள்களிற் செய்து முடித்தனர். விளங்கும் பெருமானது பக்தி இயற்கையிலேயே வாய்த்ததென்று சொல்லும்படி அம்மைந்தர் வளர்ந்தனர். (எ-று.) (எ)

அ. மருமலிதுளவத்திண்டோள்வடபெருங்கோயின்மாயன்
அருடனினியல்பானேயத்தடிமைபூண்டவன்றாளெய்துந்
தெருடருந்தவமுந்தொன்னூற்சீலமுந்தெரியிற்றேவன்
மருகயிங்கரியமென்றுநினைந்ததித்தகையதோர்வான்.

(இ-ள்.) வாசனைமிகுந்த திருத்துழாய்மாலையையணிந்த திண்ணிய தோள்களையுடைய வடபெருங்கோயிற் பெருமானது திருவருளால், இயல்பாகவே பக்தியோடு தொண்டுபூண்டு அப்பெருமானது திருவடிகளை

யடையும் தெளிவையுடைய தவமும் பழய நூல்களிலுள்ள புருஷார்த்த மும் (இன்னதென்று) தெரியுமிடத்துப் பெருமான் விஷயத்திற் செய்யும் கைங்கரியங்களே யென்று நினைத்து அது இப்பெருமையுடையதென்று ஆராயவராயினர். (எ-று.) (அ)

கூ. ஆயவன்றிருவின்கேள்வனருணிறையவதாரத்திற்
றூயபூந்தெரியலகஞ்சன்றனககலாத்தொடையீவோன்பால்
நேயமாயிரந்தானென்னுமறையவனேமிசசெங்கண்
நாயகற்கமைத்துமாலைநாடொறுநல்கலுற்றான்.

(இ-ள்.) அப்படிப்பட்ட விஷ்ணுசித்தர், பெரியபிராட்டியாருக்கு நாய கனான பெருமான் கிருபை நிறைந்ததாகிய கண்ணனவதாரத்தில் கம்ஸனு க்கு மலர்மாலைகளைக் கொடுக்குமவராகிய ஸ்ரீமாலாகாரரிடத்திற் சென்று பரிசுத்தமாகிய புஷ்பமாலையை அன்போடு இரந்தனனென்று (தெரிந்து கொண்டு), திருச்சக்கரமுடையவனுயச் சிவந்த திருக்கணகளையுடைய பெ ருமானான வடபெருங்கோயிலுடையானுக்குத திருமாலை யமைத்து நாடோ றும் சமர்ப்பிக்கத் தொடங்கினர். (எ-று.) (கூ)

க0. அவணவனுறையுங்காலததருடவாதவனியாளுந்
தவறிலசீவலவனென்போனசுங்குலிறறனித்தாங்கோர்நாள்
நவமணிமதிலசூழ்கூடனகரசோதனையாநண்ணுரு
சுவலயிறகரத்தானுணடோாமறையவனறுயிலககண்டான்.

(இ-ள்.) (இப்படி) ஸ்ரீவில்லிபுததூரில் விஷ்ணுசித்தர் வாசஞ்செய்யுங் காலத்தில் அருள் கெடாது பூமியை யாளும் குற்றமற்ற ஸ்ரீவல்லபதேவ னெனனும பாண்டியன், நவமணிகளிழைதத மதில்கள் சூழ்ந்த திருக்கூட லாகிய நகரசோதனையின் பொருட்டு ஒருநாள் இரவில் தனித்துத் தோண் மேற் சாரவைதத வேலைத்தரித்த கைகளையுடைய வருமவன் அங்கு ஓரிடத்தில் ஒரு பிராமணன நித்திரை செயயக்கண்டனன். (எ-று.) (க0)

கக. எடுப்பினனவனைநீயாரெவணுளாயியம்புகென்று
அடுத்தனன்வினவககேடடவந்தணனரந்தையாரவந்
தடுபபருஞசனனநீங்கசசானவிபடிந்துசங்கம்
விடுத்துவிறபிடித்தோன்சேதுபணிநதிவணமீணடேனென்றான்.

(இ-ள்.) அந்தப் பிராமணனை யெழுப்பி நீயார்? எங்கிருப்பவன்? சொல் லுவாயாகவென்று அடுத்து விசாரிக்க, (அதைக்) கேட்ட பிராமணன், துன் பமும், நரகமும், தடுப்பதற்கரிய பிறவிகளும் நீங்கும்படி கங்காஸ்நானஞ் செய்து, சங்கத்தைவிட்டு, கோதண்டத்தைத் திருக்கையிலேந்திய சக்ர வர்த்தித் திருமகளது சேதுவைச் சேவித்து, இவ்விடத்துக்குத் திரும்பி வந்தேன் என்றனன். (எ-று.) (கக)

கஉ. அரியனென்றரசுட்கொள்ளாவவனியிற்பிறந்தோராய
புரியவேண்டியதேதுண்மைபுகலெனப்பொழிகார்காலக்
குரியசோடையிற்கங்குற்குப்பகலிலோர்ந்துவத்தல்போலப்
பெரியவீடெய்தற்காயிம்மையேபேணலென்றான்.

(இ-ள்.) அரசன் (இவ்வந்தணன், நாம் பெறுதற்கு) அரியவனென்று உள்ளத்திற் கொண்டு, ஐயா! பூமியிற் பிறந்தவர்கள் செய்யவேண்டிய காரி யமெனனை? உண்மையாகச் சொல்லுவாயாக வென்று கேட்க; மழைக்காலத்

திற்கு வேண்டியவைகளை கோடைக்காலத்திலும் இராப்பொழுதிற்கு வேண்டியவைகளைப் பகலிலும் ஆராய்ந்து சம்பாதிப்பது போலப், பெரிய தாகிய மோக்ஷத்தை யடைவதற்கான பிரயத்தனத்தை இம்மையிலேயே விரும்பிச்செய்ய வேண்டுமென்றனன். (எ-று.) (கஉ)

கங. அந்தணனுரைத்தமாற்றமரசாகோனகத்துட்கொள்ளா
வந்தனன்றனதுகோவின்மலரணைதுயின்றுமானச்
சுந்தரமணித்தேர்வெய்யோன்றோன்றுமுன்றுயினீத்தல்லிற்
சிந்தனைதெளிவானங்கோர்மண்டபததணையிற்சேர்ந்தான்.

(இ-ள்.) இப்படி பிராமணன் உரைத்த சொல்லை அரசர்க்கரசன் மனத்திற்கொண்டு வந்து, தனது சிரேஷ்டமான மாளிகையில் மலரணையின்மீது துயின்று, பெருமையையுடைய அழகிய மணிமயமான தேரையுடைய சூரியன் உதயமாகு முன்னம் நித்திரையையொழித்து, இரவில் வந்த சிந்தனையைத் தெளியும் பொருட்டு, ஓர் மண்டபத்தில் ஆசனத்தையடைந்து (எ-று.) (கங)

கச. அழைத்தனன்செல்வநம்பியெனும்புரோகிதனையையா
தழைத்தனவிபவநம்பாவிம்மையிற்றளர்வொன்றின்றால்
பிழைத்திடுசனனந்தாழாப்பரகதிபெறுமா றெண்ணி
உழைத்தனனதனைவாயக்குமுறுதியொன்றுரைத்தியென்றான்.

(இ-ள்.) செல்வநம்பி யென்னும் புரோகிதனை யழைத்து ஐயா! நம்மிடத்து விருத்தியடைந்துள்ளனவான விபவங்களுக்கு இம்மையில் குறைவொன்றுமில்லை. குற்றத்தையுடைய பிறவி தாழ்ந்து பரமமான மோக்ஷத்தைப் பெறும்வழியை எண்ணி முயறசித்து அதனைப் பெறும் உறுதியொன்றைச் சொல்லுவீராக வென்றனன. (எ-று.) (கச)

கரு. முறைநவில்குரவனசெல்வநம்பியுமுழுதுந்தொன்னூல்
அறைபொருடெரிந்தோர்ககலலதறிகுவதரிதென்றேத
இறைவனுமளவிலசெம்பொறகிழிதனமவைமுன்றூககா
மறைபுகலசரதஞசொற்றோர்க்கென்றலுமறையோர்தொக்கார்.

(இ-ள்.) முறைமையாயுள்ளனவற்றைச் சொல்லும ஆசாரியரான செல்வநம்பியும் (அவ்விஷயம்) பழமையான சாஸ்திரங்கள் சொல்லும் பொருண் முழுமையும் தெரிந்தவர்களுக்கல்லது (பிறர்க்கு) அறிவதரிது என்று சொல்ல, அரசனான பாண்டியனும் கணக்கற்ற தனங்களை அழகிய பொற்கிழியாகத் தூக்கிக்கட்டி, (இது) வேதத்திற் சொல்லும் உண்மையைச் சொன்னவர்கட்கென்று சொல்லுதலும் வேதியர்கள் வந்து கூடினார்கள். (எ-று.) (கரு)

வேறு.

கசா. ஒன்றென்றும்பலவென்று முயர்ஞானக்கடவுளரு வுருவமுள்ளான், அன்றென்றுமாண்பெண்ணென் றறிவரியோனுமமுளானன்றேயென்றும், குன்றென்றபுயத்தான்முன் கரியளவைநவில்குருடர் குழுவிற்கூற, நன்றென்றுட்கொள்ளாது நாணுளுமிப்பரிசே நாடலுற்றான்.

(இ-ள்.) உயாநத ஞானத்தையுடைய ஈசுவரன், ஒன்றென்றும் பலவென்றும அருவமாயிருப்பவனெனறும் உருவமுடையவனென்றும் அல்லனென்றும் ஆணென்றும பெண்ணெனறும அறிவதறகரியவனெனறும் நாமமுள்ளவனெனறும் அல்லனெனறும், மலைககுச் சமானமான புயங்களையுடைய பாண்டியன முன, யானையின் உருவத்தைச் சொல்லும் குருடர் கூட்டத்தைப்போலச் சொல்ல, (அரசன) (அவைகளை) நல்லதென்று உள்ளத்திற கொள்ளாமல் நாள்தோறும் இவ்விதமாகவே விசாரிக்கத தொடங்கினன. (எ-று.) (கசு)

கஎ. அக்காலைவில்லிபுத்தூர் விண்டுசிததன்றனைத்திருமாலனுகிநீயெண், டிக்காளுமீனவன்பாற சென்றுகிழிகவாதியெனச சீரியோரிற், றககானுஞ்சிறிதுமறை யறிகிலன்யானெனசசெழியன் சபையினகண்ணீ, புககாலஙகுனதிதயத திருந்தெவையும்பகலுதுநாம் போதியென்றான்.

(இ-ள்.) அப்பொழுது ஸ்ரீவில்லிபுத்தூரில் விஷ்ணுசித்தரிடத்துப் பெருமானடைநது நீர் எட்டுத்திசைகளையும் ஆண்டுவரும் பாண்டியனிடத்துக்குச் சென்று கிழியையறுத்துக கொண்டுவாருமென்று நியமிக்க, சிறநதவர்களில் தகுந்தவராகிய விஷ்ணுசித்தரும் யான வேதத்தைச் சிறிது மறியேனே என்று கூறப, பெருமான், பாண்டியன் சபையினிடத்துப் பிரவேசிப்பீராயின அங்கு உமது உள்ளத்திலிருநது எநதவேதங்களையும் நாம் சொல்லுவோம்; போவீராகவென்றருளினன. (எ-று.) (கஎ)

கஅ. கருணைமுதற குணக்கடவு ளருண்முறையம்முனிமதுரை கடிதினேகி, அருணமணிமுடியரச னவையணுகநமபியுட னரசன்றானுந், தெருணவிலவருகுரவ னிவனேயெனறெதிரபணிந்து சிறப்புசசெய்தான், மருணவிலும்பரமதததின மதியிலர்களபொறுககலராய மாறுகொண்டார்.

(இ-ள்.) கருணையையுடைய முதறகுணமாகிய சாத்துவிககுணத்தையுடைய பெருமானது நியமநததின்படி அந்த மநநசீலராகிய விஷ்ணுசித்தா, மதுரைக்கு விரைவாக எழுந்தருளிச் சிவந்த இரத்தினமயமான முடியையுடைய அரசனான பாண்டியனது சபையைச்சேரச், செல்வநம்பியுடனே பாண்டியனும் உண்மையைச் சொல்லவரும் ஆசாரியர் இவரே யென்று எதிர்கொடுவந்து பணிநது சிறப்புச் செயதனன். மதிமயக்கத்தைச் சொல்லும் இதரமதங்களிலுள்ள மதியிலாதவர்கள் இதனைப் பொறுக்காதவர்களாகி மாறுகொண்டார்கள். (எ-று.) (கஅ)

அடியில் வருமவை வேறொரு செய்யுட் குருபரம்பரையிற் கணடவை.

† வாசவனுமதுகண்டுமற்றிவராற்றென்னவனம்
ஈசனடியறிந்தடைவனிவையுலைக்கவேண்டுமெனத
தேசுபொலிசுரர்குருவைச்சென்றுசிங்காசனத்திருந்த
மாசிலார்தமைவெல்கமாணுடனாயெனவிட்டான்.

(இ-ள்.) தேவேந்திரனும் அதனைப்பார்த்து, இவ்வாழ்வாரால், பாண்டியனானவன் நம்பெருமானது திருவடியை யறிந்தடைவன்; ஆழ்வார் பரத்துவ நிச்சயஞ் செய்வதையும் பாண்டியன் உய்வதையுங் கெடுக்க

[illegible]டு மொழி, ஒளியுடைய தேவகுருவான பிரகற்பதிபகவானைப் பார்த்து, நீர் மனிதவுருக்கொண்டு சென்று சிங்காசனத்திலிருந்த குற்றமற்ற ஆழ்வாரை வெல்லுவீராகவென்று அனுப்பினன். (எ-று.)

† இந்திரன்சொற்பணியாலேயிருநிலத்தில்வியாழகுரு
வந்துமானுடவடிவாயமன்னவனமுற்றோன்றினன
எந்தநாடெவ்வூர்நீர்யாவரதையியம்புமெனச்
சந்திரனகுலத்துதித்ததாரவேந்தனமகிழ்ந்துரைப்ப

(இ-ள்.) தேவேந்திரன சொன்ன நியமநத்தினாலே பூமியில் பிரகற்பதி பகவான மனிதவுருவுடன வந்து பாண்டியனுக்கு முன்னே தோன்றினர் சிறந்த சந்திரவமிசத்தவனாகிய மாலையணிந்தவனான பாண்டியன அவரை நோக்கி, நீர் யாவர்? எந்த நாடு? எந்த ஊர்? அதனைச் சொல்லுவீராக வென்று மகிழ்ச்சி கொண்டு சொல்ல, (எ-று.) (௨

† பொன்னுலகாளபவனவிரகாற்போந்தவர்சென்றங்கிருந்து
மன்னவநீகிழிகட்டிவாதிடைவென்றவர்கொள்க
என்னவுரைத்தனைபார்ப்பானேதுசெயித்தவன்றுளிற
றென்னவிழுந்தனையதனைச்செப்புதிநானென்னைச்செய்ய

(இ-ள்) தேவேந்திரன சூழ்ச்சியினாலே வந்த பிரகற்பதிபகவான் சென்று அவ்விடத்தேயிருந்து, அரசனே! நீ கிழிகட்டி, வாதிலவென்றவர்கள் அதைக்கொள்க என்று சொல்லினையே, பாண்டியனே? இப்போது இவ் வேதியர் எதைச் செய்கக, அவர் பாதங்களில் விழுந்தாய்? நான என்னை இன்று சொல்வதற்கு நீ அதற்குக காரணஞ் சொல்லுவாயாக என்றனர். (எ-று) (௩

† என்றுரைத்தவவவேலையிருந்தசமயத்தவர்கள்
ஒன்றுபடவியாழகுருவுடனகூடிமுடிவேந்தை
யினறெமதுமுனனாகவிருநிலத்திலிறைஞ்சுவித்த
நனறிதருமவேதியரேகிழியறுக்கநாட்டுமென

(இ-ள) என்று பிரகற்பதிபகவான சொன்ன அச்சமயத்தில் அங்கிருந்த பலசமய வாதியர், பிரகற்பதிபகவானுடன ஒன்று கூடி, முடியையுடைய அரசனான உன்னை இன்று எங்களுக்கு முன்னாகப் பூமியில் வணங்குவித்த நன்மையையளிக்கும் வேதியரே கிழியறுக்கும்படி சொல்லுவாயாக வென்று (எ-று.)

† சன்னைசொல்லியவர்பத்ததிறறுழந்தமன்னைமிகவிகழத்
தென்னவனுமருகிருந்தசெல்வநம்பிமுகநோக்கி
என்னையினிச்செய்வதெனவியம்பியிடுமளவையினின்
மன்னவமறறிவரவரைவெல்வாவருந்தேலென்றான்.

(இ-ள.) பரிகாச வார்த்தைகளைச் சொல்லி, ஆழ்வார் திரு[illegible] வணங்கிய பாண்டியனை மிகவு மிகழவே, பாண்டியனும் தன்னருகிலிருந்த செல்வநம்பியின முகத்தைப்பார்த்து இனி என்ன செய்யலாமென்று [illegible] அளவிலே, அவர், அரசனே! இவ்வாழ்வார் அவர்களை வெல்வார் வருந்தவேண்டா என்றனர். (எ-று.)

(இ-ள்.) இவ்வாறு ஆழ்வார் கூறவே பிரகற்பதிபகவான வேறு போக்கற்றாராய்ச் சொல்லுவார்: மெய்வண்ணமுடைய காலகற்பத்தில் அப்பிரம கபாலம் சிவபிரானை விட்டதென்று அசேதநத் தன்மையையுடைய காலத்தைப் பரத்துவமென்றார். கரிய நிறத்தையுடைய பரஞ்சோதியின் அடியாரான ஆழ்வார் அதனை மறுத்துரைப்பார். (எ-று.) (க0)

† காலமொருமூன்றுமுடைக்கடவுளாரார்கருத்தினிடை
மூலமுடிவறியாதாயமொழிகவெனவவன்மொழிவான்
ஞாலமிசையிருணீக்கிநற்பொருளைவிளக்குவிக்குங்
கோலவெழிற்கதிரொளியேயவன்பரமாமெனக்கொண்டே

(இ-ள்.) மூன்று காலத்தையும் தனக்கு ஸ்வாதீனமாகவுடைய கடவுள். யாவர்? கருத்தினிடத்தே ஆதியந்தங்களை யறியாதவனே! சொல்லுவாயாக என்றுரைக்க, பிரகற்பதிபகவான சொல்லுவான். மிக்க அழகையுடைய சூரிய னொளியே பூமியின்மீது இருளை யொழித்து நல்ல பொருள்களை விளங்கும் படி செய்யும், அச்சூரியனே பரத்துவமெனக் கொண்டு (எ-று) (கக)

† உரைத்தனனவ்வுரைகேட்டவுத்தமனுமுறுவல்செய்து
வரைத்தடந்தோளிறைமன்னனமாமுகத்தைநோக்கியிவன்
றிரைக்கடலிற்றோன்றியிவன்றினந்திரிவானிறையருளால்
இரைக்குமறைகாணுதபரமென்றாலிசைந்திடுமோ.

(இ-ள்.) சொல்லினர். அச்சொல்லைக் கேட்ட ஆழ்வார் சிரித்து, மலை யைப்போன்ற விசாலமான தோள்களையுடைய வெற்றிபெற்ற பாண்டிய னது சிறந்த முகத்தை நோக்கி, இச்சூரியன இவ்வுலகில் அலைகளையுடைய கடலிற் பிறந்து எம்பெருமான நியமனத்தின்படி தினமும் திரிந்துவருவான்; இவனை ஓசையையுடைய வேதங்கள் காணுத பரத்துவமென்றால் இசையு மோ? (எ-று.) (கஉ)

† என்னவுரைத்ததன்பின்னரிருவரும்பன்னூன்முறையே
பன்னூசருக்கம்பிரியப்பண்ணவாதங்குரவனையம்
மன்னுமெழிலாழ்வாரும்வகைபெறவேவாதினில்வென்
றின்னுமெந்தவகையானுமியம்பவலையோவினிநீ

(இ-ள்.) என்று சொன்னபின் பிறகு ஆழ்வாரும் பிரகற்பதியும் பல சாஸ்திரங்களின் முறையே சொல்லப்படும் தர்க்கஞ் செய்யப் பிரகற்பதி யை அந்த நிலைபெற்ற அழகையுடைய ஆழ்வாரும் வகைபெறவே வாதில் வென்று இன்னும் எந்த வகையாலாவது சொல்ல வல்லையோ? இனி நீ (எ-று.)

† சொல்லாயென்றனராழ்வார்தொல்லுலகங்காத்தளிக்கும்
மல்லார்திண்புயத்தென்னன்மதிகெட்டாரெனவுரைத்தான்
கல்லாதசுரர்குருவுங்கட்டுரையற்றங்கிருப்ப
எல்லாருந்தங்கடங்கடெய்வமெழிற்பரமென்றார்.

(இ-ள்.) சொல்லுவாயாக என்றனர் ஆழ்வார். பழமையான உலகத் தைக் காக்கும் மற்றொழிலைக்கொண்ட திண்ணிய புயங்களையுடைய பாண்டி யன், மதிகெட்டார் என்றுரைத்தனன். கல்லாத தேவகுருவும் சொல்லும் சொல்லற்று அங்கிருக்க, பிறமதவாதியர் யாவரும் தங்கள் தங்கள் அழ கிய தெய்வம் பரத்துவமென்றார்கள். (எ-று.) (கங)

கக. இருக்குமுதலியவேதத் தெமதுகடாவினுக்குவிடை யீ வாயென்ன, நெருககினரிங்கிவர்மூக ராகவெனத்திருமாலை நினைந் துபோற்றிப், பொருகனெவோாகவிபுகல விகனமாறித்திகைத்த னரிபபுவனங்காக்குரு, செருக்கதிாவேற்செழியனுமெய்ப் பொரு ள்சுருதிபுகன்முறையே செபபுகென்றுன.

(இ-ள்.) இருக்கு முதலிய வேதத்தில் எமது வினாக்களுக்கு விடைகொடுப்பாயாக வென்று நெருக்கினார்கள். விஷ்ணுசித்தா இங்கு இவர்கள் ஊமையராகக் கடவர்களென்று பெருமானைச் சிந்தித்துத் துதித்து விரைவாக ஒரு கவியைச் சொல்ல, அவர்கள் மாறுகொள்வது மாறித் திகைத்தார்கள். இந்தப் பூமியையாளுமவனும யுத்தத்தைச் செய்யும் பிரகாசமுடைய வேலைத்தரித்த பாண்டியனும் தந்துவார்த்தத்தை வேதஞ் சொன்னபடியே அருளிச் செயவீராக வென்றனன. (எ-று) (கக)

உ0. உலகமளித்தவனருளால வான்மீகிசதுமறையு முணர்ந் தாற்போன்றும், அலாபொருவுங்காபபணிலந தொடத்துருவ னுலகெவையு மறிந்தாறபோனறும, மலாமாலையணிமாாபத் தமை ததவடபெருங்கோயின் மாயோனனபாற், பலமறைகணவிலபொ ருளி னுயாபொருளைமுனிவரனும பகாவதானுன்.

(இ-ள்.) உலகத்தையளித்த பிரமதேவனருளாலே வான்மீகி பகவான நான்கு வேதங்களையும் உணாந்தது போலவும், பெருமானது மலரையொத்த திருக்கையிலுள்ள பாஞ்சஜந்நியம ஸ்பரிசித்ததினாலே துருவா உலகமெவறறையுமறிந்தது போலவும், மலரிலிருக்கும் பெரியபிராட்டியாரை அழகிய திருமார்பில்வைத்த வடபெருங்கோயிலி லெழுந்தருளிய பெருமானது அருளினாலே, பலவகையான வேதங்கள் சொல்லும் பலபொருள்களிலும் உயர்ந்த பொருளை விஷ்ணுசித்தரும சொலலத்தொடங்கினா. (எ-று.)

உக. பாசமருண்மாயையகு னயலாவெவ்வயினுமவன் பரந்து தோற்றம, நாசமகன்றலாமணமபோற திருவுடனசோந்தறிந்தெ தெவையு நலமதாகபு, பேசனந்தகுணநிறைநது சராசரததின் முதற்பொருளாயப் பிறழ்ந்தியாவும, ஆசகலவலலனுமா திருமா லேபொருளசுருதி யனைததிறகாமால.

(இ-ள்.) பாசத்தைக் கொடுக்கும பிரகிருதியை விட்டு நீங்காதவனாயும், அதற்குப புறம்பாயும், எவ்விடத்தும தானே வியாபித்து, உறபத்தி நாசங்கள் நீங்கி, மலரிலுள்ள மணத்தைபபோற் பெரிய பிராட்டியாருடன் கூடி, எல்லாவற்றையு முணர்ந்து, நன்மையென்று சொல்லப்படும அநந்தமான கலியாண குணங்கள் நிறைந்து, சராசரங்களுக்குக் காரணபூதனாய விளங்கி, (எங்கும் வியாபித்திருப்பினும்) அவைகளாலெயதும் எக்குற்றமும் நீங்க வல்லவனுமாகிய திருமாலே வேதமனைத்திறகும் பொருளாவன். (எ-று.) (உக)

உஉ. பரமனெனுந்திருமாலைப் பரந்தாமன்றனைக்கருதல் பகர் தல்கேட்டல், சரணடைதலடிவணங்க லருச்சனைசெய்திடறுதித் தல் தண்டமாதல, உரவுதனதுயிரவன தாக்கலெனும்பத்திதவ முஞற்றுவோரே, விரவரியசுதிபெறுவா ரொன்னுமுன்பொற்கிழி தனைக்கே வீழ்ந்ததம்மா.

(இ-ள்.) இப்படி பரப்பிரமமென்று சொல்லும் திருமாலான பரந்தாமனைச் சிந்தித்தல் சொல்லுதல் சிரவணஞ் செய்தல் சரணாகதி செய்தல் திருவடிவணங்குதல் அர்ச்சனை செய்தல் துதித்தல் தண்டப்ரணாமஞ் செய்தல் இடர்தோடு தன்னுயிரை அவனதாக்கல் என்னும் பக்தியும் தவமும் செய்யுமவர்களே அவனோடுகூடி யநுபவம் பண்ணும் அருமையான மோக்ஷத்தைப் பெறுவார்களென்று அருளிச் செய்யுமுன், பொற்கிழி (தானே யறுந்து) பூமியில் விழுந்தது. (எ-று.) (௨௨)

௨௩. தனையிலுயர்கிழிவீழ்ந்த தகைநோக்கியாங்கிருக்குஞ் சமணர்சைவர், புரையிலிழிமதிமாயா வாதியர்வைசேடிகரப் புறத்தோர்யாரும், திரையிலரவணைநெடியோ னிவனேயென்றவனிருதாள் சென்னிசேர்த்திக, கரையிலுவகையினடிமை புகுந்துபவக் கருங்கடலுங் கடந்தேமென்றார்.

(இ-ள்.) உயர்ந்த திருப்பொற்கிழி பூமியில் விழுந்த விதத்தைப் பார்த்து, அங்கு வந்தவர்களான சமணரும் சைவரும் குற்றத்திலிழிந்த மதியையுடைய மாயாவாதிகளும் வைசேஷிகரும் இன்னும் இதரசமயிகளும், திருப்பாற்கடலில் ஆதிசேஷ சயனத்திலிருக்கும் பெருமான இவரேயாமென்று அவரது இரண்டு திருவடிகளையும் சிரசிற்சேர்த்து, முடிவற்ற சந்தோஷத்தோடு அடிமைசெய்து, பிறவியாகிய பெருங்கடலும் கடந்தோமென்றார்கள். (எ-று.) (௨௩)

௨௪. பொழிந்தனர்பூமழைவானிற் புலவர்குழாஞ்சனனமெனும் புன்மைநோயின, றொழிந்தனவென்றெழுந்துபணிந் தொருவாதுபுளகரும்ப வொழிவிலாது, வழிந்திழிகண்ணீர்மாறன் மதக்களிற்றின்மிசையேற்றி வளளறன்னைச, சழிந்தபெருமிதநகரி வலம்வரலசெய்தனனனிகய கடலிற்சூழ

(இ-ள்.) வானிலுள்ள தேவர் கூட்டங்கள் புஷ்பவருஷத்தைப் பொழிந்தார்கள். பிறப்பென்னும் புன்மையும் பிறவிநோயும் இன்று ஒழிந்தனவென்று எழுந்து பணிந்து, ஓயாமற் புளகமுண்டாக, ஒழிவில்லாமல் வழிந்திழியும் கண்ணீரையுடைய பாண்டியன், வேதத்திற் சொல்லும் தத்துவார்த்தத்தை வெளியிட்ட உதாரத்துவமுடைய ஆழ்வாரை, மதத்தையுடைய யானையின் மீதேற்றி, மிகுதியான களிப்பினாலே சேனைகள் கடலைப்போற் சூழ்ந்துவர, நகரியை வலம் வருதல் செய்தனன். (எ-று.)

௨௫. தனையருயாபிரமவிர தத்துவரலகாணவருந் தந்தைதாய்போல், அனையவனதுயர்பவனி காண்குவான்மறைமலர்மேலணங்கினோடுந், துனைகருடன்மிசைவானிற் சுரர்முனிவர்பிரமன்மதி சூடிசூழ, வனைதுளவுதிகிரிகதை வளைசிலைவாள்வனசமலர் வயங்க வந்தான்.

(இ-ள்.) தமது புத்திரர் உயர்ந்த பிரமரதத்தில் வருவதைக் காணவரும் தந்தைதாய்களைப்போல, ஆழ்வாரது உயர்ந்த பவனியைக் காணும்படி, தாமரைமலரி லெழுந்தருளியிருக்கும் பெரியபிராட்டியாரோடும் விரைந்துவரும் பெரிய திருவடியின் மீது, ஆகாயத்தில் தேவர்கள் முனிவர்

கள பிரமன் சிவன இவர்கள சூழ, அணிந்த திருத்துழாய திருச்சக்கரம் கதாயுதம் பாஞ்சஜந்நியம் சார்ங்கம் வாள் நாந்தகம் தாமரைமலர் இவை கள் விளங்கும்படி, (பெருமான்) எழுந்தருளினன். (எ-று.) (உரு)

உசு. அண்டர்நெருங்குறத்திருமா லம்பரமீததோன்றலுமாங் கவனைக்கண்ணுற், கணடனன்மாலகரிககளததிற கண்டையினைத் தாளமதாய்க் கமலகைககமே, கொணடனனானந்தவெளளங் குளித் தனன்பாரமிசைக்கடிது குதிததான்றேறல, உண்டனனுமெனப் பரவி யாடினன்பாடினன்றனையு முணாந்திலாதான்.

(இ-ள்.) தேவர்கள நெருங்குமபடி பெருமான் ஆகாயத்தில் சேவை சாதித்தலும், அங்கு அப்பெருமானைக் கண்ணுற சேவித்தவரான ஆழ்வார், உயர்ந்த யானையின் தோளிலிட்ட மணியைத் தாளமாகத் திருக்கைகளிற் கொண்டு, ஆநந்த வெள்ளத்திற குளித்து, பூமியின்மீது விரைவாகக் குதி த்து, ஆநந்தத் தேனை யுண்டனனென்று சொலலும்படி வணங்கித், தன்னையு முணராதவராகி ஆடிப் பாடினர். (எ-று.) (உசு)

உஎ. காலமிகந்துயாபரம பதத்துறையும்பரம்பொருண்முக் காலநீஙகா, ஞாலமிசைவெளிபபடிறறிங கணுகுமஃதகனலமே நவிலவாமென்னச, சீலமிகுமுனிகருதி மலலவென்றதோளினுக் குந திருமாபிறகும, நீலமுகிலவடிவினுக்கு மைம்படைகளுக்கு மலா நிகாதாளிற்கும

(இ-ள்.) காலசாமபிராச்சியததைக கடந்து உயர்ந்திருந்துள்ள பரம பததகிலிருக்கும் பரம்பொருளானவன முக்கால சாம்பிராச்சியமுடைய பூமியின்மீது தோன்றின் தீங்கு சமபவிக்குமே, அத்தீங்கு நீங்க மங்கலத் தைச் சொல்லுவோமென்று, நல்ல ஞானுதிசமுடைய ஆழவார் சிந்தித்து, மல்லர்களை வென்ற திருததோள்களுக்கும் திருமாபுக்கும நீலநிறமுடைய மேகம்போனற திருமேனிக்கும பஞசாயுதாழவார்களுக்கும மலரை நிகர் த்த திருவடிகளுக்கும (எ-று.) (உஎ)

உஅ. தனக்குமறைப்பொருளுதவித் தனையாண்டகடவுளுக்கு ம் சகம்யாவிற்கும், தனக்குநிகாதிருமாறகு முளதாயகாரியகா ரணத்தின்கண்ணும், எனக்குலவுபுணாபபினுக்கும பல்லாண்டெ ன்றொருபனுவ லிசைத்துமேலும, மனக்குவகைதருங்காப்பீ டிந் திரனேடெனத்தொடஙகி வழுத்தினுல.

(இ-ள்.) தமக்கும் வேதார்த்தங்களை யளித்துத் தம்மையாண்ட பெரு மானுக்கும் சேதநாசேதநாத்மகமான ஜகமெவற்றிறகும் தன்னையொத்த பெருமானுக்குமுள்ளதான காரிய காரணத்தினிடத்தது என்று சொல் லும் சம்பந்தத்துக்கும் பல்லாண்டென்று ஒரு பிரபந்தத்தை யருளிச்செ யது, மேலும் மனதுக்குச் சநதோஷமுண்டாக்கும் காப்பிடுதலை "இந் திரனேடு" எனத் தொடங்கி அருளிச் செய்தனர். (எ-று.) (உஅ)

உகூ. அலர்த்தொடைகஞ்சனுக்குதவு மவன்மனைக்கன்றடிவ ருந்த வடைந்துமாயோன், மலர்த்தெரியலிரந்துதிருப் புயத்த ணிந்தானெனத்தனது மனத்துட்கொள்ளாச் சொலற்கரியபொரு

ள்கெழும்பூச சூட்டெனும்பாடடாங்கினைமுற் றுலங்கசசொல்லா, நலத்தகதிபுவிசகருளவான் றிருமொழிநானூற் றறுபானவின்று னல்லோன.

(இ-ள்.) மலர்மாலைகளைக் கண்சனுக்குக் கொடுக்கும் திருமாலாகாரர் திருமாளிகையினிடத்து அக்காலத்தில திருவடிகள் வருந்தும்படி கண்ண பிரானெழுந்தருளி மலாமாலைகளை யிரநது தமது அழகிய புஜங்களில் அணிந்து கொண்டனனென்று (ஆழ்வார்) தமது திருவுள்ளத்திற் கொண்டு, சொல்லுவதற்கரிய அர்த்தங்களின் அபிவிருத்தியையுடைய பூச்சூட்டிக் கொள்ளுவாயாச என்னும் பாட்டுக்களை "ஆநிரை மேய்க்கநீபோதி" யென்பது முதலில் விளங்க அருளிச்செயது, பரிபூரணபரப்ரஹமாநுபவமாகிய நன்மையையுடைய மோக்ஷத்தைப் பூமியிலுள்ளவர்கட்குக் கொடுக்கும்படி திருமொழி நானூற்றறுபத்தொரு பாட்டுக்களை (சேதநோஜ்ஜீவநத்தில்) நல்லவராகிய ஆழ்வார் அருளிச் செயதனர். (எ-று.) (உகூ)

‡ நான்குநூற்றெழுபதின்மூன்றுநன்கமைந்
தான்றவத்திருமொழியதனுளாழிகைத்
தேன்கமழ்துளவமாதிருவுருக்கொடு
தோன்றுமூரிருபதின்மூன்றுசொன்னதே.

‡ அரங்கம்வெள்ளறைகுறுங்குடிகுடந்தைவதரிகாச்
சிரமம்வேங்கடங்கோட்டியூர்சிர்க்கங்கைக்கரையினை
மருவுகண்டஞ்சோலைக்கிரிசாளக்கிராமம்
பொருவிலாதசீர்பொருநதுபேர்திருக்கணபுரமே.

‡ திருவைகுந்தமோடாயர்தம்பாடிசீர்வடம
துரையயோத்திகோவர்த்தனம்வில்லிபுத்தூர்து
வரையொடுஞ்சித்ரகூடமுமதுரையிறகூடல்
புருடவுத்தமம்பாற்கடலெனுமபெயாபொருந்தும்.

கூ0. அவனியருந்தரியலகி லவதாரமகததுளமைத் தழியா வின்பந், தவலைகலநுகாந்தனைவ வுவகையுளததடஙகாது தடந் தோபார்த்தற், குவனையினூர்ந்தவனசரிதை பிளைத்தமிழின்பனுவலதா யுரைததுபபோறறப, பவமகலவருண்முகிலும் படடர்பிரானெனுநாமம் பாலித்தானல.

(இ-ள்.) (அத்திருமொழியில்) உலகமுண்ட பெருமானது கணக்கற்ற அவதாரவிசேஷங்களைத் திருவுள்ளத்திற்கொண்டு அழியாத இனபத்தைக் குறைவற வநுபவித்தனர் அவ்வநுபவம உள்ளத்திலடங்காமல் அருச்சுனனுக்குப் பெருந்தேரைச் செலுத்திய கண்ணபிரானது வைபவததைப் பிள்ளைத் தமிழ்ப்பாட்டுக்களாக அருளிச்செயது போற்றப், பிறப்பு நீங்கும்படி கிருபைசெயயும் மேகம்போன்ற பெருமானும் பட்டர்பிரானென்னுந் திருநாமத்தை யளித்தனன். (எ-று.) (கூ0)

கூக. மாதவமாலகளிறறெயிறு பறித்தபரந்தாமவெனு வழுத்தும்படட, நாதனைநின்பதிககேகு கெனவிடையீந்தனைவருக்கு நாதன்றனும், வேதமுனிவரரிமையோர் விரிஞ்சனுருத்திரன்முதலோர் விரும்புந்தூய, பாதமலருவணனிரு புயமிசைகவுயர்பரம பதத்தைச் சார்ந்தான்.

(இ-ள்.) மாதவனே! பெரிய குவலயாபீட மென்னும் யானையின் தந்தங்களைப்பறித்த பரந்தாமனே! என்று தோத்திரஞ் செய்யும் பட்டநாதரான ஆழ்வாரை உமது பதியாகிய ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் செல்லுவீராகவென்று நியமநமளித்து, அனைவருக்கும் நாதனான பெருமானும், வேதங்களையுணர்ந்த முனிசிரேஷ்டர்கள் தேவர்கள் பிரமன் சிவன் முதலானவர்கள் விரும்பும் பரிசுத்தமான திருவடித்தாமரைகள் பெரியதிருவடியின் இரண்டு திருப்புயங்களில் விளங்க, உயர்ந்த பரமபதத்தை யடைந்தனன். (எ-று) (௯௧)

௯௨. செம்பதுமத்திருமாபனகன்றதற்பின்பட்டாபிரான்செங்கோல்மாட்சி, உம்பர்புகழ்வழுதியனை யாட்கொண்டங்குபதேசித் துதத்திசூழும், இம்பர்முறைபுரத்தியென்று விடைகொடுத்து முனிவர்முதலெவருமபோற்றித, தம்பரிவிற்புடைசூழ வில்லிபுத்தூரொனுந்தனது தலத்தைச்சார்ந்தான்.

(இ-ள்) சிவந்த தாமரையில் எழுந்தருளிய பெரிய பிராட்டியார் வாசஞ்செய்யும் திருமார்பையுடைய எம்பிரான் எழுந்தருளின்பிறகு, ஆழ்வார், செங்கோலின் மாட்சிமையாலே தேவர்கள் புகழும் பாண்டியனை அங்கு அடிமை கொண்டு, உபதேசமளித்து, சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகத்தை முறைப்படி ரக்ஷிப்பாயாக வென்று நியமித்துவிட்டு, முனிவர் முதலிய யாவரும் துதித்துத் தம்முடைய பிரீதியினாலே புடைசூழ்ந்துவர, ஸ்ரீவில்லிபுத்தூரொனும் தமது இடத்தைச் சார்ந்தனர். (எ-று.) (௯௨)

௯௩. அந்நகரந்தணர்முதலோரனைவருமாமுனிவருமாலறையக்கேளர், உன்னருமோகையினெதிர்போந் தடிவணங்கிநகர்வயினே குறுச்சாலப், பொன்னணிசிங்காதனத்தி னிருத்தியருச்சனைபுரிந்து போற்றிவாழ்ந்தார், இன்னலகலபரமபதத் தீசனுக்கில்லாக்கியநல் லிதயத்தானும்

(இ-ள்.) (அப்போது) அந்நகரத்திலுள்ள அந்தணர் முதலிய அனைத்துவருணத்தோர்களும் பெரிய முனிவர்களும் வடபெருங்கோயிலுடையானென பெருமானருளிச் செய்யக்கேட்டு, நினைத்தற்கரிய சந்தோஷத்தோடு எதிர்கொண்டுவந்து அவரது திருவடிகளை வணங்கி அந்நகரத்தினிடத்துச் சென்று, மிகவும் பொன்னினாலழகமையச் செய்த சிங்காதனத்திலெழுந்தருள்வித்து அர்ச்சனைசெய்து துதித்து வாழ்ந்தார்கள். தீமையகன்ற பரமபதத்தி லெழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு வாசஸ்தானமாக்கின நன்மைவாய்ந்த இருதயத்தை யுடையவரான ஆழ்வாரும், (எ-று.) (௯௩)

வேறு.

௯௪. மணிமதில்வடபெருங்கோயின்மாயனுக்
கணிபலவமைத்தகலவனியோர்பவப்
பிணிமருந்தெனுமணியரங்கப்பெட்டகப்
பணிமணியிவனெனப்பணிந்துபோற்றவே

(இ-ள்) அழகிய மதில்கள் சூழ்ந்த வடபெருங்கோயிலுடையானென பெருமானுக்குத் திருவாபரண கைங்கரியங்கள் செய்து, அகன்ற பூமியிலுள்ளவர்களது பிறப்பாகிய நோய்க்கு மருந்தென்று சொல்லும் திருவரங்கமாகிற பெட்டகத்தில் ஆதிசேஷசயனத்தி லிருக்கும் நீல மணிபோன்ற பெருமான் இவரேதாமென்று பணிந்து துதிக்க (எ-று.) (௯௪)

௬௫. மறையுடனுகமந்தெரிந்துமற்றதன்
றுறைகடறபுவியெலாந்துலக்கித்தூயமால
நிறைதரிசனநிலைநிறுத்திநேயத்தின்
முறைதவாதிசைதிசைமுற்றவைகினன்.

(இ-ள்) வேதங்களுடன அவ்வேதார்த்தங்களுக்கு விரோதியாத சாஸ்திரங்களையும் அறிந்து, அந்த வேதசாஸ்திர மார்க்கத்தாலே கடல்சூழ்ந்த பூமியிலுள்ளவர்களை யெல்லாம் விளங்கச்செய்து, மஹாவிஷ்ணுவை பெருமானது குறைவற்ற சமயத்தை நிலைநிறுத்தித், தமது பக்தியின் முறைமை கெடாது தமது கீர்த்தி, திசைகளில் பரவும்படி எழுந்தருளியிருந்தனர். (எ-று.) (௬௫)

௬௬. மதிதகிடுநகடற்றுயின்மலர்க்கண்மாயனைத்
துதிதிருடபவனைந்துமித்துதொன்மறை
விதித்தவன்சமயமாம்பயிர்விளங்கியே
கதித்திடபபரமதக்களைகளைந்தனன்.

(இ-ள்.) சந்திரன் திருப்பாற்கடலில் அறிதுயிலமர்ந்த தாமரைமலர் போன்ற திருக்கண்களையுடைய மாயப்பிரானைத் துதித்து, இருவினைக்கும் பிறப்பாகிய காட்டைவெட்டிப் பழமையாகிய வேதங்களை விதித்தவனது சமயமாகிய பயிர் விளக்கமடைந்து அபிவிருத்தியடையும்படி இதரமதமாகிய குற்றங்களாகிய களைகளை ஒழித்தனர். (எ-று) (௬௬)

௬௭. கதிரவன்குணதிசைகடலிற்றோன்றுமுன
முதிரவன்றுயிலெழாமுழுகிமுன்னைநால
விதிவழாதருக்கியங்கொடுத்துமேதகு
மதிதருதவளமண்மரபிற்சாத்தியே

(இ-ள்.) சூரியன் கிழக்குத்திசைக்கடலில் உதயமாகு முன்னம், ஞானத்தால் முதிர்ந்தவரான ஆழ்வார், துயிலெழுந்து, நீராடி, வேதவிதி தவறாது அர்க்கியங்கொடுத்து, உயர்ந்த ஞானமளிக்கும் வெண்மண்ணை முறைப்படி யணிந்து, (எ-று.) (௬௭)

௬௮. கதைசிலைநாந்தகங்கமலஞ்சம்புதேர்
உதையவிலொளிர்செழுந்திகிரியொண்மைநால
ததைமலரலங்கல்பைந்துளவின்றார்கலை
சிதைவிலசெந்திருவளர்வருமச்சமுசெம்மணி

(இ-ள்.) கதாயுதம், சார்ங்கம், நாந்தகம், தாமரை, திருச்சங்கு, தேரையுடைய சூரியன்போலப் பிரகாசிக்கும் செழுமையான திருச்சக்கரம், ஒளிபொருந்திய யக்ஞோபவீதம், மலர்கள் நெருங்கிய திருமாலை, திருத்துழாய்மாலை, திருப்பீதாம்பரம், கெடுதலில்லாத *செம்மையான பெரிய பிராட்டியார், பெருமைவளரும் ஸ்ரீவத்சம், கௌஸ்துபம், (எ-று.) (௬௮)

௬௯. சிலம்புதிண்கழன்மணித்திரளின்கங்கணம்
வலங்கொளங்கதமுடிமகரகுண்டலம்
பொலங்கதிர்பதக்கமேமுதலபூணெலாம
நலம்பெறத்தரித்தநாரணனைநாதனை

(இ-ள்.) சிலம்பு, திண்ணிய வீரகண்டை, ரத்தினக்கூட்டங்களையுடைய கங்கணம், வலிய தோளணி, திருவபிஷேகம், மகரகுண்டலம், பொலிவு பெற்ற பிரகாசமுடைய பதக்கம் முதலிய திருவாபரணங்களை யெல்லாம் அடியார் நன்மை பெறும்படி யணிந்த நாராயணனை, யாவருக்கும் நாதனை, (எ-று.) (கூகூ)

சுO. சுருதியின்பொருளையச்சுதனைத்தூயனை
இருபதமுதலமுடிகாறுமின்புறக்
கருதிமெய்புளகியாக்கண்கணீர்தரத்
தெருளினெட்டக்கரத்தியானமுற்றியே

(இ-ள்.) வேதப்பொருளானவனை, அடியார்களைக் கைவிடாதவனை, பரிசுத்தனை இரண்டு திருவடிகள் முதல் திருமுடிவரையில் பிரீதியுண்டாகும்படி சிந்தித்து, திருமேனிபுளகமடைந்து கண்கள் நீர்வடிய, மெய்ஞ்ஞானமளிக்கும் திருவஷ்டாக்ஷர தியானமமுற்றி (எ-று) (சுO)

சுக. தாமரைமணியொடுதுளவின்றாவடம்
காமரமார்பத்திடைக்கவின்றமூன்றுநூல்
வாமமார்புயத்தெழில் வயங்கவண்டுணத்
தேமலிமலர்மணமவிழைவிற்சேர்வுறு

(இ-ள்) தாமரைமணிமாலையோடு திருத்துழாயமணிமாலையும் அழகிய திருமார்பினிடத்துப் பொலிவுபெற, முப்புரிநூல் அழகையுடைய புஜங்களில் அழகோடிருக்கவும், வண்டுகள் உண்ணுந் தேனமிகுந்த மலரிலுள்ள வாசனை ஆசையோடு சேர்ந்து (எ-று.) (சுக)

சுஉ. பொருந்தியவரியுறுபபோதுகோத்துகொய்
திருந்துணாப்பட்டழுதுநீத்தெறிந்துகூடையில
திருந்துறநிறைத்தகனுசேர்ந்துநூலினுல
அருந்தகைதருமணியலங்கலாக்கியே

(இ-ள்.) அக்க பொருந்திய வண்டுகள் ஸ்பரிசியாத புஷ்பமறிந்து கொய்து, பெரிய பூங்கொத்துக்களிலுள்ள பழுது நீக்கியொழித்து, திருப்பூங்கூடையில் திருத்தமுறும்படி நிறைத்து, திருமாளிகையை யடைந்து, நூலினலே அரிய பெருமையை யளிக்கும் அழகிய திருமாலைகளாக்கி, (எ-று.) ()

சுங. தடந்தருதமனியத்தட்டிற்றண்டைதார்
வடஞ்சரமிலம்பகமினையமற்றவுந்
தொடர்ந்தபேரன்பினுற்றுங்கிச்சூழ்வினை
அடர்ந்தநாயகன்றிருக்கோயிலணமியே

(இ-ள்) விசாலமான பொன் தட்டில், தண்டை தார வடம் சரம் இலம்பகம் இதுபோன்ற மற்றவைகளையும், தொடர்ந்ததான பேரானந்தத்தோடு ஏந்தித், தம்மைச் சூழ்ந்த பாபராசிகளைக் கெடுத்த பெருமானது திருக்கோயிலையடைந்து, (எ-று.) (சுங)

சுச. உள்ளநின்றுருகமெய்புளகமோங்குற
வள்ளன்மீதமைத்தசெம்மலர்க்கணீர்தர

எள்ளருந்தொடைமுறையிலங்கசாத்திமால்
தள்ளருமபவப்பிணிதடிந்ததாளினாய்

(இ-ள்.) திருவுள்ளம் கின்றுருகவும் திருமேனியில் புளகமதிகரிக்கவும் பெருமான்மீது வைத்த செம்மையான மலர்போன்ற கருக்கண்கள் ஆநந்த நீர் சொரியவும் பழிப்பற்ற திருமாலேயை முறையாக விளங்கும்படி சாத தி, மயக்கம் நீக்கரிய பிறவியாகிய நோயைக் கொடுத்த திருவடிகளை யுடையவனே! (எ-று.) (சச)

சரு. திசைமுகனுருத்திரன்றேவர்யாவரும்
நசைதிறநதிறைஞசவாழ்நளினநாபியாய்
வசைதணந்துயாச துமறைவழுத்துசீா
இசையிறையெனப்பராயிறைஞ்சிவாழுநாள்

(இ-ள்.) பிரமன் உருத்திரன் தேவர்கள் முதலிய யாவரும் ஆசைபெருகி வணங்கும்படி வாழும் தாமரைபூசுத திருநாபியையுடையவனே! குற்றம்நீங்கி யுயர்ந்த நான்கு வேதங்களும் பிரதிபாதிக்கும் கலியாணகுணவைபவங்களையுடையவனே! என்று துதித்து வணங்கி வாழுநாளில் (எ-று.)

அடியில் வருமவை வேறொரு செய்யுட் குருபரம்பரையிற் கண்டவை.

* வடக்கினிலுளதொருநாட்டின்மாமுகில்
இடக்கராயதுளிபெயலின்றி நிற்பவும்
நடக்குவநிற்பவநாசமெய்திடத்
தடக்கராசலத்தினத்தரணிமன்னவன

(இ-ள்.) வடக்கின்கணுள்ளதொரு நாட்டில் கரிய மேகங்கள் மறைவுற்று மழை பெய்தலின்றியே நிற்க, அதனால் இயங்குதிணையும் இயங்காத்திணையும் அழியவே அப்பூமியையாளும் பெரிய யானையையுடைய அரசன், (எ-று.) (க)

* வேதமோர்சருமறைவிந்தகாப்பராயத்
தீதுசெயகலியதுதீர்ந்துநாடெலாஞ்
சீதமார்முகில்பெயச்செழிப்படைந்துய
ஓதுவிரெனவவரன்பினேதுவார்.

(இ-ள்.) வேதங்களையுணர்ந்த வேதியரை வணங்கி, தீமை செய்யும் க்ஷாமம் நீங்கி நாடுமுழுமையும் குளிர்ந்த மேகங்கள் மழை பெய்ய, அதனால் உலகு செழிப்படைந்து பிழைக்கும்படி ஒருபாயம் சொல்லுவீர்களென்று கேட்க, அவ்வேதியர் அன்புடன் சொல்லுவர்: (எ-று.) (உ)

* பிரமநிட்டையினையார்பெரியரிவ்வுழி
பரவநாம்வருவரேற்பகருமம்புதம்
பரவவேபெயயுமால்பாருமோங்கிடுந்
திரமிதுவென்றனர்தேர்ந்தநூலினோர்.

(இ-ள்.) பிரமநிஷ்டையில் யார் பெரியரோ? அவர் இந்நாட்டுக்கு நாம் வணங்குமாறு வருவராயின், யாவருஞ் சொல்லும் மேகம் எங்கும் பரம்புமாறு மழைபெய்யும்; நாடும் விர்த்தியடையும்; இது உண்மையே எனத் தேர்ந்த சாஸ்திரஞானமுடையார் சொல்லினர். (எ-று.) (௩)

* மன்னவனன்னமாமகிமையெயதினோர்
இன்னவாமிடந்தனிலிருப்பரென்றவர்ச்
சொன்னவர்க்களவிலாச்சுவணமீகுவன
என்னவெவ்வுலகமுமினிதினோரவே

(இ-ள்.) அரசன, அத்தகைய பெரிய மகிமையுடையோர் இன்னவிடத்துள்ளார் என்று அவனைச் சொனனவர்க்கு அளவற்ற பொன்னைக் கொடுப்பேன் எனறு எந்நாட்டிலுள்ளாரும நன்கறியும்படி (எ-று.) (௪)

* தெரிதரச்செயதனன்சிறிதுநாளிடைப்
பிரியமோடண்மியேபேசினோர்வயின்
பெரியசீர்ப்பட்டர்கோன்பெருமையோர்ந்தவன்
உரியனவெவையுமேயுடன்கொடேகியே

(இ-ள்) தெரியச்செய்தனன; சிறிதுநாளில், பிரியத்துடன் தனனைச் சேர்ந்து பேசினோரிடத்து, உயர்ந்த சிறப்பையுடைய பெரியாழ்வாரது வைபவத்தையுணர்ந்து, அவ்வரசன, உரியனவான பொருள்களைத் தன்னுடன் கொண்டு சென்று (எ-று.) (௫)

* வில்லிபுத்தூரினைமேவியாண்டமர்
நல்லியற்பட்டர்தந்நாதன்றனனைச்சேர்ந்
தல்லியங்கமலநேரவனறருள்பணிந
தல்லலைக்களைதியென்றன்பினேத்தினன்.

(இ-ள்) ஸ்ரீவில்லிபுத்தூரையடைந்து அங்கு எழுந்தருளியிருக்கும் நல்ல ஞாநாநுஷ்டாநங்களையுடைய பெரியாழ்வாரைக்கிட்டி அகவிதழையுடைய அழகிய தாமரைபோன்ற அவரது நல்ல திருவடிகளை வணங்கி, எனது வருத்தத்தை நீக்குவீராகவென்று அன்போடு துதித்தனன். (எ-று.)

* கேட்டவேதியர்கள்கோன்கிளர்ந்தவன்பினால்
வாட்டிறன்மனனவன்வயங்கக்காவல்செய
நாட்டினிலுளகலிநலிந்துசாமபிட
ஈட்டமோடெழுந்தனனெவரும்போற்றவே.

(இ-ள்.) அதனைக் கேட்ட பட்டர்பிரான, உயர்ந்த அன்புடன் வாளையும் வலிமையுமுடைய அம்மன்னவன விளங்கும்படி காத்துவரும் நாட்டிலுள்ள க்ஷாமம், மெலிந்து ஒடுங்கும்படி, யாவரும் போறறத் தமது பரிவாரங்களுடன் எழுந்தருளினர். (எ-று.) (எ)

* தூயவனன்னநாடதனிற்றுன்னலுஞ்
சேயுயர்முகிற்கணஞ்செறிந்துதண்ணருண்
மாயவனுருவெனமல்கியேபரந
தாயவனாழிபோலமையமின்னியே

(இ-ள்.) ஆழ்வார், அந்நாட்டையடைதலும், ஆகாயத்துள்ள மேகக் கூட்டம் நெருங்கி, குளிர்ந்த அருளையுடைய எம்பெருமானது திருமேனி நிறம்போல விளங்கி (கறுத்து), எங்கும்பரவி, அப்பெருமானது திருவாழியைப்போல நிலைபெறமின்னி, (எ-று.) (அ)

* சங்கெனக்குமுறியேசார்ங்கம்பெயதிடுங்
கங்கபத்திரமெனக்கதித்தமாமழை
எங்கணும்பொழிதரவிணையில்பட்டர்கோன்
சங்கையற்றிடப்பரத்துவத்தைச்சாற்றவே

(இ-ள்.) பாஞ்சஜந்நியம்போலக் குமுறி, சார்ங்கம்பெய்யும் அம்புகளைப்போல நெருங்கிய பெரிய மழையை எங்கும் பொழியவே ஒப்பற்ற பெரியாழ்வார் சங்கையறுமபடி பரத்துவத்தை யெடுத்துச் சொல்ல, (எ-று.)

* பாறியசமயவாதியர்கள்சொல்லைப்போற்
சீறியகொடுங்கலிதீர்ந்துநாடெலாந
தேறியவன்னவன்சிந்தையாமென
ஊறியசாந்திபெற்றுயர்ந்ததென்பவே.

(இ-ள்) ஓடிய சமயவாதியர் சொல்லைப்போல, யாவரையுஞ்சீறிய கொடிய க்ஷாமமானது நீங்க, தெளிவுபெற்ற அவ்வாழ்வாரது திருவுள்ளம் போல் அந்நாடெல்லாம் பொருந்திய சாந்தியைப் பெற்று உயர்ந்தது. (எ-று.) (க0)

* அரசனுநாட்டவரனைவருங்குழீஇ
முரசமாதியவியமுழங்கியேங்கிடப்
புரசையானையின்மிசைப்புனிதனைக்கொடு
பரசுமூர்வலம்வரப்பணிந்துபோற்றினர்.

(இ-ள்.) அரசனும் அந்நாட்டிலுள்ளாருங் கூடி, பேரிகை முதலிய வாத்தியங்கள் மிகுதியுமொலிக்க, கழுத்திடு கயிற்றையுடைய யானையின்மீது ஆழ்வாரைக் கொண்டு, சொல்லப்படும் ஊர்வலம்வந்து, பணிந்து துதித்தனர். (எ-று) (கக)

* எல்லையற்றுயர்ந்தவனினியதண்ணருட்
கில்லைகைம்மாறெனவேங்குசிந்தையார்
கல்லையன்றடித்துகள்கதுவப்பெண்செயுந
தொல்லைமாலிவனெனச்சொல்லிவாழ்த்தினர்.

(இ-ள்.) எல்லையற்றுயர்ந்த ஆழ்வாரது இனிய குளிர்ந்த அருளுக்குக் கைம்மாறில்லை யென எங்குஞ் சிந்தையையுடைய அந்நாட்டிலுள்ளார், தனது திருவடித்தூள் படுதலும் கல்லைப் பெண்ணாக்கிய அநாதியான எம்பெருமான இவரேயாமெனக் கூறி வாழ்த்தினர். (எ-று.) (கஉ)

வேறு.

* பட்டர்நாதனுமன்னவன்றன்னொடுபாருளோர்தொழுதேத்த
இட்டமோடவர்க்கின்னருள்பொழிந்திணைபடிநிலையவர்க்கீந்தே
சிட்டர்போற்றிடத்தென்றிசைநோக்கியேதிரும்புங்காலளிபாயக்
கட்டவிழ்ந்தடும்பொழில்புடைசெறிகங்கைக்கரைக்கண்டப்பதிசேர்ந்தே

(இ-ள்) ஆழ்வாரும் அரசனுடனே அந்நாட்டிலுள்ளார் வணங்கித் துதிக்க, அன்புடனே அவர்கட்கு இனிய திருவருளையளித்து, இரண்டு திருவடிநிலைகளை அவர்கட்குக் கொடுத்துப், பெரியோர் துதிக்கும்படி தெற்குத் திசையை நோக்கித் திரும்பும்போது, வண்டுகள் பாய முறுக்கவிழும் சோலைகள் பக்கங்களில் நெருங்கிய திருக்கங்கைக் கரைக்கண்டம் என்னுந் திருப்பதியையடைந்து, (எ-று.) (கங)

* ஆங்குவைகிடுமத்தனைமறைமுடியமர்ந்துறைபவனைப்பூத்
தாங்குதாளனைமாமகிணனைப்பராய்த்தங்கையைமூக்கென்றே
ஓங்குநற்பதிகம்முறைத்திருதியிலொளிர்கவிதனின்மாந்தர்
எங்குவெங்கலிநலிந்திடாப்புதுவைமன்னென்றெடுத்தருளோடும்

(இ-ள்) அங்கு எழுந்தருளியிருக்கும் பெருமானை, உபநிஷத்துக்களில் பொருந்தியிருக்குமவனை, தாமரை சுமக்கும் பாதங்களையுடையவனை, திரு மாமகள் நாயகனை, வணங்கி, "தங்கைய மூக்குந் தமையனைத் தலையுந் தடிந்த வென்றுசரதி" என்று உயர்ந்த நல்ல திருப்பதிக மொழி அருளிச் செய்து, இறுதியில் விளங்கும் கவியில, மக்கள் ஏங்குவதற்குக் காரணமான "வெங்கலி, நலியா வில்லிபுத்தூர்க்கோன் விட்டுசித்தன்" என அருளோடெடுத்து (எ-று.) (கச)

* சாற்றிவில்லிபுத்தூரினைச்சார்தலுந்தகைபெறநகருள்ளோர்
போற்றியேமகிழ்கொண்டுவந்தெதிர்கொளப்பொறிபரவணைமேவிக்
கூற்றினுக்கடியவர்வெருவிடாவகைகோதுளவவையெல்லாம்
மாற்றிநல்லருள்பொழிந்திடும்பரமனைப்பரிவொடும்பணிந்திட்டான.

(இ-ள்.) அருளிச்செய்து, ஸ்ரீவில்லிபுத்தூரை யடைதலும், பெருமை பெற்ற அந்நகரத்திலுள்ளார், போற்றி, ஆநந்தங் கொண்டு எதிர் கொள்ளப் படப்பொறியையுடைய ஆதிசேஷசயநத்தில் எழுந்தருளியிருந்து தன் அடியார் யமனுக்குப் பயப்படாதபடி தோஷமாயுள்ளவைகளை யெல்லாம் போக்கி நல்ல அருள் பொழியும் பெருமானான வடபெருங்கோயிலுடையானை அன்புடன் பணிந்தனர். (எ-று) (கரு)

சசு. மாதவன்வடபெருங்கோயின்மாயனைப்
பாதபங்கயமலர்பணிந்தங்கோர்பகல்
ஆதரத்தலர்களாலருச்சித்தாழியாய்
ஏதமின்மகவெனக்கருள்கென்றேத்தினன்.

(இ-ள்) பெரிய பிராட்டியாருக்கு நாயகனான வடபெருங்கோயில் மாயப்பிரானை அங்கு ஒருதினம் திருவடித்தாமரைகளைப் பணிந்து, பக்தியோடு மலர்களாலருச்சனை செய்து திருவாழியைத் தரித்தவனே! குற்றமற்ற குழந்தையை யெனக்களிப்பாயாக வென்று துதித்தனர். (எ-று)

சஎ. கடவுளுந்தன்மணிக்காலப்பெட்டகத்
தடலரவணைத்துயிலரங்கத்தீசனுக்
குடனமர்தலைவியாயொருபெண்ணுனமலர்த்
துடவையுட்டுளவின்கட்டோன்றுவாளென்றான்.

(இ-ள்) வடபெருங்கோயிலுடையானும் பிரகாசமுடைய மணிகளிழைத்த பொற்பெட்டகத்தில் வலிய ஆதிசேஷசயநத்தில் அறிதுயிலமரும் அரங்கநாயகனுக்கு உடன்கூடியிருக்கும் தலைவியாக ஒரு பெண், உமது மலர்களையுடைய நந்தனவனத்தில் திருத்துழாய்ச் செடியினிடத்து அவதரிப் பளென்றனன். (எ-று.) (சஎ)

சஅ. மறைமுதலுதவுசீர்வரத்தின்மாட்சியால்
நிறையுவகையினுயர்தவமுநேயமும்
பொறையொடுதருமமும்பொருந்திவாழ்வதோர்
உறையுளானவன்பணிந்துருகியேத்தியே

(இ-ள்.) வேதங்களிற் பிரதிபாதிக்கும் முதற்பொருளான பெருமான் அளித்த சிறப்பையுடைய வரத்தின் பெருமையாலே நிறைந்த சந்தோஷத் தோடு உயர்ந்த தவமும் பக்தியும் சாந்தத்துடன் தருமமும் பொருந்தி வாழ்வதாகிய ஒப்பற்ற இருப்பிடமான ஆழ்வார் பணிந்து, உருகி, ஏத்தி, (எ-று.) (சஅ)

சகூ. விடைகொடுநவமணிவிளங்குமாளிகை
அடைதராமிகவுமன்பகத்துட்பொங்கவே
தொடையலின்பணிவிடைசுருதிநாதனுக்
கிடைவிடாதனுதினமியற்றிவைகினான்.

(இ-ள்.) பெருமானிடத்து நியமநங்கொண்டு நவமணிகளாலே விளங்கும் திருமாளிகையை யடைந்து பக்தி மிகுதியுந் திருவுள்ளத்தி லதிகரிக்கும்படி திருமாலை கைங்கரியத்தைச் சுருதிநாதனுக்கு இடைவிடாமல் அநுதினமும் இயற்றிவந்தனர். (எ-று.) (சகூ)

வேறு.

ருo. மலர்க்கோதைமகிழ்மார்பன் றிருவருளான்மறைப்பொருளின் வாய்மையார்மேற, பலர்க்கோதைவாழ்வளித்த பட்டர்பிரான்றிருமகளாய்ப் பைங்கோதைக்கே, அலர்க்கோதைபுனைந்ததனை யரவணைமாயனுக்களித்தோ ரழகுவாய்ந்த, நிலக்கோதை கருங்குவளை நிகர்விழியாடிருக்கதைமே னிகழ்த்துகின்றாம்.

(இ-ள்.) தாமரைமலரி லெழுந்தருளிய பெரியபிராட்டியார் மகிழும் திருமார்பையுடைய பெருமானது திருவருளால் வேதங்களிற் சொல்லும் அர்த்தங்களின உண்மையுடையவராய முன்பு பலருக்கும் பெரிய வாழ்வைக் கொடுத்த பட்டர்பிரானாரான பெரியாழ்வாரது திருமகளாயவதரித்துத் தமது பசிய திருக்குழலில் மலர்மாலையையணிந்து அம்மாலையை ஆதிசேஷ சயநத்தையுடைய மாயபிரானுக்கு அளித்து ஒப்பற்ற அழகு பொருந்திய பூமிப்பிராட்டியினம்சமான சோதை நாய்கியாரான நீலோற்பல மலரையொத்த திருக்கண்களையுடைய ஸ்ரீ ஆண்டாளது திருக்கதையை இனிமேல் சொல்லுகின்றோம். (எ-று.) (ருo)

இவ்வாழ்வார் கலியுகவருஷம் நாற்பத்தேழாவதான குரோதன வருஷம் ஆனிமாதம் சுக்லபக்ஷம் ஏகாதசி திதி சுவாதிநக்ஷத்திரம் கூடிய ஆதிவாரம் திருவவதாரஞ் செய்து இவ்வுலகில் எண்பத்தைந்து வருஷமெழுந்தருளியிருந்தன ரென்பர்.

பட்டநாதசருக்கம் முற்றிற்று.



ஸ்ரீ

# ௪௦-வது கோதைச்சருக்கம்.

[பூமிதேவி.]

௧. அண்ணலசெங்கண்மாலகமகிழ்ந்தருந்திபுமளந்தும்
விண்ணகம்புகழ்கேழலாயெடுத்துமேவிரும்பும்
பெண்ணளந்திடற்கருஞ்சராசரமெலாம்பெறறாள்
வண்ணமென்குழற்கயறகணாள்மரகதவடிவாள்.

(இ-ள்.) பெருமையையுடையவனும், சிவந்த திருக்கண்களையுடைய பெருமான, திருவுளமகிழ்ந்து உண்டும், அளந்தும், தேவலோகவாசிகள் புகழும் ஆதிவராகமா யெடுத்தும் விரும்பும் பெண்ணுனவள், அளப்பதறகரிய சராசரங்களை யெல்லாம் பெறறவள்; மயிர்ச்சாநதணிந்த மிருதுவான கூந்தலையும கயல்மீன போலுங் கண்களையுமுடையவள்; மரகதமணி போலும் திருமேனியை யுடையவள். (எ-று.) (௧)

௨. இன்பநற்பொருடருமமீன்றருளுயிர்க்கெல்லாந்
துன்பமறறிடத்தருகுவாள்பலவளஞ்சுரவாக்
கொன்படைத்தபைங்கொடியிடைக்குளிர்நகைக்கோதை
அன்பகத்தொடாபிகலெனுதினியவாழ்வளிபபாள்.

(இ-ள்.) இனபமும் நல்லபொருளும் தருமமும் தான்பெற்ற உயிர்கட்கெல்லாம் துனபமறும்படி கொடுப்பவள்; பலவகையான வளங்களைச் சுரந்து பெருமையைக்கொணட பசிய கொடிபோலு மிடையையுடையவள்; குளிர்ந்த நகையினையுடைய பெண்ணுனவள்; அகத்திலுள்ள அன்பின் தொடர்பினுலே மாறுபாடின்றி இனியவாழ்வைக் கொடுப்பவள். (எ-று.) (௨)

௩. நிறைகடற்செழுங்கலையினுளிடத்தவாணேமி
இறைவனெம்பிரானேவலானுவகைமிக்கென்றும்
நறைமலர்த்தொடைக்கமலைநாயகனுக்குநல்கும்
மறைவலான்றிருநந்தனவனத்திடைமருவா

(இ-ள்.) நிறைவுற்ற கடலாகிய செழித்த ஆடையையுடையவள் ஆகிய பூமிப்பிராட்டியார், இடதுபக்கத்திற றரித்த நாந்தகத்தையும் திருச்சக்கரத்தையுமுடைய இறைவனுகிய எம்பிரானது நியமநத்திலுலே சந்தோஷமிகுந்து, எப்போதும் தேனையுடைய மலர்மாலைகளைப் பெரியபிராட்டியார் நாயகனுக்குச் சமர்ப்பித்து வரும் வேதாந்தங்களில் வல்லவராகிய பெரியாழ்வாரது திருநந்தனவனத்தினிடத்தையடைந்து, (எ-று.) (௩)

[ஆண்டாள் திருவவதாரம்.]

௪. மருவுடைத்துணர்த்துளவிடைமரதகமணியைப்
பொருவுபொற்பொடாடித்திங்கள்பூரநாளதனில்
அருணவித்துருமத்திதழ்பிறழ்தரவழகோர்
உருவெடுத்தெனவொருமகவாகியங்குதித்தாள்.

(இ-ள்.) வாசனையுடைய பூங்கொத்துக்களையுடைய திருத்துழாயினடியில் மரகதமணியையொத்த அழகோடு ஆடிமாசத்தில் பூரநக்ஷத்திரத்தில் சிவந்த பவளம்போன்ற இதழ்விளங்க அழகே ஒரு உருவெடுத்ததுபோல ஒரு குழந்தையாகி அங்கு அவதரித்தனள். (எ-று.) (௪)

ரு. வலிகொழுங்கரக்கணிச்சியாலனையபூவனத்துட்
பொலிசெழும்புகழ்ப்பட்டர்கோன்மனித்தொழில்புரிவோன்
மெலிவிலாவனப்பொடுபசுந்துளவிடைவிளங்குங்
கலிதிரைகடலுடைநிலமடந்தையைக்கண்டான்.

(இ-ள்) வலிமையுடைய கையிற் கொண்ட தறிகையினாலே அந்த திருநந்தனவனத்தில் ஒப்பற்ற தொழில் செய்யுமவரும் விளங்கும் தழைந்த பிரபாவாதிசயமுடைய பட்டர்பிரானும் ஆகிய பெரியாழ்வார், குறையாத அழகோடு பசுந்துழாயினிடத்து விளங்கும ஒலியையுடைய திரைகளோடு கூடிய கடலை ஆடையாகவுடைய பூமிப்பிராட்டியாராக கண்டனர். (எ-று) (ரு)

### வேறு.

சு. ஆழ்ந்தபேரன்பினோரகத்துடடவினைப்
போழ்ந்தமாலுந்தவும்பொருவிலபாவையை
சூழ்ந்தஞானத்தகைமுனிவன்காண்டலும்
வாழ்ந்தனமினியெனுமலர்க்கையேந்தினன்.

(இ-ள்) அடிகாணவொண்ணாத பெரிய பிரீதியுடையாருள்ளத்தில் தீயவினைகளைப் போக்கிய பெருமானளித்த அந்த ஒப்பற்ற பதுமைபோன்ற குழந்தையை அபிவிருத்தியாகிய மெய்ஞ்ஞானப் பெருமையையுடைய மகாசீலரான ஆழ்வார் பார்த்தலும், இனி வாழ்ந்தோமென்று மலர்போன்ற திருக்கைகளாலே யேந்திக் கொண்டனர். (எ-று.) (சு)

எ. சொரிந்தனாமலர்மழைசுரர்கடுந்துமி
விரிந்ததிசைதிசைவிசும்பைமேவினார்
புரிந்ததுதமிழ்நடம்புனிதர்வாழ்த்தினார்
இரிந்ததுவினைதிசைதிசைகளெங்கணும்.

(இ-ள்.) மேலேயுள்ள வானிலுள்ளாரான தேவர்கள், தேவதுந்துமி எங்கும் விரிந்து அதிரும்படியாக மலர்மாரி சொரிந்தார்கள்; தமிழ்ப்பாஷை தாண்டவம் புரிந்தது; பரிசுத்தவான்கள் வாழ்த்தினார்கள்; வினையானது திசைதிசைகளெங்கும் ஓடியொளித்தது. (எ-று) (எ)

அ. ஏந்தியமகவினதெழினோக்குபு
பூந்திருமகள்கொலோபூமியோவென
நீந்திலவானந்தக்கடலினிலைகிலாதுதூய்
தாந்திருவுளத்தினிலயிர்க்குங்காலையில்

(இ-ள்.) (ஆழ்வார்) ஏந்திய குழவியினது அழகைக் கண்டு இக்குழவி, அழகிய பெரியபிராட்டியாரோ? அல்லது பூமிப்பிராட்டியார் தானோ? என்று ஆநந்தக்கடலைக் கடக்காதவராகி, அதில் நிலைக்கவும் முடியாமல், பரிசுத்தமான திருவுள்ளத்தில் சிந்திக்குமபோது, (எ-று.) (அ)

கூ. அந்தரவாணியொன்றுதியேனமாய்
வந்தமாலவனியைமருப்பிற்றாங்குறு
நந்தலிறிருவிளையாடனம்புநாட்
சுந்தரமயிலுமுற்றெழுதுபோற்றியே

(இ-ள்) ஆகாசவாணியொன்று, ஆதிவராகமாக வந்தருளின பெருமான் பூமியைத் தனது கோட்டினாலே யேந்தி, கெடாத திருவிளையாடலை விரும்பியபோது, அழகிய மயில்போன்ற பூமிப்பிராட்டியார் (எம்பெருமானை) முன்னே வணங்கித் துதித்தது, (எ-று.) (௯)

௧௦. யாவரின்றிருவருட் கினியரென்றலுந்
தேவனுமலர்த்தொடைசெய்குவோர்தமிழ்ப்
பாவருந்தொடையிற்பரவுவோர்மிசை
ஓவலின்மகிழ்வெனவுணரக்கூறினன்.

(இ-ள்.) உமது திருவருளுக்கு இனியவர் யாவர்? என்று கேட்டலும், பெருமானும் மலர்மாலைகளைச் செய்து சமர்ப்பிப்பவர்களும் தமிழ்ப்பாவாகிய அருமையான மாலையினாலே துதிப்பவர்களுமானவர்கள் மீது எனக்கு ஒழியாத சந்தோஷமென்று அறியும்படி அருளிச் செய்தனன். (எ-று) (௧௦)

௧௧. இறையவனருண்முறையிதயத்தெண்ணியே
பிறைநுதன்மயிலும்பெரியாற்றவும
மறைநெறிநின்றிருகுலம்வயங்கிவாழ்வுற
நறையலர்வனத்திடைநண்ணினாரரோ

(இ-ள்.) பெருமானை நியமனப்பிரகாரத்தைத் திருவுளத்திலெண்ணிய பிறைபோன்ற நுதலையுடையாராய மயில்போன்ற சாயலையுடைய பூமிப்பிராட்டியும், அவ்விரமாக, (பாமாலை பூமாலைகளைச் சூட்டுதல்) செய்வதற்காக வேதமார்க்கத்தை யநுசரித்த விஷ்ணுசித்தரே! உமது அழகிய குலம் விளங்கி வாழும்படி தேனையுடைய மலர்கள் பூத்தொளிரும் (இரத) நந்தனவனத்தில் வந்தவதரித்தனர் என்று, (எ-று.) (௧௧)

௧௨. எழுதலுமஃதுகேட்டிருகணீர்தரப்
பழுதகலபுளகமெய்யரும்பப்பாவையைத்
தொழுதனன்பலமுறைதுள்ளியாடினன்
வழுவகறனதுயர்மனையைநண்ணினான்.

(இ-ள.) உண்டாதலும், (ஆழ்வார்) அதைக்கேட்டு இரண்டு திருக்கண்களும் நீர் பொழியவும குற்றமற்ற திருமேனியில் புளகமுண்டாகவும் அப்பெண்மணியைப் பலமுறை தொழுது, துள்ளியாடிப், பழுதற்ற தமது உயர்ந்த திருமாளிகையை யடைந்தனர். (எ-று) (௧௨)

௧௩. புனைதுழாயலங்கலம்புயங்கொள்விண்முகில்
அனையமாலவரத்தவதரித்தவாயிழை
தனையவாவுடனருந்ததியின்சான்றதன்
மனைவிவாண்மணித்தொடிமலர்க்கையீந்தனன்.

(இ-ள்.) அலங்காரமாய் விளங்கும் திருத்துழாய்மாலையைத் திருப்புயங்களிலணிந்த பெரிய மேகம்போன்ற பெருமானது வரத்தினாலே அவதரித்தருளின பிராட்டியாரை, அருந்ததியைப்போலப் பெருமைமிகுந்த தமது திருத்தேவியாரது ஒளிபொருந்திய மணிகளிழைத்த வளையணிந்த மலர்போன்ற கைகளில் ஆசையோடு அளித்தனர். (எ-று.) (௧௩)

கச. படங்களார்பஃறலைபரப்பிப்பாந்தளாய்
தடங்கண்மாறனைமிசைதரிப்பத்தானுமேல்
அடங்கலும்பரித்தருளணங்கையாரநீள
வடங்களார்முலையுமென்மலர்க்கைதாங்கினான்.

(இ-ள்.) விசாலமான திருக்கண்களையுடைய பெருமான், பாம்பாகிய திருவனந்தாழ்வானாகி, படங்களையுடைய பலதலைகளைப்பரப்பி அவற்றின் மீது தன்னைத் தாங்கிக்கொண்டிருக்கத் தானும் தன்மீது சராசரங்களான எல்லாவற்றையும் தாங்கிக் காப்பாற்றிக் கொண்டிருக்கும் பூமிப்பிராட்டியை, நீண்ட மணிமாலைகளை யணிந்த தனபாரங்களையுடைய அத்தேவியாரும் மிருதுவான மலர்போன்ற கைகளாலே தாங்கினார். (எ-று.) (கச)

கரு. பலமுறைகவினெலாம்பரவிநோக்கிநங்
குலமுயர்தவமுருகொண்டதேயலால்
நிலமிசையவருளிம்மகவின்சீர்மையோர்
இலவெனவியந்துதன்னிதயத்தெண்ணினாள்.

(இ-ள்.) (அக்குழவியின்) அழகையெல்லாம் பலமுறையும் புகழ்ந்து பார்த்து, நமது குலத்திலுள்ளோர் செய்த உயர்ந்த தவம் ஒரு உருவங் கொண்டதேயன்றிப் பூமியின்மீதுள்ளவர்களில் இக்குழவியின் குணமுள்ளவர்கள் இல்லையென்று ஆச்சரியமடைந்து தமது திருவுள்ளத்தி லெண்ணினார். (எ-று.) (கரு)

கசு. எண்ணில்பல்லுயிர்கட்கெலாமினிமையீந்தருள்
பெண்ணினையணைத்தலும்பிறங்குகொங்கைபால
தண்ணிலவுமிழ்ப்புனற்றளிக்குங்காந்தமொத்
துண்ணிறைந்துதவவாங்குவந்துநல்கினாள்.

(இ-ள்.) கணக்கற்ற பலவான சீவகோடிகளுக்கெல்லாம் இனிமையளித்தருளும் பெண்குழந்தையை அணைத்த மாத்திரத்தில், குளிர்ந்த சந்திரிகை உற்ற வளவில் நீரைச்சொரியும் சந்திரகாந்தம் போன்று தனங்கள் பால் சுரந்து கொடுக்க அதனைச் சந்தோஷித்து ஊட்டினர். (எ-று.) (கசு)

கஎ. சார்ந்தவரனைவருங்குழீஇப்பொற்குழியின்
ஆர்ந்தநறகலவைநெய்யாடலாடிமீக
கூர்ந்தவோகையங்கடற்குளித்திட்டார்மறை
தேர்ந்தமாதவனினுஞ்செருக்குஞ்சிந்தையார்.

(இ-ள்.) (அங்கு) வந்தவர்களான யாவரும் கூடி வேதங்களைத் தேர்ந்த ஆழ்வாரைக் காட்டிலும் களிக்கும் சிந்தையையுடையவர்களாகிப் பொற்குடத்திற் பொருந்திய நல்ல வாசனைத் திரவியக் கலப்புக்களோடு நெய்யாட லாடி, மேலோங்கின சந்தோஷ சாகரத்திற் குளித்தார்கள். (எ-று.) (கஎ)

கஅ. மட்டவிழலங்கலான்மறையுங்காண்குதற்
கெட்டரும்பொருள்வெளியெய்தநேர்ந்துகோல
பட்டர்கோனெனும்பெயர்ப்பறவைவேந்தனும்
இட்டனன்கோதையென்றினியநாமமே.

(இ-ள்.) வேதங்களும் காண்பதற் கெட்டாத பரம்பொருளான பெருமான், தேனொழுகும் பூமாலைகளாலே பிரத்தியக்ஷமாதலை யறிந்ததாலே, பட்டர்பிரான் எனனுந் திருநாமத்தையுடைய பறவைகட்கரசரான திருவடியும், (குழந்தைக்குக்) கோதை யென்று இனிமையான திருநாமமிட்டனர். (என்னவே ஆண்டாள் சூடிக்களைந்த பூமாலைகளாலே பெருமான் வெளியாதலையறிந்ததாலே கோதையென்று திருநாமமிட்டன ரென்றபடி). (எ-று)

ககூ. நெய்யுடன்பாலளைநிறைத்தளாயிடக்
கையுடன்சிரமணைததருத்திகண்மலர்
மையுறவரைந்துமடகாப்புமண்ணிமாண்
செய்யுநற்றொட்டிலின்றவிசிற்சோத்தியே

(இ-ள்.) நெய்யோடு பாலும் தயிரும் நிறைத்துக்கலந்து இடதுகையுடன் தலையையணைத்து உண்பித்து, திருக்கண்மலர்களில் மை படியும்படி யிட்டி, திருமண்காப்பு அணிந்து பெருமையுண்டாககும் நல்ல தொட்டிலிலும் ஆசனத்திலு மிருத்தி, (எ-று.) (ககூ)

உ0. கன்னலேயமுதமேகனகபபாவையே
அன்னமேயென்றுதாலாட்டியாரணம்
முன்னமேதெரிந்துணர்முனிவன்றேவியா
மன்னமேதினிமகள்வளாத்துப்போற்றினள.

(இ-ள்.) கரும்பே! அமிர்தமே! பொன்னாலான பிரதிமையே! அன்னமே! என்று தாலாட்டி, வேதங்களை முன்னமே யறிந்துணர்ந்த ஆழ்வாரது திருத்தேவியார், சிறப்புண்டாகும்படி பூமிப்பிராட்டியாரான கோதையாரை வளர்த்துக் காப்பாற்றினர். (எ-று.) (உ0)

உக. நிலந்தனதுரந்தொடத்தவழ்ந்துநேயமோ
டிலங்கெழிற்றொடைமிசையிருந்துநின்றுமோ
துலங்குபொற்பரியகந்துதைந்துசூழ்ந்தொளிர்
நலங்கொள்சிற்றடியினானடையுங்கற்றனள்.

(இ-ள்.) நிலத்தில் தனது மார்பு படியும்படி தவழ்ந்தும், நேசத்தோடு விளங்கும் அழகிய தொடையின்மீது இருந்தும், நின்றும், அழகு விளங்கும் பொற்கிண்கிணிகள் நெருங்கியணிந்து பிரகாசிக்கும் நலத்தைக்கொண்ட சிறிய திருவடிகளாலே நடத்தலையுங் கற்றனர் கோதையார். (எ-று) (உக)

உஉ. சுட்டிகைவில்விளங்கமென்சுரியனெற்றிமீப்
படியவெண்ணகைதிருப்பவளவாய்தரச்
செடிமணித்திரட்குழைசெவியிற்றாழ்தரத்
தொடிநிரைதளிர்க்கரந்துலங்கிமலகவே.

(இ-ள்.) நெற்றிச்சுட்டியின் பிரகாசம் விளங்கவும், மிருதுவான சிறு கேசங்கள் நெற்றியின்மீது படியவும், வெண்மையான நகையை அழகிய பவளம்போன்ற வாய் தரவும், ஒளிபொருந்திய மணிக்கூட்டங்களிழைத்த காதணிகள் செவிகளினிடத்துத் தாழவும், வளைக்கூட்டங்கள் தளிர்போன்ற திருக்கைகளில் பிரகாசித்து நிறையவும், (எ-று.) (உஉ)

உரு. பொய்தலிற்குரியனபொருள்கள்பூந்தளிரக
கைதழைத்திடபபுடைகருலப்பாங்கியர்
மெய்தனக்குறையுளாம்விண்டுசித்தன்முன்
செய்தவத்திருமணித்தெருவிற்சேர்ந்தனள்.

(இ-ள்.) பெண்கள் விளையாட்டுக் குரியனவான பொருள்கள் அழகிய தளிர்போன்ற கைகளில் நிறைந்திருக்கவும், தோழியர்கள் பக்கங்களில் நெருங்கவும், உண்மைக்கிருப்பிடமான விஷ்ணுசித்தரான ஆழ்வார் முனசெய்த தவச்செல்வமான கோதையார், (விளையாட்டுக்காக) அழகிய தெருவிற சேர்ந்தனர். (எ-று.) (உரு)

உசு. எண்டகைமணிகளிட்டிழைததசிற்றிலின
தண்டலிலிகுழாருடனுந்தன்னைமுன்
உண்டருண்முகிற்குருக்குமணியென்றுளிர
வண்டலம்பாவையைவதுவைசெய்குவாள்.

(இ-ள்.) தன்னை முற்காலத்தில் உண்டவனான மேகம்போன்ற பெருமானுக்கு உருக்குமணி யென்று சொல்லப்பெற்றுப் பிரகாசிக்கும் வண்டல் மண்ணாறசெய்த பதுமையை எண்ணும பெருமையையுடைய இரத்தினங்களிட்டுச் செய்த சிற்றில்லில் தன்னைவிட்டு நீங்காத தோழிகளோடு திருக்கலியாணஞ் செயவார். (எ-று.) (உசு)

உஎ. கழங்குடனம்மனைகமலகைவளை
முழங்கிடநடித்துவான்முடிவிலாபபதம்
வழங்கருளரங்கநாயகனைமாயனைப
பழங்கண்மாமருந்தினைப்பரிவிறபாடுவாள்.

(இ-ள்.) கழங்குடன அம்மானையைத் தாமரைபோன்ற கைகளிலிருக்கும் வளைகள் ஒலிக்கும்படி ஆடி, பரமாகாயமென்னும் முடிவில்லாத பதவியைக் கொடுக்கும அருளையுடைய திருவரங்கநாயகனை, ஆச்சரியகுண சேஷ்டிதங்களையுடையவனை, துக்கத்துக்குப பெருமைபொருந்திய மருந்தானவனைப் பிரீதியோடு பாடுவார். (எ-று.) (உஎ)

உஅ. குரங்கவாண்மலர்சசிளைகுதலைககோகிலம
இரங்கவான்பொழிலபுகுநதிவர்வுற்றூசலில்
கரங்கவானமைத்திருந்துகைத்துககாதலால
அரங்கவாமனன்புகழ்பாடியாடுவாள்.

(இ-ள்.) ஒளிபொருந்திய மலர்களையுடைய கிளைகள் வளையவும், குயில்கள் மனமிரங்கவும், சிறந்த சோலையிற் பிரவேசித்து, ஊசலிலேறித், திருக்கைகளும் திருத்தொடையும் அமைத்திருந்து, அசைத்து, விருப்பத்துடன் திருவரங்கத் தெழுந்தருளிய பெருமானது திருப்புகழைப்பாடி ஆடுவார். (எ-று.) (உஅ)

உஎ. பரிவினுயர்முனிபட்டாகோனறை
அரியுணமலர்கடேர்ந்தனந்தநாமமால்
புரிவினைணிதரப்புனைந்துவைத்தபூந்
தெரியலேயெடுத்தணிந்துசூடுவாள்.

(இ-ள்.) எம்பெருமான் மீதுவைத்த அன்பையுடையராய் உயர்ந்த மதிலாயப் பட்டர்பிரானென ஆழ்வார் பக்தியோடு தேனுக்காக வண்டுகள் பரிசியாத மலர்களைத் தெரிந்தெடுத்து அநந்தமான திருநாமங்களையுடைய பெருமான் பிரீதியோடு அணியும்படி தொடுத்துவைத்த பூமாலைகளை யெடுத்துப் பிரதிதினமும் சூடுவார். (எ-று.) (உ௭)

வேறு.

உ௮. சான்றவன்றொடுத்தமாலையெடுத்துமின்றனதுமைக்கார
போன்றபைங்குழலிற்சூடிக்கூவலிற்பொற்புநோக்கி
ஆன்றபொற்பிடிகைவைப்பவந்தணனுணரானண்டம்
ஈன்றவற்குவந்துசாத்தவெந்தையுமினிமைகூர்வான்.

(இ-ள்.) ஞானபக்திகள் நிறைந்த ஆழ்வார் தொடுத்து வைத்த மாலைகளை யெடுத்து, மின்போன்ற கோதையார் தமது கறுத்த மேகம்போன்ற பசிய கூந்தலிற்சூடி, கிணற்றில் அந்த அழகைப்பார்த்து, மாட்சிமையுற்ற பொன்னாலான பூந்தட்டில்வைக்க, (இதனை) ஆழ்வார் அறியாதவராகி உலகங்களை யீன்ற பெருமானுக்குச் சந்தோஷித்துச் சூட்ட, எம்பெருமானும் (அதற்குச்) சந்தோஷ மடைவான். (எ-று.) (உ௮)

உ௯. முடித்ததேமாலைமாலுமுடித்தருங்களிப்பின்மூழ்கக்
கடித்தொடைக்கோதைநாளுங்கருங்குழற்புனைந்துவைப்பாள்
வடித்தநான்முனிவனோர்நாண்மயிர்கண்டுமாழ்கியுளளந்
துடித்தயர்வுறுவான்கோதைசூடலுந்தோன்றக்கண்டான்.

(இ-ள்.) (இப்படி, தாம்) முடித்தனவான தேனையுடைய மாலைகளைப் பெருமானும் முடித்துக்கொண்டு அரிய சந்தோஷத்தில் மூழ்கும்படி நாடோறும் வாசனையுடைய மாலைகளைக் கோதையார் தமது கரியகூந்தலில் அணிந்து வைப்பார்; சாஸ்திரங்களின் சாரார்த்தங்களை யறிந்த ஆழ்வார் ஒருதினம் அம்மாலையில் மயிரிருக்கக்கண்டு திருவுள்ளம் கலங்கித் துடித்து வருந்துவோராய்க் கோதையார் சூடுவதையும் பிரத்தியக்ஷமாகக் கண்டனர். (எ-று) (உ௯)

௩0. அன்னையேதவறிதந்தோவமலனுக்கணிவதன்றோ
என்னையேமடமைசெய்தாயெனச்சினத்தணைத்துமற்றோர்
பொன்னையேய்மலரின்மாலைசாத்தலும்புவனமீன்ற
முன்னையோனிவரான்கோதைமுடித்ததேமுடிப்பேனென்றான்.

(இ-ள்.) தாயே! அந்தோ! இச்செயல் குற்றமுள்ளதாகும்; (இம்மாலை) மலரகிதனான பெருமானுக்குச் சாத்துவதன்றோ? என்ன அறிவிலலாத காரியஞ் செய்தாயென்று கோபங்கொண்டு வேறொரு பொன்போன்ற மலர்களாலான மாலையைச் சாத்துதலும், உலகங்களைப் பெற்ற காரணபூதனான பெருமான் திருவுள்ளம் பற்றாமல் கோதை முடித்ததையே நான் முடிப்பேனென்றனன். (எ-று.) (௩0)

௩௧. அறிவனுமனையைநண்ணுவமிர்தவாயணங்கைக்கைக்கொண்
டெறிகதிர்த்திகிரிமால்பொற்கோயின்மீண்டெய்தித்தாமஞ்
செறிவளைக்கரமான்கூந்தற்கணிந்தவத்திருத்தார்சாத்த
உறியளையருந்தினேனும்புனைந்தனனுவகையோடும்.

(இ-ள்.) ஆழ்வாரும் திருமாளிகையையடைந்து அமிர்த முண்டாகுந் திருவாயையுடைய கோதையாரை யழைத்துக் கொண்டு, வீசும் பிரகாசமுடைய திருச்சக்கரத்தை யணிந்த பெருமானது பொன்மயமான திருக்கோயிலை மறுபடியு மடைந்து, ஒளியுடைய நெருங்கிய வளையலணிந்த திருக்கைகளையுடைய கோதையாரது திருக்குழலில் அணிந்த அத்திருமாலையைச் சாத்தவே உறியில் வைத்த வெண்ணெயுண்டபெருமானும் சந்தோஷத்தோடு அதை யணிந்து கொண்டனன். (எ-று.) (௩௧)

௩௨. மாதவன்றனக்குத்தான்முன்வனைதொடைநல்கிமாதுங்
கோதகல்கோதைசூடிககொடுத்தவளெனும்பேர்பெற்றாள்
ஆதரித்தணிந்தமாலுமுனிவனையருளினோக்கிப்
போதநூன்முனிவவிம்மான்றனைமணம்புரிதுமென்றான்.

(இ-ள்.) பெரிய பிராட்டியாருக்கு நாயகனான பெருமானுக்குத் தான் முன்பு சூடிய திருமாலையைக் கொடுத்து ஆண்டாளும் குற்றமற்ற "கோதை" "சூடிக்கொடுத்தவள்" என்னுந் திருநாமமடைந்தனர்; அப்படி ஆதரத்தோடு அணிந்து கொண்ட பெருமானும் ஆழ்வாரைக் கிருபையோடு கடாக்ஷித்து ஞானநூல்களை யுணர்ந்த மகநீயரே! இந்த மான்போன்ற ஆண்டாளைத் திருக்கலியாணஞ் செய்துகொள்வோ மென்றனன. (எ-று.) (௩௨)

௩௩. புகன்றவம்மொழியாலோகைபெருகிமெய்ப்புளகம்போர்ப்ப
அகங்குழைந்துருககண்ணீர்சொரிதரவடிகள்போற்றிச
சகந்தனையளந்தோன்றன்பாலவிடைகொளாவணங்குதனோ
டிகம்பரந்தெளிந்தோன்றன்மாளிகைவயினினிதிற்சேர்ந்தான.

(இ-ள்.) (இப்படி) அருளிய அந்த மொழியினாலே சந்தோஷ மதிகரித்துத் திருமேனியில் புளகமுண்டாகவும் திருவுள்ளங் குழைந்துருகவும் திருக்கண்கள் நீர் சொரியவும் உலகங்களை யளந்த பெருமான் திருவடிகளைத் துதித்து, விடைபெற்று, இகத்தையும் பரத்தையுந் தெரிந்த ஆழ்வார் ஆண்டாளுடன் தமது திருமாளிகையினிடத்து இனிதாகச் சேர்ந்தனர். (எ-று.)

௩௪. வனிதையும்வதுவைதன்னைமாதவன்வந்துசெய்வான்
நனியுவந்துரைத்தவாய்மைநயந்தளப்பரியஞானப்
புனிதமாதவனைநோககிப்போதனும்புரஞ்செற்றோனும்
இனியநான்மறையுங்காணாவீசனையெம்பிரானை

(இ-ள்.) ஆண்டாளும் மாதவனான பெருமான் வந்து தம்மைத் திருக்கலியாணஞ் செய்வதற்காக மிகச் சந்தோஷித்து அருளிச் செய்த உண்மையான மொழியை விரும்பி, அளவிடற்கரிய ஞானத்தையுடைய பரிசுத்தரான பெருந்தவத்தையுடைய ஆழ்வாரைப் பார்த்துப், பிரமனும் முப்புரங்களை வென்ற சிவனும் இனிமையான நான்கு வேதங்களுங் காணாத ஈசனை, எம்பெருமானை, (எ-று.) (௩௪)

௩௫. உரைத்திடக்கருதவொட்டாவொருவனையுலகங்கூறும்
விரைத்துழாயலங்கலானைவினைகளைவிடுத்துநீங்காத்
தரைக்குண்மானிடரெவ்வாறுகாண்பதெத்தலத்தன்னானை
வரைத்துணர்ந்தறிவதெங்ஙன்புகல்கெனமறைவலானும்

(இ-ள்.) சொல்லவும் எண்ணவும் முடியாத ஒப்பற்றவனே, பெரியோர் கூறும் வாசனையையுடைய திருத்துழாய்மாலையையுடையவனே, தமக்குண்டான நீங்காத வினைகளை நிவர்த்தித்துப் பூமியினிடத்து மனிதராயுள்ளவர்கள் காண்பது எவ்விதம்? எந்த ஸ்தலத்தில் அப்படிப்பட்டவனை எப்படி விவரித்தறியலாம்? அருளிச் செயவீராக வென்று கூற, வேதங்களில் வல்லவரான ஆழ்வாரும் (எ-று.) (௩௫)

௩௬. அருச்சனைவடிவமாகியரவணையமலன்வாழுந்
திருப்பதியொருநூற்றெட்டுண்டவனிமீதவற்றைச்செப்பில்
விருப்பொடுவணங்கிற்காணிற்கருதுறில்விளங்குநீலப்
பொருப்புறழ்பரமன்றன்னைக்காணலாம்புவியோர்க்கென்றான்.

(இ-ள்.) திருவநந்தாழ்வானாகிய திருவணையையுடைய மலரகிதனான பெருமான, அர்ச்சாரூபமாகி நித்தியவாசஞ்செய்யும் திருப்பதிகள் பூமியின் மீது ஒரு நூற்றெட்டுண்டு; அத்திருப்பதிகளைச் சொல்லினும் விருப்பத்தோடு வணங்கினும் சேவிப்பினும் சிந்திப்பினும் விளங்கும் நீல மலையைப் போன்ற பரம்பரனான பெருமானைப் பூமியிலுள்ளவர்களுக்குக் காணக் கூடுமென்றனர். (எ-று.) (௩௬)

௩௭. தாதைசொற்றதுகேட்டோகைததைத்தலுந்தருணச்செவ்வாய்க்
கோதையுமெந்தாயிங்ஙன்கூறியபதிநூற்றெட்டிற்
பேதையேனுணரமேலாம்பதிகளைப்பிரித்தோதென்ன
மாதையம்முனிவன்றானுமனமிகமகிழ்ந்துநோக்கா

(இ-ள்.) இப்படி தந்தையாரான ஆழ்வார் அருளிச் செய்ததைக் கேட்டுச் சந்தோஷமதிகரித்தலும் இளமைப் பருவமும் சிவந்த திருவாயுமுடைய ஆண்டாளும் என் தந்தையே! இப்படி அருளிச்செயத திருப்பதிகள் நூற்றெட்டில் பேதைமையுடைய நான் அறியும்படி மேன்மையான திருப்பதிகளை விவரித்தருளிச் செயவீராகவென்ன, அந்த ஆழ்வாரும் ஆண்டாளை மிகவுந் திருவுள்ள முவந்து நோக்கி, (எ-று) (௩௭)

௩௮. மதிலணியரங்கமுட்டம்வேங்கடமாயைநீக்கும்
முதியசாளக்கிராமநைமிசாரணியம்வானோர்
துதிசெய்புட்கரமேதோதாத்திரிபதரிகையேதூய
பதிகணூற்றெட்டுண்மேலாம்பதியெனப்பகர்வர்மேலோர்.

(இ-ள்.) திருமதில்களையுடைய திருவரங்கம், ஸ்ரீமுஷ்ணம், திருவேங்கடம், மாயையை யொழிக்கும் முதுமையுடைய சாளக்கிராமம், நைமிசாரணியம் தேவர்கள் துதிசெயயும் புஷ்கர க்ஷேத்திரம் ஸ்ரீவானமாமலை ஸ்ரீவதரியாசிரமம் இவைகள் பரிசுத்தமான நூற்றெட்டுத் திருப்பதிகளில் மேலான திருப்பதிகளென்று மேலோர்கள் அருளிச் செய்வார்கள். (எ-று.)

௩௯. இவைகளோரிருநான்கிற்குண்முதன்மையாமெண்கணனும்
கவையயிற்சூலத்தானும்பணிந்தனர்பரவக்கஞ்சக்
குவையுடைமுகில்போலெந்தையனந்தன்மேற்றுயில்பொற்கோயில்
நவையிலாயெனவக்கோயிற்புராணமுநவில்வதானேன்.

(இ-ள்.) குற்றமற்ற ஆண்டாளே! இத்திருப்பதிகள் எட்டில் எட்டுக் கண்களையுடைய பிரமனும் முப்பிரிவையுடை யதாய்க் கூர்மையுடைய சூலத்

தைத் தரித்த சிவனும் வணங்கித் துதிக்கத் தாமரைக் கூட்டத்தையுடைய மேகம்போல எமபெருமான திருவநந்தாழ்வான் மீது அறிதுயிலமரும் பொன்மயமான திருவரங்கம முதன்மைபெற்ற தாகும் என்று அந்தந் நகோயிற் புராணமும உரைக்கத் தொடங்கினர். (எ-று.) (௩௯)

வேறு.

௪௰. அலகிலாவுலசோ டயன்முதலுயிரு மணியகட்டகத்துரா னறடக்கிச, சலதியிறறுயின்மா லுலகுயிர் படைப்பக் கருதலானுந் தியந்தடத்திற், பலவிதழ்ப்பதினு லுலகினதுருவோர் பங்கயமுளை த்ததப்பதுமத், திலகுபொற்பொகுட்டி னிடத்தவதரித்தா னெண் கணுன்முகனெனுமிறையோன்.

(இ-ள்) கணக்கற்ற உலகங்களோடு பிரமன் முதலிய ஜீவகோடிகளையும் அழகிய திருவயிற்றில் அந்தக் காலத்தில் அடக்கிக்கொண்டு திருப்பாற்கடலில் அறிதுயிலமரும் பெருமான், உலகத்தையும உயிர்களையும் சிருஷ்டி செய்யச் சிந்தித்ததினாலே பெருமானது திருவுந்தியாகிற தடத்தினிடத்தில் பலவிதழ்களையுடையதாய்ப் பதினாலு பிரிவாயிருக்கிற உலகத்தின உருவமாகிய ஒரு தாமரை யுண்டாயிற்று. அத்தாமரையில் பிரகாசமுடைய பொனமயமான பொகுட்டினிடத்தில் எட்டுக்கண்களையும் நான்கு முகங்களையுமுடைய இறைவனான பிரமதேவன அவதரித்தனன். (எ-று.) (௪௰)

௪௧. அந்தரஞ்சலில மலதுகாண்பொருளொன் றறுவளவின் மையானழுங்கி, மைந்தனங்கிருப்ப வாசுதேவப்பேர் வள்ளலாங்க வனுழைமருவாச், சுந்தரமீன மோதிமங்கமடங் துரங்கவத்திர வுருத்தோற்றி, நந்தரூபகற்றி யுலகுயிரொவையும் படைக்குதிநீ யெனநவின்றான்.

(இ-ள்.) வெளியும் சலமும் அல்லாது, காணும பொருள் ஒன்று, அளவேனு மில்லாமையாலே வருந்தி, மைந்தனான பிரமன அவ்வுந்தியந் தாமரைமலரிலிருக்க, வாசுதேவனென்னுந் திருநாமமுடைய பெருமான் அங்கு அவனிடத்தடைந்து, அழகிய மீன் அன்னம ஆமை குதிரை என்னும் முகங்களையுடைய சொரூபத்தைக் காட்டி, வருந்தும் துன்பத்தை நிவர்த்தித்து, உலகம் உயிர்களொவையும் நீ சிருஷ்டிப்பாயாக வென்று அருளினன். (எ-று.)

௪௨. என்றவன்பணித்த முறையயன்பதினாலுலகுயி ரொண்ணி லாதனவுந், தான்றகவுறவே படைத்துலகெவைக்கு நிவந்ததாஞ் சத்தியவுலகம், ஆன்றதன்பதமா யமைத்துவாழ்ந்தருள்வோனல கிலா வுலகுயிரனைத்துந், தோன்றலசாநிலைமைத் தென்றெணு முத்திபெருகுவா னினைத்துளந்துளங்கா

(இ-ள்.) தன்னையுண்டாக்கின பெருமான நியமித்தபடி, பிரமதேவன பதினாலுலகமும் கணக்கற்றனவான உயிர்களும் தான் தகுதியுண்டாம்படி படைத்து, உலகங்களெல்லாவற்றிற்கு முயர்ந்த சத்திய லோகத்தை நிறைவுற்ற தனது பதவியாக வமைத்து வாழுவோனாய்க் கணக்கில்லாத உலகம உயிர்களெல்லாம் உற்பத்தியாதலும இறத்தலு முடைய நிலைமையுடையன என்றெண்ணி மோக்ஷத்தை யடையும்படி நினைந்து உள்ளம் கலங்கி, (எ-று.) (௪௨)

௪௬. எத்தகைவளமுந் துறந்துவெண்டிரைப்பா லிருங்கடன் மருவியாண்டிருந்து, முத்தவறகற்றி யறுபகைமுருக்கி முளரிவா ணயனங்கண்முகிழா, நித்தனைப்பரந்தா மனைத்தனதிடுக்க ணீக்கி யாண்டெவணுமாய்நிறைந்த, அத்தனையிதயத் தமைத்தனனனந்த வருடமாசறுதவமயர்ந்தான்.

(இ-ள்.) எப்படிப்பட்ட வளங்களையும வெறுத்து, வெண்மையான திரைகளையுடைய பெரிய திருப்பாற்கடலை யடைந்து, அங்கிருந்து முக்குற்றங்களையும் நீக்கி, ஆறு பகைகளையு மழித்துத், தாமரை போன்ற ஒளி பொருந்திய கண்களை மூடி, நித்தனை-பரந்தாமனை-தனது துக்கத்தை நீக்கி யடிமை கொண்டு எவ்விடத்துமாய் நிறைந்திருக்கும் ஸ்வாமியை-இருதயத்திலிருத்தி ஆயிரம் வருஷம் குற்றமற்ற தவஞ் செய்தனன். (எ-று) (௪௬)

முக்குற்றம்: காமம், வெகுளி, மயக்கம் எனபன. அறுபகை: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் எனபன.

௪௭. வினதைசேயபரிப்ப வனந்தனித்திலவெண் கவிகையா விரிந்துமீவிளங்கத், தினகரன்கலையோன் கவரிபாங்கெடுப்பச் சுனந்தநந்தாதியர்செறியக், கனமணிக்கதைகைக் கொடுசயவிசயர் கனகவாயிலின்முனங்காப்ப, மனமகிழ்சேனையிறைபுறங்காப்பக் கணபதிதுர்க்கைபாலவணங்க

௪௮. மகமெலாங்காலாய் பலகையிட்டிகளாய் மடிவிலாமறைப் பொருண்முழுதும, புகரிலாநாசி முகமதாயமகுட நிரைசது மறைகளாய்பபொலனுர், சிகரமீவாணி பிரணவவடிவாய் விளங்க வெண்டிசையில்வாழ்தேவர், நிகரிலாமருத்து வசுக்களேழ்முனி வோ ருருத்திரருடுக்கள்கோணிரைகள்

௪௯. சூரியரகத்துட சூழ்ந்தடிவணங்க நனந்தலையனந்தன்மேற் றுயிலுஞ், சீரியபரம வாசுதேவப்போத் தேவொடுதிசையெலாம் விளங்கப, பேரியலரங்க தாமமென்றொலிக்குந் திருச்சின்னவொலிமிகபபிறங்க, வாரியங்கதனு ணின்றுநீளரங்க விமானமங்குதித் ததுமாதோ.

(இ-ள்.) வினதையின் குமாரராகிய பெரியதிருவடி தாங்கவும், திருவனந்தாழ்வான் வெண்மையான முத்துக்குடையாக விரிந்து மேலே விளங்கவும், சூரியனும் சந்திரனும் பக்கங்களில் சாமர மெடுக்கவும், சுனந்தர் நந்தர் முதலானவர்கள் நெருங்கவும், கனமானதாய் மணிமயமான கதாயுதத்தைக் கையிற்கொண்டு ஜய விஜயர்கள் பொன்மயமான துவாரத்தைக் காக்கவும், மனமகிழ்ச்சியையுடைய சேனைமுதலியார் புறங்காக்கவும், கணபதியும் துர்க்கையும் இரண்டு பக்கங்களிலிருந்து வணங்கவும், யாகங்களெல்லாம் கால்களாகவும், யக்கியங்கள் பலகையாகவும், அழிவில்லாத வேதார்த்தங்கள் யாவும் குற்றமற்ற நாசியும் முகமுமாகவும், அழகுடைய சிகரத்தின்மீதுள்ள மகுடங்கள் நான்கு வேதங்களாகவும் சப்தமான பிரணவம் வடிவாகவும் விளங்க, எட்டுத் திக்கில் வாழும் தேவர்களும் ஒப்பற்ற மருத்துக்களும் வசுக்களும் சப்தரிஷிகளும் உருத்திரர்களும் நக்ஷத்திர தேவதை

களும் கிரகவரிசைகளும நித்திய சூரிகளும் தன்னிடத்துச் சூழ்ந்திருந்து திருவடி வணங்கும்படி, இடையில் திருவநந்தாழ்வான்மீது யோகநித்திரை செய்யும சிறப்பையுடைய பரவாசுதேவனென்னுந் திருநாமமுடைய பெருமானுடன், திசைகளெல்லாம் விளங்கும்படியாகப் பெருமையுடைய அரங்கதாமம் என்று சப்திக்கும் திருச்சின்னத்தின் ஒலி மிகவுமதிரிக கத், திருப்பாற்கடலிலிருந்து பெரிய ஸ்ரீரங்கவிமாநம் அங்கு வந்து தோன்றியது. (எ-று.) (சுசு-சரு-சுகூ)

சஎ. தருந்தகையரங்க தாமமென்றிசைக்குங் காகளத்தொலி செவிசார, இருந்தவமிழைக்கு மிரணியகருப்ப னிதுபுதிதிவ்வணு ளவிதயம், பொருந்ததிசயததான் விழிப்பவெப்பொருளும் புவனமுமகட்டிஞுட்பொதிந்த, கருந்தடமபுயனோ பரமனுககிடமா மணிவிமானந்தனைக்கண்டான்.

(இ-ள்.) வரங்களைக் கொடுக்கும் பெருமையுடைய ஸ்ரீரங்கதாமம் என்று சொல்லும் திருச்சின்னத்தின ஒலி செவிகளிற் படியவே, பெரிய தவஞ்செயயும் பிரமன, இங்கு இது நூதனமென்று இருதயத்திற பொருந்திய அதிசயத்தாலே கண் விழித்துபபார்க்க, எப்பொருள்களையும் அவைகட் கிருப்பிடமான உலகங்களையும திருவயிற்றில் வைதத கரிய நிறததை யுடைய விசாலமான மேகம்போன்ற பெருமானுக்கு நிவாசஸ்தானமான அழகிய ஸ்ரீரங்க விமாநததைச் சேவித்து, (எ-று) (சஎ)

சஅ. உவகையினெழுந்தான் பிரம்புகைக்கொடுநின் றுளசுனந் தனுமலருதித்தோய், தவலினின்றவபபே றிதுவலம்புரியாய வணங்குகென்றிவைமுறைசாற்ற, இவனுமீரிரண்டு வலஞ்செயாத்திசைநான் கினுமினிதிறைஞ்சியுளளேகிப், பவமுடிவகலசீர் வாசுதேவனைத்தாள் பரவினன்பலமுறைபணிந்தே.

(இ-ள்.) சந்தோஷத்தோடெழுநதான்; பிரம்பைத் திருககையிற்கொண்டு நின்றிருக்கும சுனந்தரும் தாமரைமலரி லுற்பவித்த பிரமனே! இது கெடுதலில்லாத உனது தவத்தின் பிரயோசனமாகும்; (இதனை) வலஞ்செயவாயாக வணங்குவாயாக வென்று இவைகளை முறையே சொல்லப், பிரமதேவனும் நான்கு முறை வலஞ்செயது நான்கு திக்கிலும் நன்கு வணங்கி உள்ளே பிரவேசித்துப் பிறப்பின் முடிவு நீங்கும் சிறப்பையுடைய வாசுதேவனது திருவடிகளைத துதித்துப் பலமுறையும் வணங்கினன். (எ-று.)

சகூ. நாமகள்கொழுநன் றனைமலர்க்கமலை நாதனுங்கருணைவாணயனத், தாமரையலரா னோக்கியெவ்வண்டத் தினுககுமேலாயொளிதழைத்த, காமர்சீர்ப்பரம பதத்துறைந்தருளு முனையளித்தருள்வதோர்கருத்தால், ஏமமார்கோயி லருச்சனைவடிவ மெடுத்திவணையதினுமென்னு

(இ-ள்.) சரஸ்வதிதேவிக்கு நாயகனான பிரமனைத் தாமரைமலரிலிருக்கும் பெரிய பிராட்டியாருக்கு நாயகனான திருவரங்க நாதனும் கருணை மிகுந்த ஒளி பொருந்திய திருக்கண்களாகிய தாமரைமலர்களாலே கடாக்ஷித்து, எவ்வண்டத்துக்கும் மேலாகிப் பிரகாசமிருந்த அழகிய சிறப்பையுடைய பரமபதத்தில் நித்தியவாசஞ் செய்யும் நாம், உன்னை ரக்ஷிப்பதாகிய ஒரு

கருத்தினாலே பொன்மயமான கோயிலில் அர்ச்சனைவடிவ மெடுத்து இவ் விடத்துக்கு வந்தோமென்றுரைத்து, (எ-று) (௪௯)

௫0. இயம்புசாத்துவதம பவுடகலமெனவோ ரிரண்டதாய்ப்பா ஞ்சராத்திரநூல, நயந்துகூறுமா தனததனையினைமுந் நான்கெழுத் துடன்றனிநவிலா, வையநகநீபொமையிம் மாபருச்சனைசெய் குதி யெனவனசமாமலாமேல, அயன்றவா தருச்சித தணிவிமானங்கைக் கொடுதன் தகனபதியடைந்தான்.

(இ-ள்.) சொல்லப்படும் ஸாத்வதம் பௌஷ்கலம் என்று இரண்டு விதமாகி, ஸ்ரீபாஞ்சராத்திர சாஸ்திரம நயந்து கூறும் திருவாராதனப் பெருமையை துவாதசாக்ஷரி மந்திரத்துடன் தனியாக அநுசந்தித்து, விளங்கும்படி நீ எம்மை இவ்விதமாகத் திருவாராதனஞ் செயவாயாகவென்று அருளிச்செயய, அவ்வாறே தாமரைமலரின் மீதிருக்கும் பிரமதேவன் தவறுஅ திருவாராதனஞ் செயது, அந்த அழகிய ஸ்ரீரங்க விமாநத்தைக் கைக்கொண்டு தனது அகனற பதியாகிய சத்திய லோகத்தை யடைந்தனன். (எ-று.) (௫0)

௫௧. சத்தியவுலகின் விரசைமாநதியின றடங்கரைதனைவிமா னத்தை, அத்திசைமுகத்தோ னமைத்தவாவுடனே யலாகடுயருச்சனையாரா, இதநிறன்றககன் றொடங்கியையிருவோர் பிரமர்சீா மனுககளிரொழுவோா, பததியின்றகைவா னவரொலாமபரவி வழிபடபரிவிறுறபணிந்தான்.

(இ-ள்) அநதப் பிரமதேவன, சத்திய வுலகத்தில் விரசைமாநதியின் விசாலமான கரையினிடத்துப் பெருமையுடைய ஸ்ரீரங்கவிமாநத்தைப் பிரதிஷ்டிதது, பிரீதியோடு மலர்சொரிநது அர்ச்சனைசெய்து, இவ்விதமாகவே தக்ஷப்பிரஜாபதி தொடங்கிப் பத்துப் பிரசாபதிகளும் சிறப்பையுடைய பதினாலு மனுக்களும் பெருமையையுடைய தேவர்களெல்லோரும் பக்தியோடு வாழ்த்தி வழிபடும்படி, பிரீதியோடு பணிந்தான. (எ-று.) (௫௧)

௫௨. ஆயநான்முகன்றன் முறைவழாதவராண் டருச்சனை புரிந்தனரயனும், தூயசூரியனுக் கருள்சுரந்தரியா ராதனைபுரிகெனசசுடரோன, நேயமாய்வணங்கி வழிபடாத்தருமன் றனகருமந் நீர்மையேநிகழ்த்த, மாயவன்றனையத் தருமனுமரபான் வழிபடாவுளமிகமகிழ்ந்தான்.

(இ-ள்.) இப்படியாகிய பிரமன், பழமையான முறைமையைத் தவறாதவர்களான பிரசாபதிகள் சத்தியலோகத்தில் திருவாராதநஞ் செயதனர்கள. பிறகு பிரமதேவனும் பரிசுத்தனான சூரியனுக்கு அளித்து எம்பெருமானைத் திருவாராதநஞ் செயயென்ன, அந்தச் சூரியனும் பக்தியோடு வணங்கி வழிபட்டு, வைவஸ்வதமனுவுக்கும் அப்படியே நியமிக்க, அந்த வைவஸ்வதமனுவும் திருவரங்கப் பெருமானை முறைப்படி வழிபட்டு உள்ளம் மிகவும் மகிழ்ந்தான. (எ-று.) (௫௨)

௫௩. அரியருச்சனையின் றிறமெலாந்தருமனிக்குவாகுவுக்குளத் தருளால, தெரிதரப்புகன்று ராதனைபுரிநீ யெனவயன்பதியினைச

சேராப், புரிவுளத்தருசித தவனிபோந்தரங்க விமானமிப்புடவி யிற்பொருந்தற், குரியநற்றவஞ்செய் துலகைவாழ்விப்பா மென நினைந்தருந்தவமுழந்தான்.

(இ-ள்.) எம்பெருமானது திருவாராதநக்கிரமங்களை யெல்லாம் மனுவானவன் இக்ஷ்வாகு மஹாராஜாவுக்கு உள்ளத்திலுண்டான அருளினாலே தெரியும்படி சொல்லி, நீ ஆராதனைபுரிவாயாக வென்றுரைக்க, அவ்விக்ஷ்வாகு மகாராஜனும் பிரமதேவனது சத்தியலோகத்தையடைந்து பிரீதியோடு அர்ச்சனை செய்து, பூமிக்குவந்து, ஸ்ரீரங்கவிமாநம் இந்தபூமியில்வந்து பொருந்தியிருப்பதற்குரிய நல்ல தவஞ் செய்து உலகத்தை வாழ்விப்போமென்றெண்ணி அரிய தவஞ் செய்தனன். (எ-று.) (ருங)

ருச. பற்பலபருவம் பசுந்துளவணிதோட் பரமனைப்பதுமநாயினைப், பொறபலாமகண்மா பினனைவேந்திதயம் பொருந்தியேபுரிபெருந்தவத்தால, விறபலமணிகள் விளங்கணியரங்க விமானமென்பதனைமேதினிக்கே, உற்பலமலர்நேர் நயனநாமகடன் கொழுநனேயுதவினனுவப்பால்.

(இ-ள்) பசுமையான திருத்துழாய்மாலையை யணிந்த திருத்தோள்களையுடைய பரமனை-பதுமநாயனை-அழகிய தாமரையில் வீற்றிருக்கும் பெரியபிராட்டியார் மேவிய திருமார்புடையவனை நோக்கி இக்ஷ்வாகு மகாராஜன் இருதயத்தை ஒருபடிப் படுத்திப் பலகாலம் செய்த பெரிய தவத்தினாலே, பிரகாசமுடைய பல மணிகள் விளங்கும் அழகிய ஸ்ரீரங்கவிமாந மென்பதைப் பூமியிலுள்ளார் பொருட்டு, நீலோற்பல மலரை யொத்த கண்களையுடைய சரஸ்வதிதேவியாருக்குக் கணவனான பிரமதேவன் சந்தோஷத்தோடு கொடுத்தனன். (எ-று.) (ருச)

ருரு. அவ்விமானங்கைக் கொடுமதிலயோத்தி யணிநகரணுகியாண்டமைத்துச, செவ்வியோன்றிருவா ராதனைபுரிந்தா னவன்முதற்றினகரன்மரபோா, நவ்விமுவிலேவே றரிததுளோனடலை தவிர்ததநான்மறைக்குநாயகனை, எவ்வியாணரும்போற் றயன்மகனளவா யிடைவிடாதருச்சனையிழைத்தார்.

(இ-ள்.) அந்த ஸ்ரீரங்கவிமாநத்தைக் கைக்கொண்டு, மதில்கள் சூழ்ந்த திருவயோத்தியையென்னும் அழகிய நகரத்தையடைந்து அங்கு பிரதிஷ்டித்து, மனமொழி மெய்களாலே செம்மையனான இக்ஷ்வாகு மகாராஜன திருவாராதநம் புரிந்தனன. அவன முதலாகச் சூரியவம்சத்திற் பிறந்தோரான அரசர்கள், மானையும் சூலத்தையும் தரித்த சிவபிரானது துன்பத்தை நிவர்த்தித்த நான்கு வேதங்களாலும் பிரதிபாதிக்கப் பட்டவனான ஸ்ரீரங்கநாதனை, எங்குள்ளவர்களும் துதிக்கும் அஜமகாராசன் புத்திரனான தசரத சக்ரவர்த்தி யளவாக இடைவீடின்றித திருவாராதநஞ் செய்தார்கள். (எ-று.) (ருரு)

ருசா. மன்னர்கோனயன்றன் மகன்றயரதற்கோர் மதலையாயலர்மகண்மகிணன், இன்னநீர்த்துலகை யளித்தருள்கருததா லிராகவ வடிவெடுத்தெவரும், உன்னலாவுயர்சீர்த் தனதுதொலவடிவை யருச்சனைபுரிந்துளமுவந்தே, அன்னமூர்விரிஞசன் குலத்துவீடணனும் பரமபாகவதனுக்களித்தான்.

(இ-ள்.) அரசர்க்கரசனுன அஜமகாராஜனது மகனுன தசாத சக்ர வர்த்திக்கு ஒப்பற்ற புத்திரனுகிப் பெரிய பிராட்டியாருக்கு நாதனுன பெரு மான, தீமையை நிவர்த்தித்து லோகத்தை ரக்ஷிக்குந திருவுள்ளத்துடன் இராமபிரானுகத் திருவவதாரஞ் செய்தது, எவர்களும் எண்ணுவதற்கரிய உயர்ந்த வைபவத்தையுடைய தனது பழமையான திவ்வியமங்கள விக்கிர கத்தைத் திருவாராதனஞ் செய்து திருவுள்ள முவந்தவனுகி, அன்னத்தை வாகனமாயேறும பிரமதேவன் வமிசத்தவரான விபீஷணுழ்வானுகிய பர மபாகவதருக்குக் கொடுத்தனன். (எ-று.) (ருசு)

ருஎ. விளங்கணியரங்க விமானமுங்கொடுவீ டணனுநீர்விரிந்த காவேரி, வளநகெழுநதியி னனந்தலேமருவா வதிந்தனன்றருமவ ன்மாவின, உளங்கெழுபரிவும புனிதநீர்நதியின் றவமுமாங்கெம்பி ரானுவந்தே, துளங்கவிலவிமானத் தொடுமவணுறைந்தா னென முதற்றகவெலாஞசொறறுன்.

(இ-ள்.) பிரகாசிக்கும் அழகிய விமாநத்தையுங் கொண்டு விபீஷணுழ் வானும் நீர் அதிகரித்த திருக்காவேரியென்னும் வளமிகுந்த நதியின மத்தியில் வநது தங்கினர். (அப்போது) தர்மவர்மாவெனனும் மகாராஜ னது உள்ளத்தில் அபிவிருத்தியாகும் பக்தியையும் பரிசுத்தமான நீரை யுடைய திருக்காவேரியின தவத்தையும் எம்பிரான் திருவுள்ள முவந்து, பிரகாசமுடைய விமாநத்தோடும் அங்கு எழுந்தருளினன என்று (திரு வரங்கபபெருமானது) முதனமையான பெருமையை யெல்லாம் அருளிச் செய்தனர். (எ-று.) (ருஎ)

## வேறு.

ருஅ. சொற்றவம்முறைகேட்டன்றுதொட்டுயர்தோகைதானுங்
கற்றவர்புகழ்நூற்றெட்டுத்திருப்பதிகருதிபோற்றி
நற்றவர்க்கரியஞானநாதனேநாஞுநாளும்
முற்றவபபரிவுகோயிலரங்கமேன்முழுதும்வைத்தாள்.

(இ-ள்.) (இப்படி ஆழ்வார்) அருளிச்செய்த முறைமையைக் கேட்டு, உயர்ந்த ஆண்டாளும் கற்றவர்கள் புகழும் நூற்றெட்டுத் திருப்பதியையும், அன்றுமுதல் சிந்தித்து வணங்கி, நல்ல தவத்தையுடையவர்கட்கரிய ஞான நாதனிடத்து நாளுநாளும் சிரேஷ்டமான பிரீதி அதிகரிக்க, அந்தப்பிரீதி முழுவதையும் திருவரங்கக்கோயிலின மீது வைத்தனர். (எ-று.) (ருஅ)

ருகூ. அயன்புரத்தகன்றுபார்மேலிக்குவாகுவினயோத்தி
நயந்துவீடணர்க்கிராமனல்கலானதிகாவேரி
உயர்ந்திடத்தருமவன்மாவுய்ந்திடவுறைந்துஞாலம்
பயந்தநாயகனேயார்வத்தொடுதினம்பரவலுற்றுள்.

(இ-ள்.) பிரமதேவனது சத்தியலோகத்தைவிட்டு நீங்கிப், பூமியின்மீது இக்ஷ்வாகு மகாராஜனுல் திருவயோத்தியை விரும்பி, விபீஷணுழ்வானுக்குச் சக்ரவர்த்தித் திருமகனுர் அளித்ததனுலே திருக்காவேரிநதி உயர்ந்திட வும் தர்மவர்மா உஜ்ஜீவிக்கவும் இங்கு நித்தியவாசஞ் செய்து உலகங்களைக் காத்தருளிய நாயகனைத் தினமும் பிரீதியோடு துதிக்கத் தொடங்கினர். (எ-று.) (ருகூ)

௯0. திரிபதைபுகழுஞ்சால்புசிறந்துயர்திருக்காவேரி
புரிதவப்பயனைவேதப்பொருளினைப்போற்றுங்காலை
விரிபனிபிகந்துவேனிலடைகொடிவியப்பமெல்லச்
சரிதருமிளமைநீங்கியெளவனப்பருவஞ்சார்ந்தாள்.

(இ-ள்.) கங்காதேவி புகழும் பெருமை சிறந்துயர்ந்த திருக்காவேரி செய்த தவத்தின் பிரயோசனமானவனை வேதப்பொருளானவனைப் போற்றும்போது, மிக்க பனிகால நீங்கி இளவேனிற் பருவமடைந்த பூங்கொடியும் வியப்பதாக, மெல்லக்கழிவதான இளமைப்பருவநீங்கி யெளவனப் பருவமடைந்தனர். (எ-று) (௯0)

௯௧. பொடித்தரும்பினபொற்கொங்கைவிழிவரிபோர்த்தபூந்தார்
முடித்தவைம்பாலுநெய்த்துநீண்டதுமுருகின்றீந்தேன்
வடித்தபொற்குதலைநீங்கச்சிறந்ததுவாணிவானிற்
றடித்தெனநுடங்கிற்றம்மதடித்தசீர்மருங்குலும்.

(இ-ள்.) அழகிய தனங்கள்-தோன்றி அரும்புதலாயின; திருக்கண்கள்-செவ்வரிகருவரிகள் பரந்தன; புஷ்பமாலையை முடித்த ஐந்துவகையாயுள்ள கூந்தலும்-நெய்ப்புடையதாகி நீண்டது; இளமைப்பருவத்தில் இனியதேனை வடித்துத்தருவதாயிருந்துள்ள அழகிய குதலைமொழி நீங்கி வாக்குச் சிறந்து விளங்கியது; தடித்த சிறப்புடைய இடையும்-ஆகாயத்திலுள்ள மின்னைப்போல் துவண்டது. (எ-று.) (௯௧)

ஐம்பால்-ஐந்துவகையாயிருப்பது. இது காரணக் குறியாய்க் கூந்தலையுணர்த்திற்று. ஐந்துவகையாவன: முடி, கொண்டை, குழல், பனிச்சை, சுருள் என்பன. கருமை, நீட்சி, நெய்ப்பு, மணம், குளிர்ச்சியெனவுமாம்.

௯௨. சேந்ததுப்பனையதாயிற்றிதழமைத்திரட்சிபொற்றோள்
ஏய்ந்தனதரளக்கோவையெனலாகியதுமூரல்
பாந்தள்கான்மதியிற்சோதிபரந்ததுவதனபான்மை
மாந்தளிரனையபாதமடப்பிடிநடையைவாய்ந்த.

(இ-ள்.) இதழ்-சிவந்த பவழத்தையொத்ததாயிற்று; அழகிய தோள்கள்-மூங்கிலின் திரட்சியை யடைந்தன; தந்த பந்திகள்-முத்துக்கோவையென்று சொல்லலாம்படியாயிற்று; திருமுகத்தின்றன்மை-பாம்புமிழ்ந்த சந்திரன் போல ஒளி பரவியது; மாந்தளிர்போலச் சிவப்பும் மிருதுவுமுடைய திருவடிகள்-பெண்யானையின் நடையையடைந்தன. (எ-று.) (௯௨)

௯௩. இத்தகைப்பருவமல்காவெழில்வளரணங்கைவாய்த்த
அத்தனுமன்னைதானுமகமகிழ்ந்தருளினோக்கி
மைத்தடம்புயலனோர்கண்ணன்மார்பகமணைப்பான்முன்னாள்
உத்தமவிரதமாயர்மகளிர்செய்ததனையுன்னி

(இ-ள்.) இப்பெருமையுடைய பருவம் நிறைந்த அழகு அபிவிருத்தியாகும் ஆண்டாளைப்பெற்ற தந்தையாரான பெரியாழ்வாரும் தாயாரும் திருவுள்ளமகிழ்ந்து கிருபையுடன் நோக்கிக், கறுத்த விசாலமான மேகம்போன்ற கண்ணபிரானது திருமார்பைத் தழுவுவதற்காக முற்காலத்தில் உத்தமவிரதத்தைத் திருவாய்ப்பாடியிலுள்ள ஆயப்பெண்கள் அநுஷ்டித்ததனையெண்ணி (எ-று.) (௯௩)

வேறு.

௬௪. கோதின்மார்கழிநீர்படிந்தருள்செனுக்கோதைக
கோதிறுரங்கரிவையுந்திருவுளத்துவந்தே
ஆதிமாலடிகழ்தினமொருகவிநவின்றனுவுந்
தீதிலாதுயாவிரதமுப்பதுபகலசெய்தாள.

(இ-ள்.) குற்றமற்ற மார்கழிநீராடி யருள்வாயாக வென்று ஆண்டாளுக்குச் சொல்லினா. அதனை யாண்டாளுந திருவுள்ளத்திற்கொண்டு காரணபூதனுன பெருமானது வைபவங்களைத் தினமுமொருகவியாக அருளிச்செயது சிறிதுந் தீமையில்லாது உயாந்த விரதத்தை முப்பதுதினங்களும் அநுஷ்டித்தனர். (எ-று.) (௬௪)

௬௫. தோற்றமார்கழிததிங்கண்முற்கிளவியாய்த்தொடைசீர்
ஏற்றமாதிருபபாவைநோன்பியலபுறவிசைத்தே
மாற்றமாதியின்றையொருதிஙகளாய்வயஙக
நோறமான்றிருமொழியரங்கேசனைநுவன்றுள.

(இ-ள்.) "மார்சழித்திங்கள்" என்பது முதல்வார்த்தையாகித் தோன்றத் தொடை சீர் இவைகளின் ஏற்றம் பொருந்திய திருப்பாவை யென்னும் பிரபந்தத்தை நோனபினது ஒழுக்கம் பொருந்தும்படி யருளிச்செய்து, விரதத்தை யநுஷ்டித்த மானபோனற ஆண்டாள், திருவரங்கநாதன் விஷயமாக முதல்வார்த்தை "தையொருதிங்கள்" என்று விளங்கும்படி திருமொழியை யருளிச் செய்தனர். (எ-று.) (௬௫)

௬௬. திருந்துசொற்றிருப்பாவைமுப்பானுமாறிருத்தாள
தருந்தகைத்திருமொழியொரீரொருபதுஞசாற்றிக
கருந்துணர்கருழனிாபடிந்தோர்திஙகளகழிபபப்
பொருந்திமற்றவளகனவின்மால்பூண்முலைபுணர்ந்தான்.

(இ-ள்.) திருத்தமுற்ற சொற்களையுடைய திருப்பாவை முப்பது செய்யுளும் பெருமானது திருவடியையளிக்கும் பெருமையையுடைய திருமொழி நூற்றுநாறபத்து (மூனறு) செயயுளுமாக அருளிச்செயது கருமையுடைய தாயப் பூங்கொத்துக்களணிந்த கூந்தலையுடைய ஆண்டாள் நீராடி ஒரு மாதங் கழிக்க, அவர் கனவில் பெருமான தோன்றி ஆபரணங்களணிந்த தனங்களிலணைந்தனன். (எ-று.) (௬௬)

வேறு.

‡ உரையப்பாமாலையிற்றிருமாலுறையும்பதிகள்பதினுறும்
அரங்கம்பிருந்தாவனங்குடந்தையணியாரெமுனைக்கரைக்கண்ண
புரமாலிருஞ்சோலைவில்லிபுத்தூர்பாண்டிவடம்வடம
துரைபத்தவிலோசனந்திருவேங்கடஞ்சீர்துவராபதியோடும்

வேறு.

‡ நீரார்பாற்கடலும்-ஏராராயப்பாடிப்
பேரார்வைகுந்தஞ்-சீர்கோவர்த்தனமே.

௬௭. புயங்கனுன்குமாமரகதவடிவமும்பொன்னுல்
வயங்குமாடையுங்கண்டுடன்மதுமலரணைமேல்

முயங்கியோகையங்கடலிடைமூழ்குவாண்முருகுந்தன்
நயந்தவக்கனவகலவேறண்டுயிர்நலிவாள்.

(இ-ள்.) திருப்புயங்கள் நான்கும் பெருமை பொருந்திய மரகதம் போன்ற திருமேனியும் பொன்னால் விளங்கும் ஆடையும சேவித்துப், பெருமானுடன் தேனையுடைய புஷ்பசயனத்தில் கூடி அழகிய ஆநந்தசாகரத்தில் மூழ்கும்படி பெருமான விருமபிய அந்தக்கனவு நீங்கவே, தான் வேருக எம்பெருமானை அண்டுதலான உயிர் வருந்துவாராயினர். (எ-று)

௬அ. தொறுவர்மங்கையாதமைவிருப்புற்றவர்துணைத்தோள
பெறுதல்காரணமாயவாகுலத்தினிற்பிறந்தாய்
மறுவினுன்மறையவர்குலத்துதித்தவென்மணித்தோள்
உறுமுயக்கமத்தொழிற்கிழிபாகியோவொளித்தாய்.

(இ-ள்.) இடைப்பெண்களை விரும்பி அவர்களது இரண்டு தோள்களைப் பெறுங்காரணமாக அவர்களது குலத்திலவதரித்த நீ குற்றமற்ற நான்கு வேதங்களை யுணர்ந்த பிராமணர் குலத்திற் பிறந்த எனது அழகிய தோள்களையடையும் சம்பந்தம் அச்செயலினும் இழிவானதெனவோ ஒளித்தனை? (எ-று.) (௬அ)

௬௯. கனவினுனுயர்களியுறக்கண்டவக்காட்சி
நனவினுற்பெறுந்தவமியாரொனக்கினிநவில்வார
தனமியான்றளர்தன்மைதேராதுபொன்றழைகக்கும்
எனதுமாலணியரங்கநாயகற்கெவரிசைப்பார.

(இ-ள்.) கனவில் நான் உயர்ந்த சந்தோஷமடையும்படி சேவித்த அந்தச் சேவையை ஜாக்கிரத்திலும் பெறுந் தவத்தை இனி யாரொனக்குச் சொல்லுவார்கள்? நான் தளருந்தன்மையை யறிந்துகொள்ளாமல் தனங்கள் பசலை பூக்கும்; எனது வியாமோகத்தை அழகிய திருவரங்கநாயகனுக்கு யார் சொல்லுவார்கள் ? (எ-று.) (௬௯)

எ0. பூண்டநித்திலக்கோவையோதுணைமுலைபுனையா
நீண்டவேல்விழித்துணைகளோவஞ்சனநினையா
நாண்டவாவுளநாணமோர்பொருளெனநயவா
தாண்டமாலரங்கேசனேவஃதறிந்தருளான்.

(இ-ள்.) என திரண்டு தனங்களுமோ கோத்த முத்துக்கோவையை யணியா; நீண்ட வேல்போன்ற இரண்டு கண்களோ மையை யெண்ணு; நாணம் தவருத உள்ளமோ நாணத்தை யொரு பொருளென்று விரும்பாது; நம்மையாண்ட பெருமை பொருந்திய திருவரங்க நாயகனே அதனையறிந்து அருள்செய்யான். (எ-று.) (எ0)

எக. திங்களோகுளிர்வாடையோவேயிசைத்திறனே
பொங்கழற்புரைமாலையோபொதியின்மாருதமோ
அங்கமொன்றிலாவொருவனேவுலகடங்கலுமோ
எங்கணுயகனருளிலார்க்கிடர்தருங்கூற்றம்.

(இ-ள்.) எங்கள் நாயகனான பெருமானது அருளிலாதவர்கட்கு இடைத்தரும் யமனயிருப்பது, சந்திரனே? குளிர்ந்த வாடைக்காற்றே? புல்

லாங்குழலின் இராகத்தினது கூறுபாடோ? பொங்கும் அக்கினிபோன்ற மாலைப்பொழுதோ? பொதியமலையைச் சார்ந்துவரும் தென்றற்காற்றோ? சரீரமில்லாதவனுய ஒருவனான மன்மதனோ? உலகமுழுதுமேயோ? (எ-று.)

எஉ. என்னவிமமுறையிடருழந்தெவையுநீத்திரங்கும்
அன்னமனனவளரிபதத்துறையுஞான்றவள்பாங்
குனனருமபொலங்கவரிகின்றெடுத்தடியொருவாப்
பின்னவிறவெறுடைபுனையனுக்கிரகையாம்பெயராள

(இ-ள்.) என்று இவ்விதமாகத துன்பப்பட்டு எவைகளையும் வெறுத்து மனமிரங்கும் அன்னம்போன்ற ஆண்டாள், பூமிப்பிராட்டியாயிருந்து பெருமானது திருவடிகளில் பொருந்தியிருக்கும்போது அவரிடத்து, நினைப்பதற்கரிய அழகிய சாமரையை யெடுத்து நின்று திருவடிகளைவிட்டு நீங்காதவளாயப் பினனவினிடத்து மாலையையணியும் அனுக்கிரகையாகிய பெயரையுடையவள், (எ-று.) (எஉ)

அனுக்கிரகை பரமபதசருக்கம் கஉ-வது செய்யுளைக் காண்க.

எங. அவள்பசுந்துளவததவதரிககுநாளவளோ
டுவகைபொங்கவப்பதியொரவேதியனிடத்துதியாத்
துவண்மருங்குன்மைககுழலவடனக்குயிர்த்துணையாய்ந்
தவவிலன்பினிந்தீவரவிழிபபெயாதரித்தாள்.

(இ-ள்.) ஆண்டாள் பசுமையான திருத்துழாயினிடத்து அவதரித்த நாளில் அவரோடு சந்தோஷமதிகரிக்க அந்த ஸ்ரீவில்லிபுத்தூரில் ஒரு வேதியரிடத்துப் பிறந்து, துவளும் இடையையும் கரிய கூந்தலையுமுடைய ஆண்டாளுக்கு உயிர்த்துணைவியாகிக் கெடுதலில்லாத அன்பினோடு இந்தீவரவிழி என்னும் பெயரைப் பூண்டவள. (எ-று.) (எங)

இந்தீவரம - நீலோறபலம. இநதீவரவிழிப்பெயா தரித்தாள் - நீலலோசனி.

எச. ஐயநுண்ணிடையமுதவாய்முகினிகரளகத்
தையறுன்புடன்றளர்தல்பார்த்தனளுளந்தரியாள
மையணிந்தபைங்கயல்விழிமரகதவடிவாய்
பையனந்தன்மேற்றுயில்பிரான்பதந்தொழும்பாவாய்

(இ-ள்.) உண்டோ இன்றோ என்று ஐயப்படுவதற்கிடமான நுட்பமான இடையையும் அமுதம் உண்டாகும் வாயையும் மேகம்போன்ற கூந்தலையுமுடைய ஆண்டாள் துன்பத்துடன் தளருவதைப் பார்த்து மனந்தரிக்காமல், மை யணிந்தனவாயப் பசிய கயல் மீன்போன்ற கண்களையுடையவளே! மரகதம்போன்ற வடிவையுடையவளே! படத்தையுடைய திருவனந்தாழ்வான்மீது அறிதுயிலமரும் பெருமானது திருவடிகளைத் தொழும் பதுமைபோன்றவளே! (எ-று.) (எச)

எரு. படுத்தபாயலிற்றுயிலகிலாயெமைமுகம்பாராய்
எடுத்தபூவைபைங்கிளியினோடொருமொழியிசையாய

தொடுத்தபூந்தொடைபுனைகிலாயினையதோர்துயரம்
அடுத்தகாரணமறிகிலேனவில்கெனவனையாள.

(இ-ள்.) படுத்தபடுக்கையினிடத்து நித்திரை செய்யாய்; எங்கள் முகத்தை ஏறிட்டுப் பார்க்கமாட்டாய்; கையிலெடுத்த நாகணவாய், பசியகிளி இவைகளோடு ஒரு மொழி சொல்லாய்; தொடுத்ததாகிய பூமாலையும் அணியமாட்டாய்: இப்படிப்பட்டதாகிய ஒப்பற்ற துயரம் உனக்கு வந்த காரணத்தை அறிகிலேன்; அதனைச் சொல்லுவாயாகவென, அந்துயரமடைந்த ஆண்டாள், (எ-று.) (எரு)

எசு. இறைத்தநோன்பினாற்கனவிடையெம்பிரானெய்தித்
தழைத்தகாதலின்முயங்கினன்விழிக்குமுன்றணந்தான்
மழைத்தகோலமீதளித்ததென்றலுமடவாலும்
உழைத்தசொலலினாலக்கணமன்னைமாடுரைத்தாள்.

(இ-ள்) நான் செய்த நோன்பினாலே எம்பிரான் கனவிற் றோன்றி அபிவிருத்தியான ஆசையோடு கூடினன்; நான் விழித்துப்பார்க்கு முன்னே என்னைவிட்டு நீங்கினன்; அப்பெருமானது மேகம்போன்ற ருளிர்ந்த திருமேனியழகு இந்நிலையைக கொடுத்தது என்று சொல்லுதலும், அத்தோழியும வருந்திய சொல்லினாலே அந்த க்ஷணமே அச்செய்தியைத் திருத்தாயாரிடத்துச் சொல்லினள். (எ-று.) (எசு)

எஎ. அன்னைகேட்டயரந்தையும்பணங்கினையளித்த
தன்னைபட்டர்கோன்றனக்கதுரைப்பவத்தவனும்
முன்னைமாதவனறைந்தசொற்றிறந்தனைமுனனிப
புன்னையம்பொழிலரங்கமேவுதுமெனபபுகலா

(இ-ள்.) திருத்தாயார் அதைக்கேட்டுத் துன்பமடைந்து, ஆண்டாளைப் பெற்ற திருத்தாயார்போன்ற பெரியாழ்வாருக்கு அதனைச் சொல்ல, அவ்வாழ்வாரும் முன்பு பெருமான் அருளிச் செய்த வார்த்தைக் கூறுபாட்டையெண்ணி புன்னைமரமுடைய அழகிய சோலை சூழ்ந்த திருவரங்கத்தையடைவோமென்று சொல்லி, (எ-று.) (எஎ)

எஅ. நவிகைசெய்தபொற்பாவையைநவமணிருயிற்று
சிவிகைமீதமைத்தணங்கனார்திரள்புடைசெறியப
புவிகைகூப்பவாழ்கற்பினளொடுமதிபொருவு
கவிகைநீழலிற்சிவிகையுற்றணிநகர்கடந்தான்.

(இ-ள்.) அழகை ஒப்பனைசெய்த பொற பதுமைபோன்ற ஆண்டாளை நவமணிகளிழைத்த சிவிகைமீதிருத்தித், தெய்வப் பெண்களுக்குச் சமானமானவர்கள் கூட்டம் பக்கங்களில் நெருங்கப், பூமியிலுள்ளோர் கைகூப்பும்படி வாழும் கற்பையுடைய திருத்தேவியாரோடு, சந்திரனைப்போன்ற குடைநிழலில் பல்லக்கேறி, அழகிய தமது நகரத்தைக் கடந்தனர். (எ-று)

எகூ. வேதபாரகர்முனிவரரிருபுடைவிரவ
ஓதவாரியிற்பணைபலபணிலமாங்கொலிப்பப்
பாதவங்கிளர்வனங்கிரிசெறிநெறிபடராக்
காதரந்தெறுநம்பிரான்கோபுரங்கண்டான்.

(இ-ள்.) வைதபாரகர்களும் முனிவர்களும் இரண்டு பக்கங்களிலுங் கூடி வரவும், அலைகளையுடைய சமுத்திரம்போல அநேக வாத்தியங்களும் சங்குகளும ஒலிக்கவும், மரங்களையுடைய வனங்களிலும் மலைகளிலும் பொருந்திய வழிநடந்து, தீயவினைத தொடர்பை யழிக்கும் நமது பிரானுன திருவரங்க நகரப்பனது திருக்கோபுரத்தைச் சேவித்தனர். (எ-று.) (எகூ)

அ0. கழிந்தபேருவகைககடலபெருகுறக்கண்ணிர்
பொழிநதுமெய்புளகரும்பநற்சிவிகையிற்புவிமீ
திழிநதுபோறறினனவணஙகினனெம்பிரானெழிற்றுள
வழிந்தவானதிபரவுமாநதிக்கரைவந்தான்.

(இ-ள்.) மிகுதியான பெரிய ஆநநதக்கடல் பெருகவும, கண்ணீர் சொரிந்து திருமேனியிற புளகமுண்டாகவும், நல்ல சிவிகையினின்று பூமியினிடத்திழிந்து அததிருக்கோபுரதஙதைத் துதித்து வணங்கி, எம்பெருமானது அழகிய திருவடிகளினின்று வழிந்த உயர்ந்த கங்காநதி துதிக்கும் பெருமை பொருந்திய திருக்காவேரி நதியின் கரையினிடத்து எழுந்தருளினர்.(எ-று)

அக. தூயவெண்டிரைபபுனல்படிந்துலகெலாந்துதிக்கும்
மாயவனறிருநாமமுன்னுன்கிளுன்மரபே
நேயமாயத்திருமணடரித்தனைவருநெருங்க
நாயகன்றிருவரங்கமாநகர்வயினடந்தான்.

(இ-ள்.) பரிசுத்தமாய் வெண்மையான அலைகளையுடைய நீரிற் படிந்து, உலகமெலாந் துதிக்கும் எம்பெருமானது திருநாமங்கள் பன்னிரண்டினுலே முறைப்படி பக்தியோடு திருமண்தரித்து, எல்லோரும் புடை சூழ, எமபெருமானது திருவரங்கமாநகரினிடத்து நடந்து, (எ-று) (அக)

அஉ. குருகையான்றமிழ்வேதமாகலியெனக்குமுறும்
தெருவியாவையுமிகந்தெழுநூற்றுவர்சிலந
கருதுயோகியாமாளிகைவீதியுங்கடந்து
பொருவினுன்முகன்கோபுரவாயிலிறபுகுந்தான்.

(இ-ள்.) திருக்குருகூரி லவதரித்தவராகிய ஆழ்வா ரருளிச்செய்த தமிழவேதம் சமுத்திரம் போலக் கோஷிக்கும் தெருக்களெல்லாவற்றையுங் கடந்து, நனமையான அறிவொழுக்கங்களைக் கருதும் யோகியர்கள் எழுநூற்றுவரது திருமாளிகைகளையுடைய திருவீதியையுங் கடந்து சென்று, ஒப்பற்ற நான்முகன் திருக்கோபுரவாசலிற் பிரவேசித்தனர். (எ-று.) (அஉ)

அா. வளைசெய்பூண்முலைக்கோதைபொற்சிவிகையைவளாய
திரையைநீககலுங்கண்டிலன்பட்டர்கோன்றிகையாக்
குரைசெய்பாற்கடலமுதமேயன்னையேகோதாய்
உரைசெயாதகன்றெம்மைநீத்தெங்ஙனமொளித்தாய்.

(இ-ள்.) அளவிட்டுச்செய்த ஆபரணங்களணிந்த திருமுலைத் தடங்களையுடைய ஆண்டாள் எழுந்தருளிவரும் பொன்மயமான சிவிகையைச் சுற்றிய திரையை நீக்குதலும், பட்டர்கோனுன ஆழ்வார் (ஆண்டாளைக்) காணுதவராகித் திகைத்து, ஓசையிடும் பாற்கடலிற் பிறந்த அமுதமே! அன்னையே! கோதைநாயகியே! சொல்லாமற் போய எங்களை விட்டு எங்கு ஒளித்துக்கொண்டாய்? (எ-று.) (அா)

அச. அரியநாரணன்சமயமல்லாவயற்சமயம்
உரியவீடுதந்துதவுமென்றடைந்தவருளத்தாற்
றெரியவோர்பொருளும்பெறாழுங்கலபோற்சிறியேன்
கரியகூந்தலாயுனைப்பயந்திடருறக்கண்டாய்.

(இ-ள்.) பெறுதற்கரிய நாராயணனது சமயமல்லாத இதர சமயங்கள் உரிமையான மோக்ஷத்தைக் கொடுக்குமென்று அடைந்தவர்கள், தமது உள்ளத்தாலே தெரியும்படி ஒரு பொருளும் பெறாதவராகி வருந்துவது போலச், சிறியேனை நான் கருமையான கூந்தலையுடையவளே! உன்னைப்பெற்று வருத்த மடையும்படி பார்த்தனையே! (எ-று.) (அச)

அரு. புலன்களைந்துநீத்தெம்பிரான்பதத்துளம்பொருந்து
நலங்கொளியோகிபாற்கற்றதோநவமணிசிவிகை
இலங்குநின்னைநீத்திருந்ததாற்கண்டிலேமெளியேம
அலங்கலவார்குழலாயெமதாவிவந்தருளாய்.

(இ-ள்.) ஐம்புலன்களையு மொழித்து எம்பெருமானது திருவடிகளிலே தமது உள்ளம் பொருந்தும் நலத்தைக் கொண்ட யோகியரிடத்துக் கற்றதுவோ? ஒன்பது ரத்தினங்களிழைத்த சிவிகையானது விளங்கும் உன்னைப் பிரிந்திருந்ததனாலே உன்னை எளியேமான நாம் காணேமாயினேம். மாலையணிந்த நீண்ட கூந்தலையுடையாய்! எமது உயிரே! வந்தருள்வாயாக. (எ-று.) (அரு)

எம்பெருமான் திருவடியை உள்ளத் திருத்தும யோகியர் சித்தியாலவர் கண்ணுக்குத் தோற்றுவதும் மறைவதுமாயிருப்பராதலால் எம்பெருமான் திருவடியை யுள்ளத்தே கொண்ட நீ முன்பு தோற்றியிருந்து இப்போது மறைந்தது, அவ்யோகியரிடத்துக் கற்றதுவோ என்றனர்.

அசு. இன்னபற்பலமனைவியுந்தானுநின்றிரங்காப
பன்னகத்தணைதுயிலரங்கேசன்முற்பணிந்து
முன்னருக்கனைமறைத்தொருவனதுயிர்முடித்தாய
கன்னனுக்குனதுருவொளித்தவனுயிர்கவர்ந்தாய.

(இ-ள்.) இவை போலவன பற்பல வார்த்தைகளால் தமது திருத்தேவியாரும் தாமுமாக நின்றிரங்கி, ஆதிசேஷனாகிய படுக்கையில் அறிதுயிலமரும் திருவரங்கேசனுக்கு முன்னே வந்து பணிந்து, முற்காலத்தில் (பாரத யுத்தத்தில்) சூரியனைமறைத்து (சயத்ரதனாகிய) ஒருவனது உயிரை முடித்தாய; கர்ணனுக்கு உனது உருவை யொளித்து அவனதுயிரைக் கொண்டாய; (எ-று.) (அசு)

அஎ. படிவமன்றொளித்தவுணர்கோன்றனைச்சிறைப்படுத்தாய
கடிவருந்திதிமறைத்தொருவனதுயிர்கவர்ந்தாய்
நெடியவாலியைமறைந்துயிர்கவரவுநேர்ந்தாய்
கொடியனுடனைமறைத்தெவருயிர்கொளக்குறித்தாய்.

(இ-ள்.) அக்காலத்தில் திருமேனியை ஒளித்து மாவலியாகிய அவுணர்கட்குத் தலைவனைச் சிறையில் வைத்தாய; நீக்குதற்கரிய திதியை மறைத்துக் (துரியோதனனுடைய) ஒருவனது உயிரைக் கொண்டாய; பெரிய வாலியை மறைந்திருந்து உயிர்கொள்ளவும் நேர்ந்தாய்; (இப்படியெல்லாம் செய

(நீ இப்போது) கொடிபோன்ற ஆண்டாளை மறைத்து யாவருயிரைக் கொள்ளக் குறித்தாய? (எ-று.) (அஎ)

அஅ. மதலைதந்தருள்கெனவரம்வேண்டுநாண்மறுத்தோர்
குதலைவஞ்சியையளித்தனைமறைத்தவட்கொள்ளா
விதலைதந்தனைநினதருட்கிதுவுமேதகவோ
முதலையான்மெலிகடகரிக்குதவுமாமுகிலே

(இ-ள்.) முதலையாலே மெலிந்த மதயானைக்கு அருளிய பெரிய மேகம் போன்றவனே! எனக்கொரு குழந்தையைத் தந்தருள்வாயாக வென்று வரங்கேட்கும்போது மறுத்துக், குதலைச் சொல்லையுடைய ஒருவஞ்சிக்கொடி போனறவளைக் கொடுத்தாய்; (இப்போது) அவளை மறைத்து எனக்கு நடுக்கத்தைக் கொடுத்தாய்; உன்னருளுக்கு இதுவும் மேன்மையாகுமோ? (எ-று.) (அஅ)

அகூ. சுருதிநான்முகன்முக்கணன்கடவுளோர்துறவோர்
கருதியேத்தியுங்காண்கலாமாயையங்கடலே
இருதிருபபதாம்புயத்தினையடியனேனிலக்கோ
தருதிபாவையையெனககலுழ்ந்தவனிமேற்றாழ்ந்தான்.

(இ-ள்.) வேதங்கள், நான்முகனான பிரமன், மூனறு கண்களையுடைய சிவன், தேவாகள், துறவிகள் சிந்தித்துத் துதித்துங் காணமுடியாத மாயையிற் கடல் போன்றவனே! இரண்டாகிய திருவடித் தாமரைகளையுடையவனே! (உனது மாயைக்கு) அடியேன் இலக்காவேனோ? என் பெண்ணைத் தருவாயாக வென்று கலங்கிப் பூமியில் விழுந்து வணங்கினர். (எ-று.)

கூ0. பட்டாசோன்றளர்ந்துருகலும்பசுந்துழாய்மார்பன்
மட்டவிழ்ததார்க்கோதையைநோக்கிவாண்மணிப்பொற்
பெட்டகத்தெமதிடத்தினிதுறைதரும்பெற்றி
உட்டளர்ந்தநின்றாதைபாலுரையெனவுரைப்பாள்.

(இ-ள்.) இப்படி ஆழ்வார் தளர்ந்து உருகுதலும், பசுமையான திருத்துழாயமாலை யணிந்த மார்பையுடைய பெருமான், வாசனைவீசும் மாலையையணிந்த கோதைநாயகியைப் பார்த்து, நீ ஒளி பொருந்திய மணிமயமான பொற்கோயிலில் நம்மிடத்து நன்மையோடிருக்கும் விதத்தை உள்ளந் தளர்ந்த உனது தமப்பனிடத்துச் சொல்லுவாயாக வென ஆண்டாள் சொல்லுவார். (எ-று.) (கூ0)

கூக. எந்தைநீதளர்ந்திளையல்வான்கடவுளாவர்க்கும்
முந்தைநாயகன்வாமபாகத்தினின்முன்னாட்
சிந்தைகூர்ந்தயர்தவத்தினாற்சேர்ந்தனனென்றாள்
தந்தைகேட்டலுந்துயாநீத்தொருமொழிசாற்றும்.

(இ-ள்.) எனது தந்தையே! நீவிர் தளர்ந்து வருந்தவேண்டா. உயர்ந்த தேவதைகள் யாவர்க்கும் முதன்மையான நாயகனது இடது பாகத்தில் நான் முன்னாளில் மனதை யொருப்படுத்திச் செய்த தவத்தினாலே சேர்ந்தனன் என்று அருளிச் செய்தனர். தந்தையான ஆழ்வார் (இவ்வார்த்தையைக்) கேட்டலும் துயரத்தினின்று நீங்கி ஒரு மொழி சொல்லத் தொடங்கினர். (எ-று.) (கூக)

௯௨. பொலிதவத்தினாற்பயந்தவெங்கோதையைப்பொன்னை
வலிதனிற்கவர்ந்துயர்ந்துளோர்கடவுளர்மறையோர்
கலிதிரைக்கடற்புவியுளோரலாமொழிகடவா
ஒலிதரப்புனைந்தனையிதுதருமமோவுரனே

(இ-ள்.) விளங்கும் தவத்தினாலே பெற்ற எமது கோதையை, பொன்போன்றவளை, வலிதில் அபகரித்து-உயர்ந்தவர்களும் தேவதைகளும் வேதியர்களும் ஒலி பொருந்திய அலைகளையுடைய பூமியிலுள்ளவர்களும் பழிமொழிகளை எப்போதும் சொல்லப் பூண்டனை. இது தருமந்தானோ? வலிமைதானோ? (எ-று.) (௯௨)

௯௩. குணங்களாலுயர்கோதையையெங்குலக்கொடியை
மணங்கொளாய்விடுத்தெமதகத்தடைந்தெனின்மறையோர்
கணங்கள்காணவீண்டுயிர்துறக்குவனெனக்கனற்கட
பணங்களாயிரம்பயிலணைத்துயின்முகில்பகர்வான்.

(இ-ள்.) பெண்மைக் குணங்களாலுயர்ந்த கோதையை, எமது குலக்கொடியை, எம்மிடத்தில் விடுத்து, எமது அகத்தையடைந்து திருமணஞ்செய்து கொள்ளாயாயின், வேதியர்களது கூட்டங்கள் காணும்படி இவ்விடத்திலேயே உயிரை விடுவேனென்றருளிச் செய்ய, அக்கினியுமிழும் கண்களும் ஆயிரம் படங்களுமுடைய திருவநந்தாழ்வானாகிய சயநத்தில் அறிதுயிலமரும் மேகம்போன்ற பெருமான் அருளிச் செய்யலாயினன். (எ-று) (௯௩)

௯௪. இனையனின்னுளப்படியுனதகத்தில்யாமெய்தி
முனிவர்வானவர்மறையவர்முதலினோர்முன்னர்
வனைகருங்குழற்கோதையைமறைமுறைவழாது
புனைதருங்கடிமணம்புரிகுதுமெனப்புகலா

(இ-ள்.) வருந்தவேண்டா; உமது உள்ளக் கருத்தின்படி உமது திருமாளிகையில் யாமடைந்து, முனிவர்கள் தேவர்கள் வேதியர்கள் முதலியவர்கள் முன்னே, அலங்கரித்த கரிய கூந்தலையுடைய கோதையை வேதவிதி தவறாமல் அலங்காரமாய் விளங்கும் திருமணஞ் செய்துகொள்வோமென்று அருளிச் செய்து, (எ-று.) (௯௪)

௯௫. சோதிமின்னெனமருங்குறைகோதையைத்துயர்கூர்
வேதியன்றனோடேகுகென்றன்பினான்விடுத்துக்
கோதினான்மறைமுனிவனைக்கோதையுநீயும்
போதிரும்பதிக்கெனவிடைகொடுத்தருள்புரிந்தான்.

(இ-ள்.) பிரகாசமுடைய மின்னென்னும்படி தனபக்கத்திலிருக்கும் கோதைப்பிராட்டியைத் துயரமடைந்த ஆழ்வாரோடு செல்லுவாயாகவென்று அன்போடு விடுத்துக், குற்றமற்ற நான்கு வேதங்களையுணர்ந்த மநநசீலரான ஆழ்வாரைக் (கடாக்ஷித்து) கோதைப்பிராட்டியாரைக் கொண்டு நீர் உமது பதிக்குப் போவீராகவென்று நியமநமளித்து அருள் புரிந்தனன். (எ-று.)

## வேறு.

[ஆண்டாள் திருக்கலியாணம்.]

௯௬. அடிபணிந்துவகைகூர்ந்தவனுமாடக
நெடியமாளிகைமதிலரங்கநீங்குறுக்

கொடியிடைப்பிடி நடைக்கோதைதன்னொடும்
படிபுகழ்புதுவையம்பதிபுகுந்தனன்.

(இ-ள்.) ஆழ்வாரும், பெருமானது திருவடிகளைப் பணிந்து சந்தோஷமடைந்து, பொன்மயமான பெரிய திருமாளிகைகளும் மதில்களும் சூழ்ந்த திருவரங்கத்தைநீங்கிக், கொடிபோன்ற இடையும் பெண்யானை போன்ற நடையுமுடைய ஆண்டாளோடு பூமியிலுள்ளோர் புகழும் ஸ்ரீவில்லிபுத்தூரெனனும் அழகிய நகரத்திற் பிரவேசித்தனர். (எ-று.) (கூசு)

கூள. அந்நகரமறையவரரசர்யாவருந்
தன்னடிபணிந்தெதிர்பரவத்தையலைப்
பொன்னணிமானமணமபுரியும்பொற்பெலாந்
தென்னவன்முதலினோரெவர்க்குஞசெப்பினன்.

(இ-ள்.) அந்த ஸ்ரீவில்லிபுத்தூர் நகரத்திலுள்ள மறையவர்கள் அரசர்கள் முதலிய யாவரும் தமது திருவடிகளைப் பணிந்து எதிரில் துதிகள் சொல்ல, ஆண்டாளைப் பெரிய பிராட்டியாரை யணிந்த திருமார்பையுடைய பெருமான், திருமணம் புரியப்போகும் ஒப்பனைகளை யெல்லாம் பாண்டியன முதலிய யாவருக்கு மருளிச் செயதனர். (எ-று.) (கள)

கூஅ. நவிறலுங்கடலுமெண்டிசைபுநாகமுஞ்
செவிடுறமுரசினங்கறங்கத்திங்கள்வெண்
கவிகைவெங்கரிபரிநெருங்கக்கைதவன்
புவிபுகழ்புதுவையம்புரிபுகுந்தனன்.

(இ-ள்.) (இபபடி) ஆழ்வார் அருளிச்செயலும், கடலும் எட்டுத் திக்கும் அஷ்டதிக்கயங்களும் செவிடுபடும்படி பேரிகைக் கூட்டங்கள் ஒலிக்கச், சந்திரன்போன்ற வெண்மையான குடையும் குரூரமுடையயானையும் குதிரைகளும் நெருங்கப், பாண்டிய மகாராசன் பூமியிலுள்ளோர் புகழும் ஸ்ரீவில்லிபுத்தூரெனனும் அழகிய நகரத்தை யடைந்தனன். (எ-று.) (கூஅ)

கூகூ. வானைவென்றுயர்மதில்வஞ்சிக்காவலன்
சோனைமைம்மலைவளநாட்டின்றோன்றலும்
ஏனைமன்னவர்களுமிரதமேமுதற்
றானையெண்ணிலபுடைதழுவச்சார்ந்தனர்.

(இ-ள்.) ஆகாயத்தை வென்று உயர்ந்த மதில்கள் சூழ்ந்த வஞ்சிமாநகரத்துக்கரசனான சேரமகாராசனும் விடாமழைபெயயும் மேகங்கள் தவழ்ந்த நேரிமலையையுடைய வளநாட்டினரசனான சோழமகாராசனும் இதரமான அரசர்களும் இரதம் முதலிய சேனைகள் கணக்கற்றனவாகிப் புடைசூழ வந்து சேர்ந்தனர். (எ-று.) (கூகூ)

நேரி-சோழதேயத்தோர் மலை; அதனால் சோழனுக்கு நேரியன் என்றும் நேரி வெற்பன் என்றும் பெயர் வழங்குமாறறிக.

க00. வழுதியும்புரிதிருவதுவைக்காயன
முழுவதுங்கொணர்ந்தணிநகரமுற்றுறப
பழுதறத்திருத்துமினென்றுபாங்கரிற்
குழுமியவமைச்சரைக்குறித்துக்கூறினன்.

(இ-ள்.) பாண்டியனும், நடக்கப் போகும் திருமணத்துக் குரியவை கள் முழுமையுங் கொண்டுவந்து அழகிய நகரமுழுமையுமாகக் குற்றமற அலங்கரியுங்கோளென்று பக்கத்தில் கூடிய மந்திரிகளை நோக்கிச் சொல்லினன். (எ-று.) (௧00)

௧0௧. முக்கனிசருக்கரைமுதிரைதண்டுலந்
தக்கணமலகிலாவடுக்கல்செய்தனர்
திக்கனைத்தினுமுளதினைநெய்தேன்சுவை
தக்கபால்கொடுபலசலதிசெய்தனா

(இ-ள்.) தக்ஷணமே, வாழை மா பலா என்னும் மூன்றுகனிகளும் சருக்கரையும் துவரை முதலிய தானியவகைகளும் அரிசியும் எண்ணிறந்த மலைகளாகக் குவித்தனர். திக்குகளெல்லாவற்றிலு மிருக்கும் தினை நெய தேன் தக்க சுவையையுடைய பால் இவைகளைக் கொண்டு பலகடல்களாக நிரப்பினார்கள். (எ-று.) (௧0௧)

௧0௨. புகர்முகமிசைமுரசறைந்துபொன்மதில
நகரணிதிருத்துதிரொனலுநான்மறை
பகர்முதல்வருதவம்பயந்துளோமெனு
அகமகிழ்வுடனகரலங்கரித்தனர்.

(இ-ள்.) யானையின்மீது பேரிகைகொட்டிப் பொன்மயமான மதில்களையுடைய நகரத்தை அழகாக அலங்கரியுங்கோளென்று நியமித்தலும, (யாவரும்) நான்கு வேதங்களும் சொல்லும் காரணபூதனன பெருமான் எழுந்தருளும் தவத்தைப் பெற்றோமென்று மனமகிழ்ச்சியோடு நகரத்தையலங்கரித்தனர். (எ-று.) (௧0௨)

௧0௩. வண்ணவித்துருமக்காளிறுவிமாழையங்
கண்ணகல்கட்டினுற்காவணஞ்செயாத்
தண்ணகலாதவெண்டரளக்கோவையால்
விண்ணகத்துடுவெனவிமானம்வீக்கினூர்.

(இ-ள்.) நிறத்தையுடைய பவளத்தூண்களை நிறுத்திப் பொனமயமாய அழகிய இடமகன்ற மேற்கட்டினாலே பந்தலிட்டு, குளிர்ச்சி நீங்காத வெண்மையான முத்து மாலைகளாலே ஆகாயத்திலுள்ள நட்சத்திர மென்னும்படி விமானத்தைக் கட்டினார்கள். (எ-று.) (௧0௩)

௧0௪. மணியணிகுயிற்றியமகரதோரணம்
அணிபெறவமைத்தொளிரம்பொற்றேர்நிறீஇப்
பணிமணிக்கதலியும்பைம்பொற்பூகமுந்
திணிசுடர்மறுகெலாந்திகழநாட்டினூர்.

(இ-ள்.) மணிகளை வரிசையாகப் பதித்த மகர தோரணங்களை அழகு பெறும்படி அமைத்துப் பிரகாசிக்கும் அழகிய பொன்மயமான தேர்களை நிறுத்தி, நாகரத்தினம் போன்ற வாழையும் பசுமையான பொன்போன்ற பாக்குமரமும் பிரகாசமிகுதியையுடைய வீதிகளெல்லாம் விளங்கும்படி நாட்டினார்கள். (எ-று) (௧0௪)

கΟரு. ஆடகப்பித்திகையமைத்தமண்டபத்
தூடகமகிழ்தரவுலப்பிலோவியர்
நாடகசித்திரநளினநாண்மலர்
ஏடகத்தயனெனவெழுதினாரரோ.

(இ-ள்.) பொன்சுவர்களை யமைத்த மண்டபத்தினிடத்துக் கணக்கற்ற சித்திரகாரிகள், புதிய தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனென்று சொல்லும்படி நாடகங்களை விளக்கிக்காட்டுவனவான சித்திரங்களை மனமகிழுமாறு எழுதினார்கள். (எ-று.) (கΟரு)

"அயனென" என்றதனால், பிரமனுடைய சிருஷ்டி உயிருடன் இயங்கு மாறுபோலச் சித்திரங்களும் உயிருடன் இயங்குமாறு எழுதிக்காட்ட வல்ல சித்திரகாரிகள் என்றபடியாம்.

கΟசு. பஞ்சணிபதத்தியைப்பசும்பொற்கோதையை
அஞ்சனவரிவிழியணங்கனார்குழீஇ
மஞ்சனமாட்டிப்பூமாலைசூட்டிவாள்
விஞ்சணிமணியணிவேயந்துமண்ணினார்.

(இ-ள்.) செம்பஞ்சுக் குழம்பணிந்த திருவடிகளையுடையவளை, பசும் பொன்போன்ற கோதையை, மைதீட்டிச் செவ்வரி கருவரி பரந்த கண்களையுடைய தெய்வப் பெண்களுக்குச் சமானமான மாதர்கள் கூடித் திருமஞ்சனமாட்டிப் பூமாலை சூட்டி ஒளி மிகுந்த அழகிய ரத்தினாபரணங்களைத் தரிப்பித்து அலங்கரித்தார்கள். (எ-று.) (கΟசு)

திருமணத்துக் குரியவைகளைச் சித்தஞ் செய்து யாவரும் எம்பெருமான் வரவுக் கெதிர் நோக்கியிருக்கையில் ஆண்டாள் பெரிய திருவடி நயினாரைச் சிந்தித் தழைத்துத் திருமணமுகூர்த்தக் கடிகைதவறாது எம்பெருமானை யிங்கழைத்து வருவையேல் பெருமானும் நானும் மணக்கோலங் கொண்டு வீற்றிருக்கும் ஆசனத்தில் நினக்கும் இருக்க இடந்தருகிறேனென் றுரைத்து, அவ்வாறே திருவடி செய்ய, ஆண்டாள் தாமுரைத்தபடி எம்பெருமானுந் தாமுமான ஏகாசனத்தில் திருவடிக்கு மிடந் தந்தனரென ஏனையிரண்டு செய்யுட் குருபரம்பரையில் உரைத்திருக்கின்றது.

கΟஎ. முரனதிவலந்தெறுமுதல்வன்மூதலர்க்
கரனதிர்முரசுகாகளங்கலித்தெழச
சுரநதியதனினுந்தூயபொன்னியாம்
வரநதிமஞ்சனமரபினாடியே

(இ-ள்.) முரனென்னு மசுரனது மிகுதியான வலிமையை யழித்த முதல்வன், பழமையானதாய் மலர்போன்ற கைகளையுடையவன் ஆன எம்பெருமான், அதிர்தலையுடைய பேரிகையும் எக்காளமும் ஒலிக்கும்படி கங்காநதியினும் பரிசுத்தமுடைய திருக்காவேரியாகிய சிரேஷ்டமான நதியில் முறைமைப்படி திருமஞ்சனமாடி, (எ-று.) (கΟஎ)

கΟஅ. உருக்கிளர்தமனியவுடைபுனைந்துதேம்
மருக்கமழ்திருத்துழாய்மாலைசாத்திவாள்
அருக்கனிலொளிர்மணியலகிலாதன
நெருக்குபொன்முடிகதிர்நிலவச்சூடினன்.

(இ-ள்.) சிறமிகுந்த பொன்னுடையையணிந்து, தேன் வாசனை வீசும் திருத்துழாயமாலையைச் சாத்தி, ஒளியையுடைய சூரியனைப் போலப் பிரகாசிக்கும் மணிகள் கணக்கற்றவைகள் நெருங்கப் பதித்த பொன்னாலான மகுடத்தைப் பிரகாசமுண்டாம்படி தரித்து, (எ-று.) (௧0அ)

௧0௯. தோளணிகுண்டலங்கடகந்தொன்மலாது
தாளணிசிலம்பிவைதரித்துத்தாழ்விலா
வாளணியைம்படைவயங்கவானவா
நீளணியிருபுடைநெருங்கியேத்தவே

(இ-ள்.) வாகுவலயம் மகரகுண்டலம் கடகம் பழமையான பமலர்போன்ற திருவடிகளிலணியும் சிலம்பு என்னும் இவைகளை யணிந்து தாழ்விலலாத ஒளியையுடைய அழகிய பஞ்சாயுதங்கள் விளங்கும்படி பெரிய தேவக்கூட்டங்கள் இருபக்கங்களிலும் நெருங்கித் துதிக்க, (எ-று.) (௧0௯)

௧௧0. சங்கரன்வாசவன்சதுமுகத்தவன்
துங்கமாமுனிவர்விஞ்சையர்கள்சூழ்தர
அங்கதவயிரிமீதரங்கநாயகன்
மங்கலமரபுடனவந்துதோன்றினன்.

(இ-ள்.) சிவன் இந்திரன் பிரமன பரிசுத்தராகிய பெருமை பொருந்திய முனிவர் வித்தியாதரா என்னுமிவர்கள் சூழ பாமபுகட்குப பகைவராகிய திருவடியின்மீது திருவரங்கநாயகன மங்கள வரிசையுடன வந்து தோன்றினன. (எ-று.) (௧௧0)

௧௧௧. உவகைமீக்கொளவெதிர்ந்துருகிப்பட்டாகோன்
பவமகற்றினனெனப்பணிந்துபோற்றினன்
அவனணிமனைபுகாவனசக்கையனும
நவமணிமண்டபத்தணையினண்ணினன்.

(இ-ள்.) பட்டர்பிரானன பெரியாழ்வார், சந்தோஷமதிகரிகக எதிர்கொண்டு சென்று மனமுருகி, எனது பிறவியைத் தொலைத்தேன் என்று பணிந்துபோற்றினர். அவ்வாழ்வாரது திருமாளிகையிற பிரவேசித்துத், தாமரைபோன்ற திருக்கைகளையுடைய பெருமானும், நவரத்தினங்களிழைத்த மண்டபத்தில் சிம்மாசனததில் எழுந்தருளினன். (எ-று) (௧௧௧)

௧௧௨. தெரிவருநுண்ணிடைக்கோவைச்செய்யவாய்ப்
பரிபுரததுணையடிப்பதுமக்கோதையை
வரியளிமுரறொடைமாயன்வைகிய
அரியணைமிசைவலததருகிருத்தினர்.

(இ-ள்.) அறிவதற்கரிய நுண்ணிய இடையினையுடையவராய்க் கோவைக்கனிபோன்ற சிவந்த திருவாயையும் பாதச்சிலம்பணிந்த இரண்டு திருவடித்தாமரைகளையுமுடைய கோதைநாயகியை, வரிகளையுடைய வண்டுகள் ஒலிக்கும் மாலையையணிந்த பெருமானெழுந்தருளிய சிம்மாசனத்தின்மீது, வலப்பக்கத் தருகி லெழுந்தருள்வித்தார்கள். (எ-று.) (௧௧௨)

௧௧௩. வதுவையின்சடங்கெலாமரபின்வானவர்
முதுகுருவிழைத்திடமுரசமார்ததெழுக்

குதுகுலக்கோதையைக்கோதில்பட்டர்கோன்
சதுமறைமுதல்கையிற்றாரைபீந்தனன்.

(இ-ள்) கலியாணத்துக்கு வேண்டுஞ் சடங்குகளெல்லாம் முறைப்படியே பழமையான தேவர்கட்குக் குருவான வியாழபகவான செய்யப், பேரிகைகளொலிக்கக், குற்றமற்ற ஆழ்வார், குதூகலமுடையவரான ஆண்டாளை நான்கு வேதங்களிற சொல்லும் முதற்பொருளான பெருமானது திருக்கைகளில் தாரைவார்த்துச் சமாப்பித்தனர். (எ-று.) (௧௧௩)

௧௧௪. ஐயன்மாமணிமதிலரங்கத்தெம்பிரான்
தையல்கோதைக்குநாண்புனைந்துதாமரைக்
கையவடளிர்க்கரம்பிடிப்பக்காமர்தீ
வையகமவியப்பமுறவலஞ்செய்தானரோ.

(இ-ள்) தலைவனான பெரிய அழகிய மதில்கள் சூழ்ந்த திருவரங்கத்தெம்பெருமான, கோதைநாயகித் தாயாருக்குத் திருமங்கல நாணணிந்து, தனது தாமரைபோன்ற திருக்கையை ஆண்டாளது தளிர்போன்ற திருக்கரம் பிடித்துக்கொண்டிருக்கப், பூமியிலுள்ளோர் ஆச்சரியப்பட, அழகிய ஆக்கினியை வலஞ்செய்தனன். (எ-று.) (௧௧௪)

ஆண்டாள் திருக்கலியாணம் நடந்தேறியது பங்குனி யுத்திரத்தில்.

௧௧௫. கடிமணமரபெலாமுடிந்துக்காமர்பொன்
முடிபுனைவழுதியேமுதலினோர்களும்
படிபுகழ்பட்டர்கோன்றானுமபைங்கழல
அடிபணிந்தெழுவிடையருளினல்கியே

(இ-ள்.) திருக்கலியாண முறைமைகளை யெல்லாம் முடிந்து, அழகிய பொன்முடி யணிந்த பாண்டியன முதலியவர்களும், பூமியிலுள்ளோர் புகழும் ஆழ்வாரும், பசிய வீரகண்டையணிந்த பெருமானது திருவடிகளைப் பணிந்தெழ, அவர்களுக்குக் கிருபையோடு விடையளித்து, (எ-று.) (௧௧௫)

௧௧௬. மணமலிகருங்குழன்மயிலுந்தானுமாய்ப்
பணவரவணைத்துயிலபரமனபண்ணவா
கணவருமருங்குறக்கருடன்றோண்மிசை
அணவரும்பதத்தழகமையவேறினான்.

(இ-ள்) படத்தையுடைய ஆதிசேஷசயனத்தில் அறிதுயிலமரும் பெருமான், வாசனைமிகுந்த கரிய கூந்தலையுடைய மயில் போன்ற ஆண்டாளும் தானுமாகத், தேவர்கட்குத் தலைவராகிய பிரமாதியர்களும் பக்கத்திலிருக்கத், திருவடியின் திருத்தோள்கள் மீது (பிறர்) அடைவதற்கரிய திருவடிகளில் அழகமையும்படி யேறினன. (எ-று.) (௧௧௬)

௧௧௭. விரிந்ததுந்துமியொலிவெருவித்தீவினை
இரிந்ததுதிசைமுகனிக்குவாகுமுன்
புரிந்தமாதவத்தினாற்புணரிஞாலத்திற்
றெரிந்தபொன்மதிற்றிருக்கோயில்சேர்ந்தனன்.

(இ-ள்.) (அப்போது) துந்துமியினொலி எங்கும்பரவியது; தீவினை பயப்பட்டு ஓடியது; திசைமுகனை பிரமனைக் குறித்து இக்ஷ்வாகு மகாராஜன் முன்புசெய்த பெரிய தவத்தினாலே சமுத்திரஞ் சூழ்ந்த பூமியினிடத்துத் தெரியவந்த பொன் மதில்களையுடைய திருக்கோயிலை யடைந்தனன். (எ-று.)

## வேறு.

கக௮. திருமாலடிதாழ்படடர்பிரான் றிருக்காதையுந்தார்திருமாறருக், கருமாவளகந்தனிற்சூடிக் கொடுத்தாள்கதையுங்கட்டுரைத் தாம், குருமாதவனாலெட்டெழுத்துட் கொண்டோன்கூடார்குலநாகுலையப், பொருமால்களிற்றுப்பரகாலன் றிருக்காதையினிப் புகல்கின்றாம்.

(இ-ள்.) பெருமான் திருவடிகளை வணங்கும் பெரியாழ்வாரது அழகிய சரித்திரமும், பெருமானுக்குக் கரிய பெரிய கூந்தலில் மாலையைச் சூடிக் கொடுத்த கோதை நாயகித் தாயாரது வைபவமும் சொல்லினோம். பிரமகுருவாகிய மாதவனாலே திருவஷ்டாக்ஷரத்தைப் பெற்றவராயச், சத்துருக்களது கூட்டம் குலையும்படி யுத்தஞ்செயயும் பெரிய யானையையுடைய பரகாலரான திருமங்கையாழ்வாரது அழகிய வைபவத்தை இனிச் சொல்லலுற்றேம். (எ-று.) (கக௮)

ஸ்ரீ ஆண்டாள அவதரித்தது கலியுகவருஷம் கூ௮-வதான நளவருஷம் ஆடிமாதம் சுக்கிலபக்ஷம் சதுர்த்தசி திதி பூரநக்ஷத்திரம் கூடிய மங்களவாரதினம துலாலக்னமாம்.

கோதைச்சருக்கம் முற்றிற்று.

ஸ்ரீ

# கக-வது பரகாலச்சருக்கம்.

[திருவாலி திருநகரி.]

க. துலங்குபொன்மதிலரங்கநாயகன்பணித்துயிலும்
* நலங்கொள்பொன்னியின்வடதிசைநாங்கையின்வடபால்
அலங்குமாலிநாடடணிதிருநகரமாங்கதற்கே
இலங்குமோர்பெயர்கூவிளவனமெனவிசைபபார்.

(இ-ள்.) பிரகாசமுடைய பொன்மதில்கள் சூழ்ந்த திருவரங்கத்துக்கு நாயகனுன பெருமான் ஆதிசேஷர்மீது அறிதுயிலமரும் நலத்தைக் கொண்ட திருக்காவேரிக்கு வடதிசையில் திருநாங்கூருக்கு வடக்கில் திருவாலி நாட்டின் அழகிய திருநகரம் விளங்கியிருக்கும்; அத்திருநகரிக்குப் பிரசித்தமான ஒரு திருநாமம் கூவிளவனமென்று சொல்லுவார்கள். (எ-று.) (க)

உ. புண்டரீகமாளிறைந்துமாதவமவட்புரியக்
கொண்டநாமமோதிருநறையூர்மறைக்கொழுந்தாம்
அண்டர்போற்றுமாலணுகியாங்கவட்டழீஇயதனுற்
கண்டபோபரிரமபமாக்கருதுவாாகவிஞா.

(இ-ள்.) தாமரைமலரிலெழுந்தருளிய பிராட்டியார், அங்கு எழுந தருளிப் பெருந்தவஞ் செயததிஞலே கொண்ட திருநாமமோ திருநறையூர் என்பதாம். மறைக்கொழுந்தாகிய தேவர்கள் போற்றும் பெருமான் எழுநதருளி அங்கு அபபிராட்டியைத் திருமணம் புணர்ந்து தழுவியதனுல் உண்டான பெயரோ பரீரம்பமென்று கவிகள் கருதுவார்கள். (எ-று.) (உ)

பரீரம்பம - தழுவல்.

ங. முந்தநாபியின்முளைத்ததாமரையினுன்முகத்தோன்
தந்தமாமுனிககருத்தமனுதியர்தவத்தால்
வந்தமாதிருமாதுடன்வைகுவான்றினமும்
அந்தமாநகரெனிலதன்வளமியாரறைவார்.

(இ-ள்) (பெருமானது) திருநாபியில் முற்படப்பிறந்த தாமரைமலரில் வீற்றிருக்கும் நான்கு முகங்களையுடைய பிரமன் பெற்ற மஹாமுனிவரான கர்த்தமப்பிரஜாபதி முதலானவர்களது தவத்திஞலே ஆவிர்ப்பவித்த எம்பெருமான் பெரிய பிராட்டியாருடன் எப்போதும் அந்தப் பெரிய திருநகரியில் எழுந்தருளி யிருப்பானென்னில் அதன் வளப்பத்தை யார் சொல்லுவார்கள்? (எ-று.) (ங)

[ஆலிநாடன்.]

ச. பொருவிலங்நகர்பொருந்துநால்வருணத்துட்புன்கண்
ஒருவுசெல்வத்தானுயர்ந்தநாலாய்குலத்தொருவன்
மருவுதொல்புகழாலிநாடன்றிருமனைவி
இருமைமிக்கபொற்கடகவல்லித்திருவென்பாள்.

---

* நலங்கொள்கிழையில்வடதிசைநாகையின்குடபால்
அலங்கன்மாதிருக்கண்ணமங்கைப்பதியதற்கே—[பிரதிபேதம்].

(இ-ள்.) ஒப்பற்ற அந்த நகரத்தில் வாசஞ்செய்யும் நாலு வருணத்தாரிலும் துன்பம் நீங்கும் செல்வத்தாலுயர்ந்த நாலாங்குலமாகிய சூத்திர வமிசத்தில் ஒருவனும் ஆகிய பொருந்திய பழமையான புகழையுடைய ஆலிநாடனென்பவனது அழகிய மனைவி, பிறந்தகமும் புக்ககமுமாகிய இருமையுஞ்சிறந்த பொற்கடகமணிந்த வல்லித்திருவென்பவள், (எ-று.) (௪)

[ஆழ்வார் திருவவதாரம்.]

ரு. கற்பினாலுயரருந்ததியனையவள்கருப்பத்
தற்பினாலுயர்மாதிருசார்ங்கமேயடைய
வெற்பினான்மலர்மிசையுளான்விண்ணுளோர்வியப்ப
பொற்பினாலுயர்புதல்வனைபயந்தனள்புவிமேல.

(இ-ள்.) கற்பினாலே உயர்ந்த அருந்ததியைப் போன்ற அவளது கர்ப்பத்தினிடத்து அன்பினாலுயர்ந்த பெருமானது அழகிய ஸ்ரீசார்ங்கம் வந்து சேர, கைலைமலையையுடைய சிவன், மலரின் மீதிருக்கும் பிரமன், தேவர்கள் ஆச்சரியப்படும்படி பூமியின்மீது பொலிவினாலுயர்ந்த குமாரனைப் பெற்றனள். (எ-று.) (ரு)

௬. சிறந்தகார்த்திகைத்திங்களிலாரழல்செழிக்கப்
பிறந்தசேயைமுப்பதொருபகலொழிந்தபின்னர்
அறந்தவாவுளத்தாலிநாடனும்பொருமாரா
புறந்தரப்பரகாலனென்றொருபெயர்புனைந்தான்.

(இ-ள்.) சிறப்பையுடைய கார்த்திகை மாசத்தில் கிருத்திகை நட்சத்திரம் செழிக்கும்படி அவதரித்த குழவியை முப்பத்தொருநாள் கழிந்தபிறகு தருமங்கெடாத உள்ளத்தையுடைய ஆலிநாடனும் சண்டைசெய்யு மரசர்கள் முதுகுகாட்டி யோடப் பரகாலனென்று ஒப்பற்ற திருநாமமிட்டனன். (எ-று.) (௬)

ஆர்-பூமி. ஆரார்-பூமியையுடையவர், அரசர்.

எ. ஐயனுந்திருமாலருளமுதமேயருந்திப
பொய்யகன்றஞானகுணங்கல்விநூல்பொதுளிச
செய்யதூணரசிங்கமெய்தநிறலொடுந்திசையும்
வையமும்புகழ்வடிவுடைமதனெனவளர்ந்தான்.

(இ-ள்.) தலைவரான பரகாலரும் பெருமானது திருவருளாகிய அமிர்தத்தையே யுண்டு பொய்யில்லாத ஞானம் குணம் நூற்கல்வி இவைகள் நிறையப்பெற்றுச் செவ்வையான தூணிலுதித்த நரசிங்கத்தினது திருமேனியிலுள்ள வலிமையோடு திசைகளிலுள்ளவர்களும் அப்பூமியிலுள்ளவர்களும் புகழும் வடிவத்தையுடைய மன்மதனென்று சொல்லும்படி வளர்ந்தனர். (எ-று.) (எ)

[அரசுபுரிதல்.]

அ. யாண்டுபன்னிரண்டிகந்தபின்பொன்னிநாட்டிறைவன்
தூண்டுமைங்கதிக்கோரவேற்சோழனையணுகா
வேண்டுபல்பொருடொகுத்தவன்மேதினிமுதன்மை
பூண்டுநால்வகைத்தானைசூழ்தரப்புவிபுரந்தான்.

(இ-ள்.) வருஷங்கள் பன்னிரண்டு சென்றபிறகு சோழநாட்டுக்கிறை வனுக்குச் செலுத்தத்தக்க ஐந்துவகையான வேகத்தையுடைய கோரமென்னுங் குதிரையையும் வேலையுமுடைய சோழனையடைந்து வேண்டிய பல பொருள்களைச் சேர்த்து, அச்சோழனது பூமிக்கு முதன்மையாந் தன்மையைக்கொண்டு நாலுவகையான சேனைகள் சூழும்படி பூமியைக் காத்தனர். (எ-று.) (அ)

ஐந்துகதி: மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி என்பன.

௯. தனக்குநேர்கவித்தமிழ்ஞரிலரெனுந்தகவும்
மனக்குநேர்கவிஞருக்கருளவண்மையின்வளமும்
சினக்குமேவலர்க்கசனியாளரியெனுந்திறனும்
இனக்கியாரினுமெளிமையுந்தழைக்கவீற்றிருந்தான்.

(இ-ள்.) தமக்கு ஒப்பாகத் தமிழ்க்கவியில் வல்லவர்கள் இலரெனும் பெருமையும், மனதுக்கு உவந்த கவிஞர்களுக்கு அருளும் உதாரத்துவத்தின் வளப்பமும், கோபிக்கும் சத்துருக்களுக்கு இடியும் நரசிங்கமுமென்னும் வலிமையும், சுற்றத்தவர்கட்கு மற்றெவரினும் எளிமையும் விளங்க வீற்றிருந்தனர். (எ-று.) (௯)

[நாலுகவிப்பெருமானென்னும் விருது பெறுதல்.]

௧0. அங்கவன்புவிபுரக்குநாளுற்கவியதிபன்
எங்கணுந்தமிழ்க்கவிஞரைத்திறைகவர்ந்திவன்பாற
றுங்கமாவிருதிசைத்தணுகலுமிகவெருலையாப்
பங்கமாக்கிமற்றவன்பெயர்விருதொடும்பறித்தான்.

(இ-ள்.) அங்கு அப்பரகாலர் பூமியைக் காக்கும்போது நாலு கவிப்பெருமான் என்பவன் எவ்விடத்துமுள்ள தமிழ்க் கவிஞர்களிடத்துக் கப்பம்பெற்று இப்பரகாலரிடத்துக்கு அழகாகத் தனது விருதைச் சொல்லிக்கொண்டு வருதலும், பரகாலர், அவனது வலிமையைத் தொலைத்துப் பங்கப்படுத்தி அவனது நாலுகவிப் பெருமான் என்னும் பெயரை (அவனது) விருதோடும் பறித்தனர். (எ-று.) (௧0)

௧௧. உவகைமிக்குயர்வளவனும்வரிசைகளுதவித்
தவலினற்கவித்தலைவனிபுவிக்கெனச்சாற்ற
இவனுமப்பெயர்விருதிசைத்தெவற்றினுமெதிராம்
அவர்களைத்தொலைத்திசைநிறைத்திட்டனனந்நாள்.

(இ-ள்.) சந்தோஷமிகவு மதிகரித்த சோழனும் வரிசைகளைக் கொடுத்துப் பூமியில் கெடுதலில்லாத நாற்கவிப் பெருமான் நீவிரே யென்று சொல்லப் பரகாலரும் அந்த விருதுப்பெயரைச் சொல்லிக்கொண்டு எந்த வித்தையிலும் எதிர்ந்தவர்களைத் தோற்பித்துக் கீர்த்தியை நிறைத்தனர் அக்காலத்தில். (எ-று.) (௧௧)

[குமுதவல்லியார்.]

இமயமலைச் சாரலிலிருந்த பகவதம்சமான கபிலமாமுனிவர், முனிவர்கட்கு நூற்பொருளை யுரைக்கும்போது அங்கிருந்த அங்கவீனரான ஒருமுனிவரைக் கண்டு சேடியர்களுடன் செல்லும் ஒரு தெய்வப்பெண்

அவமதித்து நகைத்தனள். கபிலமாமுனிவர் சினந்து நீ மானிடப்பெண் ணுகக் கடவையெனச் சபித்தனர். அதுகேட்ட தெய்வப்பெண் அம்முனி வரது பாதங்களை வணங்கி வாழ்த்தினள். கபிலமாமுனிவர் மனமிரங்கி, உலகத்தில் நமது அமிசமாகப் பரகாலன் அவதரித்துள்ளான, அவனை யடைந்து தினந்தோறும் பாகவத ஆராதனஞ்செய்து அவர்களருளால் இக்குற்றத்தைப் போக்கிக் கொள்வாயெனப் பணித்தனர்.

கஉ. அழகர்வாழ்திருநாகையம்பதியின்மாலருளின்
கிழமைபூண்டவானணங்கிதழ்கிஞ்சுகமனையாள்
குழனிறைந்தபூங்கோதையாள்குவளைபோல்விழியாள்
மழலையங்குயிற்குதலையாண்மயிலனாள்வந்தாள்.

(இ-ள்.) அழகப்பிரான் நித்தியவாசஞ் செய்யும் திருநாகை யென்னும் அழகிய பதியினிடத்துப், பெருமானது திருவருளின் உரிமையைக் கொண்டவளாகிய தேவலோகத்துத் தெய்வப்பெண், இதழ் செம்முருக்க மலரை யொத்தவளும் கூந்தலில் நிறைந்த பூமாலையையுடையவளும் நீலோற்பலம் போலுங் கண்களையுடையவளும் மழலைச் சொல்லையுடைய குயில்போலுங் குதலைச்சொல்லை யுடையவளும் மயில்போலுஞ் சாயலையுடையவளுமாகி வந்தனள். (எ-று.) (கஉ)

கரு. பளிங்குபோன்றுசெந்தாமரைவதுவையேபரவித்
தெளிந்ததண்புனற்றவளபுட்கரணியிற்செழுந்தேன்
களிர்ந்தபைங்குமுதத்திலோர்குழவியாநவைதீர்ந்
தொளிர்ந்தசெம்மணியெனவினிதழகுடனுதித்தாள்.

(இ-ள்.) பளிங்குக்கல்லைப் போன்றதாயச் சிவந்த தாமரையின் வாசனையே பரவித் தெளிந்திருக்கும் குளிர்ந்த நீரையுடையதாய, வெண்மையான ஒரு தடாகத்தில் செழுமையான தேன் பொருந்திய பசிய குமுத மலரில் ஒரு குழந்தையாகிக் குற்றநீங்கீர்ந்து பிரகாசமடைந்த மாணிக்கமென்னும்படி நல்ல அழகுடன் பிறந்தனள். (எ-று.) (கரு)

கச. தொலைவிலாவளந்துதையுமப்பதியின்முன்னாள
நிலைமையாகிவாழ்பண்டிதனெடியமாலனேயன்
உலைவிலாவமிர்தக்கரனுயிர்தவாதுதவுங்
கலைகடேர்ந்தவன்றனிமைவந்தரியனுட்கண்டான்.

(இ-ள்.) கெடாத வளங்கள் பொருந்தும்படி அந்தப் பதியினிடத்து நெடுநாளாக நிலையாகிவாழும் பண்டிதனொருவன், விஷ்ணுபக்தியுடையவன், அழிதலில்லாத தன்வந்திரிபகவான் உயிர்கள் கெடாமல் கொடுத்த வைத்தியசாஸ்திரங்களை யுணர்ந்தவன், தனியாக வந்து மான்போன்ற அப்பெண்ணைக் கண்டனன். (எ-று.) (கச)

கரு. எடுத்தனன்கரத்துவகையான்மனைவிபாலெய்திக்
கொடுத்தனன்குலக்கொடியுநங்குலம்புரிவதப்பே
றடுத்ததேயெனவளர்த்தனளணங்குருவகற்றி
விடுத்தபாவையைக்குமுதவல்லிப்பெயர்விதித்தே.

(இ-ள்.) கைகளாலெடுத்துச் சந்தோஷத்துடன் தன் மனைவியினிடத் தடைந்து கொடுத்தனன். குலக்கொடியான அவர் மனைவியும் நமது குலஞ்செய்த தவத்தின் பிரயோசனம் வந்ததே யென்று, தெய்வப்பெண் ணுருவைவிட்ட பதுமைபோன்ற அக்குழவிக்குக் குமுதவல்லியென்னும் பெயரிட்டு வளர்த்தனள். (எ-று.) (௧௫)

௧௬. சகரவார்கலித்தரைவயிற்றையலாரொருவர்
நிகரிலாவனப்பமைந்தவயவமெலாநிறைந்தாள்
புகரில்வாகடப்பொருளெலாம்பொருவறப்புவிக்கே
பகருவோனுமாங்கவள்வனப்பமைந்தமைபாரா

(இ-ள்.) (குமுதவல்லியார்,) சகரரெடுத்த சமுத்திரஞ் சூழ்ந்த பூமியினிடத்துப் பெண்களில் ஒருவரும் ஒப்பில்லாத அழகமைந்து அவயவமெல்லாம் நிறைவுற்றனர். குற்றமில்லாத வைத்தியநூற் பொருள்களையெல்லாம் பூமியிலுள்ளவர்கட்குச் சமானமின்றிச் சொல்லுமவனான பண்டிதனும் அப்பெண் அழகமைந்ததைப் பார்த்து, (எ-று.) (௧௬)

௧௭. வைகலாயிரந்திருமுடிக்கமுதருள்வல்லோர்
பொய்கலாவிடையணங்கைவேட்டருண்மெனப்புகன்றான்
எய்கலாரவேளிவள்வனப்பிரண்டினுக்கிலக்காய்ச்
செய்கலாவிரதத்தினானைவருந்திகைத்தார்.

(இ-ள்.) தினந்தோறும் ஆயிரம் பாகவதர்களுக்கு அமுதளித்தல் வல்லவர்கள், பொய்மையடையாத இடையையுடைய குமுதவல்லியாரை விவாகஞ்செய்தருள்க என்று சொல்லினன். நீலோற்பலமலர்ப் பாணத்தை விடும் மன்மதன், குமுதவல்லியார் அழகு என்னும் இவ்விரண்டுக்கு மிலககாயச் செய்யமுடியாத விரதத்தினாலே யாவருந் திகைத்தார்கள். (எ-று.)

முதற்கண் பார்வைக்கு இடையிருப்பது பொய்யெனத்தோன்றி மேவிருப்பைக்கொண்டு இடையிருப்பது மெய்யென்றே துணிவதற்கிடமாயிருத்தலால் 'பொய்கலாவிடை' என்றார். கேட்டருளும் என்பதில் ஈற்றய லுகரங்கெட்டுக் கேட்டருண்ம் என வந்தது. (௧௭)

௧௮. வரிவிழிக்கொடிவனப்புமாங்கவடனைவதுவை
புரிபவர்க்கிதுபொருளெனமதித்ததும்பொருந்தார்
கிரிபுகப்பொருந்திறற்பரகாலனுங்கேளாப்
பெரிதுழற்றுவேள்கணையினானசையுளம்பெருத்தான்.

(இ-ள்.) செவ்வரி கருவரி பரந்த கண்களையுடைய கொடிபோன்ற குமுதவல்லியாரது அழகையும் அங்கு அவளை மணஞ்செய்பவர்கட்கு இது செய்யத்தகுவதென்று மதித்திருப்பதையும், சத்துருக்கள் மலையை யடையும்படி யுத்தஞ்செய்யும் வெற்றியையுடைய பரகாலரும் கேட்டு, மிகவும் வருத்தும் மன்மதனது பாணத்தினாலே உள்ளத்தில் ஆசை யதிகமாயினர். (எ-று.) (௧௮)

௧௯. அணங்குநாற்கவியதிபனைவாதுவென்றமரர்
கணங்களைத்தொலைத்தவனியாள்தகைமையுங்கவினுங்
குணங்களுந்துதித்தவனையேசிலதியர்கூற
வணங்கிமாலையென்மகிணனுக்குவனெனவடித்தாள.

c—20

(இ-ள்.) குமுதவல்லியாரும் (பரகாலர்) நாலுகவிப் பெருமான் என்பவனை வாதில்வென்று சத்துருக்களது கூட்டங்களைத் தொலைத்துப் பூமியையாளும் பெருமையையும் அவரது அழகையும குணங்களையும் துதித்துத் தோழியர்கள் சொல்ல, எம்பெருமானை வணங்கிப் பரகாலரையே எனது கணவனுக்குவனென்று சொல்லினர். (எ-று.) (௧௯)

௨0. அன்னகாலையினபயனதானையாலழகர்
பொன்னகர்க்குள்வந்துறைபரகாலனைப்பொலன்பூண்
கன்னனேர்மொழிக்கன்னியைமேடைமேற்கண்டான்
வன்னவோடையங்களிற்றின்மேல்வீதியின்வருவோன்.

(இ-ள்.) அக்காலத்தில், சோழனது கட்டளைப்படி அழகப்பிரானது திருநாகையில் வந்து வசித்து நிறமுடைய முகபடாமணிந்த அழகிய யானையின்மீது வீதியினிடத்து வருவோரான பரகாலர், அழகிய ஆபரணமும் கரும்பையொத்த சொல்லையுமுடைய அக்கன்னிகையை மேடையின்மீதிருக்சக் கண்டனா. (எ-று.) (௨0)

௨௧. மாமலர்க்குழல்வனிதையுந்தனதிபமலைமேற
காமர்பொற்புயத்திறற்பரகாலனைக்கண்டாள்
நாமவிற்கழைமதனனுமிருவர்மேனடுநின்
றேமமைங்கணையொன்றலாதவையெலாமெய்தான்.

(இ-ள்.) சிறந்த மலர்களையணிந்த கூந்தலையுடைய குமுதவல்லியாரும், தமது மலைபோன்ற யானையின்மீது அழகிய பொன்னாபரணமணிந்த புயங்களையும் வலிமையுமுடைய பரகாலரைக கண்டனள். சிறந்த கரும்பு வில்லையுடைய மன்மதனும் மத்தியில் நின்று அவ்விருவர்மீதும் இன்பந்தரும் பஞ்சபாணங்களில் ஒன்றொழியாமல் அவைகளை யெல்லாம் பிரயோகஞ் செயதனன. (எ-று.) (௨௧)

௨௨. அங்கவன்புயத்தாழ்ந்தனவணங்குளலர்க்கண்
புங்கவன்விழித்துணையவள்கொங்கைமீப்புதைப்பத
திங்கள்வெண்குடைத்திறற்பரகாலனுஞ்சினமாத்
தங்கலின்றியேபடர்தலானத்தெருதணந்தான்.

(இ-ள்.) அங்கு அப்பரகாலரது புயங்களினிடத்துத் தெய்வப்பெண்ணை அந்தக் குமுதவல்லியாரது மலர்போன்ற கண்கள் அழுந்தின. தெய்வத்தன்மையுள்ள பரகாலரது இரண்டு கண்கள், குமுதவல்லியாரது கொங்கைகளின் மீது புதைத்தாராக, சந்திரன்போல வெண்மையான முத்துக்குடையினையுடையவராய வெற்றியையுடைய பரகாலரும், (அவரேறிவந்த) கோபமுடைய யானை தங்காமற் செல்லுதலால், அவ்வீதியை நீங்கி, (எ-று.) (௨௨)

வேறு.

௨௩. சார்ந்தனனுண்டுறையுடன்னமைசசாகளாற் பண்டிதன் சொற் றகைமையாவுந், தேர்ந்தனனா ரணற்கடிமைத் திருமுடியா யிரார்க்கடிசி றினமுமீவான், நேர்ந்தனனேல் விரும்புகென்று னென்றலுமாங் கதுபுரிவா னோர்ந்துபின்னர், வார்ந்தநறுங் கருங்குழற்கார் மயிலியலை மறைமுறையே வதுவைசெய்தான்.

(இ-ள்.) அந்தகாரத்திலுள்ள தம்மிருப்பிட மடைந்து, தமது மந்திரிகளால் (குமுதவல்லியாருக்குத தந்தையான) பண்டிதன் சொல்லும் விதங்களைவற்றையும் அறிந்து, (அப்பண்டிதன்) "பெருமானுக்கு அடிமைபூண்ட ஆயிரம் பாகவதர்கட்கு அமுது தினமுங் கொடுப்பதாக உடன்பட்டனராயின் விரும்பக்கடவர்" என்றனன் என்று சொன்னவளவில் அது செயவதாக உடன்பட்டுப், பிறகு நீண்டதாய வாசனையுள்ள கரியதான கூந்தலையுடைய கார்காலத்து மயில்போன்ற சாயல் கொண்ட குமுதவல்லியாரை வேதமுறைப்படி திருக்கலியாணஞ் செயதனர். (எ-று.) (௨௩)

௨௪. அன்றுமுதலரியடியா ராயிரநூற்றுவராடிசி லயின்றலன்றி, ஒன்றுநுகர்கிலனுலகோ ருதவுகாரஞ்சோழனுக்கு முதவாதோவில, நன்றுபுரிபாகவத ராருசசனையைமறவாது நடத்தினாருனு, சென்றுதனதிறைவனைக்காண் டலுமறந்தானிவையனைத்துஞ் செவிகேட்டான்.

(இ-ள்.) அன்று முதலாகப் பாகவதர்கள் ஆயிரந் திருநாமங்கள் திருப்போனக மமுது செயதாலன்றி (பரகாலர்) தாமொன்றும் உண்ணாதவராகிப் பூமியிலுள்ளவர்கள் கொடுக்கும குடியிறைகளைச் சோழனுக்குங் கொடாமல் கெடுதலில்லாத நன்மையைக் கொடுக்கும் பாகவதாராதனையை மறவாமல் நடத்தித் தினமும் சென்று தனக்கு இறைவனாகிய சோழனைக் காண்பதையும் மறநதனா. இவைகளை யெல்லாம் சோழமகாராசன் கேட்டனன். (எ-று.) (௨௪)

ஆழ்வார், ததீயாராதனை நடத்திய இடம், இன்றும் மங்கைமடமென வழங்குகின்றது.

வேறு.

௨௫. வந்திலனபரகாலனுந்தருபொருண்மறுத்தான்
எந்திருந்தனனென்றலுமவரிணவாக்கிய்ந்தே
சிந்தினன்பொருளென்றனர்சென்னியுஞ்சீற்றம்
முந்தியேகரணக்கிளைஞாக்கிவைமொழிவான்

(இ-ள்.) பரகாலனும் நம்மைக்காணவந்திலன்; தான் கொடுக்கவேண்டிய பொருளையும் மறுத்தான்; அவன எங்குள்ளான்? எனறு கேட்டலும், கேட்டவர்கள், வைணவர்கட்குக் கொடுததே பொருளைச் செலவழித்தனன் என்றார்கள். சோழமகாராசனும் கோபமிகுந்து கணக்கர் கூட்டங்கட்கு இவைகளைச் சொல்லுவான். (எ-று.) (௨௫)

௨௬. நலங்குலாவுபார்முழுவதுமவனதாய்நல்கி
வலங்கொள்பற்பலவரிசையுமளித்தனமதியான்
இலங்குசெம்பொனுந்தருகிலனவன்மிசையிலககந்
துலங்கவோதுமினென்றலும்பணிந்திவைசொல்வார்.

(இ-ள்.) நன்மையையுடைய பூமிமுழுவதும் அவனதாகக் கொடுத்து அவனது வெற்றிக்குத் தக்கப்படி கொண்ட பலவான வரிசைகளையும் கொடுத்தோம். (அவைகளை) மதிக்காதவனாகி நமக்குச் செலுத்தவேண்டிய விளக்கமுள்ள பொன்னையும் தந்தானில்லை. அவன்மீதுள்ள கணக்கைத் தெரியும்படி சொல்லுங்கள் என்னலும், அவர்கள் பணிந்து இவற்றைச் சொல்லுவார்கள். (எ-று.) (௨௬)

௨௭. மன்னர்மன்னவவலிசெழுமதிப்பரகாலன்
நின்னருட்கிசையந்திலனெனினோர்பொருளனந்தம்
அன்னவன்றரற்குரியனவென்றலுமரசன்
தன்னயற்பலகிங்கரர்தமக்கிவைசாற்றும்.

(இ-ள்.) ராஜாதிராஜனே! வலிமிகுந்த ஞானமுடைய பரகாலரும் உமது அருளுக்கு இசையாராயின் உரிய பலவான பொருளை அவர் தருவதற்குரியனவாகும் என்றலும், சோழன் தன்னருகிலிருக்கும் பல ஏவலாளருக்கு இவற்றைச் சொல்லுவான். (எ-று.) (௨௭)

௨௮. அணித்தடம்புயத்திறற்பரகாலனையணுகிக்
கணித்தநம்பொருளகேட்குதிர்மறுத்திடிற்கயிற்றாற்
பிணித்துமீள்குதிரெனவிடைகொடுத்தலும்பெயர்ந்து
பணிக்குநாதன்முன்கருடனைபோலெதிர்ந்தனர்பகர்வார்.

(இ-ள்.) ஆபரணமணிந்த விசாலமான புயங்களையும் வெற்றியையுமுடைய பரகாலனையடைந்து நமக்குச் சேரவேண்டியதாயக் கணக்கிட்ட பொருள்களைக் கேட்பீர்களாக; மறுப்பாராயின அவனைக் கயிற்றால் கட்டிக்கொண்டு மீண்டு வருவீர்களாக என்று விடைகொடுததலும் பிரயாணமாகிப், பாம்புகட்குத் தலைவரான ஆதிசேஷனுக்கு முன்னே எலியைப்போல்பரகாலரெதிரே சந்தித்துச்சொல்லத்தொடங்கினர். (எ-று.) (௨௮)

௨௯. தருதிமன்னவன்பொருளெலாமறுத்திடிற்றவாது
வருதியென்றலுமின்றெனக்கொடுமொழிவகுத்தார்
பொருதிறற்புலியெனசசினந்தவைத்திவைபுகன்மின்
பருதிசேய்க்கெனப்பகர்ந்தனன்றிறற்பரகாலன்.

(இ-ள்.) மன்னவனான சோழனுக்கு (நீர் செலுத்தவேண்டிய) பொருள்களையெல்லாம் கொடுப்பீராக, கொடுக்கமறுப்பீராயின தடைசெய்யாது வருவீராக என்றலும் (பரகாலர் அப்பொருள் இப்போது) இல்லையென்று சொல்ல, (அவர்கள்) கொடிய சொற்களைக் கூறினர். வெற்றியையுடைய பரகாலர் யுத்தஞ் செய்யும் வலிமையையுடைய புலியைப்போலக் கோபித்து அவர்களை நெருக்கிச் சூரிய வமிசத்தனான சோழனுக்கு இவற்றைச் சொல்லுவீராக வென்று சொல்லினர். (எ-று.) (௨௯)

௩௦. ஓடிக்கிங்கரர்சென்னிபாலுரைததலும்புருவங்
கோடிக்கண்சிவந்திருகரம்பிசைந்துளங்கொதியா
நாடித்தானையைக்கொணருதிரெனநளினத்தாள்
சூடித்தூதர்புக்கழைத்தலுமனைவருந்தொக்கார்.

(இ-ள்.) கிங்கரர்கள் ஓடிச் சோழனிடத்துச் சொல்லுதலும் புருவங்கள் நெரித்துக் கண்கள் சிவந்து இருகைகளையும் பிசைந்து உள்ளங் கொதித்து விசாரித்து (நமது) சேனையைக் கொண்டுவாருங்களென்னத், தூதர்கள் அவனது பாதங்களைச் சூடிக்கொண்டு போய் அழைத்தலும் சேனையிலுள்ளோர் யாவரும் வந்து கூடினார்கள். (எ-று.) (௩௦)

௩௧. கவித்தவாம்பரிச்சேனைகாவலர்களைக்கழற்கால்
புலிக்கொடிக்கிறைநோக்கிநந்தூதரைப்பொடித்த

வலித்தடம்புயத்திறற்பரகாலனைவளையா
நலித்துவீக்கிநீர்கொணருதிர்கடிதெனநவின்றான்.

(இ-ள்.) சப்தித்தனவாய்த் தாவும் குதிரைகளையுடைய சேனைகாவலர்களை வீரகண்டையைத் தரித்த கால்களையுடையனாய்ப் புலிக்கொடியுடையோனான சோழன் பார்த்து, நமது தூதனை வருத்திய வலிமையையுடைய விசாலமான புயங்களையுடையனாய் வெற்றிபொருந்திய பரகாலனை வளைத்துக்கொண்டு வருத்தப்படுத்திக் கட்டி நீங்கள் விரைவிற் கொண்டுவாருங்களென்று சொல்லினன். (எ-று.) (௩௧)

௩௨. சூலங்தோமரங்கப்பணங்தோட்டிவேல்பிண்டி
பாலங்கூர்மழுமுசலம்வாள்பலதலைக்குலிசம்
கோலமானவரேந்திமாதிரக்கரிகுலைய
ஆலமாமெனச்சென்றனர்துன்றுபாரனுங்க.

(இ-ள்.) சூலம் கைவேல் இருப்புமுள் அங்குசம் வேலாயுதம் பிண்டி வாலம் கூரியமழு இருப்புலக்கை வாள் பலதலைகளையுடைய வச்சிராயுதம் இவைகளை அழகிய படைவீரர் ஏந்திக்கொண்டு, திசைகளிலுள்ள யானைகள் குலைய, விஷமென்னும்படி, நெருங்கிய பூமியும் வருந்தச் சென்றனர். (எ-று.) (௩௨)

௩௩. சேனைகாவலர்திருநகரிப்புறஞ்சேர
யானைமீப்பரகாலனும்புரிசைவிட்டெதிராத்
தானைவீரரைநோக்கினனகைத்தலுந்தருக்கா
சோனைமாரியிலனைவருஞ்சுடுசரந்துரந்தார்.

(இ-ள்.) சேனைகாவலர்கள் திருநகரிப்புறத்திற் சேரவே, யானையின் மீதேறிப் பரகாலரும் மதிலைவிட்டு எதிர்ப்பட்டுச் சேனையிலுள்ள வீரர்களை நோக்கி நகைத்தவளவிலே, (சேனையிலுள்ளோர்) அனைவரும் செருக்கடைந்து கொடிய பாணங்களை விடாமழையைப் போல் பிரயோகித்தார்கள். (எ-று.) (௩௩)

௩௪. துரந்தசாயகத்துனைவினுந்துனைகளிறுகையாப்
பரந்தவாளுறைகழித்துவணத்தொடும்பரமன்
புரந்தநேமிதொட்டெதிர்தல்போற்சேனையுட்புகுந்தான்
உரந்தவாக்கடாசலமுகைத்தவர்களுமுடன்றார்.

(இ-ள்.) பிரயோகித்த பாணங்களின் விரைவினும் வேகத்தையுடைய யானையைச் செலுத்திப் பரவிய வாளை உறையினின்றுருவிப், பரமன் திருவடியை யாரோகணித்து அடியார்களை ரக்ஷித்த திருச்சக்கரத்தைப் பிரயோகித்துப் பகைவரை எதிர்ப்பதுபோலச், சேனையிற் பிரவேசித்தனர். வலிமைகெடாத மதத்தையுடைய மலைபோன்ற யானைகளைச் செலுத்தி அவர்களும் எதிர்த்தார்கள். (எ-று.) (௩௪)

௩௫. வீசிவாளினைப்பனைக்கரந்துமித்துயர்வேழத்
தாசின்மத்தகம்பிளந்துகிம்புரிமருப்பறுத்து
வாசியின்கணந்துமித்துமன்னரையெலாமடித்துத்
தூசியின்படையினைப்பரகாலனுந்தொலைத்தான்.

(இ-ள்.) வாளைவீசி யானையினது பனைபோன்ற துதிக்கையை யறுத்து, விரைவோடு மத்தகத்தைப் பிளந்து, பூண்பூண்ட தந்தத்தை யறுத்துக், கு திரைக்கூட்டங்களை யழித்து, அரசர்களை யெல்லாம் கொன்று, கொடிப் படையைப் பரகாலர் அழித்தனர். (எ-று.) (௩௫)

௩௬. சரிந்ததானையைச்சேனைகாவலரிடைதாங்கிச
சொரிந்தமும்மதக்கரிபரிதுனைவினிற்றூண்டி
விரிந்தவெண்ணகைத்திறற்பரகாலனைவியவாப்
புரிந்தபோர்மிகநன்றெனவெகுண்டெதிர்பொருதார்.

(இ-ள்.) ஓடிய சேனையைச் சேனைகாவலர்கள் இடையில் தடுத்து, மும் மதங்களைச் சொரிந்த யானை குதிரை இவைகளை விரைவாகச்செலுத்தி, சத்துருக்களைச் செயித்ததினாலே யுண்டான வெள்ளிய சிரிப்பையும், போ ரையுமுடைய பரகாலரை வியந்து, நீ செய்த யுத்தம் மிக்க நல்லது என்று சொல்லிக் கோபித்து, எதிராக யுத்தஞ் செயதார்கள். (எ-று.) (௩௬)

௩௭. ஏற்றினக்கரியிவுளிவாள்வயவரையெய்திக்
கூற்றினுககயர்களப்பலியாமெனக்கொடுத்தான்
பாற்றினக்கடிகாவணத்தினிற்கணபாசி
போற்றிநற்புகழ்நடித்துநின்றயின்றனபுரணி.

(இ-ள்.) ஆண்யானைக் கூட்டங்களிலும் குதிரைகளிலுமுள்ள வாளைத் தரித்த படைவீரர்களை யடைநது யமனுக்குத் தாம் செயயும் களப்பலியெ னும்படி அவர்களைக் கொடுத்தனர். பருந்துக்கூட்டமாகிய காவலோடு கூடி ய பந்தலில் பிசாசங்கள் ஆழ்வாரது நல்ல புகழைத் துதித்துக் கூத்தாடி நின்று தசையையுண்டன. (எ-று.) (௩௭)

௩௮. அரற்றியோடினர்சிலர்சிலரடிமுடியணிந்தா
பிரற்றியேங்கினர்சிலர்சிலர்பிணத்தினுட்கரந்தார்
பாற்றிடற்பதம்படிந்தனர்சிலர்புகழ்படித்தே
குரற்றிரிந்தனர்சிலர்சிலாகுருதியுடகுளித்தார்.

(இ-ள.) சிலர் கூவியோடினார்கள்; சிலர் பரகாலரது திருவடிகளை முடிக்கணிந்தார்கள்; சிலர் வாயில்வந்தன சொல்லி ஏங்கினார்கள்; சிலர் பிணத்தில் மறைந்தார்கள்; சிலர் பருக்கைக் கற்களையுடைய மேட்டுவழி யில் மறைந்தார்கள், சிலர் பரகாலரது புகழைச்சொல்லிக் குரல்வேறு பட்டார்கள்; சிலர் இரத்தத்திற் குளித்தார்கள். (எ-று.) (௩௮)

௩௯. வில்லுமீட்டியும்வேலுமற்றவருயிர்விண்ணிற்
செல்லும்போதினிற்றிசைதொறுந்திசைதொறுஞ்சிதைந்தார்
சொல்லுந்தந்திரநாயகருடைந்துபோய்ச்சோழன்
புல்லுங்கோயிலாருறந்தைவாண்மதிலினுட்புகுந்தார்.

(இ-ள்.) வில்லும் ஈட்டியும் வேலும் இழந்தவர்களது உயிர் ஆகா யத்திற் செல்லும்போது திசைகள்தோறும் சிதறுண்டு புகழுள்ள சேனைத் தலைவர்கள் தோற்றுப்போய்ச் சோழனிருக்கும் அரசமாளிகையையுடைய உறையூரின் ஒளி வீசும் மதிலினுள் பிரவேசித்தார்கள். (எ-று.) (௩௯)

௪0. தும்பிவாசியூர்ந்தெதிரிகல்வயவரைத்துமியாப்
பம்பியோடுவெங்கரிபரியாவையும்பற்றி
வெம்பிகற்படைசூழமாகதர்புகழ்விரிப்ப
நம்பிவிற்பரகாலனுநகர்வயினடைந்தான்.

(இ-ள்) யானையும் குதிரையும் ஏறி எதிரிற் போர்புரியவந்த சேனாவீரரை யழித்துப் பரவியோடும் குதிரை யானை இவைகளைத் தம்வசமாக்கிக் கொண்டு, பெருங்கோபங்கொண்ட வலிமையையுடைய தமது சேனைகள் சூழ மாகதர்கள் தமது கீர்த்தியை விரித்துச்சொல்லக் குணபூர்ணராய வில்லைத்தரித்த பரகாலரும் தமது நகரினிடத்தடைந்தனர். (எ-று.) (௪0)

௪௧. பரிவிடுத்துவெங்கடகரிவிடுத்துவாள்பரிசை
உரியவேலசிலைபடைக்கலமுளவெலாமொழித்து
நெரியுந்தன்படைசசேனைகாவலர்களைநிருபன்
எரியிற்கட்டுணைசேப்பநோக்கினன்வெகுண்டெழுந்தான்.

(இ-ள்.) குதிரைகளைவிட்டு, வெவ்விய மதத்தையுடையயானைகளை விட்டு, வாளும் கேடகமும் உரிமையான வேலும் சிலையும் இன்னுமுள்ள ஆயுதங்களாயுள்ள எல்லாவற்றையும் ஒழித்து வருந்தும் தன்னுடைய படையிலுள்ள சேனைத்தலைவர்களைச் சோழராசன் அக்கினிபோல் இரண்டு கண்களுஞ் சிவக்கும்படி பார்த்துக் கோபித்தெழுந்தான். (எ-று.) (௪௧)

௪௨. மீனவன்கடற்படைதொலைத்துலைவிலாவென்றி
வானவன்றனைத்துரந்தநங்கடற்படைமள்ளர்
ஆனநீருழுந்தொழிலலாலறிகிலாதவனுக்
கீனமாயுடைந்தனிர்மிகநன்றுநன்றென்றான்.

(இ-ள்.) மீனக்கொடியையுடைய பாண்டியனது கடல்போன்ற சேனையைத் தொலைத்து, கெடாத வெற்றியையுடைய சேரனைத் துரத்திய நமது கடல்போன்ற சேனையில் படைவீரரான நீங்கள், நிலத்தை யுழுந்தொழிலல்லாமல் (வேறொன்றும்) அறியாத பரகாலனுக்கு ஈனமாகத் தோற்றீர்கள்; இது மிக நன்றுநன்று என்று, (எ-று) (௪௨)

௪௩. நகைத்துமற்புயம்புடைத்துவெய்துயிர்த்திருநயனஞ்
சிகைக்கொழுங்கனல்சிந்தமைப்புருவமீச்செல்ல
மிகைத்தமற்றவன்றனைமுடிக்குவனெனவிரைவில்
பகைத்துவெங்கரியேறினனடந்ததுபதாதி.

(இ-ள்.) சிரித்து, மல்லுக்குரிய புயங்களைத்தட்டிப் பெருமூச்செறிந்து, இரண்டு கண்களிலுஞ் சிகையோடு கூடிய கொழுமையான அக்கினிசிந்தக், கரியபுருவம் மேலே செல்ல, அதிக்கிரமித்த பரகாலனை விரைவில் முடிப்பேனென்று பகைகொண்டு வெவ்விய யானையின்மீதேறினன்; காலாட்படையும் நடந்தது. (எ-று.) (௪௩)

வேறு.

௪௪. பனைக்கரமெடுத்திழிகடத்தளிகள்பம்ப
வினைக்களிறெனத்தமதுமெய்யினிழல்சிறு

முனைக்களமடைந்துயர்முருககிடுவிருப்பின்
கனைக்களமெனத்திரள்களிற்றினநடந்த.

(இ-ள்.) பனைபோன்ற துதிக்கையைத் தூக்கி, இழியும் மதத்தில் வண்டுகள் நெருங்கத், தமக்குப் பகைாயான யானையென்று தங்கள் சரீரத்தின் நிழலைக் கோபித்துப், பகைமையோடு யுத்தகளமடைந்து (எதிர்த்தவைக்) கொல்லும் உயர்வையடைந்த விருப்பத்தோடு கர்ச்சிக்கும் மேகமென்னும்படி திரண்ட யானைக்கூட்டங்கள் நடந்தன. (எ-று.) (சச)

சரு. தாவுகதிபெற்றுலவுதாளிலெழுதூளாற்
றேவுலகினுற்றபலதேவர்கடிகைத்தே
பூவுலகமுற்றதுகொல்பொன்னுலகிலென்ன
வாவுதிரையிற்கவினவாசிகணடந்த.

(இ-ள்.) தாவும் நடையைப் பெற்றிருக்கும அடிகளில் எழும் தூசியினாலே தேவலோகத்திலுள்ள பற்பலவான தேவர்கள் திகைத்து, இப்பொன்னுலகில் மண்ணுலகம் வந்ததோ வென்னும்படி தாவும் அலைகளைப்போலக் கடிவாளம் பூண்ட குதிரைகள் நடந்தன. (எ-று.) (சரு)

சசு. பொலம்பரவலங்கல்கள்புனைந்துமுடிபொன்னின்
கலம்பரவுமொய்ம்பினறைகந்தநிறைசந்தம்
இலங்கவடிவாளெயிலெடுத்திகல்விளைப்பான்
நலம்பெறவருந்திணியநாதருநடந்தார்.

(இ-ள்.) முடியில் அழகுபரவிய வெற்றிமாலைகளை யணிந்து, பொன்னாலான ஆபரணங்கள் பரவிய தோள்களினிடத்து நல்ல வாசனை நிறைந்த சந்தனம் விளங்கக், கூர்மையான வாளையும் வேலையும் தாங்கிப், போர் விளைக்கும்படி நன்மைபெறுமாறு வரும் வலிமையையுடைய சேனைத்தலைவர்களும் நடந்தார்கள். (எ-று.) (சசு)

சஎ. தொங்கலொடுவெண்கவிகைதுன்றியபதாகை
எங்கணுமிடைந்திரவியெல்லினைமறைப்பச
சங்கமுரசங்களொலிதந்திடமணித்தோண
மங்கலமிகுந்தபுகழ்வந்தியர்வழுத்த

(இ-ள்.) பீலிக்குடையோடு வெண்மையான குடை நெருங்கிய விருதுக்கொடி இவைகள் எவ்விடத்தும் நெருங்கிச் சூரியனொளியை மறைக்கச், சங்கமும் பேரிகையும் கோஷிக்க, அழகிய தோளினது மங்களகரம் மிகுந்த கீர்த்தியை மங்களப்பாடகர் சொல்லவும், (எ-று.) (சஎ)

சஅ. வளைந்தவயிர்சென்னியொடுமாறுபடுமேவார்
உளைந்தகலவோடுமினெனுவிருதொலிப்ப
விளைந்ததமரென்றுபுயம்விம்மவயில்வேல்வாள்
துளைந்ததடமார்பணியவீரர்புடைசூழ

(இ-ள்.) வளைந்திருப்பதான கோணைக்கொம்பு, சோழனுடன் விரோதப்பட்ட சத்துருக்களே! வருத்தமடைந்து தூரத்தே ஓடுங்கள்! என்று விருது மொழி சப்திக்க, யுத்தம் விளைந்ததென்று புயங்கள் பூரிக்கக், கூர்மையுடைய வேலும் வாளுங் கொண்ட விசாலமான மார்பில் ஆபரணங்களைப் பூண்ட வீரர்கள் பக்கங்களிற் சூழவும், (எ-று.) (சஅ)

௪௯. கொண்டறவெழும்பற்பலகொடிப்புரிசைநீங்கா
ஒண்டகையதானையொடியோசனைநடந்தே
புண்டருமுளத்திறெறுபொன்னியின்மருங்கின்
வண்டகலகிலாமதுமலாபொழில்வதிந்தான்.

(இ-ள்.) மேகந்தவழும் பற்பலவான கொடிகளையுடைய மதிலைநீங்கி, ஒள்ளிய பெருமையையுடைய சேனையுடன் யோசனைதூரம் நடந்து, புண்ணுள உள்ளத்தோடு காவேரிநதியின் பக்கத்தில், வண்டுவிட்டு நீங்காத தேனையுடைய மலர்கள் பொருந்திய சோலையிலிருந்தனன். (எ-று) (௪௯)

௫0. பூமியிசையிற்றுயில்புரிந்துபுலர்காலைத்
தோமிலயில்விற்படைதொடர்ந்திடநடந்தே
வேமிகன்மனத்தொடுவிரைந்துவடிவேலான
நாமிகுமதிற்கமலைநன்னகரடைந்தான்.

(இ-ள்.) வடித்த வேலையுடைய சோழபூபதி, பூமியினமீது துயின்று, விடியும்போது குற்றமற்ற வேலும் வில்லுமுடைய சேனைகள் தொடரும்படி நடந்து, வேகும் பகைமையுடைய மனத்தோடு விரைந்துசென்று, சிறப்புமிகுந்த மதில்சூழ்ந்த நல்ல மங்கை நகரத்தை யடைந்து, (எ-று.) (௫0)

௫௧. கைக்களிறிழிந்துரியகாவலரைநோக்கா
மிகைபரகாலன்மிசைவெஞ்சமரநாளை
மைகரியவிப்பொழிலின்வைகுமெனலோடுந்
தககதிசைக்கிலவாதானையொடுறைந்தார்.

(இ-ள்.) துதிக்கையையுடைய யானையினின்றிறங்கித் தனக்குரிய காவலர்களைப்பார்த்து, வலிமைமிக்க பரகாலர்மீது வெவ்விய யுத்தஞ் செய்வது நாளையதினமாகும்; மிகக்கரிய இந்தச்சோலையில் தங்குவீர்களாக வென்றுரைத்தலும் தங்களுக்குத் தகுதியான மேற்குத்திக்கில் அவர்கள் சேனையோடிருந்தார்கள். (எ-று.) (௫௧)

௫௨. கண்டளன்மிகக்கரியகங்குல்புலர்காறும்
மண்டமர்குறித்திறைதுயின்றிலன்வதிந்தான்
புண்டரிகமொட்டலாபொலிந்தகடல்போல
வெண்டரவிலக்கமில்விளககினைமெடுத்தார்.

(இ-ள்.) சோழபூபதி, மிகவுங் கரிய இராப்பொழுது எப்பொழுது விடியுமென்று பார்த்துக்கொண்டே விடியுமளவும் நெருங்கிய யுத்தத்தைக் குறித்துத் துயிலாமலிருந்தனன். சேனையிலுள்ளார், தாமரைகளின் மொட்டு மலர்ந்து விளங்கிய கடலைப்போல, எண்ணைக் கணக்கற்ற விளக்குக் கூட்டங்களை யெடுத்தார்கள். (எ-று.) (௫௨)

௫௩. வார்கழல்விசித்தபரகாலன்மிசைமாறு
தார்கருணைமைக்கரியமாலுளமுவந்தே
சார்கதிர்வலத்திகிரிதந்ததிறனேபோல்
ஆர்கலியிடத்தணியருக்கனுமுதித்தான்.

(இ-ள்.) நேர்மையான வீரகண்டையையணிந்த பரகாலர்மீது மாறுமல் அபிவிருத்தியாகும் கருணையையுடைய மேகம் போலச் சரியவனை பெருமான், திருவுள்ளமுவந்து பிரகாசமுடைய தனது வலத் திருக்கரத்திலேந்திய திருசக்கரத்தை ஆழ்வாருக்குத் தந்தவிதம் போல சமுத்திரத்தினிடத்து அழகிய சூரியனும உதயமாயினன். (எ-று.) (ருங)

வேறு.

ருச. மன்னவன்வரவுகேளாமதிப்பரகாலன்முனுந்
தன்னமைசசர்களைநோக்கித்தக்கவாறுரைமினென்னப்
பன்னருந்திறலாயாண்டோாபகைத்தலிற்பழியிலென்றார்
அன்னவாதமையேநீாபோயவன்றொடர்பமைத்திரொன்றான.

(இ-ள்.) சோழனது வரவைக்கேட்டு, ஞானசிரேஷ்டரான ஆழ்வாரும் தமது மந்திரிகளைபபார்த்துத் தகுந்த உபாயம் சொல்லுங்களென்றுரைக்க (அவாகள்) சொல்வதற்கரிய வெற்றியையுடையவரே! நம்மை ஆதரித்தவாகளைப் பகைப்பதினும் வேறுபழியின்றென்று சொன்னார்கள். அதன்மேல் ஆழ்வார் அம்மந்திரிகளையே நோக்கி நீங்கள்போய் சோழனுடைய நட்பை அமைபபீர்களாக என்றனர். (எ-று) (ருச)

ருரு. போயபயன்பொற்பாதம்பணிந்தமைச்சர்களும்போற்றி
ஏயநின்னேவலான்மேலிகல்செயலிசையன்றமால்
ஆயவன்றன்மேற்சீறமவித்தருடருதியம்பொன்
மேயநிறைகுள்ளயாவுந்தருகுவமவேந்தவென்றார்.

(இ-ள்) மந்திரிமார்களும் சென்று, சோழனது பொற்பாதங்களைப் பணிந்து போற்றி, வேந்தனே! பொருந்திய உமது ஏவலாளர்மீது யுத்தஞ்செய்வது கீர்த்தியன்று; அவர்மீது கோபம்நீங்கி அருளகொடுப்பீராக; உமக்குக் கொடுக்க வேண்டியுள்ள அழகிய பொன் யாவும் கொடுப்போம் என்றனர். (எ-று.) (ருரு)

ருசு. என்றலுநகைத்துவேந்துமெமதுதூதரைநலிந்தான்
கொன்றனன்சேனேயோரைக்கரிபரிபற்றிக்கொண்டான்
நன்றவன்செய்கையெல்லாநம்படையனைத்துமோருந்
சென்றவன்புரிசைசூழமினெனவமைச்சர்களுஞசெனறார்.

(இ-ள்.) எனறு (அமைச்சர்) சொல்லுதலும், சோழமகாராசனும் நகைபுரிந்து, எமது தூதர்களை வருத்தினான்; சேனையோர்களைக் கொன்றான; யானை குதிரைகளைத் தன்வசமாகக் கொண்டான்; அவனது செய்கையெல்லாம் நன்றயிருந்தன; நமது சேனைகளாகிய அனைவரும் சென்று அவனது மதிலைச் சூழ்ந்துகொள்ளுங்கள் என்றுரைக்க, மந்திரிகளும் சென்றார்கள். (எ-று.)

ருஎ. விடுத்தவப்பரகாலன்பாலமைசசரும்விரைவினெய்தி
அடுத்தவாறுரைக்குமுன்னமரசர்கோனணிகந்தானும்
எடுத்தகைக்களிறுபாய்மாவினத்துடனெழுந்தேயேமப்
படுத்தபோரரணந்தன்னைவளைந்ததுபரவைபோல.

(இ-ள்.) சோழனிடத்துத் தங்களை விடுத்த அப்பரகாலரிடத்து மந்திரிகளும் விரைவாயடைந்து அங்கு நடந்த விதத்தைச் சொல்லுமுன்னே

சோழமகாராசனது சேனையும், தூக்கிய துதிக்கையையுடைய யானை, பாயும் குதிரைகளின்கூட்டம் இவைகளோடு எழுந்து காவலாயிருக்கும் பெரிய மதிலைச் சமுத்திரம்போல வளைந்தது. (எ-று.) (௫௭)

௫௮. கோடினபுருவங்கண்கள்சிவந்தனகொற்றவாளை
நாடினன்பரகாலப்பேரவன்றிருநாதன்பாதஞ்
சூடினன்றுளவஞ்சென்னிபுனைந்தனன்றூரங்கமேறு
நீடினகளிறுபாய்மாவொடுமெதிர்நடந்துநோக்கான்.

(இ-ள்) புருவங்கள் வளைந்து, கண்கள் சிவந்து, வெற்றியையுடைய வாளை நாடினவராகிப் பரகாலரென்னும் பேரையுடையவர், பெரிய பிராட்டியாருக்கு நாயகனது திருவடிகளில் திருத்துழாயைச் சூடித் தமது முடியிற் றரித்துக் குதிரையையேறி, விஸ்தாரமான யானை பாயும் குதிரை இவைகளோடு (சேனைகட்கு) எதிராக நடந்து எதிர்த்தனர். (எ-று.) (௫௮)

௫௯. பன்னிருதிருமண்ணோடும்பரிமிசைப்பருதிபோலப்
பன்னிருங்கவிகைநீழல்வரும்பரகாலன்றன்னைச்
சென்னிதன்சேனைவீராசினந்துவாள்சிலைவேறூங்கி
இன்னியமுவாவில்வேலையெனவொலித்திடவந்தேற்றார்.

(இ-ள்.) பன்னிரண்டு திருமண்ணோடும், குதிரையினமீது, சொல்லும் பெரிய குடையின் நீழலில், சூரியன்போல வரும் பரகாலரைச் சோழனது சேனைவீரர்கள் கோபித்து, வாள் வில் வேல் இவைகளைத் தாங்கிப் பூர்ணசந்திரோதயத்தில் சமுத்திரம் போல இனிய வாத்தியங்களொலிக்க வந்து எதிர்த்தார்கள். (எ-று.) (௫௯)

௬0. கரியெதிர்கரிகள்சீறிப்பொருதனகவனவேகப்
பரியெதிர்பரிகடானும்பகைத்தனபயின்மின்போல
விரிகதிர்வேலும்வேலுமிடைந்தனவில்லும்வில்லும்
வரிகதிர்க்கணைகள்சோனைமழையினிற்பொழிந்தமாதோ.

(இ-ள்.) யானைகட்கு எதிராக யானைகள் கோபித்து யுத்தஞ்செய்தன; வேகமான நடையையுடைய குதிரைகட்கெதிராகக் குதிரைகளும் பகைத்தன; பொருந்திய மினனலைப்போல விரிந்த பிரகாசமுடைய வேலும் வேலும் நெருங்கின; வில்லும் வில்லும் கட்டுகளையுடையவைாய்ச் சூரியனை யொத்த வெவ்விய பாணங்களை விடாமழையைப் போலப் பொழிந்தன. (எ-று.) (௬0)

௬௧. அதிர்ந்ததுபேரிசங்கமார்த்தனவமரரஞ்சிப்
பிதிர்ந்ததுககனகோளமெனக்கயம்பிளிறியார்த்த
உதிர்ந்ததுபடையிற்செந்தீயொருவரோடொருவர்தாக்க
முதிர்ந்தவச்சமரின்பான்மையாவரேமொழியவல்லார்.

(இ-ள்.) பேரிகை அதிர்ந்தது; சங்குகள் ஒலித்தன; தேவர்கள் அஞ்சி ஆகாயவட்டம் பொடியாயிற்றென்று சொல்லும்படி யானைகள் பிளிறி ஒலித்தன; ஒருவரோடொருவர் தாக்குதலால் படைக்கலங்களினின்றும் சிவந்த தீப்பொறி உதிர்ந்தது; முதிர்ச்சியடைந்த அந்த யுத்தத்தின் தன்மையை யார் சொல்லவல்லவர்கள்? (ஒருவருமில்லை). (எ-று.) (௬௧)

௯௨. சிரித்தெயிறதுக்கிப்பாங்கர்திரைநிரைகரத்தாறசெம்பொன்
விரித்தமாநதியிற்றுஞ்சும்விமலனைவிழைந்துபோற்றிய
பரித்தவாள்விதிர்த்துவேகப்பரியுகைத்தெயிலின்பான்மை
எரித்தவக்கடவுளேபோலிகற்பரகாலனேற்றான்.

(இ-ள்.) சிரித்துப் பற்களைக்கடித்துப், பக்கங்களில் அலைகளாகிய வரிசையான கைகளாலே செம்பொன்னைப் பரப்பிய பெருமைபொருந்திய திருக்காவேரிநதியில் அறிதுயிலமரும் விமலனை திருவரங்கத் தெம்பெருமானைப் பிரீதியோடு போற்றிப், பெரிய வாளைத்தாங்கி, வேகத்தையுடைய குதிரையைச் செலுத்தி, முப்புரங்களின் தன்மையை யெரித்த அந்தச் சிவபிரானைப் போல வலிமையையுடைய பரகாலர் எதிர்த்தனர். (எ-று.) (௯௨)

௯௩. துணிந்தனதுரகராசிதுணிந்தனதும்பிக்கொம்பு
துணிந்தனவரசர்திண்டோடுணிந்தனகணையின்றூணி
துணிந்தனமகுடபந்திதுணிந்தனதுரந்தவாளி
துணிந்தனகொடிகள்சாலத்துணிந்தனதொங்கற்கூட்டம்.

(இ-ள்.) குதிரைக்கூட்டம் வெட்டுண்டன; யானைகளின் கொம்பு வெட்டுண்டன; அரசரது திண்ணிய தோள்கள் வெட்டுண்டன; அம்பறுத்தூணிகள் வெட்டுண்டன; மகுடங்களின் வரிசை வெட்டுண்டன; பிரயோகித்த பாணங்கள் வெட்டுண்டன; கொடிகள் மிகவும் வெட்டுண்டன; வெண்குடைக் கூட்டம் வெட்டுண்டன. (எ-று.) (௯௩)

௯௪. இருபடைவீரரிவ்வாறெதிரமரியற்றுங்காலைப்
பொருதிறற்கழற்கால்வென்றிப்பொன்னிநன்னாடன்சேனை
உருமினுக்குடைந்தநாகமுறழ்தரவுடைதலோடுந்
திருகுவெஞ்சினத்தான்சென்னிதாங்கினன்சேனைதன்னை.

(இ-ள்.) இரண்டு படைகளிலுமுள்ள வீரர்கள் இவ்விதமாக எதிராக யுத்தஞ்செயயும் போது, போர் செய்யும் வலிமையும் வீரகண்டையைத்தரித்த கால்களும் வெற்றியையுமுடையனாய்த் திருக்காவேரிநதி பரவும் நல்ல சோழநாட்டுக்குத் தலைவனான சோழனது சேனை இடிக்குத்தளர்ந்த நாகம் போலச்சிதறவே, முதிர்ந்த வெவ்விய கோபமுடையவனான சோழன், சேனையைச் சிதறாமல் தாங்கினன். (எ-று.) (௯௪)

௯௫. விதிர்த்தவெள்வாளுமாவுங்கடகும்பொற்கச்சின்வீக்கும்
அதிர்த்தசொற்றெழிப்புமூரலலர்ந்தவானனமுமாகி
எதிர்த்தருட்பரகாலன்றானிகல்செயவெழுபாராளுங்
கதிர்த்தவேல்வேந்தன்காணுக்கடகரிகடாவிவந்தான்.

(இ-ள்.) அசைத்த பிரகாசமுடைய வாளும் குதிரையும் கேடயமும் பொன்மயமான கச்சைக்கட்டும் அதிர்த்த சொல்லின் ஓசையும் சிரிப்புண்டாகிய முகமுமுடையவராகி அருளையுடைய பரகாலர் எதிர்த்து யுத்தஞ் செய்யவே, ஏழுலகமுமாளும் பிரகாசமுடைய வேலைத்தரித்த சோழன் கண்டு, மதத்தையுடைய யானையைச் செலுத்தி வந்தனன். (எ-று.) (௯௫)

௯௬. புழைக்கைவான்மருப்புநால்வாய்புகர்முகப்புலிங்கச்செங்கண்
தழைத்தசீர்க்கன்னத்தானமதந்தவழ்கபோலம்பீசம்

மழைக்குநேர்களிறூர்வேற்கைமணிமுடிமதிநேர்தொங்கற்
குழைத்ததாதகித்தாரத்திண்டோணிருபனைக்குரிசினேக்கா

(இ-ள்.) தொளையையுடைய கையும் ஒளியையுடைய தந்தமும் நீண்டு புள்ளிகளையுடைய முகமும் தீப்பொறிகளையுடைய சிவந்த கண்ணும் விரிந்த சீருமுடையதாய்க் கன்னத்தில் பொருந்திய மதமும் கபோலத்திலும் பீஜத்திலும் பொருந்திய மதமும் மழைக்குச் சமானமான யானைமீதேறி வேலைத்தரித்த கையும் அழகிய முடியும் சந்திரனுக்குச் சமானமான வெண்குடையும் தளிர்த்த ஆதகிமாலையணிந்த திண்ணிய தோள்களுமுடைய சோழனைப் பரகாலர் பார்த்து, (எ-று.) (௬௬)

௬எ. இரவிதொல்குலவேல்வேந்தநினதுதாளிணையெஞ்ஞான்றும்
பரவிவாழ்பலருள்ளேனோசிறியனப்பரிசோராது
பொரநினைந்தனிகத்தோடுமெதிர்ந்தனைபுகழ்மைத்தன்றால்
உரனுமன்றொருசொற்கேட்டியெனத்தொழுதுரைக்கலுற்றான்.

(இ-ள்.) பழமையான சூரிய வமிசத்திலுதித்த வேலைத்தரித்த அரசே! உமது பாதங்களை யெக்காலத்தும் வணங்கிவாழும் பலரில் நானும் ஒரு சிறியவன்; அத்தன்மையை யறியாமல் யுத்தஞ்செய்ய எண்ணிச் சேனையோடும் எதிர்த்தீர்; (இது) புகழ்தரக் கூடியது அன்று; வலிமையுமன்று; (ஆயினும்) ஒரு சொல்லைக் கேட்பீராக வென்று தொழுது சொல்லத் தொடங்கினர். (எ-று.) (௬எ)

வேறு.

௬அ. பொருவிலாதவரிசையும்பூமியும்
அருளினீந்தெனையாண்டனையாதலால்
நிருபர்நாயகநின்னுடனேற்றலோ
தருமமன்றுதகைமையுமல்லவால.

(இ-ள்.) அரசர்க்கரசே! ஒப்பற்ற வரிசையும் பூமியும் கிருபையோடு கொடுத்து என்னை யாண்டீராதலால் உம்மோடு எதிர்ப்பதோ தருமமன்று; பெருமையுமன்று. (எ-று.) (௬அ)

௬௯ பன்னகத்தவிசுற்றுயிலபண்ணவன்
என்னகத்துளனுதலினென்னைவான்
பொன்னகர்க்கிறைவெல்கிலன்போர்புரிந்
துன்னடற்படைவெல்லுதலொல்லுமோ.

(இ-ள்.) ஆதிசேஷராகிய ஆசனத்தின்மீது அறிதுயிலமரும் பெருமான் எனது உள்ளத்தில் எழுந்தருளியிருக்கிறுனுகையால், தேவலோகமாகிய பொன்மயமான நகரத்துக்குத் தலைவனுன இந்திரனும் யுத்தஞ்செய்து என்னை வெல்லமாட்டான். (ஆகவே) உம்முடைய பலமுடைய சேனை வெல்லுதல் கூடுமோ? (எ-று.) (௬௯)

எ0. உனக்குவென்றிபுகழ்திருவோங்கவும்
எனக்குமாலருளெய்தவுமெண்ணியே
தனக்குவானறைத்தாதகித்தாரினுய்
மனக்குவந்தவயிணவர்க்கீந்தனன்.

(இ-ள்.) உமக்கு வெற்றியும் கீர்த்தியும் செல்வமும் அபிவிருத்தியடையவும், எனக்கு எம்பெருமானது திருவருள் பொருந்தவும் நினைத்தே, செல்வக்குவியலைத் தேன் பொருந்திய ஆத்திமாலையையணிந்தவரே! மனத்துக்கு உவந்த வைஷ்ணவர்கட்குக் கொடுத்தேன். (எ-று.) (எ0)

எக. அறநினைகிலையாகியருத்தமே
பெறநினைக்கிலளிக்குவன்பேணலார்
திறமுருக்கயிலாய்பதிசேர்கென
மறமுருத்தனமன்னனும்கூறுவான்.

(இ-ள்.) தருமத்தை நினையாமல் பொருளையே பெற எண்ணுவீராயின், கொடுக்கிறேன்; சத்துருக்களது வலிமையை அழிக்கும் வேலாயுதமுடையவரே! உமது பதிக்குப் போவீராக என்று (பரகாலர்) சொல்லக் கோபமே உருவங் கொண்டது போன்ற சோழனும் சொல்லுவான்:—(எ-று.) ()

எ௨. நன்றிகொன்றனைநம்முடையாணைநீத்
தின்றிகற்படையோடுமெதிர்ந்தனை
உன்றிறத்தினிநண்பெமககொன்றுமோ
வென்றிகொள்வைகொலென்னையும்வேலினாய்.

(இ-ள்.) நன்றியைக் கொன்றாய்; நம்முடைய ஆக்கினையைக் கடந்து இப்போதும் வலிமையையுடைய சேனையோடு மெதிர்ந்தாய்; உன் விஷயத்தில் இனி நமக்குச் சிநேகம் கூடுமோ? என்னையும் நீ வெற்றி கொள்வாயோ? வேலைத்தரித்தவனே! (எ-று.) (எ௨)

எ௩. கூவம்வாருதிமேற்செலுங்கொள்கைபோல
யாவர்காப்பினுமெவ்வரணெய்தினும்
நீவயப்படைபெற்றிடநேமியந்
தேவளிப்பினுநின்னுயிர்தீர்ப்பனே.

(இ-ள்.) யார் காவல் செயயினும், எவ்வித அரணையடையினும், நீ வெற்றியடையும்படியான ஆயுதங்களைத் திருச்சக்கரதரனான பெருமான் கொடுத்தாலும், நீ யென்னை யெதிர்ப்பது கிணறு சமுத்திரத்தின்மீது செல்லுவது போலாம்; உன்னுடைய உயிரை நானே தீர்ப்பேன். (எ-று.) (எ௩)

எச. எனவிசைத்துநகைத்துருமேறெனச்
சினமிகுத்தகளிறுசெலுத்தியே
கனமிகுத்தபெயல்நிரைகால்வபோன்
மனவிசைக்கொடுவாளியைவாங்கினன்.

(இ-ள்.) என்று சொல்லிப் பேரிடியென்னும்படி நகைத்துக் கோபம் மிகுந்த யானையைச் செலுத்தி, மேகங்கள், அதிகரித்த மழைத்தாரைகளைச் சொரிவது போல மனவேகம் கொண்டு பாணத்தைக் கையிலெடுத்தான். (எ-று.) (எச)

எரு. சீறுசென்னிமுன்செங்கதிர்வாளுடன்
ஏறுவாம்பரிதூண்டியெதிர்செலா
மாறுகூர்படைமள்ளரியாரையுங்
கூறுமேனிபலபடக்கொன்றனன்.

(இ-ள்.) (பரகாலர்) இப்படி கோபித்த சோழனுக்கு முன்னே செம்மையான பிரகாசமுடைய வாளோடு தாம் ஏறின தாவப்பட்ட குதிரையைத் தூண்டி எதிரிற்சென்று விரோதமிக்க படைவீரர்களை யெல்லாம் சரீரங்கள் பலகூறுபடும்படி கொன்றனர். (எ-று.) (எ௫)

எ௬. வாளுமாவும்வடிவும்வரையைநேர்
தோளும்பூணுஞ்சுடர்முடியுங்கையுந்
தாளுநகண்டமதாகத்தனித்தனி
கோளுடைப்படையாற்குறைத்தானரோ.

(இ-ள்.) வாளும் குதிரையும் சரீரமும் மலையையொத்த தோளும் ஆபரணங்களும் பிரகாசமுடைய முடியும் கையும காலும் துண்டமாகும்படி தனித்தனியாக வலிமையுடைய ஆயுதத்தாலே வெட்டினர். (எ-று.) (எ௬)

எஎ. துண்டமாயினர்வீரர்கள்சோரிபார்
கொண்டதோரகடலொத்ததுகோதிலா
அண்டநாதனரக்கராருயிர்
உண்டபோர்முதனாளையன்றொத்ததே.

(இ-ள்.) வீரர்கள் துண்டிக்கப்பட்டார்கள்; இரத்தம் பூமியிற் படிந்ததாகி ஒரு சமுத்திரமொத்தது; குற்றமற்ற நித்தியசூரிகட்குத் தலைவனான தசரதராமன் அரக்கரது அரிய உயிரை வாங்கிய யுத்தத்தின முதல் நாளை அன்றையதினம் ஒத்திருந்தது. (எ-று) (எஎ)

எஅ. வற்றுவேலையுண்மந்தரமானவே
சுற்றுசேனைகெடநின்றசோழனை
அற்றுளாயமுன்பாசழியப்பொரோன்
உற்றுநின்னகர்மீள்கெனவோதினான்.

(இ-ள்.) வற்றுநின்ற சமுத்திரத்தில் மந்தரம்போலச் சுற்றுமுள்ள சேனைகள் அழிய நின்ற சோழனை நோக்கி, வலியற்றுள்ள சேனைக்கூட்டத்தினெதிரில் (இனி அவை) அற்பமும் அழியும்படி யுத்தம் செய்யேன்; நீர் உம்முடைய நகரத்தை நோக்கி மீள்க எனச் சொல்லியருளினர். (எ-று.)

எ௯. நாளைவாவெனநஞ்சனையான்றளர்
வேளையாய்ந்துவிடுத்தவிராமனிற்
பாளைநாறும்பழனநன்னாடனை
நீளைகோவன்பன்செல்கெனநீங்கினான்.

(இ-ள்.) விஷம்போன்ற இராவணன் தளர்ந்த வேளையறிந்து இன்று போய் நாளைவாவென்று விடுத்த இராமபிரானைப்போல், பாளைகள் பரிமளிக்கும் கழனிகள் சூழ்ந்த நல்ல நாட்டையுடைய சோழனை, நீளாதேவிக்குத் தலைவனான பெருமானுக்கு அன்பரான பரகாலர், செல்லுவீராகவென்று சொல்லி, அங்குநின்று நீங்கிவிட்டனர். (எ-று.) (எ௯)

அ0. மூதியநான்மறைமூர்த்திகைச்சாரங்கம்
புதியதோர்வடிவாகிப்பொருமெனில்
விதியினானும்வெலற்கரிதிப்புவி
மதியினல்வென்மனிதர்களியாவரோ.

(இ-ள்.) அநாதியான நான்கு வேதங்களிற் சொல்லும் திவ்விய சொரூபமுடைய பெருமானது திருக்கையிலுள்ள சார்ங்கமே புதியதாகிய ஒப்பற்ற வடிவமுடையதாகி யுத்தஞ்செய்யு மென்னில், பிரமதேவனாலும் வெல்லுதல் அரிதாகும்; (ஆகவே) இப்பூமியில் மதியினாலே வெல்லும மனிதர்கள் யாவரோ? (எ-று.) (௮0)

இவ்வாழ்வார் சார்ங்கத்தின் அமிச பூதராகையாலே அவரை வெல்வாரில்லை என்பதாம்.

௮௧. உடைந்தசென்னியொரோசனைவென்னிடா
மிடைந்தசோலைவிரிகரைப்பொன்னிவாய்
அடைந்துமானத்தழிதுயர்மீக்கொளா
இடைந்தநெஞ்சனமைச்சர்க்கியம்புவான்.

(இ-ள்.) தோற்ற சோழன், ஒரு யோசனையளவில் முதுகிட்டு, நெருங்கிய சோலைசூழ்ந்த விசாலமான கரைகளையுடைய திருக்காவேரியினிடத்துச் சேர்ந்து, மானத்தினாலே தன்னைக் கெடுக்கும் துயரம் மேற்கொண்டு பின்னிட்ட நெஞ்சினனாகி மந்திரிகட்குச் சொல்லுவானாயினன். (எ-று.) (௮௧)

வேறு.

௮௨. பிரித்தலும்பொருத்தலுநும்பிறங்குநூற்பெருமைசான்றீர்
இரித்தனனமதுதானையினைப்பரகாலனென்பான்
தரித்திலதெனதுநெஞ்சந்தனியகப்படுத்துந்தன்மை
தெரித்தினிதிசைத்திரென்னவின்னணந்தெளிந்துசொல்வார்.

(இ-ள்.) பிரிப்பதும் ஒன்று கூட்டுவதும் விளங்கும் சாஸ்திரங்களின் பெருமை நிறைந்தவர்களே! நமது சேனையைப் பரகாலன் ஓட்டினன; (அதனால்) எனது நெஞ்சம் தரித்திலது. (அவனைத்) தனியாக அகப்படுத்திக் கொள்ளும் விதத்தைத் தெரிவித்து நன்கு சொல்லுவீர்களாக வென்று கூற, அவர்கள் இவ்விதமாகத் தெளிந்து சொல்லுவார்கள்:—(எ-று.) (௮௨)

௮௩. உனைப்பதம்பணிவோர்தம்முளொருவனேருழவன்மேற்போர்
தனைப்புரிந்துடைந்தாயென்றாற்சகதலமதிக்கற்பாற்றோ
வினைப்படையின்னுமெய்திமதிற்புறம்விடுத்துவெம்போர்
கனைப்புயலனையாய்வெல்வாமெனச்சிலர்கருதிச்சொன்னார்.

(இ-ள்) உம்மைப் பாதம் பணிவோர்களில் ஒருவனாய் ஏர்கொண்டு உழுமவன்மீது யுத்தஞ்செய்து தோற்றீரென்றால் அது பூமியிலுள்ளோர் மதிக்கக்கூடியதோ? போர்புரியும் சேனையை இன்னும் பெற்று அவனது மதிற்புறத்தில் விடுத்து, ஒலியுள்ள மேகம் போன்ற சோழமகாராசனே! வெவ்விய யுத்தத்தில் வெல்லுவோமாக என்று சிலர் யோசித்துச் சொன்னார்கள். (எ-று.) (௮௩)

௮௪. எழுகடல்வளாயபார்மீதெதிரிலாவிறைவநின்னைப்
பழுதுறவென்றானென்றாலவனையிப்படியுளோரில்
உழுதொழிலொருவனாகவுன்னுமோவுணர்வின்மிக்காய்
செழுமுனைபுரிந்துவேறலரிதெனச்சிலவர்சொற்றார்.

(இ-ள்.) ஏழுகடலுஞ் சூழ்ந்த பூமியின்மீது எதிர்ப்போர் இல்லாத அரசே! குற்றம் பொருந்தும்படி (பரகாலன்) உம்மை ஜயித்தானென்றால், அவனை இந்தப் பூமியிலுள்ளவர்களுக்குள் உழுதொழில் செய்யும் ஒருவனாக உலகத்தார் எண்ணலாமோ? ஞானத்தில் மிகுந்தவரே! செழித்த யுத்தஞ்செய்து (அவனை) வெல்லுதல் அரிதாகுமென்று சிலர் சொன்னார்கள். (எ-று.)(அச)

அரு. வெலற்கரிதவனையென்னின்மீனவன்சேரன்றன்பால்
சொலற்குரியவரையேவித்துணைப்படைத்துணையைக்கூட்டி
உலக்கனமதிலின்பாங்கருழிஞைசெய்துலப்பிலாத
அலக்கணிற்படுப்பாம்பாரகொண்டெனச்சிலராய்ந்துசொன்னார்.

(இ-ள்.) அவனை வெல்லுவதற அரிதென்றால் பாண்டியனிடத்தும் சேரனிடத்தும் சொல்லுதற்குரியவர்களை விடுத்து இரண்டு படைகளையும் துணையாகக் கூட்டித், திரண்ட சற்களாற்கட்டிய கனத்த மதிலினிடத்தை முற்றுகைசெய்து அவன்பூமியைக் கொண்டு, அவனை ஒழிதலில்லாத துன்பத்திற் சேர்ப்போம் என்று சிலர் ஆராய்ந்து சொன்னார்கள். (எ-று.) (அரு)

அசா. ஒருவனேயவனுங்கைவாளொன்றுபாய்மாவுமொன்றே
வருதிரைக்கடலபோற்சூழ்ந்தவருதினியனைத்துமாளப்
பொருதனனெனிற்சங்காழிப்புனிதனேயாகுமன்றேல்
அருவரைமுக்கணானேயாமெனச்சிலவர்சொன்னார்.

(இ-ள்.) அவனும் ஒருவனே; அவனது கைவாளொன்றே; பாயும் குதிரையும் ஒன்றே; வளரும் திரைகளையுடைய சமுத்திரம் போலச் சூழ்ந்த சேனைகளெல்லாம மாளும்படி யுத்தஞ்செய்தானென்றால், அவன், சங்கு சக்கரங்களையணிந்த பரிசுத்தனான பெருமானே யாகவேண்டும்; அல்லாவிடில் அரிய கைலாயமலையிலிருக்கும் மூன்று கண்களையுடைய சிவபிரானே யாக வேண்டும என்று சிலர் சொன்னார்கள். (எ-று.) (அசா)

அஎ. அன்னதேமெய்ம்மைகோயிலரங்கநாயகன்றாளஃபிற்
றன்னகத்தமைத்துளானைவெலற்கருந்தகைமைத்தாமால்
உன்னரும்பொய்ம்மையானும்பகைதெறலுலகின்பான்மை
மன்னகேண்மாயனாணைகூறினம்வயத்தனாவான்.

(இ-ள்.) அதுவே உண்மையாகும்; கோயிலிலெழுந்தருளிய திருவரங்கநாதனது திருவடிகளைப் பக்தியோடு தனது உள்ளத்தில் அமைத்துக் கொண்டிருப்பவனை வெல்லுதல அருமையான தன்மையதாகும்; நினைக்கக்கூடாத பொய்யாலும் பகையை வெல்லுதல் உலகத்தின் தன்மையாகும்; அரசே! கேட்பீராக; பெருமானது ஆணையைச் சொல்லுவோமாயின் (அவன்) நம் வசமாவான், (எ-று.) (அஎ)

அஅ. எனச்சிலர்புகலவேந்துமிங்கிதேயழகிதென்று
மனச்சினமொழித்தேபொன்னின்வல்லிதன்வயத்ததாக்கிக்
கனச்சகந்தனக்கேசெல்லநல்குவங்கண்ணனாணை
நினக்கிதிலையமின்றாலெனத்திருமுகத்தைநீவிர்

(இ-ள்.) என்று சிலர்சொல்ல, அரசனும் இந்த சொன்ன இதுவே அழகாகுமெனறு துணிந்து, "நாம் மனத்திலுள்ள சினத்தை யொழித்துப்,

பொன்னின் வல்லியான திருமகள் என்று சொல்லப்படும் செல்வத்தைத் தன் வசமாகச் செய்து, பெரிய பூமி தனக்கே உரியதாகச் செல்லும்படி கொடுப்போம்.'' "கண்ணனுணைப்படி உனக்கு இவ்விஷயத்தில் சந்தேக மில்லை'' என்று நீங்கள் திருமுகத்தை, (எ-று.) (அஅ)

அக. வரைதிரொன்றுரைப்பச்சான்றமதிவல்லோர்வரைந்ததாமே
விரைவுடன்பரகாலன்றன்வெண்ணகைநகரஞ்சேரா
உரைதருதிருபங்காட்டவஞ்சமென்றுணராஞகித்
திரைமிசைத்துயின்மாலாணைகாண்டலுமவர்பின்சென்றுன்.

(இ-ள்.) எழுதுங்களென்று சொல்ல, நிறைந்த மதியினாலே வல்லவர் கள் எழுதித் தாங்களே விரைவோடு பரகாலரது மங்கை நகரத்தைச் சேர்ந்து சொல்லும் அந்த திருபத்தைக்காட்ட, (பரகாலர்) அதை வஞ்சக மென்று அறியாதவராகித் திருப்பாற்கடலில் அறிதுயிலமரும் பெருமான் ஆணையைக் காணுதலும் அவர்கள் பின்னே சென்று. (எ-று.) (அக)

கூ0. போயடிபணிந்துபோற்றும்புகழ்பபரகாலன்றன்னை
மாயமேபுகன்றவாய்மைமவளவனுமறுகிநோக்கித்
தேயமும்பொருளியாவுஞ்சிதைத்தனைசேனைசெற்றுய்
நீயலாற்பகைவேறுண்டோவெனச்சொலாதிகளஞ்சேர்த்தான்.

(இ-ள்.) சோழனிடத்துப் போய் அவன் அடிகளைப்பணிந்து துதிக்கும் கீர்த்தியையுடைய பரகாலனை, வஞ்சனையாகச் சொன்ன சொல்லையுடைய சோழனும் கோபித்துப்பார்த்து, நமது தேசத்தின் பொருளையெல்லாம் அழித்தாய; சேனையைக் கொன்றாய; (நமக்கு) நீயல்லாமல் வேறு பகை யுண்டோ? என்று சொல்லிக் கால்விலங்கு பூட்டினன். (எ-று.) (கூ0)

கூக. மறமுருத்தனையவன்கண்மள்ளரைமரபினேக்கித்
திறமுடையபொருளியாவுஞ்சிதைத்தனனிவனைச்செல்லல்
உறமுரட்கயிற்ருலவீக்கியலற்றிவாங்குதிரொன்றோத
அறமுருத்தனையான்றன்னையவர்கருமலக்கண்செய்தார்.

(இ-ள்.) கொலையே உருவங்கொண்டு வந்ததுபோன்ற கொடுமையுடைய வீரர்களை முறையாகப் பார்த்துக் கூறுபாடுடைய நமது பொருளையெல்லாம் அழித்தவனுன இவனைத் துன்பமடையும்படி வலிய கயிற்றினாலே கட்டிப் பயமுறுத்தி (அப்பொருளை) வாங்குவீர்களென்று சொல்லத் தருமம் ஒரு உருவங்கொண்டு வந்ததுபோன்ற பரகாலரை அவ்வீரர்களும் துன்பஞ் செய்தார்கள். (எ-று.) (கூக)

கூ௨. பயந்திலன்றுயர்சற்றேனும்படுகிலன்பார்மீதாசை
நயந்திலன்பிறிதியாவுநவின்றிலனவின்றஞானக்
கயந்தனக்குதவுநாதன்கழற்றுணைக்கமலம்போற்றி
உயர்ந்தபாகவதர்பூசையொழிந்ததற்குருகாநின்றுன்.

(இ-ள்.) அப்போது பரகாலர் பயந்தாரில்லை; சிறிதேனும் துன்பப் பட்டாரில்லை; பூமியின்மீது ஆசை வைத்தாரில்லை; வேறெவற்றையும் சொல்லினரில்லை; தன் திருநாமஞ் சொல்லிய ஞானத்தையுடைய கஜேந் திராழ்வானுக்கு உபகரித்த பெருமானது இரண்டு திருவடித்தாமரைகளைத்

ஆதித்து உயர்ந்தவர்களான பாகவதரது ஆராதநம் விட்டதற்கு உருகா நின்றனர். (எ-று.) (௯௨)

௯௩. பன்னகத்தவிசிற்றுஞ்சுமபண்ணவன்பதுமத்தாள்கள்
தன்னகத்தமைத்துப்பாகவதருணுத்தவிர்ந்ததன்மை
உன்னகத்தஞராவியாதுநுகர்ந்திலன்றினமூன்றுள்வாள்
மன்னகத்தருளிலாமைமதித்திலன்மயக்கமில்லான்.

(இ-ள்.) ஆதிசேஷசயநத்தில் அறிதுயிலமரும் பெருமானது தாமரைபோன்ற திருவடிகளைத் தமது திருவுள்ளத்தில் இருக்கவைத்து, பாகவதர்கள் அமுதுசெயவது நீங்கிய விதத்தை நினைக்குமிடத்துத் துன்பமடைந்து, மூன்றுதினம் ஏதொன்றையும் உண்ணுதவராயினர். ஒள்ளிய வாளையுடைய சோழனது மனத்தில் அருளில்லாமையை மதித்திலர்; மயக்கமற்றவரான பரகாலர். (எ-று.) (௯௩)

௯௪. நம்பிதன்றுயரங்காணுநனிகரநடுக்கிசோதி
பம்பியகனகத்திண்டேரபரிதியும்பரவைபுக்கான்
செம்பியன்றீமைபோலசெறிந்ததுகங்குற்றேம்பூங்
கொம்பிடைப்பறவைதுஞ்சத்துயின்றனன்கோதிலாதான்.

(இ-ள்.) குணபூர்ணரான பரகாலரது துயரத்தைக்கண்டு மிகவும் கைகளை நடுக்கிப் பிரகாசம் விரிந்த பொனமயமான திண்ணிய தேரையுடைய சூரியனும் சமுத்திரத்திற புகுந்தனன். சோழனது தீமையைப் போல இருள் செறிந்தது. தேனையுடைய பூக்கள் மலிந்த கிளைகளினிடத்துப் பறவைகள் தூங்கக் குற்றமில்லாதவரான பரகாலர் துயின்றனர். (எ-று.) (௯௪)

௯௫. அங்கவனகனவிற்கசசியகன்பதியருளாளப்பேர்ப்
புங்கவனணுகிப்பேரூர்புகன்றுநின்பொருளியாவும்
நங்கடிநகரின்றென்பானதிக்கரைநண்ணுவாயேல்
சிங்கலிலாதுநலகுவாமெனசசெவ்வியோனும்

(இ-ள்.) அவ்விடத்தில் பரகாலரது கனவில் திருக்கச்சி யென்னும் அகன்ற திருப்பதியிலெழுந்தருளிய அருளாளனென்னுந் திருநாமமுடைய பெருமான் எழுந்தருளித் தனது பேரையும் ஊரையும் அருளிச்செயது, உனது பொருளையெல்லாம் நமது காவலோடு கூடிய நகரின் தெற்கிலுள்ள நதியின் கரைக்கு வருவாயாயின் குறையாமல் கொடுப்போமென்று அருளிச்செய்யச் செவ்வியரான பரகாலரும், (எ-று.) (௯௫)

௯௬. விழித்தனன்புளகங்கண்ணீர்விரித்தனன்விழுமமெல்லாம்
ஒழித்தனன்காவலாகியுழையுறைவோரைநோக்கிச
சுழித்தபாலதியின்பாங்கர்க்கசசியிற்றொலைவிலாது
செழித்தநும்பொருளியாவுந்தருகுவனெனப்பின்சென்றார்.

(இ-ள்.) விழித்துப் புளகமும் கண்ணீரும் உண்டானவராகித் துன்பமெல்லாம் ஒழித்துக், காவலாகி அவ்விடத்திலிருப்பவர்களைப் பார்த்துச் சுழிகளையுடைய பாலாற்றின் பக்கத்தில் திருக்கச்சியினிடத்துத் தவறாமல் செழித்த உமது பொருள்களை யெல்லாம் தருவேன் என்று சொல்ல, (காவலாளர்கள்) அவர் பின்னே சென்றார்கள். (எ-று.) (௯௬)

கூஎ. பொன்னிநாட்டிறைவனாணையாலுடன்போந்துபொற்பு
மன்னியபுளினவேகவதிக்கரைமருவிவேதம்
பன்னியவருளாளன்றாட்பங்கயம்பரிவினோடும்
உன்னினனிருந்தான்மாலோர்வணிகனாயவண்வந்துற்றான்.

(இ-ள்.) சோழநாட்டுக்குத் தலைவனான சோழனது ஆக்ஞையினாலே கூடவந்து அழகுடைய மணற் குன்றுகளையுடைய வேகவதி நதிக்கரையை யடைந்து, வேதம் பிரதிபாதித்த அருளாளனது திருவடித்தாமரைகளை அன்போடு தியானித்திருந்தனர். (அப்போது) பெருமான் ஒரு வைசியனாகி அவ்விடத்துக் கெழுந்தருளினன். (எ-று.) (கூஎ)

கூஅ. சகட்டிலொட்டகத்திற்பாண்டிறனினிமிர்தடக்கைவென்றிப்
பகட்டினிற்சுமட்டிற்கோடிகோடிமேற்பசும்பொன்செல்லத்
துகட்டிறனகன்றசெம்பொற்சிவிகைமீத்தொல்லைஞாலம்
அகட்டினிற்பொதிந்தோன்றோன்றியன்பனைத்தழுவிக்கொண்டான்.

(இ-ள்.) வண்டியிலும் ஒட்டகத்திலும் ரிஷபத்திலும் நிமிர்ந்த விசாலமான துதிக்கையும் வெற்றியுமுடைய யானையிலும் சும்மாட்டிலும் கோடாகோடிக்கு மேற்பட்ட பசும்பொன்னானது கூடே வரக், குற்றத்தன்மையில்லாத செம்பொன்னாற் சமைந்த சிவிகையின்மீது, பழமையான உலகத்தைத் தனது திருவயிற்றில் வைத்தவனான பெருமான் தோன்றி, அன்புள்ளவரான பரகாலனைத் தழுவிக்கொண்டனன். (எ-று) (கூஅ)

சுமடு, சுமையடை, சுமையடி என்பவை உலகவழக்கில் சும்மாடு என வழங்கும்.

கூகூ. பேரருளாளநாயகப்பெயர்புனைபெருமான்பீழை
கூரருளன்பன்றன்னோடிருந்தனன்கோதிலாதாய்
சூரருளுயர்ந்தாய்மாயோன்றுணைப்பதந்துதிக்குந்தூயா
யாரருளின்றியிவ்வாறின்னல்செய்தவர்களென்றான்.

(இ-ள்.) பேரருளாள நாயகரென்னும் திருநாமங்கொண்ட பெருமான், துன்பமடைந்தவராகி அருளோடு கூடிய அன்பரான பரகாலரோடு இருந்து, குற்றமற்றவனே! சூரர்களுக்குள்ளே உயர்ந்தவனே! ஆச்சரிய குண சேஷ்டிதனான பெருமானது இரண்டு திருவடிகளைத் துதிக்கும் பரிசுத்தனே! (உன்னை) அருளின்றி இவ்வாறு துன்பஞ் செய்தவர்கள் யார்? என்றனன். (எ-று.) (கூகூ)

க00. அருகிருந்தவர்களின்னலடுத்தவாறறையச்செங்கட்
கருமுகிலனையமேனிக்கடவுளுங்கணித்துக்கூறும்
பொருளுளவனைத்துநல்கிச்சென்னிபாற்புகன்மினென்று
ஒருவினன்பரகாலன்றன்னொடுமவருறந்தையுற்றார்.

(இ-ள்.) அருகிலிருந்தவர்கள் துன்பம்வந்த விதத்தைச் சொல்லச் சிவந்த திருக்கண்களையுடைய கரியமேகம்போன்ற திருமேனியையுடைய பெருமானும், (அவர்கள்) கணக்கிட்டுச் சொல்லும் அளவுள்ள பொருளையெல்லாம் கொடுத்துச், சோழனிடத்துச் சொல்லுங்களென்று அனுப்பினன். பரகாலரோடு அவர்கள் சோழனிருக்கும் உறையூரை யடைந்தார்கள். (எ-று.) (க00)

௧0௧. வைத்தனர்பொருளியாவுமன்னன்முன்வணிகனீந்த
அத்தகவனைத்துங்கூறமன்னனுமருளினோக்கி
முத்தணிபதக்கம்பாயமாமுரட்கரிமுதலநல்கி
இத்தகையினனைத்தேடலரிதெனப்புவியுமீந்தான்.

(இ-ள்.) பொருளையெல்லாம் சோழராசன் முன்னே வைத்துப் பேரருளாள வைசியர் கொடுத்த அவ்விதத்தை யெல்லாம் சொல்லச், சோழனும் கிருபையோடு பார்த்து, முத்தாபரணம், பதக்கம், குதிரை, வலிமையுடைய யானை முதலியவைகளைக் கொடுத்து, "இப்படிப்பட்டவனைத் தேடுவதரிது" என்று பூமியும் கொடுத்தனன். (எ-று.) (௧0௧)

௧0௨. பிறங்குமிப்பொருள்களெல்லாமறையினுட்பெய்மினென்று
மறங்கிளர்வேலான்கூறவமைத்தனர்வரதன்மாய்கைத்
திறம்புரிந்தகற்றவோர்நாட்டிறந்ததிற்செம்பொன்காணார்
அறங்கிளர்ந்தனையாய்பைம்பொன்காண்கிலேமறையுளென்றார்.

(இ-ள்.) விளங்கும் இந்தப் பொருள்களெல்லாம் பொருள்வைக்கு மறையில் வையுங்கள் என்று வீரமிகுந்த வேலைத்தரித்த சோழராசன் சொல்ல, (அங்ஙனமே) வைத்தார்கள். அருளாளன் மாயையின் விதத்தைச் செயது (அவற்றை) மறைக்க, ஒருதினம் திறந்து அதிற் செம்பொன்னைக் காணாதவர்கள் தருமமோருருவங் கொண்டது போன்றவனே! அறையிற் பசியபொன்னைக் காணோமெனறார்கள். (எ-று.) (௧0௨)

௧0௩. திகைத்தனனிறும்பூதாகச்சினத்தினாற்செங்கைகொட்டி
நகைத்தனன்பரகாலன்கேணினிநமக்கொல்லாதால்
பகைத்திடிற்புவியுமாயம்பண்ணுவாய்பகரிற்சால
மிகைத்தவஞ்சகனீநம்பாலகலகெனவெறுத்துவிட்டான்.

(இ-ள்.) (சோழராசன்) திகைத்து, ஆச்சரியமுண்டாகக் கோபத்தினாற் சிவந்த கைகள் கொட்டி நகைத்துப், பரகாலனே! கேட்பாயாக: (உனது) நட்பு இனி நமக்குக் கூடாது; (இன்னும்) பகை கொள்ளுவையாயின் இப்பூமியையும் மாயஞ் செய்வாய்; சொல்லுமிடத்து மிக அதிகரித்த வஞ்சகனை நீ நம்மிடத்து நின்றும் போவாயாக வென்று வெறுத்தனுப்பி விட்டனன். (எ-று.) (௧0௩)

௧0௪. கோழிமாநகர்நீத்தோகைக்குரைகடல்குளித்துக்கோதில்
ஆழிமாலருளிதென்றுவருட்பரகாலன்றானும்
வாழிமாலடியார்வாழிவயிணவமதமென்றேத்தாப்
பாழிமாமதில்சூழ்தொல்லைப்பதிவயிற்பரிவிற்சார்ந்தான்.

(இ-ள்.) பிறகு உறையூருக்குப் போவதை நீக்கிச் சந்தோஷமாகிய ஒலிக்கும் கடலிற் குளித்துக் குற்றமற்ற திருவாழியைத் தரித்த பெருமானது அருள் இதுவாகுமென்று அருளையுடைய பரகாலரும் பெருமானது அடியார்களான ததியர்கள்வாழி; வைணவமதம்வாழி என்று துதித்து வலிய பெரிய மதில்சூழ்ந்த பழமையான தமது ஊரினிடத்துப் பிரீதியோடு வந்து சேர்ந்தனர். (எ-று.) (௧0௪)

௧0௫. அனகனைப்பதியைநீங்கியருட்டிருமுடிகடகன்பாற்
புனகமிட்டருளாவின்றுங்கொழிதரப்பொழிந்துதானம்

தினகரக்குலக்கோன்செய்திகுமுதவல்லிக்குச்செப்பாக்
கனகவிற்கலனத்தேவியுடனுமோர்கானஞ்சார்ந்தான்.

(இ-ள்.) பாபரகிதரான பரகாலர் கிருபையோடு கூடிய ததீயர்களுக்கு அன்போடு திருப்போனகமிட்டருளித் துன்பம் ஒழியும்படி தானங்களைக் கொடுத்துச் சூரியவமிசத்தவனான சோழனது செய்தியைக் குமுதவல்லியாருக்குச் சொல்லிப் பொன்மயமாய்ப் பிரகாசமுடைய ஆபரணங்களை யணிந்த தமது தேவியாரான அக்குமுதவல்லியாரோடும் அவ்வூரை விட்டு நீங்கி ஓர் காட்டை யடைந்தனர். (எ-று.) (௧0௫)

௧0௬. முன்னரோழ்முனிவராவிமுடித்திடும்வறுமைநோயான்
மன்னர்சோறயின்றுவாழும்வாழ்வினும்வனத்தியாரும்
தின்னருநகுணபந்தின்னலழகென்றார்திருமாறனுந்
தன்னடியவர்க்காச்செய்யுங்கொலைகளுந்தகவேயென்றான்.

(இ-ள்.) முற்காலத்தில் சப்தரிஷிகள், உயிரைமுடிக்கும் தரித்திரமாகிய நோயினாலே அரசர்களது சோற்றை யுண்டு வாழும் வாழ்விலும் வனத்திலிடத்தில் யாருந் தின்பதற்கரிய பிணத்தைத் தின்பது அழகென றுரைத்தார்கள். பெருமானும் தனது அடியார்களுக்காகச் செய்யும் கொலைகளும் பெருமையுடையனவே என்றனன. (எ-று.) (௧0௬)

௧0௭. அறையுமிம்முறையால்வேந்தரரும்பொருளறமேயன்றால்
முறையிலாக்களவினானுஞ்சதுமறைமுதலன்பர்க்குக்
குறையறவளிக்கிலன்னந்தகவெனக்குறித்துஞாலத்
துறைதருங்கள்வரெல்லாமொருவழியுறவேசேர்த்தான்.

(இ-ள்.) சொல்லும் இந்த முறைமையினாலே அரசரது அரிய பொருளாற் செயயும் தருமமே யன்று; முறைமையில்லாத களவுசெய்தலினாலும் நான்கு வேதங்கள் பிரதிபாதிக்கும் காரணப்பொருளின் அடியார்களுக்குத் திருப்போனகம் குறைநீங்க அளிப்போமாயின் (அது) பெருமையே யென்றெண்ணி உலகத்திலிருக்கும் கள்வர்களெல்லாரையும் ஒரு வழிப்படச் சேர்த்தனர். (எ-று.) (௧0௭)

௧0௮. ஆறலைப்பவர்கள்கொள்ளாவரண்கடந்தவற்றுளோரைக்
கோறலைப்புரிந்துசெம்பொன்கொணர்பவர்மனைபொற்கோலால்
நூறலைபுரிவோர்கண்ணிற்காண்பொருணொடியிற்கொண்டு
சேறலைப்புரிவோரெண்ணிலாரவனருகிற்சேர்ந்தார்.

(இ-ள்.) (அப்போது) வழிபறிப்பவர்களும், பிறனைத்தன்னுட் கொள்ளாத காவலைக்கடந்து அவற்றிலுள்ளவர்களைக்கொன்று செம்பொன்னைக் கொண்டுவருமவர்களும், வீடுகளை அழகிய அஞ்சனக்கோலால் அழிப்பவர்களும், கண்ணாலே காணும் பொருள்களை நொடியிற்கொண்டு செல்லுமவர்களும் ஆகிய கணக்கற்றவர்கள் பரகாலரருகில் வந்து சேர்ந்தார்கள். (எ-று.) (௧0௮)

௧0௯. கரவிலாங்கவர்களுளுங்கங்குலிற்பகலிற்செம்பொன்
தரவயிணவர்கட்கன்னந்தவலுறுதளிக்குங்காலைப்
புரவலர்வணிகர்வாழும்புகார்வயிற்பொன்சேர்தீவின்
விரவுசோங்கொன்றுமூன்றுபாயுடன்மேயதன்றே.

(இ-ள்.) அவ்விடத்தில் அந்தக் கள்வர்கள் நாடோறும் களவினாலே இரவிலும் பகலிலும் செம்பொன்னைக் கொண்டுவந்து கொடுக்க, (பரகாலர் அவற்றைக்கொண்டு) பாகவதர்களுக்குத் திருப்போனகம் தவறாது அளித்துக்கொண்டு வரும்போது அரசர்களும் வைசியர்களும் வாழும் காவிரிப்பூம் பட்டினத்தினிடத்துப் பொன் மிகுதியாயுள்ள தீவினிடத்துள்ள மரக்கலமொன்று மூன்றுபாயுடன் வந்தது. (எ-று.) (௧0௯)

௧௧0. வந்தவச்சோங்கிற்செம்பொன்மணிமுதற்பொருளியாவும்
நந்தலில்பண்டசாலைதனில்வணிகரும்பெய்திட்டார்
அந்தவாறலிநாடன்கேட்டனனலலில்வாள்வேல
குந்தமேதரித்தவீரரொடுஞ்செலாக்கொள்ளைகொண்டான்.

(இ-ள்.) வந்த அந்தக்கப்பலில் செம்பொன் ரத்தினங்கள் முதலிய பொருள்களை யெல்லாம் கெடுதலில்லாத பண்டசாலையிலிருக்கும் வர்த்தகர்கள் ஏற்றினார்கள். அந்த விதத்தை ஆலிநாடரான பரகாலர் கேள்விப்பட்டு இராப்பொழுதில் வாள், வேல், ஈட்டி இவைகளைத் தரித்த வீரர்களோடும் சென்று அவற்றைக் கொள்ளைகொண்டனர். (எ-று.) (௧௧0)

௧௧௧. அப்பொருளனைத்தும்பாகவதர்க்கனமருத்தியான்ற
துப்பொடுநகரிதன்னில்வைகுநாடொலைவிலாத
கைப்பொருள்வணிகர்வெற்பிற்பொருள்கொள்வான்சேறல்காணு
முப்பொருண்முதல்வன்றடோர்பவனவைமுழுதுங்கொண்டான்.

(இ-ள்.) அந்தப் பொருள்கள் எல்லாவற்றாலும் பாகவதர்களுக்குத் திருப்போனகமளித்து நிறைந்த சகாயத்தோடு அந்த நகரத்திலிருக்கும் போது நீங்குதலில்லாத கையிலுள்ள பொருளுடைய வர்த்தகர்கள் மலைபடுதிரவியங்களை வாங்கும் பொருட்டுப் போவதைக்கண்டு மூன்று பொருள்களுக்கு முதல்வனான பெருமானது திருவடிகளை யறியும் பரகாலரும் அவைகளை யெல்லாம் பறித்துக் கொண்டனர். (எ-று.) (௧௧௧)

௧௧௨. வான்மழைதுளிக்குமல்லோர்வயிணவன்மனைபுக்கோர்நாள்
தான்மறைந்திருப்பக்கைக்கேதமனியத்தாலங்கொண்டு
மீன்மதர்விழியாள்கோதின்மெல்லியல்வெளியிற்சாரக்
கான்மலிதுளவத்தோளான்காண்டலுங்கவர்ந்துகொண்டான்.

(இ-ள்.) ஆகாயத்திலுள்ள மேகங்கள் துளிபெய்யும் இருட்காலமாகிய ஒருநாளில் ஒரு வைஷ்ணவரது திருமாளிகையிற் பிரவேசித்து மறைந்திருக்கக், கையினிடத்துப் பொன்னாலான உண்கலத்தைக்கொண்டு கயல் மீன்போன்ற மருட்சியையுடைய கண்களையுடையவளான குற்றமற்ற ஒருபெண் வெளியேவர, வாசனைமிகுந்த திருத்துழாய்மாலை யணிந்த தோள்களையுடைய பரகாலர் அதைக் கண்டதும் பறித்துக்கொண்டனர். (எ-று.) (௧௧௨)

௧௧௩. முன்னைநான்முகனையீன்றமுகிலருண்முழுதும்வாய்த்துப்
பொன்னையெய்வனப்புங்கம்பும்பொலிந்துபார்புகழவாழும்
அன்னையேயனையாடானுமலமராவழுங்கியன்புற்
றென்னையாள்குரவர்க்கிங்ஙன்வணக்கமென்றிசைத்துட்புக்காள்.

(இ-ள்.) முற்காலத்தில் நான்கு முகங்களையுடைய பிரமனைப்பெற்ற மேகம்போன்ற பெருமானது கிருபை முழுமையும் பெற்றுப் பிராட்டியாருக்குச் சமானமான அழகும் கற்பும் பொலிந்து பூமியிலுள்ளோர் புகழும்படிவாழும் தாய்க்குச் சமானமான அப்பெண்ணும் கலங்கி வருத்தமடைந்து அன்புடையளாய என்னையாளும் ஆசாரியருக்கு இங்கு வணக்கமென்று சொல்லி உள்ளே புகுந்தனள். (எ-று.) (௧௧௩)

௧௧௪. இசைத்தவம்மொழிகேட்டண்ணலிருகையாற்செவிமூயெஞ்சா
வசைத்தொழில்புரிந்தேமந்தோவயிணவர்வழங்கிற்சாபந்
திசைத்திருமுகத்தோன்சாபந்தீர்ப்பினுந்தீராதென்று
அசைத்திடுந்துயரானுள்ளமழுங்கிமெய்யதிரப்புற்றேங்கா

(இ-ள்.) சொன்ன அந்தச் சொல்லைக்கேட்டுப் பரகாலர் தமது இரண்டு கைகளாலும் செவிகளைமூடிக் குறையாத குற்றத்தையுடைய செய்கையைச் செய்தோம். ஐயோ! வைஷ்ணவர்கள் சாபமிடுவாராயின் அது பிரமனது சாபத்தைத் தீர்த்தாலும் தீராதென்று தம்மை யசைக்கும் துயரத்தினாலே மனம்வருந்திச் சரீரம் நடுக்கமடைந்து ஏங்கி,(எ-று.)(௧௧௪)

௧௧௫. வாயிலின்புதவிற்சாரவைத்தனன்கலனைவாய்த்த
தாயினுமினியோர்வாணிகேட்டுவான்றனிபானின்றான்
நீயிலங்கியபொற்றலங்கொடுமனைநின்றுமுன்றிற்
போயிலம்புகுதூஉங்காணேனெனப்புமான்பொன்னனாளும்

(இ-ள்.) வாசற் கதவினிடத்து அந்தப் பாத்திரத்தைச் சாரவைத்து அந்தப் பாத்திரத்துக்குரியவராயத் தாயினுமினியாரது சொல்லைக்கேட்கும் பொருட்டுத் தனியாக ஓரிடத்தில் நின்றனர். "நீ பிரகாசமுடைய பொற்கிண்ணத்தைக் கொண்டு வீட்டிலிருந்து வாசலுக்குப் போய் மீண்டும் வீட்டிற் பிரவேசிக்கும்போது அக்கிண்ணம் காணேனே" என்று புருஷன் கேட்கத், திருமகள்போன்ற அப்பெண்ணும், (எ-று.) (௧௧௫)

௧௧௬. கவர்ந்தனன்கள்வனென்னத்திறற்பரகாலன்றானே
இவண்டனிகவர்ந்தான்பாகவதராதனைக்கேயென்றும்
பவந்தணந்தனமென்றேறுகைதழைத்தனன்படியின்பாங்கர்
சிவந்தபொற்கலனைத்தேவிகாண்டலுஞ்செப்பினாளால்.

(இ-ள்.) கள்வன் பறித்துக்கொண்டானென் றுரைக்க, "வலிமையையுடைய பரகாலரே இவ்விடத்தில் தனியாக வந்து பாகவதாராதனத்துக்காகப் பறித்துக்கொண்டார். இனி என்றும் பிறவியை யொழித்தோ" மென்று சந்தோஷமதிகரித்தனன். (அப்போது) அம்மாது வாசற்படியினிடத்துச் சிவந்த பொற்பாத்திரத்தைக் கண்டதும் (அதைத் தன் கணவனுக்குச்) சொல்லினள். (எ-று.) (௧௧௬)

௧௧௭. கண்டதுகதிர்பொற்றலமெனுமவட்கன்றுநோக்கிக்
கொண்டவனகல்காலியாதுகூறினைகொடியாயென்ன
வண்டமர்குழலுஞ்சொற்றவாணியீதென்றாள்வாயில்
எண்டவனவனைநாடியெய்தலுமெங்கைநின்றான்.

(இ-ள்.) பிரகாசமுடைய பொற்கிண்ண மாய்ப்பட்டது எவனும் அவளைக் கோபித்துப் பார்த்து இதைப் பறித்துக்கொண்டு ஆவர் போகும் போது நீ எதைச்சொல்லினை கொடியவளே! என்று கேட்க, வண்டுகள் பொருந்திய கூந்தலையுடைய அவளும் தான் சொன்னசொல் இது என்றனள். சிந்திக்கும் தவத்தையுடைய அவ்வைஷ்ணவர் வாசலில் அக்கள்வரைத்தேடி வருதலும் எமது ஸ்வாமியான பரகாலர் (அவரெதிரில்) நின்றனராம் (எ-று.) (ககள)

க௱அ. பணிந்தவன்வினையேன்செய்தபாதகந்துடைப்பாயென்ன
அணிந்தனனிருதாள்சென்னியடிகளாலடியேன்றேற்றம
துணிந்ததென்றனையின்றாண்டதோகையைச்சலியேலெனத்
திணிந்தபொற்புயத்தோளான்விடைகொளாநகரிசேர்ந்தான்.

(இ-ள்.) பணிந்து, வினையையுடைய நான்செய்த பாவத்தைத் துடைப்பீராக என்று அவருடைய இரண்டு திருவடிகளைச் சிரசிலணிந்து ஸ்வாமிகளாலே அடியேனது பிறவி துணிக்கப்பட்டுப் போயிற்று. என்னை இன்று ஆண்டவரான மயில்போற் சாயலையுடைய உமது தேவியாரைக் கோபியாதேயும் என்று கூறித் திண்மையையுடைய மலைபொருந்த தோள்களையுடைய பரகாலர் விடைபெற்றுக்கொண்டு தமது நகரியை யடைந்தனர். (எ-று.) (ககஅ)

க௱கூ. கரவினுறபரமபாகவதாக்கனங்களியபினல்கிப்
பரவிவாழ்நாளிலோர்நாட்பொருள்பெறுன்மையுளெய்தி
அரவினணமறைகளபோறறத்துயிலபுரியரஙகததெந்தாய
சரவிழிக்கமலைகேளவாவெனசசொலிததளர்நதான்றக்கோன்.

(இ-ள்.) இப்படி மேலோரான பரகாலர், களவினாலே பரமபாகவதர்களுக்குத் திருப்போனகத்தைச் சந்தோஷத்தோடு சமர்பித்து அவர்களை வணங்கி வாழுநாளில்* ஓர்நாள் பொருளில்லாமல் வருத்தமடைந்து ஆதிசேஷர்மீது நான்கு வேதங்கள் துதிக்க அறிதுயிலமரும் எனது ஸ்வாமியான திருவரஙகநாதனே! பாணத்தைப்போன்ற திருக்கண்களையுடைய பெரிய பிராட்டியாருக்கு நாயகனே! எனறுரைத்துத் தளர்ந்தனர். (எ-று.)(ககக)

வேறு.

க௨0. தளரும்பரகாலன்றுயர்தணியப்பொருடருவான்
கிளருங்கருணையினுன்மலர்கெழுமைப்புயலுழையே
வளருங்கரைபொருமாநதிநடுவட்கருமலைபோல
இளவெண்ணகைமலர்மாதுடனினிதிற்றுயிலிறையோன்.

(இ-ள்.) இப்படித் தளரும் பரகாலரது துயரந் தணியும்படி பொருளைத்தருவதற்கு விர்த்தியடையும் கருணையுடன் மலர்கள் மிகுதியையுடையதாய், கரியமேகத்தினிடத்திலிருந்து பெருகுவதாய்க் கரைகளை மோதும் பெருமைபொருந்திய திருக்காவேரி நதியினிடையில் நீலமலைபோல, இளமையாய் வெண்மையான நகையையுடைய பெரியபிராட்டியாருடன் இனிமையாக அறிதுயிலமர்ந்த பெருமான், (எ-று) (௧௨0)

* —92

௧௨௧. சிவனுன்முகன்முதல்வானவர்திரண்மாதவர்குருகூ
ரவனாரதனிலமானவர்வடிவாயுழையணுக
நவநாண்மலர்மகள்பாரமயிலொளிரபானுவினலமுந்
துவநாடருமணியின்சிவிகையின்மீதயல்சார

(இ-ள்.) சிவன் பிரமன் முதலிய தேவர்கள் கூட்டம் முனிவர்கள் சடகோபர் நாரதர் இவர்கள் பூமியிலுள்ள மனிதர்கள் வடிவாகத் தம்மிடத்துச் சேர்ந்திருக்கவும், மிகப்புதிய மலரிலிருக்கும் பெரிய பிராட்டியாரும் பூமிதேவியும பிரகாசிக்கும் சூரியனது ஒளியும் கெடும்படி தேடுதற்கரிய ரத்தினமயமான சிவிகையின்மீது பக்கத்திலிருக்கவும், (எ-று) ()

௧௨௨. கொற்றக்குடைவிரிசாமரைகொடிபொன்மணிநிரையான்
முற்றக்கவினுறமன்னியவிருபாலவரமுறையே
சுற்றக்கதிர்முடிகுண்டலமணிதோள்வளைசுடர்வான்
பற்றக்கடலொலியேதருபணைபற்பலவதிர

(இ-ள்.) பொன் மணி இவைகளின் வரிசைகளாலே ஆகிய திருவெண்கொற்றக்குடை, விரிந்த சாமரை, கொடி இவைகள் முழுமையும் அழகு பொருந்தும்படி நிலைபெற்ற இருபக்கங்களிலும் முறையே வரவும், கூட்டமாகிய பிரகாசமுடைய திருவபிஷேகம் மகரகுண்டலம் அழகிய தோள்வளை இவைகளின் பிரகாசம் ஆகாயத்தைச்சென்று பொருந்தவும், கடலின் ஒலியைத்தரும் பற்பல வாத்தியங்கள் ஒலிக்கவும், (எ-று.) (௧௨௨)

௧௨௩. மாழைதிரளணிபொற்கலைமணிகோசிகமலிபொன்
பேழைத்திரள்சிலர்பின்கொடுசெலவேநொமில்பிறழா
நீழைக்கெதிரதிர்வெஞ்சிறைவயினன்கதிர்நிறைபொற்
கேழைப்பயில்பருமப்பரிவடிவாமிசைகெழுமா

(இ-ள்.) பொன்திரள் ஆபரணம் பொன்னுடை முத்துக்கட்டிய பட்டுச்சீலை பொன்நிறைந்த பெட்டித்திரள்கள் இவைகளைப் பின்னே எடுத்துக்கொண்டு சிலர்செல்லவும், வேகம் தவறுதலும் ஒளிகெதிராவதும் ஒலிசெய்வதுமான வெவ்விய சிறகையுடைய பெரியதிருவடி, ஒளிநிறைந்த பொன் அழகைக்கொண்ட பெரிய குதிரைவடிவாயிருக்க அக்குதிரையின் மீது விளங்கி, (எ-று.) (௧௨௩)

௧௨௪. துளவந்திருமணிபன்மலர்துதையுந்தொடைதுயல
அளவன்றியகதிர்குண்டலமணிபொன்கலையவிர
வளவண்டிருமணமொன்றியவடிவங்கொடுமலர்வெண்
டளவம்புரைநகைவிண்டொளிர்தரமுந்தருடதைய

(இ-ள்.) திருத்துழாய், பிராட்டி, கௌஸ்துபம், பல மலர்கள் நெருங்கிய மாலை இவைகள் அசையவும், அளவுபடாத பிரகாசமுடைய குண்டலமும் ஆபரணங்களும் பொன்னுடையும் விளங்கவும், அழகிய வளத்தையுடைய திருக்கலியாணங்கூடிய கோலங்கொண்டு, மலர்ந்த வெண்மையான முல்லையையொத்த தந்தங்கள் மலர்ந்து பிரகாசிக்கவும், முற்படும் திருவருளானது வெளிப்படாது நெருங்கி நிற்கவும், (எ-று.)(௧௨௪)

௧௨௫. வந்தானுயர்திருவெள்ளறைநெறிவாய்மதுமலர்பூம்
பைந்தாருவினுறைவீரர்கள்சண்டோடினர்பணியா

மூந்தாதரவொடுகூறலுமுகமண்டலமலரா
நந்தாவுவகையினோடவணடந்தானிடர்கடந்தான்.

(இ-ள்.) உயர்ந்த திருவெள்ளறையின் வழியினிடத்து வந்தனன். தேன் பொருந்திய மலர்களையுடைய அழகிய பசிய மரத்தினிடத்த இருக்கும் வீரர்கள் (எம்பெருமானைக்) கண்டு ஓடிப்பணிந்து முற்படும் ஆசையோடு சொல்லுதலும், திருமுகமண்டலம் மலர்ந்து கெடாத சந்தோஷத்தோடு அவ்விடத்துக்கு இடரைக் கடந்தவரான பரகாலர் நடந்தனர். (எ-று.)

௧௨௬. திருமண்ணுதல்திகழத்திருமணிமார்பிடைசெறியப்
பொருமன்னர்களொடுகானிடைப்புகுதாவொளிமிகுவாள்
உருமண்ணியகணைவார்சிலையொடுவானவரொடுமால்
வருமங்கெநெறியதனிற்புடைமறைந்தானினிதுறைந்தான்.

(இ-ள்.) திருமண் திருநெற்றியில் விளங்கவும், வீரலக்ஷ்மி அழகிய மார்பினிடத்துப் பொருந்தவும், யுத்தஞ்செய்யும் தலைவர்களோடு காட்டிற் பிரவேசித்து, ஒளிமிகுந்த வாளும் அழகுடைய பாணமும் நீண்ட வில்லும் ஆகிய இவைகளோடு, தேவர்களுடன் பெருமான் வரும் அந்த வழியில், ஒரு பக்கத்தில் மறைந்து இனிதாக இருந்தனர். (எ-று. (௧௨௬)

௧௨௭. அவணத்திரிமிசைவானவரணிசூழதரவருண்மால்
சிவணத்தனதயலவீரர்கள்திரள்வீணையினவிளியா
உவணத்திறையரவத்திரளுளபுக்கெனவொளிதாழ்
சுவணக்கடகணிவாளொடுகுதித்தான்மிடறுதித்தான்.

(இ-ள்.) அவ்விடத்துக்குக் குதிரையின்மீது தேவக்கூட்டங்கள் சூழும்படிவரும் பெருமானைக் கிட்டுவதற்காகத் தமது அயலிலிருக்கும் வீரர்களின் கூட்டங்களை வீணையினாலே யழைத்து, திருவடி பாம்புக் கூட்டத்திற் பிரவேசித்ததுபோல, ஒளிமிகுந்த பொன்மயமான கேடகம் அழகிய வாள் இவைகளுடன் பிரவேசித்து ஆரவாரித்தனர். (எ-று.) (௧௨௭)

௧௨அ. பிடியெற்றுதியடிகுத்துதிபேசாதுரைபேசின்
முடியப்பொருகெனவித்தகைமொழிபற்பலமொழியா
நொடியிற்கதிர்முடிபொற்குழையணிதோள்வளைநுவலும்
கொடிமுத்தணிகுடைசாமரைகுறித்தான்மிகபபறித்தான்.

(இ-ள்.) பேசாமல் பிடி, எறி, அடி, குத்து; ஒருசொல் பேசுவதானால் சாகும்படி யுத்தஞ்செய் என்று இப்படிப்பட்ட மொழிகள் பற்பலவற்றைச் சொல்லி, நொடிப்பொழுதில் பிரகாசமுடைய முடி, பொன்குழை, ஆபரணங்கள், தோள்வளை, சொல்லும் கொடி, முத்துவரிசைகளையுடைய குடை, சாமரை இவைகளைக் குறித்துக்குறித்து விசேஷமாகப் பறித்தனர். (எ-று.)

௧௨௯. காமாரியொடயன்மான்முதலிமையோர்பொருள்கவரா
பூமாதொடுபுவிமாமகள்புனைபூண்களும்பறித்தே
காமார்கதிர்வடிவாளொடுகடவாவெதிர்கடவா
வாமாமிசைவருமாயனைவளைத்தானிகல்விளைத்தான்.

(இ-ள்.) சிவனோடு பிரமன் இந்திரன் முதலிய தேவர்களது பொருளைப் பறித்து, பெரிய பிராட்டியோடு பூமிதேவியார் அணிந்த ஆபர

ணங்களையும் பறித்து, சிரேஷ்டமாகிய பிரகாசமுடைய கூர்மையான வாளோடு எதிராக நடந்து, செலுத்தப்பட்டுத் தாவும் குதிரையின்மீது வரும் பெருமானை வளைத்துப் போர் விளைத்தனர். (எ-று.) (௧௨௯)

௧௩௦. குழைகங்கணமணியங்கதநவமாமணிகுறையா
இழையங்குலியினிலாழியொடெவையும்பறித்திமையோர
உழைகொண்டுளகுடைசாமரைகொடிகொண்டருளொருவா
மழைகண்டிளநகைவிண்டிடவடிவாளெதிரவிதிர்த்தான்.

(இ-ள்) விரல்களிலுள்ள மோதிரத்துடன் குண்டலம், கங்கணம், அழகிய தோளணி பெருமைபொருந்திய நவமணிகள் குறையாத ஆபரணங்கள் எவற்றையும் பறித்து, தேவர்கள் தங்களிடத்திற் கொண்டிருக்கும் குடை, சாமரை, கொடி இவைகளைப் பறித்து, கிருபை நீங்காத மேகம்போன்ற பெருமானைப் பார்த்து, புன்சிரிப்புண்டாக வடித்தவாளைப் பெருமானுக்கு முனனே ஓங்கினர். (எ-று.) (௧௩௦)

௧௩௧. இடையோாபணித்துணியும்மிலதொருமோதிரமெழிலைம
படையோன்கரததினிற்காண்டலும்பறிததான்பறிககரிதாய
உடையோன்விரலினைப்பற்கொடுகறித்தான்றுளவுயர்பூந
தொடையான்கலியாவென்றருள்சொரிநதான்மிகபபரிநதான.

(இ-ள்.) இடையில் ஓராபரணத்துண்டமும் இல்லையாயிற்று. ஒரு மோதிரம் அழகிய பஞ்சாயுதமுடையவனான பெருமானது திருக்கைகளிற் காணுதலும் அதைப் பறித்தனர்; அது பறிப்பதற்கரிதாகவே பெருமானது திருவிரலைப் பற்களைக்கொண்டு கடித்தனர். (அப்போது) திருத்துழாயாகிய உயர்ந்த அழகிய மாலையையுடைய பெருமான் மிகவும அன்புடையவனாய "கலியா" என்று கூறி யருள்கொடுத்தனர். (எ-று.) (௧௩௧)

௧௩௨. அற்றுதவிற்பலருங்கலியாழ்வாரெனநாமம்
பெற்றானுமபபொருளுள்ளனவெவையுங்குவைபெய்தே
துற்றுடகமணிபொற்பணிதுகிலுஞ்சுமைபொதியாப்
பொற்றுட்கழன்மறவீரரையெடுமினெனப்புகன்றான்.

(இ-ள்.) அத்தன்மையாதலால் பலரும் "கலியாழ்வார்" என்னும்படி திருநாமம் பெற்ற பரகாலரும், அபபொருளாயுள்ளன எல்லாவற்றையும் குவியலாகச்செய்து, பொன்னும் மணியும் கூடிய அழகிய ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் சுமையாகக்கட்டி, அழகிய பாதங்களில் வீரகண்டையைத் தரித்த வலிமையுடைய வீரரைநோக்கி, இச்சுமைகளை எடுங்கள் என்று சொல்லினர். (எ-று.) (௧௩௨)

௧௩௩. மாயோனவையெடுத்தற்கரும்வகைசெய்தலுமதியின்
தூயோனவனயனின்றவன்றனைநோக்கினன்சூரியா
நீயோதினையெடுக்கும்மிடறவமாமனுநினையா
ஆயோதனப்பலிநல்குவனெனவாள்விதிர்த்ததிர்த்தான்.

(இ-ள்.) பெருமான், அவைகளை யெடுப்பதற்கரிய வகைசெய்தலும், ஞானத்தாலே பரிசுத்தரான ஆழ்வார் அவருக்குப் பக்கத்தில் நின்றவனான பிரமனைப்பார்த்துக் கோபித்து, நீ பெருமைபொருந்திய மந்திரத்தை யெண்ணி இவற்றை யெடுக்கும் வலிமைகெடும்படி சொல்லி

உன்னை யுத்தபலியாகக் கொடுப்பேன என வாள் வீசி ஆரவாரித்தனா. (எ-று.) (ககூக)

வேறு.

ககூச. அன்னமூர்தியுநீயென்னையடலடறபரிமீதுள்ளான்
இன்னதோர்வித்தைவல்லானெனச்சினந்தெதிர்சென்றெய்தா
உன்னதாருயிரேவேண்டிலெடுப்பியென்றொருவாளோங்கப்
பன்னகவணைமேற்றுஞ்சும்பரமனும்பரிந்துநோக்கா

(இ-ள்.) அன்னவாசனத்தையுடைய பிரமனும் "நீ யென்னை நெருக்சாதே, வலிய குதிரைமீதுள்ளவன் இப்படிப்பட்டதொரு வித்தையில் வல்லவன்" என்று சொல்லக் கோபித்து, எதிர்போயடைந்து, "உனது அரிய உயிரை விரும்புவாயாயின் இச்சுமையை எடுக்கச்செய்வாயாக" வென்று ஒப்பற்ற வாளையோங்க, ஆதிசேஷசயநத்தில் அறிதுயிலமரும் பெருமானும் பரிந்துபார்த்து, (எ-று.) (ககூச)

ககூ௫. சினவனீயெடுக்குந்தன்மைமனுவைநின்செவியுட்செல்ல
வினவுகென்றழைத்துசசென்னிமீதுதன்வலக்கைசேர்த்துக்
கனதுயர்க்கடற்குத்தெப்பம்பவவனக்கணிசசியாகும்
தனதெழுத்திருநான்கினுன்வலசசெவிதன்னுட்சொன்னன்.

(இ-ள்.) நீ கோபியாதே, (இதனை) எடுக்குந் தன்மையையுடைய மந்திரத்தை உனது செவியினிடத்துச் செல்லும்படி கேட்பாயாக வென்று (அருகி) லழைத்து, (பரகாலர்) சிரத்தின்மீது தமது வலது திருக்கையைச் சேர்த்துப் பெருந்துயரமாகிய கடலுக்குத் தெப்பமாவதும் பிறவியாகிய காட்டுக்கு மழுவாவதுமான தமது திருவஷ்டாக்ஷரத்தை அவரது வலச் செவியினிடத்துச் சொல்லினர். (எ-று.) (ககூ௫)

ககூசா. இயம்பியாங்கழிவிலாமைவிநோதமென்றிரண்டாஞ்செல்வம்
வயங்கமால்கருடன்றோண்மேன்மழைமுகில்வடிவங்காட்டித்
தயங்குபூண்பொறிபாாபஞ்சாயுதஞசயன்றனைநாதன்
அயன்சிவன்முனிவர்பாகசாதனனமரர்சூழ

(இ-ள்.) (இப்படி) சொல்லி, அங்கு அழிவில்லாததான நித்தியவிபூதியும் லீலாவிபூதியும ஆகிய இரண்டுவிதசெல்வமும் விளங்கும்படி பெருமான் பெரிய திருவடியின் தோள்களின்மீது குளிர்ந்த மேகம்போன்ற திருமேனியைக்காட்டிப் பிரகாசிக்கும் திருவாபரணங்கள், பிராட்டியார், பூமிதேவியார் பஞ்சாயுதங்கள், ஜயன், சேனைமுதலியார், பிரமன், சிவன், முனிவர்கள், இந்திரன், தேவர்கள் இவர்கள் சூழும்படி (எ-று.) (ககூசா)

ககூஎ. தோன்றினன்கலியன்காணுப்பணிந்துநீர்துணைக்கண்வானிற்
கான்றிடப்புளகமேனிபொடித்தெழக்கடலினீர்மை
போன்றிவர்களிப்பவெட்டக்கரப்பொருளபோதித்தாண்டாய்
யான்றிருந்துறநின்செல்வமிரண்டொடுவெளிநின்றெந்தாய.

(இ-ள்.) தொன்றினன். அதைக் கலியனை ஆழ்வார் சேவித்துப் பணிந்து, இரண்டு கண்களில் மேகம்போல நீர் சொரியத் திருமேனியில் புளகமுண்டாகி யதிகரிக்க, "என்னப்பனே! கடலின் றன்மையைப்போல

உயர்ந்த களிப்புண்டாகும்படி திருவஷ்டாக்ஷரத்தினர்த்தத்தைப் போதித்து, அடியேன் திருத்தமடையும்படி உனது உபயவிபூதி ஐசுவரியத்தோடு வெளியாக நின்று அடிமை கொண்டனை" (எ-று.) (௧௩௭)

௧௩௮. கண்டனன்றவமியாவுங்கண்டிலன்கமலைநாத
அண்டர்தாழரங்கத்தீசவெனப்பராயவைபத்தாகத்
தண்டமிழ்நுவலாமாயோனருச்சனைவடிவஞ்சார்ந்த
எண்டிருப்பதிநூற்றெட்டடங்கிதப்படுத்தியநூற்றொன்பான்

(இ-ள்.) "அந்த உன்னைத் தரிசித்தனன்; உடனே எனது தோஷங்கள் யாவும் (என்னைவிட் டோடினமையால் அவற்றைக்) கண்டிலேன்; பெரிய பிராட்டியாருக்கு நாயகனே! தேவர்கள் வணங்கும் திருவரங்கத்தீசனே!" என்று துதித்து அப்படி துதித்தவை பதிகமாகக் குளிர்ந்த தமிழினால் அருளிச்செய்து, பெருமான் அர்ச்சாரூபமாகச் சார்ந்தவையாய்ச் சிந்திக்கத்தகும் நூற்றெட்டுத் திருப்பதிகளையும் அங்கு உரிமைப்படுத்தியவை தொள்ளாயிரமாக (எ-று.) (௧௩௮)

௧௩௯. பின்னர்சொற்றரியீரைந்தாம்பிறந்தையின்பெருவினோதம்
பன்னநூற்றிருபானன்கிற்பகர்ந்தோராயிரமுப்பானன் *
கன்னமூவகையுமாகத்திருமொழியறைந்தானண்ணல்
சொன்னவப்பனுவல்வாடினேனென்றுதொடக்கமாக்கி.

(இ-ள்.) அதன் பிற்பாடு அருளிச்செய்தது, பெருமானது பத்தென்னுந் தொகையையுடைய அவதாரத்தின் பெரிய விநோதத்தைக் கூற நூற்றிருபத்துநான்கில் அருளிச்செய்து, ஆக ஆயிரத்து முப்பத்து நான்காகச் சொன்ன அப்பாசுரங்களை "வாடினேன்" என்று தொடங்கி அப்படிப்பட்ட மூன்று விதமுமாகப் பெரிய திருமொழி யருளிச்செய்தனர் திருமங்கையாழ்வார். (எ-று.) (௧௩௯)

* "ஓராயிரமெண்பானன்கு" என்றும் பாடபேதங் காண்கிறது. அப்போது ஆழ்வார் நாயகி அவஸ்தையை யடைந்ததன் விஷயமாக அருளிச்செய்த ஐம்பது பாசுரங்களுங் கூட்டிக்கொள்க. திருமங்கையாழ்வாரருளிச்செய்த பிரபந்தங்கள் ஆறனுள் முதலாவதான பெரியதிருமொழி ஆயிரத்து எண்பத்துநான்கு பாசுரங்களேயாம்.

௧௪0. பரவினன்பலகாற்பின்னும்பணிந்தனன்பறித்தயாவும்
அரவினிற்றுயின்மாலாதியவரவர்க்களியாநின்றுன்
கரவினுணிழுதுண்டோனுங்கருணையாற்கலியன்றன்னை
வரவிசைத்துடன்கொண்டாதிமணிமதிலரங்கஞ்சார்ந்தான்.

(இ-ள்.) பலமுறையும் துதித்துப் பின்னும் பணிந்து தாம்பறித்த பொருள்கள்யாவும் ஆதிசேஷசயனத்தில் அறிதுயிலமரும் பெருமான் முதலிய அவரவர்களுக்குக் கொடாநின்றனர். (அப்போது) களவினாலே நெய்யையுண்ட பெருமானும் கருணையினாலே கலியனை ஆழ்வாரை வரும்படியருளிச்செய்து உடன்கொண்டு முதன்மைபெற்ற மணிமயமான மதில்கள் சூழ்ந்த திருவரங்கத்தை யடைந்தனன். (எ-று.) (௧௪0)

௧௪௧. வயினவரொருவர்க்கன்னம்வழங்குதன்மலரோன்வானோர்
எயினகைத்தெரித்தோனாதனையினுமிருமைத்தாகும்

அயிலனமலகில்பாகவதர்க்களித்துகக்குநின்சீர்
குயிலரிதினிநீநம்பாற்றிருப்பணிகுயிற்றுகென்று

(இ-ள்.) வைஷ்ணவரொருவர்க்குத் திருப்போனகமளித்தல் பிரமன், தேவர்கள், முப்புரங்களையும் நகைத்தெரித்தவரான சிவன் இவர்களது ஆராதனையைக் காட்டிலும் இருமைப்பயனளிப்பதாகும்; உண்ணும் போனகத்தைக் கணக்கற்ற பாகவதர்களுக்குச் சமர்ப்பித்துச் சந்தோஷிக்கும் உனது பெருமை சொல்வதற்கரிதாகும்; இனி நீ நம்மிடத்தில் திருப்பணி செய்வாயாக வென்று (எ-று.) (கசக)

கசஉ. சொற்றனனரங்கக்கோயிலனைந்தன்மேற்றுயின்றுனியாவுங்
சற்றவக்கலியன்றானும்பராங்குசன்கவியாலின்பம்
பெற்றவணிருப்போன்வேங்கடாசலப்பெருமான்றன்பால்
உற்றடிபணிவான்பத்தியோகியருடனேசென்றான்.

(இ-ள்.) திருவரங்கத் திருக்கோயிலில் திருவநந்தாழ்வான்மீது அறிதுயிலமரும் பெருமான் அருளிச்செய்தனன். யாவுங்கற்ற அக்கலியனும் பராங்குசரான நம்மாழ்வாரது அருளிச்செயல்களாலே இன்பமடைந்து அங்கு இருப்பவராயிருந்து வேங்கடாசலத்தி லெழுந்தருளியிருக்கும் ஸ்ரீநிவாசப் பெருமானை அடைந்து திருவடிதொழும்படி பக்தியையுடைய யோகியர்களுடனே சென்றனர். (எ-று.) (கசஉ)

கசங. குடந்தைவிண்ணகரங்கோதில்சித்திரகூடங்கோலம்
படர்ந்தபொன்முட்டங்கோவல்பணிந்துபாலாறுநீங்கி
அடர்ந்தவாதபத்தால்வேட்டையடைந்துமற்றங்கோர்பூங்கா
இடந்தனிலிருந்தான்பாங்கோர்காவதமெவருங்காணார்.

(இ-ள்.) திருக்குடந்தை திருவிண்ணகரம் குற்றமற்ற சித்திரகூடம் ஸ்ரீவராகநயினார் எழுந்தருளியிருக்கும் அழகிய ஸ்ரீமுஷ்ணம் திருக்கோவலூர் இவைகளைப் பணிந்து பாலாற்றைக் கடந்து நெருங்கிய சூரிய வெப்பத்தால் தாபமடைந்து அங்கு ஒரு அழகிய சோலையினிடத்து இருந்தனர்; அதனைப் பக்கத்தே ஒருகாத தூரத்திலுள்ள எவருங் காணாதவராயினர்: (எ-று.) (கசங)

வேறு.

கசச. *அவனொருமுதிய வயிணவவடி வாயடிமலர்வருந்தவா மலகங், தவலின்மாநரந்தந் தருபலந்தியார் பொதியுணுப்புயம்புடைதழைப்ப, நவமலர்க்கரத்தோர் பொத்தகங்கைகைக் குடையுடன்டந்துநா ளிருதோள், இவர்நரசிங்கன் கச்சினின்றடைந்தப் பொழிலினோர்புடைகிழ விருந்தான்.

(இ-ள்.) அவ்விடத்தில் தானே ஒரு விருத்த வைஷ்ணவர்வடிவமுடையவராய் திருவடிக்கமலங்கள் வருந்தும்படி, நெல்லி கெடுதலில்லாத நார

---

* அவனொருமுதிய வயிணவவடிவா யடிமலர்வருந்தவே நடந்து
பவமுதலறுத்தாண் டருள்திருமலையைப் பையவேபின்செல விடுத்துச்
சிவன்முதலயனார் வானவரெவர்க்குந் தேடுதற்கரியவேங் கடத்தான்
புவனமேத்தண்ணல் தனித்திருந்தயர்ந்தப் பொழிலினோர்புடைகிழ விருந்தான்'
என இச்செய்யுள் மற்றொரு பிரதியில் பாடபேதம் பெற்றுளது.

த்தை இவையன் கொடுத்த பழமும் தயிரோடு கூடிய கட்டுச்சாதமும் புய த்திணிடத்து விளங்கப் புதிய மலர்போன்ற கையில் ஒரு புத்தகங்கொண்டு கைக்குடையோடு நடந்து எட்டுத் தோளசன் பொருந்திய நரசிங்கப்பெருமான் திருக்கச்சியினின் றடைந்து அந்தச் சோலையின் ஒருபுறத்தில் நிழலி லிருந்தனர். (எ-று.) (௧௪௪)

**௧௪௫. காண்டலுங்கலிய னெழுந்தடிபரவா வடிகள்பூங்கரதலங் கவினப, பூண்டபொத்தகம்பஞ் சாங்கமோவெனவா மென்றலும் புகன்மெனப் புகன்றான், ஆண்டநாயகனுந் திதிதினங்கரண மியோகநாளரியவை யெவையும், ஈண்டறிகுவைநீ யென்றலுநவகோள் நிலையெனக்கிசையென விசைப்பான்.**

(இ-ள்.) கலியனென ஆழ்வார் அவனைக் காணுதலும் எழுந்து திருவடிகளை வணங்கி ஸ்வாமிகளது அழகிய திருக்கரத்தில் அழகுபெறும்படி யணிந்த புத்தகமானது பஞ்சாங்கமோ? வென்று கூற, ஆமென்று சொல்லுதலும் (அதனை) யெனக்குச் சொல்லுவீராக வென்று சொல்லினர்; ஆண்டருளிய நாயகனென பெருமானும் திதி தினம் கரணம் யோகம் (இன்னும்) அரியவைகளெவற்றையும நீ யறிவாயே யென்று கூறுதலும் (ஆயினும்) எனக்கு நவக்கோள்களின் நிலையைச் சொல்லுவீராகவென்று கூறப், பெருமான சொல்லுவானாயினன். (எ-று.) (௧௪௫)

**௧௪௬. பதினொரிந்திரியத் தானமெய்யதனுட் பகர்நவக்கிரகமாப பலருந், துதிசெய்யக்கடலிற் றுயிலபரந்தாம னுறைவனத்துளவமா னினதாம், மகிழ்விடுத்தகலா னிறைதலானவையும பதினொராவிடமென வடித்தான், அதிசயித்தடிதாழ்ந் தொருசிறிதடியேற காற்றுணவருள்கவென் றிசைத்தான்.**

(இ-ள்.) பதினொரிந்திரியங்களுக் கிடமான சரீரத்தில், சொல்லும் நவக்கிரகமாகப் பலரும் துதிசெய்யும்படி திருப்பாற்கடலில் அறிதுயிலமரும் பரந்தாமன் உறைந்தருள்வன். தேன்பொருந்திய அழகிய திருத்துழாய்மாலையை யணிந்த அந்தப் பெருமான் உமது உள்ளத்தைவிட்டு நீங்காமல் நிறைந்திருத்தலால் அந்த நவக்கிரகங்களெவையும் பதினொராமிடத்தி லிருக்கின்றன என்று சொல்லியருளினன். (கலியன) அதிசயித்து அப்பெருமானது திருவடிகளை வணங்கிக் கட்டுச்சோற்றில் ஒரு சிறிது அடியேனுக்குக் கொடுப்பீராக வென்று சொல்லினர். (எ-று.)(௧௪௬)

**௧௪௭. விண்டுவுங்கலிய னுடனனைவரையு மிருத்தியப்பொதியுணை விடுத்துப், பண்டுதெண் கடலைக்கடைந்தமுதிமையோர்க் களித்த வப்பான்மைபோற் பகிர்ந்தான், உண்டுவந்தெனையா ளெந்தை நின்பெயரூ ருரையெனவுரைத்துமா லொருவக, கண்டுநங்கடவு ளேயெனவொருபான் கவிதமிழ்க்கலியனும் புகன்றான்.**

(இ-ள்.) பெருமானும் ஆழ்வாருடன் அனைவரையு மிருக்கவைத்து அக்கட்டுச்சோற்றைப் பிரித்து முற்காலத்தில் தெள்ளியகடலைக் கடைந்து தேவர்களுக்கு அமிர்தங்கொடுத்த அந்தத் தன்மையைப்போலப் பங்கிட்டனர். (அவர்கள்) உண்டு சந்தோஷித்து எம்மையாண்ட ஸ்வாமியே! உமது பேரும் ஊரும் சொல்லுவீராக வென்று சொல்ல (அவ்வாறே) சொல்லிவிட்டுப் பெருமான் நீங்கிவிடக்கண்டு "நம்கடவுளே" யென்று ஒருபது தமிழ்க்கவிகள் ஆழ்வாரும் அருளிச்செய்தனர். (எ-று.) (௧௪௭)

கசஅ. இருந்தவப்பொழினீத் திறம்புகான்மலையா றிகந்துபாக வதருக் கேமம், பொருந்தமூதண்ட முகட்டினைபிளந்து திரு வொடும்பொருவிலா வொருமால், இருந்துவாழ்பரம பதத்தினைக் காட்டச சேறல்போற்சேணின்மீத் திகழும், அருந்தவாகிடமாம் வேங்கடாசலத்தி னணிமணிக்கொடுமுடி கண்டான்.

(இ-ள்.) தாமிருந்த அந்தச் சோலையைவிட்டுப் புதறு காடு மலை ஆறு இவைகளைக்கடந்து, பாகவதர்கட்குக் களிப்புப் பொருந்தும்படி பழமையான அண்டமுகட்டைப் பேதித்துப் பெரிய பிராட்டியாரோடு ஒப்பற்ற ஒருவ னுன எம்பெருமான் வீற்றிருந்து வாழும் பரமபதத்தைக் காட்டப்போவது போல், ஆகாயத்தினிடத்து விளங்கும் அரிய தவசிகளுக்கு இடமாகிய திருவேங்கடாசலத்தின் அழகிய மணிகளையுடைய கொடுமுடியைத் தரி சித்தனர். (எ-று) (கசஅ)

கசகூ. அடைந்தவர்க்கமுத முதவலாற்கருட சயிலமாயவிளங்கு கோட் டணிகள், மிடைந்தலத்தலால் விடபவெற்பெனலா யடி யவர்விழிக்குநீள் வேலை, கடைந்தவப்பொருளைக் காட்டியஞ்சன வே தண்டமாயுலகெலாங் கலந்தே, உடைந்தவககடைநாண் மிகுதலாற்சேட வரையதாமோங்கலைக் கண்டான்.

(இ-ள்.) தன்னை யடைந்தவர்களுக்கு மோக்ஷங்கொடுத்தலால் கருடா சலமாய், விளங்கும் சிகரவரிசைகள் நெருங்கிய அந்தத் தகைமையினாலே ரிஷபாத்ரியெனப்படுவதாய், அடியார்கள் கண்களுக்குப் பெரிய சமுத் திரத்தைக் கடைந்த அந்தப்பொருளை (பெருமானை)க் காட்டி (அதனாலே) அஞ்சனாத்ரியாய், உலகமெல்லாம் நிலையழிந்து லயமடைந்த அக்காலத்தில் மிகுந்திருத்தலால் சேஷாத்ரியுமான திருமலையைச் சேவித்தனர். (எ-று.)

கரு0. இந்திரன்முதலா னவர்குழாமுனிவோ ரெண்கணுன்முக னதி யிதழிச், சந்திரன்றதைபொற் சடிலமுத்தலைவேற் சங்கரன் பரவுமத்தரணி, நந்திரவியைநேர் திகிரிவிற்கதைவா ளுந்தகந்தரி த்த நாரணனு, மந்திரத்துயர்பொற் கோபுரந்திருமால் மணிமுடி யாகவுங் கண்டான்.

(இ-ள்.) இந்திரன் முதலிய தேவக்கூட்டங்கள் முனிவர்கள் எட்டுக் கண்களையும் நான்கு முகங்களையுமுடைய பிரமன், கங்கையும் கொன்றை யும் சந்திரனும் பொருந்திய பொன்மயமான சடையும் முத்தலைவேலாகிய சூலமுமுடைய சிவன் இவர்கள் வணங்கும் அவ்வேங்கடாசலத்தை, பா ஞ்சஜந்யம் சூரியனை நிகர்த்த சக்கரம் சார்ங்கம் கதாயுதம் ஒளியுடைய வாள் இவைகளைத் தரித்த எம்பெருமானாகவும், திருக்கோயிலில் உயர்ந்த பொன்மயமான திருக்கோபுரத்தை, அப்பெருமானது இரத்தினமயமான திருமுடியாகவும் கண்ணுற்றனர். (எ-று.) (கரு0)

கருக. பெருகுமானந்தக் கடலினிற்குளித்தான் வருமியோகியர் களைப் பெரியோன், உருகுகாதலினு லழைத்துநீர்காண்மி னெங் தைவாழ்கிரியையென் றுரைத்தான், முருகுவார்பொழிலை யெம் பிரான்முடிக்கே முடித்தபூந்துளவமோ முகிலோ, வருகுவார் பொழிலோ வெனச்சொலிமகிழ்ந்தா ருடினுன்றன்னையு மதியான்,

(இ-ள்) அபிவிருத்தியாகும் ஆநந்தக்கடலிற் குளித்துத் தம்மோடுவரு ம் யோகியர்களைப் பெரியோரான ஆழ்வார், உருகும் ஆசையினாலே அழை த்து, நீங்கள் எம்பெருமான் நித்தியவாசஞ் செய்யும் திருமலையைத் தரி சியுங்கோளென்று அருளிச்செய்து, தேனொழுகும் அவ்விடத்துச் சோலை யை எம்பெருமானது திருமுடியில் முடித்த அழகிய துளவமோ? மேக மோ? மேலுலகினின்று வருமவரான தேவர்களது கற்பகச்சோலையோ? என்று சொல்லி மகிழ்ந்து ஆடித் தம்மையு மறியாதவராயினர். (எ-று.)

௧௫௨. நண்ணினன்வரமா திருப்பதியதனைக் கண்களாலெங்கணு நாடா, மண்ணில்வைகுந்த மிதுகொலோவென்ன வழுத்தினன் மலையைமா தவனாய், எண்ணினனிவரா னிறைஞ்சினன்கிரிவா ழெம்பிரான்றனையுளத் திருததிக், கண்ணிலீர்புளக மொழிதரான் றினமூன் றிருநதனன்செழுந்தமிழ்க் கலியன்.

(இ-ள்). செழுந்தமிழ் வல்லவரான கலியன், நெருங்கிவந்து, பெரு மையுடைய திருப்பதியதனைக் கண்களாலே எவ்விடத்தும் நாடிப் பூமியி னிடத்து வைகுந்தமிதுவோவென்று தோத்திரஞ்செய்தனர். அம்மலையைப் பெருமானாக எண்ணி (அதின்மீது) ஏறாமல் வணங்கினர். அக்கிரியில் நித் தியவாசஞ் செய்யும் எம்பெருமானைத் திருவுள்ளத்தில் வைத்து, ஆநந்தக் கண்ணீரும் புளகமும் ஒழியாதவராய் மூன்றுதினங்கள் இருந்தனர். (எ-று.)

௧௫௩. மணிமுடிமகர குண்டலந்துளவ மலிதொடைமணிதிரு வற்சம், அணிகொள்கேயூரங் கங்கணங்கலைபஞ் சாயுதமலரடி ஞெகிழம், பணிபலதயங்கக் கருடன்மேற்சுனந்தன் குமுதனுதியர் புடை பரவத், தணிவிலாவுவகைச் சதுமுகன்முதலோர் பணிய மால்கலியன்முற் சார்ந்தான்.

(இ-ள்.) அழகிய திருமுடி, மகரகுண்டலம், திருத்துழாய் மிகுந்த திருமாலை, கவுத்துவமணி, ஸ்ரீவற்சம், அழகுகொண்ட கேயூரம், கங்கணம், பொன்னுடை, பஞ்சாயுதங்கள் தாமரைமலர்போன்ற திருவடிகளில் பொ ற்சிலம்பு பல திருவாபரணங்கள் விளங்கவும், சுனந்தர் குமுதர் முதலான வர்கள் பக்கங் ளிலிருந்து துதிக்கவும், குறைவுபடாத சந்தோஷத்துடன் பிரமதேவன் முதலானோர் வணங்கவும், எம்பெருமான் பெரிய திருவடி யின்மீது ஆழ்வாருக்கு முன எழுந்தருளினன். (எ-று.) (௧௫௩)

௧௫௪. நோக்கினன்கலியன் விழிகணீர்பொழியப் புளகமெய்பொ டித்தெழ நுவலும், பாக்கியமெனதே யெனப்புகழ்ந்தாடிப் பாடி னன்பலமுறை பணிந்தான், தேக்கியகருணைக் கடலுமாங்கவனைக் கைகளாற்றைவராச் சிறப்பீந், தாக்கியகனகக் கருடமால்வரைமே லணிமதிற்கோயிலை யடைந்தான்.

(இ-ள்) ஆழ்வார் சேவித்து, திருவிழிகளில் நீர்பொழியவும் புளகம் திருமேனியில் உண்டாகியெழவும், சொல்லப்படும பாக்கியம் என்னுடையதே யென்று புகழ்ந்து ஆடிப்பாடினர்; பலமுறையும் பணிந்தனர். நிறைந்த கருணைக் கடலாகிய பெருமானும், அங்கு அவ்வாழ்வாரைத் திருக்கைக ளாற் றடவி, வைபவங்களை யளித்து, திருவேங்கடாசலத்தின் மீது உண் டாக்கிய பொனமயமான அழகிய மதிலையுடைய திருக்கோயிலை யடைந் தனன். (எ-று.) (௧௫௪)

௧௫௫. அகன்றபின்றிருமா லருச்சனைவடிவை யடிபணிந்தங்குநீத் தடியார்க், கிகம்பரந்தருகார் பேரருளாளக் கடவுளைப்பணிந்தவ ணிகவாச, சகம்பணிந்திடமா நதினனந்தலைவா மூரங்கநாயகன் பதஞ் சார்ந்தே, புகழ்ந்தவனருளா லணிமணிக்கோயிற றிருப் பணிபுரிகுவான் புகுந்தான்.

(இ-ள்.) பெருமான் நீங்கியபிறகு, அவனது அர்ச்சாவதார வடிவத் தைத் திருவடிதொழுது, அங்கு நின்றும் நீங்கி அடியார்களுக்கு இக லோக பரலோக போகபாக்கியங்களை யளிக்கும் மேகம்போன்ற பேரரு ளாளப் பெருமானைச் சேவித்து, அங்கு நின்றும் நீங்கி, உலகத்திலுள் ளோர் பணியும்படி பெருமைபொருந்திய திருககாவேரி நதியின மத்தி யில் வாழும் திருவரங்கநகரப்பனது திருவடிகளையடைந்து புகழ்ந்து, அவனது திருவருளின்படி அழகிய மணிமயமான திருக்கோயிற் றிருப் பணிகளைச் செய்யும்படி பிரவேசித்தனர். (எ-று) (௧௫௫)

வேறு.

௧௫௬. கருங்கலான்மதிலொன்றுங்கோர்மடைப்பளிகருத்திலோகை
நெருங்கலாற்புரியாநெற்சேர்நதித்துறைநெறிசசோபானம்
சுருங்கலாச்சிற்பநீர்மைவழாதமைத்தெவர்க்குந்தோலா
அருங்கலாகன்பின்னான்காமதிலினுக்ககழ்ந்தான்பூமி.

(இ-ள்.) அவ்விடத்தில் கருங்கல்லாலே ஒருமதிலும் ஒரு மடைப்பள் ளியும் திருவுள்ளத்தில் சந்தோஷமதிகரிப்பினாலே செய்து, நெல்லுக் கள ஞ்சியமும் திருக்காவேரிநதியின துறைவழியில் படியும் குறையாத சிற்ப சாஸ்திரமுறைமை தவறாமலமைத்து, அதன்பிறகு எவர்க்குந் தோல்வி யடையாமல் அரிய மலைபோன்ற மார்பையுடைய ஆழ்வார், நான்காவது திருமதிலுக்காகப் பூமியைத் தோண்டினர். (எ-று.) (௧௫௬)

௧௫௭. அவ்வயினிலத்தியோகத்தருந்தவனொருவன்வைக
வெவ்வயிற்கலியன்காணாத்திருப்பணிவிலக்குவான்போன்
றிவ்வயினிருந்தானென்னாவிடுக்கணுற்றிவனையின்னே
செவ்வயின்மொழியானீக்குவாமெனமருங்கிற்சேர்ந்தான்.

(இ-ள்.) அவ்விடத்தில் பூமியில் யோகத்தில் அரிய தவசியொருவரி ருக்கவே, வெவ்விய வேலைத்தரித்த ஆழ்வார் கண்டு, நாம் செய்துவரும் கை ங்கரியத்தை விலக்குமவர்போல இவ்விடததிலிருந்தனரே என்று வருத்த மடைந்து, இவரை இப்போதே செவ்வையான (இதமான) சொல்லினா லே நீக்குவிப்போமென்று அவரிடத்துச் சார்ந்தனர். (எ-று.) (௧௫௭)

௧௫௮. யாவனீபரமயோகத்திருந்தனைபுவிக்கீழிங்ஙன்
மேவவேங்டிமேதென்னவினவலும்விழித்துநோக்கி
ஓவலிறவத்தோன்ஞானத்துணர்ந்திவன்பரகாலப்பேர்த்
தேவனென்றெழுந்துபாதம்பணிந்திவைசெப்பலுற்றான்.

(இ-ள்.) நீர் யாவர்? பூமியின்கீழே உயர்ந்த யோகத்திலிருந்தீரே; இப்படியிருக்கக் காரணமென்ன? என்று கேட்டலும், கெடுதலில்லாத தவ த்தையுடைய அந்த யோகி விழித்துப்பார்த்து, இவர் பரகாலனென்னுந் திருநாமமுடைய தேவனென்று ஞானத்தினாலே யுணர்ந்து எழுந்து, ஆழ் வார் திருவடிகளைப் பணிந்து இவற்றைச் சொல்லத் தொடங்கினர். (எ-று.)

கருகூ. உந்தைவாழ்பதிநூற்றெட்டும்பணிந்துனதுளத்துளானைச்
சிந்தைவைத்திவணியோகத்திருந்தனன்றிருமாலயோகம்
எந்தையினதுனதியோகத்தெய்தினனிடரியோகம்
நிந்தைமேற்சனனயோகமிவையெலாநீத்தேனென்றான்.

(இ-ள்.) உமது ஸ்வாமியான எம்பெருமான் நித்தியவாசஞ் செய்யும் நூற்றெட்டுத் திருப்பதிகளையும் பணிந்து, உமது திருவுள்ளத்தில் எழுந்தருளியிருப்பவனை மனதில்வைத்து, இவ்விடத்தில் யோகத்திலிருந்தேன்; எனது ஸ்வாமியே! ஸ்ரீயப்பதியினது சம்பந்தத்தை இனறு உனது சம்பந்தத்தினாலே யடைந்து, எனது துன்பசம்பந்தமும் மேற்பட்ட நிந்தையையுடைய பிறவிச்சம்பந்தமுமாகிய இவைகளையெல்லாம் ஒழித்தேன் எனறனர். (எ-று.)

கசா0. என்றலுமிமயவெற்பினரசிங்கனிருமையந்நாட்
சென்றறிந்தனையோவென்னவறிகிலன்றிருமாலன்னாய்
இன்றறிந்தனனீகூறப்புதுமையாதெனலுமன்பர்
சென்றடிவணங்கிற்கூடப்பேசுமத்தேவனென்றான்.

(இ-ள்) என்று சொல்லுதலும் "இமாசலத்தில் நரசிங்கப்பெருமான் பெருமையை அக்காலத்தில் அறிந்தீரோ?" எனறு கேட்க, "திருமாலுக்குச் சமானமானவரே! நான் அறியேன், நீர் சொல்ல இன்றுதான அறிந்தேன அங்கு என்ன புதுமை?" யெனறு கேட்டளவில், பரகாலர், "அங்கு அடியார்கள் சென்று அப்பெருமானைத் திருவடிவணங்கினால் அத்தேவன கூடப் பேசுவன" என்றனர். (எ-று.) (கசா0)

கசாக. யோகியவ்வுரையாலார்வந்தழைத்தியானோங்கற்கின்னே
ஏகிலக்கடவுள்பேசுவான்கொலோவென்னோடென்றான்
போகிலங்கவன்பேசானேலென்னதாம்பொய்ம்மையானுண்
டாகியதீமையென்றானடிபணிந்தவனுஞ்சென்றான்.

(இ-ள்.) யோகியானவர், அந்தச் சொல்லாலே சந்தோஷமதிகரித்து, "நான அந்த மலைக்கு இப்போதே செல்லுவேனாயின அப்பெருமான் என்னோடு பேசுவனோ?" என்றனர். "நீர் அங்கு போயின், அப்பெருமான் (உம்மோடு) பேசானாயின் பொய்யாலுண்டாகிய தீமை யென்னைச் சேருவதாகும்" எனறனர். திருவடிபணிந்து அந்த யோகியும் சென்றனர். (எ-று.)

கசாஉ. அடியவர்க்கெளியோன்றானேயாதலாலவன்முற்றோன்றி
முடிவிலாப்பரமன்பேசிமுத்தியுமளித்தானாலாம்
கடிமதின்முடித்துமூன்றாமதினெடுங்காலநீத்த [காணான்.
படியினாற்புதிதாசெய்வான்றொடங்கினான்பசும்பொன்

(இ-ள்.) அடியார்களுக்கு எளியவனாயிருப்பவன் தானொருவனே யாதலால், முடிவில்லாத பரம்பொருளான பெருமான், அந்த யோகியின் முன்னே தோன்றி அவரோடு பேசி மோக்ஷமும் கொடுத்தனன். (பரகாலர் திருவரங்கத்தில்) காவலாயுள்ள நான்காவது திருமதிலை முடித்து, மூன்றாவது திருமதில் நெடுங்காலஞ் சென்றபடியால், அதனை ஜீர்ணோத்தாரணம் செய்யத்தொடங்கினார். அதற்காகப் பொன் இல்லாதவராகி, (எ-று.) (கசாஉ)

க௬௩. கவலையுற்றழகர் நாகையடைந்தனன்கள்வரோடும்
அவணுறைமாந்தர்புத்தனாலயமதனுட்செம்பொன்
தவலறநிறைத்துச்சீனத்தசசனாற்செய்தசூழ்ச்சி
எவனெனத்தெரியாதென்றுதம்மிற்றுமிசைப்பக்கேட்டான்.

(இ-ள்.) வருத்தமடைந்து (தமக்குரிய) கள்வர்களோடு அழகப்பிரானெழுந்தருளியிருக்கும் திருநாகையை யடைந்தனர். அங்கிருக்கும் மனிதர்கள் புத்ததேவனது ஆலயத்தில் செம்பொன்னைக் குறைவின்றி நிரப்பி அதற்கு ரக்ஷகமாய்ச் சீனதேசத் தச்சன் செய்துவைத்த யந்திரத்தின் சூழ்ச்சி எப்படிப்பட்டதெனத் தெரியவில்லையெனத் தங்களிற் றாங்கள் சொல்லக்கேட்டு, (எ-று.) (க௬௩)

வேறு.

க௬௪. எய்தினன்சீனத் தீவைமங்கையர்கோ னெண்குணத்திறையெழிற் கோவில், செய்திடுஞ்சிற்பன் றனையெதிர்தலுநீ யார்பதியாதெனத் திருமால், மைதிகழ்சோலை புடைபயினாகை வளம்பதியேனென மறைதான், பெய்தியநெறியாப் புத்தனாலயம்புக் காருளர்கொல்லெனப் பெரியோன்.

(இ-ள்.) திருமங்கையாழ்வார் சீனத்தீவையடைந்து புத்தனது அழகிய கோயிலையமைதத சிற்பசாஸ்திரியை யெதிர்ப்படுதலும், அவன் நீயார் நினது பதியாதென்று கேட்கத் திருமாலெழுந்தருளி யிருக்கும் மேகந்தவழும் சோலைகள் பக்கத்திற் சூழப்பெற்ற திருநாகையென்னும் வளப்பத்தையுடைய பதியிலிருப்பேன எனறு சொல்ல, அவன், சூழ்ச்சிவைத்தமைத்த யந்திரத்தின் இலக்ஷணத்தை யறிந்து புத்தனது ஆலயத்தில் பிரவேசித்தவர்களுண்டோ? எனறு கேட்கப் பெரியோரான ஆழ்வார், (எ-று.) ()

க௬௫. அறிந்தனரன்றே யதன்வினைத்திறனுங் காடகத்தேவையுங் கவர்ந்தார், செறிந்தவெவ்வினையும் வினைவலார்க்கரிதோ வென்றலுஞ்சிற்பனுந் திகையாப், பறிந்ததோமகுட மிடம்வலந்திரியாப் பத்தொடுநான்குசூத்திரமும், பிறிந்தவோகுறிப்பாங் கிருந்தவாவென்று வியர்த்தலுங்குரிசிலும் பெயர்ந்தான்.

(இ-ள்.) அதன் சூழ்ச்சியின் வலிமையை அப்போதே யறிந்து அங்குள்ள பொன்னாலான புத்ததேவனையும் அபகரித்தார்கள். பொருந்திய எத்தொழிலும் தொழில் வல்லவர்களுக்கு அரிதாகுமோ? என்று சொல்லுதலும், அந்தச் சிற்பசாஸ்திரியும் திகைத்து அதனமகுடம் பறிக்கப்பட்டதோ? இடம்வலமாகத் திரியாமல் குறிப்பாக அங்கிருந்த பதினான்கு சூத்திரங்களும் பிரிக்கப்பட்டனவோ? ஆ! என்று வியர்ப்படைதலும் ஆழ்வாரும் அங்கு நின்றும் மீண்டனர். (எ-று) (க௬௫)

ஆழ்வார், அச்சிற்பனை நோக்கி, நாகப்பட்டணத்தில் புத்தாலயத்தில் பிறர் உள்ளே பிரவேசியாதபடி எப்போதும் சுழன்றுகொண்டிருக்கும் எந்திரம் நிறுத்தப்பட்டு, பொன்னாற் சமைக்கப்பட்டிருந்த புத்தவிக்கிரகம் களவு செய்யப்பட்டதென்று சொல்லவே, சிற்பன், "அது வாழை பெருத்தவூரல்லவோ" என்று சொல்லினனும். பின்னும் அச்சிற்பன் "திருவாரூரில் கமலாலயத்தடாகம் படியமையப் பெற்றதோ" என்று கேட்க, ஆழ்வார்

லும் என்னவே, சிற்பன், "அது வரால்மீன் மலிந்த நாடல்லவோ" என்றுரைத்து, மீண்டும் "திருவரங்கத்தில், கோபுரவாசல் விட்டம் அமையப்பெற்றதா" என்று கேட்க, அமையப் பெற்றது என்று சொன்னதும், சிற்பன், "அந்நாடு பஞ்சு வேளாண்மை யுடையதல்லவோ" என்றனனும். ஆழ்வார் இம்மூன்றுபாயங்களையும் ஆராய்ந்தறிந்துகொண்டு மீண்டுவரும்போது, பாக்கு ஏற்றப்பட்டிருந்த ஒரு மரக்கலத்திலேறி, அம்மரக்கலத்தலைவனை நட்புகொண்டு, அவனிடத்தினின்று ஒரு பாக்கைப் பெற்று, ஒரு பாதியை வாயிலிட்டுக்கொண்டு மற்றொருபாதியை அம்மரக்கலத்திலேயே யிட்டு, "இதை நான் இம்மரக்கலத்தை விட்டிறங்கும்போது கொண்டு போகிறேன்; அப்போது இங்குள்ள வேறுசிலர் தடைசெய்யாதிருப்பதற்காக ஒரு முறி யெழுதிக் கொடுக்க" எனக்கேட்டுக் கொண்டனர். அவ்வாறே அம்மரக்கலத்தலைவன், "நீ இம்மரக்கலத்தை விட்டிறங்கும்போது இதிலிட்ட பாதிப் பாக்கைக் கொண்டுபோக" என்று ஒரு முறி யெழுதிக்கொடுத்தனன். ஆழ்வார் மரக்கலத்தை விட்டிறங்கும்போது அதில் ஏற்றப்பட்டிருந்த பாக்கில் பாதி பாகத்தை வழக்குப் பேசிப் பெற்று, விற்றுப் பொருளாக்கிக்கொண்டு நாகப்பட்டணத்துக்கு வந்தனர். அங்கு புத்தாலயத்தில் சுழன்றுகொண்டிருக்கும் எந்திரத்தில் வாழைமரத்தைக் கொடுத்து நாரிற் சிக்கிக் கொண்டு எந்திரம் வலமிடந்திரியாமல் நின்று போகவே, உள்ளே நின்ற புத்த விக்கிரகத்தைக் களவாடினரெனவும், திருவாரூரில் கமலாலயத்தடாகம் அதிக நீர் சுரப்புடையதாதலாலே, நீருக்கு எதிர் நோக்கிச் செல்லும் பல வரால்மீன்களை அத்தடாகத்தில் விட்டு, அவைகள் ஒன்றின்பின்னொன்றாக நீர்சுரப்பின் வழியே சென்று துவாரங்களை யடைத்துக்கொண்டதனால், நீர்வருகை தட்டுப்பட்டு நிற்கவே, படிகளை யமைத்து அந்நாட்டு அரசனிடத்துத் தக்க திரவியம் பெற்றனரெனவும், திருவரங்கத்தில் வாசல் விட்டத்தைப் பஞ்சுப்பொதியை யடுக்கி அதன் மீதேற்றி யமைத்தனரெனவும் கர்ணபரம்பரையாகக் கேள்வி.

**௧௬௬. குறுகினனுகை வளம்பதிகடிதிற் கங்குலிற்புத்தனார் கோவில், உறுபொருள்கவர்வான் கள்வரோடணுகி யிவர்ந்தனன்மைத்துன னொடுமாங், கிறுகிநின்றதுசூத் திரமெனத்திறவா மைத்துனனிசைப்பவீ ரைந்தாத், தெறுகதிர்த்திகிரி யரியருள்வரத்தாற் பனுவல்சொற்றெளிதினிற் றிறந்தான்.**

(இ-ள்.) திருநாகை வளம்பதியை விரைவாயடைந்து புத்தன் கோவிலில் சேமித்துவைத்த பொருளை அபகரிக்கும்படி இரவில் கள்வர்களோடு சேர்ந்து தனது மைத்துனரோடும் கோயிலின் மீது ஏறினர். அங்கு சூத்திரம் வலிந்து நின்றது என்று மைத்துனர் திறந்துபார்த்துச் சொல்ல, நிலைபெற்ற பிரகாசமுடைய திருச்சக்கரமணிந்த பெருமான் அருளிய வரத்தினாலே ஆழ்வார், பத்துச் செய்யுட்களை யருளிச்செய்து எளிதில் திறந்தனர். (எ-று.) (௧௬௬)

**௧௬௭. வாமனர்கோயின் மகுடசூத்திரத்தை வகுத்தசிற்பன்புகன் மரபே, தேமலர்த்தாரோன் றிறந்துமைத்துனனைத் தொடர்வழி யதனினுட் செலுத்தச், சேமமோடிழிந்து புகன்முறைப்படியே சிரியோன் மேலெழத்தூக்கி, ஏமமார்புத்தன் றனையளித்துவகை யெழுந்திடவிம்மின னுடலம்.**

(இ-ள்.) புத்தனது கோவிலின் மகுடத்தையும் சூத்திரத்தையும் அதனைச்செய்த சிற்பசாஸ்திரி சொன்னபடியே, தேன்பொருந்திய மலர்மாலையணிந்த ஆழ்வார், திறந்து, தமது மைத்துனனைச் சங்கிலிவழியாகச் செலுத்த, இன்பத்துடனிறங்கி, சிறப்புடையவரான அவர், ஆழ்வார் சொன்னபடியே பொன்னுலாயிருக்கும் புத்ததேவனை மேலேயெழத் தூக்கிக் கொடுத்துச் சந்தோஷ மதிகரிக்கவே சரீரம் பூரித்தனர். (எ-று) (௧௬௭)

௧௬அ. இழிந்தமைத்துனன்றன் பருத்தலாலவனை யிசைவினாலெடுக்கவு மியலாச், கழிந்தகாதலினர் சிரக்குறிப்பதனாற் காண்குவர்களெனக் கவரா, வழிந்திழிவிழிநீ ருடன்செலத்திருமால் கருடனான்மரித்தவன் றனக்குப், பொழிந்தமிர்தெழுப்பிக் கொணர்ந்தனனிவனுந் திருக்கணங்குடியினுட் புகுந்தான்.

(இ-ள்.) உள்ளே யிழிந்த மைத்துனர் சரீரம் பூரித்ததனால், அவரை உபாயத்தினாலே எடுக்கவுமியலாமல், ஒழிந்த ஆசையினராகிய ஆழ்வார், சிரக்குறிப்பினாலே கள்வை யறிந்துகொள்வார்களென்று, மைத்துனரது சிரத்தை யறுத்தெடுத்துக்கொண்டு வழிந்திறங்குங் கண்ணீருடன் செல்ல, எம்பெருமான் இறந்தவருக்குக் கருடாழ்வானைக்கொண்டு அமிர்தத்தைச்சொரிந் தெழுப்பிக்கொண்டு வந்தனன். ஆழ்வாரும் திருக்கண்ணங்குடி பிரவேசித்தனர். (எ-று.) (௧௬அ)

௧௬௯. அலரியுங்குணபா லணுகலாற்கங்கு லகறலுமாலிநாட் டரசும், புலரிவந்தடைந்த தெனவொருசெறுவி னளற்றினுட்புத்தனைப் புதையா, மலரிவர்முகத்தோ டிருப்பவச்செறுவின் வளங்கொள்வான்வித்திட வரலும், நிலமெனதுழவ நீயுழேலென்றுத் தடுத்தனனிருபனு ணையினே.

(இ-ள்.) சூரியனும் கிழக்குத்திக்கில் வரலாலே இரவுபோதலும், திருவாலிநாட்டரசராகிய ஆழ்வாரும் விடியல் வந்துவிட்டதென்று ஒரு கழனியின் சேற்றில் புத்தனைப்புதைத்து மலர்ந்த முகத்தோடிருக்க, அக்கழனியின் வளங்கொள்வோனான உடையவன் வித்துவதற்காக வருதலும், உழவனே! இந்த நிலம் என்னுடையது; நீயுழாதே என்று ராஜாக்கினையாகத் தடுத்தனர் திருமங்கை மன்னன். (எ-று.) (௧௬௯)

௧௭0. மற்றவன்றிகைப்புற் றெம்புலமனேக வருடமாமகிதல மறியும், கற்றனைகொல்லோ வஞ்சநீயாவன் காட்டுதிஞாபக மெனலும், கொற்றவன்றன்பாற் பற்றியீர்த்தவனைக் கொணர்ந்துமுன் கொண்டன்மே னியன்பால், பெற்றனம்புவன மளந்தஞான்றதற்குப் பிறிதுசான்றுண்டெனப் பின்னும்

(இ-ள்.) அக்கழனிக்குரியவன் திகைத்து, இது எமது புலமென்பதை அநேகவருஷகாலமாக உலகத்திலுள்ளோ ரறிவார்கள். வஞ்சனையைக் கற்றுக்கொண்டு வந்தாயோ? நீயாவன்? இதற்கு ஆதாரவு எடுத்துக்காட்டுவாயாக எனலும், ஆழ்வார் அவனை அரசனிடத்துக்குப் பற்றி யிழுத்துக் கொண்டு வந்து, நாம் முற்காலத்தில் மேகவண்ணனான பெருமான் பூமியையளந்தபோது அவரிடத்தில் பெற்றுக்கொண்டோம், அதற்கு வேறு சாக்ஷியுண்டென்று சொல்ல, பின்னும், (எ-று.) (௧௭0)

**௧௭௧. சாதனமிதற்குண் டெனவிசைத்தவனை முன்னைநெற்றரு கெனத் தரணி, ஓதநீர்படியுங் காறுமசசெருவி லுழுதுவெல்வழக் குரைத் துடலாப, போதவிழசோலைக் கண்ணினின்றோன்றந் தரு ளனமயின்றுயர் போதி, நாதனைக்கைக்கொண் டல்லின்மாலரங்க நாதனையுட்கொளா நடந்தான்.**

(இ-ள்.) இதற்குச் சாதனமுண்டென்று சொன்ன அக்கழனிக்குரியவனை இதற்குமுன் பயிரிட்டெடுத்துக்கொண்ட நெல்லைக் கொடு என்று சூரியன மேற்கடலிற்படியுமளவும் அக்கழனியில் பிரவேசியாமற் செய்து, வெல்வழக்குரைத்துச் சண்டைசெய்து, மலர்கள் மலரும் சோலையிலிருந்த எம்பெருமான் தந்தருளிய உணவையுண்டு, உயர்ந்த அரசமரத்தின் கீழமர்ந்த புத்ததேவனை எடுத்துக்கொண்டு அன்று இரவில் பெருமை பொருந்திய திருவரங்கத்தெம்பெருமானைத் திருவுள்ளத்திற் கொண்டு நடந்தனர். (எ-று.) (௧௭௧)

இந்நிலம் இப்போதும் ஒருவரும் உழுது பயிரிடாமலே யிருக்கிறது.

**௧௭௨. ஆங்கவன்பின்னர் கண்ணைமால்கணைவிற் பிடித்துவானவர் மறை யறியாப், பூங்கழல்வருந்த நடத்தலுங்கலியன் கண்டுநீயா ரெனப் புயலுந், தேங்கமழ்பொழில்சூழ் திருக்கண்ணங்குடியிற் காவலனெனத்தமிழ் திருமாற், கோங்கயிலவேலான் விண்டுபத்தரி வாழ் கண்ணமங்கையினைவந் துற்றான்.**

(இ-ள்.) அவருக்குப் பின்னே திருக்கண்ணங்குடியி லெழுந்தருளிய பெருமான், பாணமும் வில்லும் கையிற்கொண்டு தேவர்களும் வேதங்களும் அறியாத அழகிய திருவடிகள் வருந்தும்படி நடந்துவருதலும், அதனை ஆழ்வார் கண்டு நீ யாரென்று கேட்க, பெருமானும் வாசனைகமழும் சோலைகள்சூழ்ந்த திருக்கண்ணங்குடியிலிருக்கும் காவலாளனென்று சொல்லப், பெருமானுக்கென்று பத்துத தமிழ்ப்பாடல்கள் அருளிச்செய்து பெருமான் நித்தியவாசஞ்செய்யும் திருக்கண்ணமங்கையை வந்தடைந்தனர். (எ-று.) (௧௭௨)

**௧௭௩. அத்தலத்தாழி மாதவனெதிர்வந் தழைப்பவேற்கலியனு மன்பாற், பத்தராவிபபேர் புகன்றுசெந்தமிழாற் பரவினன்விடை கொளாப் பரமன், சுத்தமாஞ்சாரப் பதியடைந்தரிவாழ் சங்கம புரத்தினைத் துதியா, வித்தகவிராம வடிவினைப்பணிந்தாங் கரங்க மேமேவினன் வெய்தின்.**

(இ-ள்.) அத்தலத்திலிருக்கும் திருச்சக்கரந்தரித்த பெருமான் எதிரில் வந்தழைக்க வேலேதரித்த ஆழ்வாரும் அன்போடு பத்தராவியென்னும் திருநாமமருளிச்செய்து செந்தமிழினாலே துதித்து விடைகொண்டு பரமன் எழுந்தருளிய ஸாரக்ஷேத்திரத்தை அடைந்து, அரி நித்தியவாசஞ்செய்யும் சங்கமபுரத்தைத் துதித்து, ஞானவடிவமான சக்ரவர்த்தித் திருமகனது திவ்வியமங்கள விக்கிரகத்தைப் பணிந்து விரைவாகத திருவரங்கத்தையடைந்தனர். (எ-று.) (௧௭௩)

**௧௭௪. தங்கசாலையினோர் சிறுவிரணிறுவித் தகர்த்தபுத்தனைப் பொருள் சமைத்தே, செங்கண்மான்மூன்று மதின்முடித்தைந்தாங்**

திருமதில்சிற்பநூன்முறையே, அங்கவனமைப்பா னளந்தநூறொ
ண்ட ரடிப்பொடிமடத்தின்மே லனுகக், கொங்கலர்த்தொடை
யல் வயிணவன்மனேமே னடந்தென்றலுந்துயா கொள்ளா

(இ-ள்.) தங்கசாலையில் ஒரு சிறுவிரலை நிறுத்திக்கொண்டு சேதித்த புத்தனை (பொன்னாலமைத்த புத்தவிக்கிரகத்தை) பொருளாகச் செய்து, சிவந்த திருக்கண்களையுடைய அரங்கநாதனது மூன்றும் திருமதிலை முடித்து, ஐந்தாந் திருமதிலைச் சிற்பசாஸ்திர முறைப்படியே அவ்விடத்தில் நிருமிப்பதற்காக அளந்த நூலானது தொண்டரடிப்பொடியாழ்வார் மடத்தின் மேல் சேர, வாசனை பொருந்திய மலர்மாலையணிந்த வைஷ்ணவரது திருமனையின்மீது சென்றதென்று சிற்பிகள் சொல்லுதலும் ஆழ்வார் துயரங்கொண்டு, (எ-று) (௧எ௪)

௧எ௫. ஆதிநாட்புராணந் தானுமைக்கிருமூன் றயுதமாலருச்சனை
செயலின், கோதில்பாகவத ரருச்சனையொருநாட் புரிதல்சால
பென்றதுட் குறியா, வேதியோன்றொண்ட ரடிப்பொடிமனையுள்
ளாகவேவிலக்கியம் மதிலைப், பேதியாத்திகிரி வரையினுமியாணர்
பெறவினிதிழைத்தனன் பெரியோன்.

(இ-ள்) முற்காலத்தில் திருவரங்கத்துக்குப் புராண மருளிச்செய்த வரான சிவபெருமான், பார்வதிதேவியாருக்கு, அறுபதினாயிரமுறை பெருமானை யருச்சிப்பதினும் குற்றமற்ற பாகவதாராதநத்தை ஒருநாள் செய்தல் சிறப்புடையதென்று சொல்லியருளியதைத் திருவுள்ளத்திற் கொண்டு, பிராமணோத்தமரான தொண்டரடிப்பொடியாழ்வாரது திருமாளிகை உள்ளேயாகும்படி விலக்கி அந்தமதிலைப் பேதிக்கப்படாத சக்கிரவாளகிரியினும் அழகுபெறும்படி நன்றாகச் செய்தருளினர் பெரியோரான ஆழ்வார். (எ-று.)

௧எ௬. அம்மரபலங்கற் றொழின்முனியறிந்தாங் கதிசயித்தலங்கலு
ரரியுஞ், செம்மணிப்பிடிபொற் கருவியைப்பரகா லப்பெயர்விதித்
தருட் டிருமாற், கிம்மகிதலத்து ளிலனேரடியா ரிலரெனப்
புகழ்ந்து வீற்றிருந்தான், விம்மணித்திரடோட் கலியனுந்திருமா
லிருப்பணிவெறுக்கலா விருப்பான்.

(இ-ள்.) அவ்விதத்தை அங்குத் திருமாலை கைங்கரியஞ்செய்யும் மகாசீலரான தொண்டரடிப்பொடியாழ்வார் அறிந்து அதிசயித்து, திருமாலைக்கு நார் அரியும் செம்மணிமயமான பிடியையுடைய பொற்கருவிக்கு (கத்திக்கு) பரகாலனென்னுந் திருநாமமளித்து, அருளையுடைய பெருமானுக்கு இந்தப்பூமியில் இவர்க்குச் சமானமான அடியார்கள் இல்லையென்று புகழ்ந்து எழுந்தருளியிருந்தனர். அதனாலே பூரிக்கும் மணிகளணிந்த திரண்ட தோள்களையுடைய ஆழ்வாரும் பெருமானது கைங்கரியத்தை வெறுக்காத விருப்பத்தால், (எ-று.) (௧எ௬)

௧எஎ. கிதிகரத்தொழியச் சிற்பரைவிளியா நீவிரோமடைப்பளிமொ
ற்சேர், மதிதவழ்சிகர கோபுரங்கடனுய் வகுக்கினுன்மறைக்குநா
யகனுங், கதிநுமக்கருள்வான் பொருளியானனைத்துந் தருவனென்
றலுமவர் கடிதின், விதிதனக்கரிதா யவையையம்முறையே குறை
வுறுதழகுற விதித்தார்.

(இ-ள்.) பொருள் கைகளில் இல்லாதாகவே, ஆழ்வார் சிற்பாகளை யழைத்து, நீங்களோ திருமடைப்பள்ளி திருநெறசேர் சந்திரன் தவழும் சிகரத்தையுடைய திருக்கோபுரம் இவைகள் கட்டுதச் செய்வீர்களாயின், நான்கு வேதங்களுக்கும் நாயகனான பெருமானும் உங்களுக்கு மோக்ஷமருளுவன்; பிறகு யான் பொருள் அனைத்தையும் தருவேன் என்று சொல்லுதலும், அவர்கள் விரைவாகப் பிரமனுக்கும் செய்வதற்கரிதானவைகளை, ஆழ்வாரருளிய முறைப்படியே குறைவுபடாமல் அழகு பெறும்படி செய்தார்கள். (எ-று.) (௧௭௭)

௧௭அ. சிற்பர்கம்மியர்கை வினையினோரவன்பாற் சென்றுநின்றிருப்பணி யனைத்தும், அற்பகலகலா தணிபெறவமைத்தே மாங்கதன் றகைமைபா ரதனில, விற்பரகால நீயலாலயலோ ரறிகலாரொனப் பல விளம்பிப், பொற்பமைபுயததா யெமதுபொன்றருவான் புரிகுதியருளெனப் புகன்றா.

(இ-ள்.) சிற்பர்கள், கம்மாளர்கள், கைத்தொழிலாளர்கள் இவர்கள் ஆழ்வாரிடத்துச்சென்று பொலிவமைந்த புயத்தையுடையராய வில்லைத் தரித்த பரகாலரே! உமது கைங்கரியங்களெவற்றையும் இரவும் பகலும் விடாமல் அழகு பெறும்படி நிருமித்தோம். அதன் பெருமையைப் பூமியினிடத்தில் நீவிரன்றி வேறொருவர் அறியமாட்டார்கள்: என்று பலவறறைச சொல்லி எங்களுக்குரிய பொன்னைத் தருவதற்காக அருள்செய்வீராக வென்று சொல்லினர். (எ-று.) (௧௭அ)

௧௭௯. ஆயசிற்பரைவெள் ளறைபபொருடருவ னெனப்புகன்றுழந்துகாவேரி, மேயவோரிடத்திற் கொடுசெலாக்கவிழ்த்து விண்டுவைவிளித்திவர்க கெந்தாய், தூயநின்பதமே கொடுத்தியென்றலுஞ்சங் காழியோன்கருடன்மேற் றோன்றாச், சேயதாம்பரம பதமவர்க்களித்தான் கலியனும்பதியினைச சோந்தான்.

(இ-ள்.) இப்படியான சிற்பசாஸ்திரிகளைத் திருவெள்ளறையில் பொருள் தருவேனெனச் சொல்லித் திருக்காவேரி ஆழ்ந்திருக்கும் ஓரிடத்திற் கொண்டு சென்று கவிழ்த்துவிட்டுப் பெருமானைக் கூவியழைத்து எனது ஸ்வாமியே! இவர்களுக்குப் பரிசுத்தமான உனது திருவடிகளையே கொடுப்பாயாக என்று சொல்லுதலும் சங்கு சக்கரங்களை யணிந்த பெருமான் திருவடியின்மேல் தோன்றி அருமையான பரமபதத்தை அவர்களுக்கு அளித்தனன். ஆழ்வாரும் தமது பதியினையடைந்தனர். (எ-று.) (௧௭௯)

௧அ0. உரகையம்பதியோர் புத்தனைக்காணு ரடிச்சுவடொருவுறாதுங்கி, அரவணைத்துயின்மா லரங்கமுற்றவனைப் பற்றியெங் கடவுளை யல்லின், கரவினிற்கொணர்ந்தா யெனலுநான்கள்வனலனொருபெரியவன் கரத்தே, விரவியுற்றதுநும் பொருளதுகாட்டத் தருதிர்பொன்னெனக்கென விரித்தான்.

(இ-ள்.) நாகபட்டணத்திலிருப்பவர்கள், புத்தவிக்கிரகத்தைக் காணமல் அடிச்சுவடு தவறாமல் நடந்து, ஆதிசேஷசயநத்தில் அறிதுயிலமரும் பெருமானது திருவரங்கத்தை யடைந்து, ஆழ்வாரைப்பற்றி, எமது கடவுளை இரவில் களவு கொண்டுவந்தனையேயென்று சொல்ல, நான் கள்வனல்லேன்; உங்கள் பொருள் ஒரு பெரியவர் கையில் பொருந்தியிருக்கிறது; அதைக் காட்ட எனக்குப் பொருள் கொடுப்பீர்களாக என்று அருளினர். (எ-று.) (௧அ0)

௧அ௧. வஞ்சமில்கலியன் புகன்முறையவர்பொன் வழங்குவான் மதித்தன ரிவனும், எஞ்சலினுமது பொருள்சிறுவிரலிற் குறை யறக்காட்டுவே னென்று, விஞ்சலின்மனத்தார் முறிகொடுத்தவர் கைப் பொருள்கவர்ந்தச்சிறு விரலே, வெஞ்சமர்புரிவேற் கரத்தி ஞற்காட்டி நகைப்பமற்றவர்களும் வெகுண்டார்.

(இ-ள்.) வஞ்சனையில்லாத ஆழ்வார் சொன்னபடியே அவர்கள் பொன் கொடுக்கும்படி உடன்பட்டனர். ஆழ்வாரும் குறைவில்லாத உங்கள் பொருளை சிறுவிரலிற் குறைவில்லாமல் காட்டுவேனென்று ஞானமில்லாத மனத்தையுடைய அவர்களுக்கு முறிகொடுத்து, அவர்கள் கைப் பொருளைப் பெற்றுக்கொண்டு, அந்தப் புத்தவிக்கிரகத்தின் சிறுவிரலை வெவ்விய போர்செய்யும் வேலைத்தரித்த கையினாலே காட்டி நகைக்க, அவர்களும் கோபித்து, (எ-று.) (௧அ௧)

௧அ௨. அவ்வயினவர்க ளொடுமிகல்புரியா வபயனையணுகியவ் வழக்கை, எவ்வமில்கலியன் புகலமற்றவரு மிசைப்பநூன்முறை தவா விறையுந், தெவ்வடுகலியன் றனக்கிதுதகவன் றென்றலுந் திருவொடும் பணிக்கே, பவ்வமீத்துயின்மான் முப்புராதியரைப் பவுத்தனாய்ப்படிவெடுத் தழித்தான்.

(இ-ள்.) அவ்விடத்தில் அவர்களோடு சண்டைசெய்து சோழனை யடைந்து அந்த வழக்கைத் துனபமற்ற ஆழ்வார் சொல்ல, அவர்களும் சொல்ல, மநுநூல்முறை தவறாத அரசனும், சத்துருக்களை வெல்லும் ஆழ்வாருக்கு இது தகுதியன்று என்று சொல்லுதலும், ஆழ்வார், பெரியபிராட்டியாரோடு ஆதிசேஷசயநத்தில் திருப்பாற்கடலின்மீது அறிதுயிலமரும் பெருமான் முப்புரத்திலுள்ள அசுரர்களைப் பவுத்தனாக உருவமெடுத்து அழித்தனன். (எ-று.) (௧அ௨)

௧அ௩. ஆதலாற்சுருதிக் கயலதாஞ்சமயத் தவர்க்குநீயருளுளத் தமைத்தே, ஓதலாகாதீண் டிவர்களோடெனைநாற் றருக்கமோதிட் விடுத் துடைந்தோர், ஏதமாராய்ந்து களைதிவென்றுரைப் பரந் தெனவிறைவனு மியைந்தான், போதமார்கலியன் புத்தரைத்தொலைத்தா னிருபனுங்கலியனைப் புகழா

(இ-ள்.) ஆகையாலே வேதத்துக்குப் புறம்பான சமயத்தர்களான பவுத்தர்களுக்கு நீ உள்ளத்தில் அருள்கொண்டு சொல்லலாகாது; இங்கு இவர்களோடு என்னைச் சாஸ்திரவாதம் செய்யவிடுத்து ஜயித்தவர்களை ரக்ஷித்துத் தோற்றவர்களை அவர்கள் குற்றத்தை விசாரித்து நீக்குவாயாக என்று சொல்ல, அரசனும் அதற்கு இசைந்தனன். ஞானமுடைய ஆழ்வார் புத்தர்களை (வாதித்து)த் தோற்பித்தனர். அரசனும் ஆழ்வாரைப் புகழ்ந்து, (எ-று.) (௧அ௩)

௧அ௪. வாரணங்கவிகை சிவிகைவெண்கவரி மணியணிமுதலிய வரிசை, பூரணவுவகை யுடனளித்தவன்மேற் புரியிகற்புத்தரைத் தொலைத்தான், நாரணனடிமைக் கலியனும்விடைகொண் டலகிறு வலரொடு நடந்தான், ஆரணம்பரவ வரவணைத்துயின்மா லரங்க மாநகரினை யடைந்தான்.

(இ-ள்.) யானை குடை. சிவிகை வெண்சாமரை மணிமயமான ஆபரணங்கள் முதலிய வரிசைகளைப் பூரணமான சந்தோஷத்துடன் கொடுத்து, அவர்மீது போர்புரியும் புத்தர்களைத் தொலைத்தான். ஸ்ரீமந்நாராயணனுக்கு அடிமையான ஆழ்வாரும் விடைகொண்டு கணக்கற்ற நாவலர்களோடு நடந்து வேதம் துதிக்க ஆதிசேஷசயநத்தில் அறிதுயிலமரும் பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவரங்கமாநகரத்தை யடைந்தனர். (எ-று.) (௧௮௪)

**௧௮௫. பரமதவுழிஞை பறித்தெறிகொடுங்கால படியினற்கவியினோர் பணியும், வரகவிநிபுண னெனவிருதோங்க வருபரகாலனை வழிக்கே, சரவணபவன துருவெனநவிலுஞ் சைவசம்பந்தன்முத்தமிழின், விரகனென்றிசைகரும் விருதினொடெதிரத் தழுவினரிருவரும் விருப்பால்.**

(இ-ள்.) பிறமதங்களாகிய சிறுபூளைகளைப் பறித்தெறியும் கொடிய காற்று, பூமியில் நாலுகவி வல்லவர்கள் பணியும் வரகவியாகிய நிபுணர் என்று விருதாவளி ஓங்கும்படிவரும் ஆழ்வாரை, மார்க்கத்தில், சரவணபவராகிய சுப்பிரமணியரது அவதாரமென்று சொல்லும் சைவசமயாசாரியராகிய சம்பந்தமூர்த்தி முத்தமிழ்விரகர் என்று சொல்லும் விருதாவளியோடு எதிர்ப்பட, ஆழ்வாரும் சமபந்தமூர்த்தியும் விருப்பத்தோடு (ஒருவரை யொருவர்) தழுவிக்கொண்டனர். (எ-று.) (௧௮௫)

**௧௮௬. முத்தமிழ்விரகனெனும்பரகாலன் றனையவன்முறைமுறை துதியா, எத்தவமபுரிந்தே னின்னையான்காண்டற் கீண்டென வெனதுபுன் கவிதை, வித்தகனீகேட் டிடவுநின்கவிதை வினவவும்விரும்பினே னென்றான், அத்தகவாரவ மெனக்குநின்பாலென் றருட்பரகாலனு மறைந்தான்.**

(இ-ள்.) முத்தமிழில் ஞானமுள்ளவரென்று சொல்லும் ஆழ்வாரைச் சம்பந்தமூர்த்தி முறைமுறையாகத் துதித்து, இவ்விடத்தில் உம்மை யான் காண்பதற்கு எந்தத்தவஞ் செய்தேன் என்று சொல்லி, எனது புன்கவிதைகளை ஞானமுள்ளவரான நீவிர் கேட்கவும், உமது கவிகளை நான் கேட்கவும் விருப்பமுற்றேன் என்றுரைத்தனர். அத்தன்மையான விருப்பம் உம்மிடத்தில் எனக்குமுண்டென்று கிருபையோடு கூடிய ஆழ்வாரும் சொல்லினர். (எ-று.) (௧௮௬)

**௧௮௭. யானமாகாழிப் பதியில்வந்தொருநா ளிருந்துநின்பதிக்ககல் கென்று, ஞானசம்பந்த னவின்றனன்வருந்தக் கலியனுநாரண னல்லால், வானவர்சுவர்க்கம் வரினுமாங்கதனுள் வருவதின் றென்னவு மவனுஞ், சானகிகணவ னரக்கரைப்பொருவான் சார்ந்தநாட்டரித்தன னெமதூர்.**

(இ-ள்.) தோணிபுரமென்னும் பெருமைபொருந்திய சீகாழிப்பதிக்கு வந்து ஒருதினந் தங்கி உமது பதிக்குத் திரும்புவீராகவென்று ஞானசம்பந்தமூர்த்திகள் சொல்லி வருந்த, ஆழ்வாரும் ஸ்ரீமந்நாராயண னிடத்தன்றித் தேவர்கள் சுவர்க்கம் வந்தாலும் அதில் வருவதில்லை என்று சொல்லுதலும், சம்பந்தமூர்த்தியும், ஜானகி கணவனை ஸ்ரீராமபிரான் அசுரர்களோடு யுத்தஞ்செய்வதற்காக வந்தகாலத்தில் எமது ஊரில் தங்கினர். (எ-று.)

௧அஅ. அந்தநாளிற்சீ ராமவிண்ணகர மதன்பெயர்கலியுக மத னில், வந்தநாமஞ்சீ காழிமுன்றிருமால் வாழ்திருப்பதியென மகி ழ்ந்தே, சந்தமார்துளவத் தொடைக்கலியனும்போந் திருத்தலுஞ் சைவசம் பந்தன், இந்தமாநகரின் டுவரிவாழ்பணில மெய்தவோர் கவிநவில் கென்றான்.

(இ-ள்.) அக்காலத்தில் சீராமவிண்ணகர மென்று அதன் பெயராயிரு ந்தது; கலியுகத்தில் வந்தபெயர் சீகாழியென்பது; முற்காலத்தில் ஸ்ரீயப் பதி நித்தியவாசஞ்செய்யும் திருப்பதியாயிருந்ததென்று சொல்ல, அழகு பொருந்திய துளவமாலையணிந்த ஆழ்வாரும் மகிழ்ச்சியடைந்து (அப்படி யே) அங்குப் போயிருத்தலும், சைவசமயாசாரியரான சம்பந்தமூர்த்தி இந்தப்பெரிய நகரத்தில் சமுத்திரத்திலிருக்கும் சங்கு வரும்படி ஒருகவி சொல்லுவீராக வென்றனர். (எ-று.) (௧அஅ)

வேறு.

௧அ௯. நவிறலுமாங்கதுகேட்ட பரகாலனெம்பெருமான் ஞாங்க ரல்லாற், கவிபுகலேனென்றனனுண் டவனயன்மாணுக்கனெழாக் கனன்றுநீயே, புவிபுகழுமரங்கேச னின்றிருமுன்றிரைப்பணிலம் பொருந்தயானே, சவிதருஞானக்கவிதை புகல்வலெனவவன் முனிவைத் தணித்துச்சொல்வான்.

(இ-ள்.) சொல்லுதலும், அதைக்கேட்ட பரகாலர் எம்பெருமானிடத் திலல்லாது (வேறொருவர் முன்) கவிபாடமாட்டே னென்றனர். அவ் விடத்தில் ஆழ்வாரது சமீபத்திலிருந்த மாணுக்கரெழுந்திருந்து கோபித் து, நீவிரே பூமியிலுள்ளோர் புகழும் திருவரங்கேசராவீர்; உமது திரு முன்பே சமுத்திரத்திலுள்ள சங்கம் வரும்படிக்கு நானே செவ்வையா ன ஞானமுள்ள கவியைச் சொல்லுவேன் என்று கூற, (ஆழ்வார்) அவர் கோபத்தைத் தணித்துச் சொல்லுவார். (எ-று.) (௧௮௯)

௧௯0. நீசினவறிருஞான சம்பந்தன்மிகப்பெரியோ னெடுநீர்சூழ் ந்த, காசினியிலவனெதிர் கவிபுகவிஞன்புகறல் கடனுமென்னுப், பேசிநகரிதனுளருச் சனைவடிவாமனையுறுறை பெருமானேனும், ஆசினமகவிக்கழகாங் கிடைக்கிலெனச்சிலதர்நக ரனைத்துந்தோர்ந் தார்.

(இ-ள்.) நீ கோபியாதே; திருஞானசம்பந்தமூர்த்தி மிகப்பெரியோர்; சமுத்திரஞ் சூழ்ந்த பூமியினிடத்தில் அவருக்கெதிராகக் கவிசொல்லவே ண்டுமாயின் நான் சொல்லுதல் கடமையாகும் என்று அருளிச்செய்து, இந்நகரத்தில் அர்ச்சாரூபமாகக் கிருகத்திலெழுந்தருளி யிருக்கும் பெருமா னுயினும் சீக்கிரமாகக் கிடைத்தால் நமது கவிக்கு அழகாகுமென் றருளி ச்செய்ய, ஏவலாளர்கள் நகரமெல்லாம் (சென்று) தேடினார்கள். (எ-று.)

௧௯௧. சிலதர்திரிந்தவ்வூரிற் பாசுபதர்ல்லாது திருமானேயர், இலரதனுட்பரந்தாம னிருப்பதெவாறென்றலுமாங் கிருந்துஞா னத், தலகிறவப்பரகால னெருமுதியாளகக்குழிசி யரியைக்கா ணுக், குலவுமதம்கடையாளங் கூறியிவண்டிருமாலைக் கொணர்மி னென்றான்.

(இ-ள்.) ஏவலாளர்கள் திரிந்து, அவ்வூரில் பாசுபதர்களாகிய சைவர்களல்லாது எம்பெருமான் பக்தர்களான வைஷ்ணவர்கள் இலர் (ஆனபோது) அவ்வூரில் பரந்தாமன் எழுந்தருளியிருப்பது எவ்வாறு என்று சொல்லுதலும், அங்கிருந்தபடியே அளவற்ற தவத்தையுடைய ஆழ்வார் தமது ஞானக்கண்ணால் ஒரு முதியவளது அகத்தில் ஒரு பானையில் பெருமானைக் கண்டு, பொருந்திய அதற்கு அடையாளமு முரைத்து இங்கு அப்பெருமானைக் கொண்டுவாருங்க ளென்றனர். (எ-று.) (௧௧௧)

௧௧௨. உழையர்கடிதவணேகிக் கொணர்தலுமாங்கெழுந்துவகையுளத்திற்பொங்க, மழைபொருவுகொடைக்கலியன் மகுடபந்தக்கவியொருபான் மலர்ப்பூங்கைக்கே, குழைதரித்தோன்றனைப்புகழக் கடற்பணிலந்தவழ்ந்தணுகுங் காட்சிகாணு, விழைவினெழிற்சம்பந்த னெழுந்துதழீஇநீபுவிவாழ் விண்டுவென்றான்.

(இ-ள்.) ஏவலாளர்கள் விரைவாக அவ்விடத்துக்குப் போய்க் கொண்டுவருதலும், மேகத்தையொத்த ஔதாரியத்தையுடைய ஆழ்வார் எழுந்து, திருவுள்ளத்தில் சந்தோஷமதிகரிக்க, ஒருபது மகுடபந்தக்கவியால் மலர்போன்ற அழகிய திருக்கைகளில் புல்லாங்குழலைத தரித்த பெருமானைப் புகழ, (அப்போது) சமுத்திரத்திலுள்ள சங்கம் தவழ்ந்து வந்து சமீபிக்கும் காட்சியைக் கண்டு, பிரீதியோடு அழகிய சம்பந்தமூர்த்தி எழுந்து (ஆழ்வாரைத்) தழுவி, நீவிர் பூமியினிடத்து வாழும் சருவவியாபகனான பெருமானே யென்றனர். (எ-று) (௧௧௨)

௧௧௩. நூல்படித்தமெய்ப்பொருளை வாள்வலியாற்கொண்டிட்டோய் நுனக்குமுன்யான, வேல்பிடிக்கத்தக்கதுவோ வென்னத்தன்கைத்தலவேல் வீசித்தான்றன், கால்பிடித்தவீரகண்டை தனைக்கலியன்றாளினுக்கே கவினப்பூட்டித் நாவ்படைத்தகண்படைத்த பயன்றுதித்துச்சேவித்துச் சார்ந்தேனென்றான்.

(இ-ள்.) சாஸ்திரங்கள் சொல்லிய உண்மையான பொருளைக்கொண்ட திருமந்திரத்தை வாள்வலியினாலே பெற்றுக்கொண்டீர்! உமக்கு முன்னே நான் வேல்பிடிக்கத்தகுமோ? என்று தமது கைத்தலத்திலுள்ள வேலையெறிந்துவிட்டு, தாம் தமது பாதத்திலுள்ள வீரகண்டையை ஆழ்வார் பாதங்களில் அழகுபெறப் பூட்டி, நாவைப்படைத்த பயன் துதித்தும், கண்கள்படைத்த பயன் சேவித்தும் பெற்றேனென்றனர். (எ-று.) (௧௧௩)

௧௧௪. முத்தமிழ்க்குநாற்கவிக்கு முன்னூற்குமெந்நூற்கு முந்நீர்சூழ்ந்த, இத்தலத்திற்கிறையவனீ யென்றவன்பொற்காளத்தை யெடுத்துத்தானே, அத்தகையவிருதூதிப் புகழ்ந்துவந்தான் கலியனுமாற் கரணங்கோவில், சித்தமிகக்களித்தமைத்துத் தாடாளப்பெயர்விதித்துச் சிறப்புச்செய்தான்.

(இ-ள்.) முத்தமிழுக்கும் நாலுகவிக்கும் வேதத்துக்கும் மற்றுமெந்த நூல்களுக்கும் சமுத்திரஞ் சூழ்ந்த இப்பூமியினிடத்தில் நீவரே தலைவராவீர் என்று கூறி, அவரது அழகிய எக்காளத்தை யெடுத்து அப்படிப்பட்ட விருதைத் தாமே யூதிப் புகழ்ந்து சந்தோஷித்தனர். ஆழ்வாரும் பெருமானுக்குத் திருமதில் திருக்கோயில் இவைகளைத் திருவுள்ளம் மிகவும்

சந்தோஷித்து நிருமித்து அப்பெருமானுக்குத் தாடாளனென்னும் திரு நாமம் சாத்திச் சிறப்புக்களைச் செய்தனர். (எ-று.) (கககூச)

சீகாழியில் தாடாளப் பெருமான் சந்நிதியில் திருவாபரணங்களைச் சில சைவர்கள் களவு செய்து காட்டிற்புதைத்தனராக, ஆழ்வார் அவர்களை யறிந்து, எட்டைத் தீயிலிட்டெடுத்து, களவை வெளிப்படுத்தி, அச்சைவர் களைத் தண்டிக்காமல் க்ஷமித்தருளினரென முருகதாசர் என்போர் தமது புலவர்புராணத்தில் இவ்வாழ்வார் சரிதத்திற் பாடியுள்ளார்.

கககூ௫. காதலினுற்சம்பந்தன் கனகமணியணிகளம்பொற் கலைகள் யாவும், ஏதமிலான்கைக்கொடுமற் றவன்றனகருவிடையருளா லெழிறருடாளன், பாதமலர்பணிந்தேதுதி விடைகொடுமாலரங் கேசன் பாதங்காண, ஆதரவானணிமலர்ப்பூம் பொழில்புடைசூழ் மணிக்கோயி லரங்கஞ்சார்ந்தான்.

(இ-ள்.) சம்பந்தமூர்த்தியினிடத்தில் பிரீதியோடு பொன் இரத்தின ங்கள் ஆபரணங்கள் அழகிய பொன்மயமான ஆடைகள் ஆகிய இவை களை யெல்லாம் குற்றமற்ற ஆழ்வார் பெற்றுக்கொண்டு அச்சம்பந்தமூர் த்திக்கு விடைகொடுத்து, அழகிய தாடாளப்பெருமானது திருவடித்தாம ரைகளை வணங்கித்துதித்து விடைகொண்டு, பெருமைமிக்க திருவரங்கநக ரப்பனது திருவடிகளைச் சேவிக்க, அலங்காரமாய் விளங்கும் மலர்களை யுடைய அழகிய சோலைகள் பக்கங்களிற் சூழ்ந்த அழகிய கோயிலாகிய திருவரங்கத்தை விருப்பத்தோடு அடைந்தனர். (எ-று.) (கககூ௫)

கககூசா. ஒருகாலைச்சம்பந்தன் சித்திரகூடத்தெய்தி யுற்றபோதிற், பரகாலன்சென்றிடலு மாந்தர்நெருக்கங்கண்டு பாவொன்றன் னேன், அருகாகவிடுப்பவன்னேன் வேறொருபாவனுப்பச்சென் றாப்பாய்மேவும், ஒருகாரைத்தொழுதுசம் பந்தனேடளவளா யுகந்துமீண்டான்.

(இ-ள்.) ஒருபொழுது சம்பந்தமூர்த்தி சித்திரகூடத்திற் போயிருந் தபோது அங்கு ஆழ்வார் செல்லுதலும், அங்கு மனிதர்கள் நெருக்கமா யிருப்பதைப் பார்த்து, அச்சம்பந்தமூர்த்தி யினிடத்துச்சேர ஒருசெய்யுள் பாடி யனுப்ப, அவரும் வேறொரு செய்யுள்பாடி அனுப்ப, ஆழ்வார் செ ன்று ஆதிசேஷசயநத்தில் மேவிய ஒப்பற்ற மேகம்போன்ற கோவிந்த ராசப் பெருமானைத்தொழுது, சம்பந்தமூர்த்தியுடன் கூடியிருந்து அங்கு நின்றும் மீண்டனர். (எ-று.)

தலைவனைக்காணுது வருந்திய தலைவியின் றன்மையைச் செவிலித்தாய் பாங்கனுக்கறிவிப்பதாக ஆழ்வார் பாடி விடுத்த செய்யுள்:—

"வருக்கைநறுங் கனிசிதறிச் செந்தேன்பொங்கி வழிக்கரையின் குழிக் கரையின் மதகிலோடப், பெருக்கெடுத்து வண்டோலஞ் செய்யுங்காழிப் பிள்ளையார் சம்பந்தப் பெருமாள் கேண்மோ, அருட்குலவு மயிலைதனி லனலால்வெந்த அங்கத்தைப் பூம்பாவை யாக்கினுமென், திருக்குமது தகவன்று நிலவால்வெந்த இவளையும்பெண் ணுக்கலுமக் கியல்புதானே."

தலைவனது வரவைக்கண்ட மாத்திரத்தே, தலைவி அன்பின் பெருக் கால் நெக்குநெக்குருகி, உயிரொன்றே யுடையளானுள் எனச் சம்பந்த மூர்த்தி பாடி யனுப்பிய செய்யுள்:—

"கடியுண்ட நெடுவாளை கராவிற்றப்பிச் சயத்துக்கு ளடங்காமல் விசும் பிற்பாய, அடியுண்ட வுயர்தெங்கின் பழத்தாற்பூகம் அலையுண்டு குலைசிதறு மாலிநாடா, படியுண்ட பெருமானைப் பரிந்துபாடிப் பரிசுபெற்ற பெருமானே யடியேன்பெற்ற, கொடியொன்று நினபவனிக் கெதிரேசென்று கும்பிட்டா ளுயிரொன்றுங் கொடுவந்தாளே." (௪௬௬)

௧௬௭. அண்ணலெழிலரங்கேச னடிபரவித்திருப்பணியா னமைப்பான்கல்லால, எண்ணமுடித்தனைகனக நவமணியாலிழைத்திடயா னெண்ணினுலும், வண்ணமுகின்முடித்திடநீ யிருப்பவும்யான் கருதுதற்கு வறியனானேன், கண்ணகன்ஞாலத்தெனைப்போ லிழுதையிலலெனவழுங்காக் கலுழ்ந்தான்றகோன்.

(இ-ள்) பெருமையிற் சிறந்த அழகிய திருவரங்கநாதனது திருவடிகளை வணங்கி, கைங்கரியங்களை அடியேன் கல்லாற்செயய நினைக்க, அப படியே முடித்துக்கொடுத்தனை; பொன்னாலும் நவமணிகளாலும் செயயவேண்டுமென்று அடியேன் எண்ணினாலும நிறமுடைய மேகம்போன்ற நீ முடித்துக்கொடுக்க எழுந்தருளியிருக்கவும், அடியேன் (அப்படி) எண்ணுவதற்குத் தரித்திரனாயவிட்டேன்: இடமகன்ற பூமியில் என்னைப்போல மூடர்கள் இல்லையென்று வருந்தி, பெருமையுடையோரான ஆழ்வார் அழுதனர். (எ-று.) (௧௬௭)

௧௬௮. அன்பரடியார்க்கெளிய வன்பிறர்கடகரியவனு மரங்கத்தீசன், பொன்பதுமமணிவற்சம் படைமுதலவொடுகருடன் புயமீத்தோன்றி, நின்பரிவினிழைத்ததிருப் பணிக்குநவமணிகனகநிகரொவ்வாநீ, துன்பமுறலெனத்தழுவாத் துணைவிழிநீர்மலர்க்கரத்தாற் றுடைத்தான்மன்றே.

(இ-ள்) அன்பருக்கும் அவரடியார்களுக்கும் எளியவன், பிறர்களுக்கு அரியவனாகிய திருவரங்கநாதன, பெரியபிட்டியார் தாமரை கௌஸ்துபமணி ஸ்ரீவற்சம் பஞ்சாயுதங்கள் முதலானவைகளோடு பெரிய திருவடியின் திருத்தோள்களின்மீது எழுந்தருளிவந்து, பக்தியோடு செய்த உனது கைங்கரியங்களுக்கு நவமணியும் பொன்னும் ஒப்பாகமாட்டா; நீ துன்பமடையவேண்டா என்று தழுவி ஆழ்வாரது இரண்டு திருக்கண்களிற் சொரியும் நீரை மலர்போன்ற திருக்கைகளாற் றுடைத்தருளினன்.(எ-று.)

௧௬௯. நாமவயிற்பரகாலன் பணிந்துபலமுறைபுகழ்ந்தே நடிப்பஞானத், தாமமுதறகடவுளுமாங் கவனையிருவிழியருளாற் றழைபபநோக்கி, எமமுறமறைததமிழ்செய் சடகோபன்றிருக்குருகூாக்கேகிநீயும், தேமகிழின்றொடையோன்பா லலகிறினமிருந்துநம்பாற் சேர்தியென்றான்.

(இ-ள்.) சிரேஷ்டமான வேலைத்தரித்த ஆழ்வார் பணிந்து பலமுறையும் புகழ்ந்து ஆநந்தக்கூத்தாட, ஞானமயமான பரமபதத்தையுடைய ஆதிதேவனான பெருமானும், அவ்விடத்தில் அவ்வாழ்வாரை இரண்டு திருக்கண்களினருளாலே தழைக்கும்படி நோக்கி நீர் உலகத்துக்கு இன்பமுண்டாகும்படி வேதத்தைத் தமிழிற்செய்த சடகோபரது திருக்குருகூருக்குச் சென்று, தேன்பொருந்திய மகிழ்மாலையையணிந்த ஆழ்வாரிடத்தில் பலநாட்களிருந்து, நம்மிடத்திற்கு வருவாயாக வென்றருளினன். (எ-று.)

௨௰௦. பொன்னுலகிறகாராாமுன் றொடங்கியிருதிருமடலைப் புக ன்றுபோற்றி, மின்னுருவாயெனத்தொடஙகித் திருநெடுந்தாண் டகமுப்பான் விளம்பிசெய்யுண், மன்னுமெழிற்றிருக்குறுந்தாண் டகமிருபானிதியினைமுன் வாயப்பககூறிப், பின்னுமொருதிரு வெழுகூற் றிருக்கையொருபேருந்தி பிறழச்சொற்றான்.

(இ-ள்.) "பொன்னுலகில்" என்றும் "காரார்" என்றும் முதலில் ஆரம்பித்துப் பெரிய திருமடல் சிறிய திருமடல் என்னும் இரண்டு நூல் களும் அருளிச்செயது துதித்து, "மினனுருவாய" என்று ஆரம்பித்துத் திரு நெருந்தாண்டகம் முப்பது பாசுரங்களால அருளிச்செயது, "நிதியினை" யென்பது முனனேயிருக்க நிலைபெறற அழகையுடைய திருக்குறுந்தாண்ட கம இருபது பாசுரங்களா லருளிச்செயது, பின்னும் "ஒருபேருந்தி" என் பது முன்னேயிருக்க ஒரு திருவெழுகூற்றிருக்கை யருளிச்செய்தனர். (எ-று.) (௨௦௦)

‡ மறுவிலான்பிரபந்தம்வகுத்தவாறினுள்
உறுகவியாயிரத்தொடுமூன்றுறுடன்
அறுபஅமொனறதாமதனுட்செங்கண்மால்
பெறுபதிபெணபதோடிரண்டும்பேசுவாம்.

வேறு.

‡ சீரரங்கம்வேங்கடமாதனூர்தஞ்சை சேறைவெஃகாநின்றவூர்
காரகம்நந்திபுரம்விண்ணகரநைமிசா ரணியமவிணணகர்கணபுரம்
நீரகந்தேவனூர்தொகையயிந்திரபுர நிலாத்திங்கடுண்டநறையூர்
ஊரகம்புல்லாணிசித்திரகூடமெவ் வுளூரவதரியாச்சிரமமே.

‡ அரிமேயவிண்ணகரநாகையட்டபபுயமலிக்கேணியாலிமோகூ
பிரிதிவெளளறைகுறுங்குடிதெறறியமபலமபேர்தலைச்சங்கமெய்யம்
புருடோத்தமங்காவளம்பாடிகூடறிருப்புட்குழிகண்ணமங்கை
பரமேச்சுரவிணணகரநீர்மலைவேளுக்கைபாடகமூழிக்களம்.

‡ கடன்மலைகாழிச்சீராமவிண்ணகரம்வைகுந்தம்விண்ணகர்கண்டியூர்
இடவெநதைசெம்பொனசெய்கோயில்பாாத்தன்பள்ளியிநதளூர்கண்ணங்குடி
குடந்தைவெள்ளக்குளமழுந்தூர்கரம்பனூர்கோவலிடைகழிகூடலூர்
கடிகைநாங்கூரின்மணிமாடக்கோயிற்சிங்கவேள்குன்றுகார்வானமே.

வேறு.

‡ திருக்கச்சியிற்சீர்ப்பவளவணணந், திருப்பாற்கடல்சீராய்ப்பாடி,
திருப்பேரகஞ்சீர்வடமதுரை, திருநாவாய்சீர்புலியூரே.

வேறு.

‡ புள்ளம்பூதங்குடித்தண்காசிறுபுலியூர்சோலை
வெள்ளியங்குடிகோட்டியூர்விளங்குசாளக்கிராமங்
கள்வனூர்வல்லவாழ்தண்கால்மணிக்கூடமாகும்
தென்ளுசீர்க்கமலைமார்பன்செழுந்திருப்பதிகண்மாதோ.

௨௦௧. ஆதிகவிதிருமொழியோ டிருமூன்றுபனுவலவின் றாங்கத் தீசன், போதிதிருக்குருகூர்க்கென் றருளவிடைகொடுகுருகூர்ப் புகுந்தான்ஞான, நீதிதருசடகோபன் றமிழ்ச்சுருதிகன்குமுள நிறைத்துநீலச், சோதிமலையனையபிரான் பதம்பரவியவனிறந் தான் றொலைவில்காலம்.

(இ-ள்.) இப்படி முதலில் அருளிச்செய்த பெரிய திருமொழியோடு ஆறு பிரபந்தங்களருளிச்செய்து, திருவரங்கப்பெருமான் திருக்குருகூருக்குப் போவாயாகவென் றருளிச்செய்ய விடைகொண்டு திருக்குருகூரிற் பிரவேசித்து, ஞானநீதியை யளிக்கும் சடகோபரது தமிழ்வேதம் நான்கையும் தமது திருவுள்ளத்தில் நிறையப்பண்ணி, பிரகாசமுடைய நீலமலை போன்ற பெருமானது திருவடிகளைவணங்கி அங்கு அநேககாலம் எழுந்தருளி யிருந்தனர். (எ-று.) (௨0௧)

திருக்குருகூருக் கெழுந்தருளின திருமங்கையாழ்வார், பூர்வம் ஸ்ரீமதுரகவியாழ்வார் நம்மாழ்வாரை ஆழ்வார்திருநகரியிலிருந்து திருவரங்கத்துக்கு எழுந்தருளப்பண்ணி அங்கு திருவத்தியயநோற்சவசம் நடத்திவந்தது இடையில் நின்றிருக்க, அதை மீண்டும் தொடங்கி நடத்தியருளினர் பின்னர் எம்பெருமான் நியமநமேற்றுத் திருக்குறுங்குடிக் கெழுந்தருளி அங்கு நெடுங்காலம் யோகத்திலிருந்து பரமபதத்திற் கெழுந்தருளினர்.

வேறு.

௨0௨. புலமைந்தின் றனுத்தனுவாய்ப்புகன்றாழிப்புயன்மலர்க்கை
நலமைந்தின் றனுக்கலியன்கலந்தனன்மேனவில்கின்றாம்
நிலமைந்தன்றிருநெடுமாணிறைசமயநிலைநிறுத்தோன்
சலமைந்தின்னற்கடிந்தநாதமுனிசரிதமே.

(இ-ள்.) ஐந்துபுலன்களை நுகரும் சரீரம் சிறுமையாக அருளிச்செய்து, திருச்சக்கரமேந்திய மேகம்போன்ற பெருமானது மலர்போன்ற திருக்கரத்திலுள்ள நல்ல வலிமையுடைய ஸ்ரீசார்ங்கத்தில் (அதின் அம்சபூதரான) திருமங்கையாழ்வார் கூடினர். பூமிதேவிக்கு நாயகனும் பெரிய பிராட்டியாருக்கு மணவாளனுமான எம்பெருமான் நிறைவுற்ற வைஷ்ணவசமயத்தை நிலைநிறுத்தினவரும் கோபம், பொய், கொலை, கள், களவு, காமம் ஆகிய ஐந்து வருத்தங்களை வெறுத்தவருமான ஸ்ரீமந்நாதமுனிகள் வைபவத்தை இனிச் சொல்லுவோம். (எ-று.)

ஆத்மாவுக்குப் பிரகிருதிசம்பந்தமும் ஈசுவரசம்பந்தமு முண்டாயினும், பிரகிருதிசம்பந்தம் தீமையிற் செலுத்துவதும், ஈசுவரசம்பந்தம் நன்மையிற் சேர்ப்பதுமாதலால், தீமைதரும் பிரகிருதிசம்பந்தம் சிறுமையதென்னவே, ஈசுவரசம்பந்தம் பெருமையதெனக் கொண்டவர் ஆழ்வாரெனக் குறித்துணர்க. சமயகோடிகளிலும் எம்பெருமானொருவனே கூடிநிற்பினும் ஆழ்வார் ஆசாரியர்கள் பிரவர்த்தித்த வைஷ்ணவசமயத்தில் விசேஷ சாந்நித்தியம் உண்டெனக் குறிக்கவே, 'நெடுமாணிறை சமயம்' என்றார்.

இவ்வாழ்வார் கலியுகவருஷம் முந்நூற்றுத் தொண்ணூற்றெட்டாவதான நளவருஷம் கார்த்திகை மாதம், பௌர்ணிமை, கிருத்திகை நக்ஷத்திரம் கூடிய குருவாரதினம் திருவவதாரஞ் செய்து இந்நிலவுலகில் நூற்றைம்பது வருஷம் எழுந்தருளியிருந்தன ரென்பர். (௨0௨)

பரகாலச்சருக்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ

# கஉ-வது நாதமுனிச்சருக்கம்.

ஆரநாகினமுமிழ்தருமணியகாவேரி
தீரநாண்மலர்மதுநுகரளியிசைசிறந்தே
பாரநான்மறைமுனிவர்நாலாயிரர்பயிலும்
வீரநாரணபுரமதன்வளமியார்விதிப்பார்.

(இ-ள்.) சங்கினங்கள் முத்துக்களை யுமிழும் அழகையுடைய திருக்காவேரி தீரத்தில், புதியமலர்களில் தேனை யுண்ணும் வண்டுகளின் இசை கள் சிறந்து, நிறைவுற்ற நான்கு வேதங்களையுணர்ந்த மகாசீலர்கள் நாலாயிரவர்கள் நித்தியவாசஞ் செயயும் வீரநாராயண புரத்தின் வளப்பத்தை யார் சொல்லுவார்கள்? (எ-று.) (க)

உ. துகளிலாவளந்துதையும்பதிவயின்றொகையாப்
பகருநாறுநாற்பதின்மரும்பரமபாகவதர்
அகமுமாற்றமேயனையவரவருளும்பெரியோன்
இகலிலாதசொட்டைக்குலத்தீசுரனென்பான்.

(இ-ள்.) குற்றமற்ற வளப்பமிகுந்த அந்தத் திருப்பதியினிடத்து, ஒரு தொகையாகச் சொல்லும் நூற்றுநாற்பது திருநாமங்களும் பரமபாகவதர்களா யிருப்போர்; தமது உள்ளமும் சொல்லைப்போலுள்ளவர்கள் (உள்ளமும் சொல்லும் ஒன்றேயொனறேத்திருப்பதே யன்றி மாறுபடாதவர்கள்). அவர்களில் பெரியோராயுள்ளவர், பிறர் பகைத்தலில்லாத சொட்டைக்குலத்திலுள்ள ஈசுவரமுனிக ளென்பவர். (எ-று.) (உ)

௩. அனையவன்மிருமதலையாய்மால்படையதிபன்
தனைவணங்கிமற்றவன்படைத்தலைவனுந்தகைமை
புனையுமால்கரிமுகனவதரிப்பமுப்புரிநூல்
வினைகளாறுடைமுனியுநோக்கினன்மிகுவிருப்பால்.

(இ-ள்.) சேனைமுதலியாரை வணங்கி, அவரது சேனைக்குத் தலைவராயப் பெருமையைக் கொண்டிருக்கும் சிறப்புற்ற கஜமுகர், அவரது அழகிய திருக்குமாரராகி அவதரிக்க, முப்புரிநூலும் ஆறுதொழில்களும் உடைய ஈசுவரமுனிகளும் மிகுந்த விருப்பத்தோடு அவனைக் கண்டனர். (எ-று.) ()

ச. விளங்குநாமமுநாதமாமுனியெனவிதித்தே
துளங்குறுதயர்கருமமுமுடித்தனன்சுதனும்
வளங்கொளேழிசைமறைகளுனெகைவகளும்வழுவா
துளங்குலாவவேயதிகரித்தெவரினுமுயர்ந்தான்.

(இ-ள்.) விளக்கத்தையுடைய திருநாமமும் நாதமுனிகளென்று அருளிச்செய்து, செய்யவேண்டிய கருமங்களெவற்றையும் தவறாமல் முடித்தனர். குமாரரும், வளப்பத்தையுடைய ஏழிசைகளையும் நான்கு வேதங்களையும் வேறெவற்றையும் தவறாது திருவுள்ளத்தில் நிறையும்படி அதிகரித்து, அப்படி யதிகரித்த யாவரினும் உயர்ந்தனர். (எ-று.) (ச)

ரு. இசையினான்முகன்சுருதியிற்சதுமுகனிருநாற்
றிசையினோர்ந்தசெந்தமிழினற்குறுமுனிதிருமால்

வசையினுண்மலர்த்திருவடி வழுத்தியேமறவா
நசையினுனுயர் துருவனுயினன்முனிநாதன்.

(இ-ள்.) ஏழிசைகளால் தும்புருவும், வேதத்தால் பிரமனும், எட்டுத் திக்கிலும் நிறைந்த செந்தமிழாலே அகஸ்தியரும், பெருமானது குற்றமற்ற மலர்போன்ற திருவடிகளைத் துதித்து என்றும் மறவாத பக்தியினுலே துருவருமாயினர் ஸ்ரீமந் நாதமுனிகள். (எ-று.) (௫)

௬. கரியநாரணன்பதத்துவாழ்பிருச்சினிகருப்பன்
பெரியநாதமாமுனிககொருமதலையாய்ப்பிறந்தான்
உரியனும்புதலவனைமுனிநாதனுமுவகை
விரியநாடுபுபெயருமீச்சுரனெனவிதித்தான்.

(இ-ள்.) ஸ்ரீமந்நாராயணனது பெருமைதங்கிய பரமபதத்தில் நித்தியவாசஞ் செய்யும் பிருச்சினிகருப்பர் ஞானவொழுக்கங்களிற் பெரியேரான ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு ஒரு திருக்குமாரராகி யவதரித்தனர். தமக்கு உரியவரான அப்புதல்வனை ஸ்ரீமந்நாதமுனிகளும் சந்தோஷமதிகரிக்கப் பார்த்துத் திருநாமமும் ஈசுவரமுனிகளென்று சாத்தினர். (எ-று.)(௬)

எ. சுருதிநூன்முறைசவுளமேமுதலியதொழில்கள
பொருவின்மைந்தனுககயர்ந்துபின்வதுவையும்புரிவித்
தருணிறைந்தமால்வீரநாரணன்றிருவடிதாழ்ந்
திருமைகூர்ந்துயர்வீரநாரணபுரத்திருந்தான்.

(இ-ள்) வேதசாஸ்திர முறைப்படி சவுளம் முதலிய கருமங்களை ஒப்பற்ற அத்திருக்குமாரருக்குச்செய்து, பிறகு திருக்கலியாணமும் செய்வித்து, அருள் நிறைந்த வீரநாராயணப்பெருமானது திருவடிகளை வணங்கி, பெருமை யதிகரித்துயர்ந்த வீரநாராயணபுரத்தில் எழுந்தருளி யிருந்தனர். (எ-று.)

அ. அவனியுண்டமாலருசசீனவடிவுளவனைத்துந்
தவலிலன்புடன்பணிகுவான்றனயனுந்தானும்
உவகைபொங்கமுன்வீரநாரணற்பணிந்தொருவாப்
புவனமெண்டவநாதமாமுனிவரன்போந்தான்.

(இ-ள்.) உலகங்களை யுண்டருளிய பெருமானது அர்ச்சாவதாரங்களையெல்லாம் கெடுதலில்லாத பக்தியோடு சேவிப்பதற்காகத் தமது திருக்குமாரரும் தாமுமாகச் சந்தோஷமதிகரிக்க வீரநாராயணப் பெருமான் திருமுன்பே சென்று பணிந்து நீங்கிப் பூமியிலுள்ளவர்கள் சிந்திக்கும் தவத்தையுடைய ஸ்ரீமந்நாதமுனிகள் பிரயாணமாயினர். (எ-று.) (அ)

௯. பதிகடோறுமும்மூன்றுநாள்வதிந்துயர்பனிநீர்
நதிகளேமுதற்றீர்த்தமும்படிந்துவானவிரும்
மதியளாவியசயிலகோவர்த்தனமருவி
அதிகமாநதியமுனையங்கரையினையடைந்தான்.

(இ-ள்.) திருப்பதிகள் தோறும் மும்மூன்று நாளாக வசித்து, உயர்ந்த குளிர்ந்த நீரையுடைய நதிகள் முதலிய தீர்த்தங்களிலும் நீராடி, ஆகாயத்திற் பிரகாசிக்கும் சந்திரனைக் கிட்டியிருக்கும் கோவர்த்தநகிரியை யடைந்து, உயர்ந்ததான யமுனையாற்றின் அழகிய கரையை யடைந்து, (எ-று.)

௧௦. புனிதமாநதிபடிந்துகோவர்த்தனபுரமாம்
பனிநதிக்கரைப்பதியினுலகெலாம்பரவ
நனிநடம்புரிகண்ணனைவணங்கியந்நகராவாய
இனியசீலமிக்கெண்ணிலாவைகல்வீற்றிருந்தான்.

(இ-ள்.) அந்தப் பரிசுத்தமாகிய நதியில் நீராடி, கோவர்த்தனபுரமாகிய குளிர்ந்த அந்த யமுனாநதியின் கரையிலுள்ள திருப்பதியில் உலகத்திலுள்ளோரெல்லாம் வணங்கும்படி நன்றாகத் தாண்டவஞ்செய்யும் யமுனைத்துறைவனை கண்ணனெம்மானை வணங்கி, அந்நகரத்தினிடத்து நல்ல ஆசாரமிகுந்தவராகிக் கணக்கற்ற தினங்கள் எழுந்தருளி யிருந்தனர். (எ-று.) (௧௦)

௧௧. முன்னைவீரநாரணபுரத்தெம்பிரான்முனிவன்
தன்னைநம்பதிசார்கெனக்கனவினிற்சாற்ற
என்னையேயிதுபுதிதெனயமுனையந்துறைவாழ்
பின்னைகேள்வனைவணங்கினன்விடைகொளாப்பெயர்ந்தான்.

(இ-ள்.) முன்பு தாமெழுந்தருளியிருந்த வீரநாராயணபுரத்து எம்பெருமான் ஸ்ரீமந்நாதமுனிகளை நமது திருப்பதிக்கு வருவீராகவென்று கனவில் அருளிச்செய்ய, இது என்ன புதுமையென்று யமுனையாற்றின் அழகிய துறையினிடத்து நித்தியவாசஞ் செய்யும் பெரியபிராட்டியாருக்கு நாயகனை வணங்கி விடைகொண்டு பிரயாணமாய (எ-று.) (௧௧)

௧௨. நண்ணினன்பதிவீரநாரணத்தைவானளினக்
கண்ணினன்பதம்பணிந்தனன்பரவலுங்கடவுள்
விண்ணினன்பலகோடிபோலவடிவொடும்வெளிநின்
றுண்ணினன்புநன்றெனவுநலவுணர்வளித்தொளித்தான்.

(இ-ள்.) தமது திருப்பதியாகிய வீரநாராயணபுரத்தை யடைந்து, உயர்ந்த தாமரைபோன்ற திருக்கண்களையுடைய வீரநாராயணப் பெருமானது திருவடிகளைப் பணிந்து துதித்தலும் பெருமான் ஆகாயத்திலிருக்கும் பலகோடி சூரியரைப் போன்ற திருமேனியுடன் தோன்றி, உமது உள்ளன்பு நல்லதாயிருந்ததென்று உத்தமமான ஞானத்தைக் கொடுத்து மறைந்தருளினன். (எ-று.) (௧௨)

௧௩. நிறைந்தஞானத்தன்பதுமநாபன்பதநீங்கா
துறைந்தகாலையின்குருகைமாறப்பெயருரவோன்
அறைந்தவாதிநூற்றமிழினிற்பத்தொராயிரத்துள்
மறைந்திடாதுணர்வயிணவரிருவர்கள்வந்தார்.

(இ-ள்.) (பெருமானருளிச்செயலின்படி) பூர்ணமான ஞானத்தையுடையவரான ஸ்ரீமந்நாதமுனிகள் பதுமநாபியையுடைய பெருமானது திருவடிகளை விட்டு நீங்காமல் நித்தியவாசஞ் செய்துகொண்டிருந்த காலத்தில், திருக்குருகூரிலவதரித்த மாறனென்னுந் திருநாமமுடைய பிரபந்நஜநகூடஸ்தரான ஆழ்வார் அருளிச்செய்த முதன்மைவாய்ந்த நூலாகிய தமிழ் வேதத்தில் திருவாய்மொழி ஓராயிரத்தில் பத்துப்பாடல்களை மறைந்து போகாமல் அறிந்த இரண்டு ஸ்ரீ வைஷ்ணவத் திருநாமங்கள் வந்தார்கள். (எ-று.) (௧௩)

௧௪. தொழுதுமாலையாராவமுதென்றுமுன்றொடங்கிப
பழுதுறுதிசைத்ததனிலாயிரத்துளிப்பத்தென்
றெழுதுபாடல்சொற்றிடமுனிநாதனுமிவைநீர
முழுதுமோர்ந்தனிரோவெனவயிணவர்மொழிவார்.

(இ-ள்.) பெருமானை வணங்கி "ஆராவமுதே" என்று முதலில் ஆரம்பித்துக் குற்றமவராமல் அருளிச்செய்த பதிகத்தில் "ஆயிரத்துளிப்பத்து" என்று எழுதப்பட்டிருந்த பாசுரத்தைச் சொல்ல, ஸ்ரீமந்நாதமுனிகளும இவற்றை நீங்கள் முழுமையுமறிந்திருக்கிறீர்களோ என்று கேட்க, அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் சொல்லுவார்கள். (எ-று) (௧௪)

௧௫. இவையுமாநிலத்தெங்கள்பாலன்றிமற்றெவணும்
நவையிலாய்பெறற்கரிதெனுவதனமுறைநவின்றார்
கவைஞாநாதனுமவற்றினுட்பொருளெலாங்கருத்தாற்
சுவையினோர்ந்திவைநாடுவாமினியெனத்துணிந்தான்.

(இ-ள்.) குற்றமற்றவரே! இப்பத்தும் பூமியில் எங்களிடத்தன்றி வேறெவ்விடத்திலும் பெறுவதற்கரிது என்று அதன பிரகாரத்தைச் சொன்னார்கள். ஸ்ரீமந்நாதமுனிகளும் அவற்றின் உட்பொருள்களை யெல்லாம் தமது கருத்தினாலே சுவையுடனறிந்து இனி இப்பாசுரங்களை நாடுவோமென்று துணிந்தனர். (எ-று.) (௧௫)

௧௬. அல்குமப்பதிவீரநாரணன்றிருவருளான்
மலகுபொற்குருகூர்புகுந்துயர்தமிழமாறன்
நலகுமெய்த்திருவாய்மொழிகாண்கலனுடி-
ஒலகுளத்தினனாகியப்பதிவயினுழன்றான்.

(இ-ள்.) அந்தத் திவ்விய தேசத்தில் நித்தியவாசஞ் செயயும் வீரநாராயணப் பெருமான் திருவருளாலே அழகு மிகுந்த திருககுருகூரிற் பிரவேசித்து உயர்ந்த தமிழராகிய ஆழ்வார் அருளிச்செயத உண்மையுற்ற திருவாய்மொழியை விசாரித்துக சாணுதவராயச் சோர்ந்த திருவுள்ளமுடையவராகி அத்திருக்குருகூரினிடத்துத் திரிந்தனர். (எ-று.) (௧௬)

வேறு.

௧௭. அப்பதியுட்சடகோபன் மிசைமதுரகவிதமிழா லன்புற்ற
ந்நாட், செப்பரியபொருட்கண்ணி நுண்சிறுத்தாம்பொருபானுந்
தெளிந்துஞானத், தொப்பரியபராங்குசதா சனையணுகியவையவ
னு னுணர்ந்துஞானத், துப்பருளுந்திருப்புளிக்கீ ழிருந்துபராங்
குசன்மலர்த்தாட் டுணையுட்கொள்ளா

(இ-ள்.) அந்தத் திருப்பதியில், ஆழ்வார்மீது மதுரகவியாழ்வார் பக்தியுடையவராகித் தமிழினலருளிச்செயத அறிவதற்கரிய பொருளையுடைய கண்ணிநுண் சிறுத்தாம்பு ஒருபது செய்யுளையும் தெரிந்து, ஞானத்தில் ஒப்பில்லாத பராங்குசதாசரென்பவரை யடைந்து அப்பத்துச் செய்யுளையும் அவராலே அறிந்து, ஞானவலிமையை யளிக்கும் திருப்புளியாழ்வா ரடியிலிருந்து பராங்குசரான ஆழ்வாரது தாமரை மலர்போன்ற இரண்டு திருவடித்தாமரைகளைத் திருவுள்ளத்திற் கொண்டு, (எ-று.) (௧௭)

௧௮. ஆயிரண்டாயிரமுருச்சொற் றடிபணியப்பராங்குசனுண் டனுகிமுன்னுண், மாறிருந்தமயர்வகற்றி மதிநலந்தான்பெறவளித் தமாட்சிபோல, நூறிருநதுபுயநாத முனிமயிர்த்தறிவுநல னோன் மைநல்கா, வீறிருந்ததமிழ்ச்சுருதி நான்குமதின்பொருளெனவை யும் விரித்துச்சொற்றுன்.

(இ-ள்.) பன்னீராயிரமுரு அநசந்தித்து ஆழ்வார் திருவடிகளை வண ங்க, ஆழ்வார் அவ்விடத்துக்கெழுந்தருளி, முற்காலத்தில் எம்பெருமான் தாம் திருத்தமடையும்படி அஞ்ஞானத்தை நீக்கி மதிநலங்களைப் பெறும் படி கடாக்ஷித்த மாட்சிமையைப்போல, பூணநூல் திருத்தமடைந்திருக் கும் புயங்களையுடைய ஸ்ரீமந்நாதமுனிகளது மையலைத்தீர்த்து மதிநலப் பெருமையை யளித்து, பெருமைடைநந்த நானகாயிருக்கும் தமிழ் வேதத் தையும் அதின எல்லாப்பொருள்களையும விஸ்தாரமாக அருளிச்செய்தனர். (எ-று.) (௧௮)

௧௯. அருள்பெருகிப்பின்னருமுன் ஞதியோகியர்மூவ ரடிக்கே நாட்டந், தருசூரிசின்மதிகுலக்கோன் ரெண்டரடிப்பொடிபபாண ன் றனைசால்பட்டர், பெருமனுயர்பரகால னவில்பனுவலெலவை யவையும் பிறழகக்கூறி, ஒருமைதருபரம்பொருளின் மந்திரமெட் டக்கரமு முபதேசித்தான்.

(இ-ள்.) ஆழ்வார், பின்னரும் அருள்பெருகி, அத்தமிழ்வேதத்துக்கு அங்கோபாங்கங்களாகப் பொயகையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் ஆகிய ஆதியோகியர் மூவர், திருவடிகளில் கண்களுள்ள திருமழிசையாழ் வார், குலசேகராழ்வார், தொண்டரடிப்பொடி யாழ்வார், திருப்பாணாழ் வார், பெருமைமிகுந்த பெரியாழ்வார், உயர்ந்த திருமங்கையாழ்வார், இவர்கள் அருளிச்செயத பிரபந்தங்களெவையோ அவற்றையும் விளங்கும் படி யருளிச்செயது, ஒப்பற்ற வீடுபேற்றை யளிக்கும் பரம்பொருளான பெருமானது திருமந்திரமான அஷ்டாக்ஷரமும் உபதேசித்தருளினர். (எ-று.) (௧௯)

ஆண்டாள் பெரியாழ்வார் திருமகளாயத் தமது திருநாமத்தைப் "பட் டர்பிரான் கோதை" யென்று ஆழ்வாரை முன்னிட்டே யருளிச்செய்த லால் ஆண்டாளைப் பிரித்துக் கூறிற்றிலர்.

௨0. தறங்குதிரைக்கருங்கடனீர் செங்கதிர்தன்கிரணமெனுங் கரத்தால்வாங்கிப், பிறங்குபுவிக்கருள்புரிவான் புயற்குதவவது தரிக்கும் பெற்றிபோலச், சிறந்தமகிழ்த்தொடைமாறன் றமிழின் மறைப்பொருளெவையுந் தெளியக்கூற, அறந்தழைத்ததவநாத முனிதரித்தான்மாறனும்பின் னருளினேக்கா

(இ-ள்.) ஒலிக்கும் அலைகளையுடைய கருங்கடலின் நீரைச் சூரியன் தன து கிரணங்களென்னும் கைகளாலே எடுத்துப் பெரிய பூமியிலுள்ளவர்களு க்குக் கொடுக்கும்படி மேகங்களுக்குத்தர அம்மேகம் அதனைத் தரித்துக் கொண்டிருக்கும் தன்மைபோலே, சிறப்பையுடைய மகிழம்பூமாலையை யணிந்த ஆழ்வார் தமிழ்வேதத்தின் பொருளைவிளக்கும் அங்கோபாங்கங் களின் பொருளையெல்லாம் தெளியும்படி யருளிச்செய்ய, தருமம் விர்த்தி யான தவத்தையுடைய ஸ்ரீமந்நாதமுனிகள் அவைகளைத் தரித்துக்கொண்ட னர். பிறகு ஆழ்வாரும் கிருபையோடு கடாக்ஷித்து, (எ-று.) (௨0)

௨௧. நத்துமலர்க்கரந்தரித்தோ னுருவிசிட்டாத்துவிதமதா நவி ன்றுஞாலத், தத்துவிதங்களைகடவுட் பனுவலிவையதிகரித்தோர் க் கருளுமுத்தி, எத்துயருமாற்றுமெனப் பரமபதம்புகுந்தனனண் டிருந்துநாதன், தத்துவஞானந்தெளிந்து தமிழ்ச்சுருதிபுவிவிளங் கச சாற்றுங்காலே

(இ-ள்.) பாஞ்சசந்நியத்தை மலர்போன்ற திருக்கைகளில் தரித்த பெருமானது திவ்ய ஸ்வரூபத்தை விசிஷ்டாத்துவைதபரமாக அருளிச்செ ய்து, பூமியில் அத்துவிதத்தை ஒழிக்கும் தெய்வத்தன்மையுள்ள பனுவல் களான இவைகள், தம்மை யதிகரித்தவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கு ம்; எந்தத் துயரையும் மாற்றிவிடுமென் றருளிச்செய்து பரமபதத்துக்கெழு ந்தருளினர். அவ்விடததில் ஸ்ரீமந்நாதமுனிகள் எழுந்தருளியிருந்து தத் துவஞானத்தை யறிந்து, தமிழ்வேதத்தைப் பூமியிலுள்ளோர் விளங்கும் படி பிரவசநஞ் செய்யுங்காலத்தில், (எ-று.) (௨௧)

௨௨. வீரநாரணப்பெருமா னவன்கனவினனுகிமறை விளங்க வேலே, நாரணனும்புகுந்துமுனங் கொணர்ந்தனநீதமிழ்வேத நாடித்தந்தாய்; தேரநாமிருவோரு மயலலமித்தமிழ்வேதச் சிறப் பைநின்னே, டோரநாமுவந்தனநம் பதிவருதியெனவவனு முவப் பிற்சென்றான்.

(இ-ள்.) வீரநாராயணப்பெருமான் அவரது சொப்பனத்தி லெழுந் தருளி, "முன்பு நாராயணனை நாம் சமுத்திரத்தில் பிரவேசித்து கீர்வாண வேதத்தை விளங்கும்படி மீட்டுக்கொண்டு வந்தோம். நீரோ தமிழ்வே தத்தை ஆராய்ந்து கொண்டுவந்து கொடுத்தீர். அறியுமிடத்தில் நாமிருவோ ரும் வேறானவர்களல்லேம். இந்தத் தமிழ்வேதத்தின் சிறப்பை உமமோ டு கூடியிருந்து நாம அநுபவிக்க இச்சித்தோம். நமது திவ்யதேசத் துக்கு வருவீராக" என்றருளிச்செய்ய, அவரும் சந்தோஷத்தோடு செ ன்றனர். (எ-று.) (௨௨)

௨௩. புனிதமறைச்செழுந்தமிழை வீரநாரணனுடனே பொரு டோர்ந்தோதி, இனிமைபடைத்தவைதாள வட்டணைகாந்திருவ விசை யேழிற்பாடி, நனிதகைமைதழைத்திருந்தா னந்நாளிற்கா வேரிநாடன்முன்னே, மனிதவிசைகாந்திருவ முணர்மடவாரிரு வருள மாறுய்வந்தார்.

(இ-ள்.) பரிசுத்தமான செழிப்புடைய தமிழ்வேதத்தை வீரநாராய ணப் பெருமானுடனே பொருளையுணர்ந்து ஓதி இனிமைபடைத்த அப்பா சுரங்களை வட்டமான தாளத்துடனும் தெய்வராகமான காந்திருவம் ஏழிசையிலும் பாடி மிகவும் பெருமை அபிவிருத்தியடைந் திருந்தனர். அக் காலத்தில் சோழநாட்டுக்குத் தலைவனை சோழபூபதியின் சமுகத்தில் மநு ஷ்யராகம் காந்திருவராகம் இவைகளைத் தனித்தனி யுணர்ந்த பெண்களிரு வர் உள்ளம் மாறுபட்டு வந்தனர். (எ-று.) (௨௩)

௨௪. கற்புடையகுலமாதர் கருத்துமகிணையொருவாக் காட்சி போலப், பொற்புடையவிலக்கணத்தை யகலாதகாந்திருவப் பொ ருவில்பாடல், விற்புருவமனுங்காது விழியிமையாக்கணமிடறு விம்மாதந்தப், பற்புறந்தோன்றுதசைவி லோவியம்போலணங் கொருத்தி பாடினாள்.

(இ-ள்.) கற்பையுடைய குலஸ்திரீகளின் எண்ணம் புருஷனைவிட்டு நீங்காத தன்மையைப்போலப் பொலிவுபொருந்திய இலக்கணத்தை நீங்காத காந்திருவமென்னும் ஒப்பற்ற பாடலை வில்போன்ற புருவம் வளையாமலும் கண்கள் இமைக்காமலும் ஒலிக்கும் கண்டம் விம்மாமலும் அழகையுடைய பற்கள் வெளியிற் றோன்றாமலும் அசையாத சித்திரம் போலப் பெண்மகள் ஒருத்தி பாடினளா. (எ-று.) (உச)

உரு. கனகமெவருதவுகினு மவரவாகட்கினிமைபுரி கணிகைமாதர், எனவுலகிலிலக்கியமா மையதாந்தேசிககானத் தியல்பையாரும், மனமுருகவிழிபுருவங் கொடுமருட்டிநகைவறிதே வயக்கி வார்பூண், தனமிலகநதுகினீக்கிப பாடினள்சூத்திரப்பாவை தனிலோர்தையல.

(இ-ள்.) எவர் பொன்னைக் கொடுத்தாலும அவரவர்களுக்கு இனிமையைச்செயயும் வேசியரைப்போல, உலகத்தில இலக்கியத்தன்மை யுடையதான தேசிககானததின இயல்பை, யாரும் மனமுருகும்படி கண்களையும் புருவங்களையுங் கொண்டு மருட்டி, சிரிப்பை வீணேயாக விளைத்து, கச்சணிந்த தனங்கள் தோன்றும்படி மேலாடையை நீக்கி, சூத்திரப்பதுமைபோல ஒரு பெண பாடினள. (எ-று.) (உரு)

உசு. வளவனுமாஙகவைகேட்டுத் திருமாலைவழுத்திமுத்தி வாய்க்குங்காட்சி, அளவறியாதயலலகில கடவுளரைவழுத்திமகி ழறிவிலார்போற், றளவமுகின்மகிழபாடற் றிறனுணராதவனியுளோர துதிக்குஙகானத், தளவநகைககயல்விழிபாட் கரியபலவரிசையருடழைபபவிந்தான.

(இ-ள.) சோழனும் அவைகளைக்கேட்டு, பெரியபிராட்டியாருக்கு நாயகனை பெருமானைத துதித்து மோக்ஷமடையும் ஞானத்தின் அளவை யறியாமல் புறம்பே பலவான தேவதைகளை வாழ்ததி மகிழும் ஞானமில்லாதவர்களைப்போல், திருத்துழாய மாலையையணிந்த பெருமான் மகிழும் காந்திருவப் பாடலின் கூறுபாட்டை யறியாமல், பூமியிலுள்ளவர்கள் புகழும் தேசிக கானத்தைப்பாடிய முல்லை யரும்புபோன்ற பற்களையும் கயல்மீனபோனற கண்களையுமுடையவளுக்கு அரிய பலவான வரிசைகளை அருளுண்டாகக் கொடுத்தனன. (எ-று.) (உசு)

உஎ. காந்திருவவிசைமாது நகைத்துநமதிசைகருணைக கடவுளல்லால், வேந்திவனோவுணரானும் பரந்தாமன்பதிகடோறும் விரிப்பாமென்னுப், போந்தினியநாதமுனி வீரநாரணபுரத்துட் புகுந்துவீணை, ஏந்திமுனிவரன்கேட்ப வீரநாரணன்றிருமுன்னிசைத்தாளன்றே.

(இ-ள்.) காந்திருவ இசையைப்பாடும் மாது சிரித்து, நமது இசையைக் கருணைக்கடவுளான பெருமானல்லாமல் அரசனான இவனோ அறியமாட்டான். நாம் பரந்தாமன் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகள் தோறும் போய்ப் பாடுவோமென்று புறப்பட்டு, இனியவரான ஸ்ரீமந்நாதமுனிகள் எழுந்தருளியிருக்கும் வீரநாராயண புரத்திற் பிரவேசித்து, வீணையையேந்தி, ஸ்ரீமந்நாதமுனிகள் கேட்கும்படி வீரநாராயணன் திருமுன்னர் பாடினாள். (எ-று.) (உஎ)

உ௮. கேட்டமுனிவனுமகிழவுற் றதிசயித்துப்புகழுவரிக் கெண்டைபோலும், வாட்டடங்கண்மடவரலு மவனின்விடைகொடுவளவன் மருங்குசார்ந்தென், பாட்டறியுந்தகைநிபுண நாதமுனியெனவுலகோர் பரவும்பொன்னி, நாட்டரசனவனையழைத் திடமுனியுமரசவையை நண்ணினனால்.

(இ-ள்.) அதைக்கேட்ட ஸ்ரீமந்நாதமுனிகளும் மகிழ்ந்து அதிசயித்துப் புகழ, செவ்வரி கருவரி பரந்த செண்டை மீன்போன்றிருக்கும் ஒளி பொருந்திய விசாலமான கண்களையுடைய அம்மாதும், அவரிடத்து விடைபெற்றுக்கொண்டு சோழனிடத்தடைந்து, பெருமையையுடைய நிபுணரான ஸ்ரீமந்நாதமுனிகள் என் பாட்டையறிவார் என்று கூற, உலகத்திலுள்ளவர்கள் வணங்கும் திருக்காவேரி சூழ்ந்த சோழநாட்டதிபனும் அவரையழைக்க, ஸ்ரீமந்நாதமுனிகளும் இராஜசபையையடைந்தனர். (எ-று.)

உ௯. எழுந்துவளவனும்பரவி யரியணையீந்திவரிருவ ரிசையான்காணச், செழுந்தவனீதெரித்தியென மனிதரிவளிசையறியார் தேவரெல்லாந், தொழுந்தகைமாலிவளிசை யறிவனெனவேந்தனும்பார் துதிக்குஞானக், கொழுந்தனையாய்நீயவையீண் டறிந்தியானறிதற்குக் குறியேதென்றான்.

(இ-ள்.) அப்போது சோழனும் எழுந்து வணங்கிச் சிம்மாசனங்கொடுத்து, இவர்களிருவரது இசையை நானறியும்படி செழிப்புற்ற தவத்தையுடைய நீவிர் தெரிவிப்பீராக வென்று கூற, (ஸ்ரீமந்நாதமுனிகளும் காந்திருவ இசையைப் பாடுவாளைக் குறித்து) மனிதர்களாயுள்ளவர்கள் இவளது இசையை யறியமாட்டார்கள்; தேவர்களெல்லாம் தொழும் பெருமையையுடைய பெருமான் இவளது இசையையறிவன் என்றருளிச்செய்ய, சோழபூபதியும் பூமியிலுள்ளவர்கள் துதிக்கும் ஞானக்கொழுந்து போன்றவரே! நீவிர் அவற்றை இங்கு அறிந்ததை நான் அறிவதற்கு என்ன குறிப்பு என்றனன். (எ-று.) (உ௯)

௩0. ஒருகாலத்தாயிரந்தா ளம்பிடிப்பவங்கவற்றி னோசைதேரா, அருகாதுசிறிதுமிகா தவற்றவற்றின்பலனுவல்வ லதனாற்காண்டி, முருகாரின்மொழுடையாயா னுணர்ந்தபரிசெனவவையம் முறையேசொற்றான், பெருகார்வத்தரசனெழுந் தடிபணியாநீயே நம்பெருமானென்றான்.

(இ-ள்.) ஒரே காலத்தில் ஆயிரம் தாளங்களை ஒத்த, அவற்றின் ஓசையையறிந்து சிறிதும் குறையாமலும் அதிகப்படாமலும் அவையவைகளின் இடையைச் சொல்லுவேன்; அதனால் அறிந்து கொள்வாயாக. இனிய வாசனையுடைய ஆத்திமாலையைத்தரித்த சோழபூபதியே! இவை நான் அறிந்தவிதமாகும் என்றருளிச்செய்து, அவ்வாறே ஒத்திய தாளங்களினிடைகளைச் சொல்லினர். அபிவிருத்தியாகும் அன்பையுடைய சோழராசனெழுந்து ஸ்ரீமந்நாதமுனிகளது திருவடிகளைப் பணிந்து நீவிரே எம்பெருமான் என்றுரைத்தனன். (எ-று.) (௩0)

௩௧. மறைநான்குஞ்சடகோபன் வருத்ததமிழ்சசுருதியினூன் மற்றியாவுங், குறையாமலதிகரித்தார் நின்னிலெவரெனமறையோ

னுவமைகூறாந்தான், இறையானேரிய சிலம்ப னவையின்முனிவா ரெவரு மிறும்பூதுற்றார், நிறையான்றபாகவத ரியாவரினுமதிக மென்ன நிகழ்த்தினாரால.

(இ-ள்) நான்கு வேதங்களும் ஆழ்வார் பிரித்தருளிச்செய்த தமிழ் வேதமாகிய நூலும் மற்றெவையும் குறைவுபடாமல் அப்பியசித்தவர்கள் உம்மைக் காட்டிலும் யாவரிருக்கின்றனர் என்றுகூற, ஸ்ரீமந்நாதமுனிகள் உவப்படைந்தனர். சோழராசனது சபையிலுள்ள முனிவர் யாவரும் அதிசயமடைந்து, இவர், குணங்கள் நிறைந்த பாகவதர் யாவரினும் உயர்ந்தவரென் றுரைத்தார்கள். (எ-று.) (௬௧)

௬௨. அரசனவைவிடுத்தரிவாழ வீரநாரணத்தையடைந்த தலகுங்காலைப், பரமபதச்செயசேன னுய்யக்கொண்டானென்றும் பகர்காளன்சீர், விரவுதமிழ்க்குருகைகா வலனென்றும்புவித்தோன்றி விளங்கினான, வரமுனிநாதனையடைந்தா ரவர்க்குவிசிட்டாத்துவித மறையைசசொற்றான்.

(இ-ள்.) இராஜசபையைவிட்டுப் பெருமான் நித்தியவாசஞ் செய்யும் வீரநாராயண புரத்தையடைந்து அங்கு எழுந்தருளியிருக்கும்போது, பரமபதத்திலிருக்கும் ஜயச்சேனரென்பவர் உய்யக்கொண்டாரென்றும், சொல்லப்படும் காளர் என்போர் தமிழின் சீர் பரவிய குருகைகாவலரென்றும், பூமியிலவதரித்து விளங்கி, ஞானத்தில் சிரேஷ்டரான ஸ்ரீமந்நாதமுனிகளை ஆசிரயித்தார்கள். அவர் அவர்களுக்கு விசிஷ்டாத்வைத ரஹஸ்யார்த்தங்களை யருளிச்செய்தனர். (எ-று.) (௬௨)

௬௩. ஏறுதிருவுடையானே முதலாயமுதலிகளுமேதில்ஞானம், கூறுதியென்றடி வணங்க வவர்க்குமறைநவின்றடிமை கொண்டு பாரமேல், மாறுதிகழ்பாசமய விருட்பருதியாகிநிறை மாயோகத்தின், ஊறுதிருஞானவமு தருந்தியிருந்தனனுலகி லுவமையில்லான்.

(இ-ள்.) ஏறுதிருவுடைய தாசர் முதலான முதலிகளும் குற்றமற்ற ஞானத்தை எங்களுக்கு அருளிச்செய்ய வேண்டுமென்று திருவடிகளை வணங்க, அவர்களுக்கும் ரஹஸ்யார்த்தங்களை யருளிச்செய்து அடிமை கொண்டு, பூமியின்மீது தம்மோடு மாறுபடும் இதரசமயங்களாகிய இருளுக்குச் சூரியனாகி, நிறைந்த பெருமை பொருந்திய யோகத்தில் அபிவிருத்தியாகும் ஞானாமிர்தத்தையுண்டு எழுந்தருளியிருந்தனர், உலகத்தில் தமக்குச் சமானமில்லாதவரான ஸ்ரீமந்நாதமுனிகள். (எ-று.) (௬௩)

௬௪. இருந்தமுனிவரன்றகைமை நேரியன்கேட்டவணணுகா விறைஞ்சிப்போற்றிக், கருந்துளவத்திருமாலை வணங்கிவிடைகொடு மீள்வோன் கருதாரஞ்சப், பொருந்தடக்கைமதகளிற்றிற் சாமந்தன்மணிமுடிமேற் பொலன்பூட்பூந்தாள், திருந்தவமைத்திவர்தலுமாங் கதுநாதமுனிவனெனுந் தேவன்காணு.

(இ-ள்.) அப்படியிருந்த ஸ்ரீமந்நாதமுனிகளது பெருமையைச் சோழன் கேள்விப்பட்டு அவ்விடத்துக்கு வந்து வணங்கித்துதித்து, பெருமைபொருந்திய திருத்துழாய்மாலையையணிந்த பெருமானைச் சேவித்து விடைபெற்றுக்

கொண்டு தனனூருக்குப் போகுமவன், சத்துருக்கள் பயப்படும்படி யுத்தஞ் செய்யும் விசாலமான துதிக்கையும் மதமுமுடைய யானையின்மீது சாமந் தனது முடியில் பொன்னாபரணங்களணிந்த அழகிய பாதங்களைப் பொருந்தவைத்து ஏறுதலும், அதனை ஸ்ரீமந்நாதமுனிகளெனனும் தெய்வத் தன்மை யுடையவர் பார்த்து, (எ-று.) (௩௪)

௩௫. எந்தைதிருமால்பிரமா தியர்முடிமீதடிமலர்வைத் திணை யிலாத, முந்தையருட்பெரியதிரு வடிப்புயமீதிவர்தலுமிம் முறை யேயென்னச், சிந்தையுருகிடமோகித் திருந்தனன்போந்தரசர்பி ரான் பிரிந்தங்கோர்நாள், விந்தைநிகர்மனைவியர்சூழ் தரவணுகி விண்டுவின்றாள் வணங்கிமீண்டான்.

(இ-ள்.) எனது ஸ்வாமியாயப் பெரியபிராட்டியாருக்கு நாயகனான பெருமான் பிரமாதியர் முடியின்மீது தனது திருவடிமலர்களை வைத்து ஒப்பில்லாத அருட் பழமையையுடைய பெரிய திருவடியின் திருத்தோள் களின்மீது ஏறியருளுவதும் இவ்விதமேயாகு மென்று சிந்தையுருகும்படி மோகமடைந்திருந்தனர். முன்புவந்த சோழபூபதி மறுபடியும் அவ் விடத்துக்கு ஒருதினம் துர்க்கைக்குச் சமானமான மனைவியர்கள் சூழும் படி வந்து பெருமானது திருவடிகளை வணங்கி மீண்டனன். (எ-று.) (௩௫)

௩௬. தேவியர்சூழ்தரக்கனக முடிவேந்தன்சேறலுமச் சிறப்பை நோக்கிக், கோவியருங்கண்ணனுமா மெனநாதன்பின்சென்றான் குரவன்பின்னே, ஆவிநிகர்புண்டரிகன் குருகைகாவலன்முதலோ ரணுகிப்போற்றி, நீவியநீர்புடைசூழ்ந்த நிலவேந்தன்பின்னேக நிபமேதென்றார்.

(இ-ள்.) தனது மனைவியர்கள் சூழும்படி பொன்மயமான மகுடத் தையணிந்த சோழன் செல்லுதலும் அந்தச் சிறப்பைப்பார்த்து அவர்கள் கோபிகைகளும் கண்ணனுமாகுமென்று ஸ்ரீமந்நாதமுனிகள் அவர்கள் பின் னே செனறனர். ஆசாரியருக்குப்பின்னே உயிருக்குச் சமானமான உய்யக் கொண்டார் குருகைகாவலப்பன் முதலியவர்கள் சென்று வணங்கி ஆடை யைபபோலச் சமுத்திரநீர் பக்கங்களிற் சூழ்ந்த பூமியையாளும் அரசன பினனே போவதற்குக் காரணமென்னவென்று கேட்டார்கள். (எ-று.) (௩௬)

௩௭. அண்டர்குலவனிதையரு மவர்களுடன்குரவைநடித் தவ னுமாவுட், கொண்டதனால்வந்தனனென் றவர்களொடுந்திரிந்து பதிகுறுகிச்சான்ற, புண்டரிகன்குருகைகா வலன்முதலினோரைத் தன் புதல்வனோடுந், தண்டலிலாதருகிருமி னெனவிருத்திப்புண் டரிகன் றன்னைநோக்கா.

(இ-ள்.) இடைப் பெண்களும் அவர்களோடு குரவைக் கூத்தாடி ன கண்ணனெம்மானுமாக எண்ணியதனால் வந்தேனென்று அருளிச்செய்து, அவர்களோடு திரும்பித் தமது ஊரையடைந்து, குணங்கள் நிறைந்த உய்யக் கொண்டார் குருகைகாவலப்பன் முதலியவர்களைத் தமது திருக்குமாரரான ஈசுவர முனிகளோடு பிரியாமல் அருகிலே யிருங்களென்றுரைத் திருக்க வைத்து, உய்யக்கொண்டாரைக் கடாக்ஷித்து (எ-று.) (௩௭)

௩௮. பொருவிலரிசமயநவி றமிழ்மறையின்முறையேயிப் புவி மீதேறு, திருவுடையன்குருகன்முத லினர்களொடுநீவளர்த்திச் சி றக்கவென்னுக், குருகையதிபனைநோக்கி யோகநிலைவழுவாது குயி ற்றுநீயென், றருளினுடனிருவருக்கு மரியமறைப்பொருளனைத்து மறைந்தானெம்மான்.

(இ-ள்.) ஒப்பற்ற அரிசமய ஸ்வரூபத்தைச் சொல்லும் தமிழ்வேதத் தின்படியே இப்பூமியின்மீது ஏறுதிருவுடையதாசர் குருகைகாவலப்பன் முதலியவர்களுடன் நீர் வளர்த்திச் சிறப்படைவீராக வென்றருளிச் செய் து, குருகைகாவலப்பனை நோக்கி யோகநிலையை வழுவாமற் செய்து வருவீ ராக வென்றுரைத்து, அவ்விருவருக்கும் கிருபையோடு இன்னும் அருமையான பொருள்களெவற்றையும் அருளிச்செய்தனர் எமது ஸ்வாமியான ஸ்ரீமந் நாதமுனிகள். (எ-று.) (௩௮)

௩௯. தன்புதல்வன்முகநோக்கித் திருமால்சிங்காதனமித் தலத் தோர்வாழ, நின்புதல்வனெனவுதிக்கு மம்மகவையாமுனப்பேர் நிருமியென்னுப், பின்புதவப்புண்டரிகன் குருகைநாதனைநோக்கிப் பின்சென்றேனும், என்புதல்வன்புதல்வனுக்கிப் பொருளனைத்து நீவிர்நவின் றிடுமினென்றுன்.

(இ-ள்.) தமது திருக்குமாரர் முகத்தைக் கடாக்ஷித்துப் பரமபதநாத னுடைய சிம்மாசனம் இந்தப்பூமியிலுள்ளவர்கள் உஜ்ஜீவிக்கும்படி உமது குமாரனுக அவதரிக்கும். அக்குழந்தைக்கு யமுனைத்துறைவர் என்று திரு நாமகரணஞ் செய்வீராக வென்று அருளிச்செய்து, பிறகு தவத்தையுடை ய உயயக்கொண்டார் குருகைகாவலப்பன் இவர்களை நோக்கி நீங்கள் அநு வர்த்தித்தாவது என்குமாரன் குமாரனுக்கு (பேரனுக்கு) இந்த விசே ஷார்த்தங்களையெல்லாம் சொல்லுவீர்களாக வென்றனர். (எ-று.) (௩௯)

௪௦. *இயம்பியெழுத்தெட்டிதயத் திருத்தியொளிதிகழலகி ரவி போல, வயங்குமுயர்பரமபதத் தெம்பெருமான்றிருவடித்தா மரையேசால, நயந்தரியதவயோகத் திருந்தனனுண்டவன்மருங்கு நண்ணியன்னுன், பயந்ததிருமகளெந்தாய் கேட்டியொருபுதுமை யெனுப் பகர்வதானுள்.

(இ-ள்.) இப்படி அருளிச்செய்து திருவஷ்டாக்ஷரத்தைத் திருவுள்ளத் தில் வைத்துப் பிரகாசமுடைய கணக்கற்ற சூரியர்களைப்போல விளங்கும் உயர்ந்த பரமபதத்திலெழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய திருவடி த்தாமரைகளை மிகவும் விரும்பி அருமையான தவயோகத்திலெழுந்தருளி யிருந்தனர். அப்போது அவர்பெற்ற திருமகள் அவர் சந்நிதியையடைந்து எனது தந்தையே! ஒரு புதுமையைக் கேட்பீராக வென்று சொல்லத் தொ டங்கினர். (எ-று.) (௪௦)

௪௧. குனிதவக்கைகொடுதிருவை நிகர்வனிதையொருத்தியொ டுங் குராங்கினேடும், மனிதரிருவோர்நமது மாளிகைவந்திருக்கின் றூர் வருதியென்னப், பனிதருகண்ணெடும்புளக மெய்யினெடுமடி யார்தம் பவங்கடீர்க்கும், புனிதவிராகவன்முதலோரெனத்திருமா ளிகைவிரைவிற் போந்துகானுன்.

(இ-ள்.) வளைக்கும் வில்லைக் கையிற்கொண்டு பெரியபிராட்டியாருக்குச் சமானமான பெண்ணொருத்தியோடும ஒரு குரங்கோடும் இரண்டு மனிதர்கள் நமது திருமாளிகைக்கு வந்திருக்கின்றார்கள்; வருவீராக வென்றுரைக்க, ஆநந்தபாஷ்பம் வரும் திருக்கண்களோடும புளகமுண்டாகும் திருமேனியோடும் அடியார்களது பிறவிப்பிணியைத் தீர்க்கும ஸர்வலோகபாவநனான சக்ரவர்த்தித் திருமகன் முதலானவாகளென்று திருவுள்ளத்திற் கொண்டு தமது திருமாளிகைக்கு விரைவாக வந்து அவர்களைக் காணுதவராகி (எ-று) (சஎ)

இராகவன் முதலியோரென்றது சக்ரவர்த்தித் திருமகன் இளையபெருமாள் சீதாபிராட்டி திருவடி என்பவர்களை.

சஉ. மீண்டுதிருவீதியினோர்க் கேட்பவவரன்னோரின்னே விலவினோரகள், ஈண்டுமெழிலவனிதையொடுங் குரங்கினொடும்போகின்றரெனப்பின்னேகிக், காண்டுமெவணேனுமெனக் கங்கைகொண்டசோழபுரங் காறுஞ்சென்றான், ஆண்டுமெவாகாணகிலா னுடனுறவாப்பரமபதத் தவரைக்கண்டான்.

(இ-ள்.) திரும்பிவந்து திருவீதியிலுள்ளவர்களைக் கேட்க அங்குள்ளவர்கள், வில்லைத் தரித்த இருவர், கூடிய அழகையுடைய பெண்ணோடும் குரங்கோடும் இப்பொழுதே போகின்றார்களென்று சொல்லப் பின்னே போய அவர்களை எங்கேனும காணுவோமென்று கங்கைகொண்ட சோழபுரம வரையிற சென்றனர்; அவ்விடத்திலும் அவர்களைக் காணுதவராகித் திருமேனியைத் துறந்து பரமபதத்தில் அவர்களைச் சேவித்தனர். (எ-று.) (சஉ)

சரு. தங்குரவன்பின்னேகிப் புண்டரிகனேமுதலோர் தனயனோடும், பொங்குதுயாக்கடன்மூழ்கிப் புலம்பினராங்கயார்கருமம் புதல்வன்றன்னால், அங்குமுடித்தனர்குரவன் றுயின்றதலத்தினிற்குகையொன் றமைத்தியோகத், தெங்குரவற்றணக்கிலே னெனக குருகைகாவலன்வீற் றிருந்தானிப்பால.

(இ-ள்.) தமது ஆசாரியர் பின்னேசென்று உய்யக்கொண்டார் முதலானவர்கள அவரது திருக்குமாரரோடு மேலிட்ட துக்கசமுத்திரத்தில் முழுகி அழுது, செய்யவேண்டிய கிரியைகளைத் திருக்குமாரரால் அவ்விடத்தில் முடித்தனர். பிறகு தமது ஆசாரியர் திருத்துயிலமர்ந்த இடத்தில் குகையொன்றை யமைத்து எமது ஆசாரியரைப் பிரியமாட்டேனென்று குருகைகாவலப்பன் யோகத்தி லெழுந்தருளியிருந்தனர். (எ-று.) (சரு)

சச. புண்டரிகனெனுமுய்யக் கொண்டானுநாதமுனி புகன்றசால்புட், கொண்டவனிமிசைத்திருவாய் மொழிவிளங்கவிரித்தனுவுங் கோதில்ஞானத், தெண்டவர்களொடுமிருந்தா னக்காலத் துயர்குமுத னென்னுந்தேவன், மண்டனிலோர்மறையவன்பாலுதித்தலுஞ்சீராமனென வகுத்தானுமம்.

(இ-ள்.) புண்டரீகாக்ஷ ரென்னும் உய்யக்கொண்டாரும் ஸ்ரீமந்நாதமுனிகள் அருளிச்செய்த பிரகாரத்தைத் திருவுள்ளத்திறகொண்டு பூமியின் மீது திருவாய்மொழி விளங்கும்படி பரவச்செய்து அணுவளவுங் குற்றமில்லாத ஞானத்தையுடைய தெள்ளிய தவத்தையுடையவர்களோடு மெழுந்

தருளியிருந்தனர். அக்காலத்தில் உயர்ந்த குமுதரென்னும் நித்திய சூரியர் பூமியினிடத்து ஒரு பிராமணரிடத்தில் திருவவதாரஞ் செய்தலும் அவருக்கு ஸ்ரீராமரென்று திருநாமகரணஞ் செய்தனர். (எ-று.) (௬௪)

௬௫. அன்னவனையேமணக்கா னம்பியென்பாரவன்முதலா வல னின்மேலோர், பன்னருஞ்சீர்ப்புண்டரிகன் பதத்தனுகிவழிபடுநாட் பகர்சீராமன், இன்னலுறு திருபருவம் பரிந்தேத்தக்கருணையுளத் தெய்தநோக்கித், தன்னகத்துட்பொருளனைத்து நவின்றுபொருட் சரமமும்பின் சாற்றுங்காலை

(இ-ள்.) அவரையே மணக்கால் நம்பியென்று சொல்வார்கள். அவர் முதலாகக் கணக்கற்ற மேலோர்கள் சொல்லுவதற்கரிய வைபவத்தை யுடைய உய்யக்கொண்டார் திருவடிகளை யாசிரயித்து வழிபடும்நாளில் யாவரும் சொல்லும மணக்கால்நம்பி, வெறுப்படையாமல் இரண்டு பொழுதிலும் பிரீதியோடு வழிபட்டுவர அதனால் உய்யக்கொண்டார் தமது திருவுள்ளத்தில் கருணை மிகும்படி பார்த்துத் தமது திருவுள்ளத்திலுள்ள அர்த்தங்களைவற்றையும் அருளிச்செய்து பிறகு சரமசுலோகார்த்தத்தையும் அருளிச்செயயுமபோது, (எ-று) (௬௫)

௬௬. சீராமமுனிவரனு மவனிருதாள்பணிந்தெவர்க்குந் தேவ நின்பேர், நாராயணன்சமய நிறுத்தயாராவரினி ஞாலத்தென்ன, ஆரார்வத்தெமையடைந்த முதலிகளொண்ணிலரோடு மண்ணி னீயே, பாரார்வமுறவிருத்தி மேனாதமுனிபாலன் பாலனாவான்.

(இ-ள்.) மணக்கால் நம்பியும் உய்யக்கொண்டாரது இரண்டு திருவடிகளைப்பணிந்து யாவருக்குந் தெய்வம்போன்றவரே! உமது திருநாமத்தையும் ஸ்ரீமந்நாராயணனுடைய சமயத்தையும் நிர்வகிக்கும்படி பூமியில் இனி யாராவர் என்று கேட்டருள, அவர், நிறைந்த பிரீதியோடு என்னை ஆசிரயித்த கணக்கற்ற முதலிகளோடு சேர்ந்து நீவிரே பூமியிலுள்ளவர்கள் பக்தி பெறும்படி இருப்பீராக; அதற்குமேல் ஸ்ரீமந்நாதமுனிகள் திருக்குமாரரான ஈசுவரமுனிகளுக்குத் திருக்குமாரரானவர் தர்சனநிர்வாஹகராவர். (எ-று.) (௬௬)

௬௭. அவனைவலிதடைந்தேனு நினக்குநவின்மறையனைத்து மறைதியன்னான், நிவலகன்றிடத்திருமால் சமயநமர்யாவரினுந் திருத்த வல்லான், புவனமவனருளதனான் மிகவிளங்குமெனநவிலாப் புரநீத்தென்றும், பவமதகல்விபவமரு டிருநாட்டிற்பரந்தாமன் பதத்தைச்சார்ந்தான்.

(இ-ள்.) நீவிர் அவரைப் பலாத்காரமாகச் சேர்ந்தாயினும் உமக்கு அருளிச்செய்த ரஹஸ்யார்த்தங்களை யெல்லாம் அருளிச்செய்வீராக; அவர் பூமியில் கெடுதியறும்படி பெரிய பிராட்டியாருக்கு நாயகனான பெருமானது சமயத்தை நம்மவர்கள் யாவரினும் திருத்த வல்லராவர். அவரருளாலே பூமி மிகவும் விளங்கும் என்று அருளிச்செய்து திருமேனியை நிவர்த்தித்துப் பிறப்பற்ற வைபவத்தை யளிக்கும் திருநாட்டில் பரமபத நாதனது திருவடிகளை யடைந்தனர். (எ-று.) (௬௭)

வேறு.

௪௮. பொருவிறுதமா முனிவனும்புகழ்ப் புண[illegible]ண்ட ருததார், மருவு[illegible]ற் றிருவிஞயகன் வண்மை[illegible] தொண்மையெய்தினர், ஒருவி[illegible]ஞானமுந் திருவு[illegible]ண்மையாவையுந் திண்மை[illegible]ந, தருமியாமுனக் குரு[illegible]மாக்கதைத் தன்மைகூறுவா[illegible]ன்மையேவே.

(இ-ள்.) ஒப்பற்ற பெருமைபொருந்திய ஸ்ரீமந்நாதமுனிகளும் கீர்த்தியையுடைய உயயக்கொண்டாரும் வண்டுகள் நீங்காத மாலையணிந்த நீட்சியையுடைய கூந்தலையுடைய திருமகள் நாயகனுடைய திருவடிகளில் ஒழுங்குடனடைந்தார்கள். இனி நீங்காத ஞானமும் செல்வமும பெருமையும் உண்மையானவையும் திண்மையான பக்தியும் அருளும் கொடுக்கும் யாமுநாசாரியரது விசேஷமான வைபவப்பிரகாரத்தை [illegible]மையுண்டாகும்படி சொல்லுவோம். (எ-று.) (௪௮)

ஸ்ரீமந்நாதமுனிகள், கலியுகம் ௩௪௮௩-ம் வருஷமான சோபகிருது வருஷம் ஆனிமாதம், சுக்லபக்ஷம திரயோதசி அநுஷ நக்ஷத்திரம் புதவாரம் கூடின தினத்தில் திருவவதாரஞ்செய்து ௩௫௧ வருஷம் இந்நிலவுலகில் யோகவலியால் எழுந்தருளியிருந்தனர்.

உயயக்கொண்டார், கலியுகம் ௩௩௨௭-ம் வருஷமான பராபவ வருஷம் சித்திரை மாதம் சுக்லபக்ஷம் பிரதமை கிருத்திகை புதவாரம் கூடிய தினத்தில் திருவவதாரஞ் செய்து இவ்வுலகில் ௧0௫ வருஷம எழுந்தருளியிருந்தனர்.

நாதமுனிச்சருக்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ

# கரு-வது யாமுநச்சருக்கம்.

க. எண்ணிறுமுநிவர்களுடனுமென்னையாளு
அண்ணலசீராமனுமனந்தன்மேற்றுயில்
பண்ணவன்சமயமாம்பயிர்க்குமேகமாய்
மண்ணவர்வணங்கியேவழுத்தவைகுநாள்

(இ-ள்.) கணக்கற்ற முநிவர்களுடனும் என்னையாளும் பெருமையிற் சிறந்த மணக்கால்நம்பியும் திருவநந்தாழ்வான்மீது அறிதுயிலமரும் பெருமானது சமயமாகிய பயிருக்கு மேகமாகிப் பூமியிலுள்ளவர்கள் வணங்கித் துதிக்கும்படி எழுந்தருளியிருக்குங் காலத்தில், (எ-று.) (க)

உ. மாதவன்றனதணிமணிசசிங்காதனம்
ஏதமின்றுமாமுனிவனின்றருள்
காதலனமனைவிபாற்கருப்பமல்குறுப
பூதலத்துதித்ததோர்புதல்வனுகியே.

(இ-ள்.) ஸ்ரீயப்பதியினது அழகிய மணிமயமான சிங்காசனமானது குற்றமற்ற ஸ்ரீமந்நாதமுனிகள் ஈன்றருளிய திருக்குமாரரான ஈசுவர முனிகள் தேவியாரது கர்ப்பத்தில் நிறைந்து ஒரு புதல்வனுகிப் பூமியிலவதரித்தது. (எ-று.) (உ)

ங. பயந்தருண்முனிவனுநோக்கிப்பாலனை
நயந்தியாமுநபெயர்விரித்துநாளகளின
அயர்ந்தனன்கருமமுமரபினையனும்
உயர்ந்தனன்மறையினிதோதன்மேயினுன்.

(இ-ள்.) பெற்றளித்த ஈசுவரமுனிகளும் பாலனைப்பார்த்துப் பிரீதியுடையவராகி யமுனைத்துறைவர் என்னுந் திருநாமமிட்டுத் தகுந்த நாள்களில் செய்யவேண்டிய கருமங்களையும் செய்தனர். யாமுநாசாரியரும் முறையாக வளர்ந்து வேதத்தை யினிதாக அத்தியயநஞ் செய்யத்தொடங்கினர்.(எ-று.)

ச. பொழுதொடுகுரவனையடைந்துபூங்கழல்
தொழுதவன்குணனுரைத்தடங்கித்தொன்மறை
பழுதறநவில்கெனநவின்றுபாங்கரின்
எழுதுசித்திரமெனவிருந்துகற்குநாள்

(இ-ள்.) பொழுதோடு ஆசாரியரை யடைந்து, அவரது அழகிய திருவடிகளைத்தொழுது, வாழ்த்தி, அடக்கமாயிருந்து, பழமையான வேதத்தைக் குற்றமற அத்தியயநஞ் செய்வாயாக வென்று சொல்லத் தாம் அத்தியயநஞ்செய்து அவரருகே எழுதிய சித்திரம்போல இருந்து அப்பியசித்துக்கொண்டு வருநாளில், (எ-று.) (ச)

ரு. ஓதுநூல்நெருநலென்னுளததிலார்ந்ததிப்
போதிதுநவிறலென்பொருவிலாயிதன்
மீதுநீநவில்கெனுவிளம்புமேதையான்
யாதுமாங்கரிதெனுதெளிதிற்கற்றனன்.

(இ-ள்.) ஓதிவரும்நூலில் நேற்று என்னுள்ளத்தில் பதிந்ததான இந்தப் பாடத்தை மறுபடியும் இப்போது ஓதுதல் யாதுக்கு? ஒப்பற்றவரே! இதற்குமேல் ஆகத்தக்க பாடத்தை நீர் சொல்லுவீராக என்று சொல்லும் ஞானத்தையுடையவராகி எதுவும் அருமையென்னுமல் எளிதில் கற்றனர். (எ-று.) (ரு)

சு. சுருதிநூன்முறைமணம்புரிந்துதோன்றரும்
பொருண்மைமாபாடியம்புணரிசூழ்தரும்
இருநிலத்திவனேநேரிலரென்றேதல்சால்
ஒருகுரவனையடைந்தோதலுற்றனன்.

(இ-ள்.) வேதசாஸ்திர முறைப்படி கலியாணம் செய்துகொண்டு தோன்றுவதற்கரிய பொருளையுடைய மஹாபாஷ்யத்தைச் சமுத்திரஞ்சூழ்ந்த பெரிய பூமியில் இவருக்குச் சமானமானவர்களில்லையென்று துதித்தல் மிகுந்த ஒரு ஆசாரியரையடைந்து கற்கத் தொடங்கினர். (எ-று.) (சு)

பாணினி பகவான் செய்த பாணினீயம் என்னும் இலக்கணத்துக்குப் பதஞ்சலிபகவான் செய்த உரை மஹாபாஷ்ய மெனப்பெறும்.

எ. அன்னவன்படிகருநாளருக்கன்றொல்குல
மன்னவன்புரோகிதனொருவன்மாநிலத்
துன்னரும்பாடியத்துயர்ந்தயாவருந்
தன்னடிவணங்கவோர்தலைமைபூண்டுளான்.

(இ-ள்.) அவர் கற்றுவருநாளில் பழமையான சூரிய வமிசத்திலுதித்த சோழனுக்குப் புரோகிதனொருவன், பெரிய பூமியில் நினைத்தற்கரிய மஹாபாஷ்யத்தில் வல்லவர்களான யாவரும் தன் அடியை வணங்கும்படி ஒரு சிரேஷ்டத்தன்மை யடைந்திருந்தனன். (எ-று.) (எ)

அ. அவனுயர்பாடியத்ததிகராயினோர்
எவரையுந்திறைகவர்ந்திணையில்யாமுநன
உவகைகூர்குரவனுமுதவுவான்கரந்
தவலிலோலைச்சுருட்டரவுபோக்கினன்.

(இ-ள்.) அப்புரோகிதனும் உயர்ந்த மஹாபாஷ்யத்தில் வல்லவரானவர்களெவரிடத்திலும் சப்பம் பெற்று, ஒப்பற்ற யமுனைத்துறைவர் விரும்பிய ஆசாரியரும் கப்பம் செலுத்துவதற்காகக் கெடுதலில்லாத ஓலைச்சுருட் கட்டளையை யனுப்பினன். (எ-று.) (அ)

கூ. தரவுகாண்டலுமிகத்தளர்ந்துபாடியக்
குரவனுமரந்தையுற்றபூங்கக்கோதிலா
வரமுனியாமுநன்வருந்தனீயெனுப்
பரவினன்சுருளினைப்பறித்துக்கீண்டனன்.

(இ-ள்.) மஹாபாஷ்ய ஆசாரியரும் அந்தக் கட்டளையைக் காணுதலும் மிகவும் தளர்ந்து துன்புற்று இரங்க, அப்போது குற்றமற்ற சிறப்புடைய மகசீலரான யாமுநாசாரியர் நீவிர் வருந்த வேண்டாவென்று கூறி ஆசாரியரை வணங்கி அந்தச்சுருளை வாங்கிக் கிழித்துவிட்டனர். (எ-று.) (கூ)

௧௦. ஆதிநூற்பாடகர்கவிகளாயுயர்
போதிடுமவர்களுளொருவரன்றியாம்
வாதிகளெனுமவர்மதத்தைநீக்கவிம்
மேதினிக்கரியெனும்பொருள்விளங்கவே

(இ-ள்.) வேதபாடகர்களாயும் கவிகளாயும் உயர்வாகச் சொல்லு மவர்களில் யாம் ஒருவரல்லேம்; இப்பூமியில் வாதிகளாயுள்ள யானைகளின் மதத்தை யொழிக்கச் சிங்கமாயுள்ளேம் என்னும் பொருள் விளங்கும் படி (எ-று.) (௧௦)

௧௧. நுனைவினிற்கிரந்தமொன்றோதித்தொண்டினை
வினையுரைப்போன்கரத்துதவவெய்தினிற்
றனைவிடுதருள்புரோகிதனைசார்ந்தவன்
இனைதலுற்றிருபதமிறைஞ்சியீந்தனன்.

(இ-ள்.) விரைவில் கிரந்தமொன் றருளிச்செய்து தொண்டு செய்வதோடு காரியஞ் சொல்லுவோன் கைகளிற் கொடுக்க, அவன விரைவாகத் தன்னை அனுப்பின ராஜபுரோகிதனைச்சார்ந்து வருந்தி அவனது இரண்டு பாதங்களையும் வணங்கிக் கொடுத்து, (எ-று.) (௧௧)

௧௨. சொற்றனன்சுருள்கிழித்ததுவுந்தொல்புவிக்
கொற்றவன்புரோகிதன்கொதித்துவேந்தன்மாட்
டுற்றவன்வலிநவின்றவன்றனோலையை
மற்றயாமுநன்மிசைவலிதினேவினான்.

(இ-ள்.) கட்டளைச்சுருளைக் கிழித்ததுவும் சொல்லினன். பழமையான பூமிக்கு அரசனது புரோகிதன் கோபித்து அரசனிடத்தடைந்து அவரது வலிமையைச் சொல்லி அரசனது ஓலையை யாமுநாசாரியர் மீது பலாத்காரமாக விட்டனன். (எ-று.) (௧௨)

௧௩. காண்டலுநகைத்தியாமுநனுங்காசினி
ஆண்டவனிருப்புமுங்கிழிப்பவாங்கது
மீண்டவன்றூதனுநவிலவேந்தனும்
ஈண்டவற்காண்குவாமென்னுமாசையான்

(இ-ள்.) அதைக் காணுதலும் யாமுநாசாரியரும் நகைத்துப் பூமியையாளுமரசனது நிருபத்தையும் கிழித்துவிட, அதனை அவன் தூதனும் மீண்டு போய்ச் சொல்ல, அரசனும் இவ்விடத்தில் அவரைக்காணுவோ மென்னும் விருப்பமுடையவனாகி (எ-று.) (௧௩)

௧௪ கதிர்மணிச்சிவிகையுங்கழையும்பைங்கதிர்
எதிர்மணிக்கலன்களுமினிதினேவலும்
முதிர்குரல்யாமுநமுனியுமும்முர
சதிர்கடையரசர்கோனவையைநண்ணினன்.

(இ-ள்.) பிரகாசமுடைய மணிமயமான பல்லக்கும் கொடியும் பசிய ஒளியை வீசும் ரத்தினங்களிழைத்த ஆபரணங்களும் இனிமையோடு அனுப்புதலும் முதிர்ந்த மிடற்றோசையையுடைய யாமுநாசாரியரும் மூன்று பேரிகைகளும் ஒலிக்கும் தலைவாசலையுடைய ராஜசபையை யடைந்தனர். (எ-று.)

௧௫. செழுந்தமனியமணிசசிகரமேருவின்
அழுந்தவோர்புலிபொறுத்தவனியாண்டருள்
தொழுந்தகைவளவனுஞ்சுருதிநாதனை
எழுந்தருள்கெனவெழுந்திருக்கையீந்தனன்.

(இ-ள்.) அப்போது, செழுமையான பொன்மயமாய அழகிய சிகரத்தையுடைய மேருவினிடத்துப் பதியும்படி ஒப்பற்ற புலிக்கொடியை நாட்டிப் பூமியை யாண்டருளும் தொழக்கூடிய பெருமையையுடைய சோழராசனும் வேதமே யுருக்கொடுவந்ததுபோன்ற யாமுநாசாரியரை எழுந்தருள்வீராக வென்று கூறித் தான எழுந்திருந்து ஆசனங்கொடுத்தனன். (எ-று.) (௧௫)

வேறு.

௧௬. உமைபதத்தளிராற்புனிதமாஞ்சார லிமயமாலவரைகரு நீளுவகை, அமைநிகாதிருததோட்சனகியானனத்தா மரைகருளணியசேதுவுக்கும், சமைசெவிததுணராமிருசுடருதயாத் தமகிரிக்கிடையதாந்தலத்துள், எமைநிகர்த்திடவேறொருவனைத்தேடற் கரிதெனசுகவியிசைத்தெழுதா

(இ-ள்.) உமாதேவியாருடைய பாதங்களாகிய தளிர்களாலே பரிசுத்தமடைந்த சாரலையுடைய பெரிய இமயகிரிக்கும் பெரிய உவப்பையருளும் மூங்கில்போன்ற திருத்தோள்களையுடைய சானகிப் பிராட்டியாருடைய திருமுகமாகிற தாமரையிலுள்ள திருவருள் நெருங்கிய சேதுவுக்கும், சந்திர சூரியர்கள் கர்ணபுஷ்பங்களாயமைந்த உதயகிரிக்கும் அஸ்தமயகிரிக்கும் இடைப்பட்ட பூமியில் எம்மை நிகர்க்கும்படி வேறொருவனைத் தேடுவதற்கு அரிதென்று ஓர் கவியை யருளிச்செய்து எழுதி (எ-று.)

௧௭. மறைமுதன்முனிவோர்வரகவிவிபுதர் மருவவேமனைவியோடிருந்த, இறையவைஞாங்கரெழுதுபத்திரமீ திமிழ்த்தியாமுநமுனியிருந்தான், அறைகழலரசுமெம்புரோகிதனோ டறைதிநீவாதமெனறருளா, நிறையமைதலைவிதிருமுகநோக்கா யாவர்வெல்பவர்நிகழ்த்தென்றான்.

(இ-ள்.) வேதங்களையுணர்ந்த முதன்மைவாய்ந்த முனிவர்களும், வரகவிகளில் வல்ல அறிஞர்களும், சூழ்ந்திருக்கத் தன் மனைவியுடனிருந்த மன்னன் சபையினிடத்தில் சித்திரமெழுதிய ஆசனத்தின்மீது கர்ச்சனையையுடைய யாமுநாசாரிய ரிருந்தனர். ஒலிக்கும் வீரகண்டையைத்தரித்த அரசனும் எமது புரோகிதனோடு நீ வாது செய்வாயாக வென்று சொல்லி, நிறையமைந்த தனது மனைவியின் அழகிய முகத்தைப்பார்த்து இப்போது யார் வெல்வார்கள் சொல்லுவாயாக வென்றனன். (எ-று.) (௧௭)

௧௮. ஈசனேயெதிர்வந் திகலினும்வெல்வோன் யாமுநமுனிவனேயென்றாள், வாசவார்வேந்துமவனிடைந்தனனேல் வருசினம்யாதெனமயிலும், பூசல்வாய்ஞமலிக்குணவெரித்திடுவ 'னென்றனள்புரோகிதனிடையிற், காசணிமுலையாய்காசினிபாகந் தருவலென்றனன்புகழ்க்கண்டன்.

(இ-ள்.) ஈசனே எதிரிட்டுவந்து பகைத்தாலும் வெல்லுமவர் யாமுந முனிவரேயென்றனள். பொருந்திய அரைக்கச்சையணிந்த அரசனும் அந்த யாமுநாசாரியர் தோற்றாராயின என்ன சபதம் என்றனன்; மயில்போன்ற தேவியும குலக்கும வாயையுடைய நாயக்கு உணவைச் சமைத்திடக்கடவே னென்று சொல்லினள். அதற்குப் புகழையுடைய சோழன், புரோகிதன் தோற்றானுயின் வடங்களணிந்த தனங்களையுடையவளே! எனது பூமியில் பாதிபாகந்தருவே னென்றனன். (எ-று.) (கஅ)

வேறு.

கசு. வளவனுந்தேவிதானுஞ்சபதமிம்மாபேசுறும்
அளவையினபயன்வாயிற்புரோகிதனுக்கியாழ்வான்
குளவனல்விழியானக்கபாதன்மேற்கொதித்தாலென்னத்
துளவமாலனையயாமுநற்கெதிர்சுளித்துசசொலவான்.

(இ-ள்.) சோழனும் அவனது தேவியும் இப்படி சபதங்கூறுமளவில் சோழனது வாயிற் புரோகிதனை ஆக்கியாழ்வான், நெற்றியில் நெருப்பு கண்ணையுடைய சிவபிரான அக்ஷபாதராகிய திருமழிசைப்பிரான்மீது கோபித்ததுபோலத் திருத்துழாய்மாலையணிந்த பெருமானுக்குச் சமானமான யாமுநாசாரியருக்கு எதிராகக் கோபித்துச் சொல்லுவானுயினன். (எ-று.)

உ0. இகலியன்றென்றதாமென்றிசைப்பலாமென்றவெல்லாம்
சகமதித்திடவன்றெனபனிம்முறைதருக்கமாருய்ப்
புகலிடத்திடைந்துளோாக்குப்பாதுகம்புகல்வாய்ச்சுண்ணம்
பகர்திமுந்துறநீயென்னயாமுநன்பகர்வதானுன்.

(இ-ள்.) பகைத்து, நீ அல்ல எனறதை நான் ஆம் என்று சொல்லுவேன்; ஆம் என்றதை யெல்லாம் அல்ல வென்று சொல்வேன்; இம்முறையே மாறுபட்டு வாது பேசுமிடத்துத் தோற்றவர்களுக்குரிய சபதம் பாதரக்ஷையைச் சுமத்தலாகும. ஆகவே முன்னே நீ சொல்லுவாயாக வென, யாமுநாசாரியர் சொல்லத் தொடங்கினர். (எ-று.) (உ0)

உக. உன்னையீன்றருடாய்வந்தையலள்கடலுலகிற்கெல்லாம்
அன்னையேயரசன்றேவியருந்ததியனையகற்பாள்
என்னையுத்தரநீசொல்வதெனசசமழ்ந்திருந்தான்பின்னர்
முன்னைநூற்சுருதியாதிபனுவலான்முழுதும்வென்றுன்.

(இ-ள்.) உம்மைப்பெற்ற தாயானவள் மலடி யல்லள்; கடல்சூழ்ந்த உலகத்திலுள்ளவர்களுக் கெல்லாம் அன்னையைப் போன்ற அரசன் மனைவி அருந்ததிபோன்ற கற்பையுடையவள்; (இதற்கு) நீ என்ன பதில் சொல்வீர் என்று கூற, (புரோகிதன் ஒன்றும் பதிலுரையாமல்) நாணியிருந்தனன். அதன பிறகு முன்னை நூலாகிய வேதமுதலான சாஸ்திரங்களாலும் (யாமு நாசாரியர் ராஜபுரோகிதரை) முழுதும் வென்றனர். (எ-று.) (உக)

உமது தாய் புத்திரவதி, இராஜபத்தினி ஏகபதிவிரதை என்று ஸ்ரீ ஆளவந்தா ரருளிச்செயததை ஆக்கியாழ்வான் மறுத்துரைக்க வேண்டு மாயின் தன்றாய்க்குத்தான் குமாரனுயிருத்தலால் அவளை மலடியென்று சொல்லவும் இராஜபத்தினி ஏகபதிவிரதையல்லள் என்று சொல்லவும் வகைகாணுது திகைத்தனரென்க. அரசன் வேண்டுகோளால் ஸ்ரீ ஆளவந்

தார் தாமே இவற்றை மறுத்துரைத்தபோது, "ஒருமரமுந் தோப்பல்ல ஒரு பிள்ளையும பிள்ளையல்ல" என்று சொல்வதுண்டாதலால் ஆக்கியாழ் வார் தன தாய்க்கு ஒரே புதல்வராதலால் அவர் தாய் வாழைமலடி என றுரைத்தனரெனவும், பெண்கள் சந்திரனுக்கும், கந்திருவனுக்கும் அக்கி னிக்கும உரியோராயிருந்ததனபிறகே ஒரு புருஷனுக்கு மனைவியாவர் என று சாஸ்திரங்கள் சொல்லுவதால் சாஸ்திர முறைப்படி ராஜபத்தினி ஏக பதிவிரதை யன்றெனவும் எடுத்துக் காட்டினரென்க.

௨௨. தோற்றவர்க்குரியசுண்ணம்பதத்தினிற்றேடுதோலென்றீண்
டாற்றனீபுகன்றாய்வேந்தன்புரோகிதனாதலானும்
ஏற்றமார்குலத்தோயாதலானுமீதிழையேனிச்சூள்
சாற்றவுங்கருதேனென்றான்சகமெலாமதிக்கத்தகோன்.

(இ-ள்.) தோல்வியடைந்தவர்களுக்குரிய சபதம் பாதரக்ஷையைச் சுமத்தல் என்று இவ்விடத்தில வலிமையுடன் நீவிர் சொல்லினீர்; ஆயின் நீர் அரசனது புரோகிதராதலாலும் சிறப்புடைய பிராமண குலத்திற் பிறந்தவராதலாலும் இதனை விதிக்கவுமாட்டேன்; இந்தப் பிரதிக்கினை யைச் சொல்லவும் நினைக்கமாட்டேனென்றனர் உலகமெல்லாம் மதிக்கத் தகுந்த யாமுநாசாரியர். (எ-று.) (௨௨)

௨௩. வென்றயாமுநன்றாள்சென்னிபுரோகிதன்வீழ்ந்துபோற்றி
அன்றவற்கடியனானெழுந்தனளரசன்றேவி
சென்றனடழீஇத்தாள்வீழ்ந்தீண்டெனதுசூள்சிதைவதாகா
தென்றனையாளவந்தாரோவெனாவிசைத்துநின்றாள்.

(இ-ள்) இப்படி வென்றவரான யாமுநாசாரியரது திருவடிகளில் சோழராசனது புரோகிதர் விழுந்து துதித்து அன்று அவருக்கு அடிமை யாயினன். அப்போது அரசன மனைவி எழுந்து சென்று தழுவிககொண் டு யாமுநாசாரியரது திருவடிகளில் விழுந்து இப்போது எனது சபதம் கெ டாமல் எனனை ஆளவந்தவரோ நீர் எனறு சொல்லி நினறனள். (எ-று.) ()

௨௪. பணிந்தனளரசெற்கீந்தபாதிநாடடிகட்கீந்தேன்
அணிந்தநூன்மார்பத்தண்ணலென்றனளரசன்றானுந்
துணிந்தவன்றன்னைவென்றாய்நீகடற்றுயின்மாலென்றுத்
திணிந்ததோள்படியிற்றோயப்பணிந்துயர்சிறப்புமிக்கான்.

(இ-ள்.) பணிந்தவளாகி அரசன் எனக்குக்கொடுத்த பாதிராச்சியத் தை ஸ்வாமிகட்குக் கொடுத்துவிட்டேன் முப்புரிநூலணிந்த திருமார்பை யுடைய பெருமையிற் சிறந்தவரே! என்றனள். அரசனும் துணிவடைந்து புரோகிதரானவரை வென்றீரே நீர் கடலில் அறிதுயிலமரும் பெருமானெ ன்று வலிமையையுடைய தோள்கள் பூமியிற் படியும்படி பணிந்து உயர்ந்த சிறப்புக்களை அதிகமாகச் செய்தனன். (எ-று.) (௨௪)

௨௫. அகமகிழ்ந்தரசன்றேவியாளவந்தாரென்றன்பாற்
பகர்மொழிதன்பேராகப்பார்புரந்தனனிப்பான்மை
புகலருந்தகைமைசான்றபுண்டரீகன்றாள்போற்றுந்
தகளில்சீராமன்கேளாக்காண்குவான்றனைவின்வந்தான்.

(இ-ள்.) மனமகிழ்ந்து சோழராசன் மனைவி ஆளவந்தார் என்று அன்போடு சொல்லிய மொழி தமது திருநாமமாகும்படி யாமுநாசாரியர் அப்பூமியைக் கைக்கொண்டு ஆண்டனர். இந்த விதத்தைச், சொல்வதற்கரிய பெருமை நிறைந்த உய்யக்கொண்டாருடைய திருவடிகளைப் போற்றும் குற்றமற்ற மணக்கால்நம்பிகள் கேட்டு அவரைக் காண்பதற்காக விரைவாக வந்தனர். (எ-று.) (உரு)

௨௬. புவிபுரந்தருளுநீர்மைப்புரந்தரன்பொருவப்பொற்பூந்
தவிசினிலிருந்துவாழும்யாமுநன்றன்பாற்றன்சொல
நவில்பவரொருவர்க்காணுன்வாயில்வாரணத்தானுளும்
அவிர்கதிர்மணிப்பூணணையவையினுமணுகலாற்றான்.

(இ-ள்.) பூமியையாளும் தன்மையாலே தேவேந்திரனுக்குச் சமானமாகப் பொன்மயமான அழகிய ஆசனத்திலிருந்து வாழ்ந்துகொண்டிருக்கும் யாமுநாசாரியரிடத்தில் தமது சொல்லைக் (கொண்டுபோய்ச்) சொல்லுமவரொருவரையுங் காணுதவராயும் வாசற்றடையினுலே மிக்க பிரகாசமுடைய ரத்தினங்களிழைத்த ஆபரணங்களையணிந்த யாமுநாசாரியரை ஒவ்வொரு தினமும் ராஜசபையிலும் போய்க் காணமுடியாதவராயும், (எ-று.) (உசு)

௨௭. தெருமராவிவனைக்காணும்விரகியாதெனத்தன்சிந்தை
ஒருமையானோர்ந்தங்கண்ணன்மடைப்பளிக்குரியோர்பாங்கர்
அருமையானணுகிநுங்கோவினிமையாலயில்சிற்றுண்டி
பொருவிலீருரைமினென்னத்தூதுளைப்போதாமென்றார்.

(இ-ள்.) இப்படி கலங்கி இவரைப்பார்க்கும் உபாயம் என்னவென்று தமது சிந்தை யொன்றுடனே யோசித்து அவரது மடைப்பள்ளிக்கு உரியவர்களிடத்தில் கஷ்டப்பட்டுச் சென்று உமது அரசன் இனிமையோடு உட்கொள்ளும் பதார்த்தத்தை ஒப்பற்றவர்களே! சொல்லுவீர்களாக வென்று கேட்க அவர்கள் தூதுளைப்பூ என்று சொன்னார்கள். (எ-று.) (உஎ)

௨௮. இனியதூதுளைப்பூக்கொய்தாண்டீராறுதிங்களீந்தான்
புனிதயாமுநனுந்தேராதிருத்தலாற்புகழ்சிராமன்
நனிதளர்ந்தொருநாணல்காதொழிதலானுட்டஞ்சேப்பக்
குனிபிருகுடிமீசெல்லமடையரைக்கொதித்துநோக்கா

(இ-ள்.) அவருக்கு இனிமையான தூதுளைப்பூவைப் பறித்துவந்து அங்கு ஓராண்டு காலங் கொடுத்தனர். அதற்குப் பரிசுத்தரான யாமுநாசார்யர் தம்மை யுணராமலிருத்தலால் கீர்த்தியையுடைய மணக்கால்நம்பிகள் மிகவுந் தளர்ந்து ஒருநாள் கொடாமல்விட்டதினுலே யாமுநாசாரியர் கண்கள் சிவக்கும்படி வளைந்த புருவம் மேலே போகும்படி மடைப்பள்ளியிலுள்ளவர்களைக் கோபித்துப் பார்த்து (எ-று.) (உஅ)

௨௯. அடுதுணர்த்தூதுளைப்போதயர்த்தவாறறைமினென்ன
வடுவிலாய்கேண்மோமூத்தவயிணவனொருவனுளும்
இடுவனின்றயர்த்தானென்னவவனைநீரெம்முனளை
விடுமெனவவருமன்னன்றன்னையம்முறையேவிட்டார்.

(இ-ள்.) நிதமும் சமைக்கும் கொத்தாயிருக்கும் தூதுளைப்பூவை மறந்தவிதம் சொல்லுங்களென்று கூறக் குற்றமற்றவரே! கேட்பீராக; முதுமைப்பருவமுள்ள ஸ்ரீ வைஷ்ணவரொருவர் தினமும் கொண்டுவந்து கொ

டுப்பார்; இன்று மறந்தனர் என்று கூற, அவரை நீங்கள் எமக்குமுனனே நாளைத்தினம் கொண்டுவந்து விடுங்களென்று கட்டளையிடவே அவர்களும் மறுநாள் (தூதுளைப்பூவைக் கொண்டுவந்த) மணக்கால்நம்பிகளை அப்படியே கொண்டுவந்து விட்டார்கள். (எ-று.) (உகூ)

கூ0. எதிரெழுந்திறைஞ்சிப்போற்றியிருகையீந்தடிகட்கின்பம்
முதிர்கதிர்நிதியோபாரோமொழிகெனுமுதுநூன்ஞான
மதிதிகழாளவந்தான்வினவலுமணக்கானம்பி
புதியவைவிரும்பேனெனபாற்பழையநும்பொருளுண்டென்றான்.

(இ-ள்.) அப்போது பழமையான நூல்களிற் சொல்லும் ஞானம் நிறைந்த மதி விளங்கும ஸ்ரீ ஆளவந்தார் எதிராக எழுந்து வணங்கி வாழ்த்தி ஆசனங்கொடுத்து ஸ்வாமிகளுக்கு வேண்டுவது மிக்க பிரகாசமுடைய பொருளோ? பூமியோ? சொல்லுவீர்களாக வென்று கூறுதலும மணக்கால் நம்பிகள் புதியவையான இவைகளை நான் விரும்புவேனல்லேன் ; என்னிடத்தில் பழமையான உங்களுடைய பொருளுண்டென்றனர். (எ-று.) (கூ0)

கூக. உனக்கஃதருள்வானுட்கொண்டடைந்தனனுன்மூதாதை
தனக்குமாலுதவவன்றான்புண்டரீகனுக்குத்தந்தான்
எனக்கவனளித்தானெஞ்சாப்பொருளெலாமினிநீகோடி
மனக்கினிதழியாசெலவமென்றனன்மணககானம்பி.

(இ-ள்.) உமக்கு அதனைக் கொடுப்பதற்காக எண்ணி வந்தேன்; உமது பாட்டனுருக்கு ஆழ்வாரளிக்க, அவர் உய்யக்கொண்டாருக்குக் கொடுத்தனர் ; அவர் எனக்குக் கொடுத்தனர் ; அந்தக் குறையாப் பொருளையெல்லாம் இனி நீர் கொள்ளுவீராக; அது மனதுக்கு இனியது; அழியாத செல்வம் எனறனர் மணக்கால்நம்பிகள். (எ-று.) (கூக)

கூஉ. யாமுநமுனியும்பேணியன்றுதொட்டேமவாயில்
தோமுனிமுனிக்கின்றாக்கித்தடையெமர்தொன்மைத்தாக
நீமுனநவின்றகேடில்பொருளினைநிகழ்த்தெனவோத
மாமுனிவரனுநகீதைவைகலீரொன்பான்சொற்றான்.

(இ-ள்.) யாமுநாசாரியரான மநநசீலரும் விரும்பி அன்று முதல் குறங்களைக் கோபித்த மணக்கால்நம்பிகளுக்குக் காவலுடைய வாசற்றடை இல்லையாகச் செய்து, எங்கள் பெரியோர்களது பழமையானதாக நீவிர் முன்பு அருளிச்செய்த கெடுதலில்லாத பொருளை அருளிச்செய்வீராக வென்று சொல்லப், பெருமை பொருந்திய முனிசிரேஷ்டரான மணக்கால்நம்பிகளும் கீதாசாஸ்திரத்தைப் பதினெட்டுத் தினங்களில் சொல்லியருளினர். (எ-று.)

கூகூ. அறைதொறுந்துலங்கிச்சித்தமடிபணிந்தடியேன்காணக்
குறையிலப்பொருளைக்காட்டுகெனப்பொருட்சரமங்கூறி
நிறையணியரங்கத்தன்றெனுடுசெலாநீலமேனி
இறைவனைக்காட்டிக்காண்டிநுமர்பொருளிதுவேயென்றான்.

(இ-ள்.) இப்படி அருளிச்செய்யுந்தோறும் சித்தம் துலக்கமடைந்து யாமுநாசாரியர் மணக்கால்நம்பிகளுடைய திருவடிகளை வணங்கி அடியேன் காணும்படியாகக் குறைவில்லாத அப்பொருளைக் காட்டுவீராக வென்று கூற, மணக்கால்நம்பிகள் சரமசுலோகார்த்தத்தை யருளிச்செய்து நிறை

ந்த அலங்காரத்தையுடைய திருவரங்கத்துக்கு யாமுநாசாரியரோடு சென்று நீலநிறமுடைய திருமேனியையுடைய பெருமானைக் காட்டிக்கொடுத்து உங்கள் பொருள் இதுவே என்றனர். (எ-று.) (௩௩)

௩௪. பவப்பிணிமருந்தாய்ஞானம்பயக்குமெட்டெழுத்தைப்பாரித
துவப்பினிலுபதேசித்தான்யாமுநனுலவாக்காட்சி
நிவப்பினிறமுறவுபூண்டாங்கரியருணிறைந்துஞாலத்
தவப்பிணிகடந்தேமென்றுவிருந்தனனரங்கக்கோயில்.

(இ-ள்.) பிறவிப்பிணிக்கு மருந்தாகி அர்த்தபஞ்சகஜ்ஞானத்தை யளிக்கும் திருவஷ்டாக்ஷரத்தை விரித்து உவப்போடு உபதேசித்தனர். பிறகு யாமுநாசாரியர் கெடாத ஞான உயர்ச்சியினுமேல் அறவற ... கொண்டு பெருமானது திருவருள் பரிபூரணமாகிப் பூமியில் பயனற்ற நோயைக்கடந்தோமென்று திருவரங்கம் திருக்கோயிலில் எழுந்தருளியிருந்தனர். (எ-று.) (௩௪)

௩௫. அலகிலாஞானசித்தியழிவிலான்மாவின்சித்தி
இலகுமாமீசன்சித்தியென்றுமுப்பனுவலேத்தல்
பலவிதத்தரியகீதைசங்கிரகநிறையன்சோமைமை
நலபுருடார்த்தமாகமப்பிரமாணமுமநூலே.

(இ-ள்.) அளவிடப்படாத ஸம்வித்ஸித்தி அழியாத ஆத்மஸித்தி விளங்கும் பெருமை நிறைந்த ஈச்வரஸித்தி ஆகிய மூன்று நூலான ஸித்தித்ரயமும், ஸ்தோத்ரரத்நமும, பலவிதத்தாலும பொருளருமையுடைய கீதார்த்த ஸங்க்ரஹமும், நிலைபெற்று எம்பெருமானைச் சேர்ந்த குணத்தையும் அக்குண நலமுடைய புருஷனையும் நிச்சயித்துரைக்கும் பொருளுடையதான மஹாபுருஷநிர்ணயமும் ஆகமவறிவான ஆகமப்ராமாணம் என்னும் பெயருடைய நூலும் (எ-று.) (௩௫)

௩௬. கோதிலாறபனுவலகூறிவிளங்குநாட்குமுதககண்ணன்
நீதியாசங்ககன்னனமானவபுருடனீரமை
வேதியாவாமனசெல்சுமுகன்புண்டரிகன்பேரா
ஆதிமாலபதநீத்தாழியவனிமீதுதித்தாரன்றே.

(இ-ள்.) குற்றமற்ற சதுசுலோகியும் அருளிச்செய்து விளங்கும் காலத்தில் குமுதாக்ஷர், நீதியையுடைய சங்ககர்ணர், அமாநவபுருஷர், தன்மைகுன்றாத வாமநர், குற்றமற்ற சுமுகர், புண்டரிகர் ஆகிய இவர்கள் ஒருவராலும் பெயராத காரணபூதனான பெருமானது பரமபதத்தை விட்டுக் கடல்சூழ்ந்த பூமியின்மீது அவதரித்து, (எ-று.) (௩௬)

௩௭. தெருடரும்பெரியநம்பிதிருவரங்கேசன்சீலம்
அருடிருக்கச்சிநம்பியருட்டிருமாலையாண்டான்
திருமலைநம்பிகோட்டியூர்நம்பியெனவத்தேவா
பொருவரும்பெயராக்கோயிலரங்கமாநகருட்புக்கார்.

(இ-ள்.) ஞானமளிக்கும் பெரியநம்பிகள், திருவரங்கப்பெருமாளரையர், சீலகுணத்தை யருளும் திருக்கச்சிநம்பிகள், கிருபையுடைய திருமாலையாண்டான், திருமலைநம்பி, திருக்கோட்டியூர்நம்பி என்று அந்த நித்திய சூரிகளுக்கு ஒப்பற்ற திருநாமமாகக் கோயிலான திருவரங்கமாநகரத்தில் பிரவேசித்தனர். (எ-று.) (௩௭)

௩அ. புகலிடங்கடவுணின்றாளென்றியாமுநனைப்போற்ற
இகலிடந்தவனுமாட்கொண்டெட்டெழுத்திசைத்தானன்றோர்
பகலிடங்கரைவென்றோன்றாள்பரவியாமுநன்றன்பாதந்
தகலிடந்தனில்வாழ்மேலோரலகிலாரடிமையானார்.

(இ-ள்.) அடைக்கலஸ்தானம் தெய்வத்தன்மையுள்ள உமது திருவடிகளே யென்று யாமுநாசாரியரைத் துதிக்க, தமக்குப் பகையானவற்றை வென்ற யாமுநாசாரியரும் அவர்களை யடிமைகொண்டு திருவஷ்டாக்ஷரத்தை உபதேசித்தருளினர். அக்காலத்தில், ஒருதினம் கஜேந்திராழ்வானை வருத்திய முதலையை வென்ற பெருமானது திருவடிகளை வணங்கும் யாமுநாசாரியாரது திருவடிகளில் பூமியில் வாழும் கணக்கற்ற மேலோர்கள் அடிமையானார்கள். (எ-று.) (௩அ)

௩௯. அருட்சடகோபன்கூறுமறைமுதலரியநூல்கள்
பொருட்படவவர்கட்கோதியுறையுநாட்புனிதநல்கா
இருட்பவமகற்றுஞ்சொற்சீராமனுண்டெய்தியெந்தாய்
தெருட்டருமொருசொற்கேட்டியெனவிவைதெரிக்கலுற்றான.

(இ-ள்.) கிருபாவடிவமான ஆழ்வார் அருளிச்செய்த தமிழ்வேதம் முதலிய அருமையான நூல்களைப் பொருள்படுமபடி அவர்களுக்கு அருளிச்செய்து எழுந்தருளியிருக்கும் நாளில், பரிசுத்தத்தை யளித்து இருள் மயமான பிறவியை நீக்கிய வாக்கையுடையவரான மணக்கால் நம்பிகள் அவ்விடத்துக்கு எழுந்தருளி, ஸ்வாமீ! ஞானமளிக்கும ஒரு சொல்லைக் கேட்பீராகவென்று இவற்றைத் தெரிவிக்கலாயினர். (எ-று.) (௩௯)

௪0. உனதுமூதாதையோகமறையுனக்குதவும்வண்ணம்
மனனுறகருகேசறகன்றிசைப்பமற்றவனுமாயோன்
தனதுதாள்கருதியோகத்திருந்தனனவணிசார்ந்து
வினவுகென்றிடமுங்கூறயாமுநன்விரைவிற்சென்றான்.

(இ-ள்.) உமது பாட்டனாரான ஸ்ரீமந்நாதமுனிகள் யோகரகசியத்தை உமக்கு அளிக்கும்படிக்கு மனதிலூன்றும்படி குருகைகாவலப்பனுக்கு அக்காலத்திலருளிச்செய்ய, அவரும் ஆச்சரிய குண சேஷ்டிதங்களை யுடையவனான பெருமானது திருவடிகளைச் சிந்தித்து யோகத்திலிருந்தனர்; அவ்விடத்துக்கு நீவிர் சென்று கேட்பீராக வென்று இடத்தையு மருளிச்செய்ய, யாமுநாசாரியர் அங்கு விரைவாகச் சென்றனர். (எ-று.) (௪0)

௪௧. எண்ணில்பாகவதர்சூழக்குருகைகாவலன்பாலெய்திக்
கண்ணிறைப்பருகுவான்போனோக்கிமால்கமலபாதம்
நண்ணியோகசமாதிசிதைத்திடினவையாமென்று
உண்ணினைந்துரையான்றோணக்குகைப்புறத்துறைந்தானன்றே.

(இ-ள்.) கணக்கற்ற பாகவதர்கள் சூழும்படி குருகைகாவலப்பன் இடத்துக்கு வந்தடைந்து, கண்ணினாலே அவரைப் பருகுவாரைப்போலே சேவித்து, பெருமானது கமலம்போன்ற திருவடிகளை யடைந்த யோகசமாதியைக் கெடுத்தால் தோஷமாகுமென்று திருவுள்ளத்தில் நினைந்து பேசாமல் தூரத்தே குகையில் எழுந்தருளியிருந்தனர். (எ-று.) (௪௧)

௪௨. விழிதிறந்தெழுந்துஞானத்துணர்ந்தியார்விளங்குந்தொல்சீர்
ஒழிவிலாதுயாந்தசொட்டைக்குலத்திவணுற்றாரென்ன
அழிவிலாக்குருகைநாதன்வினவவாங்கடியேனென்னுப்
பொழிகணீர்புளகத்தோடும்பணிந்தியாமுநனும்போற்று

(இ-ள்.) கண்களைத் திறந்தெழுந்து ஞானத்தினாலே யுணர்ந்து விளங்கும் பழமையான வைபவம் ஒழியாமல் அபிவிருத்தியடைந்த சொட்டைக் குலத்தி லுதித்த யாவர் இவ்விடத்துக்கு வந்தார்களென்று கெடுதியில்லாத குருகைகாவலப்பன கேட்டருள, அவ்விடத்தில் யாமுநாசாரியரும் அடியேனென்று கூறிப் பொழியும் கண்ணீரோடும் புளகத்தோடும் பணிந்து துதித்து, (எ-று.) (௪௨)

௪௩. உன்றனியோகநோக்கிமருங்குறுதுரையாடாது
சென்றயற்குகையின்மன்னிசசேணிடையிருந்தேன்றேரின்
என்றனிவரவுசொலவோரொருவரையிவணிற்காணேன்
துன்றனித்தவத்தாயெவ்வாறுணர்ந்தனையென்னத்தூயோன்

(இ-ள்.) உமது ஒப்பற்ற யோகசமாதியைச் சேவித்துச் சமீபிக்காமலும் பேசாமலும் சென்று பக்கத்திலுள்ள குகையில் தங்கித் தூரமான இடத்திலிருந்தேன்; அறியுமிடத்து அடியேனது தனிமையான வருகையைச் சொல்லுமவர்கள் ஒருவரையும இவ்விடத்திற் காணேன்; பொருந்திய ஒப்பற்ற தவத்தையுடையீர்! அடியேனை எவ்வாறு அறிந்தீர்கள் என்று கூறப், பரிசுத்தராகிய குருகைகாவலப்பன் (எ-று.) (௪௩)

௪௪. இருவருமொருவராகியெனதுளத்திருந்தெக்காலும்
பொருவருமின்பந்துய்க்குங்காலையிற்பூவின்செல்வி
திருமுலைத்தடத்தான்மார்பத்தழுத்தினுஞ்சிறிதும்பாரான்
ஒருமுறையன்றிப்பல்காலொழிவிலென்னுளத்தைநீங்கா

(இ-ள்.) பெருமான் எனது உள்ளத்திலிருக்க, நாங்களிருவருமொருவராகி எப்போதும் ஒப்பற்ற இன்பமநுபவிக்குங் காலத்தில், தாமரைமலரில் எழுந்தருளியிருக்கும் பெரியபிராட்டியார் தமது திருமுலைத்தடத்தாலே திருமார்பில் அணைத்தாலும் அப்பிராட்டியைச் சிறிதேனும் நோக்காதவன் ஒரு முறையே யன்றிப் பலமுறையும் தன்னை யொழியாத என்னுள்ளத்தைவிட்டு நீங்கி, (எ-று.) (௪௪)

௪௫. நீலமாினின்னைநோக்கவுணர்ந்தனனிகரிலாத
சீலமார்ந்தனையீண்டுற்றதெவனெனச்செவ்வியோனுஞ்
சாலமாயோகநின்பாற்பெறுகுவானென்னத்தக்கோன்
காலமார்நிரியாணத்திற்கட்டுரைத்திடுதுமென்று

(இ-ள்.) நீலநிறத்தையுடைய பெருமான் உம்மைப்பார்க்க அதனாலே நான் அறிந்தேன். ஒப்பில்லாத சீலகுணம் பொருந்திய நீவிர் இவ்விடத்துக்கு வந்தது யாது காரணம்? என்று அருளிச்செய்ய, மனமொழி மெய்களால் செம்மையையுடைய யாமுநாசாரியரும் மிகுதியும் பெருமைபொருந்திய யோகத்தைத் தேவரீரிடத்தில் பெறுவதற்காக என்று கூற, மேலோரான குருகைகாவலப்பன் எமது நிரியாண காலத்தில் சொல்லக்கடவோம் என்றருளிச்செய்து, (எ-று.) (௪௫)

௪௬. தன்னிரியாணவேலைதனைவரைந்தளித்தக்காலம்
முன்னிநீவருகவென்றுவிடுப்பயாமுநனுமொண்சீர்த்
தென்னிலங்கேசன்றந்ததிருவரங்கத்தைசசேர்ந்து
மன்னியபரமபாகவதரொடும்வதிந்தான்மன்றே.

(இ-ள்.) தமது நிரியாண சமயத்தை எழுதிக்கொடுத்து அக்காலத்தை யெண்ணி நீவிர் வருவீராகவென்று விடுக்க, யாமுநாசாரியரும் ஒள்ளிய சீரையுடைய தெற்கின்கண்ணுள்ள இலங்கைக்கு நிர்வாஹகரான ஸ்ரீ விபீஷணாழ்வான் கொடுவந்துவைத்த திருவரங்கநகரத்தையடைந்து நிலைபெற்ற பரமபாகவதர்களோடும் எழுந்தருளியிருந்தனர். (எ-று.) (௪௬)

வேறு.

௪௭. ஆதரவினரங்கேசன் றிருவோலகத்தொருநா ளாளவந்தான், ஏதமிலாமுதலிகளெண் ணிலர்சூழவீற்றிருந்தா னிவன்று ணேயன், கோதகன்றதிருவரங்கப் பெருமான்முன்சடகோபன் கூறும்பாட்டுள், ஓதவருமபொருட்டிருவாய் மொழிக்கருட்பாடிடவணங்கி யுரையாநிற்போன்

(இ-ள்.) பிரீதியோடு திருவரங்கேசனது திருவோலக்கத்தில் ஒருநாள் ஸ்ரீ ஆளவந்தார் குற்றமற்ற முதலிகள் கணக்கற்ற திருநாமங்கள் சூழ்ந்திருக்க எழுந்தருளியிருந்தனர். இவரது திருவடிகட்கு நேசமுடையவரான குற்றநீங்கிய திருவரங்கப்பெருமாளரையர் முன்பு சடவாயுவைக் கோபித்தவரான ஆழ்வார் அருளிச் செய்த பிரபந்தங்களில் சொல்லுதற்கரிய பொருளையுடைய திருவாயமொழியைப் பாடுவதற்கு அருளப்பாடிடவே வணங்கி இசையுடன் பாடுமவர், (எ-று.) (௪௭)

௪௮. கெடுமிடரென்றொருதிருவாய் மொழியினையாமுநமுனிவோன் கேடிலசோதி, உடுபதிநேர்திருமுகமண் டலநோக்கியுளமுருக வுரைக்கப்பல்கால், அடுமிடாதீர்ந்துயர்ந்தோனு மதன் பொருடேர்ந்தரங்கேச னருளிதென்று, நெடுமதில்சூழ்திருவனந்த புரப்பதுமநாபனையுண் ணினைந்துசெல்வான்

(இ-ள்.) "கெடுமிடராயவெல்லாம்" என்று ஒரு திருவாய்மொழியை யாமுநாசாரியரது கெடாத பிரகாசமுடைய சந்திரனை நிகர்த்த திருமுகமண்டலத்தை நோககி உளமுருகும்படி பலமுறையும் அருளிச்செய்ய, வருத்தும் துன்பந்தீர்ந்துயர்ந்த யாமுநாசாரியரும் அதன் பொருளை யுணர்ந்து, இது திருவரங்கேசன் திருவருளென்றுகொண்டு, நெடிய மதில் சூழ்ந்த திருவநந்தபுரத்தி லெழுந்தருளிய பதுமநாபப் பெருமானைத் திருவுளத்தி லெண்ணிப் பிரயாணமாகுமவர் (எ-று.) (௪௮)

௪௯. மன்னுதிருமடத்தினுக்குத் தனைநிகராகியதெய்வ வாரியாண்டான், என்னுமுனிவனையிருத்தா வெண்ணின்முதலிகளோடு மேகிப்பூவும், பொன்னுமலரடிவருடத் துயில்புரியுந்திருவனந்தபுரத்துளானைப், பன்னுமறைத்தமிழ்கூறிப் பரவிவணங்கினன்பல் காற் படரிலாதான்.

(இ-ள்.) நிலைபெற்ற தமது திருமடத்துக்குத் தம்மை யொத்தவரான தெய்வவாரியாண்டானென்னும் மகாசீலரை யிருத்தி, கணக்கற்ற முதலிகளோடும் சென்று, பூமிப்பிராட்டியாரும் பெரியபிராட்டியாரும் திருவடிகளை வருடும்படி அறிதுயிலமரும் திருவநந்தபுரத்தி லெழுந்தருளி யிருக்கும் பதுமநாபப்பெருமானை, துன்பமில்லாத யாமுநாசாரியார், உயர்ந்தோர் துதிக்கும் தமிழ்வேதத்தை யநுசந்தித்துப் பலமுறையும் துதித்து வணங்கி, (எ-று.) (௪௯)

**௫0. ஸ்ரீதரன்மாலனந்தசய னத்தாடபதமலரிற் சிந்தைசேர்த்தி, நாதமுனிமகன்மகனங் குறைநாளினுயர்குருகை நாதனீந்த, சாதகத்தையயர்த்துநினைந் தொருநாணோக்குதலுமவன் றனிவைகுந் தம், போதலுறுநாளந்நா ளாதலும்வெய்துயிர்த்திரங்கிப் புலம்ப லுற்றான்.**

(இ-ள்.) ஸ்ரீதரன் திருமால் ஆகிய அநந்தசயந பதுமநாபனது திருவடித்தாமரைகளில் மனதைச்சேர்த்து ஸ்ரீமந்நாதமுனிகளுக்குத் திருப்பேரனாரான ஸ்ரீ ஆளவந்தார் அங்கு எழுந்தருளி யிருக்கையில், உயர்ந்த குருகைகாவலப்பன் அளித்த ஜாதகத்தை மறந்திருந்து ஒருநாள் நினைந்து பார்த்ததும், அந்தக் குருகைகாவலப்பன் ஒப்பற்ற வைகுந்தத்துக்கு எழுந்தருளும் தினம் அந்தத்தினமாகவே பெருமூச்செறிந்து மனமிரங்கிப் புலம்பத் தொடங்கினர். (எ-று.) (௫0)

**௫௧. இக்கணஞ்சென்றெந்தையருள் யோகநிலைகேட்கவென்றா லெறுழ்தேராவெண், டிக்களந்தசிறைக்கருடன் யானன்றேமாருதி யாந் திறலோனன்றே, அக்கமலத்தயனளித்த புட்பகமோநம்வயத் த தாவதன்றே, தக்கவனைக்காண்டலரி தெனவழுங்காச்சிறுவரை யுந் தரியானாகி**

(இ-ள்.) இந்த க்ஷணமே சென்று எனது பாட்டனார் அருளிய யோகநிலையைக்கேட்க வென்றால், ஒருவராலும் வலிமை தேராத எட்டுத்திசைகளை யளந்த சிறகையுடைய கருடாழ்வான் நானன்றே; ஆஞ்சநேயரான வலியோனன்றே; அந்தத் தாமரைமலரிலிருக்கும் பிரமதேவன் கொடுத்த புட்பகவிமாநமோ நமது வசமாவதன்றே; தகுந்தவரான குருகைகாவலப்பனைக் காணுதல் அரிதெனறு வருந்திச் சிறிது பொழுதும் தரிக்காதவராகி, (எ-று.) (௫௧)

**௫௨. அனந்தபுரந்தனைநீங்கி வருங்காலையவன்பிரிவை யாற்றாத் துன்பான், மனந்தளர்வுற்றுடல்பூரித் திடச்சிவிகைமீதுதெய்வ வாரியாண்டான், சுனந்தன்முதலினர்பரவத் துயினெடுமாலரங்கந கர்துறந்துசான்றோர், இனந்தனதுமருங்கணுக வருந்தகையாமுந முனிவற் கெதிரேசென்றான்.**

(இ-ள்.) திருவனந்தபுரத்தை விட்டு வரும்போது, யாமுநாசார்யரது பிரிவைச் சகிக்க முடியாத துன்பத்தாலே மனந்தளர்ந்து திருமேனி வீக்கமடையவே சிவிகையின்மீது தெய்வவாரியாண்டான், சுனந்தன் முதலானவர்கள் வணங்கும்படி அறிதுயிலமரும் பெருமானது திருவரங்க நகரத்தைவிட்டு, மேலோர்களது கூட்டம் தமது புடைசூழ எழுந்தருளும் பெருமையையுடைய யாமுநாசார்யரது எதிரே சென்றனர். (எ-று.) (௫௨)

(இ-ள்.) (திருக்கோட்டியூர் நம்பிகள், நாம் சொன்னபடி) பவித்திரமும் தண்டமும் எங்கே என்று கேட்க, இராமாநுசர் பணிந்து மலர்போன்ற கைகளைக் குவித்து இவர்களிருவரும் தேவரீர் அருளிச்செய்த தண்ட பவித்திரங்க ளென்று கூற, திருக்கோட்டியூர் நம்பிகளும் பூமிக்கு ஆபரணம் போன்றவரோ! இவ்விருவருள் தண்டம் யார்? பவித்திரம் யார்? பகுத்துரைப்பீரென்று அருளிச்செய்ய, தவத்தையுடைய இராமாநுசர், முதலியாண்டானைத் தண்டமாக வருளிச்செய்து, அழகிய பெருமையையுடைய ஸ்ரீவத்ஸாங்கரான கூரத்தாழ்வானைப் பவித்திரமென றருளிச்செய்தனர். (எ-று.) (சுஅ)

சுகூ. இருவருநீயுமுணர்திமற்றெவர்க்குமிசைததிடேலெனவருகிருத்தி, ஒருவருந்தெரிதற்கரிதியாமுநனன் றுரைத்தமெய்ப்பொருளிதென்றுரைததான், பொருவருமிராமாநுசனுமப்பொருளைப்புயறிருக்கோட்டியூர்விழைவில, வெருவருமறலிககஞ்சன்மினெவருங் கேண்மெனவெளிப்படவிரித்தான.

(இ-ள்.) திருக்கோட்டியூர் நம்பிகள், இவ்விருவரும் நீவிரும் உணர்வீர்களாக; மற்றெவர்க்கும் சொல்லவேண்டா வென்று அருகிருந்தி, ஒருவரும் அறிவதற்கரிதாக அக்காலத்தில் யாமுநாசாரியர் அருளிச்செய்த மெய்ப்பொருளிதுவாகுமென்று அருளிச்செய்தனர். ஒப்பற்ற இராமாநுசரும், அந்தப் பொருளைப் பெருமானது திருக்கோட்டியூர் மஹோற்சவததில், (திருக்கோயிற் றிருமதிலின்மீதேறி யிருந்து) பயப்படும்படியாக வரும யமனுக்கு இனி யாரும் அஞ்சாதேயுங்கள் கேட்பீர்களாகவென்று வெளிப்படும்படி விரித்துரைத்தனர். (எ-று.)

இங்கு நம்பிகள் அருளிச்செய்தது திருமந்திரார்த்தம். (சுகூ)

எ0. குரவர்சொறறதனைமறுத்திதுபுரிந்த கொடுமையாற்கூறருங்கொடிய, நரகமுறறிடுவையென்னத்திருககோட்டி நமபிசொற்றலுமறைநவிலும், பரகதிககுலகோரனைவரும்புடர யானிதுபகாந்த பாதகத்தால, அரவணைககடவுளனையவெங்குரவ வருநரகடையினுமழகே.

(இ-ள்.) ஆசாரியர் உபதேசித்ததை மறுத்து இப்படிச்செய்த கொடுமையாலே சொல்வதற்கரிய கொடியதான நரகமடைவீர் என்று திருக்கோட்டியூர் நம்பிகள் அருளிச்செய்தலும், (இராமாநுசர்) திருவரங்கநகரப்பனைப் போன்ற எனது ஆசாரியரோ! (தேவரீர் திருவடிகளை முன்னிட்டு அடியேன் சொன்னதனால்) வேதப்பிரதிபாத்தியமாகும் பரகதிக்கு உலகத்திலுள்ளோர் அனைவரும் செல்ல, இதைச்சொன்ன பாதகத்தினாலே நான் நரகத்தை யடைந்தாலும் எனக்கு அழகேயாகும். (எ-று.) (எ0)

எக. எனப்புகலிராமாநுசன்றனைமகிழ்ச்சியெய்தலாற்கரங்களாற்றழுவி, உனக்கிணையெவரேயுலகெலாங்கதிபெற் றுய்யவந்தவன் கொலியென்று, வனக்கடற்புவியிம்மதமுனபெயரால் வழங்குக வெனவரமருளித், தனக்குநேர்புதல்வன்றனையுமாணுக்க னுக்கொடுத்தனன்பெருந்தகையோன்.

(இ-ள்.) என்றருளிச்செய்த இராமாநுசரைப் பெருந்தகைமையுடைய திருக்கோட்டியூர் நம்பிகள் சந்தோஷமதிகரித்ததினாலே திருக்கைகளாலே தழுவி உமக்குச் சமானமானவர்கள் யாவர்? உலகத்திலுள்ளவர்களெல்லாம் மோக்ஷமடைந்து உஜ்ஜீவிக்கும்படி வந்தவரோ நீவிர்? என்றருளிச்செய்து, நீரையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த பூமியில் இந்த மதமும் உமது திருநாமத்தால் வழங்கக்கடவது என்றருளிச்செய்து, தமக்குண்டான திருக்குமாரரையும் இராமாநுசருக்குச் சிஷ்யராகக் கொடுத்தருளினர். (எ-று.)

எஉ. பின்னருமிராமாநுசமுனிவதன நோக்கியேபெருகுகாதலினால், இன்னமும்பரமபொருள்சிலவுனக்கிண் டிசைகருவானெண்ணினேனிசைக்கு, முன்னமேயமைதியுடையனாயினைநீ யெனவிராமாநுசமுனியும், அன்னதாதரமிக்கதனையுங்கேட்டற் கும்பலுற்றிருந்தனனழுங்கி

(இ-ள்.) பின்னரும் நம்பிகள் இராமாநுசமுனிவரது திருமுகமண்டலத்தைக் கடாக்ஷித்து விருத்தியாகும் விருப்பத்தினாலே இன்னும் பரமமான பொருள்கள் சிலவற்றை உமக்கு இங்குச் சொல்ல எண்ணினேம்; அதைச் சொல்வதற்கு முன்னே நீவிர் திருப்தராயினீர் என்றருளிச்செய்ய, இராமாநுச முனிவரும் அவ்வார்த்தத்தில் அபிநிவேசம் அதிகரித்து அதனையும் கேட்பதற்கு வருந்தி விருப்பமுற்றிருந்து, (எ-று.) (எஉ)

எங. மாற்றமாறுரையாளிருப்பநம்பியுநின் மனத்ததேதிசையெனவணங்கி, மேற்றகைமுனிநீநவின்றருளபொருளில மேலுமொன்றுள்ளதாயினவின், ஊற்றமிலுளதகுகுவன்கேளா விடின்பொருளுற்றநின்றுளதின்், றேற்றநீநவிலவையெனநவிலவிரகொன்றறிகிலாதிருந்தனனென்றான்.

(இ-ள்.) மறுமொழி யுரையாமலிருக்க, நம்பிகளும் உமது மனத்திலுள்ளது யாது சொல்லுவீராக வென்ன, இராமாநுசர் வணங்கி, மேற்பட்ட பெருமையையுடைய மாநசீலரோ! நீவிர் அருளிச்செய்த அர்த்தத்துக்கு மேற்பட்ட ஒன்று இருக்கிறதென்று கேட்பேனாயின கேட்ட அர்த்தத்தில் ஊற்றமில்லாத உள்ளத்தவனாவேன; கேளாமற் போவேனாயின என் உள்ளத்தில் அவ்வுரைத்த பொருள் படிந்ததின்றாகும்; ஆகவே இன்று பெருமையையுடைய தேவரீரே அருளிச்செய்வீரென்று நான் சொல்லும் விதமொன்றையும் அறியாமலிருந்தனனென்றனர். (எ-று.) (எங)

எச. கேட்டநம்பியுநீவருந்தலின்றேகி யின்னுமோர்பகலிவண்கெழுமுங், கூட்டநீதெம்பால்வருகெனவிடைகொண் டேகினன்கோட்டியூர்நம்பித், தாட்டளிமலர்மற்றொருபகலதனித்துச சார்ந்தனன்பரவமெய்த்தவனும், வாட்டமில்பரமபொருணவின்றெவர்க்கும் வழங்கனீயென்றலும்வணங்கா

(இ-ள்.) இதைக்கேட்ட திருக்கோட்டியூர் நம்பிகளும், நீவிர் வருந்தவேண்டா; இன்று விடைகொண்டு இன்னுமொருதினம் இவ்விடத்துக்கு உம்மோடு சேர்ந்த கூட்டத்தை நீக்கி எம்மிடத்துக்கு வருவீராக வென்று அருளிச்செய்ய, (அப்படியே இராமாநுசர்) விடைகொண்டு சென்றனர்; மற்றொருதினம் தனித்து, திருக்கோட்டியூர் நம்பிகளது தளிர்போன்ற திருவடித்தாமரைகளை யடைந்து வணங்க, உண்மையான தவத்தையுடைய நம்பி

களும் வாட்டமில்லாத பரமமான பொருளை அருளிச்செயது, இதை யெவர்க்கும் நீவிர் சொல்லவேண்டாவென்று அருளிச்செய்தலும், இராமாநுசர் நம்பிகளை வணங்கி (எ-று.)

இங்கு அருளிச்செய்தது சரமசுலோகார்த்தம். (எச)

எரு. கூரனுக்கிசையாதிருக்கிலனடியே னென்னவக்கூரனிப் பொருளைத், தேரனீர்மையனேயெனினுமோர்பருவ மேவல்கொண்டுரையெனத்தெரிந்து, நாரணனரங்கத்திலக்குவமுனிவ னண்ணலும்வற்சனுமைத்தன், ஆரருளதிநாதனைப்பணிந்தடியேற் கப்பொருளருள்கவென்றறைந்தான்.

(இ-ள்.) அடியேன் கூரத்தாழ்வானுக்குச் சொல்லாமலிரேன் என்று கூற, அக்கூரத்தாழ்வான் இபபொருளை அறிந்துகொள்ளும் தன்மையுடையவரோயாயினும் ஒரு வருஷம் சிசுரூஷைகொண்டு சொல்வீராகவென்று அருளிச்செய்ய, இதைத் தெரிந்துகொண்டு, பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவரங்கத்துக்கு இராமாநுசமுனிவர் எழுந்தருளலும், கூரத்தாழ்வானுகிய தலைவர், நிறைந்த கிருபையையுடைய யதிராசரைப்பணிந்து அடியேனுக்கு அந்தப்பொருளை அருளிச்செய்வீராகவென்று விண்ணப்பித்தனர். (எ-று.) (எரு)

எசு. இலக்குவமுனியுங்கோட்டியூர்நம்பி யிசைத்தவாறிசைப்பவேயிலங்கும், பொலக்குவடனதோள்வற்சனுநிலைமைப் பொருள்வடிவென்னுமப்பொருடேர்ந், தலக்கணுற்றெரியாண்டயர்பணிவிடையி னதிகமோர்திங்களுணகற்று, நலத்தவமெனநூனவிலறேர்ந்ததுவே புரியவப்பொருளவனவின்றான்.

(இ-ள்.) இராமாநுசரும் திருக்கோட்டியூர் நம்பிகள் அருளிச்செய்தபடி யருளிச்செய்யவே, விளங்கும் அழகிய மலைபோன்ற தோள்களையுடைய கூரத்தாழ்வானும், நித்தியமான எம்பெருமானது ஸ்வரூபமென்னும் அந்த அர்த்தத்தை யறிந்து, ஒருவருஷம் வருந்திச் செய்யும் சிசுரூஷையினும் ஒருமாசம் உபவாசமிருக்கும் தவம் சிறந்ததாகும் என்று சாஸ்திரங்கள் சொல்வதை யுணர்ந்து, கூரத்தாழ்வான் அவ்வாறே ஒருமாசம் உபவாசமிருக்க, இராமாநுசர் அவ்வர்த்தத்தை யுபதேசித்தனர். (எ-று.) (எசு)

எஎ. முதலியாண்டானுமப்பொருள்விரும்ப விலக்குவமுனியுமுன்மொழிந்தோன், பதமலரடைந்தேகேளெனவவனுங் கோட்டியூர்நம்பிதாள்பணியா, இதமுறத்திங்கண்மூவிரண்டேத்தச் சிறிதுநோக்காமையினெனையாள், நுதலருங்குணத்தாயென்னவோர்வைகல் பணிதலுங்குரவனுநோக்கா

(இ-ள்.) முதலியாண்டானும் அந்தப்பொருளை விரும்ப, இராமாநுசமுனிவரும் முன்பு எனக்கருளிச்செய்த திருக்கோட்டியூர் நம்பிகளது திருவடிகளை யடைந்தே கேட்பீராக வென்றுரைக்க, முதலியாண்டானும் திருக்கோட்டியூர் நம்பிகளது திருவடிகளைப் பணிந்து இதமாகும்படி ஆறுமாசமிருந்து அநுவர்த்திக்க, நம்பிகள் சிறிதும் கடாக்ஷிக்காமையினாலே, என்னையாளும் எண்ணுவதற்கரிய கலியாணகுணங்களையுடையீர் என்று ஒருதினம் வணங்குதலும், ஆசாரியரும் கடாக்ஷித்து (எ-று.) (எஎ)

எஅ. தரும்புகழவிருஞைசதனகுலமெனனுமிம் மும்மதங்கடத்த லேசமமாம, திருந்துமதத்மந்தான்மனத்தைவென்றிடுத லாதலா லிவற்றைநீநீக்கின், வருந்தலேவருதியெனத்திருவரங்க மருவிமா துலன்பதம்வணங்கி, இருந்துதேவகியானமபிபாற்பரமப் பொரு ளைவாய்த்தெவரினுமுயர்நதான.

(இ-ள்.) புகழைத்தரும் வித்தை தனம் குலம் என்னும் இந்த முக்குறு மபையும் சடப்பதே சமமாகும்; திருத்தமுடைய அந்தத் தமமென்பது மனத்தைத யடக்குவதாகும. ஆதலால இவற்றை நீ நிவர்த்திப்பையாயின் வருந்தாயாகி வருவாயாக வெனன, முதலியாண்டான் திருவரங்கத்துக் கெழுந்தருளி மாதுலரான இராமாநுசர் திருவடிகளை வணங்கி யிருந்து, பின்னர் திருக்கோட்டியூர் நம்பிகள் திருக்குமாரத்தியான தேவகியார் புரு ஷகாரத்தால் நம்பிகளிடததில் விசேஷிததகான சரமசுலோகார்த்தத் தைப் பெற்று யாரினுமுயர்ந்தனர். (எ-று.)

இவ்வாறனறி, குருபரம்பரா பிரபாவம் முதலியவைகளில் திருக்கோட் டியூர் நம்பிகள் முதலியாண்டானை நோக்கி, உமது முக்குறும்புங் கெடுமா யின இராமாநுசரே உபதேசிப்பரென அவ்வாறே முதலியாண்டான இராமாநுசரைச் சார்ந்து உபதேசம் பெற்றனரென்பது காணவருகிறது.

இதுவுமனறி எச-வது செய்யுளின்படி திருககோட்டியூர் நமபிகள் சரமசுலோகார்த்த மருளிச்செய்வதன பொருட்டு இராமாநுசரை மீட்டும் வருகவென நியமிசக, அவ்வாறே இராமாநுசர் சென்று நம்பி திருமாளி கைப் புறத்தே "உந்துமதகளிற்றன்" எனனும் திருப்பாவைச் செய்யு ளில், "செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப வந்துதிறவாய் மகிழ்ந் தேலோ ரெம்பாவாய" என்று அநுஸந்திக்குங் காலையில் நம்பிகள் திருக் குமாரத்தி, தேவகிப்பிராட்டி என்பார், திருககதவைத் திறந்ததும் இராமா நுசர் அவரை நப்பினனைப்பிராட்டி யெனறெண்ணித் தண்டன ஸமர்ப்பித் தனர். அதைக கேள்வியுறற நம்பிகள், "உந்துமதகளிறறன் அநுஸந்தாந மோ" என்றருளிச்செய்து, இராமாநுசருக்குச் சரமசுலோகார்த்த மரு ளிச்செயதன ராதலால், தேவகிப்பிராட்டியார் புருஷகாரமாக உபதேசிக் கப் பெற்றவர் இராமாநுசரே யென இராமாநுஜ திவ்யஸூரி சரிதையி னால் தெரியவருதலுங் காண்க. (எஅ)

எகூ. எவரினுமுயர்சீரிலக்குவமுனியும் யாமுநனிருசரணிறைஞ் சித், தவநனிவிளங்குமாலையாண்டான்பாற் றமிழ்மறைப்பொரு ளெலாங்கெரிந்து, கவலைதீர்ந்துயர்சீரரங்கநாதன்பாற் கானமாங் கடற்கரைகாணு, அவனிபோறறிடவேதாந்தமாணுக்கர்க் கறைந் துகோயிலினினிதமர்ந்தான்.

(இ-ள்.) யாவரினும் உயர்ந்த வைபவத்தையுடைய இராமாநுசரும் ஸ்ரீ ஆளவந்தாரது இரண்டு திருவடிகளை வணங்கி, மிகுந்த தவம் விளங் கும் திருமாலையாண்டானிடத்தில் தமிழ் வேதத்தின் பொருள்களை யெல்லா மறிந்து, துன்பந் தீர்ந்துயர்ந்த சிறப்புடைய திருவரங்கப் பெருமாளரைய ரிடத்தில் சங்கீதமாகிய கடலின் கரையைக்கண்டு, பூமியிலுள்ளோர் போ ற்றும்படி மாணுக்கர்களுக்கு வேதாந்தார்த்தங்கள் அருளிச்செய்துகொண் டு திருவரங்கத்தில் இன்பத்துடன் எழுந்தருளி யிருந்தனர். (எ-று.) (எகூ)

அ0. உறைதருங்காலையுத்தரதிசைநின் றொருவருமிணையிலா வொருதண், டிறைகொளுஞ்செங்கைசசங்கரனெனும்பே ரெதியரங்கத்தில்வந்திருசீர், மறைதெரியிராமாநுசனையென்னுடனீ வாதியென்றலுமவன்வருகென், றறைபுகன்றிருவோர்மதத்துமாறுகியா றிரண்டைந்துநாளகலா.

(இ-ள்) இப்படி எழுந்தருளியிருக்கும்போது, வடக்குத்திசையிலிருந்து ஒருவரும் ஒப்பில்லாதாராய ஒற்றைத்தண்டத்தைக்கொண்ட சிவந்த கையையுடைய சங்கரரெனனும் பெயரையுடைய ஒரு யதியானவர் திருவரங்கத்துக்கு வந்து, சிறப்பையுடைய உபய வேதங்களையுமுணர்ந்த இராமாநுசனை என்னுடனே நீ வாதிப்பாயாக வென்று கேட்டலும, அவர் வருவாயாக வென்று வாதிக்க அழைத்து, இருவரும் மதத்தில் மாறுபட்டுப் பதினேழுநாள் வரையில் நீங்காதவராகி, (எ-று.) (அ0)

அக. திருக்கிளாநெடுந்தாளழகியநரசிங் கப்பெயர்ச்சீதரன்றிருமுன், தருக்கமேபுரியவெலற்கருந்தகைத்தாச சங்கரன்மேம்படத் தளரா, மருக்கமழ்துளவநரகரித்திருத்தாள வழுத்தலாற்கனவின் மற்றவனுரு, சுருக்கமாமறையொன்றளித்தலுமதனாற் சங்கரன்வலியெலாந்தொலைத்தான்.

(இ-ள.) அழகுமிக்கிருக்கிற பெரிய திருவடிகளையுடைய அழகிய நரசிங்கனென்னுந் திருநாமமுடைய பெருமான் திருமுன்பே தருக்கஞ்செய்ய, அப்போது வெல்லுதற்கரிய தன்மையையுடையவராகச் சங்கரர் அதிகரித்துப் போகவே, இராமாநுசர் தளர்ந்து வாசனைகமழும திருத்துழாயமாலையையணிந்த நரசிங்கபபெருமானது திருவடிகளைத் துதித்ததனாலே, அவரது கனவில் நரசிங்கப்பெருமானும் சுருக்கமாயிருக்கும் மறைவாக்கியமொன்றை யளித்தலும், இராமாநுசர் அதனாலே சங்கரரது வலிமையையெல்லாம் கெடுத்தனர். (எ-று.) (அக)

அஉ. சங்கரன்றிகைத்தன்றிலக்குவமுனிதாட் டாமரைசசிரசின்மேற்றரித்துச, செங்கண்மாலனையாயென்னையாளகெனமுந் நூலுடன்சிகையுமுக்கோலும, மங்கலமறைநூன்முறைமையிற்றரிப்பித் தெட்டெழுத்திசைத்துளமகிழ்வால, அங்கவற்கருளாளப் பெருமாளெம் பெருமனென்றளித்தனனுமம.

(இ-ள்.) அப்போது சங்கரர் திகைத்து இராமாநுசமுனிவரது திருவடித்தாமரைகளைத் தமது சிரசின்மீது தரித்துக்கொண்டு, சிவந்த கண்களையுடைய பெருமானுக்குச் சமானமானவரே! என்னை யடிமைகொள்வீராக வென்றுகூற, இராமாநுசர், முப்புரிநூலுடன் சிகையையும் மூன்று தண்டத்தையும் மங்களகரமாகிய வேதசாஸ்திர முறைமைப்படி அணியச் செய்து, அஷ்டாக்ஷரோபதேசஞ்செய்து, திருவுள்ளமகிழ்ச்சியினாலே அச்சங்கரருக்கு அருளாளப்பெருமா ளெம்பெருமானாரென்று திருநாமமளித்தனர். (எ-று.) (அஉ)

அங. மூலமந்திரத்துட்பொருணவின்றவனுக் கடியரின்முதன்மையுமுதவிச, சாலவேமகிழ்வுற்றிருக்குநான்றனந்தாழ் வானுமெச்சானுமெய்த்தவத்தின், சீலமார்தொண்டனூரநம்பிமருதூர நம்பியுங்குடக்கெனுந்திசைநின், றுலமார்கடவுடிதித்தருளரங்கத் திலகத்தவமுனிபதத்தடைந்தார்.

(இ-ள்.) இப்படி மூலமந்திரத்தின் உட்பொருளையருளிச்செய்து அவருக்கு அடியவர்களில் முதன்மையுமளித்து மிகவும் மகிழ்ச்சியடைந்தெழுந்தருளியிருக்குங் காலத்தில், அனந்தாழ்வானும் எச்சானும் மெய்த்தவத்தினொழுக்கமுடைய தொண்டனூர் நம்பியும் மருதூர் நம்பியும், மேற்றிசையினின்று ஆலமரத்தடியிலமர்ந்த சிவபிரான துதித்தருளும் திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும இராமாநுசமுனிவரது திருவடிகளை யடைந்தார்கள். (எ-று) (அங)

அச. அவர்களையருளாளப்பெருமாளெம் பெருமனுக்கடியரா யளித்தான், உவகையினவன்றாள்பணிந்தவர்வழுத்த வெருவியவ் வுயாதவத்தோனும், பவமஞாதெறுஞ்சீரிலக்குவமுனிதா ளகன் மெனவவருமப்பரிசே, இவாவுடனிருதாளபரவமாலரங்கத் திடை யிராமாநுசனிருந்தான்.

(இ-ள்.) வந்த அவர்களை அருளாளப்பெருமா ளெம்பெருமானுருக்கு அடிமையாகும்படி யளித்தனர். அவர்கள் சந்தோஷத்துடன் அவர் திருவடிகளைப்பணிந்து துதிக்க, அந்த உயர்ந்த தவத்தையுடைய அருளாளப்பெருமா ளெம்பெருமானும் (நமக்கும் ஆசாரியத்துவம் வருமாயின் ஸ்வாதந்திரியம் தலையெடுக்குமேயென்று) பயந்து, பிறவித்துன்பத்தைக் கெடுக்கும் சீரையுடைய இராமாநுசமுனிவரது திருவடிகளிடம் செல்லுங்கள் என்று கூறியருள, அவர்களும் அவ்விதமாகவே ஆசைப்பெருக்கத்தோடு இரண்டு திருவடிகளைத் துதிக்க, பெருமையையுடைய திருவரங்கத்தில் இராமாநுசரு மெழுந்தருளியிருந்தனர். (எ-று.) (அச)

அரு. இருப்பவனொருநாண்முதலிகடமைப்பார்த் தெம்பிரான் றிருமலைக்கேகித், தருப்பயிறிநந்தனவனமபுரிவோ ரெவரென வெழுந்தனந்தாழ்வான், விருப்பமொடவனருள்பணிந்தனனபரவி விடைகொளாவேங்கடமெனும்பேர்ப், பொருப்படைந்திராமா நுசமுனிப்பெயரான் மலாவனமழகுறப்புரிந்தான்.

(இ-ள்.) இப்படியிருக்குமவர் ஒருநாள் "சிந்துபூமகிழுந் திருவேங்கடத்தந்தமில்புகழக் காரெழி லண்ணலே" என்னும அருளிச்செயலுக்கு வ்யாக்யான முரைத்தருளும்போது, அவ்வெம்பெருமானுக்குப் புஷ்பத்தில் அதிக பிரீதி யென்றருளிச்செயது முதலிகளைக் கடாக்ஷித்து, எம்பெருமானெழுந்தருளிய திருமலைக்குப்போய விருக்ஷங்கள் பொருந்திய திருநந்தனவனம் ஏற்படுத்தி, புஷ்பகைங்கர்யம் பண்ணுவோர் யாவருள்ளாரென்று கேட்டருள; அநந்தாழ்வா னெழுந்து விருப்பத்துடன் இராமாநுசரது திருவடிகளைப்பணிந்து துதித்து விடைகொண்டு, திருவேங்கடமெனனும் திருநாயமுடைய திருமலையையடைந்து, இராமாநுசமுனிவரது திருநாமத்தாலே மலர்களையுடைய நந்தனவனத்தை அழகுபெறும்படி யுண்டாக்கினர். (எ-று.) (அரு)

அசா. ஏத்தருந்தகைசாலிலக்குவமுனியும் பலபகலிறந்தபின்னி பமுன், காததருளரங்கேசனைபபணிந்தவன்பால் விடைகொளா முதலிகள்களுல, நீத்தணிநகா நீணதிகடந்தரிவாழ் பதிபலத்தணந்த னனீங்கிப், பூத்தருணளினமிதலைமால்கருடப் பொருப்புடைத் திருப்பதிபுகுந்தான்.

